


# Don

# தமிழ் துணைவன்

10

முழுமையாக திருத்தப்பட்ட
2020 பதிப்பு

2020 அரசு மாதிரி
வினாத்தாள்
அடிப்படையில்



இலவச இணைப்பு



தமிழ் பயிற்சிப் புத்தகம்

PTA வினாக்கள்
விடைகளுடன்

- புதிய பாடத்திட்டம் 2020-21
- பாடநூல் வினாக்கள் விடைகளுடன்
- கூடுதல் வினாக்கள் விடைகளுடன்
- செய்யுள் தெளிவுரை, விளக்கவுரை
- அலகுத் தேர்வுகள்
- எளிய வெற்றிக்கு இனிய வழிகள்



டான் பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்.
திருநெல்வேலி ◆ சென்னை

**Don**
**தமிழ் துணைவன்**
**10 - ஆம் வகுப்பு**

**புதிய பாடத்திட்டத்தின் படி தயாரிக்கப்பட்டது.**

முதல் பதிப்பு : 2019
இரண்டாம் பதிப்பு : 2020
திருத்தப்பட்ட மூன்றாம் பதிப்பு : மார்ச் 2020



நூலாக்கம்
Dr. S.A. ராஜ்குமார் MBBS., MS(EM)

நூலாசிரியர்கள்
திரு. ச. ஜேசுராஜ், MA.,M.Ed.,M.Phil.,
தூய சவேரியார் மேல்நிலைப் பள்ளி,
பாளையங்கோட்டை.

திருமதி. குளோரிபாஸ்கர், MA.,B.Ed.,
திருநெல்வேலி.

## பதிப்புரை

அன்புமிகு மாணவச் செல்வங்களே!

உளம் மகிழ்ந்து உவப்புடன் வழங்கும் நல்வாழ்த்துகள்!

உங்கள் கைகளில் தவழும் மாணவர் தமிழ் துணைவன் உயர்ந்தோர் ஏத்தும் எண்ணற்ற சிறப்புகளை உடையது. இத்துணைநூலைத் தயாரித்த தமிழாசிரியர் குழுவினர் பல்லாண்டுகள் தமிழ் மொழிப்பாடம் பயிற்றுவித்த பட்டறிவு பெற்றவர்கள். நுண்மான் நுழைபுலம் மிக்கவர்கள். அரசுப் பொதுத் தேர்வில் விடைத்தாள் திருத்தும் பணியை மேற்கொண்டவர்கள். தலைமைத் தேர்வாளர்களாகவும் இருந்து பணியாற்றுபவர்கள்.

நீவிர் எழுதவிருக்கும் அரசுப் பொதுத்தேர்வில் தற்போதைய புதிய கல்வி முறைப்படி அரசு வகுத்த புதிய வினாத்தாள் அமைப்பின் படி, தமிழ்ப்பாடத்திலும் நூற்றுக்கு நூறு மதிப்பெண்கள் பெற்று புகழ் பெறுமளவிற்கு இவ்வுரைநூல் மிகச் சிறப்பாக தயாரிக்கப்பட்டுள்ளது,

சுருக்கமாக எளிய - இனிய நடையில் மாணவர்கள் ஓரிரு முறை படித்தாலே மனதில் பதியும் வண்ணம் இவ்வுரைநூல் வரையறை செய்யப்பட்டுள்ளது.

வினாவிற்குரிய விடைகளைத் குவித்து வைக்காமல், கருத்துக்களை வகைப்படுத்தி, வரிசைப்படுத்தித் தெளிந்த நீரோடை போன்று அமைத்திருப்பது மாணவர்களுக்குப் பெரும் பயன் நல்குமென்பது வெள்ளிடைமலை.

ஆகவே இந்நூலை பன்முறை படியுங்கள், மனதில் பதிய வையுங்கள். தெளிந்த சிந்தனைகளோடு, திடம் பெற்றுத் தேர்வெழுதி வெற்றி பெறுங்கள்.

ஆழ்ந்து படியுங்கள்; அதிக மதிப்பெண்களை அள்ளி எடுங்கள்; நூற்றுக்கு நூறு மதிப்பெண்கள் பெற்று சாதனை படையுங்கள்! வெற்றி உமதே!!

**சொ.அ. சுரேஷ் குமார்**, MCA, MBA.,
**டாண் பதிப்பகம்**, திருநெல்வேலி



பதிப்பகத்தார்:


**Don Publications (P) Ltd.**

3/100/1, உத்தமபாண்டியன்குளம், தூத்துக்குடி மெயின் ரோடு, திருநெல்வேலி - 627 351.
☎ (0462) 2520977, 2520978. செல் : 73730 88821, 94433 39941. மின்னஞ்சல் : donbooks01@gmail.com

புதிய எண்: 17 பழைய எண் 21A 2வது தளம் 11- வது அவென்யூ, அசோக் நகர், சென்னை - 600 083.
☎ (044) 48565226, 24892474. செல்: 77083 30666 மின்னஞ்சல் : donbooks.chennai01@gmail.com

Visit us at | : 94890 51855 | For online purchase : www.donbookart.com | www.donbooks.co.in

# நூலும் ஆசிரியரும்

## கவிதைப் பேழை / செய்யுள்

1. அன்னை மொழியே - பாவலரேறு பெருஞ்சித்திரனார்
2. இரட்டுற மொழிதல் - சந்தக்கவிமணி தமிழழகனார்
3. காற்றே வா! - பாரதியார்
4. முல்லைப்பாட்டு - நப்பூதனார்
5. காசிக்காண்டம் - அதிவீரராம பாண்டியர்
6. மலைபடுகடாம் - பெருங்கௌசிகனார்
7. திருக்குறள் - திருவள்ளுவர்
8. பெருமாள் திருமொழி - குலசேகராழ்வார்
9. பரிபாடல் - கீரந்தையார்
10. நீதிவெண்பா - கா.ப. செய்குத்தம்பிப் பாவலர்
11. திருவிளையாடற்புராணம் - பரஞ்சோதி முனிவர்
12. பூத்தொடுத்தல் - உமாமகேஸ்வரி
13. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் - குமரகுருபரர்
14. கம்பராமாயணம் - கம்பர்
15. ஏர் புதிதா - கு.ப. ராஜகோபாலன்
16. மெய்க்கீர்த்தி - இரண்டாம் இராசராச சோழன்
17. சிலப்பதிகாரம் - இளங்கோவடிகள்
18. ஞானம் - தி.சொ. வேணுகோபால்
19. காலக்கணிதம் - கண்ணதாசன்
20. சித்தாளு - நாகூர்ரூமி
21. தேம்பாவணி - வீரமாமுனிவர்

## உரைநடை உலகம்

22. தமிழ்ச்சொல் வளம் - தேவநேயப் பாவாணர்
23. சிற்றகல் ஒளி - ம.பொ. சிவஞானம்

## விரிவானம் / துணைப்பாடம்

24. உரைநடையின் அணிகலன்கள் - எழில் முதல்வன்
25. புயலிலே ஒரு தோணி - ப. சிங்காரம்
26. கோபல்லபுரத்து மக்கள் - கி. ராஜநாராயணன்
27. புதிய நம்பிக்கை - கமலாலயன்
28. பாய்ச்சல் - சா. கந்தசாமி
29. ஒருவன் இருக்கிறான் - கு. அழகிரிசாமி

# பொருளடக்கம்

## 6. கலை, அழகியல், புதுமைகள் - நிலா முற்றம்



## 7. நாகரிகம், தொழில், வணிகம் - விதைநெல்



## 8. அறம், தத்துவம், சிந்தனை - பெருவழி



## 9. மனிதம், ஆளுமை - அன்பின் மொழி



## பிற்சேர்க்கை (வாழ்வியல், கட்டுரைகள், கடிதங்கள்)





* இக்குறியிட்ட பாடல்கள் மனப்பாடப் பாடல்கள்

## மனப்பாடப் பாடல்கள்

### அன்னை மொழியே!

**அழகார்ந்த செந்தமிழே!** PTA

அன்னை மொழியே! அழகார்ந்த செந்தமிழே!
முன்னைக்கும் முன்னை முகிழ்த்த நறுங்கனியே!
கன்னிக் குமரிக் கடல்கொண்ட நாட்டிடையில்
மன்னி அரசிருந்த மண்ணுலகப் பேரரசே!

தென்னன் மகளே! திருக்குறளின் மாண்புகழே!
இன்னறும் பாப்பத்தே! எண்தொகையே! நற்கணக்கே!
மன்னுஞ் சிலம்பே! மணிமே கலைவடிவே!
முன்னும் நினைவால் முடிதாழ வாழ்த்துவமே!

– பாவலரேறு பெருஞ்சித்திரனார்

### முல்லைப்பாட்டு

PTA

சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்
நடுங்கு சுவல் அசைத்த கையள், "கைய
கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருகுவர், தாயர்" என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம்

– நப்பூதனார்

### காசிக்காண்டம்

PTA

விருந்தினனாக ஒருவன் வந்து எதிரின்
  வியத்தல் நன்மொழி இனிது உரைத்தல்
திருந்துற நோக்கல் வருக என உரைத்தல்
  எழுதல் முன் மகிழ்வன செப்பல்
பொருந்து மற்றுஅவன் தன்அருகுற இருத்தல்
  போமெனில் பின் செல்வதாதல்
பரிந்துநன் முகமன் வழங்கல் இவ்வொன்பான்
  ஒழுக்கமும் வழிபடும் பண்பே

**இல்லொழுக்கம், (பா எண் : 17)**

– அதிவீரராம பாண்டியர்

### பெருமாள் திருமொழி

வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால்
மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக் கோட்டம்மா! நீ
ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே.

**(பாசுர எண் : 691)**

– குலசேகராழ்வார்

### நீதிவெண்பா

அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி
மருளை அகற்றி மதிக்கும் தெருளை
அருத்துவதும் ஆவிக்கு அருந்துணையாய் இன்பம்
பொருத்துவதும் கல்வியென்றே போற்று.

– கா.ப. செய்குதம்பிப் பாவலர்

## திருவிளையாடற்புராணம்

**மன்னன். புலவரிடம் மன்னிப்பை வேண்டுதல்** PTA

புண்ணியப் புலவீர் யான் இப்போழ்து இடைக் காடனார்க்குப்
பண்ணிய குற்றம் எல்லாம் பொறுக்க எனப் பரவித் தாழ்ந்தான்
நுண்ணிய கேள்வி யோரும் மன்னநீ நுவன்ற சொல்லாம்
தண்ணிய அமுதால் எங்கள் கோபத்தீத் தணிந்தது என்னா.

– பரஞ்சோதி முனிவர்

## முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

**ஆடுக செங்கீரை!** PTA

செம்பொ னடிச்சிறு கிங் கிணியோடு சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடு மொளி திகழரை வடமாடப்
பைம்பொ னசும்பிய தொந்தி யொடுஞ்சிறு பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டோடு வட்டச் சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை காது மசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக் கதிர்முத் தொடுமாட
வம்பவ ளத்திரு மேனியு மாடிட ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை

செங்கீரை பருவம், பா.எண் : 8

– குமரகுருபரர்

## கம்பராமாயணம்

**பாலகாண்டம் - நாட்டுப்படலம்**

தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்,
கொண்டல்கண் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ. (35)

**அயோத்தியா காண்டம் - கங்கைப்படலம்**

வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறையப்
பொய்யோவெனு மிடையாளொடு மிளையானொடும் போனான்
மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோவிவன் வடிவென்பதொ ரழியாவழ குடையான். (1926)

– கம்பர்

## சிலப்பதிகாரம்

**இந்திரவிழா ஊரெடுத்த காதை (அடி 13-39)** PTA

தூசும் துகிரும் ஆரமும் அகிலும்
மாசுஅறு முத்தும் மணியும் பொன்னும்
அருங்கல வெறுக்கையோடு அளந்துகடை அறியா
வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும்;
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலம் குவித்த கூல வீதியும்;

– இளங்கோவடிகள்

## காலக்கணிதம்

PTA

*மாற்றம் எனது மானிடத் தத்துவம்;*
*மாறும் உலகின் மகத்துவம் அறிவேன்!*
*எவ்வெவை தீமை எவ்வெவை நன்மை*
*என்ப தறிந்து ஏகுமென் சாலை!*
*தலைவர் மாறுவர்; தர்பார் மாறும்;*
*தத்துவம் மட்டுமே அட்சய பாத்திரம்!*
*கொள்வோர் கொள்க; குரைப்போர் குரைக்க!*
*உள்வாய் வார்த்தை உடம்பு தொடாது;*
*நானே தொடக்கம்; நானே முடிவு;*
*நானுரைப் பதுதான் நாட்டின் சட்டம்!*

**– கண்ணதாசன்**

## தேம்பாவணி

**இயற்கை கொண்ட பரிவு**

PTA

*நவமணி வடக்க யில்போல்*
*நல்லறப் படலைப் பூட்டும்*
*தவமணி மார்பன் சொன்ன*
*தன்னிசைக்கு இசைகள் பாடத்*
*துவமணி மரங்கள் தோறும்*
*துணர்அணிச் சுனைகள் தோறும்*
*உவமணி கானம்கொல் என்று*
*ஒலித்து அழுவ போன்றே.*

**– வீரமாமுனிவர்**

## திருக்குறள்

*எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு.* (மெய் உணர்தல் – 36)

PTA

*பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே*
*நல்லார் தொடர்கை விடல்.* (பெரியாரைத் துணைக்கோடல் – 45)

*பண்என்னாம் பாடற் கியைபின்றேல்; கண்என்னாம்*
*கண்ணோட்டம் இல்லாத கண்.* (கண்ணோட்டம் – 58)

*அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்*
*பெருமை முயற்சி தரும்.* (ஆள்வினை உடைமை – 62)

PTA

*முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை*
*இன்மை புகுத்தி விடும்.* (ஆள்வினை உடைமை – 62)

*செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்*
*தியற்கை அறிந்து செயல்.* (அமைச்சு – 64)

*பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்*
*பொருளல்ல தில்லை பொருள்.* (பொருள்செயல் வகை – 76)

*குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்*
*றுண்டாகச் செய்வான் வினை.* (பொருள்செயல் வகை – 76)

*குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்*
*சுற்றமாச் சுற்றும் உலகு.* (குடிசெயல் வகை – 103)

*இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்*
*இன்மையே இன்னா தது.* (நல்குரவு – 105)

**– திருவள்ளுவர்**

## TO ORDER BOOKS

**Dear teachers and Principals**

Thank you for your patronage to *Don* Book. You are instrumental in our phenomenal success.

Now you can order your required copies by sending the same in your letter head.

For order please

| | | |
|---|---|---|
| **Mobile No.** | : | **7373088821, 0462 - 2520977, 2520978** |
| **Whatsapp No.** | : | **9443339941** |
| **Website** | : | **www.donbookart.com** |
| **E-mail ID** | : | **order@donbooks.co.in, enquire@donbooks.co.in** |

## BANK DETAILS (FOR DIRECT DEPOSIT)

**STATE BANK OF INDIA**
CC A/C No. : **10765154413**
IFSC Code : SBIN0000932
(Sripuram Branch, Tirunelveli)

**STATE BANK OF INDIA**
A/C No. : **38541706676**
IFSC Code : SBIN0031760
(Ashok Nagar, Chennai)

**STATE BANK OF INDIA**
A/C No. : **35655497778**
IFSC Code : SBIN0000932
(Sripuram Branch, Tirunelveli)

**INDIAN BANK**
A/C No. : **6204213630**
IFSC Code : IDIB000K184
(KTC Nagar Branch, Tirunelveli)

**D.D./Cheque**

Should be drawn in favour of '*Don* Publication (P) Ltd' payable at Tirunelveli. (Please send the chellan along with your order)

You can purchase our books through online by visiting the website www.donbookart.com Here you can purchase book in bulk quantites.

**For students:**

You can buy our books through our website www.donbookart.com or sending money order (by clearly writing your address)


**Address for correspondence:**



**Don Publications (P) Ltd.**

3/100/1, Uthamapandiankulam, Tuticorin Main Road, **TIRUNELVELI** - 627351.

☎ : (0462) 2520977, 2520978, Cell: 73730 88821, 94433 39941. E-Mail: donbooks01@gmail.com

New No. 17, Old No. 21-A, 2nd Floor, 11th Avenue, Ashok Nagar, **CHENNAI** - 600 083.

☎ : (044) 24892474, 48565226. Cell: 73730 88893, 77083 30666, E-Mail: donbooks.chennai1@gmail.com

Visit us at : 94890 51855 www.donbooks.co.in

# OUR AREA REPRESENTATIVES CONTACT NUMBERS

you can buy books at the following wholesale / retail stores:

| Area | Contact |
|---|---|
| Chennai | 94432 21264, 94890 51855 |
| Chennai South | 73587 26333, 94890 51855 |
| Chennai Central | 90033 59974, 94890 51855 |
| Tiruvallur | 73587 26333 |
| Vellore | 94899 06831 |
| Kanchipuram | 94426 08864, 94890 51855 |
| Tirunelveli, Kanyakumari | 94433 39971, 73730 88835 |
| Erode | 94426 08863 |
| Dindugul, Karur | 94890 51852, 94426 08863 |
| Salem, Namakkal | 94426 08863 |
| Krishnagiri | 94426 08863 |
| Dharmapuri | 94426 08863 |
| Tuticorin | 94890 51851 |
| Trichy, Ariyalur, Perambalur | 73587 61666, 99430 22335 |
| Vilupuram | 94890 51854 |
| Thiruvarur, Thanjavur, Nagapattinam | 94421 19859 |
| Thiruvannamalai : | 94426 08864 |
| Virudhunagar, Ramnad, Sivagangai | 75980 38097 |
| Madurai, Theni, Pudukottai | 75980 38096 |
| Coimbatore | 73958 32888 |
| Tirupur, Nilgiris | 73958 32888 |
| Puducherry, Cuddalore | 94426 01362 |

# OUR BOOKS ARE AVAILABLE AT

| Store | Contact |
|---|---|
| **CHENNAI** | |
| 1. M.K.StoresChennai | 044 - 25386955 |
| 2. Bismi Book Centre | 044 - 25363375/25383264 |
| 3. Kings Book House | 044 - 25367660 |
| 4. Limra Book Centre | 044 - 42032081 |
| 5. F.A.Stores | 044 - 25392240 |
| 6. Prince Book House | 044 - 42053926 |
| 7. A.R.Book Mart | 99415 16187 |
| 8. M.R.Book Store | 044 - 25364596 / 42080600 |
| 9. Arraba Book Traders | 044 - 25387868 |
| **TAMBARAM (W)** | |
| 10. Sri Ram & Co Book Shop | 044 - 22266431 |
| 11. Kalaimagal Book Centre | 99524 99827 |
| **CHIDAMBARAM** | |
| 12. Vetri Book Centre | 04144 - 222648 / 254359 |
| **COVAI** | |
| 13. Majestic Book House | 0422 - 2382333 / 2384333 |
| 14. Cheran Book House | 0422 - 4355453/2396623 |
| 15. Radhamani Stores | 0422 - 2392122 |
| 16. CBSC Book Shop | 0422 - 2393093 |
| 17. Kannan Puthaga Nilayam | 0422 - 2398890, 4369890 |
| 18. Murugan Book Depot | 0422 - 2396531 |
| **CUDDALORE** | |
| 19. Indian Book Centre | 04142 - 231780 |
| 20. Bell Book House | 94432 65414 |
| **PANRUTTI** | |
| 21. Sri Vinayaga Stores | 81241 01837 |
| **DINDIGUL** | |
| 22. Ayyanar Book Centre | 0451 - 2426561 |
| **ERODE** | |
| 23. Selvam Book Centre | 0424 - 2257027 |
| 24. Dhana Book Company | 0424 - 2221230 |
| 25. Kalaivani Book Centre | 0424 - 3205711 |
| 26. Senthil Book Palace | 0424 - 2214886 |
| **KALLAKURICHI** | |
| 27. Sri Kiruba Stationary | 04151 - 222114 |
| **KOVILPATTI** | |
| 28. Chitradevi Book Centre | 04632 - 220733 |
| **MADURAI** | |
| 29. Mano Book Centre | 0452 - 2621577 |
| 30. Jeyam Book Centre | 0452 - 2623636 |
| 31. Sunmathi Traders | 0452 - 2338966 |
| **NAGERCOIL** | |
| 32. M. ARUMUGAMPILLAI SONS BOOK CENTRE | 96004 23549, 04652 - 230728 |
| **MARTHANDAM** | |
| 33. Olympic Traders | 04651 - 324533 |
| **SALEM** | |
| 34. Vignesh Book Centre | 0427 - 4020407 / 4020409 |
| 35. AK Chandraiah Chettiar & Sons | 0427 - 2410096 |
| 36. Kalaivani Book Centre | 0427 - 2411083 |
| **DHARMAPURI** | |
| 37. Vimal Book Centre | 94434 13414 |
| **TANJORE** | |
| 38. Sri Murugan Publications | 04362 - 272922 |
| 39. Srinivasa Book Centre | 04362 - 238985 |
| **THENI** | |
| 40. Maya Book Centre | 94439 29273 |
| **TENKASI** | |
| 41. Maheshwari Book Centre | 04633 - 224406 |
| **TIRUNELVELI** | |
| 42. Eagle Book CentrePalai. Tvl | 0462 - 2578899 |
| 43. Padma Book Stall | 0462 - 2337650 |
| 44. Shyamala Book Centre | 0462 - 2338800 |
| 45. Chitradevi Book Centre | 0462 - 2334344 |
| 46. Velavan Book Centre | 0462 - 2574457 |
| 47. Ponnaiya Pillai Book Shop | 0462 - 2572564 |
| **TIRUVANNAMALAI** | |
| 48. APM Book Centre | 04175 - 224725 |
| **TIRUPPUR** | |
| 49. Senthil Stores | 0421 - 2247274 |
| 50. Chola Book House | 0421 - 4323668 |
| 51. Maheshwari Book Stall | 94420 04254, 0421 - 2236414 |
| **TIRUCHIRAPPALLI** | |
| 52. Sri Murugan Book Centre | 0431 - 2703076 |
| 53. Rasi Publications | 0431 - 2703692 |
| 54. Tamilnadu Book House | 96592 99661 |
| 55. Sri Raghavendra Stores | 0431 - 2707506 |
| **TUTICORIN** | |
| 56. Sri Durga Stores | 0461 - 2326694 |
| 57. Eagle Book Centre | 0461 - 2392333 |
| **VILUPPURAM** | |
| 58. Sabarinathan Brothers | 04146 - 222581 |
| **VIRUDHUNAGAR** | |
| 59. Sethus Book Centre | 04562 - 248400 / 94864 61400 |



இயல் - 1 செய்யுள்

## மொழி - அமுதஊற்று

# 1. அன்னை மொழியே

பாவலரேறு பெருஞ்சித்திரனார்

### பாடல் :

*அன்னை மொழியே! அழகார்ந்த செந்தமிழே!*
*முன்னைக்கும் முன்னை முகிழ்த்த நறுங்கனியே!*
*கன்னிக் குமரிக் கடல்கொண்ட நாட்டிடையில்*
*மன்னி அரசிருந்த மண்ணுலகப் பேரரசே!*



### சொற்பொருள்:

அன்னை மொழியே – தாய் மொழியே
அழகார்ந்த செந்தமிழே! – அழகாய் அமைந்த செந்தமிழே!
முன்னைக்கும் முன்னை – பழமைக்கும் பழமையாய்
முகிழ்த்த நறுங்கனியே! – தோன்றிய நறுங்கனியே!
கன்னிக்குமரிக் – குமரிக் கண்டத்தில்
கடல் கொண்ட நாட்டிடையில் – கடல் கொண்ட நாட்டில் (குமரிக் கண்டம்)
மன்னி அரசிருந்த மண்ணுலகப் பேரரசே! – நிலைத்து அரசாண்ட மண்ணுலகப் பேரரசே!

### பொருளுரை:

அன்னை மொழியே! அழகாய் அமைந்த செழுந்தமிழே! பழமைக்குப் பழமையாய்த் தோன்றிய நறுங்கனியே! கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் நிலைத்து அரசாண்ட மண்ணுலகப் பேரரசே!

### விளக்கவுரை:

பாவலரேறு தமிழ்மொழி மீது தான் வைத்த அன்பை தமிழன்னையாய் உருவகப்படுத்திப் பாடுகிறார். தமிழ்மொழி செந்தமிழாய், பழமைக்கும் பழமையாய், குமரிக்கண்டத்தில் நிலைத்து நிற்கும் மொழியாய் விளங்குகிறது.

### பாடல் :

*தென்னன் மகளே! திருக்குறளின் மாண்புகழே!*
*இன்னறும் பாப்பத்தே! எண்தொகையே! நற்கணக்கே!*
*மன்னுஞ் சிலம்பே! மணிமே கலைவடிவே!*
*முன்னும் நினைவால் முடிதாழ வாழ்த்துவமே!*

### சொற்பொருள்:

தென்னன் மகளே! – பாண்டிய மன்னனின் மகளே!
திருக்குறளின் மாண்புகழே – திருக்குறளின் பெரும் பெருமைக்குரியவளே!
இன்னறும் பாப்பத்தே! – பத்துப்பாட்டே!
எண்தொகையே! – இனிமையான எட்டுத்தொகையே!
நற்கணக்கே! – பதினெண்கீழ்க்கணக்கே!
மன்னுஞ் சிலம்பே! – நிலைத்த சிலப்பதிகாரமே!

| | | |
|---|---|---|
| மணிமேகலை வடிவே! | – | அழகான மணிமேகலையே! |
| முன்னும் நினைவால் | – | பொங்கியெழும் நினைவுகளால் |
| முடிதாழ வாழ்த்துவமே | – | தலை பணிந்து வாழ்த்துகின்றோம் |

**பொருளுரை:**

பாண்டிய மன்னனின் மகளே! திருக்குறளின் பெரும் பெருமைக்குரியவளே! பத்துப்பாட்டே! எட்டுத்தொகையே! பதினெண்கீழ்க்கணக்கே! நிலைத்த சிலப்பதிகாரமே! அழகான மணிமேகலையே! பொங்கியெழும் நினைவுகளால் தலை பணிந்து வாழ்த்துகின்றோம்.

**விளக்கவுரை:**

பாண்டியன் மகளாகவும், திருக்குறளின் பெருமையாகவும், பத்துப்பாட்டாகவும், எட்டுத்தொகையாகவும், பதினெண்கீழ்க்கணக்காகவும், சிலப்பதிகாரமாகவும் பாவலரேறு தமிழன்னையை உருவகப்படுத்துகிறார்.

**பாடல் :**

*செந்தமிழே! உள்ளுயிரே செப்பரிய நின்பெருமை*
*எந்தமிழ்நா எவ்வாறு எடுத்தே உரைவிரிக்கும்?*
*முந்தைத் தனிப்புகழும் முகிழ்த்த இலக்கியமும்*
*விந்தை நெடுநிலைப்பும் வேறார் புகழுரையும்*

**சொற்பொருள்:**

| | | |
|---|---|---|
| செந்தமிழே | – | செழுமை மிக்க தமிழே! |
| உள்ளுயிரே | – | எமக்குயிரே! |
| செப்பரிய நின்பெருமை | – | சொல்லுதற்கரிய உன் பெருமைகளை |
| எந்தமிழ்நா | – | என்னுடைய தமிழ் நாக்கு |
| எவ்வாறு எடுத்தே உரைவிரிக்கும் | – | எவ்வாறு விரித்துரைக்கும்? |
| முந்தைத் தனிப்புகழும் | – | பழம்பெருமையும் தனக்கெனத் தனிச்சிறப்பும் |
| முகிழ்ந்த இலக்கியமும் | – | இலக்கிய வளமும் கொண்ட தமிழே! |
| விந்தை நெடுநிலைப்பும் | – | வியக்கத்தக்க உன் நீண்ட நிலைத்த தன்மையும் |
| வேறார் புகழுரையும் | – | வேற்றுமொழியார் உன்னைப் பற்றி உரைத்த புகழுரையும் |

**பொருளுரை:**

செழுமை மிக்க தமிழே! எமக்குயிரே! சொல்லுதற்கரிய நின் பெருமைதனை என்னுடைய தமிழ்நாக்கு எவ்வாறு விரித்துரைக்கும்? பழம்பெருமையும் தனக்கெனத் தனிச்சிறப்பும் இலக்கிய வளமும் கொண்ட தமிழே! வியக்கத்தக்க உன் நீண்ட நிலைத்த தன்மையும் வேற்றுமொழியார் உன்னைப் பற்றி உரைத்த புகழுரையும் எமக்குள் பற்றுணர்வை எழுப்புகின்றன.

**விளக்கவுரை:**

தமிழின் பெருமையை தனது உயிரெனக் கூறி அதன் பெருமையை அயல்நாட்டார் கூட புகழும் போது தம் பற்றுணர்வு வெளிப்படுவதாக கூறி தமிழின் உயர்வைக் கூறுகிறார் பாவலரேறு பெருஞ்சித்திரனார்.

**பாடல் :**

*உந்தி உணர்வெழுப்ப உள்ளக் கனல்மூளச்*
*செந்தா மரைத்தேனைக் குடித்துச் சிறகார்ந்த*
*அந்தும்பி பாடும் அதுபோல யாம்பாடி*
*முந்துற்றோம் யாண்டும் முழங்கத் தனித்தமிழே!*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| உந்தி உணர்வெழுப்ப | – பற்றுணர்வை எழுப்புகின்றன |
| உள்ளக் கனல்மூளச் | – உள்ளத்தில் கனல் மூள |
| செந்தாமரைத் தேனைக் | – செந்தாமரையிலுள்ள தேனைக் |
| குடித்துச் சிறகார்ந்த | – குடித்துச் சிறகசைத்து |
| அந்தும்பி பாடும் | – வண்டானது பாடும் |
| அதுபோல யாம்பாடி | – அதுபோல (உன்னைச் சுவைத்து) நாம் பாடி |
| முந்துற்றோம் யாண்டும் | – உன் பெருமையை எங்கும் |
| முழங்கத் தனித்தமிழே | – முழங்குகின்றோம் தனித் தமிழே |

## பொருளுரை:

எம் தனித்தமிழே! வண்டானது செந்தாமரைத் தேனைக் குடித்துச் சிறகசைத்துப் பாடுவது போன்று நாங்கள் உன்னைச் சுவைத்து உள்ளத்தில் கனல் மூள, உன் பெருமையை எங்கும் முழங்குகின்றோம்.

## விளக்கவுரை:

தமிழை செந்தாமரையாகவும், தமிழர்களை வண்டுகளாகவும் உருவகப்படுத்தி, தமிழின் பெருமையை நாங்கள் பாடி முழங்க வேண்டும் என்கிறார்.

## ஆசிரியர் குறிப்பு:

- **ஆசிரியர் பெயர்** : பாவலரேறு பெருஞ்சித்திரனார்
- **பிறப்பு** : 10.03.1933
- **ஊர்** : சேலம் மாவட்டம் – சமுத்திரம்
- **பெற்றோர்** : துரைசாமி – குஞ்சம்மாள்
- **இயற்பெயர்** : துரை மாணிக்கம்
- **படைப்புகள்** : ⁎ உலகியல் நூறு, ⁎ பாவியக் கொத்து, ⁎ நூறாசிரியம், ⁎ கனிச்சாறு, ⁎ எண்சுவை எண்பது, ⁎ மகபுகு வஞ்சி, ⁎ பள்ளிப் பறவைகள், ⁎ மல்லிகை, ⁎ பூக்காரி, ⁎ கொய்யாக்கனி, ⁎ சாதி ஒழிப்பு, ⁎ ஓ ஓ! தமிழர்களே, ⁎ ஐயை, ⁎ இளமை விடியல், ⁎ உலகியல் நூறு, ⁎ இளமை உணர்வுகள்

## நூற் குறிப்பு:

- பாவலரேறு பெருஞ்சித்திரனாரின் கனிச்சாறு (தொகுதி) தொகுப்பிலிருந்து இருவேறு தலைப்பில் உள்ள பாடல்கள் (தமிழ்த்தாய் வாழ்த்து, முந்துற்றோம் யாண்டும்) எடுத்தாளப்பட்டுள்ளன.
- இவரது பாடல்கள் தமிழுக்குக் கருவூலமாய் அமைந்துள்ளது. இவருடைய சில பாடல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டு உள்ளன.

## மதிப்பீடு

**பொருள் தருக:**

1. தென்னன் – பாண்டியன்
2. கனி – பழம்
3. எண்தொகை – எட்டுத்தொகை
4. தும்பி – வண்டு
5. முந்துற்றோம் – முழங்குகின்றோம்
6. மாண்பு – பெருமை
7. விந்தை – வியப்பு
8. முடிதாழ – தலைபணிந்து

**இலக்கணக்குறிப்புத் தருக:**

1. நறுங்கனி – பண்புத்தொகை
2. எழுப்ப, முகிழ்ந்த – பெயரெச்சங்கள்
3. செந்தமிழ், செந்தாமரை – பண்புத்தொகை
4. முந்துற்றோம் – தன்மைப்பன்மை வினைமுற்று
5. குடித்து – வினையெச்சம்
6. யாண்டும் – முற்றும்மை
7. கன்னிக்குமரி, மண்ணுலகம் – உருவகங்கள்

**பகுபத உறுப்பிலக்கணம் தருக:**

1. வாழ்த்துவம் – வாழ்த்து + வ் + அம்

வாழ்த்து – பகுதி
வ் – எதிர்கால இடைநிலை
அம் – தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. எந்தமிழ்நா என்பதைப் பிரித்தால் இவ்வாறு வரும்.

அ) எந் + தமிழ் + நா ஆ) எந்த + தமிழ் + நா
இ) எம் + தமிழ் + நா ஈ) எந்தம் + தமிழ் + நா

விடை : இ) எம் + தமிழ் + நா

**கூடுதல் வினாக்கள்:**

2. பாவலரேறுவின் திருக்குறள் மெய்ப்பொருளுரை தமிழுக்குக் ________ அமைந்தது.

அ) கதியாய் ஆ) கருவறையாய்
இ) கருவூலமாய் ஈ) அமுதமாய்

விடை: இ) கருவூலமாய்

3. "அன்னை மொழியே...." எனத் தொடங்கும் பாடல் இடம் பெற்றுள்ள கவிதைத் தொகுப்பின் பெயர் ________.

அ) அமுதசுரபி ஆ) கனிச்சாறு இ) ஏடுகவிதை ஈ) தமிழ் ஊற்று

விடை: ஆ) கனிச்சாறு

4. தமிழ்மொழி முதலில் __________ கண்டத்தில் அரசாண்டது.

அ) குமரிக் ஆ) ஐரோப்பியக் இ) ஆசியாக் ஈ) ஆஸ்திரேலியக்

விடை: அ) குமரிக்

5. 'தென்னன் மகள்' என்பதன் பொருள் ________.

அ) சேரன் மகள் ஆ) சோழன் மகள்
இ) பாண்டியன் மகள் ஈ) பல்லவன் மகள்

விடை: இ) பாண்டியன் மகள்

6. 'நற்கணக்கு' என்பது __________ நூலைக் குறிக்கும்.

அ) எட்டுத்தொகை ஆ) பதினெண்கீழ்க்கணக்கு
இ) பத்துப்பாட்டு ஈ) காப்பிய

விடை: ஆ) பதினெண்கீழ்க்கணக்கு

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. தென்னன் மகளே! திருக்குறளின் மாண்புகழே!
இன்னறும் பாப்பத்தே! எண்தொகையே! நற்கணக்கே!
மன்னுஞ்சிலம்பே! மணிமே கலைவடிவே!
முன்னும் நினைவால் முடிதாழ வாழ்த்துவமே!

**வினாக்கள்:**

1. இப்பாடலின் ஆசிரியர் யார்?

அ) பாரதியார் ஆ) பாரதிதாசன் இ) முடியரசன் ஈ) பெருஞ்சித்திரனார்

விடை : ஈ) பெருஞ்சித்திரனார்

2. இப்பாடலில் இடம் பெற்றுள்ள கவிதைத் தொகுப்பின் பெயர் யாது?

அ) மலரும் மாலையும் ஆ) பாஞ்சாலி சபதம்
இ) கனிச்சாறு ஈ) கொடி முல்லை

விடை : இ) கனிச்சாறு

3. "தென்னன் மகள்" என்பதன் பொருள் யாது?

அ) சேரன் மகள் ஆ) சோழன் மகள்
இ) பல்லவன் மகள் ஈ) பாண்டியன் மகள்

விடை : ஈ) பாண்டியன் மகள்

4. பாடலில் இடம்பெற்றுள்ள அடிஎதுகைச் சொற்களை குறிப்பிடுக.

அ) தென்னன், இன்னறும் ஆ) மன்னஞ், மணிமேகலை
இ) முன்னும், முடிதாழ ஈ) தென்னன், திருக்குறளின்

விடை : அ) தென்னன், இன்னறும்

2. அன்னை மொழியே! அழகார்ந்த செந்தமிழே!
முன்னைக்கும் முன்னை முகிழ்த்த நறுங்கனியே!
கன்னிக் குமரிக் கடல்கொண்ட நாட்டிடையில்
மன்னி அரசிருந்த மண்ணுலகப் பேரரசே!

**வினாக்கள்:**

1. இப்பாடலின் ஆசிரியர் ________

அ) பெருஞ்சித்திரனார் ஆ) திரு.வி. கல்யாணசுந்தரனார்
இ) இராமலிங்கனார் ஈ) கவிமணியார்

விடை : அ) பெருஞ்சித்திரனார்

2. இப்பாடல் இடம் பெற்றுள்ள நூல்________

அ) ஒப்பியன் மொழி நூல் ஆ) கனிச்சாறு
இ) பிரார்த்தனை ஈ) என்கதை

விடை : ஆ) கனிச்சாறு

3. ''கன்னிக் குமரிக் கடல்கொண்ட நாட்டிடையில்'' இத்தொடரின் பொருள்

அ) பாரதத்தின் தென்பகுதி கன்னியாகுமரி
ஆ) பகவதியம்மன் கோயில் அமைந்த இடம் கன்னியாகுமரி
இ) கடல் கொண்ட குமரிக் கண்டம்
ஈ) கன்னியம்மன் கோயில் அமைந்த நாடு

விடை : இ) கடல் கொண்ட குமரிக் கண்டம்

4. பாடலில் இடம்பெற்றுள்ள அடிஎதுகைச் சொற்களை குறிப்பிடுக.

அ) முன்னைக்கும் முன்னை ஆ) மன்னி, மண்ணுலக
இ) அன்னை, முன்னைக்கும் ஈ) கன்னி, கடல்

விடை : இ) அன்னை, முன்னைக்கும்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. ''மன்னும் சிலம்பே! மணிமேகலை வடிவே!
முன்னும் நினைவால் முடிதாழ வாழ்த்துவமே!'' – இவ்வடிகளில் இடம் பெற்றுள்ள காப்பியங்களைத் தவிர எஞ்சியுள்ள ஐம்பெருங்காப்பியங்களின் பெயர்களை எழுதுக.

- சீவகசிந்தாமணி
- வளையாபதி
- குண்டலகேசி

(ஐம்பெரும் காப்பியங்களில் மேற்கண்டவற்றை தவிர சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரட்டை காப்பியங்கள் இவ்வடிகளில் இடம் பெற்றுள்ளன.)

### கூடுதல் வினாக்கள்:

2. தமிழின் தனித்தன்மை யாது?

தமிழ் பழம்பெருமையும், தனக்கெனத் தனிச்சிறப்பும், இலக்கிய வளமும் கொண்டது.

3. பாவலரேறு படைத்த நூல்கள் யாவை?

- உலகியல் நூறு
- பாவியக் கொத்து
- நூறாசிரியம்
- கனிச்சாறு
- எண்சுவை எண்பது
- மகபுகு வஞ்சி
- பள்ளிப் பறவைகள்

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. தமிழன்னையை வாழ்த்துவதற்கான காரணங்களாகப் பாவலரேறு சுட்டுவன யாவை? PTA

- செழுமை மிக்க மொழி தமிழ்
- எம் உயிர் போன்றது தமிழ்.
- பழம்பெருமையும், தனக்கெனத் தனிச்சிறப்பும் இலக்கிய வளமும் கொண்ட மொழி தமிழ்.
- ஆகவே தமிழன்னையை நான் வாழ்த்துகிறேன் என்று பாவலரேறு கூறுகிறார்.

### கூடுதல் வினாக்கள்:

2. பாவலரேறு பெருஞ்சித்திரனார் – குறிப்பு வரைக.

- **பிறப்பு** : 10.03.1933
- **பெற்றோர்** : துரைசாமி – குஞ்சம்மாள்
- **இயற்பெயர்** : துரை மாணிக்கம்
- **ஊர்** : சேலம் மாவட்டம் – சமுத்திரம்
- **படைப்புகள்** : ⁎ மல்லிகை, ⁎ பூக்காரி, ⁎ கொய்யாக்கனி, ⁎ சாதி ஒழிப்பு, ⁎ ஓ ஓ! தமிழர்களே, ⁎ ஐயை, ⁎ இளமை விடியல், ⁎ உலகியல் நூறு, ⁎ இளமை உணர்வுகள்

3. தமிழன்னையை பாவலரேறு எவ்வாறு வாழ்த்துகின்றார்?

- அன்னை மொழியே! அழகாய் அமைந்த செந்தமிழ் பழமைக்குப் பழமையாய்த் தோன்றும்.
- கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் நிலைத்து அரசாண்ட மண்ணுலகப் பேரரசு. பாண்டிய மன்னனின் மகள், திருக்குறளின் பெரும் பெருமைக்குரியவள்,
- பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, நிலைத்த சிலப்பதிகாரம், அழகான மணிமேகலை என்று தமிழன்னையை பாவலரேறு வாழ்த்துகின்றார்.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. மனோன்மணீயம் சுந்தரனாரின் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலையும், பெருஞ்சித்திரனாரின் தமிழ் வாழ்த்தையும் ஒப்பிட்டு மேடைப் பேச்சு ஒன்றை உருவாக்குக. PTA

**குமரிக்கண்டம்:**

பூமி என்ற பெண் நீராலான கடலை ஆடையாகக் கொண்டு விளங்குவதை தமிழ்த்தாய்ப் பாடல் விளக்குகிறது.

கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் நிலைத்து அரசாண்ட மண்ணுலகப் பேரரசு என்று பாவலரேறு பாராட்டுகிறார்.

**தமிழ்த்தாயின் புகழ்:**

தமிழ்த்தாயின் சிறப்பு மிக்க அழகிய முகமாக பாரத கண்டம் திகழ்கிறது. அம்முகத்திற்கு பிறைநிலவு போன்ற நெற்றியாக தக்காணப் பீடபூமி அமைந்துள்ளது. அந்த நெற்றியில் நறுமணமிக்க பொட்டு வைத்தது போல் தமிழகம் உள்ளது, பொட்டின் மணம் எல்லோரையும் இன்புறச் செய்வது போல் தமிழ்த்தாயும் எல்லாத் திசைகளிலும் புகழ் பெற்றவளாக இருக்கிறாள் என்று தமிழ்த்தாய் பாடல் விளக்குகிறது.

அழகாய் அமைந்த செந்தமிழ், பழமைக்குப் பழமையாய்த் தோன்றிய நறுங்கனி, பாண்டிய மன்னனின் மகள், திருக்குறளின் பெருமைக்குரியவள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, நிலைத்த சிலப்பதிகாரம், அழகிய மணிமேகலையாக புகழ் பெற்று விளங்குகிறாள் தமிழ்த்தாய் என்று பாவலரேறு விளக்குகிறார்.

**தமிழ்த்தாயின் தனிச்சிறப்பு:**

உலகின் மூத்தமொழியாக இருந்தும் இன்றளவும் இளமையாக இருக்கிறாள். தமிழ் மொழியின் வளம் பெருகுகின்றதே தவிர குறையவில்லை. அப்படிப்பட்ட தமிழே தமிழாகிய பெண்ணே! தாயே உன்னை வாழ்த்துகின்றேன் என தமிழ்த்தாய் பாடல் கூறுகிறது.

பழம் பெருமையும் தனக்கெனத் தனிச்சிறப்பும் இலக்கிய வளமும் கொண்டது தமிழ்மொழி. வேற்று மொழியார் கூட தமிழைப் பற்றி உரைத்த புகழுரை பெரிய பற்றுணர்வை எழுப்புகின்றன என்று பாவலரேறு பெருஞ்சித்திரனார் பாடுகிறார்.

### கூடுதல் வினா:

2. 'அன்னை மொழியே' என்ற கவிதையில் பாவலரேறு பெருஞ்சித்திரனாரின் கருத்துகள் யாவை?

**தமிழன்னை பற்றிய வாழ்த்து:**

- அன்னைமொழி, அழகாய் அமைந்த செந்தமிழ்.
- பழமைக்குப் பழமையாய்த் தோன்றிய நறுங்கனி.
- கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் நிலைத்து அரசாண்ட மண்ணுலகப் பேரரசு,
- பாண்டிய மன்னனின் மகள், திருக்குறளின் பெரும் பெருமைக்குரியவள்,
- பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, நிலைத்த சிலப்பதிகாரம், அழகான மணிமேகலை எனத் தமிழன்னையை வாழ்த்துகிறார் பாவலரேறு.

பாவலரேறுவின் தமிழ் பற்றுணர்வு:

செழுமைமிக்க தமிழ், எமக்குயிர், பழம் பெருமையும் தனக்கெனத் தனிச்சிறப்பும் இலக்கிய வளமும் கொண்ட தமிழ், வியக்கத்தக்க தமிழின் பெருமையை வேற்றுமொழியார் உரைத்த புகழுரை பாவலரேறுக்குப் பற்றுணர்வை எழுப்புகின்றன.

வண்டானது செந்தாமரைத் தேனைக் குடித்துச் சிறகசைத்துப் பாடுவது போன்று பாவலரேறு தமிழைச் சுவைத்து, அவரது உள்ளத்தில் கனல் மூள தமிழின் பெருமையை எங்கும் முழங்குகின்றார்.

## கற்பவை கற்றபின்

1. ''நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை''
இச்செய்யுளில் இடம் பெற்றுள்ள எட்டுத்தொகை நூல்களைப் பெயர்க்காரணத்துடன் எடுத்துக்காட்டுக.

1) நற்றிணை:

- எட்டுத்தொகை நூல்களில் ஒன்று. நல் என்னும் அடைமொழி உண்டு.
- இந்நூல் 9 அடி முதல் 12 அடிகள் வரை அமைந்து 400 பாடல்களைக் கொண்டது.
- இந்நூலைத் தொகுத்தவர் யாரெனத் தெரியவில்லை. தொகுப்பித்தவர் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி.

2) குறுந்தொகை:

- எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. 'நல்ல குறுந்தொகை' எனச் சிறப்பிக்கப்படுகிறது.
- குறைந்த அடிகள் கொண்ட பாடல்களின் தொகுப்பாக இருப்பதால் இது குறுந்தொகை எனப் பெயர் பெற்றது.

3) ஐங்குறுநூறு:

- இதிலுள்ள பாடல்கள் சங்கக் காலத்தைச் சார்ந்தவை.
- குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல், பாலை என்னும் ஐந்து நிலம் சார்ந்த திணை ஒவ்வொன்றிற்கும் நூறு பாடல்கள் வீதம் இந்நூலில் ஐந்நூறு அகத்திணைப் பாடல்கள் உள்ளன.
- 3 அடி சிற்றெல்லையும் 6 அடி பேரெல்லையும் கொண்டது.

4) பதிற்றுப் பத்து:

- சேர மன்னர்கள் பதின்மரைப் பற்றி பத்துப் புலவர்கள் பத்து பத்தாகப் பாடிய பாடல்களின் தொகுப்பு.
- சேர மன்னர்களின் வீரச் சிறப்பு, கல்வித் திறம், மனத்திண்மை, ஈகைத்திறம், போர்த்திறம் போன்ற பல்வகைத் திறன்களை சித்தரிக்கின்றன.

5) பரிபாடல்:

- தொல்காப்பியம் பரிபாடலுக்கு இலக்கணம் கூறுகிறது.
- நான்கு பாவின் உறுப்புகளும் கொண்ட பாடல். 25 முதல் 400 அடிகள் வரை இருக்கும்.

6) கலித்தொகை:

- கலிப்பாவினால் பாடப்பட்ட 150 பாடல்கள் உள்ளன.
- துள்ளலோசையால் பாடப்பட்டு பாவகையால் பெயர் பெற்ற நூல்.
- பண்டைக்கால ஒழுக்க வழக்கங்கள், நிகழ்ச்சிகள் ஆகியனவற்றை அறிந்து கொள்ளலாம்.

7) அகநானூறு:

- அகத்திணை சார்ந்த நூல்.
- அகத்தொகையுள் நீண்ட பாடல்களைக் கொண்டமையால் இதனை 'நெடுந்தொகை' எனவும் கூறுவர்.

8) புறநானூறு:

- புறத்திணை சார்ந்த சங்கத் தமிழ் நூல்.
- இந்நூலைத் தொகுத்தவர் பெயரும், தொகுப்பித்தவர் பெயரும் தெரியவில்லை.
- பாக்களின் அடி வரையறை 4 அடி முதல் 40 அடி வரை உள்ளன.
- இதனை ஜி.யு. போப் அவர்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

2. 'எந்தமிழ்நா நின் பெருமை எடுத்தே உரைவிரிக்கும்' என்ற பாடலடியைக் கொண்டு வகுப்பறையில் ஐந்து நிமிட உரை நிகழ்த்துக.

"வீறுடை செம்மொழி தமிழ்மொழி உலகம்
வேரூன்றிய நாள் முதல் உயிர்மொழி"

என்று தமிழின் பெருமையைப் பறைசாற்றுகிறார் பாவலரேறு பெருஞ்சித்திரனார். தமிழ் மூவாயிரம் ஆண்டுகளுக்கு மேல் பழமை வாய்ந்த இலக்கிய வளம் மிக்க மொழி. காலத்தால் மூத்த மொழி, தனித்தன்மையால் மிடுக்குற்றுச் செம்மொழியாய் திகழ்கிறது. 'திருத்திய பண்பும் சீர்த்த நாகரிகமும் பொருந்திய தூய மொழி தமிழ்ச் செம்மொழியாம்' என்று பரிதிமாற் கலைஞர் செம்மொழிக்கு இலக்கணம் வகுத்துள்ளார்.

உலகில் ஆறாயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகள் உள்ளன என்பர் மொழி நூலார். இவற்றுள் இலக்கண, இலக்கிய வளமுடைய மொழிகள் மூவாயிரம். இவற்றுள்ளும் ஈராயிரம் ஆண்டுகட்கும் மேற்பட்ட வரலாற்றுத் தொன்மையுடைய மொழிகள் சிலவே. அவை தமிழ், சீனம், சமஸ்கிருதம், இலத்தீன், ஈப்ரு, கிரேக்கம் ஆகியன. இவற்றுள் இலத்தீனும், ஈப்ருவும் வழக்கொழிந்து போயின. இன்றும் நிலைத்து நிற்கும் மொழிகளுள் நம் தமிழ்மொழியும் ஒன்று.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரிக்கண்டம். அவன் பேசிய மொழி தமிழ்மொழியே. அக்குமரிக்கண்டத்தில் முதல், இடைத் தமிழ்ச் சங்கங்கள் அமைத்து தமிழர் மொழியை வளர்த்தனர். உலகம் தோன்றிய போதே தோன்றிய தமிழை, அதன் தொன்மையைக் கருதி 'என்று முள தென்தமிழ்' என்பார் கம்பர்.

ஆங்கிலத்தில் எண்ணற்ற பிறமொழிச் சொற்கள் கலந்துள்ளன. வடமொழியிலும் தமிழ், பிராகிருதம், பாலி மொழிச்சொற்கள் கலந்துள்ளன. இவ்வாறே தமிழிலும் பிறமொழிச் சொற்கள் கலந்துள்ளன. பிறமொழிச் சொற்களை நீக்கினால் பல மொழிகள் இயங்காது. ஆனால், தமிழ் ஒன்றே பிறமொழிச் சொற்களை நீக்கினாலும் இனிதாக இயங்க வல்லது. மேலும் மிகுதியான வேர்ச் சொற்களை கொண்ட மொழி தமிழ். அவ்வேர்ச் சொற்களைக் கொண்டே புத்தம் புது கலைச் சொற்களைத் தமிழ்மொழியால் உருவாக்கிக் கொள்ள இயலும்.

தமிழ் மொழியானது திராவிட மொழிகளான கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் முதலிய மொழிகளுக்குத் தாய்மொழியாகத் திகழ்கிறது. அது பிராகுயி முதலான வடபுல மொழிகளுக்கும் தாய்மொழியாக விளங்குகிறது என்கிறார் கால்டுவெல். ஆயிரத்தெண்ணூறு மொழிகளுக்கு வேர்ச் சொற்களையும், நூற்றெண்பது மொழிகளுக்கு உறவுப் பெயர்களையும் தந்துள்ளது தமிழ். ஆதலால் உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழியாகத் திகழ்கிறது தமிழ் என்பது பெருமைக்குரிய ஒன்று. இவ்வாறு சிறப்புக்குரிய தமிழை என்னுடைய தமிழ்நாக்கு எவ்வாறு விரித்துரைக்கும்!



மொழி – அமுதஊற்று

# 2. தமிழ்ச்சொல் வளம்

தேவநேயப் பாவாணர்





## பலவுள் தெரிக

### பாடநூல் வினாக்கள்:

1. 'காய்ந்த இலையும் காய்ந்த தோகையும்' நிலத்துக்கு நல்ல உரங்கள். இத்தொடரில் அடிக்கோடிட்ட பகுதி குறிப்பிடுவது

அ) இலையும் சருகும் ஆ) தோகையும் சண்டும்
இ) தாளும் ஓலையும் ஈ) சருகும் சண்டும்

விடை : ஈ) சருகும் சண்டும்

2. வேர்க்கடலை, மிளகாய் விதை, மாங்கொட்டை – ஆகியவற்றைக் குறிக்கும் பயிர்வகை PTA

அ) குலைவகை ஆ) மணிவகை
இ) கொழுந்துவகை ஈ) இலைவகை

விடை : ஆ) மணிவகை

### கூடுதல் வினாக்கள்

3. மொழிஞாயிறு என்றழைக்கப்படுபவர் ________.

அ) தாமோதரனார் ஆ) தேவநேயப் பாவாணர்
இ) இளங்குமரனார் ஈ) வரதராசனார்

விடை: ஆ) தேவநேயப் பாவாணர்

4. சிவியல் என்பது ________.

அ) சுருங்கிய காய் ஆ) சூட்டினால் பழுத்த பிஞ்சு
இ) சுருங்கிய பழம் ஈ) முற்றிய காய்

விடை: இ) சுருங்கிய பழம்

5. தேவநேயப் பாவாணர் ________ கழகத்தை நிறுவித் தலைவராக இருந்தார்.

அ) உலகத் தமிழ்க் ஆ) உலக ஆராய்ச்சிக்
இ) உலகப் பண்பாட்டுக் ஈ) பன்னாட்டு சங்கம்

விடை: அ) உலகத் தமிழ்க்

6. பூம்பிஞ்சு என்பது ________.

அ) இளம் காய் ஆ) பூவோடு கூடிய இளம் பிஞ்சு
இ) முற்றிய பிஞ்சு ஈ) வாடிய பிஞ்சு

விடை: ஆ) பூவோடு கூடிய இளம் பிஞ்சு

7. 'நாடும் மொழியும் நமதிரு கண்கள்' என்று பாடியவர் ________

அ) பாரதியார் ஆ) பாரதிதாசன் இ) திரு.வி.க. ஈ) சுரதா

விடை: அ) பாரதியார்

8. வாழைப்பிஞ்சை ________ என அழைப்பர்.

அ) வாழைக்கச்சல் ஆ) வாழைநுழாய்
இ) வாழைக்குரும்பை ஈ) வாழைக்கழியல் **விடை:** அ) வாழைக்கச்சல்

9. இமைகளை மூடியபடி எழுதும் ஆற்றலைக் கற்றுக்கொண்டவர். PTA

அ) தமிழழகனார் ஆ) அப்பாத்துரையார்
இ) தேவநேயப்பாவாணர் ஈ) இரா.இளங்குமரனார்

**விடை:** ஈ) இரா. இளங்குமரனார்

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. தெலுங்கு, கன்னடம் முதலியவை திராவிட மொழிகளாகும்.
விடை : திராவிட மொழிகள் யாவை?

2. இளங்குமரனார் பாவாணர் நூலகம் ஒன்றை உருவாக்கியுள்ளார்.
விடை : பாவாணர் நூலகத்தை உருவாக்கியவர் யார்?

3. உலகத்திலேயே தமிழ்மொழிக்காக உலக மாநாடு நடத்திய முதல் நாடு மலேசியா.
விடை : உலகத்திலேயே தமிழ்மொழிக்காக உலக மாநாடு நடத்திய முதல் நாடு எது?

4. பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்குநராகப் பணியாற்றினார்.
விடை : செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்குநராகப் பணியாற்றியவர் யார்?

5. தாள், தோகை, ஓலை, சண்டு, சருகு முதலியவை தாவரங்களின் இலை வகைகளைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.
விடை : தாவரங்களின் இலை வகைகளைக் குறிக்கும் சொற்கள் யாவை?

6. ஒரு நாட்டு வளத்திற்குத் தக்கபடியே அந்நாட்டு மக்களின் அறிவொழுக்கங்கள் அமைந்திருக்கும். PTA
விடை : நாட்டு மக்களின் அறிவொழுக்கங்கள் எவ்வாறு அமைந்திருக்கும்?

7. சொல்லாராய்ச்சியில் பாவாணரும் வியந்த பெருமகனார் தமிழ்த்திரு இரா. இளங்குமரனார்.
விடை : சொல்லாராய்ச்சியில் பாவாணரும் வியந்த பெருமகனார் யார்? PTA

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. நாட்டின் தனிபெரும் வளத்தினாலேயே, பண்டைத் தமிழ் மக்கள் தனிபெரும் நாகரிகத்தை உடையவராக இருந்திருக்கின்றனர்.
விடை : நாட்டின் தனிப்பெரும் வளத்தினாலேயே, பண்டைத்தமிழ் மக்கள் தனிப்பெரும் நாகரிகத்தை உடையவராக இருந்திருக்கின்றனர்.

2. ஆங்கில நூல்களிலும் வேறு பல வகைகளில் இலைகளை பாகுபாடு செய்தனரேயன்றி தமிழ் பொது மக்களை போல வன்மை, மென்மை பற்றி தாள், இலை, தோகை, ஓலை என பாகுபாடு செய்தாரில்லை.
விடை : ஆங்கில நூல்களிலும் வேறு பல வகைகளில் இலைகளைப் பாகுபாடு செய்தனரேயன்றி தமிழ்ப்பொது மக்களைப் போல வன்மை, மென்மை பற்றித் தாள், இலை, தோகை, ஓலை எனப் பாகுபாடு செய்தாரில்லை.

3. பழங்களின் மேற்பகுதியினை குறிக்க வழங்கும் சொற்கள் தொலி, தோல், தோடு, ஓடு, குடுக்கை முதலியனவாகும்.
விடை : பழங்களின் மேற்பகுதியினைக் குறிக்க வழங்கும் சொற்கள் தொலி, தோல், தோடு, ஓடு, குடுக்கை முதலியனவாகும்.

## நிறுத்தற் குறியிடுக

1. பற்பல நூல்களை எழுதியிருப்பினும் இலக்கண வரலாறு தமிழிசை இயக்கம் தனித்தமிழ் இயக்கம் பாவாணர் வரலாறு குண்டலகேசி உரை யாப்பருங்கலம் உரை புறத்திரட்டு உரை திருக்குறள் தமிழ் மரபுரை காக்கைப் பாடினிய உரை தேவநேயம் முதலியன இரா இளங்குமரனாரின் தமிழ்ப்பணியைத் தரமுயர்த்திய நல்முத்துகள்

விடை : பற்பல நூல்களை எழுதியிருப்பினும் இலக்கண வரலாறு, தமிழிசை இயக்கம், தனித்தமிழ் இயக்கம், பாவாணர் வரலாறு, குண்டலகேசி உரை, யாப்பருங்கலம் உரை, புறத்திரட்டு உரை, திருக்குறள் தமிழ் மரபுரை, காக்கைப் பாடினிய உரை, தேவநேயம் முதலியன இரா. இளங்குமரனாரின் தமிழ்ப்பணியைத் தரமுயர்த்திய நல்முத்துகள்.

2. தாவரங்களின் குலைவகைகளைக் குறிப்பதற்கான சொற்கள்.
கொத்து அவரை துவரை முதலியவற்றின் குலை குலை கொடி முந்திரி போன்றவற்றின் குலை தாறு வாழைக்குலை கதிர் கேழ்வரகு சோளம் முதலியவற்றின் கதிர் அலகு அல்லது குரல் நெல் தினை முதலியவற்றின் கதிர் சீப்பு வாழைத் தாற்றின் பகுதி

விடை : கொத்து : அவரை, துவரை முதலியவற்றின் குலை; குலை : கொடி முந்திரி போன்றவற்றின் குலை; தாறு: வாழைக்குலை; கதிர்: கேழ்வரகு, சோளம் முதலியவற்றின் கதிர்; அலகு அல்லது குரல்: நெல், தினை முதலியவற்றின் கதிர்; சீப்பு: வாழைத் தாற்றின் பகுதி.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

பிற நாடுகளிலுள்ள கூலங்களெல்லாம் சிலவாகவும், சில்வகைப்பட்டனவாகவுமிருக்க, தமிழ்நாட்டிலுள்ளவையோ, பலவாகவும் கழிபல வகைப்பட்டனவாகவும் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, கோதுமையை எடுத்துக்கொள்ளின் அதில் சம்பாக்கோதுமை, குண்டுக் கோதுமை, வாற்கோதுமை முதலிய சில வகைகளேயுண்டு. ஆனால் தமிழ்நாட்டு நெல்லிலோ, செந்நெல், வெண்ணெல், கார்நெல் என்றும் சம்பா, மட்டை, கார் என்றும் பலவகைகள் இருப்பதுடன் அவற்றுள் சம்பாவில் மட்டுமே ஆவிரம்பூச்சம்பா, ஆனைக்கொம்பன் சம்பா, குண்டுச்சம்பா, குதிரைவாலிச்சம்பா, சிறுமணிச்சம்பா, சீரகச்சம்பா முதலிய அறுபது உள்வகைகள் உள்ளன. இவற்றோடு வரகு, காடைக்கண்ணி, குதிரைவாலி முதலிய சிறுகூலங்கள் தமிழ்நாட்டிலன்றி வேறெங்கும் விளைவதில்லை. தமிழ்நாட்டுள்ளும் தென்னாட்டிலேயே அவை விளைகின்றன.

1. 'கூலம்' என்பதன் பொருள் யாது? அவை பிறநாடுகளிலும், தமிழ்நாட்டிலும் எவ்வாறு உள்ளன?
   - கூலம் என்பதன் பொருள் 'தானியம்' ஆகும்.
   - பிற நாடுகளிலுள்ள கூலங்களெல்லாம் சிலவகைப் பட்டவனவாகவும், தமிழ்நாட்டிலுள்ள கூலங்களோ பலவாகவும் கழிபலவகைப் பட்டவனவாகவும் இருக்கின்றன.
2. தமிழ்நாட்டு நெல்லில் வகைகள் யாவை?
   - தமிழ்நாட்டு நெல்லில் செந்நெல், வெண்ணெல், கார்நெல் என்றும் சம்பா, மட்டை, கார் என்றும் பலவகைகள் உள்ளன.
   - அவற்றுள் சம்பாவில் மட்டும் ஆவிரம்பூச்சம்பா, ஆனைக்கொம்பன் சம்பா, குண்டுச் சம்பா, குதிரைவாலிச் சம்பா, சிறுமணிச சம்பா, சீரகச் சம்பா முதலிய அறுபது வகைகள் உள்ளன.
3. இவ்வுரைப்பகுதிக்கு ஏற்ற தலைப்பு தருக.
   விளைபொருள் வகைகள்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. ஒரு தாற்றில் பல சீப்பு வாழைப்பழங்கள் உள்ளன.
ஒரு சீப்பில் பல தாறு வாழைப்பழங்கள் உள்ளன.
ஒரு சீப்பில் பல வாழைப்பழங்கள் உள்ளன.

மேற்கண்ட தொடர்களில் சரியான தொடர்களைச் சுட்டிக்காட்டி, எஞ்சிய பிழையான தொடரிலுள்ள பிழைக்கான காரணத்தை எழுதுக.

விடை : சரியான தொடர்கள்:

ஒரு தாற்றில் பல சீப்பு வாழைப்பழங்கள் உள்ளன.

ஒரு சீப்பில் பல வாழைப்பழங்கள் உள்ளன.

ஒரு சீப்பில் பல தாறு வாழைப்பழங்கள் உள்ளன. இது தவறானது. முழு வாழைக்குலை தாறு என்று அழைக்கப்படும். சீப்புக்குள் தாறு அமையாது.

### கூடுதல் வினாக்கள்:

2. டாக்டர். கால்டுவெல் தமிழ்மொழியின் சிறப்பைப் பற்றி கூறுவன யாவை?

''தமிழில் மட்டும் பயன்படுத்தப்பட்டுத் தமிழுக்கே சிறப்பாக உரியனவாகக் கருதப்படும் சொற்கள் மட்டுமன்றித் தெலுங்கு, கன்னடம் முதலிய பிற திராவிட மொழிக்குரியனவாகக் கருதப்படும் சொற்களும் தமிழில் உள்ளன'' என்கிறார், டாக்டர். கால்டுவெல்.

3. தாவரத்தின் அடிப்பகுதியைக் குறிக்கும் சொற்கள் யாவை?

தாள், தண்டு, கோல், தூறு, தட்டை, கழி, கழை, அடி ஆகியன தாவரத்தின் அடிப்பகுதியைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.

4. தாவரங்களின் அடியிலிருந்து பிரிந்து செல்லும் பிரிவுகளுக்கு வழங்கும் சொற்கள் யாவை?

கவை, கொம்பு அல்லது கொப்பு, கிளை, சினை, போத்து, குச்சு, இணுக்கு ஆகியன.

5. காய்ந்த தாவரத்தின் பகுதிகளுக்கு வழங்கும் சொற்கள் யாவை?

சுள்ளி, விறகு, வெங்கழி, கட்டை போன்றவை காய்ந்த தாவரத்தின் பகுதிகளுக்கு வழங்கும் சொற்கள் ஆகும்.

6. தாவரங்களின் இலை வகைகளைக் குறிக்கும் சொற்கள் யாவை?

இலை, தாள், தோகை, ஓலை, சண்டு, சருகு ஆகியவை தாவரங்களின் இலை வகைகளைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.

7. தாவரத்தின் நுனிப்பகுதிகளைக் குறிக்கும் சொற்கள் யாவை?

துளிர் அல்லது தளிர், முறி அல்லது கொழுந்து, குருத்து, கொழுந்தாடை முதலியவை தாவரத்தின் நுனிப்பகுதிகளைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.

8. பூவின் நிலைகளைக் குறிக்கும் சொற்கள் யாவை?

அரும்பு, போது, மலர், வீ, செம்மல் ஆகியவை பூவின் நிலைகளைக் குறிக்கும் சொற்கள் ஆகும்.

9. தாவரத்தின் பிஞ்சு வகைகளுக்கு வழங்கும் சொற்கள் யாவை?

பூம்பிஞ்சு, பிஞ்சு, வடு, மூசு, கவ்வை, குரும்பை, முட்டுக் குரும்பை, இளநீர், நுழாய், கருக்கல், கச்சல் முதலியவை தாவரத்தின் பிஞ்சு வகைகளுக்கு வழங்கும் சொற்கள் ஆகும்.

10. தாவரங்களின் குலை வகைகளைக் குறிப்பதற்கான சொற்கள் யாவை?

கொத்து, குலை, தாறு, கதிர், அலகு அல்லது குரல், சீப்பு ஆகியவை தாவரங்களின் குலை வகைகளைக் குறிப்பதற்கான சொற்கள் ஆகும்.

11. கெட்டுப்போன காய்க்கும், கனிக்கும் வழங்கும் சொற்கள் யாவை?

சூம்பல், சிவியல், சொத்தை, வெம்பல், அளியல், அழுகல், சொண்டு ஆகியவை கெட்டுப் போன காய்க்கும் கனிக்கும் வழங்கும் சொற்கள் ஆகும்.

12. தானியங்களுக்கு வழங்கும் சொற்கள் யாவை?

கூலம், பயறு, கடலை, விதை, காழ், முத்து, கொட்டை, தேங்காய், முதிரை ஆகியவை தானியங்களுக்கு வழங்கும் சொற்கள் ஆகும்.

13. தாவரங்களின் இளம் பருவத்திற்கான சொற்கள் யாவை?

நாற்று, கன்று, குருத்து, பிள்ளை, குட்டி, மடலி அல்லது வடலி, பைங்கூழ் ஆகியவை தாவரங்களின் இளம்பருவத்திற்கான சொற்களாகும்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. புளியங்கன்று ஆழமாக நடப்பட்டுள்ளது. – இதுபோல் இளம் பயிர் வகை ஐந்தின் பெயர்களைத் தொடர்களில் அமைக்க, PTA

1. வாழைக்கன்று நடுவதற்கு வாங்கினேன்.
2. மாங்கன்று விற்பனைக்கு உள்ளது.
3. கொய்யாக்கன்று அதிகமாக நடப்பட்டுள்ளது.
4. தென்னம்பிள்ளை வாங்கி நட்டேன்.
5. தேக்குக் கன்றுகள் சாலையின் ஓரத்தில் நடப்பட்டிருந்தன.

### கூடுதல் வினா:

2. இரா. இளங்குமரனார் பற்றிக் குறிப்பு வரைக.

- இரா.இளங்குமரனார் ஒரு தமிழாசிரியர். நூலாக்கப் பணிகளை விரும்பிச் செய்பவர்
- சொல்லாராய்ச்சியில் பாவாணரும் வியந்த பெருமகனார்.
- திருச்சிராப்பள்ளிக்கு அருகில் அமைந்துள்ள அல்லூரில் 'திருவள்ளுவர் தவச்சாலை' ஒன்றை அமைத்திருப்பவர். பாவாணர் நூலகம் ஒன்றை உருவாக்கியவர்.
- தமிழகம் முழுவதும் திருக்குறள் சொற்பொழிவுகளை வழங்கி வருபவர். தமிழ் வழித் திருமணங்களை நடத்தி வருபவர்.
- இலக்கண வரலாறு, தமிழிசை இயக்கம், தனித்தமிழ் இயக்கம், பாவாணர் வரலாறு, குண்டலகேசி உரை, யாப்பருங்கல உரை, புறத்திரட்டு உரை, திருக்குறள் தமிழ் மரபுரை, காக்கைப்பாடினிய உரை, தேவநேயம் முதலியன இவர்தம் நல்முத்துகள்.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. தமிழின் சொல்வளம் பற்றியும் புதிய சொல்லாக்கத்திற்கான தேவை குறித்தும் தமிழ் மன்றத்தில் பேசுவதற்கான உரைக் குறிப்புகளை எழுதுக. PTA

**தமிழின் சொல்வளம்:**

ஒரு மொழி பொதுமக்களாலும், அதன் இலக்கியம் புல மக்களாலும் அமையப் பெறும். தமிழ்ப் பொதுமக்கள் உயர்ந்த பகுத்தறிவுடையவர். எத்துணையோ ஆராய்ச்சி நடந்து

வரும் இக்காலத்திலும் எத்துணையோ மொழிகளினின்று கடன் கொண்ட ஆங்கில மொழியிலும் நூலிலும் இலையைக் குறிக்க leaf என ஒரே சொல் உள்ளது. ஆங்கில நூல்களிலும் வேறு பல வகைகளில் இலைகளைப் பாகுபாடு செய்தனரேயன்றி, தமிழ்ப் பொது மக்களைப் போல வன்மை மென்மை பற்றிய தாள், இலை, தோகை, ஓலை எனப் பாகுபாடு செய்தாரில்லை.

புதிய சொல்லாக்கத்தின் தேவைகள்:

சொல்லாக்கம் காரணமாகத் தமிழ்மொழியின் ஒலியமைப்பிலும், சொல்லமைப்பிலும், பொருள் புலப்பாட்டிலும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. சொல்லாக்கத்தினால் உருவாக்கப் பட்டுள்ள சொற்கள், மரபு வழிப்பட்ட தமிழ் இலக்கணத்தில் மாற்றங்களைக் கோருகின்றன.

மொழியியலின் பிற பிரிவுகளைக் காட்டிலும் இலக்கணத்துடன் நெருங்கிய தொடர்புடையது சொல்லாக்கம். சொல்லாக்கம் மரபிலக்கணத்துடன் வேறுபடும் இடங்களைக் கண்டறிந்து புதிய இலக்கண விதிகளை வகுக்க வேண்டிய தேவை இன்று ஏற்பட்டுள்ளது. இது மொழியியல் அடிப்படையில் சொல்லாக்கம் ஏற்படுத்தியுள்ள முக்கியத் தேவையாகும்.

சொல்லாக்க அறிவானது அத்துறையின் வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்குவதுடன், மொழியின் வளர்ச்சிக்கும் ஆதாரமாகும்.

- உயர் கல்வியினைத் தாய்மொழியில் பயிற்றுவிக்காத நாடுகளில், சில நூற்றாண்டுகளில் தாய்மொழியானது வீட்டு மொழியாகச் சுருங்கி வழக்கொழிந்து விடும் என்று யுனெஸ்கோ அறிவித்துள்ளது.
- தமிழைப் பொறுத்தவரை அறிவியல், மருத்துவம், பொறியியல் போன்ற உயர்கல்வித் துறைகளில் சாத்தியமற்ற நிலை உள்ளது.
- தமிழில் உயர் கல்விக்கான பாடநூல்கள் இல்லை. அப்பாடநூல்களை எழுதுவதற்கான சொற்களஞ்சியமும் இல்லை என்று சிலர் முட்டுக்கட்டை போட்டுக் கொண்டிருக்கின்றனர்.
- இத்தகைய தடைகளை அகற்றி, உயர்கல்வியைத் தமிழில் கற்பிப்பதற்கான நிலையை ஏற்படுத்திட, துறைதோறும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் சொல்லாக்கங்கள் அடிப்படையாக விளங்குகின்றன.
- எனவே, இரண்டாயிரமாண்டு வரலாற்றுப் பழமையான தமிழ் மொழியானது, எதிர்காலத்தில் எதிர்கொள்ளவிருக்கும் பிரச்சனைகளைத் தகர்த்து, காலத்துக் கேற்றவாறு சீரிளமைத்திறத்துடன் விளங்க வேண்டுமெனில், சொல்லாக்க முயற்சிகள் தொடர்ந்து இடைவிடாமல் நடைபெற வேண்டியது அவசியம் என்று பாவாணர் தமது புதிய சொல்லாக்க உரையில் குறிப்பிடுகிறார்.

## கூடுதல் வினா:

2. தாவரங்களில் தமிழ்ச் சொல்வளத்தைப் பற்றிக் கட்டுரை வடிவில் எழுதுக.

அடிவகை:

ஒரு தாவரத்தின் அடிப்பகுதியைக் குறிப்பதற்கான சொற்கள் தாள், தண்டு, கோல், தூறு, தட்டு அல்லது தட்டை, கழி, கழை, அடி ஆகும்.

எ.கா:

தாள் – நெல், கேழ்வரகு

தண்டு – கீரை, வாழை

கிளைப்பிரிவு:

தாவரங்களின் அடியிலிருந்து பிரிந்து செல்லும் பிரிவுகளுக்கு வழங்கும் சொற்கள், கவை – அடிமரத்தினின்று பிரியும் மாபெரும் கிளை.

- கொம்பு அல்லது கொப்பு என்பது கவையின் பிரிவு.
- கிளை கொம்பின் பிரிவாகும்.
- சினை கிளையின் பிரிவாகும்.
- போத்து என்பது சினையின் பிரிவு.
- குச்சு என்பது போத்தின் பிரிவு.
- இணுக்கு என்பது குச்சியின் பிரிவு.

**காய்ந்த தாவரத்தின் பகுதி:**

காய்ந்த தாவரத்தின் பகுதிகளுக்கு வழங்கும் சொற்கள் சுள்ளி (காய்ந்த குச்சி), விறகு (காய்ந்த சிறுகிளை), வெங்கழி (காய்ந்த கழி), கட்டை (காய்ந்த கொம்பும் கவையும் அடியும்) ஆகும்.

**இலை வகை:**

தாவரங்களின் இலை வகைகளைக் குறிக்கும் சொற்கள் இலை, தாள், தோகை, ஓலை, சண்டு, சருகு ஆகும்.

எ.கா:

இலை – புளி, வேம்பு முதலியவற்றின் இலை
தாள் – நெல், புல் முதலியவற்றின் இலை
தோகை – சோளம், கரும்பு முதலியவற்றின் இலை
ஓலை – தென்னை, பனை முதலியவற்றின் இலை
சண்டு – காய்ந்த தாளும், தோகையும்
சருகு – காய்ந்த இலை

**கொழுந்து வகை:**

தாவரத்தின் நுனிப்பகுதிகளைக் குறிக்கும் சொற்கள் தளிர் அல்லது துளிர், முறி அல்லது கொழுந்து, குருத்து, கொழுந்தாகை ஆகும்.

எ.கா:

தளிர் – நெல், புல் முதலியவற்றின் கொழுந்து
முறி – புளி, வேம்பு முதலியவற்றின் கொழுந்து
குருத்து – சோளம், கரும்பு, தென்னை, பனை முதலியவற்றின் கொழுந்து
கொழுந்தாடை – கரும்பின் நுனிப்பகுதி

**பூவின் நிலைகள்:**

பூவின் நிலைகளைக் குறிக்கும் சொற்கள் அரும்பு, போது, மலர், வீ, செம்மல் முதலியன ஆகும்.

அரும்பு என்பது பூவின் தோற்ற நிலை ஆகும். பூ விரியத் தொடங்கும் நிலை போது ஆகும். மலர் பூவின் மலர்ந்த நிலை ஆகும். வீ என்பது மரஞ்செடியினின்று பூ கீழே விழுந்த நிலை ஆகும். செம்மல் என்பது பூ வாடின நிலையாகும்.

**பிஞ்சுவகை:**

தாவரத்தின் பிஞ்சு வகைகளுக்கு வழங்கும் சொற்கள் பூம்பிஞ்சு, வடு, மூசு, கவ்வை, குரும்பை, முட்டுக் குரும்பை, இளநீர், நுழாய், கருக்கல், கச்சல் முதலியன ஆகும்.

எ.கா:

வடு – மாம்பிஞ்சு
மூசு – பலாப்பிஞ்சு
கவ்வை – எள்பிஞ்சு

குரும்பை – தென்னை, பனை முதலியவற்றின் இளம்பிஞ்சு
இளநீர் – முற்றாத தேங்காய்
நுழாய் – இளம்பாக்கு
கருக்கல் – இளநெல்
கச்சல் – வாழைப் பிஞ்சு

**குலைவகை:**

தாவரங்களின் குலை வகைகளைக் குறிப்பதற்கான சொற்கள் கொத்து, குலை, தாறு, கதிர், அலகு அல்லது குரல், சீப்பு ஆகும்.

**எ.கா:**

கொத்து – அவரை, துவரை ஆகியவற்றின் குலை
குலை – கொடி முந்திரி போன்றவற்றின் குலை
தாறு – வாழைக்குலை
கதிர் – கேழ்வரகு, சோளம் முதலியவற்றின் கதிர்
அலகு – நெல், தினை முதலியவற்றின் கதிர்
சீப்பு – வாழைத்தாற்றின் பகுதி

**கெட்டுப் போன காய்கனி வகை:**

கெட்டுப்போன காய்க்கும் கனிக்கும் தாவரத்திற்கேற்ப வழங்கும் சொற்கள் சூம்பல் (நுனியில் சுருங்கிய காய்), சிவியல் (சுருங்கிய பழம்), சொத்தை (புழு, பூச்சி அரித்த காய் அல்லது கனி), வெம்பல் (சூட்டினால் பழுத்த பழம்), அளியல் (குளுகுளுத்த பழம்), அழுகல் (குளுகுளுத்து நாறிய பழம்), சொண்டு (பதராய்ப்போன மிளகாய்) ஆகும்.

## கற்பவை கற்றபின்

1. பின்வரும் நில வகைகளின் பெயர்களுக்கான காரணங்களைக் கேட்டறிந்து வகுப்பறையில் பகிர்க.

தரிசு, சிவல், கரிசல், முரம்பு, புறம்போக்கு, சுவல், அவல்

தரிசு : தரிசு நிலம் என்பது போதிய பருவமழை மற்றும் பராமரிப்பின்றி விளைச்சல் இல்லாமல் போன நஞ்சை நிலம்.

சிவல் : சிவப்பு மண் நிறைந்த நிலம்.

கரிசல் : இது ஒரு வகை மண். அதிகமான நீரை உறிஞ்சும் தன்மை கொண்டது.

முரம்பு : வறண்ட நிலம். பயன் இல்லாதது.

புறம்போக்கு : சமுதாய நன்மை, சாகுபடிக்குத் தகுதியின்மை முதலிய காரணங்களினால் குடிகள் வசம் விடப்படாததும் தீர்வை விதிக்கப்படாததுமாகிய நிலம்.

சுவல் : மேட்டு நிலம். மலைப்பகுதிகள் நீண்டகாலம் அரிக்கப்பட்டு மேட்டு நிலமாக மாறும்.

அவல் : விளைநிலம்.

2. ஒரு பொருள் தரும் பல சொற்களைப் பட்டியலிடுக.

பெண் – நங்கை, வனிதை, மங்கை, அரிவை, தையல், மாது, இடைச்சி.
படகு – கட்டுமரம், ஓடம், ஆனம், அம்மி, கப்பல்.



இயல் - 1 | செய்யுள்

மொழி – அமுதஊற்று

# 3. இரட்டுற மொழிதல்

சந்தக்கவிமணி தமிழழகனார்

ஒரு சொல்லோ, தொடரோ இரு பொருள்பட அமைந்து வருவது இரட்டுறமொழிதல் அணி எனப்படும். இதனைச் சிலேடை அணி என்றும் அழைப்பர். செய்யுளிலும், உரைநடையிலும், மேடைப்பேச்சிலும் சிலேடைகள் பயன்படுத்தப்படுகின்றன.

## ஆழிக்கு இணை

**பாடல் :**

*முத்தமிழ் துய்ப்பதால் முச்சங்கம் கண்டதால்*
*மெத்த வணிகலமும் மேவலால் – நித்தம்*
*அணைகிடந்தே சங்கத் தவர்காக்க ஆழிக்கு*
*இணைகிடந்த தேதமிழ் ஈண்டு*

– தனிப்பாடல் திரட்டு

### சொற்பொருள்:

| பாடல் வரிகள் | தமிழ்மொழிக்குப் பொருத்தம் | கடலுக்குப் பொருத்தம் |
|---|---|---|
| முத்தமிழ் துய்ப்பதால் | இயல், இசை, நாடகம் வளர்ப்பதால் | முத்தினை மூழ்கி எடுத்தலால் |
| முச்சங்கம் கண்டதால் | முதல், இடை, கடை சங்கங்கள் வளர்ந்ததால் | மூன்று வகையான வெண்சங்கு, சலஞ்சலம், பாஞ்சசன்யம் தருதலால் |
| மெத்த வணிகலமும் மேவலால் | ஐம்பெருங் காப்பியம் போன்ற அணிகலனால் | மிகுதியான வணிகக் கப்பல்களால் |
| நித்தம் அணைகிடந்தே சங்கத்தவர் காக்க | சங்கப்புலவர்கள் பாதுகாத்தலால் | நீரலையைத் தடுத்து நிறுத்தி சங்கினைக் காத்தலால் |
| ஆழிக்கு இணைகிடந்த தேதமிழ் ஈண்டு | சங்கப் பலகையில் அமர்ந்திருந்த போது | கடல் தன் அலையால் சங்கினைத் தடுத்தல் |

### பொருளுரை:

**தமிழ்:**

தமிழ் இயல், இசை, நாடகம் என முத்தமிழாய் வளர்ந்தது. முதல், இடை, கடை ஆகிய முச்சங்கங்களால் வளர்க்கப்பட்டது. ஐம்பெருங்காப்பியங்களை அணிகலன்களாகப் பெற்றது. சங்கப் பலகையில் அமர்ந்திருந்த சங்கப் புலவர்களால் காக்கப்பட்டது.

**கடல்:**

கடல் முத்தினையும், அமிழ்தினையும் தருகிறது. வெண்சங்கு, சலஞ்சலம், பாஞ்சசன்யம் ஆகிய மூன்று வகையான சங்குகளைத் தருகிறது. மிகுதியான வணிகக் கப்பல்கள் செல்லும்படி இருக்கிறது. தன் அலையால் சங்கினைத் தடுத்து நிறுத்திக் காக்கிறது.

**விளக்கவுரை:**

தமிழ் கடலோடு ஒத்திருத்தலை இரட்டுற மொழிதலின் மூலம் அறிகையில் அதன் பெருமை ஆழப்படுகிறது; விரிவுபடுகிறது. முத்தமிழிற்கு முச்சங்கம் இணையாகக் கூறப்படுகிறது. தமிழுக்கு அணிகலன்கள் போல் கடலுக்கு மிகுதியான வணிகக்கப்பல்கள் இரட்டுற மொழியப்பட்டுள்ளது (வணிகலமும்). சங்கத்தவர் காக்க என்பதில் தமிழை சங்கப்புலவர்கள் காத்ததாகவும், கடல் தன் அலையால் சங்கினை தடுத்து நிறுத்திக் காப்பதாகவும் இரட்டுறமொழிகிறார்.

## ஆசிரியர் குறிப்பு:

- இயற்பெயர் – சண்முகசுந்தரம்
- சிறப்புப் பெயர் – சந்தக்கவிமணி தமிழழகனார்
- பெற்றோர் – வேலு – வள்ளியம்மை
- பிறப்பு – 21.4.1929
- பிறந்த ஊர் – தூத்துக்குடி.
- எழுதிய நூல்கள் – * தமிழ்மகன் கவிதைகள், * மழலை அமுதம், * பூ மத்தாப்பு, * ஒளியைத் தேடி, * இராம கவிதை
- மறைவு – 2.10.2015

## நூற் குறிப்பு:

புலவர் பலரின் பாடல்களின் தொகுப்பான தனிப்பாடல் திரட்டு (ஐந்தாம் பகுதி – கழகப் பதிப்பு) என்னும் நூலிலிருந்து இந்தப்பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது.

## மதிப்பீடு

**பொருள் தருக:**

1. ஆழி – கடல்
2. துப்பப்பது – கற்பது, தருதல்
3. மேவலால் – பொருந்துதல், பெறுதல்
4. இணை – ஈடு

**இலக்கணக்குறிப்புத் தருக:**

1. காக்க – வியங்கோள் வினைமுற்று
2. துப்பபதால்
3. கண்டதால்
4. மேவலால்

(2–4) – தொழிற்பெயர்கள்

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. 'மெத்த வணிகலன்' என்னும் தொடரில் தமிழழகனார் குறிப்பிடுவது

அ) வணிகக் கப்பல்களும் ஐம்பெருங்காப்பியங்களும்

ஆ) பெரும் வணிகமும் பெரும் கலன்களும்

இ) ஐம்பெருங்காப்பியங்களும், அணிகலன்களும்

ஈ) வணிகக் கப்பல்களும் அணிகலன்களும்

விடை : அ) வணிகக் கப்பல்களும், ஐம்பெரும்காப்பியங்களும்

## கூடுதல் வினாக்கள்:

2. 'முத்தமிழ் துய்ப்பதால்' – என்னும் பாடல் ______ நூலிலிருந்து இடம் பெற்றுள்ளது.

அ) இரட்டுற மொழிதல் ஆ) தனிப்பாடல் திரட்டு
இ) பரிபாடல் ஈ) புறநானூறு

விடை : ஆ) தனிப்பாடல் திரட்டு

3. 'முத்தமிழ் துய்ப்பதால்' – என்னும் பாடலின் ஆசிரியர்______

அ) வீரராகவர் ஆ) மீனாட்சி சுந்தரனார்
இ) காளமேகப் புலவர் ஈ) தமிழழகனார்

விடை : ஈ) தமிழழகனார்

4. ''ஆழி'' என்னும் சொல்லின் பொருள்______

அ) ஆழமான பகுதி ஆ) கிணறு
இ) குளம் ஈ) கடல்

விடை : ஈ) கடல்

5. பாடலில் இடம்பெறும் மோனைச் சொற்களில் ஒன்று______

அ) முத்தமிழ் முச்சங்கம் ஆ) முத்தமிழ் மெத்த
இ) அணை, இணை ஈ) இணை ஈண்டு

விடை : அ) முத்தமிழ் முச்சங்கம்

6. தமிழுக்குரிய அணிகலன் ______.

அ) இரட்டைக் காப்பியம் ஆ) ஐம்பெருங்காப்பியம்
இ) எட்டுத்தொகை ஈ) சிலப்பதிகாரம்

விடை : ஆ) ஐம்பெருங்காப்பியம்

7. கடல் தன் அலைபால் ______ தடுத்து நிறுத்திக் காக்கிறது.

அ) மீனை ஆ) சங்கினை
இ) மண்ணை ஈ) வலையை

விடை : ஆ) சங்கினை

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

PTA

முத்தமிழ் துய்ப்பதால் முச்சங்கம் கண்டதால்
மெத்த வணிகலமும் மேவலால் – நித்தம்
அணைகிடந்தே சங்கத் தவர்காக்க ஆழிக்கு
இணைகிடந்த தேதமிழ் ஈண்டு.

1. இப்பாடல் இடம்பெற்றுள்ள நூல்______

அ) தனிப்பாடல் திரட்டு ஆ) பழமொழி நானூறு
இ) ஆசாரக் கோவை ஈ) திரிகடுகம்

விடை : அ) தனிப்பாடல் திரட்டு

2. பாடலில் இடம் பெற்றுள்ள பொருத்தமான அணி

அ) இரட்டுறமொழிதல் அணி ஆ) தீவக அணி
இ) வஞ்சப்புகழ்ச்சி அணி ஈ) நிரல் நிறை அணி

விடை : அ) இரட்டுறமொழிதல் அணி

3. தமிழுக்கு இணையாய்ப் பாடலில் பொருத்தப்படுவது

அ) சங்கப் பலகை ஆ) கடல்
இ) அணிகலன் ஈ) புலவர்கள்

விடை : ஆ) கடல்

4. தொழிற்பெயர் அல்லாத சொல்

அ) துய்ப்பதால் ஆ) மேவலால்

இ) அணிகலன் ஈ) கண்டதால் விடை : அ) அணிகலன்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. தற்கால உரைநடையில் சிலேடை அமையும் நயத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு தருக.

- ஒரு புலவர் தன் நண்பனைக் காண அவரது இரும்புப்பட்டறைக்குச் சென்றார்.
- நண்பர் அவரைப் பார்த்து "வாரும் இரும்படியும்" என்றார்.
- புலவரே திடீரென இரும்படிக்கச் சொல்கிறாரே எனத் திகைத்தார்.
- நண்பர் சிரித்துக் கொண்டே சொன்னார். " நான் சொன்னாது விளங்க வில்லையா? நீர் புலவர் அல்லவா? அதனால் தான் 'வாரும். இரும். படியும்' என்றேன்" என்றார்.

### கூடுதல் வினாக்கள்:

2. இரட்டுற மொழிதல் என்றால் என்ன?

ஒரு சொல் இரு பொருள்பட அமைந்து வருதல் இரட்டுற மொழிதல் எனப்படும்.

3. இரட்டுற மொழிதலின் மற்றொரு பெயர் யாது?

இரட்டுற மொழிதலின் மற்றொரு பெயர் சிலேடையாகும்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. தமிழழகனார் தமிழையும் கடலையும் இரட்டுற மொழியும் பாங்கினை விளக்குக.

தமிழ்:

- தமிழ், இயல், இசை, நாடகம் என முத்தமிழாய் வளர்ந்தது. முதல், இடை, கடை ஆகிய முச்சங்கங்களால் வளர்க்கப்பட்டது.
- ஐம்பெருங்காப்பியங்களை அணிகலன்களாகப் பெற்றது.
- சங்கப் பலகையில் அமர்ந்திருந்த சங்கப் புலவர்களால் காக்கப்பட்டது.

கடல்:

- கடல், முத்தினையும், அமிழ்தினையும் தருகிறது.
- வெண்சங்கு, சலஞ்சலம், பாஞ்சசன்யம் ஆகிய மூன்று வகையான சங்குகளைத் தருகிறது. மிகுதியான வணிகக் கப்பல்கள் செல்லும்படி இருக்கிறது.
- அதன் அலையால் சங்கினைத் தடுத்து நிறுத்திக் காக்கிறது.

### கூடுதல் வினா:

2. சந்தக்கவிமணி தமிழழகனார் – குறிப்பு வரைக.

- தூத்துக்குடியில் 21.4.1929 இல் தெய்வத்திருவாளர்கள் வேலு – வள்ளியம்மை தம்பதியினருக்கு நான்காவது மகனாகப் பிறந்தவர்.
- இவர் புதுப்புது சந்தங்களிலும், யாப்பு வடிவங்களிலும், சித்திர வடிவங்களிலும் ஆயிரத்திற்கும் மேல் கவிதைகளும் படைத்துள்ளார்.
- வெண்பாக்கள் மட்டுமே அறுபதாயிரத்திற்கும் மேலும் புனைந்துள்ளார்.
- இவரது இயற்பெயர் சண்முகசுந்தரம்.
- இவருடைய நூல்கள் தமிழழகன் கவிதைகள், மழலை அமுதம், பூ மத்தாப்பு, ஒளியைத் தேடி மற்றும் இராமகவிதை என்பனவாகும்.
- சென்னையில் 2.10.2015 அன்று தமிழழகன் இறந்தார்.

## கற்பவை கற்றபின்

1. அ) காலை நேரம் ஒரு நிகழ்ச்சிக்காக தொடர்வண்டியில் வந்து இறங்கினார் தமிழறிஞர் கி.வா.ஜகந்நாதன். அவரை மாலையிட்டு வரவேற்றனர். அப்போது கி.வா.ஜ., "அடடே! காலையிலேயே மாலை வந்துவிட்டதே!" என்றார். எல்லோரும் அந்த சொல்லின் சிலேடைச் சிறப்பை மிகவும் சுவைத்தனர்.

ஆ) இசை விமர்சகர் சுப்புடுவின் விமர்சனங்களில் நயமான சிலேடைகள் காணப்படும். ஒரு முறை ஒரு பெரிய வித்துவானுடைய இசை நிகழ்ச்சியை விமர்சனம் செய்யும் போது அவர் குறிப்பிட்டது; "அன்று கச்சேரியில் அவருடைய காதிலும் கம்மல், குரலிலும் கம்மல்."

இ) தமிழறிஞர் கி.ஆ.பெ.விசுவநாதன் பல் மருத்துவத்தில் சிறப்புப் பட்டம் பெற்ற நண்பர் ஒருவரை அறிமுகம் செய்து வைத்தபோது "இவர் பல்துறை வித்தகர்" என்று குறிப்பிட்டார்!

இவை போன்ற பல சிலேடைப் பேச்சுகளை நீங்கள் கேட்டிருப்பீர்கள். அவற்றை தொகுத்து சொல்நயங்களைப் பதிவு செய்து கலந்துரையாடுக.

கி.வா.ஜ. அவர்கள் ஒரு கூட்டத்தில் இம்மை – மறுமை என்ற தலைப்பில் பேச அழைக்கப்பட்டிருந்தார். அவர் உரையாற்ற ஆரம்பித்ததும் மைக் கோளாறாகி விட்டது. அதை அகற்றி விட்டு வேறு மைக் வைத்தார்கள். அதுவும் கொஞ்சம் நேரத்தில் சரியாகச் செயல்படவில்லை. கி.வா.ஜ. உடனே "இம்மைக்கும் சரியில்லை. அம்மைக்கும் சரியில்லை" என பேசவிருந்த தலைப்பிற்கு ஏற்றவாறு சிலேடையில் சொல்ல அனைவரும் ரசித்தனர்.

2. மொழியின் சிறப்புகளைப் பாடும் கவிதைகளுள் உங்களுக்குப் பிடித்தவற்றை வகுப்பறையில் படித்துக்காட்டுக.

தடுக்கி விழுந்தால் மட்டும்
அ... ஆ...
சிரிக்கும் போது மட்டும்
இ... ஈ ...
சூடுபட்டால் மட்டும்
உ... ஊ...
அதட்டும் போது மட்டும்
எ... ஏ...
ஐயத்தின் போது மட்டும்
ஐ....
ஆச்சரியத்தின் போது மட்டும்
ஒ... ஓ...
வக்கணையின் போது மட்டும்
ஔ....
விக்கலின் போது மட்டும்
ஃ ....
என்று தமிழ் பேசி
மற்ற நேரம் வேற்று மொழி பேசும்
தமிழரிடம் மறக்காமல் சொல்
உன் மொழி தமிழ் மொழி என்று.



இயல் - 1

விரிவானம்

மொழி – அமுதஊற்று

# 4. உரைநடையின் அணிநலன்கள்

எழில் முதல்வன்

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. ஒரு பக்க அளவில் உரையாடல் எழுதுக.

சூழல் – வெளிநாட்டிலிருந்து உங்கள் இல்லத்திற்கு வந்திருக்கும் உறவினரின் மகளுக்குத் தமிழ் மொழியைப் பேச மட்டுமே தெரியும். ஆங்கில இலக்கியம் படித்த அவரிடம் தமிழ் உரைநடையின் சிறப்புப் பற்றி உரையாடுதல். PTA

பிரியா : வணக்கம். தாங்கள் எம் வீட்டிற்கு வந்தது மிக்க மகிழ்ச்சி.

உமா : எங்களுக்கு லீவு அளித்ததால் உன்னோடு ஒருசில நாட்கள் தங்கிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

பிரியா : உமா! உங்க பெற்றோர் நன்றாக இருக்கிறார்களா?

உமா : ஆம்! பிரியா நான், ஆங்கில இலக்கியம் (பி.ஏ.) இப்பொழுது தான் முடித்துள்ளேன். ஆங்கில இலக்கியத்தில் எத்தனை வருணனைகள்! எத்தனை உவமைகள்! ஆங்கில இலக்கியத்தின் ஆரம்ப நிலைகளே அவ்வளவு வியப்பாக உள்ளது.

பிரியா : சரி! தமிழ்மொழியின் உரைநடைச் சிறப்புப் பற்றிக் கூறட்டுமா.

உமா : தமிழிலும் உண்டா?

பிரியா : ஆம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழில் உரைநடை நூல்கள் தோன்றின. ஷேக்ஸ்பியர், ஜான்கீட்ஸ் போன்ற எழுத்தாளர்களைப் போன்று தமிழிலும் பல எழுத்தாளர்கள் தோன்றினர். ஆதலால், தொல்காப்பியர் காலம் தொட்டே உரைநடை பற்றிய குறிப்பு இருப்பதை அறிய முடிகிறது.

''தொன்மை தானே
உரையோடு உணர்ந்த யாப்பின் மேற்றே''

இதனை உரையிடைப் பெற்ற பாட்டுடைச் செய்யுள் என்று வழங்கினர்.

உமா : அப்போதே உரைநடைக்கு மேற்கோள் கையாண்டுள்ளனரா?

பிரியா : ஆம்! ஐரோப்பியர் வருகையால் அச்சு இயந்திரம் இந்தியாவிற்கு வந்த பிறகு பிற்காலத்தில் தமிழில் உரைநடை நூல்கள் பல எழும்பின.

உமா : அச்சு இயந்திரம் உதவியினால் தமிழில் இலக்கியங்கள் அதிகமாக உருவாகியிருக்கும் அல்லவா?

பிரியா : ஆம்! சங்க இலக்கியங்கள், அற இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், இலக்கண நூல்கள், காப்பியங்கள் இப்படி எண்ணற்ற இலக்கியங்கள் உள்ளன.

உமா : சங்க இலக்கியங்கள் என்பது யாது?

பிரியா : சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகும்.

உமா : ஆம்! இவற்றை நானும் கேள்விப்பட்டுள்ளேன்.

பிரியா : இவற்றுள் பல நூல்கள் இயற்கை வெள்ளத்தால் அழிந்து விட்டன. நவீன காலத்திலும் பல உரைநடை நூல்கள், கவிதை நூல்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன.

உமா : ஆங்கிலத்தில் நான் பல நாவல்களைப் படித்துள்ளேன். தமிழிலும் இதுபோன்று உண்டல்லவா?

பிரியா : ஆம்! தமிழில் அவற்றை தொடர்கதைகள் என்கிறோம். அதுமட்டுமல்ல, தேவாரத் தொடர்கள், திருவாசகத் தொடர்கள், பெரிய புராணத் தொடர்கள், திருக்குறள் தொடர்கள் போன்ற பல்வேறு இலக்கியங்களின் தொடர்களை எழுத்தாளர்கள் உரைநடையில், தொடர்கதைகளில் மேற்கோளாக பயன்படுத்துகின்றனர்.

உமா : ஆங்கில இலக்கியத்தைப் போல் தமிழ் மொழியும் பல தனிச்சிறப்புப் பெற்றுள்ளது அல்லவா!

பிரியா : ஆம்! உமா. தமிழை மூத்த மொழி என்கிறோம். அது எல்லா மொழிகளுக்கும் தாயாக விளங்குகிறது. ஆங்கிலத்தில் கூட பல மொழிகள் கலந்துள்ளது. ஆனால், தமிழ்மொழி பிறமொழிக் கலப்பின்றி தனித்து இயங்கும் ஆற்றல் உள்ளது.

உமா : தமிழில் இத்தனை சிறப்புகள் உண்டு என்பதை இப்பொழுதுதான் நான் அறிந்து கொண்டேன். தமிழ் இலக்கியத்தின் மகத்துவத்தை அறிந்து கொண்ட நான் என்னால் முடிந்த அளவு தமிழ் இலக்கியத்தை எடுத்துப் படிப்பேன். 'தமிழே செம்மொழி' என்று நிரூபித்த உனக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பிரியா : நன்றி உமா!

**கூடுதல் வினா:**

2. 'உரைநடையின் அணிகலன்' என்னும் துணைப்பாடத்தின் மூலம் எழில்முதல்வன் கூற விளைவனவற்றைச் சுருக்கி எழுதுக.

**முன்னுரை:**

எழில்முதல்வன் எழுதிய 'புதிய உரைநடை' என்னும் நூலிலுள்ள 'உரைநடையின் அணிகலன்கள்' என்னும் கட்டுரையின் சுருக்கமே நமக்கு உரையாடல் வடிவில் கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது சங்ககாலப் புலவருக்கும், கால இயந்திரமான இணைபதமிழனுக்கும் இடையே நடைபெறும் உரையாடல் வழி தமிழ்மொழியின் சிறப்புகளையும் அது கண்டுள்ள மாற்றங்களையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**உரைநடை:**

சங்க காலத்தில் ஒரு செய்தியைச் சொல்ல வேண்டுமென்றால் அது செய்யுள் வடிவில் மட்டுமே அமைந்திருக்கும். ஆனால் காலமாற்றத்தில் மரபுக்கவிதையாக இருந்த செய்யுள் புதுவடிவம் பெற்றது. பாட்டும் தொகையும் கூறும் அகப்புறமோ, உள்ளுறை உவம இறைச்சிகளோ, பாவகையோ இல்லை. சிறுகதையாக, கட்டுரையாக, புதினமாக உருவானது உரைநடை. அதையே நாம் பேசினால் உரையாடலாகவும் மாறுகின்றது.

**உவமை, உருவகம்:**

நா. பார்த்தசாரதி தன்னுடைய குறிஞ்சிமலரில், "திருப்பரங்குன்றத்தின் அழகைப் பார்ப்பதற்கென்றே இயற்கை பதித்து வைத்த இரண்டு பெரிய நிலைக் கண்ணாடிகளைப் போல் வடபுறமும் தென்புறமும் நீர் நிறைந்த கண்மாய்கள்" என்று கூறுகிறார். தண்டியார், உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து ஒன்றெனமாட்டின் அஃது உருவகமாகும் என்றார். "களம்புகத் துடித்து நின்ற உனக்கு, வெற்றிச்சாறு கிடைத்துவிட்டது, உண்டு மகிழ்ந்தாய்; உன் புன்னகைதான் அதற்கு சான்று' என்று அறிஞர் அண்ணா எழுதினார்.

**எதுகை மோனை:**

திருக்குறளில் காட்டப்பெற்ற எடுத்துக்காட்டு உவமையைத் தற்காலத்தில் 'இணை ஒப்பு' என்கிறோம். அதற்குச் சான்றாக எழுத்தாளர் வ.ராமசாமி எழுதிய 'மழையும் புயலும்' என்ற நூலில் காணலாம். அதுபோல எதுகை மோனையில் எழுந்த உரைநடையைச் சொல்லின் செல்வர் இரா.பி.சேதுபிள்ளை எழுதிய 'தமிழின்பம்' என்ற நூலில் காண முடிகிறது.

#### முரண்பாடுகள்:

முரண்பட்ட சொற்களைச் சேர்த்து எழுதுவது உரைநடையில் மற்றொரு உத்தியாகும். இதைச் 'சொல்முரண்' (Oxymoron) என்றும் கூறுவர். எதிரும் புதிருமான முரண்பாடுள்ள கருத்துகளை அமைத்து எழுதுவதை 'எதிரிணை இசைவு' (Antitheses) என்கிறோம். இது படிப்பதற்கு முரண்படுவது போல் இருக்கும். உண்மையில் முரண்படாத மெய்ம்மையைச் சொல்வது முரண்பாடு மெய்ம்மை (Paradox) எனப்படும். இத்தகைய உத்திகள் உரைநடை எழுதும்போது பயன்படுத்தப்படுகின்றன.

#### அஃறிணை உயர்திணையாய்:

இலக்கணத்தில் தொல்காப்பியர் அஃறிணைப்பொருள்கள் சொல்லுவதும் கேட்பதும் நிகழ்கின்றது. (தொல். 192) இதைத் தற்காலத்தில் தமிழ்த் தென்றல் திரு.வி.க அதிகமாக எழுதியுள்ளார். "சோலையில் புகுவேன்; மரங்கள் கூப்பிடும்; விருந்து வைக்கும்; ஆலமர நிழலில் அமர்வேன். ஆல் 'என் விழுதைப் பார். அந்த அரசுக்கு இஃது உண்டா?' என்னும். அரசு கண்ணிற்படும், 'யான் விழுதின்றி வானுற ஓங்கி நிற்கிறேன், என்னை மக்கள் என்னும் சுற்றிச் செல்கிறார்கள், காண்' எனக்கூறும். இவ்வாறு எழுதினார்.

#### மெய்பாடுகள்:

விடைதரவேண்டிய தேவை இல்லாமல் கேள்வியிலேயே பதில் இருப்பதைப் போல எழுதுவது உணர்ச்சி வெளிப்பாட்டுக்கு உதவும் என்பதற்குப் பெரியாரைப் பற்றி அறிஞர் அண்ணா கூறியதைச் சான்று காட்டலாம். "அவர் (பெரியார்) பேசாத நாள் உண்டா? குரல் கேட்காத ஊர் உண்டா? அவரிடம் சிக்கித் திணறாத பழமை உண்டா?".

மேலும், "இந்தியா தான் என்னுடைய மோட்சம்; இந்தியாவின் நன்மை தான் என் நன்மை. இந்தியா தான் என் இளமையின் மெத்தை; என் யௌவனத்தின் நந்தவனம்; என் கிழக்காலத்தின் காசி" என்று பாரதி தம் நாட்டை உணர்ச்சி பொங்கப்பாடுவது உணர்ச்சி வெளிப்பாட்டிற்குச் சான்றாகும்.

#### முடிவுரை:

இவ்வாறு சங்கப் புலவனும் இணையத்தமிழனும் தமிழ் உரைநடையின் உத்திகளையும் அது எவ்வாறு தன்னுடைய பரிணாம வளர்ச்சியை எட்டியது என்பதைப் பற்றியும் எழில்முதல்வன் தம்முடைய புதிய உரைநடை என்ற நூலின் வழியாக நமக்கு விளக்குகிறார்.

## கற்பவை கற்றபின்

1. நீங்கள் படித்தவற்றுள் நினைவில் நீங்கா இடம்பெற்ற இலக்கியத் தொடர்கள், நயங்களை எழுதுக.

| இலக்கியத் தொடர் | இடம் பெற்றுள்ள நயம் |
|---|---|
| 1. பசுமரத்தாணி போல | உவமை |
| 2. விழிகயல் | உருவகம் |
| 3. அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் எப்பாரும் எப்பதமும் எங்கணும் | எதுகை |
| 4. எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் | மோனை |

3. கொடுத்த தலைப்பில் பேசுவோம்

தமிழ்மொழி – தலைப்பு

தமிழ்மொழியினைச் செம்மொழியாக அறிவிக்க வேண்டும் என்று முதன் முதலாகத் தீர்மானம் நிறைவேற்றியது, கரந்தைத் தமிழ்ச் சங்கமாகும்.





இயல் - 1 இலக்கணம்

மொழி - அமுதஊற்று

# 5. எழுத்து, சொல்

## மதிப்பீடு: எழுத்து

### பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. 'கேட்டவர் மகிழப் பாடிய பாடல் இது' - தொடரில் இடம் பெற்றுள்ள தொழிற்பெயரும், வினையாலணையும் பெயரும் முறையே

அ) பாடிய; கேட்டவர் ஆ) பாடல்; பாடிய
இ) கேட்டவர், பாடிய ஈ) பாடல்; கேட்டவர்

விடை : அ) பாடிய; கேட்டவர்

**கூடுதல் வினாக்கள்:**

2. சார்பெழுத்து ______ வகைப்படும்.

அ) எட்டு ஆ) ஒன்பது
இ) பத்து ஈ) ஆறு

விடை : இ) பத்து

3. செய்யுளிசை அளபெடையின் வேறு பெயர் ______.

அ) இசைநிறை அளபெடை ஆ) சொல்லிசை அளபெடை
இ) இன்னிசை அளபெடை ஈ) அளபெடை

விடை : அ) இசைநிறை அளபெடை

4. செய்யுளின் ஓசை குறையாத இடத்தில் இனிய ஓசைக்காக அளபெடுத்தலை ______ என்கிறோம்.

அ) செய்யுளிசை அளபெடை ஆ) இன்னிசை அளபெடை
இ) சொல்லிசை அளபெடை ஈ) உயிரளபெடை

விடை : ஆ) இன்னிசை அளபெடை

5. வெஃகுவார்க்கில்லை, உரனசைஇ - இச்சொற்களில் உள்ள அளபெடைகள் PTA

அ) ஒற்றளபெடை, செய்யுளிசை அளபெடை
ஆ) இன்னிசை அளபெடை, சொல்லிசை அளபெடை
இ) சொல்லிசை அளபெடை, ஒற்றளபெடை,
ஈ) ஒற்றளபெடை, இன்னிசை அளபெடை

விடை : அ) ஒற்றளபெடை, செய்யுளிசை அளபெடை

6. ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி - இத்தொடர்கள் உணர்த்தும் மரங்களின் பெயர்களையும் தமிழெண்களையும் குறிப்பிடுக. PTA

அ) ஆலமரம், வேப்பமரம் - ரு, க
ஆ) ஆலமரம், வேப்பமரம் - ச, உ
இ) அரசமரம், வேங்கை மரம் - க, உ
ஈ) வேப்பமரம், ஆலமரம் - ச, கூ

விடை : ஆ) ஆலமரம், வேப்பமரம் - ச, உ

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. 'வேங்கை' என்பதைத் தொடர்மொழியாகவும் பொதுமொழியாகவும் வேறுபடுத்திக் காட்டுக. PTA

வேங்கை – வேம் + கை தொடர்மொழியாகப் பிரியும் போது 'வேகின்ற கை' எனவும் பொருள் தரும்.
வேங்கை – வேங்கை என்னும் மரத்தைக் குறிப்பதால் இது பொதுமொழியாகும்.

2. ''உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண் வற்றாகும் கீழ்''
இக்குறளில் அமைந்துள்ள அளபெடையின் வகையைச் சுட்டி, அதன் இலக்கணம் தருக.

இன்னிசை அளபெடை இடம் பெற்றுள்ளது. PTA
செய்யுளில் ஓசை குறையாத இடத்திலும் இனிய ஓசைக்காக குறில் நெடிலாக மாறி அளபெடுப்பது இன்னிசை அளபெடை ஆகும்.

**கூடுதல் வினாக்கள்:**

3. இலக்கணம் என்பது யாது?

மொழியைத் தெளிவுறப் பேசவும், எழுதவும் உதவுவது இலக்கணமாகும்.

4. சார்பெழுத்துக்கள் யாவை?

உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலுகரம், குற்றியலிகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம், மகரக்குறுக்கம் என சார்பெழுத்து பத்து வகைப்படும்.

5. அளபெடுத்தல் என்பதன் பொருள் யாது?

அளபெடுத்தல் என்பதன் பொருள் நீண்டு ஒலித்தல் ஆகும்.

6. உயிரளபெடை என்றால் என்ன?

உயிரெழுத்துகளில் நெட்டெழுத்துகள் ஏழும் தமக்குரிய இரண்டு மாத்திரையிலிருந்து நீண்டு ஒலிப்பதற்கு உயிரளபெடை என்று பெயர்.

7. உயிரளபெடை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

- உயிரளபெடை மூன்று வகைப்படும்.
- அவை செய்யுளிசை அளபெடை, இன்னிசை அளபெடை, சொல்லிசை அளபெடை ஆகும்.

8. செய்யுளிசை அளபெடை – வரையறு

- செய்யுளில் ஓசை குறையும் போது, அதனை நிறைவு செய்ய நெட்டெழுத்துகள் அளபெடுத்தலைச் செய்யுளிசை அளபெடை என்கிறோம்.
- இதனை இசைநிறை அளபெடை என்றும் கூறுவர்.

9. இன்னிசை அளபெடை – விளக்குக.

செய்யுளில் ஓசை குறையாத இடத்திலும் இனிய ஓசைக்காக அளபெடுப்பது இன்னிசை அளபெடை ஆகும்.

10. சொல்லிசை அளபெடை – விளக்குக.

செய்யுளில் ஒரு பெயர்ச்சொல் எச்சச் சொல்லாகத் திரிந்து அளபெடுப்பது சொல்லிசை அளபெடை ஆகும்.

11. ஒற்றளபெடை – விளக்குக.

செய்புளில் ஓசை குறையும் போது, அதனை நிறைவு செய்ய மெய்யெழுத்துக்களான ங், ஞ், ண், ந், ம், ன், வ், ய், ல், ள் ஆகிய பத்தும் ஃ என்னும் ஆய்த எழுத்தும் அளபெடுப்பது ஒற்றளபெடை எனப்படும்.

## சிறுவினா

**கூடுதல் வினா:**

1. உயிரளபெடை என்றால் என்ன? அதன் வகைகளை எழுதுக.

- செய்புளில் ஓசை குறையும்போது அதனை நிறைவு செய்ய மொழிக்கு முதலிலும் இடையிலும் இறுதியிலும் நிற்கிற உயிர் நெடில் எழுத்துகள் ஏழும், அளவில் நீண்டு ஒலிக்கும்.
- அதைக் குறிக்க அதற்கு இனமான குறில் எழுத்துகள் அவற்றின் பின்னால் வருவது உயிரளபெடை எனப்படும்.

உயிரளபெடை மூன்று வகைப்படும். அவை செய்புளிசை அளபெடை, இன்னிசை அளபெடை, சொல்லிசை அளபெடை.

## மதிப்பீடு: சொல்

## பலவுள் தெரிக

**கூடுதல் வினாக்கள்:**

1. ஒரு வினையைக் குறிக்கும் பெயரானது எண், இடம், காலம், பால் ஆகியவற்றைக் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ உணர்த்தாமல் வருவது ________ எனப்படும்.

அ) பண்புப் பெயர் ஆ) தொழிற்பெயர்
இ) வினையாலணையும் பெயர் ஈ) அடுக்குத்தொடர்

விடை : ஆ) தொழிற்பெயர்

2. வினைபடியுடன் விகுதி சேர்வதால் உருவாகும் தொழிற்பெயர் _____ ஆகும்.

அ) எதிர்மறைத் தொழிற்பெயர் ஆ) விகுதிபெற்ற தொழிற்பெயர்
இ) முதனிலைத் தொழிற்பெயர் ஈ) தொழிற்பெயர்

விடை : ஆ) விகுதிபெற்ற தொழிற்பெயர்

3. விகுதி பெறாமல் வினைப்பகுதியே தொழிற்பெயராக வருவது _____ ஆகும்.

அ) முதனிலைத் தொழிற்பெயர் ஆ) முதனிலை திரிந்த தொழிற்பெயர்
இ) வினையாலணையும் பெயர் ஈ) பொருட்பெயர்

விடை : அ) முதனிலைத் தொழிற்பெயர்

4. விகுதி பெறாமல் முதனிலை திரிந்து வருவது ________ ஆகும்.

அ) முதனிலைத் தொழிற்பெயர் ஆ) முதனிலை திரிந்த தொழிற்பெயர்
இ) வினையாலணையும் பெயர் ஈ) எழுவாய்த் தொடர்

விடை : ஆ) முதனிலைத் திரிந்த தொழிற்பெயர்

5. ஒரு வினைமுற்று வேற்றுமை உருபை ஏற்றும் ஏற்காமலும் வேறொரு பயனிலையைக் கொண்டு முடிவது ______ எனப்படும்.

அ) தொழிற்பெயர் ஆ) வினையாலணையும் பெயர்
இ) பண்புப்பெயர் ஈ) விளிப்பெயர்

விடை : ஆ) வினையாலணையும் பெயர்

6. ஒரு சொல் தனித்து நின்று பொருள் தருவது ______ எனப்படும்.

அ) தனிமொழி ஆ) தொடர்மொழி
இ) பொதுமொழி ஈ) வெறும்மொழி

விடை : அ) தனிமொழி

7. ஒரு சொல் தனித்து நின்று ஒரு பொருளையும், அச்சொல்லே பிரிந்து நின்று வேறு பொருளையும் தருவது ______ எனப்படும்.

அ) தனிமொழி ஆ) தொடர்மொழி
இ) பொதுமொழி ஈ) வெறும்மொழி

விடை : இ) பொதுமொழி

8. தொழிலைச் செய்யும் கருத்தாவைக் குறிப்பது PTA

அ) தொழிற்பெயர் ஆ) முதனிலை திரிந்த தொழிற்பெயர்
இ) முதனிலைத் தொழிற்பெயர் ஈ) வினைபாலணையும் பெயர்

விடை : ஈ) வினையாலணையும் பெயர்

## குறுவினா

### கூடுதல் வினாக்கள்:

1. சொல் என்றால் என்ன?

ஓர் எழுத்து தனித்தோ, பல எழுத்துகள் சேர்ந்தோ பொருள் தருவது சொல் எனப்படும்.

2. மொழி என்பது எத்தனை வகைப்படும்? அவை யாவை?

மொழி மூன்று வகைப்படும். அவை தனி மொழி, தொடர்மொழி, பொதுமொழி என்பன.

3. தனிமொழி என்பது யாது?

ஒரு சொல் தனித்து நின்று பொருள் தருவது தனிமொழி எனப்படும்.

எ.கா : வா, கண்

4. தொடர்மொழி என்பது யாது?

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சொற்கள் தொடர்ந்து வந்து பொருளைத் தருவது தொடர்மொழி எனப்படும்.

எ.கா : கண்ணன் வந்தான்.

5. பொதுமொழி என்பது யாது?

ஒரு சொல் தனித்து நின்று ஒரு பொருளையும், அச்சொல்லே பிரிந்து நின்று வேறு பொருளையும் தந்து தனிமொழிக்கும், தொடர்மொழிக்கும் பொதுவாய் அமைவது பொதுமொழி எனப்படும்.

எ.கா : தாமரை – மலர்
தா + மலர் = தாவுகின்ற மான்.

6. தொழிற்பெயர் என்றால் என்ன?

ஒரு வினை அல்லது செயலைக் குறிக்கும் பெயரானது, எண், இடம், காலம், பால் ஆகியவற்றைக் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ உணர்த்தாமல் வருவது தொழிற்பெயர் எனப்படும்.

எ.கா : ஆடல்

7. விகுதி பெற்ற தொழிற்பெயர் என்றால் என்ன?

வினையடியுடன் விகுதி சேர்வதால் உருவாகும் தொழிற்பெயர் விகுதி பெற்ற தொழிற்பெயர் ஆகும்.

எ.கா : நடத்தல்

8. எதிர்மறைத் தொழிற்பெயர் என்பது யாது?

எதிர்மறைப் பொருளில் வருவது எதிர்மறைத் தொழிற்பெயர் எனப்படும்.

எ.கா : நடவாமை

9. தொழிற்பெயரின் இருவகைகள் யாவை?

- முதனிலை தொழிற்பெயர்
- முதனிலை திரிந்த தொழிற்பெயர்

10. முதனிலைத் தொழிற்பெயர் என்றால் என்ன? எ.கா தருக.

விகுதி பெறாமல் வினைப் பகுதியே தொழிற்பெயராதல் முதனிலைத் தொழிற்பெயராகும்.

எ.கா : உரை, அடி

11. முதனிலை திரிந்த தொழிற்பெயர் என்றால் என்ன? எ.கா தருக.

விகுதி பெறாமல் முதனிலை திரிந்து வருவது முதனிலை திரிந்த தொழிற்பெயராகும்.

எ.கா : கெடுவான் கேடு நினைப்பான்.

'கெடு' என்பது 'கேடு' எனத் திரிந்து வருகிறது.

## சிறுவினா

### பாடநூல் வினா

1. 'அறிந்தது, அறியாதது, புரிந்தது, புரியாதது, தெரிந்தது, தெரியாதது, பிறந்தது, பிறவாதது இவை அனைத்தையும் யாம் அறிவோம். அதுபற்றி உமது அறிவுரை எமக்குத் தேவை இல்லை, எல்லாம் எனக்குத் தெரியும்'.

இக்கூற்றில் வண்ண எழுத்துக்களில் உள்ள வினைமுற்றுகளைத் தொழிற்பெயராக மாற்றி எழுதுக.

விடை : அறிதல், அறியாமை, புரிதல், புரியாமை, தெரிதல், தெரியாமை, பிறத்தல், பிறவாமை.

### கூடுதல் வினாக்கள்

2. மூவகை மொழிகளைச் சான்றுடன் விளக்குக.

மொழி மூன்று வகைப்படும்.

தனிமொழி : ஒரு சொல் தனித்து நின்று பொருளைத் தருவது தனிமொழி எனப்படும்.

எ.கா : கண், படி

தொடர்மொழி : இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சொற்கள் தொடர்ந்து பொருளைத் தருவது தொடர்மொழி எனப்படும்.

எ.கா : இராமன் வந்தான்.

மாடு புல் மேய்ந்தது.

பொதுமொழி : ஒரு சொல் ஒரு பொருளையும், அச்சொல்லே பிரிந்து நின்று வேறு பொருளையும் தந்து தனிமொழிக்கும், தொடர்மொழிக்கும் பொதுவாய் அமைவது பொதுமொழி எனப்படும்.

எ.கா : எட்டு, வேங்கை

3. வினையாலணையும் பெயர் – விளக்குக.

- ஒரு வினைமுற்று பெயரின் தன்மையை அடைந்து வேற்றுமை உருபு ஏற்றும் ஏற்காமலும் வேறொரு பயனிலையைக் கொண்டு முடிவது வினையாலணையும் பெயர் எனப்படும்.
- அது தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூன்று இடங்களிலும், மூன்று காலங்களிலும் வரும்.

எ.கா : வந்தவர் அவர் தான்

4. தொழிற்பெயருக்கும், வினையாலணையும் பெயருக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

| | தொழிற்பெயர் | வினையாலணையும் பெயர் |
|---|---|---|
| 1. | வினை, பெயர்த் தன்மையாகி வினையையே உணர்த்தி நிற்கும். | தொழிலைச் செய்யும் கருத்தாவைக் குறிக்கும். |
| 2. | காலம் காட்டாது | காலம் காட்டும் |
| 3. | படர்க்கைக்கே உரியது | மூவிடத்திற்கும் உரியது |
| 4. | எ.கா. பாடுதல், படித்தல் | எ.கா. பாடியவள், படித்தவர் |

5. தொழிற்பெயரை வகையுடன் விளக்குக.

தொழிற்பெயர்: ஒரு வினை அல்லது செயலைக் குறிக்கும் பெயரானது எண், இடம், காலம், பால் ஆகியவற்றைக் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ உணர்த்தாமல் வருவது தொழிற்பெயர் எனப்படும்.

தொழிற்பெயர் இரு வகைப்படும்.

1. முதனிலைத் தொழிற்பெயர்

விகுதி பெறாமல் வினைப்பகுதியே தொழிற்பெயராக வருவது முதனிலைத் தொழிற்பெயராகும்.

எ.கா. தட்டு, உரை.

2. முதனிலை திரிந்த தொழிற்பெயர்

விகுதி பெறாமல் பகுதி மட்டும் திரிந்து வருவது முதனிலை திரிந்த தொழிற்பெயராகும்.

எ.கா. கேடு, சூடு.

6. சொல் என்றால் என்ன? அவற்றின் பொது இலக்கணத்தை வரையறு.

ஓர் எழுத்து தனித்தோ, பல எழுத்துகள் சேர்ந்தோ பொருள் தரும் வகையில் அமைவது சொல் ஆகும்.

அது,

- இருதிணைகளையும், ஐந்து பால்களையும் குறிக்கும்.
- மூவகை இடங்களிலும் வரும்.
- உலக வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் வரும்.
- வெளிப்படையாகவும், குறிப்பாகவும் விளங்கும்.

7. தொகைச் சொற்களைப் பிரித்து எழுதி, தமிழ் எண்ணுரு தருக. PTA

முப்பாலை முழுமையாகத் தந்த தமிழன் சிறப்பினை ஐந்திணைகளில் அழகுற விளங்குபவை சங்க இலக்கியங்கள்.

முப்பால் – அறம், பொருள், இன்பம். தமிழ் எண்ணுரு ௩

ஐந்திணை – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை. தமிழ் எண்ணுரு ரு.

## கற்பவை கற்றபின்

1. தேன், நூல், பை, மலர், வா – இதை தனிமொழிகளுடன் சொற்களைச் சேர்த்துத் தொடர்மொழிகளாக்குக.

விடை : தேன் எடுத்தான்
நூல் படித்தான்
பையைத் தைத்தான்
மலர் வாங்கினான்
வந்து நின்றான்

2. வினை அடியை விகுதிகளுடன் இணைத்துத் தொழிற்பெயர்களை உருவாக்குக.
காண், சிரி, படி, தடு.

1. சிரி – சிரிப்பு, சிரித்தல், சிரிக்காமை
2. படி – படிப்பு, படித்தல், படிக்காமை
3. தடு – தடுத்து, தடுத்தல், தடுக்காமை

3. தனிமொழி, தொடர்மொழி ஆகியவற்றைக் கொண்டு உரையாடலைத் தொடர்க.

அண்ணன் : எங்கே செல்கிறாய்? (தொடர்மொழி)
தம்பி : கடைக்கு (தனிமொழி)
அண்ணன் : கடையில் என்ன வாங்குகிறாய்? (தொடர்மொழி)
தம்பி : புத்தகம் வாங்குகிறேன் (தொடர்மொழி)
அண்ணன் : புத்தகமா? (தனிமொழி)
தம்பி : கணக்குப் புத்தகம் (தொடர்மொழி)
அண்ணன் : கணக்குப் புத்தகம் தொலைந்துவிட்டதா? (தொடர்மொழி)
தம்பி : ஆம் (தனிமொழி)

4. மலை என்னை அடிக்கடி அழைக்கும். மலை மீது ஏறுவேன்; ஓரிடத்தில் அமர்வேன், மேலும் கீழும் பார்ப்பேன்; சுற்று முற்றும் பார்ப்பேன். மனம் அமைதி எய்தும்.

இத்தொடரில் உள்ள வினைமுற்றுகளைத் தனியே எடுத்தெழுதித் தொழிற்பெயர்களாக மாற்றுக.

விடை:

| வினைமுற்று | தொழிற்பெயர் |
|---|---|
| அழைக்கும் | அழைத்தல் |
| ஏறுவேன் | ஏறுதல் |
| அமர்வேன் | அமர்தல் |
| பார்ப்பேன் | பார்த்தல் |
| எய்தும் | எய்தல் |

5. கட்டு, சொட்டு, வழிபாடு, கேடு, கோறல் – இத்தொழிற்பெயர்களை வகைப்படுத்துக.

| முதனிலை தொழிற்பெயர் | முதனிலை திரிந்த தொழிற்பெயர் |
|---|---|
| கட்டு | கேடு |
| சொட்டு | கோறல் |
| வழிபாடு | |

## மொழியை ஆள்வோம்

### மொழி பெயர்ப்பு

1. If you talk to a man in a language he understand that goes to his head. If you talk to him in his own language that goes to his heart - Nelson Mandela. PTA

ஒரு மனிதனிடம் அவன் புரிந்து கொள்ளும் மொழியில் பேசினால் அது அவனுடைய அறிவைச் சென்றடையும். அதுவே தாய்மொழியில் பேசினால் அது அவனுடைய மனதையே சென்றடையும்.

2. Language is the road map of a culture. It tells you where its people come from and where they are going - Rita Mae Brown

மொழி என்பது ஒரு கலாச்சாரத்தின் வழிகாட்டி. அக்கலாச்சாரமே அந்த மனிதன் எங்கு இருந்து வந்தான்; அவன் எங்கே செல்கிறான் என்பதை நமக்குப் புரிய வைக்கும்.

**சந்தக் கவிதையில் வந்த பிழைகளைத் திருத்துக:**

PTA

''தேணிலே ஊரிய செந்தமிழின் – சுவை
தேரும் சிலப்பதி காறமதை
ஊனிலே எம்முயிர் உல்லலவும் – நிதம்
ஓதி யுனர்ந்தின் புருவோமே''

– கவிமணி தேசிகவிநாயகனார்

விடை :

''தேனிலே ஊறிய செந்தமிழின் – சுவை
தோறும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும் – நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோமே''

– கவிமணி தேசிகவிநாயகனார்

**கீழ்க்காணும் சொற்களின் கூட்டப் பெயர்களைக் கண்டு பிடித்து எழுதுக.**

(குவியல், குலை, மந்தை, கட்டு, கீரை, மக்கள்) PTA

| சொல் | கூட்டப்பெயர் | சொல் | கூட்டப்பெயர் |
|---|---|---|---|
| கல் | கற்குவியல் | புல் | புற்கட்டு |
| பழம் | பழக்குலை | ஆடு | ஆட்டுமந்தை |
| கீரை | கீரைக்கட்டு | மக்கள் | மக்கள் கூட்டம் |

**வினைமுற்றை வினையாலணையும் பெயராக மாற்றித் தொடர்களை இணைத்து எழுதுக.**

1. ஊட்டமிகு உணவு உண்டார். அவர் நீண்ட வாழ்நாள் பெற்றார்.
2. நேற்று என்னைச் சந்தித்தார். அவர் என் நண்பர்.
3. பொது அறிவு நூல்களைத் தேடிப் படித்தார். போட்டித் தேர்வில் வென்றார்.

விடை:

1. ஊட்டமிகு உணவு உண்டவர் நீண்ட வாழ்நாள் பெற்றார்.
2. நேற்று என்னைச் சந்தித்தவர் என் நண்பர்.
3. பொது அறிவு நூல்களைத் தேடிப் படித்தவர் போட்டித் தேர்வில் வென்றார்.

தொடரில் உள்ள வண்ணச் சொற்களுக்குப் பதிலாக அதே பொருளுடைய வேறு சொற்களைப் பயன்படுத்தி தொடர்களை மீள எழுதுக.

1. உலகில் வாழும் மக்களில் ஒருசிலர் கனியிருக்கக் காய் புசித்தலைப் போல, இன்சொல் இருக்க வன்சொல் பேசி இன்னற்படுகின்றனர்.

   விடை : பூவுலகில் வாழும் மாந்தரில் ஒருசிலர் பழம் இருக்கக் காய் உண்பதைப் போல, இன்சொல் இருக்க வன்சொல் பேசி துன்பப்படுகின்றனர்.

2. கொடை வள்ளல் குமணன் வறுமையால் வாடிவந்த புலவனுக்குத் தனது தலையைக் கொடுத்து மங்காப் புகழ் பெற்றான்.

   விடை : கொடை வள்ளல் குமணன் ஏழ்மையில் வாடிவந்த பாவலனுக்கு தனது தலையைக் வழங்கி மங்காப் பெருமை பெற்றான்.

3. நளனும் அவனது துணைவியும் நிடத நாட்டுக்கு வந்ததைக் கண்டு, அந்நாட்டு மக்கள் மழைமுகில் கண்ட மஞ்ஞை போல் களி கொண்டனர்.

   விடை : நளனும் அவனது மனைவியும் நிடத நாட்டுக்கு வந்ததைக் கண்டு, அந்நாட்டு மக்கள் மழைமேகம் கண்ட மயில் போல் மகிழ்ச்சி கொண்டனர்.

4. சோலையில் பூத்த மணமலர்களில் சுரும்புகள் மொய்த்துப் பண்பாடி மதுவுண்டன. PTA

   விடை : பூஞ்சோலையில் பூத்த மணமலர்களில் வண்டுகள் மொய்த்துப் பண்பாடி தேனுண்டன.

5. பசுப்போல் சாந்தமும் புலிபோல் தீரமும் யானை போல உழைப்பும் மனிதனுக்கு வேண்டும்.

   விடை : ஆபோல் அமைதியும் வேங்கைபோல் வீரமும் களிறு போல உழைப்பும் மனிதனுக்கு வேண்டும்.

## கட்டுரை எழுதுக

1. குமரிக் கடல்முனையையும், வேங்கட மலைமுகட்டையும் எல்லையாகக் கொண்ட தென்னவர் திருநாட்டிற்குப் புகழ் தேடித்தந்த பெருமை தகைசால் தமிழன்னையைச் சாரும். எழில்சேர் கன்னியாய் என்றும் திகழும் அவ்வன்னைக்கு, பிள்ளைத் தமிழ் பேசி, சதகம் சமைத்து, பரணி பாடி, கலம்பகம் கண்டு, உலாவந்து, அந்தாதி கூறி, கோவை யாத்து, இவற்றையெல்லாம் அணியாகப் பூட்டி அழகூட்டி அகம்மிக மகிழ்ந்தனர் செந்நாப் புலவர்கள்.

   இக்கருத்தைக் கருவாகக் கொண்டு 'சான்றோர் வளர்த்த தமிழ்' என்னும் தலைப்பில் கட்டுரை எழுதுக. PTA

### சான்றோர் வளர்த்த தமிழ்

**முன்னுரை:**

அன்னாய்! அன்னாய்! தமிழன்னாய்! அம்மா என்று அழைத்திடவே நாவை அசைக்க வைத்தவளே! அகரம் கற்க உறுதுணையாக இருந்தவளே! உன்னைப் போற்றித் தொழுவது தான் என்றன் வாழ்வின் முதற்கடமை!

**முதன் மொழியே:**

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றிய மூத்த மொழியே! நீ தான் உலகின் முதன் மொழியென்று அறைகின்றார் மொழி நூல் வல்லுநர்கள். கன்னடமும், தெலுங்கும், மலையாளமும், துளுவும் பெற்றுப் பெருமை உற்ற திராவிடத்தாயே. உன் பெருமை எல்லாம் சொன்னவன் கால்டுவெல் பேரறிஞன் அல்லவோ!

### அமுதம் நீ:

''தமிழுக்கு அமுதென்று பேர்'' என்றார் பாவேந்தர். 'செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே'' என்றார் பாரதியார். இவ்வாறு போற்றிப் புகழ்ந்த உன்னை இன்று தமிழர்களே தூற்றித் திரிதல் கண்டு வெட்கமடைகின்றேன்.

### ஒல்காப் பெரும் பொருளே:

ஒல்காப் பெரும் பொருளாம் தொல்காப்பியமும் வான்மறை வள்ளுவமும், சிலம்பும் கம்பனுமாய், இலக்கிய இலக்கணச் சோலையாய் பூத்துக் குலுங்கும் உன்னை மெல்லச் சாவாய் என்றும் மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும் என்றும் சொன்ன பேதை சொல் கேட்டு, வருந்த ''சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்'' என்றானே பாரதி. அவன் மொழியைத் தமிழ்மக்கள் உளம் கொள்ளாதது? ஏனோ? சொல்?

### உன்னிடம் குறையுண்டோ:

பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் காணும் தன்மை உனக்கு இல்லை என்று தமிழனே சொல்கின்றானே! தாயைப் பழிக்கின்றானே! தாய் வாழ்க்கை செழித்தால் தான் சேய் வாழ்க்கை செழிக்கும் என்று உணராது இருக்கின்றானே! உன்னை உயர்த்த வேண்டிய தமிழனே மாற்றாந்தாய் மடியே புகழென்று கிடக்கின்றானே! தாயே அவனுக்கு நல்லறிவு கொடுப்பாயோ!

### என்றும் இளையவளே:

நீ தோன்றிப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆயினும் சீரிளமைத் திறத்தோடு விளங்கும் வெற்றி கண்டு உன் இளமையைப் பாதுகாக்கும் பண்பற்றுத் திரியும் உன் மக்களை எண்ணுந்தோறும் கண்ணீர் மல்குகிறது தாயே!

### முடிவுரை:

தமிழே! உன்னைப் பயிலும் போது நான் பெறும் ஆறுதல்-மகிழ்வு எனக்கு எதிலும் இல்லை. இந்த மனநிலை தமிழர்க்கு ஏற்படும் காலம் தான் உன் செங்கோலாட்சி தமிழகத்தில் நிலவும் போலும்! நீ வளர்க! நீ வாழ்க!

## நயம் பாராட்டுக

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
    தென்னாடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
    உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே
வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
    மாந்தருக் கிருகணா வயங்குநன் மொழியே
தானனி சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
    தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே

– கா.நமச்சிவாயர்

### திரண்ட கருத்து:

இப்பாடல் கா.நமச்சிவாயர் தமிழ்த்திருநாள் அன்று பாடிய பாடல்.

தேனைக் காட்டிலும் இனிய செந்தமிழ் மொழியே தென்னாட்டில் புகழ்ந்து விளங்கும் தென்மொழி, உடலிலும் ஒளிபெற்றுத் திகழும் தமிழே! எல்லா உணர்விலும் ஒளிர்கின்ற தமிழ்மொழி வானைக் காட்டிலும் உயர்ந்து விளங்குகின்ற வன்மையான மொழி. மனிதருக்கு மத்தியில் சிறந்திருக்கும் தென்மொழி, தனியாக சிறப்புற்றுத் திகழும் தனித்தமிழ் மொழி தழைத்து சிறந்து வளர்வாய் தமிழே.

**பொருள் நயம்:**

செந்தமிழ், தென்தமிழ், ஒண்டமிழ், ஒளிர்தமிழ், தண்டமிழ் என்று தமிழ் மொழியின் பெருமையை இப்பாடலில் பொருள் நயம்பட எடுத்துரைக்கிறார்.

**தொடை நயம்:**

''தொடை நயமிக்க பாட்டே
நடை நயமிக்க பாட்டாமே!!
என்பதற்கேற்ப இப்பாடலில் மோனை, எதுகை நயங்கள் இடம் பெற்றுள்ளன.

**மோனை நயம்:**

செய்யுளில் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுப்பது மோனை எனப்படும். இப்பாடலில்
தழைத்தினி, தண்டமிழ்
'த' எனும் எழுத்து ஒன்றி வந்து சீர் மோனை நயம்பட அமைந்துள்ளது.

**எதுகை நயம்:**

செய்யுளில் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது எதுகை எனப்படும்.
தேனினும், ஊனினும், வானினும்
'னி' எனும் எழுத்து ஒன்றி வந்து அடி எதுகை நயம்பட அமைந்துள்ளது.

**அணி நயம்:**

''அணிகலன்கள் அணிந்த பெண்மணி
அழகான பெண்மணி
அணிகள் அமைந்த செய்யுள்
அழகாகச் செய்யும்''
என்பதற்கேற்ப இப்பாடலில் உவமை அணி பயின்று வந்துள்ளது.

## மொழியோடு விளையாடு

**சொற்களை இணைத்துப் புதிய சொற்களை உருவாக்குக.**

(தேன், விளக்கு, மழை, விண், மணி, விலங்கு, செய், மேகலை, வான், பொன், பூ)

விடை : தேன்மழை
பொன்விளக்கு
மணிமேகலை
பூவிலங்கு
வான்மழை
பொன்செய்

**குறிப்புகளைக் கொண்டு வினாவிலேயே விடை இருப்பது போன்று வினாத்தொடர்கள் அமைக்க.**

(குறளின்பம், சுவைக்காத இளநீர், காப்பியச் சுவை, மனிதகுல மேன்மை, விடுமுறை நாள்)

உதாரணம்: குறளின்பத்தில் திளைக்காத தமிழன் உண்டா?

விடை: சுவைக்காத இளநீரும், சூடாத மலரும் வீணல்லவா?
காப்பியச் சுவையை உணர்ந்தது உண்டா?
மனிதகுல மேன்மைக்கு பாடுபட வேண்டுமன்றோ?
விடுமுறை நாள் எப்போது வருமோ?

**எண்ணுப் பெயர்களைக் கண்டு தமிழ் எண்களில் எழுதுக.**

| செய்யுள் அடி | எண்ணுப்பெயர் | தமிழ்எண் |
|---|---|---|
| நாற்றிசையும் செல்லாத நாடில்லை | நான்கு | ச |
| எறும்புந்தன் கையால் எண்சாண் | எட்டு | அ |
| ஐந்துசால்பு ஊன்றிய தூண் | ஐந்து | ரு |
| நாலும் இரண்டும் சொல்லுக்குஉறுதி | நான்கு, இரண்டு | ச உ |
| ஆனை ஆயிரம் அமரிடைவென்ற மாணவனுக்கு வகுப்பது பரணி | ஆயிரம் | க000 |

**அகராதியில் காண்க.**

அடவி – காடு
அவல் – பள்ளம்
சுவல் – முதுகு
செறு – வயல், கோபம்
பழனம் – வயல்
புறவு – காடு

**அ) காட்சியைக் கண்டுக் கவினுற எழுதுக,**
**ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.** PTA



அ) வாய்ப்பூட்டு போடுவது நிமிர்ந்து அமர
வாய்ப்பூட்டு சிந்தனைக்கு வழி வகுக்க
வாய்ப்பூட்டு எண்ணங்கள் நிலைபெற
வாய்ப்பூட்டு பணிவு தலைதாழ்த்த
வாய்ப்பூட்டு திறந்து சிறந்ததைப் படித்தால்
வாயும் மலரும், வாழ்க்கையும் மலரும்.

ஆ) 1. ஐம்புலன் அறிவினால் மட்டுமே திறக்கப்படும்.

2. கண்டதில் மனதை அலைய விட்டால் கருத்தில் கவனமாய் இருக்க முடியாது.

3. கண்டதைப் பார்க்கும்போது ஐம்புலன்களையும் அடக்கிக்கொள்; கல்வியைக் கற்கும்போது ஐம்புலன்களையும் விரித்துக்கொள்.

4. பூட்ட வேண்டியவற்றைப் பூட்டித் திறக்க வேண்டியவற்றைத் திறந்துகொள்.

5. கல்வி ஒன்றே மனதைத் திறக்கும் திறவு கோல்.

## நிற்க அதற்குத் தக

| | இன்சொல் வழி | தீயசொல் வழி |
|---|---|---|
| 1. | பிறர் மனம் மகிழும் | பிறர் மனம் வாடும் |
| 2. | அறம் வளரும் | அறம் தேயும் |
| 3. | புகழ் பெருகும் | இகழ் பெருகும் |
| 4. | நல்ல நண்பர்கள் சேருவர் | நல்ல நண்பர்கள் விலகுவர் |
| 5. | அன்பு நிறையும் | பகைமை நிறையும் |

இதில் நீங்கள் செல்லும் வழியாது? உங்கள் நண்பருக்குக் காட்டும் வழி யாது?

நான் செல்லும் வழி இன்சொல் வழியாகும். என் நண்பருக்கும் இன்சொல் வழியைக் காட்டி அறிவுரை கூறுவேன்.

## கலைச்சொல் அறிவோம்

Vowel – உயிரெழுத்து PTA

Consonant – மெய்யெழுத்து

Homograph – ஒப்பெழுத்து PTA

Monolingual – ஒரு மொழி

Conversation – உரையாடல்

Discussion – கலந்துரையாடல்



## அலகுத் தேர்வு இயல் - 1

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக.** 4× 1 = 4

1. உலகத்திலேயே தமிழ் மொழிக்காக உலக மாநாடு நடத்திய ஒரே நாடு ________.
   அ) மலேசியா ஆ) சிங்கப்பூர் இ) கனடா ஈ) ஜப்பான்
2. ஒரு சொல் இரு பொருள்பட அமைந்து வருதல் ________ எனப்படும்.
   அ) ஏகதேச உருவகம் ஆ) இரட்டுற மொழிதல்
   இ) பிறிது மொழிதல் ஈ) பொருள் வருநிலை
3. எந்தமிழ்நா என்பதைப் பிரித்தால் இவ்வாறு வரும்.
   அ) எந் + தமிழ் + நா ஆ) எந்த + தமிழ் + நா
   இ) எம் + தமிழ் + நா ஈ) எந்தம் + தமிழ் + நா
4. 'மெத்த வணிகலன்' என்னும் தொடரில் தமிழழகனார் குறிப்பிடுவது
   அ) வணிகக் கப்பல்களும் ஐம்பெருங்காப்பியங்களும்
   ஆ) பெரும் வணிகமும் பெரும் கலன்களும்
   இ) ஐம்பெருங்காப்பியங்களும், அணிகலன்களும்
   ஈ) வணிகக் கப்பல்களும் அணிகலன்களும்

**II. விடைக்கேற்ற வினா அமைக்க:** 1 × 1 = 1

1.பாவாணர் நூலகத்தை உருவாக்கியவர் இரா. இளங்குமரனார் ஆவார்.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. பாவலரேறு பெருஞ்சித்திரனார் படைத்த நூல்கள் யாவை?
2. இன்னிசை அளபெடையை விளக்குக.

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி.** 2 × 3 = 6

1. மொழியின் வகைகளை விளக்குக.
2. இரா. இளங்குமரனார் பற்றிக் குறிப்பு வரைக.

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** 1 × 8 = 8

1. தமிழின் சொல் வளம் பற்றியும் புதிய சொல்லாக்கத்திற்கான தேவை குறித்தும் தமிழ் மன்றத்தில் பேசுவதற்கான உரைக் குறிப்புகளை எழுதுக.

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.** 3 × 1 = 3

அ) மொழிபெயர்க்க:

Language is the road map of a culture. It tells you where its pepole come from and where they are going.

ஆ) பின்வரும் தொடரில் உள்ள வினைமுற்றை வினையாலணையும் பெயராக மாற்றுக:
ஊட்டமிகு உணவு உண்டார். அவர் நீண்ட வாழ்நாள் பெற்றார்.

இ) பொருள் தருக:

அடவி

**VII. அடிபிறழாமல் எழுதுக.** 1 × 4 = 4

அன்னை மொழியே என தொடங்கும் மனப்பாடலை எழுதுக.





# 1. கேட்கிறதா என் குரல்!



## பலவுள் தெரிக

**பாடநூல் வினாக்கள்:**

1. செய்தி 1 – ஒவ்வோர் ஆண்டும் ஜூன் 15 ஐ உலகக் காற்று நாளாகக் கொண்டாடி வருகிறோம்.

   செய்தி 2 – காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியாவில் தமிழகம் இரண்டாமிடம் என்பது எனக்குப் பெருமையே.

   செய்தி 3 – காற்றின் ஆற்றலைப் பயன்படுத்திக் கடல் கடந்து வணிகம் செய்து அதில் வெற்றி கண்டவர்கள் தமிழர்கள்!

   அ) செய்தி 1 மட்டும் சரி ஆ) செய்தி 1, 2 ஆகியன சரி
   இ) செய்தி 3 மட்டும் சரி ஈ) செய்தி 1, 3 ஆகியன சரி

   **விடை:** ஈ) செய்தி 1, 3 ஆகியன சரி

2. பொருந்தும் விடை வரிசையைத் தேர்ந்தெடுக்க. PTA

   அ) கொண்டல் – 1. மேற்கு
   ஆ) கோடை – 2. தெற்கு
   இ) வாடை – 3. கிழக்கு
   ஈ) தென்றல் – 4. வடக்கு

   அ) 1, 2, 3, 4 ஆ) 3, 1, 4, 2
   இ) 4, 3, 2, 1 ஈ) 3, 4, 1, 2

   **விடை:** ஆ) 3, 1, 4, 2

**கூடுதல் வினாக்கள்:**

3. கிழக்கு என்பதற்கு ________ என்னும் பெயருமுண்டு.

அ) குணக்கு ஆ) குடக்கு இ) தென்றல் ஈ) வாடை

**விடை:** அ) குணக்கு

4. வாடைக்காற்று ________ என்றும் அழைக்கப்படுகிறது.

அ) தென்றல்காற்று ஆ) பூங்காற்று இ) சுழல் காற்று ஈ) ஊதைக் காற்று

**விடை:** ஈ) ஊதைக் காற்று

5. புற ஊதாக் கதிர்களைத் தடுக்கும் அரண் ________.

அ) ஓசோன் படலம் ஆ) காற்று இ) மழை ஈ) நீர்

**விடை:** அ) ஓசோன் படலம்

6. ''வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்'' என்று கூறும் இலக்கியம்

அ) மணிமேகலை ஆ) சிலப்பதிகாரம்

இ) கம்பராமாயணம் ஈ) சீவகசிந்தாமணி

**விடை:** ஆ) சிலப்பதிகாரம்

7. உலகக் காற்றாலை மின்சார உற்பத்தியில் இந்தியா ________ இடம் பெற்றுள்ளது.

அ) இரண்டாம் ஆ) நான்காம் இ) ஐந்தாம் ஈ) ஆறாம்

**விடை:** ஐந்தாம்

8. உலக காற்று நாள் ________ அன்று கொண்டாடப்படுகிறது.

அ) ஜுன் 15 ஆ) அக்டோபர் 5

இ) செப்டம்பர் 15 ஈ) நவம்பர் 5 **விடை:** அ) ஜுன் 15

9. 'வாயு வழக்கம் அறிந்து செறிந்தடங்கில்
ஆயுள் பெருக்கம் உண்டாம்' என்று கூறியவர் ________.

அ) பரணர் ஆ) வெண்ணிக்குயத்தியார்

இ) ஔவையார் ஈ) கபிலர் **விடை:** இ) ஔவையார்

## விடைக்கேற்ற வினா அமைக்க

**கூடுதல் வினாக்கள்:**

1. காற்று வீசுகின்ற திசையைக் கொண்டு தமிழர்கள் பெயர் சூட்டியுள்ளனர்.
**விடை:** காற்று வீசுகின்ற திசையைக் கொண்டு பெயர் சூட்டியவர்கள் யாவர்?

2. மேற்கிலிருந்து வீசும் போது காற்று கோடை எனப்படுகிறது.
**விடை:** மேற்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் யாது?

3. காற்று தெற்கிலிருந்து வீசும் போது தென்றல் காற்று எனப்படுகிறது.
**விடை:** தெற்கிலிருந்து வீசும் காற்றின் பெயர் யாது?

4. கிரேக்க அறிஞர் 'ஹிப்பாலஸ்' என்பவர் பருவக் காற்றின் பயனை உலகிற்கு உணர்த்தினார்.
**விடை:** பருவக்காற்றின் பயனை உலகிற்கு உணர்த்தியவர் யார்?

5. உலகக் காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியா ஐந்தாம் இடம் பெற்றுள்ளது.
**விடை:** உலகக் காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியா எத்தனையாவது இடம் பெற்றுள்ளது?

## சந்திப்பிழையை நீக்கி எழுதுக

**கூடுதல் வினாக்கள்:**

1. நான் வீசுகின்ற திசையை கொண்டும் தமிழர்கள் எனக்கு பெயர் சூட்டியுள்ளனர்.

**விடை:** நான் வீசுகின்ற திசையைக் கொண்டும் தமிழர்கள் எனக்குப் பெயர் சூட்டியுள்ளனர்.

2. கடல் பகுதிக்கு மேலுள்ள மழை மேகங்களை சுமந்து வருவதால் மழைகாற்று எனபடுகிறேன்.

**விடை:** கடல் பகுதிக்கு மேலுள்ள மழை மேகங்களைச் சுமந்து வருவதால் மழைக்காற்று எனப்படுகிறேன்.

3. வறண்ட நிலபகுதியில் இருந்து வீசுவதால் வெப்பகாற்றாகிறேன்.

**விடை:** வறண்ட நிலப் பகுதியில் இருந்து வீசுவதால் வெப்பக் காற்றாகிறேன்.

4. என் ஆற்றலை பயன்படுத்தி கடல் கடந்து வணிகம் செய்தவர்கள் தமிழர்கள்.

**விடை:** என் ஆற்றலைப் பயன்படுத்திக் கடல் கடந்து வணிகம் செய்தவர்கள் தமிழர்கள்.

5. உலக காற்று நாளாக கொண்டாடப்படும் நாள் ஜூன் 15.

**விடை:** உலகக் காற்று நாளாகக் கொண்டாடப்படும் நாள் ஜூன் 15.

## நிறுத்தற் குறியிடுக

**கூடுதல் வினாக்கள்:**

1. மனிதா மனிதா அழைப்பது கேட்கிறதா எங்குப் பார்க்கிறாய் யாரைத் தேடுகிறாய்

**விடை:** மனிதா! மனிதா! அழைப்பது கேட்கிறதா? எங்குப் பார்க்கிறாய்? யாரைத் தேடுகிறாய்?

2. காற்றுள்ள போதே மின்சாரம் எடுத்துக்கொள் என்னும் புதுமொழிக்கு வித்தாகிறேன்

**விடை:** ''காற்றுள்ள போதே மின்சாரம் எடுத்துக்கொள்'' என்னும் புதுமொழிக்கு வித்தாகிறேன்.

3. என் ஆற்றலை வளி மிகின் வலி இல்லை புறம்51 என்று ஐயூர் முடவனார் சிறப்பித்துள்ளார்

**விடை:** என் ஆற்றலை, வளி மிகின் வலி இல்லை (புறம்.51) என்று ஐயூர் முடவனார் சிறப்பித்துள்ளார்.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

நான் உயிர்வளி தந்து உயிர்களைக் காக்கின்றேன்; தாவரங்களின் ஒளிச்சேர்க்கையில் உணவு உற்பத்திக்கு உதவுகின்றேன்; விதைகளை எடுத்துச் சென்று பல இடங்களிலும் தூவுகின்றேன். பூவின், தேனின், கனியின், தாவரத்தின், உயிரினத்தின் மணத்தை என்னில் சுமந்து, புவியின் உயிர்ச் சங்கிலித்தொடர் அறுபடாதிருக்க உதவுகிறேன். இவை மட்டுமல்ல, உங்கள் நவீனத் தொலைதொடர்பின் மையமாகவும் நானே உள்ளேன்.

1. காற்று உயிர்களை எவ்வாறு காக்குகிறது?

காற்றானது உயிர்வளி தந்து உயிர்களைக் காக்கிறது.

2. உயிர்ச் சங்கிலித்தொடர் அறுபடாதிருக்க காற்று எவ்வாறு உதவுகிறது?

பூவின், தேனின், கனியின், தாவரத்தின், உயிரினத்தின் மணத்தைக் காற்று சுமந்து புவியின் உயிர்ச் சங்கிலித்தொடர் அறுபடாதிருக்க உதவுகிறது.

3. காற்று எதன் மையமாகத் திகழ்கிறது?

நவீனத் தொலைத் தொடர்பின் மையமாக காற்று திகழ்கிறது.

படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



1. இயற்கையே மிகப் பெரிய இசைக் கருவியாகும்
2. இயற்கையே நமக்குப் பலவித அனுபவங்களைக் கற்றுத் தருகிறது.
3. காற்றின் ஓசையிலும் இசை வெளிப்படும்.
4. இயற்கையோடு பயணிப்பது இறைவனோடு பயணிப்பது போன்றதாகும்.
5. மரங்களின் அசைவுகள்கூட அழகான நடனம்தான்.

## குறுவினா

### பாடநூல் வினா:

1. 'நமக்கு உயிர் காற்று
காற்றுக்கு வரம் மரம் – மரங்களை
வெட்டி எறியாமல் நட்டு வளர்ப்போம்' – இது போன்ற உலகக் காற்று நாள் விழிப்புணர்வுக்கான இரண்டு முழக்கத் தொடர்களை எழுதுக. PTA
   - மரமில்லையேல் மழையில்லை; மழையில்லையேல் வளமில்லை.
   - மரங்களை வளர்ப்போம்; உயிர் வாழ காற்றினைப் பெறுவோம்.
   - மண்ணுக்கு அழகு மரங்கள். நிலத்திற்கு அழகு வான்மழை.
   - மண்ணைக் காக்க மரங்களை நடுவோம்!

### கூடுதல் வினாக்கள்:

2. காற்றின் இயக்கம் பற்றி திருமூலர் கூறுவது யாது?

மூச்சுப்பயிற்சியே உடலைப் பாதுகாத்து வாழ்நாளை நீட்டிக்கும் என்று திருமந்திரத்தில் திருமூலர் கூறியுள்ளார்.

3. காற்றைக் குறிக்கும் வேறு பெயர்கள் யாவை?
   - காற்று
   - வளி
   - தென்றல்
   - புயல்
   - சூறாவளி

4. காற்று என்னென்ன பெயர்களால் அழைக்கப்படுகிறது?
   - தென்றல் காற்று
   - இளந்தென்றல்பூங்காற்று
   - புழுதிக்காற்றுகடல் காற்று
   - ஆடிக்காற்றுபனிக் காற்று
   - கடுங்காற்றுபுயல் காற்று
   - சூறாவளிக் காற்று
   - வாடைக் காற்று
   - மேல் காற்று
   - கீழ் காற்று
   - மென்காற்று
   - பேய்க்காற்று

5. திசையை வைத்து காற்றுக்குத் தமிழர்கள் சூட்டியுள்ள பெயர்கள் யாவை?

- கிழக்கு – கொண்டல்
- மேற்கு – கோடை
- வடக்கு – வாடை
- தெற்கு – தென்றல்

6. வடக்கு என்பதற்கு உள்ள வேறு பெயர் யாது? ஏன் அவ்வாறு அழைக்கப்படுகிறது?

- வடக்கு என்பதற்கு வாடை என்னும் பெயருமுண்டு.
- வடக்கிலிருந்து வீசுவதால் வாடைக் காற்று என்று அழைக்கப்படுகிறது.
- பனிப்பகுதியிலிருந்து வீசுவதால் மிகவும் குளிர்ச்சியான ஊதைக்காற்று எனவும் அழைக்கப்படுகிறது.

7. காற்றின் ஆற்றலைப் புலவர்கள் எவ்வாறு வருணித்துள்ளனர்?

- ''வளி மிகின் வலி இல்லை'' என்ற புறநானூற்றில் ஐயூர் முடவனார் சிறப்பித்துள்ளார்.
- ''கடுங்காற்று மணலைக் கொண்டு வந்து சேர்க்கிறது'' என்று மதுரை இளநாகனார் கூறியுள்ளார்.

8. மின்சாரம் தயாரிப்பதில் காற்றின் பங்கு யாது?

- "காற்றுள்ள போதே மின்சாரம் எடுத்துக் கொள்" என்பது புதுமொழி.
- புதுப்பிக்கக் கூடிய ஆற்றல் வளமாக மின்னாற்றலை உருவாக்கும் போது நிலக்கரியின் தேவை குறைந்து கனிம வளங்கள் பாதுகாக்கப்படுகிறது.
- உலகக் காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியா ஐந்தாம் இடமும், தமிழகம் முதலிடமும் பெற்று திகழ்கிறது.

9. குளோரோ புளோரோ கார்பன் என்னும் நச்சுக்காற்று ஏற்படுத்தும் விளைவுகள் யாவை?

- ஓசோன் படலத்தை ஓட்டையிடுகின்றது. இதனால் புற ஊதாக் கதிர்கள் நேரடியாக நம்மைத் தாக்குகின்றன.
- இதனால் ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள அனைத்து உயிர்களும் துன்பம் அடைகின்றன.
- கண்களும் தோலும் பாதிப்படைகின்றன.

10. அமில மழை எப்போது பெய்கிறது?

காற்றில் கலந்து விடும் கந்தக டை ஆக்ஸைடு, நைட்ரஜன் ஆக்சைடு ஆகியவை மழை பெய்யும்போது நீரில் கரைந்து விடுவதால் அமில மழை பெய்கிறது.

11. உலகக் காற்று நாள் என்று கொண்டாடப்படுகிறது? காற்றின் ஆசை யாது?

- ஒவ்வொரு ஆண்டும் ஜுன் 15 ஆம் நாள் உலகக் காற்று நாளாகக் கொண்டாடப்படுகிறது.
- காற்றைத் தூய்மையாக வைத்திருக்க வேண்டியதே அதனுடைய ஆசையாகும்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. உயிராக நான், பல பெயர்களில் நான், நான்கு திசையிலும் நான், இலக்கியத்தில் நான், முந்நீர் நாவாய் ஓட்டியாக நான் .... முதலிய தலைப்புகளில் காற்று தன்னைப் பற்றிப் பேசுகிறது. இவ்வாறு 'நீர்' தன்னைப் பற்றிப் பேசினால் .... உங்களுடைய கற்பனையில் தலைப்புகளை எழுதுக.

- கடலாக நான்,
- ஆறாக நான்,
- குளமாக நான்,
- அருவியாக நான்,
- உணவாக நான்,
- அமிழ்தமாக நான்,
- அணையாக நான்,
- உயிராக நான்,
- வலிமையாக நான்,
- உயிரோட்டமாக நான்,
- உணவு தயாரிக்க உதவும் நான்.

இவ்வாறு நீர் தன்னைப் பற்றி பேசும்.

## கூடுதல் வினாக்கள்:

**2. இலக்கியங்களில் காற்று எவ்வாறெல்லாம் குறிப்பிடப்படுகிறது?**

- பலவித மலர்களின் நறுமணத்தை அள்ளி வரும்போது கூடவே வண்டுகளையும் தென்றல் அழைத்து வருகிறது.
- ''வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்'' என சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.
- பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் எழுதிய பத்ம கிரிநாதர் தென்றல் விடு தூது நூலில் ''நந்தமிழும் தண்பொருநை நன்னதியும் சேர் பொருப்பிற் செந்தமிழின் பின்னுதித்த தென்றலே'' எனத் தூது செல்ல அழைக்கிறார்.
- கவிஞர் கண்ணதாசன் திரையிசைப் பாடலில் ''நதியில் விளையாடிக் கொடியில் தலைசீவி நடந்த இளந்தென்றலே'' எனப் பாடியுள்ளார்.

**3. தூய்மையான காற்றைப் பெறுவதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளாக நீங்கள் கருதுவனவற்றை ஐந்து தொடர்களில் பட்டியலிடுக.**

- தூய்மையான காற்றினைப் பெறவதற்கு நாம் நிறைய மரங்களை வளர்க்க வேண்டும்.
- காற்று மாசுபடாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். தேவைபற்ற தொழிற்சாலைகள் அமைவதைத் தடுக்க வேண்டும். அத்தகைய தொழிற்சாலைகளிலிருந்து வெளிப்படும் காற்று சுத்திகரிக்கப்பட்டு பின்னரே வெளியிடப்பட வேண்டும்.
- காற்று மாசுபடுதலைப் பற்றியும் அதைத் தடுக்கும் முறைகள் குறித்தும் மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும்.
- பண்டிகை மற்றும் விசேச காலங்களில் பட்டாசு போன்றவற்றை பயன்படுத்துவதைக் கட்டுப்படுத்த வேண்டும்.
- காற்று சுத்திகரிக்கும் ஆலைகள் நகரங்கள் தோறும் அமைக்கப்பட வேண்டும்.
- வாகனங்களில் புகை கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

**4. முந்நீர் நாவாய் ஓட்டியாக காற்று எவ்வாறு கூறப்பட்டுள்ளது?**

பழங்காலத்தில் கடல் கடந்த பயணங்கள் அனைத்தும் காற்றால் இயக்கப்பட்ட பாய்மரக் கப்பல்களால் தான் நிகழ்ந்தன.

''நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!
களிஇயல் யானைக் கரிகால் வளவ'' புறம் – 66

எனக் கரிகால் பெருவளத்தானை சங்கக் காலப் பெண் புலவர் வெண்ணிக்குயத்தியார் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

5. ஹிப்பாலஸ் பருவக்காற்று பற்றிக் குறிப்பு வரைக.

- பருவக் காற்றின் பயனை உலகிற்கு உணர்த்தியவர் ஹிப்பாலஸ் ஆவார்.
- கி.பி. முதல் நூற்றாண்டில் ஹிப்பாலஸ் என்னும் பெயர் கொண்ட கிரேக்க மாலுமி, பருவக் காற்றின் உதவியினால் நடுக்கடல் வழியாக முசிறித் துறைமுகத்திற்கு நேரே விரைவில் பயணம் செய்யும் புதிய வழியைக் கண்டுபிடித்தார்.
- அந்தப் பருவக்காற்றுக்கு யவனர், அதைக் கண்டுபிடித்த ஹிப்பாலஸ் பெயரைச் சூட்டினார்.

6. காற்று எவ்வாறெல்லாம் ஆற்றலாகத் திகழ்கிறது?

- உயிர் வளி தந்து உயிர்களைக் காக்கிறது.
- தாவரங்களின் ஒளிச்சேர்க்கையில் உணவு உற்பத்திக்கு உதவுகிறது.
- விதைகளை எடுத்துச் சென்று பல இடங்களில் தூவுகிறது.
- பூவின், தேனின், கனியின், தாவரத்தின், உயிரினத்தின் மணத்தை புவியெங்கும் எடுத்துச் சென்று புவியின் உயிர்ச் சங்கிலித் தொடர்பாக விளங்குகிறது.
- நவீன தொலைத்தொடர்பின் மையமாகத் திகழ்கிறது.
- மின்சாரம் தயாரிக்க உதவுகிறது.

## நெடுவினா

### கூடுதல் வினா:

1. காற்றின் வகை, பயன்கள், மாசடைதல் அதனால் ஏற்படும் விளைவுகள் பற்றிக் கூறுக.

**முன்னுரை:**

உயிரின வாழ்வின் அடிப்படை இயற்கை, நாம் நம்பியிருப்பதும் நம்மில் இருப்பதும் இயற்கையே. இயற்கையின் கூறுகளில் காற்றின் பங்கு கூடுதலானது. காற்றே எங்கும் நிறைந்திருக்கிறது. அத்தகைய காற்றின் பண்பு, மாசடையும் தன்மை, அதனால் ஏற்படும் விளைவுகள் குறித்து இங்கே காண்போம்.

**காற்றின் வகைகள்:**

காற்று கிழக்கிலிருந்து வீசிடும்போது அது கொண்டலாக மாறி குளிர்ச்சியைத் தருகின்றது. மேற்கிலிருந்து அதிக வலிமையோடு நிலத்திலிருந்து வெப்பக்காற்றாக வீசுவதால் அது கோடை என்றழைக்கப்படுகிறது. பனிப்பகுதியான வடக்கிலிருந்து குளிர்ச்சியான ஊதைக்காற்றை வீசுவதால் வாடை என்றழைக்கப்படுகிறது. மரம், செடி, கொடி, ஆறு, மலை, பள்ளத்தாக்கு எனப் பல தடைகளைத் தாண்டி மென்மையாக வருவதால் தென்றலாகிறது.

**பயன்கள்:**

காற்றின் மேலடுக்கில் உள்ள ஓசோன் படலத்தின் மூலம் கதிரவனிடமிருந்து வெளிவரும் புறஊதாக் கதிர்களைத் தடுக்கும் அரணாக காற்று விளங்குகிறது. சூரியனின் கதிர் சூட்டைத் தணிக்கும் போர்வையாகிறது. உயிர்வளி தந்து உயிர்களைக் காக்கிறது. தாவரத்தின் ஒளிச்சேர்க்கைக்கும், விதைகள் பரவுவதற்கும் புவியின் உயிர்ச் சங்கிலித் தொடர் அறுபடாதிருக்கவும் உதவுகின்றது.

**காற்று மாசடைதல்:**

குப்பைகள், நெகிழிப் பைகள், மெது உருளைகள் ஆகியவற்றை எரிப்பதாலும், குளிர்சாதனப் பெட்டி, குளிரூட்டப்பட்ட அறைகள் ஆகியவற்றாலும் காற்று அதிகம் மாசடைகின்றது. மிகுதியான பட்டாசு வெடிப்பதாலும், புகை வடிகட்டி இல்லாமல் தொழிற்சாலைகள் இயங்குவதாலும், அதிகமான போக்குவரத்திலிருந்து வரும் நச்சுப் புகையாலும் காற்று மாசடைகின்றது.

**விளைவுகள்:**

காற்று மாசினால் கண் எரிச்சல், நுரையீரல் புற்றுநோய், இளைப்புநோய் போன்ற நோய்கள் ஏற்படுகின்றன. மேலும் குழந்தைகளின் மூளை வளர்ச்சி குறைகிறது. ஓசோன்

படலம் பாதிப்படைந்துள்ளதால் புறஊதாக் கதிர்களின் தாக்கம் அதிகமாகிறது. காற்றில் கலந்துவிடும் கந்தக டை ஆக்சைடு, நைட்ரஜன் டை ஆக்சைடு ஆகியவை மழைநீரில் கரைந்து அமிலமழையாக மாறி மண், நீர், காடுகள், உயிரினங்கள், மனிதர்கள் ஆகியவற்றிற்கு பெரும்பாதிப்பை ஏற்படுத்துகின்றது.

முடிவுரை:

ஒவ்வொரு ஆண்டும் ஜூன் 15 ஆம் நாள் காற்று நாளாகக் கொண்டாடும் நாம், காற்றை மாசுபடுத்தாமல் வைத்திருக்க வேண்டியதன் அவசியத்தை அறிந்துகொள்வோம். தூய்மையான காற்றைச் சுவாசித்து நீண்ட நெடுநாள் நோயின்றி வாழ்ந்திடுவோம்.

2. காற்று பேசியதைப் போல நிலம், நீர், வானம் பேசுவதாகவும் அவை இன்றைய சுற்றுச் சூழல் பாதுகாப்பினை வலியுறுத்துவதாகவும் ஒரு உரையாடல் அமைக்க.

நிலம் : வணக்கம் நீர். வானம் அவர்களே

நீர் : வணக்கம் நிலம் அவர்களே

வானம் : நிலமே நீங்கள் மாசடைந்துள்ளீர்கள் போலத் தெரிகிறதே

நிலம் : ஆம். மனிதர்கள் பயன்படுத்தி தூக்கி எரியும் குப்பைகளாலும், நெகிழிகளாலும் மாசடைந்துள்ளேன்.

நீர் : வேறு ஏதாவது காரணம் உண்டா?

நிலம் : விவசாயத்திலே தெளிக்கப்படும் அதிகமான பூச்சிக்கொல்லி மருந்து, உரங்கள், தொழிற்சாலையிலிருந்து வரும் கழிவு நீராலும் நான் மாசடைகிறேன்.

அது சரி. நீரே, தாங்கள் எவ்வாறு மாசடைகிறீர்கள்?

நீர் : கழிவுநீர் என்னுடன் கலப்பதாலும், நெகிழியின் பயன்பாட்டினாலும், இன்னும் பல காரணங்களாலும் நான் மாசடைகிறேன்.

நிலம் : வானமும் மாசடைகிறதே எதனால்?

வானம் : தொழிற்சாலைகளில் இருந்து வெளிவரும் வடிகட்டாத நஞ்சுப்புகைகள், வாகனங்களின் புகைகள், குளிரூட்டி, குளிர்சாதனப் பெட்டிகளில் இருந்து வரும் குளோரோ புளோரா கார்பன் மற்றும் நெகிழிகளை எரிப்பதால் ஏற்படும் மாசால் நான் மாசடைகிறேன்.

நீர் : இத்தகைய மாசிலிருந்து விடுபட வழி இல்லையா?

நிலம் : வழி உண்டு. மனிதர்கள் நம்மை மாசுபடுத்தக்கூடிய காரணிகளைத் தவிர்த்தால் நாமும் மாசடையாமல் இருக்கலாம்.

வானம் : நாம் மாசடைவதால் சுற்றுச்சூழலும் மாசடைகின்றது.

அதனால் மனிதர்களுக்குத் தானே அதிக பாதிப்பு உண்டாகும்.

நீர் : ஆம். மனிதர்களுக்குத் தான் அதிக பாதிப்பு. ஆனாலும், இன்னும் அவர்கள் விழிப்படைய வில்லையே.

நிலம் : மனிதர்கள் சுற்றுச்சூழலைப் பாதுகாக்காவிட்டால், அவர்களின் வருங்கால சந்ததிதான் பாதிக்கப்படும்.

வானம் : சுற்றுச்சூழலை பாதுகாக்கும் வழிகளை மனிதர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

நீர் : நல்வாழ்வு வாழ வேண்டுமானால் நம்மை அவர்கள் பாதுகாக்க வேண்டும். வாருங்கள் நம்மிடம் செல்வோம்.

## கற்பவை கற்றபின்

1. காற்று பேசியதைப் போல, நிலம் பேசுவதாக எண்ணிக் கொண்டு பேசுக. PTA

மனிதா நீ எங்கே நிற்கிறாய்! என் மேல் அல்லவா நின்று கொண்டிருக்கிறாய்!

உன்னைத் தாங்குவதால் நான் பெருமையடைகிறேன். உன்னை மட்டுமல்ல உலகிலுள்ள அனைத்தையும் தாங்கிப் பிடிக்கும் தன்மையினால் நான் உயர்வடைகின்றேன்.

மலையாக உயர்ந்து நிற்கும் போது நான் குறிஞ்சி என அழைக்கப்படுகிறேன். மரங்கள் அடர்ந்து, உயர்ந்து வளர்ந்து மலைக்கு அழகு சேர்க்கின்றேன். தண்ணீரைச் சேகரித்து அணைக்குள் அடக்கி அனைவருக்கும் உதவுகின்றேன். அருவியாய் குதித்தோட இடம் தருகிறேன். நீரினைத் தாங்கும் போது குளிர்ச்சியடைகின்றேன்.

காடுகள் நிறைந்த என்னை முல்லை என அழைக்கிறார்கள். எல்லையில்லா நிலப்பரப்பினால் மரங்கள் அடர்ந்த வனமாக காட்சியளிக்கின்றேன். விலங்குகள், உயிரினங்கள் சுதந்திரமாய்ச் சுற்றித் திரிய இடமளிக்கிறேன்.

வயல்கள் நிறைந்த நெல்லும், கரும்பும், வாழையும் விளையக் கூடிய என்னை மருதம் என்று அழைக்கிறார்கள். பச்சைப் பசேல் எனப் போர்வைப் போர்த்தி எனக்கு பயிர்கள் அழகூட்டுகின்றன. காய்கறிகள், பயிரினங்கள் வளர நான் என்னையே கையளிக்கிறேன்.

உழவர்கள் என்னை வெட்டுகிறார்கள்; தோண்டுகிறார்கள்; உடைக்கிறார்கள்; தூள் தூளாக்குகிறார்கள்; சேறாக்குகிறார்கள். நான் எதற்கும் கவலைப்படுவதில்லை. அவர்கள் என்னைத் துன்புறுத்தும் அளவுக்கு அதிகமாகவே நான் அவர்களுக்கு நன்மை செய்கிறேன்.

கடலைத் தாங்கி நிற்கும் என்னை நெய்தல் என அழைக்கிறார்கள். மீன் வளம் தந்து மக்களை மகிழ்விக்கின்றேன்.

எண்ணற்ற கனிம வளங்களை மறைத்து வைத்திருக்கிறேன். உலக உயிர்கள் வாழ உவப்புடன் என்னையே தருகின்றேன்.

நெகிழிகளால் என் வளத்தை பாழ்படுத்தி விடாதீர்கள். தரிசாகப் போட்டு என்னை வெறுமையாக்கி விடாதீர்கள். உங்கள் வாழ்க்கை நலமாக அமைய என்னையே தருகின்றேன். உவப்புடன் வாழுங்கள்.

2. 17–ஆம் நூற்றாண்டில் வெள்ளைப் பளிங்குக் கற்களால் கட்டப்பட்டு இன்றும் உலக விந்தையாகத் திகழும் தாஜ்மகால், இன்றளவில் மஞ்சள், பழுப்பு என நிறம் மாறிக் காட்சியளிப்பதன் காரணங்களையும் தீர்வுகளையும் கலந்துரையாடுக.

உலகின் அன்பின் சின்னமாகத் திகழ்வது தாஜ்மகால் ஆகும். உலக அதிசயங்களில் அனைவர் கண்களையும் கவர்ந்திழுக்கும் அற்புத சக்தி படைத்தது தாஜ்மகால். இந்தியப் பண்பாட்டின் கட்டிடக்கலைக்குச் சான்றாகத் திகழ்வது தாஜ்மகால்.

இத்தனைச் சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கின்ற தாஜ்மகாலின் இயல்புதன்மை மங்கிக் கொண்டிருக்கிறது.

அருகிலுள்ள தொழிற்சாலைகள் வெளியிடும் புகை தாஜ்மகாலின் அழகை மாசுபடுத்துகிறது. புகையும், தூசியும் படிந்து அதன் பளபளப்பு குறைந்து மங்கலாக காட்சியளிக்கிறது.

சரியான பராமரிப்பின்மையாலும் தாஜ்மகாலின் அழகு குலைகிறது. இதனை தவிர்க்க அருகிலுள்ள தொழிற்சாலைகளை வேறு இடங்களில் மாற்றலாம். வருடம் தோறும் பராமரிப்புப் பணிகளை மேற்கொள்ளலாம்.

வருடத்திற்கு ஒரு மாதம் சுற்றுலா வரும் பயணிகளை அனுமதிக்காமல் பராமரிப்புப் பணிகளைப் பேணலாம். அதிசயத்தை நாம் பாதுகாப்போம். அதன் அழகை உலகிற்கு என்றும் காட்டுவோம்.





# 2. காற்றே வா !

பாரதியார்

**பாடல் :**

*காற்றே, வா,*
*மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு, மனத்தை*
*மயலுறுத்துகின்ற இனிய வாசனையுடன் வா;*
*இலைகளின்மீதும், நீரலைகளின்மீதும் உராய்ந்து, மிகுந்த*
*ப்ராண - ரஸத்தை எங்களுக்குக் கொண்டு கொடு.*

## சொற்பொருள்:

காற்றே வா - காற்றே வருவாயாக
மகரந்தத்தூளைச் சுமந்து கொண்டு - மணம் தரும் மகரந்தத் தூளைத் தாங்கிக் கொண்டு
மனத்தை மயலுறுத்துகின்ற - மனதினை மயங்கச் செய்கின்ற
இனிய வாசனையுடன் வா - இனிமையான நறுமணத்துடன் வருவாயாக
இலைகளின் மீதும் - தாவரங்கள், மரங்களின் இலைகள் மேலும்
நீரலைகளின் மீதும் உராய்ந்து - அலைகளின் ஆர்ப்பரிப்பில் எழுந்து உரசிக் கொண்டும்
மிகுந்த ப்ராண - ரஸத்தை - அதிகமான உயிர்வளியை
எங்களுக்குக் கொண்டு கொடு - எங்களுக்குக் கொண்டு வருவாயாக.

## பொருளுரை:

மணம் தரும் மகரந்தத் தூளைத் தாங்கிக் கொண்டு மனதினை மயங்கச் செய்கின்ற இனிமையான நறுமணத்துடன் காற்றே வருவாயாக.

தாவரங்கள், மரங்களின் இலைகள் மற்றும் நீரலைகளின் ஆர்ப்பரிப்பில் உரசிக் கொண்டு அதிகமான உயிர்வளியை எங்களுக்குக் கொண்டு வருவாயாக !

**பாடல் :**

*காற்றே, வா*
*எமது உயிர் - நெருப்பை நீடித்துநின்று நல்லொளி தருமாறு*
*நன்றாக வீசு*

## சொற்பொருள்:

காற்றே வா - காற்றே வருவாயாக
எமது உயிர் நெருப்பை - எமது உயிராகிய நெருப்பினை
நல்லொளி தருமாறு - நன்மை தரும் ஒளியை வீசுமாறு
நன்றாக வீசு - நன்றாக வீசுவாயாக

## பொருளுரை:

எமது உயிர் என்னும் நெருப்பு, நன்மை தரும் ஒளியை வீசுமாறு காற்றே நன்றாக வீசுவாயாக.

## பாடல் :

சக்தி குறைந்துபோய், அதனை அவித்துவிடாதே.
பேய்போல வீசி அதனை மடித்துவிடாதே.
மெதுவாக, நல்ல லயத்துடன், நெடுங்காலம்
நின்று வீசிக் கொண்டிரு.
உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்.
உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்.
உன்னை வழிபடுகின்றோம்.

### சொற்பொருள்:

| | |
|---|---|
| சக்தி குறைந்து போய் | – உனது சக்தி குறைந்து போய் |
| அதனை அவித்து விடாதே | – அதனை (உயிராகிய நெருப்பை) அணைத்து விடாதே |
| பேய் போல் வீசி | – பேய் போல் அகோரமாக வீசி |
| அதனை மடித்து விடாதே | – அதனை (உயிராகிய நெருப்பை) மடியச் செய்து விடாதே |
| மெதுவாக. நல்ல லயத்துடன் | – மெல்ல மெல்ல ஒரே சீராக |
| நெடுங்காலம் நின்று வீசிக் கொண்டிரு | – நீண்ட நெடுங்காலம் வீசிக் கொண்டே இரு |
| உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம் | – காற்றே உனக்குப் பாடல் பாடுகிறோம் |
| உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம் | – உனக்குப் புகழ்மாலைகள் சூட்டுகிறோம் |
| உன்னை வழிபடுகின்றோம் | – உன்னை வணங்கி வழிபடுகின்றோம் |

### பொருளுரை:

காற்றே உனது சக்தி குறைந்து உயிராகிய நெருப்பை அணைத்து விடாதே. பேய் போல அகோரமாக வீசி அதனை மடியச் செய்து விடாதே, மெல்ல மெல்ல ஒரே சீராக நீண்ட நெடுங்காலம் வீசிக் கொண்டே இரு. காற்றே உனக்குப் புகழ் பாடல் பாடுகிறோம்; புகழ் மாலைகள் சூட்டுகிறோம்; வணங்கி வழிபடுகின்றோம்.

### விளக்கவுரை:

பாரதியார் இயற்கையின் மீது எல்லையற்ற காதல் கொண்டவர். மழையில், காற்றில், வானில், சோலையில், கடலில், ஆற்றில் போன்றவற்றிலெல்லாம் எல்லையில்லா பேரழகைக் கண்டு களித்தவர். காற்று எவ்வாறு நமக்கு வாழ்வைத் தருகிறது, அது அதிகமானாலும் ஆபத்து, குறைந்தாலும் ஆபத்து என்பதை இக்கவிதை எடுத்துரைக்கிறது.

### ஆசிரியர் குறிப்பு:

- இயற்பெயர் – சுப்பிரமணியன்
- சிறப்புப் பெயர் – பாரதியார், ஷெல்லிதாசன்
- பெற்றோர் – சின்னசாமி, இலக்குமி அம்மையார்
- பிறப்பு – 11.12.1882
- பிறந்த ஊர் – எட்டயபுரம், தூத்துக்குடி மாவட்டம்.
- இறப்பு – 11.09.1921
- சிறப்புப் பெயர்கள் – ⁎ விடுதலைக் கவிஞர், ⁎ தேசியக் கவிஞர், ⁎ நீடு துயில் நீக்கப் பாடி வந்த நிலா, ⁎ சிந்துக்குத் தந்தை, ⁎ பாட்டுக்கொரு புலவன்.

- எழுதிய நூல்கள் – ⁎ பாஞ்சாலி சபதம், ⁎ கண்ணன்பாட்டு, ⁎ குயில் பாட்டு
- பணி – இந்தியா, சுதேசமித்திரன் இதழ்களின் ஆசிரியர்.

## நூற் குறிப்பு:

பாரதியாரின் கவிதை தொகுப்பிலுள்ள காற்று எனும் தலைப்பிலான வசனக் கவிதையின் ஒரு பகுதியே பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளது.

## மதிப்பீடு

### பொருள்தருக:

1. மயலுறுத்து – மயங்கச் செய்து
2. வாசனை – நறுமணம்
3. ப்ராண ரஸம் – உயிர்வளி
4. லயத்துடன் – சீராக
5. மடித்து – அழித்து

### இலக்கணக்குறிப்பு தருக:

1. நல்லொளி, நெடுங்காலம் – பண்புத் தொகைகள்
2. பாடுகிறோம், கூறுகிறோம் – தன்மைப் பன்மை வினைமுற்றுகள்

### பகுபத உறுப்பிலக்கணம் தருக:

1. உராய்ந்து – உராய் + த்(ந்) + த் + உ

உராய் – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்த கால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

2. கொண்டு – கொள் + (ண்) + ட் + உ

கொள் – பகுதி, ண் – விகாரம்
ட் – இறந்த கால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. 'உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்.
உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்'
– பாரதியின் இவ்வடிகளில் இடம்பெற்றுள்ள நயங்கள் யாவை?

அ) உருவகம், எதுகை ஆ) மோனை, எதுகை
இ) முரண், இயைபு ஈ) உவமை, எதுகை

விடை: ஆ) மோனை, எதுகை

2. பாரதியார் காற்றை 'மயலுறுத்து' அழைப்பதைக் குறிக்கும் சொற்றொடர் – PTA

அ) மணம் வீசும் காற்றாய் நீ வா

ஆ) மனதை மயங்கச் செய்யும் மணத்தோடு நீ வா

இ) மயிலாடும் காற்றாய் வா

ஈ) மகரந்தம் சுமந்து கொண்டு நீ வா

**விடை:** ஆ) மனதை மயங்கச் செய்யும் மணத்தோடு நீ வா

## குறுவினா

### பாடநூல் வினா:

1. வசன கவிதை – குறிப்பு வரைக.
   - உரைநடையும் கவிதையும் இணைந்து யாப்புக் கட்டுகளுக்கு அப்பாற்பட்டு உருவாக்கப்படும் கவிதை வடிவம் வசன கவிதை எனப்படுகிறது.
   - இவ்வடிவம் பாரதியாரால் அறிமுகப்படுத்தப்பட்டது.
   - உணர்ச்சி பொங்கக் கவிதை படைக்கும் இலகுவான வடிவம் வசன கவிதை.
   - இவ்வசன கவிதையே புதுக்கவிதை என்ற வடிவம் உருவாகக் காரணமாயிற்று.

### கூடுதல் வினாக்கள்:

2. எப்படி வர வேண்டுமென்று ஆசிரியர் காற்றை அழைக்கிறார்?
   - காற்றானது மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு வர வேண்டும்.
   - மனத்தை மயங்கச் செய்யும் விதமாக நறுமணத்துடன் வரவேண்டுமென்று ஆசிரியர் அழைக்கிறார்.

3. காற்று எப்படி வீசிக் கொண்டிருக்க வேண்டுமென்று ஆசிரியர் கூறுகிறார்?
   - தன் சக்தி குறைந்துப் போய் உயிராகிய நெருப்பை அணைத்து விடக்கூடாது.
   - பேய் போல வீசி உயிராகிய நெருப்பை அழித்துவிடக் கூடாது.
   - நாம் நீண்ட காலம் வாழ மெதுவாக, ஒரே சீராக நீண்ட காலம் நிலையாக நின்று வீச வேண்டுமென்று ஆசிரியர் கூறுகிறார்.

## சிறுவினா

### பாடநூல் வினா

1. சோலைக் (பூங்கா) காற்றும், மின்விசிறிக் காற்றும் பேசிக் கொள்வது போல ஓர் உரையாடல் அமைக்க: PTA

| | | |
|---|---|---|
| சோலைக்காற்று | : | என்னைப் போல இதமான காற்றை உன்னால் தர முடியுமா? |
| மின்விசிறிக்காற்று | : | ஏன் தர முடியாது! மெதுவாகவும் வீசுவேன்; வேகமாகவும் வீசுவேன் |
| சோலைக்காற்று | : | ஏன்! நானும் மெதுவாகவும் வீசுவேன், வேகமாகவும் வீசுவேன். |
| மின்விசிறிக்காற்று | : | என்னால் யாருக்கும் எந்த வித தீங்கும் ஏற்படாது. |
| சோலைக்காற்று | : | நான் அப்படி ஒன்றும் மனிதர்களுக்குத் தீங்கு செய்ய நினைப்பதில்லை. எளியோர்க்கு நான் தான் எளிதாகக் கிடைக்கிறேன். |
| மின்விசிறிக்காற்று | : | வீடுகட்டி, வசதியாக வாழ்பவர்களுக்கு நான் தான் வீட்டை அணி செய்கிறேன். |
| சோலைக்காற்று | : | ஆனாலும் நாம் இருவருமே மனிதர்களுக்கு முக்கியம். |
| மின்விசிறிக்காற்று | : | ஆம். நாம் இணைந்து மனிதர்களுக்கு இதமளிப்போம். |

### கூடுதல் வினா

2. பாரதியார் – ஆசிரியர் குறிப்பு தருக.

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | – | சுப்பிரமணியன் |
| சிறப்புப் பெயர் | – | பாரதியார், ஷெல்லிதாசன் |
| பெற்றோர் | – | சின்னசாமி, இலக்குமி அம்மையார் |
| பிறப்பு | – | 11.12.1882 |
| பிறந்த ஊர் | – | எட்டயபுரம், தூத்துக்குடி மாவட்டம். |
| இறப்பு | – | 11.09.1921 |
| சிறப்புப் பெயர்கள் | – | * விடுதலைக் கவிஞர், * தேசியக் கவிஞர், * சிந்துக்குத் தந்தை |
| எழுதிய நூல்கள் | – | * பாஞ்சாலி சபதம், * கண்ணன் பாட்டு, * குயில் பாட்டு |

## நெடுவினா

### பாடநூல் வினா

1. மலர்ந்தும் மலராத பாதி மலர் போல
   வளரும் விழி வண்ணமே – வந்து
   விடிந்தும் விடியாத காலைப் பொழுதாக
   விளைந்த கலை அன்னமே
   நதியில் விளையாடி கொடியில் தலைசீவி
   நடந்த இளந் தென்றலே – வளர்
   பொதிகை மலைதோன்றி மதுரை நகர் கண்டு
   பொலிந்த தமிழ் மன்றமே

– கவிஞர் கண்ணதாசனின் இப்பாடலில் தவழும் காற்றையும், கவிதை நயத்தையும் பாராட்டி உரை செய்க.

கண்ணதாசனின் திரையிசைப் பாடல்கள் அனைத்தும் தேன்சொட்டும் இனிமை வாய்ந்தவை. இயற்கை, குழந்தை, பெண், ஏக்கம், கவலை போன்ற எச்சூழலிலும் அவர் பாடிய பாடல்கள் என்றும் மறக்க முடியாதவை.

#### தவழும் காற்று

இப்பாடலில் தவழும் காற்றை கண்ணதாசன் மிக நளினமாக எடுத்துரைக்கிறார். காற்றானது நதியில் ஆடி அசைந்து துள்ளிக்குதித்து வருகிறது. மரங்களிலும், செடிகளிலும் காற்றானது ஈரமான தலையைச் சீவிக் கொண்டு அழகுடன் வருகிறது. தலை சீவிய காற்று இளமையான தென்றலாக இனிமை தருகிறது. பொதிகை மலையில் தோன்றிய புதுத்தென்றலாக உடலை வருடிச் செல்கிறது. இப்பாடலில் விளையாடி, தலைசீவி வந்த இளந்தென்றலை நம் கண்முன் படைக்கிறார் கவிஞர் கண்ணதாசன்.

#### கவிதை நயம்

மலர்ந்தும் மலராத மலரை இதுவரை எக்கவிஞரும் பாதிமலர் என்று கூறவில்லை. ஆனால் வளரும் விழிகளுக்கு இதனை உவமையாகக் கூறும் அழகே அழகு!

விடிந்தும் உயிர் விடியாத காலைப்பொழுதை ஒரு கலை வடிவமாக நம் கண்முன் படைக்கிறார். இப்பாடலில், சொல்நயம், உவமை நயம், பொருள் நயம், எதுகை நயம் எடுத்தாளப்பட்டு பொலிவுடன் பொருள் தரும் விதத்தில் அமைந்துள்ளது.

## கூடுதல் வினா

2. 'காற்றே வா' கவிதையில் பாரதியார் கூறுவன யாவை?

**காற்றே வா**

- காற்றானது மகரந்தத் தூளைச் சுமந்து கொண்டு வர வேண்டும்.
- மனத்தை மயங்கச் செய்யும் விதமாக நறுமணத்துடன் வரவேண்டுமென்று ஆசிரியர் அழைக்கிறார்

**நல்லொளி தா**

- காற்றே எமது உயிர் வாழ்வு நிலைபெற்று ஒளியுடன் திகழ சிறப்பாக வீசு. நீடித்து நின்று வீசு.

**சிறப்புடன் வா**

- தன் சக்தி குறைந்துப் போய் உயிராகிய நெருப்பை அணைத்து விடக்கூடாது.
- பேய் போல வீசி உயிராகிய நெருப்பை அழித்துவிடக் கூடாது.
- நாம் நீண்ட காலம் வாழ மெதுவாக, ஒரே சீராக நீண்ட காலம் நிலையாக நின்று வீச வேண்டுமென்று ஆசிரியர் கூறுகிறார்.

**காற்றைப் புகழ்கிறோம்**

- காற்றே நீ எங்களை நெடுங்காலம் வாழ வைப்பதால் உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்; புகழ்ச்சிகள் கூறுகிறோம்; வழிபடுகின்றோம்.

## கற்பவை கற்றபின்

1. இவ்வசன கவிதையில் இடம் பெற்றுள்ள வேண்டுகோள் சொற்களும் கட்டளைச் சொற்களும் (வாசனையுடன் வா, அவித்து விடாதே) கவிதையின் உட்பொருளை வெளிப்படுத்தத் துணை நிற்பது குறித்துப் பேசுக.

காற்றிடம் வேண்டுகோள் விடுக்கும் பாரதியார் அதன் தன்மையைக் கூறி அன்புடன் அழைக்கிறார்.

- காற்றே வா<br>வாசனையுடன் வா<br>நன்றாக வீசு<br>நெடுங்காலம் வீசிக் கொண்டிரு என்று காற்றை வா வா என அழைக்கிறார்.
- உயிர் வளியை எங்களுக்கு கொடு

அவித்து விடாதே, எம்மை மடித்து விடாதே என்று காற்றிற்குக் கட்டளையிடுகிறார் பாரதியார்.

2. "திக்குகள் எட்டும் சிதறி – தக்கத்
தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட
பக்க மலைகள் உடைந்து வெள்ளம்
பாயுது பாயுது பாயுது – தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம் – அண்டம்
சாயுது சாயுது சாயுது – பேய் கொண்டு
தக்கை யடிக்குது காற்று – தக்கத்
தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட" – பாரதியார்

இது போன்ற இயற்கையொலிகளை உணர்வுடன் வெளிப்படுத்தும் கவிதைகளைத் திரட்டி வந்து வகுப்பறையில் படித்துக் காட்டுக.

i) உலகமிசை உணர்வெழுப்பிக் கீழ்த்திசையின் மீதில்

உதித்து விட்டான் செங்கதிரோன்; தகத்தகாயம் பார்!

விலகிற்றுக் காரிருள் தான்; பறந்தது பார் அயர்வு;

விண்ணிலெலாம் பொன்னொளியை ஏற்றுகின்றான் அடடா!

மிலையும் எழிற் பெருங்கடலின் அமுதப்ரவாகம்

மேலெல்லாம் விழி அள்ளும் ஒளியின் ப்ரவாகம்!

நலம் செய்தான்; ஒளிமுகத்தைக் காட்டிவிட்டான், காட்டி

நடத்துகின்றான் தூக்கமதில் ஆழ்ந்திருந்த உலகை!

– பாரதிதாசன்

ii) குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு

நல்ல காலம் வருகுது நல்ல காலம் வருகுது

சாதிகள் சேருது, சண்டைகள் தொலையுது

சொல்லடி, சொல்லடி சக்தி மாகாளி

வேதபுரத்தாருக்கு நல்ல குறி சொல்லு

குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு

சொல்லடி சொல்லடி மலையாள பகவதி!

அந்தரி, வீரி, சண்டிகை சூலி!

குடுகுடு குடுகுடு

– பாரதியார்





இயல் - 2

செய்யுள்

இயற்கை சுற்றுச்சூழல் - உயிரின் ஓசை

# 3. முல்லைப் பாட்டு

நப்பூதனார்

## பாடல்:

*நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு*
*வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை*
*நீர் செல. நிமிர்ந்த மாஅல் போல,*
*பாடுஇமிழ் பனிக்கடல் பருகி, வலன் ஏர்பு,*
*கோடு கொண்டு எழுந்த கொடுஞ் செலவு எழிலி*
*பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை,*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| நனந்தலை உலகம் வளைஇ | - அகன்ற உலகத்தை வளைத்து |
| நேமியொடு வலம்புரி பொறித்த | - சக்கரத்தோடு வலம்புரிச் சங்கு பொறித்த |
| மாதாங்கு தடக்கை | - தாங்குகின்ற கைகளையுடைய திருமால் குறுகிய வடிவம் கொண்டு |
| நீர் செல | - (மாவலி மன்னன்) நீர் வார்த்துத் தரும் பொழுது |
| நிமிர்ந்த மாஅல் போல | - மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நின்ற திருமாலைப் போல |
| பாடு இமிழ் பனிக்கடல் பருகி | - ஒலி முழங்குகிற கடலின் குளிர்நீரைப் பருகிப் |
| வலன் ஏர்பு | - வலமாய் எழுந்து |
| கோடு கொண்டு எழுந்த | - மலையளவிற்கு எழுந்த |
| கொடுஞ்செலவு எழிலி | - விரைந்த வேகத்துடன் மேகமானது |
| பெரும் பெயல் பொழிந்த | - பெருமழையைப் பொழிகின்ற |
| சிறுபுன் மாலை | - துன்பத்தைச் செய்யும் மாலைப்பொழுதில் |

## தெளிவுரை:

அகன்ற உலகத்தை வளைத்துப் பெருமழை பெய்கிறது. சக்கரத்தோடு வலம்புரிச் சங்கு பொறித்த கைகளையுடைய திருமால், குறுகிய வடிவம் கொண்டு மாவலி மன்னன் நீர் வார்த்துத் தரும் பொழுது, மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நிற்பது போன்றுள்ளது மழை மேகம். அம்மேகம், ஒலிக்கும் கடலின் குளிர்நீரைப் பருகிப் பெருந்தோற்றம் கொண்டு, வலமாய் எழுந்து, மலையைச் சூழ்ந்து விரைந்த வேகத்துடன் பெருமழையைப் பொழிகிறது.

## விளக்கவுரை:

மேகங்கள் தவழ்ந்து மழை பொழிகின்ற காலம் கார்காலம். வானம் இருண்டு கருமேகங்கள் வானில் வலம் வரும் காட்சியும், மழை பொழியும் காட்சியும் கண்கொள்ளாக் காட்சியாகும் எனப் புலவர் விளக்கியுள்ளார்.

**பாடல்:**

*அருங்கடி மூதூர் மருங்கில் போகி,*
*யாழ்இசை இன வண்டு ஆர்ப்ப, நெல்லொடு,*
*நாழி கொண்ட, நறுவீ முல்லை*
*அரும்பு அவிழ் அலரி தூஉய், கைதொழுது,*
*பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| அருங்கடி மூதூர் மருங்கில் போகி | – | மிகுந்த காவலையுடைய ஊர்ப்பக்கம் சென்று |
| யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப | – | யாழிசை போன்று ஒலிக்கும் வண்டுகள் சூழ்ந்து ஆரவாரம் செய்ய |
| நெல்லொடு நாழி கொண்ட | – | நாழியில் கொண்டு வந்த நெல்லையும் சேர்த்து |
| நறுவீ முல்லை அரும்பு | – | நறுமணம் கொண்ட முல்லை மலர் அரும்புகள் |
| அவிழ் அலரி தூஅய் | – | அந்த முல்லைப் பூக்களையும் தூவினர் |
| கைதொழுது | – | தெய்வத்தைத் தொழுது |
| பெருமுதுபெண்டிர் | – | முதிய பெண்கள் |
| விரிச்சி நிற்ப | – | நற்சொல் கேட்டு நின்றனர் |

## பொருளுரை:

துன்பத்தைச் செய்கின்ற அம்மாலைப் பொழுதில், முதிய பெண்கள் மிகுந்த காவலையுடைய ஊர்ப்பக்கம் சென்றனர். யாழிசை போன்று ஒலிக்கும் வண்டுகள் சூழ்ந்து ஆரவாரிக்கும் நறுமணம் கொண்ட அரும்புகள் அந்த மலர்ந்த முல்லைப் பூக்களோடு நாழியில் கொண்டு வந்த நெல்லையும் சேர்த்து தெய்வத்தின் முன் தூவினர். பிறகு தெய்வத்தைத் தொழுது, தலைவிக்காக நற்சொல் கேட்டு நின்றனர்.

## விளக்கவுரை:

மலர்கள் மணம் வீசுகின்றன; வண்டுகள் மலர்களைச் சுற்றி ரீங்காரமிடுகின்றன; முல்லைப் பூக்கள் பூத்துக் குலுங்குகின்றன; மலர்களோடு நெல்லையும் சேர்த்துத் தெய்வத்தின் முன் தூவி நற்சொல் கேட்டனர் என்பதை நயமாக ஆசிரியர் விளக்கியுள்ளார்.

**பாடல்:**

*சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்*
*உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்*
*நடுங்கு சுவல் அசைத்த கையள் "கைய*
*கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர*
*இன்னே வருகுவர் தாயர்" என்போள்*
*நன்னர் நன்மொழி கேட்டனம்*

### சொற்பொருள்:

| | |
|---|---|
| சிறுதாம்பு தொடுத்த | – சிறு தாம்புக் கயிற்றால் கட்டப்பட்ட |
| பசலைக் கன்றின் | – இளங்கன்றின் |
| உறுதுயர் அலமரல் நோக்கி | – (பசியால் வாடும்) துயர நிலையைக் கண்டு |
| ஆய்மகள் | – இடைமகள் |
| நடுங்குசுவல் அசைத்த கையள் | – குளிர் தாங்காது கைகளைக் கட்டியபடி நின்றவள் |
| கைய கொடுங்கோற் கோவலர் | – வளைந்த கத்தியை உடைய கம்பைக் கொண்ட எம் இடையர் |
| பின்நின்று உய்த்தர | – பின்நின்று ஓட்டி வர |
| இன்னே வருகுவர் தாயர் | – இப்போது வந்து விடுவர் உன் தாய்மார் |
| என்போள் நன்னர் | – என்று கூறியது நல்ல சொல் (எனக் கொண்டு) |
| நன்மொழி கேட்டனம் | – (முதுபெண்கள் தலைவியிடம்) நற்சொல்லை நாங்கள் கேட்டோம் என்று கூறினர். |

### பொருளுரை:

அங்கு, சிறு தாம்புக் கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்று பசியால் வாடிக் கொண்டிருந்தது. அதன் வருத்தத்தை ஓர் இடைமகள் கண்டாள். குளிர்தாங்காமல் கைகளைக் கட்டியபடி நின்ற அவள், "புல்லை மேய்ந்த உன் தாய்மார், வளைந்த கத்தியை உடைய கம்பைக் கொண்ட எம் இடையர் ஓட்டி வர, இப்போது வந்து விடுவர். வருந்தாதே" என்றாள். இது நல்ல சொல் எனக் கொண்டு முதுபெண்கள் தலைவியிடம் 'நற்சொல்லை நாங்கள் கேட்டோம்' என்று கூறினர்.

### விளக்கவுரை:

சிலர் ஒரு செயலைச் செய்ய முற்படும் போது நல்ல சகுனம் பார்ப்பது பழக்கம். அதே போல், இங்கு முதுபெண்கள் தங்கள் தலைவியிடம் நற்சொல்லைக் கேட்டதாக கூறினர். அவ்வாறு நற்சொல் என்று கூறியது, பசியால் வாடிக் கொண்டிருந்த கன்றைக் கண்டு மனமிரங்கிய இடைமகள், அக்கன்றினுக்கு கூறிய ஆறுதல் சொற்களாகும். தலைவியே! மனத்தடுமாற்றம் கொள்ளாதே! வருவான் வடிவேலன்! தருவான் அன்பை என்று ஆற்றுப்படுத்துகின்ற அழகான காட்சி இது.

### ஆசிரியர் குறிப்பு:

- நப்பூதனார் சங்கக் காலப்புலவர்களுள் ஒருவர்.
- அகப்பாடல்கள், புறப்பாடல்கள் பாடுவதில் வல்லவர்.
- அன்பின் ஆழம், காதலின் மென்மை போன்றவற்றை நயமாக எடுத்துரைக்கக் கூடியவர்.

### நூற் குறிப்பு:

- முல்லைப்பாட்டு, பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று.
- இந்நூல் 103 அடிகளைக் கொண்டது.
- இந்நூல் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டது.
- முல்லை நிலத்தைப் பற்றிய பாடல்.
- பத்துப்பாட்டில் குறைந்த அடிகளை உடைய நூல்.
- இப்பாடலைப் பாடியவர் காவிரிப்பூம்பட்டினத்து பொன் வணிகனார் மகனார் நப்பூதனார்.
- மறைமலையடிகள் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. நனந்தலை உலகம் – அகன்ற உலகம்
2. வளைஇ – வளைந்து
3. நேமி – சக்கரம் (வலம்புரிச் சங்குடன் கூடிய)
4. தடக்கை – பெரிய கை
5. கோடு – மலை
6. கவல் – தோள்
7. கொடுஞ்செலவு – விரைவாகச் செல்லுதல்
8. எழிலி – மேகம்
9. தூஉய் – தூவி
10. நறுவீ – நறுமணமுடைய மலர்கள்
11. அரும்புகள் – மொட்டுகள்
12. பெண்டிர் – மகளிர்
13. கோவலர் – இடையர்
14. விரிச்சி – நற்சொல்

### இலக்கணக்குறிப்பு தருக:

1. மூதூர், பெரும்பெயல், நன்மொழி, கொடுங்கோல், முதுபெண்டிர் – பண்புத் தொகைகள்
2. உறுதுயர் – வினைத்தொகை
3. கைதொழுது – மூன்றாம் வேற்றுமைத் தொகை
4. தடக்கை – உரிச்சொல் தொடர்
5. வளைஇ – செய்யுளிசையளபெடை
6. அசைத்த, எழுந்த, தொடுத்த – பெயரெச்சங்கள்

### பகுபத உறுப்பிலக்கணம் தருக:

1. பொறித்த – பொறி + த் + த் + அ PTA

பொறி – பகுதி
த் – சந்தி
த் – இறந்த கால இடைநிலை
அ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. "பாடுஇமிழ் பனிக்கடல் பருகி" என்னும் முல்லைப்பாட்டு அடி உணர்த்தும் அறிவியல் செய்தி யாது? PTA

அ) கடல் நீர் ஆவியாகி மேகமாதல்
ஆ) கடல் நீர் குளிர்ச்சி அடைதல்
இ) கடல் நீர் ஒலித்தல்
ஈ) கடல் நீர் கொந்தளித்தல்

விடை: இ) கடல் நீர் ஒலித்தல்

**கூடுதல் வினாக்கள்:**

2. சுவல் என்பதன் பொருள் ________.

அ) அவல் ஆ) தோள்
இ) தலை ஈ) கால் விடை: ஆ) தோள்

3. கோடு என்ற சொல் தரும் பொருள் ________.

அ) ஏடு ஆ) பாடு
இ) மலை ஈ) பூமி விடை: இ) மலை

4. முல்லைப்பாட்டு ________ நூல்களுள் ஒன்று.

அ) எட்டுத்தொகை ஆ) பத்துப்பாட்டு
இ) பதினெண்கீழ் கணக்கு ஈ) காப்பி விடை: ஆ) பத்துப்பாட்டு

5. முல்லைப்பாட்டு பாடலைப் படைத்தவர் ________.

அ) நப்பூதனார் ஆ) அம்மூவனார்
இ) கபிலர் ஈ) பரணர் விடை: அ) நப்பூதனார்

6. முல்லை நிலத்தின் உரிப்பொருள் ________.

அ) ஊடல் ஆ) புணர்தல்
இ) பிரிதல் ஈ) காத்திருத்தல் விடை: ஈ) காத்திருத்தல்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்
நடுங்கு சுவல் அசைத்த கையள், "கைய
கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருகுவர், தாய்" என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம்"

1. "சுவல்" என்பதன் பொருள் ______.

அ) உணவு ஆ) தோள்
இ) விளைந்து ஈ) நெற்று

விடை : ஆ) தோள்

2. விரிச்சு கேட்டல் என்பது ______.

அ) நற்சொல் கேட்டல் ஆ) கனவு கேட்டல்
இ) பொய்புரை கேட்டல் ஈ) நீதி கேட்டல்

விடை : அ) நற்சொல் கேட்டல்

3. பாடலில் இடம்பெறும் அடி எதுகைகளை எழுதுக.

அ) சிறுதாம்பு, உறுதுயர் ஆ) நன்னர், நன்மொழி
இ) இன்னே, என்போள் ஈ) அலமரல், ஆய்மகன்

விடை : அ) சிறுதாம்பு, உறுதுயர்

4. "கோவலர்" என்பதன் பொருள் ______.

அ) எயினர் ஆ) உழவர்
இ) இடையர் ஈ) பரதவர்

விடை : இ) இடையர்

2. நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல, நிமிர்ந்த மாஅல் போல
பாடுஇமிழ் பனிக்கடல் பருகி, வலன் ஏர்பு
கோடு கொண்டு எழுந்த கொடுஞ் செலவு எழிலி

1. இப்பாடல் இடம்பெற்ற நூல்______.

அ) முல்லைப்பாட்டு ஆ) மலைபடுகடாம்
இ) நற்றிணை ஈ) குறுந்தொகை

விடை : அ) முல்லைப்பாட்டு

2. நனைந்தலை உலகம் – இத்தொடரிலன் பொருள். PTA

அ) சிறிய உலகம் ஆ) தலையாய உலகம்
இ) நனைந்த உலகம் ஈ) அகன்ற உலகம்

விடை : ஈ) அகன்ற உலகம்

3. பாடலில் இடம்பெற்றுள்ள அடிஎதுகைச் சொற்கள்.

அ) பெரும்பெயல், பொழிந்த ஆ) பாடுஇமிழ், பனிக்கடல்
இ) பாடுஇமிழ், கோடுகொண்டு ஈ) நீர்செல நிமிர்ந்த

விடை : இ) பாடுஇமிழ், கோடுகொண்டு

4. பாடலில் இடம் பெற்றுள்ள அளபெடை PTA

அ) தடக்கை ஆ) வளைஇ
இ) பெரும்பெயல் ஈ) கொடுஞ்செலவு

விடை : ஆ) வளைஇ

## குறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. மாஅல் – பொருளும் இலக்கணக்குறிப்பும் தருக.

- மா அல் என்பதன் பொருள் – திருமால்.
- மாஅல் என்பதன் இலக்கணக்குறிப்பு செய்யுளிசையளபெடை ஆகும்.

2. பெற்றோர் வேலையிலிருந்து திரும்பத் தாமதமாகும் போது அழும் தம்பிக்கு நீங்கள் கூறும் ஆறுதல் சொற்களை எழுதுக. PTA

- கண்ணே! கவலைப்படாதே! ஏதோ அப்பா, அம்மாவுக்குத் தாமதமாகிவிட்டது. இதோ சீக்கிரம் வந்து விடுவார்கள்!
- உன்மேல் எவ்வளவு அக்கறை! அதனால் உன்னைக் காண விரைவில் வருவார்கள். உனக்கு ஏதாவது தின்பண்டம் வாங்கி வருவார்கள்!
- தம்பி! என்ன வேண்டும் சொல்! நான் உனக்கு வாங்கித் தருகிறேன்!

### கூடுதல் வினாக்கள்:

3. விரிச்சி என்றால் என்ன?

ஏதேனும் ஒரு செயல் நன்றாக முடியுமோ? முடியாதோ? என ஐயம் கொண்ட பெண்கள், தெய்வத்தைத் தொழுது நின்று, அயலார் பேசும் நற்சொல்லைக் கேட்டலாகும்.

4. நிமிர்ந்த மாஅல் போல – உவமையை விளக்குக.

திருமால் குறுகிய வடிவம் கொண்டு மாவலி மன்னன் நீர் வார்த்துத் தரும் பொழுது, மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நிற்பது போன்றுள்ளது மழை மேகம் என்று ஆசிரியர் கூறுகிறார்.

5. முல்லை நிலம் பற்றிய வருணனை இப்பாடலில் அமைந்துள்ளதைக் குறிப்பிடுக.

- யாழிசை போன்று ஒலிக்கும் வண்டுகளின் ஆரவாரம்.
- நறுமணம் கொண்ட அரும்புகள், மலர்ந்த முல்லைப் பூக்கள்.
- நாழியில் கொண்டு வந்த நெல்.
- கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்று.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. மழை நின்றவுடன் புலப்படும் காட்சியை வருணித்து எழுதுக. PTA

குறிப்பு : இலைகளில் சொட்டும் நீர் – உடலில் ஓடும் மெல்லிய குளிர் – தேங்கிய குட்டையில் 'சளப் தளப்' என்று குதிக்கும் குழந்தைகள் – ஓடும் நீரில் காகிதக் கப்பல்.

- மழை பெய்யும் போது இலைகளில் படுகின்ற நீரின் அழகு தான் என்னே! பளபளவென இலை மின்னும்; கண்ணாடியில் பட்டுத் தெறிப்பது போல தண்ணீர்த் துளி சிதறும்; சொட்டு சொட்டாக அங்குமிங்கும் ஒரிரு தண்ணீர்த்துளிகள் இலைக்குப் பொட்டு இட்டதைப் போலத் தோன்றும்.
- உடலில் நீர் படும் போது சிலிர்ப்பு ஏற்படும்; நேரம் ஆக ஆக உடல் குளிர் எடுக்கத் தொடங்கும்; விரல்கள் நர்த்தனமாடும்; வாய் அதிர்ந்து கொண்டே அசையும்; பற்கள் மத்தளம் தட்டும்; அது ஒரு சுகமான அனுபவம்.
- தேங்கிய குட்டையில் குதிக்கும் குழந்தைகளால் ஏற்படும் ஒலி எந்த இசைக்கலைஞனாலும் இசைக்க முடியாத ஒலி.
- ஓடுகின்ற நீரில் காகிதத்தால் கப்பல் செய்து மகிழ்ந்து விளையாடுகின்ற சிறுவர்களின் ஆனந்தக்களிப்பு அளவில்லா ஆனந்த அனுபவமாகும்.

### கூடுதல் வினாக்கள்:

2. பெருமழை எவ்வாறு பொழிந்தது?

- அகன்ற உலகத்தை வளைத்துப் பெருமழை பொழிந்தது.
- திருமால் குறுகிய வடிவம் கொண்டு மாவலி மன்னன் நீர் வார்த்துத் தரும் பொழுது, மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நிற்பது போன்றிருந்தது மழை மேகம்.
- அம்மேகம் ஒலி முழங்கும் கடலின் குளிர்நீரைப் பருகிப் பெருந்தோற்றம் கொண்டு; வலமாய் எழுந்து, மலையைச் சூழ்ந்து, விரைந்த வேகத்துடன் பெருமழையைப் பொழிந்தது.

3. முல்லைப்பாட்டு – நூற்குறிப்புத் தருக.

- முல்லைப்பாட்டு பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று.
- இந்நூல் 103 அடிகளைக் கொண்டது.
- இந்நூல் ஆசிரியப்பாவால் இயற்றப்பட்டது.
- முல்லை நிலத்தைப் பற்றிய பாடல்.
- பத்துப்பாட்டில் குறைந்த அடிகளை உடைய நூல்.
- இப்பாடலைப் பாடியவர் காவிரிப்பூம்பட்டினத்து பொன் வணிகனார் மகனார் நப்பூதனார்.
- மறைமலையடிகள் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்.

4. முல்லை நிலத்தின் முதற்பொருளையும், கருப்பொருளையும், உரிப்பொருளையும் குறிப்பிடுக.




| கருப்பொருள் | |
|---|---|
| நீர் | குறுஞ்சுனை நீர், காட்டாறு |
| மரம் | கொன்றை, காயா, குருந்தம் |
| பூ | முல்லை, பிடவம், தோன்றிப்பூ |

| உரிப்பொருள் | இருத்தலும், இருத்தல் நிமித்தமும் (காத்திருத்தல்) |
|---|---|

## நெடுவினா

### பாடநூல் வினா

1. முல்லைப் பாட்டில் உள்ள கார்காலச் செய்திகளை விவரித்து எழுதுக. PTA

**மழைக்காட்சி:**

- அகன்ற உலகத்தை வளைத்துப் பெருமழை பொழிகிறது.
- திருமால் குறுகிய வடிவம் கொண்டு மாவலி மன்னன் நீர் வார்த்துத் தரும் பொழுது, மண்ணுக்கும் விண்ணுக்குமாகப் பேருருவம் எடுத்து உயர்ந்து நிற்பது போன்றுள்ளது மழை மேகம்.
- அம்மேகம் ஒலி முழங்கும் கடலின் குளிர்நீரைப் பருகிப் பெருந்தோற்றம் கொண்டு; வலமாய் எழுந்து, மலையைச் சூழ்ந்து, விரைந்த வேகத்துடன் பெருமழையைப் பொழிகிறது.

**நற்சொல் கேட்டல்:**

- துன்பத்தைச் செய்கின்ற அம்மாலைப்பொழுதில், முதிய பெண்கள் மிகுந்த காவலையுடைய ஊர்ப்பக்கம் சென்றனர்.
- யாழிசை போன்று ஒலிக்கும் வண்டுகள் சூழ்ந்து ஆரவாரிக்கும் நறுமணம் கொண்ட அரும்புகள்;
- அந்த மலர்ந்த முல்லைப் பூக்களோடு நாழியில் கொண்டு வந்த நெல்லையும் சேர்த்துத் தெய்வத்தின் முன் தூவினர்.
- பிறகு தெய்வத்தைத் தொழுது, தலைவிக்காக நற்சொல் கேட்டு நின்றனர்.

**தலைவியே வருந்தாதே:**

- சிறு தாம்புக் கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்று பசியால் வாடிக் கொண்டிருந்தது. அதன் வருத்தத்தை ஓர் இடைமகள் கண்டாள்.
- குளிர் தாங்காமல் கைகளைக் கட்டிய படி நின்ற அவள், ''புல்லை மேய்ந்து உன் தாய்மார் வளைந்த கத்திகை உடைய கம்பைக் கொண்ட எம் இடையர் ஓட்டி வர இப்போது வந்து விடுவர்; வருந்தாதே'' என்றாள்.
- இது நல்ல சொல் எனக் கொண்டு முதுபெண்கள் தலைவியிடம் 'நற்சொல்லை நாங்கள் கேட்டோம்' என்று கூறினர்.

## கற்பவை கற்றபின்

1. முல்லைப்பாட்டின் காட்சிகளிலிருந்து சங்க கால மக்களின் வாழ்க்கைச் சூழலை உணர முடிகிறதா? உங்களின் கருத்துகளைப் பதிவு செய்க. PTA

- முல்லை நிலம் வளமான காடு நிறைந்த இடம். உயர்ந்தோங்கிய மரங்கள்; சலசலவென ஒலியெழுப்பியவாறே ஓடுகின்ற ஆறுகள்; கீச்கீச் என பலவித ஒலிகளை எழுப்புகின்ற பறவைகள் நிறைந்த இடமாகும்.
- சங்க கால மக்களின் வாழ்க்கைச் சூழல் வளமானதாக இருந்தது. இயற்கையான இன்பச் சூழலில் தேனும், தினைமாவும், கிழங்கும் உண்டு உடல் வலிமையுடன் வாழ்ந்தனர். ஒருவருக்கொருவர் அன்புடன் பகிர்ந்துண்டு வாழ்ந்தனர்.
- வேட்டையாடுதல் மூலம் முயல், மான் போன்றவற்றை உண்டு மகிழ்ந்தனர்.
- வீரமுடையவர்களாக, ஆடு, மாடு போன்றவற்றை மேய்த்து வாழும் பண்புடையவர்களாக வாழ்ந்தனர்.
- நீர் வளம் மிகுந்து காணப்பட்டதால் தங்கள் வீட்டிற்கருகில் நிலங்களைத் திருத்தி பயிரிட்டு வேளாண்மை செய்து வாழ்ந்தனர்.

2. குறிப்புகளைக் கொண்டு ஆர்வமூட்டும் வகையில் கதை / நிகழ்வை எழுதுக.

அமைதி – வனம் – மனத்தைத் தொட்டது – கொஞ்சம் அச்சம் – ஆனால் பிடித்திருந்தது – இரவில் – வீட்டின் அமைதியை விட – வனத்தின் அமைதி – புதுமை – கால்கள் தரையில் – இலைகளின் சலசலப்பு – பறவைகள் மரங்களின் மேல் – சிறகடிப்பு – அருகில் திரும்பியவுடன் – திடீரென ஆரவார ஓசை – தண்ணீரின் ஓட்டம் – அழகான ஆறு – உருண்ட சிறுகூழாங்கற்கள் – இயற்கையின் கண்காட்சி.

ஒரு நாள் பாண்டியன் தன்னந்தனியனாய் மாலையில் மரங்களைப் பார்த்தவாறே நடந்து சென்று கொண்டிருந்தான். அப்படியே வீட்டின் அருகிலுள்ள காட்டிற்குள் நுழைந்து சென்றான். எங்கும் ஒரே அமைதி. மனதிற்குள் கொஞ்சம் அச்சம் எழுந்தாலும், அந்த ரம்மியமான சூழல் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

அவனது வீடும் ஊரை விட்டு ஒதுங்கி இருந்ததால் அமைதியான சூழ்நிலை தான் நிலவியது. எனினும் இந்த வனத்தின் அமைதி அவனுக்குப் புதுமையாய் இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக இருள் சூழ ஆரம்பித்தது.

அடர்ந்த மரங்கள் சூழ்ந்த இடத்திற்கு நடந்துச் சென்றான். வெளிச்சம் குறைவாக இருந்தாலும், காலில் இலையின் சலசலப்பு அவனுக்குத் துல்லியமாகக் கேட்டது. அடர்த்தியான மரங்களிலிருந்த பறவைகளின் ஆரவாரம்; அவைகளின் சிறகடிப்பு ஆகியவை அந்த சத்தத்திற்குத் தாளம் சேர்த்தது.

கொஞ்சம் நடந்து ஒரு இடத்தில் திரும்பியதும், அருகினிலே ஓடுகின்ற ஆற்றின் சலசலப்பு திடீர் ஆரவாரமாக கேட்டது. சற்று தூரத்தில் தென்பட்ட ஆற்றில் தண்ணீரின் ஓட்டம் நிலவொளியில் அழகாகத் தெரிந்தது. ஆற்றின் கரையில் இருந்த சிறு சிறு கூழாங்கற்கள் காலடியில் உருண்டன. அந்த இயற்கையின் கண்காட்சியில் பாண்டியன் தன்னை மறந்தான். உள்ளம் மகிழ்ந்தான்.

பின்னர், திரும்பி தனது வீட்டிற்குச் செல்ல ஆரம்பித்தான். தொலைவில் உள்ள அவனது இல்லத்தில் விளக்கொளி தெரிந்ததும் அவனது உள்ளத்தில் வேறுவிதமான களிப்பு ஏற்பட்டது.





இயல் - 2

விரிவானம்

இயற்கை சுற்றுச்சூழல் - உயிரின் ஓசை

# 4. புயலிலே ஒரு தோணி

ப.சிங்காரம்

## பாடநூல் வினா

1. 'புயலிலே ஒரு தோணி' கதையில் இடம் பெற்றுள்ள வருணனைகளும் அடுக்குத் தொடர்களும் ஒலிக்குறிப்புச் சொற்களும் புயலில், தோணி படும் பாட்டை எவ்வாறு விவரிக்கின்றன? PTA

**முன்னுரை:**

புலம் பெயர்ந்த தமிழர்கள் பற்றிய முதல் புதினம், புயலிலே ஒரு தோணி. இந்தோனேசியாவில் இருந்த போது, தென்கிழக்காசியப் போர் மூண்டது. அச்சூழலில் மலேசியா, இந்தோனேசியப் பகுதிகளில் நிகழ்வதாக உள்ள கற்பனைப் படைப்பு இப்புதினம். புதினத்தின் ஒரு பகுதியான 'கடற்கூத்து' பகுதியைக் காண்போம்.

**மங்கலான இருட்டு:**

கொளுத்திக் கொண்டிருந்த வெயில் இமை நேரத்தில் மறைந்து விட்டது; புழுங்கிற்று. மேகப் பொதிகள் பரந்து திரண்டு கும்மிருட்டாய் இறுகி நின்றன. அலைகள் எண்ணெய் பூசியவைப் போல் மொழுமொழுவென நெளிந்தன. காற்றையே காணோம். ஒரே இறுக்கம்.

**இடிமுழக்கம், மழை:**

கிடுகிடுக்கும் இடிமுழக்கத்துடன் மின்னல் கீற்றுகள் வானைப் பிளந்தன. வானம் உடைந்து கொட்டுகொட்டென்று வெள்ளம் கொட்டியது. சூறாவளி மாரியும் காற்றும் கூடிக் கலந்து ஆடிக் குதித்துக் கெக்கலித்தன. அலையோட்டம் தெரியவில்லை; வானுடன் கடல் கலந்து விட்டது. மழை தெரியவில்லை; வளியுடன் இணைந்துவிட்டது. வான், காற்று, மழை மூன்றையும் இணைத்து அற்புதமான காட்சியை நம் கண்முன் படைக்கிறார் ஆசிரியர்.

**மீண்டும் இடி, மழை, காற்று:**

கப்பல் தள்ளாடுகிறது; அலைகள், மலைத்தொடர் போன்ற அலைகள் மோதித் தாக்குகின்றன. தட்டுத்தடுமாறி நடந்தோடினர். வானும் கடலும் வளியும் மழையும் மீண்டும் ஒன்று கூடிக் கொந்தளிக்கின்றன. வானம் பிளந்து தீ கக்கியது. மழை வெள்ளம் கொட்டுகிறது. வளிமுட்டிப் புரட்டுகிறது. கடல், வெறிக் கூத்தாடுகிறது.

வான், கடல், வளி, மழை ஆகிய நான்கும் சேர்ந்து கப்பலை நொறு நொறுவென நொறுக்குகின்ற காட்சியை ஆசிரியர் நம் கண் முன் படைக்கிறார்.

**எங்கும் வெள்ளம், இருட்டு:**

முகத்தில், உடலில், கால் கையில், எங்கும் வெள்ளம், உடை உடலை இறுக்கியிறுக்கி ரம்பமாய் அறுக்கிறது. கப்பல் மூழ்கி நீந்துகிறது. தாவி நீந்துகிறது. இருட்டிருட்டு, கும்மிருட்டு, குருட்டிருட்டு.

**சூரிய வெளிச்சம்:**

லேசான சூரிய வெளிச்சம் பளிச்செனத் தெரிகிறது. கப்பலில் இருந்த நீரை இறைத்து வெளியே ஊற்றுகின்றனர். ஒட்டையை அடைக்கின்றார்கள். ஆப்பு அடிக்கிறார்கள். மரம் வெட்டுகிறார்கள், செதுக்குகிறார்கள்.

##### பாண்டியனின் மலைப்பு:

கடற்கூத்து எவ்வளவு நேரம் நீடித்ததென்று தெரியவில்லை. கடற்கூத்தின் போது மாலுமிகளால் தூக்கி எறியப்பட்ட பெட்டிகளும் சிப்பங்களும் மூடைகளும் மிதந்து உடன் வந்தன.

##### கரையை நோக்கி:

இனிமேல் பயமில்லை. இரண்டு நாளில் கரையைப் பார்க்கலாம். மறுநாள் காலையில் சூரியன் உதித்தான். கடல் அலைகள் இயல்பாய் வீசின. கப்பல் கடலின் இழுவைக்கிணங்கி மிதந்து சென்றது.

##### முடிவுரை:

கடலில் கப்பலின் போராட்டம் மிக அழகாக வருணனைகளோடும் ஒலிக் குறிப்புகளோடும் இக்கற்பனைக் கதையில் எடுத்தாளப்பட்டு அழகூட்டப்பட்டுள்ளன.

## கற்பவை கற்றபின்

1. கடலில் புயலின் தாக்கத்தினால் ஏற்பட்ட பதற்றத்தை வெளிப்படுத்த அடுக்குத் தொடர்களும் வருணனைகளும் எவ்வாறெல்லாம் பயன்பட்டுள்ளன என்பது குறித்து வகுப்பில் பேசுக.

##### புயலின் தோற்றம்

மேகப் பொதிகள் பரந்து திரண்டொன்றிக் கும்மிருட்டாய் இறுகி நின்றன. அலைகள் எண்ணெய் பூசியவை போல் மொழுமொழுவென நெளிந்தன. காற்றையோ காணோம். ஒரே இறுக்கம். மாலுமிகள் திடுமெனப் பாய்மரத்தை நோக்கி ஓடிச்சென்று கட்டுக் கயிறுகளை இறுக்குகிறார்கள். எல்லோரும் எழுந்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து மிரண்டு விழித்தனர்.

##### புயலுடன் வெள்ளம்

கிடுகிடுக்கும் இடி முழக்கத்துடன் மின்னல் கீற்றுகள் வானைப் பிளந்தன. வானம் உடைந்து கொட்டு கொட்டென்று வெள்ளம் கொட்டியது. சூறாவளி மாரியும் காற்றும் கூடிக்கலந்து ஆடிக்குதித்துக் கெக்கலித்தன. அலையோட்டம் தெரியவில்லை. வானுடன் கடல் கலந்துவிட்டது. மழை தெரியவில்லை. வளியுடன் இணைந்து விட்டது.

காற்று, மழை, இடி, வெள்ளம் அனைத்தையும் ஆசிரியர் கூறும் விதம் சிறப்பாக அமைந்துள்ளது. கடல், மழை, புயல், வானம் சேர்ந்துத் தருகின்ற பயம் நம்மை கவ்வுகிறது. பதற்றம் நம்மைத் தொற்றிக் கொள்கிறது.

##### வானும், கடலும்

வானும், கடலும் வளியும் மழையும் மீண்டும் ஒன்று கூடிக் கொந்தளிக்கின்றன. வானம் பிளந்து தீ கக்கியது. மழை வெள்ளம் கொட்டுகிறது. வளி முட்டிப் புரட்டுகிறது. கடல் வெறிக் கூத்தாடுகிறது. எவ்வளவு அருமையாக வருணனைகளை அமைத்து கடல், வானம், காற்று, மழை போன்றவற்றை மிக தத்ரூபமாக நம் கண்முன் படைக்கிறார் ஆசிரியர்.

##### புயலுக்குப் பின்

பகல் இரவாகி பகலாகி இரவாகியது. பிறைமதி வெளிச்சம் சிந்திற்று. கருநீல வானில் விண்மீன்கள் வெகு ஒளியுடன் கண் சிமிட்டி நின்றன. உப்பங்காற்று உடலை வருடியது. அவுலியா மீன்கள் கூட்டம் கூட்டமாய், கண்மாயில் முதுகு தெரிய மூழ்கி நீந்தும் எருமைகளென முனகல் ஒலியோடு பின் தொடர்ந்தன. அலைகள் நெளிந்தோடின.

இவ்வாறு கடலில் புயலின் கோரத் தாண்டவத்தை வருணனைகளாலும், பதற்றமான அடுக்குத் தொடர்களாலும் அமைத்து கட்டுரையை வளப்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

2. நீங்கள் எதிர்கொண்ட இயற்கை இடர் குறித்து விவரித்து எழுதுக.
(மழை, வெள்ளம், புயல், வறட்சி)

வறட்சி:

மழைக்காலம் வந்தது; ஆனால் மழை வரவில்லை, மழைக்காலத்திலேயே மழை வரவில்லையே என எல்லோரும் கவலைப்பட ஆரம்பித்தனர்.

விதைத்த விதை என்னவாவது? வயல்களில் நட்ட பயிர்கள் எப்படி விளையும்? ஏற்கனவே நீரின்றி பயிர்கள் வாடத் தொடங்கிவிட்டதே! ஏரியிலும் நீரில்லை; கிணற்றிலும் நீரில்லை; வாய்க்காலும் வறண்டு விட்டது என பெருமூச்சு விட்டனர் மக்கள்.

இன்னும் ஒரு மாதத்திற்குள் மழை பொழியா விட்டால் குடிக்கக்கூடத் தண்ணீரின்றி எல்லோரும் அவதிப்படுவர் என்று நினைக்கும் போதே பயம் வந்து விட்டது.

இன்று மழை பெய்யும் நாளை மழை பெய்யும் என்று நாட்கள் நகர்ந்தனவே தவிர ஒன்றும் மழை வரவில்லை.

மரங்கள் காய்ந்து விறகுகளாய் மாறின. வயல்வெளிகளில் பயிர்கள் எல்லாம் சருகாய்க் காய்ந்து நைந்து போயின. வெயிலின் தாக்கத்தால் எரிந்து விடுமோ என்ற நிலை.

எங்கும் வறட்சி; மனிதர்களுக்கே குடிக்க நீரில்லாத போது ஆடுமாடுகளுக்கு யார் நீர் தருவது?

கொடுமை! வெயிலின் கொடுமை! தாங்க முடியாமல் தவித்த நான் விடியலைத் தேடி ஏங்கிக் கொண்டிருந்தேன்.

வெள்ளம்:

இந்த டிசம்பர் மாதம் எங்கள் ஊரில் மழை கொட்டோ கொட்டென்று கொட்டியது. புயலும் சேர்ந்து கொண்டு பெருங்காற்றாய் வீசியது. மழையினால் வந்த வெள்ளமும், அது கொடுத்த பெருந்துயரும் மிக அதிகம்.

ஊரில் எங்கும் தண்ணீர், தண்ணீர், தண்ணீர். ஆனால் குடிக்க தண்ணீர் கிடைக்க வில்லை. மின்சாரமும் தடைசெய்யப்பட்டு அதனாலும் ஏகப்பட்ட துயரங்கள்.

எங்கள் வீடு அடுக்குமாடிக் குடியிருப்பில் முதல் தளத்தில் இருந்தது. அதனால் பரவாயில்லை. கீழ்த்தளத்தில் இருந்தவர்களது மின்சாதனப் பொருட்கள் பல வெள்ள நீரில் பழுதுபட்டுப் போய்விட்டன.

மின்சாரம் இல்லாததால் தகவல் தொடர்பு இல்லாமல் போய்விட்டது. மேலும் இரண்டாவது நாள் முதல் உணவுக்கும் பஞ்சம் வந்து விட்டது. நாங்கள் மொட்டைமாடியில் தஞ்சம் புகுந்தோம். எங்கள் குடியிருப்பில் இருந்தவர்கள் பலரது சிநேகம் அப்போது எனக்குக் கிடைத்தது.

நல்ல வேளையாக, இரண்டாம் நாள் வெள்ளம் வடியத் தொடங்கியது. மூன்றாம் நாள் நிலைமை சீரடைந்தது.





# 5. தொகைநிலைத் தொடர்கள்

## மதிப்பீடு:

### பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. பெரிய மீசை! சிரித்தார் – வண்ணச் சொல்லுக்கான தொகையின் வகை எது?

அ) பண்புத் தொகை ஆ) உவமைத் தொகை
இ) அன்மொழித் தொகை ஈ) உம்மைத் தொகை

**விடை:** இ) அன்மொழித் தொகை

**கூடுதல் வினாக்கள்:**

2. தொகைநிலைத்தொடர் ________ வகைப்படும்.

அ) ஆறு ஆ) நான்கு இ) எட்டு ஈ) மூன்று

**விடை:** அ) ஆறு

3. காலம் கரந்த பெயரெச்சமே ________ ஆகும். PTA

அ) பொருட் பெயர் ஆ) வினைத் தொகை
இ) பண்புத் தொகை ஈ) வேற்றுமைத் தொகை

**விடை:** ஆ) வினைத்தொகை

4. 'மை' என்னும் பண்பு விகுதியைப் பெற்று வருவது ________.

அ) வினைத் தொகை ஆ) பண்புத் தொகை
இ) உவமைத் தொகை ஈ) உம்மைத் தொகை

**விடை:** ஆ) பண்புத் தொகை

5. 'தாய்சேய்' என்பதில் ________ வந்துள்ளது.

அ) உம்மைத் தொகை ஆ) உவமைத் தொகை
இ) வேற்றுமைத் தொகை ஈ) பண்புத் தொகை

**விடை:** அ) உம்மைத் தொகை

6. தமிழ்த்தொண்டு என்னும் தொடர் – PTA

அ) இருபெயரொட்டுப் பண்புத்தொகை
ஆ) அன்மொழித் தொகை
இ) உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை
ஈ) வேற்றுமைத்தொகை

**விடை:** இ) உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை

7. சிவப்புச் சட்டை பேசினார் – அடிக்கோடிட்ட சொல்லுக்கான தொகையின் வகை எது? PTA

அ) பண்புத்தொகை ஆ) உவமைத்தொகை
இ) அன்மொழித்தொகை ஈ) உம்மைத்தொகை

**விடை:** இ) அன்மொழித்தொகை

8. எழுகதிர், முத்துப்பல் – இச்சொற்களில் மறைந்துள்ள தொகைகள் முறையே – PTA

அ) வினைத்தொகை, பண்புத்தொகை ஆ) உவமைத்தொகை, வினைத்தொகை
இ) உவமைத்தொகை, வினைத்தொகை ஈ) வினைத்தொகை, உவமைத்தொகை

**விடை:** அ) வினைத்தொகை, பண்புத்தொகை

## குறுவினா

### பாடநூல் வினா:

1. தண்ணீர் குடி, தயிர்க்குடம் ஆகிய தொகைச் சொற்களை விரித்து எழுதுக. தொடரில் அமைக்க. PTA

(1) தண்ணீர் குடி – தண்ணீர் + ஐ + குடி = தண்ணீரைக் குடி.

இத்தொடரில் இரண்டாம் வேற்றுமைத் தொகை அமைந்துள்ளது.

ஆசிரியர் மாணவனிடம் தினமும் நான்கு லிட்டர் தண்ணீரைக் குடிக்கச் சொன்னார்.

(2) தயிர்க்குடம் – தயிரையுடைய குடம்

இத்தொடரில் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை உள்ளது.

பெரியம்மா தயிர்க்குடத்திலிருந்து தயிரை எடுத்துக் கொடுத்தார்கள்.

### கூடுதல் வினாக்கள்:

2. தொகை நிலைத் தொடர் என்றால் என்ன? சான்று தருக.

பெயர்ச் சொல்லோடு வினைச் சொல்லும், பெயர்ச் சொல்லும் சேரும் தொடரின் இடையில் வேற்றுமை உருபுகளோ வினை, பண்பு முதலியவற்றின் உருபுகளோ மறைந்து நின்று பொருள் தரும் தொடர் தொகை நிலைத்தொடர் எனப்படும்.

எ.கா: கரும்பு தின்றான் – கரும்பைத் தின்றான் எனப் பொருள் தருகிறது.

3. தொகை நிலைத் தொடர் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

தொகை நிலைத்தொடர் ஆறு வகைப்படும்.

1. வேற்றுமைத் தொகை
2. வினைத் தொகை
3. பண்புத் தொகை
4. உவமைத் தொகை
5. உம்மைத் தொகை
6. அன்மொழித் தொகை

4. வேற்றுமைத் தொகையைச் சான்றுடன் விவரி.

ஒரு தொடரில் வேற்றுமை உருபுகள் ஐ, ஆல், கு, இன், அது, கண் ஆகியவற்றுள் ஒன்று மறைந்து வந்து பொருள் உணர்த்துவது வேற்றுமைத்தொகை எனப்படும்.

எ.கா: மதுரை சென்றார் – மதுரைக்குச் சென்றார் எனப் பொருள் தருகிறது.

5. வினைத்தொகையைச் சான்றுடன் விவரி.

இடைநிலையும் பெயரெச்ச விகுதியும் மறைந்து நிற்க, வினைப்பகுதியைத் தொடர்ந்து ஒரு பெயர் வந்து ஒரு சொல்லைப் போல் நடப்பது வினைத்தொகை ஆகும்.

எ.கா: வீசுதென்றல் – வீசுகின்ற தென்றல், வீசிய தென்றல், வீசும் தென்றல் என முக்காலத்திற்கும் பொருந்தும்படி அமைந்துள்ளது.

6. பண்புத்தொகையைச் சான்றுடன் விவரி.

நிறம், வடிவம், சுவை, அளவு முதலானவற்றை உணர்த்தும் பண்புப்பெயருக்கும், அது தழுவி நிற்கும் பெயர்ச் சொல்லுக்கும் இடையில் 'மை' என்னும் பண்பு விகுதியும் ஆகிய ஆன என்னும் பண்பு உருபுகளும் மறைந்து வருவது பண்புத்தொகை எனப்படும்.

எ.கா: செங்காந்தள் – செம்மையாகிய காந்தள்

இன்மொழி – இனிமையான மொழி

**7. உவமைத் தொகை என்றால் என்ன? சான்று தருக.**

உவமைக்கும் பொருளுக்கும் (உவமேயம்) இடையில் உவம உருபு மறைந்து வருவது உவமைத்தொகை எனப்படும்.

எ.கா: மலர்க்கை – (மலர் போன்ற கை)

**8. உம்மைத் தொகையைச் சான்றுடன் விளக்குக.**

இரு சொற்களுக்கு இடையிலும் இறுதியிலும் 'உம்' என்னும் இடைச்சொல் மறைந்து வருவது உம்மைத்தொகை எனப்படும்.

எ.கா: அண்ணன்தம்பி – அண்ணனும் தம்பியும்

**9. அன்மொழித் தொகையைச் சான்றுடன் விளக்குக.**

வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை ஆகிய தொகைநிலைத்தொடர்கள் அவை அல்லாத வேறு சொற்கள் மறைந்து நின்று பொருள் தருவது அன்மொழித் தொகை ஆகும்.

எ.கா: முறுக்கு மீசை வந்தார். முறுக்கு மீசையை உடையவர் வந்தார் எனப் பொருள் தருகிறது.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. தோட்டத்தில் மல்லிகைப்பூ பறித்த பூங்கொடி. வரும் வழியில் ஆடுமாடுகளுக்குத் தண்ணீர்த் தொட்டியில் குடிநீர் நிரப்பினாள். வீட்டினுள் வந்தவள் சுவர்க் கடிகாரத்தில் மணி பார்த்தாள். இப்பத்தியில் தொகைச் சொற்களின் வகைகளைக் குறிப்பிட்டு விரித்து எழுதுக. PTA

பறித்த பூங்கொடி – பெயரெச்சத் தொடர் (பறித்த என்ற பெயரெச்சம் பூங்கொடி என்ற பெயருடன் வந்துள்ளது)

பூங்கொடி பறித்தாள் – அன்மொழித்தொகை (பூங்கொடியாகிய பெண்)

ஆடு மாடுகள் – உம்மைத்தொகை (ஆடுகளும், மாடுகளும் உம் மறைந்து வந்துள்ளது)

தண்ணீர்த்தொட்டி – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகை. (தண்ணீரை உடைய தொட்டி என்று விளக்கம் தருகிறது)

குடிநீர் – வினைத்தொகை, மூன்று காலங்களும் இச்சொல்லில் மறைந்து வந்துள்ளது.

மணி பார்த்தாள் – இரண்டாம் வேற்றுமைத்தொகை 'ஐ' என்னும் இரண்டாம் வேற்றுமை உருபு பயின்று வந்து மணியைப் பார்த்தாள் எனப் பொருள் தருகிறது.

## கற்பவை கற்றபின்

1. வண்ணமிட்ட தொகைச் சொற்களை வகைப்படுத்துக.

1. அன்பு செல்வன் திறன் பேசியின் தொடுதிரையில் படித்துக் கொண்டிருந்தார்.
   **விடை:** தொடு திரை – வினைத்தொகை
2. அனைவருக்கும் மோர்ப்பானையைத் திறந்து மோர் கொடுக்கவும்.
   **விடை:** மோர்பானை – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.
3. கலையரசி வீட்டில் செய்த கண் மை இட்டுக் கொண்டாள்.
   **விடை:** கண் மை – வேற்றுமைத்தொகை.
4. வெண்டைக்காய்ப் பொரியல் மோர்க்குழம்புக்குப் பொருத்தமாக இருக்கும்.
   **விடை:** மோர்க்குழம்பு – இருபெயரொட்டுப் பண்புத்தொகை.
5. தங்க மீன்கள் தண்ணீர்த் தொட்டியில் விளையாடுகின்றன.
   **விடை:** தங்க மீன்கள் – பண்புத்தொகை.

## மொழியை ஆள்வோம்

### மொழி பெயர்ப்பு

**தமிழில் மொழிபெயர்த்துத் தலைப்பிடுக.** PTA

1. The Golden sun gets up early in the morning and starts its bright rays to false away the dark. The milky clouds start their wandering. The colourful birds start twitting their morning melodies in percussion. The cute butterflies dance around the flowers. The flowers fragrance fills the breeze. The breeze gently blows everywhere and makes everything pleasant.

புலர் காலைப் பொழுது

தங்க கதிர்களைக் கொண்ட கதிரவன் காலையில் உதிக்கின்றது. தன் பொன்னிறக் கதிர்களால் இருளை விரட்டுகிறது. வெண்ணிற மேகமானது அங்குமிங்கும் நகர்கிறது. வண்ண நிறமான பறவைகள் காலையில் தன் இசைக் கீதத்தை இசைக்கின்றன. சுறுசுறுப்பான வண்ணத்துப்பூச்சிகள் மலர்களைச் சுற்றி நடனமாடுகின்றன. மலர்களின் நறுமணம் காற்றை நிரப்புகிறது. தென்றல் காற்று எங்கும் வீசி இதமான சூழலைத் தருகின்றது.

**சொற்களில் மறைந்துள்ள தொகைகளை அடையாளம் கண்டு தொடரில் அமைக்க:**

இன்சொல், எழுகதிர், கீரிபாம்பு, பூங்குழல் வந்தாள், மலை வாழ்வார், முத்துப்பல்.

| சொல் | தொகை | தொடர் |
|---|---|---|
| இன்சொல் (இனிமையான சொல்) | – பண்புத்தொகை | – இனிமையான சொல் கூடுதல் சான்றோர்க்கு அழகு. |
| எழுகதிர் | – வினைத்தொகை | – எழு கதிர் தோன்றும் அழகை வருணிக்க இயலாது. |
| கீரிபாம்பு (கீரியும் பாம்பும்) | – உம்மைத் தொகை | – ஒரு சில மனிதர்கள் கீரியும் பாம்புமாகவே வாழ்கின்றனர். |
| பூங்குழல் வந்தாள் | – அன்மொழித்தொகை | – பூங்குழல் பூரிப்போடு வந்தாள். |
| மலை வாழ்வார் (மலையின் கண்வாழ்வார்) | – ஏழாம் வேற்றுமைத் தொகை | – மலையில் வாழ்வார் மகிழ்ச்சியுடன் வாழ்வார். |
| முத்துப்பல் (முத்துப்போன்ற பல்) | – உவமைத்தொகை | – பவளவள்ளியின் முத்துப்போன்ற பற்களின் அழகே அழகு! |

**செய்திகளைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பூக்களைப் பற்றிய அரிய இலக்கியச் செய்திகள்

பூ உண்டு. ஆனால் கண்ணிற்குக் காட்சி தராமல் காண்டற்கு அரியனவாய் இருக்கும் மலர்கள். ஆல மலர். பலா மலர்.

மலர் உண்டு; பெயரும் உண்டு; ஆனால் இதுதான் அது என்று உறுதியாக அறிய இயலாதுள்ள நிலையில் இருக்கும் மலர்கள். சுள்ளி மலர், பாங்கர் மலர்.

அகவிதழ் முதலிய உறுப்புகள் இருந்து அவை புறத்தே காட்சிப்படாமல் உள்ளேயே பொதிந்திருக்கும் மலர்கள் அத்தி, ஆலம், கொழிஞ்சி, பலா.

பயன்பாடு, நாற்றம், மக்களது விருப்பில் இடம் பெறாமை, பொதுவில் ஒதுக்கப்பட்டமை கொண்டு மலரில் சில எளியவை ஆகின்றன. அவையாவன நெருஞ்சி, எருக்கு, பூளை, குரீஇப் பூளை, வேளை, ஊமத்தம். கள்ளி, முருங்கை.

இலுப்பைப் பூக்கள் இனிப்பானவை. கரடிகள் மரத்தின் மீதேறி அவற்றைப் பறித்து உண்ணும். பாதிரிப் பூ குடிநீருக்குத் தன் மணத்தை ஏற்றும், மூங்கில் பூவில் காய் தோன்றிக் கனியாகி அதிலிருந்து ஒருவகை அரிசி தோன்றும். இது மூங்கில் அரிசி எனப்படும்.

1. மலர் உண்டு; பெயரும் உண்டு – இரண்டு தொடர்களையும் ஒரு தொடராக்குக. PTA

மலரும் உண்டு அதற்கொரு பெயரும் உண்டு.

2. அரும்பாகி மொட்டாகி பூவாகி .... என்பதை ஒத்து அமைந்துள்ள தொடரைக் கண்டறிக.

மூங்கில் பூவில் காய் தோன்றிக் கனியாகி அதிலிருந்து ஒருவகை அரிசி தோன்றும்.

3. நீங்கள் அறிந்த இரு பூக்களின் பெயர்களையும் பயன்களையும் எழுதுக.

இலுப்பைப்பூக்கள் – மருத்துவ குணமுடையவை; இனிப்பானவை.

பாதிரிப் பூ – குடிநீருக்குத் தன் மணத்தை ஏற்றும். உடல் நலத்தைப் பெருக்கி குளிர்ச்சியூட்டும்.

4. அரிய மலர் – இலக்கணக்குறிப்புத் தருக.

அரிய மலர் – பண்புத் தொகை – அருமையான மலர்.

5. தொடரில் பொருந்தாப் பொருள் தரும் மயங்கொலி எழுத்துகளைத் திருத்துக. PTA

இலுப்பைப் பூக்கள் இனிப்பானவை. கரடிகள் மறத்தின் மீதேறி அவற்றைப் பரித்து உண்ணும். பாதிரிப் பூ குடிநீருக்குத் தன் மணத்தை ஏற்றும்.

மறத்தின் – மரத்தின்
பரித்து – பறித்து
மனத்தை – மணத்தை

## வாழ்த்துமடல் எழுதுக. PTA

மாநில அளவில் நடைபெற்ற "மரம் இயற்கையின் வரம்" எனும் தலைப்பிலான கட்டுரைப் போட்டியில் வெற்றி பெற்று முதல் பரிசு பெற்ற தோழனை வாழ்த்தி மடல் எழுதுக.

பாரதிநகர்.
10.06.xxxx

அன்புள்ள நண்பா அகிலா,

வணக்கம் ! நான் மற்றும் அனைவரும் நலம். உன் நலமும் உன் இல்லத்திலுள்ள அனைவரின் நலமும் அறிய ஆவல்.

உன் திறமை மென்மேலும் வளர்ந்துக் கொண்டே செல்வதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். ஏற்கனவே உன் பேச்சாற்றலால் பல பரிசுகளைக் குவித்து வைத்திருக்கிறாய்.

உன் திறமைக்கு மகுடம் சூட்டுவதைப் போல அண்மையில் நீ பெற்ற பரிசு பெருமையளிக்கிறது. இயற்கையின் மீதும், மரங்களை வளர்ப்பதிலும் உன் ஆர்வம் அலாதியானது என்பது எனக்குத் தெரியும்.

"மரம் இயற்கையின் வரம்" என்ற மாநில அளவில் நடைபெற்ற கட்டுரைப் போட்டியில் நீ மகுடம் சூட்டியுள்ளாய். என் மனதில் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. மாநில அளவில் முதல் பரிசு என்பது எளிதாகக் கிடைக்கக் கூடியதல்ல. உன் அறிவாற்றலால், பல புத்தகங்களைப் படித்து அறிந்த மெய்யறிவால் உனக்குக் கிடைத்த பரிசு இது.

தொடர்ந்து உன் திறமைகளை வளர்த்துக் கொள். போட்டிகளில் தொடர்ந்து கலந்து கொள். வெற்றி என்றும் உன்னைத் தேடி வரும்.

உன் முயற்சிக்கு என்றும் அயற்சி இல்லை. விடுமுறையில் நேரில் வந்து உனக்குப் பரிசு வழங்கி மகிழ்வேன்.

நன்றி!

இப்படிக்கு
அன்பு நண்பன்
மு.முகிலன்

உறைமேல் முகவரி
ம.அகிலன்,
த/பெ. மாணிக்கம்,
20, பாரதியார் நகர்,
ஓசூர்.

## பாரதியின் வசனநடை – சிட்டுக்குருவி

சிறியதானியம் போன்ற மூக்கு. சின்னக்கண்கள்; சின்னத்தலை; வெள்ளைக்கழுத்து; அழகிய மங்கல் வெண்மை நிறமுடைய பட்டுப்போர்த்த வயிறு; கருமையும் வெண்மையும் கலந்த சாம்பல் நிறத்தாலாகிய பட்டுப்போர்த்த முதுகு; சிறிய தோகை; துளித்துளிக் கால்கள்; இத்தனையும் சேர்த்து ஒரு பச்சைக் குழந்தையின் கைப்பிடியிலே பிடித்து விடலாம். இவ்விதமான உடலைச் சுமந்து கொண்டு என் வீட்டிலே இரண்டு உயிர்கள் வாழ்கின்றன. அவற்றில் ஒன்று; ஆண் மற்றொன்று பெண்.

**இது போன்று உங்களுக்குப் பிடித்த ஏதேனும் ஒன்றைப் பற்றி வசனநடையில் எழுதுக.**

1. சிறிய கண்கள்; கூர்மையான பார்வை; மெல்லிய கன்னங்கள்; தடவிப் பார்த்தால் மென்மை தெரிகிறது. கூர்மையான மூக்கு; அழகான காதுகள்; கைகளால் தடவிக் கொண்டே இருக்கலாம் என்ற தலைமுடிகள்; பிஞ்சு தலை; என் நெஞ்சைக் கவர்ந்த இம்முகம் தான் என் குழந்தை பவளக் கொடியின் தலை.
2. காற்றென்று சக்தியைக் கூறுகின்றோம், ஏற்றுகிற சக்தி, புடைக்கிற சக்தி, மோதுகிற சக்தி, சுழற்றுவது, ஊதுவது. சக்தியின் வடிவங்களிலே காற்றும் ஒன்று. எல்லாத் தெய்வங்களும் சக்தியின் கலைகளேயாம். சக்தியின் கலைகளையே தெய்வங்கள் என்கிறோம். காற்று சக்தி குமாரன். அவனை வழிபடுகின்றோம்.

# மொழியோடு விளையாடு

## சொல்லைக் கண்டுபிடித்துப் புதிரை விடுவிக்க: PTA

(காடு, புதுமை, விண்மீண், காற்று, நறுமணம்)

1. முதல் இரண்டை நீக்கினாலும் வாசனை தரும்; நீக்காவிட்டாலும் வாசனை தரும்.
   **விடை:** நறுமணம்.
2. பழமைக்கு எதிரானது – எழுதுகோலில் பயன்படும்.
   **விடை:** புதுமை.
3. இருக்கும் போது உருவமில்லை – இல்லாமல் உயிரினம் இல்லை.
   **விடை:** காற்று.
4. நாலெழுத்தில் கண் சிமிட்டும் – கடையிரண்டில் நீந்திச் செல்லும்.
   **விடை:** விண்மீன்.
5. ஒரெழுத்தில் சோலை – இரண்டெழுத்தில் வனம்.
   **விடை:** காடு.

## நயமிகு தொடர்களைப் படித்து ஏற்ற தலைப்புகளை எடுத்தெழுதுக:

1. கொளுத்தும் வெயில் சட்டெனத் தணிந்தது. வானம் இருண்டது. வாடைக்காற்று வீசியது.
   **விடை:** காற்றின் பாடல்.
2. புவி சிலிர்த்து, மண்ணிலிருந்து சின்னஞ்சிறு மொட்டு முகிழ்த்தது; அச்செடியை வரவேற்கும் விதமாகப் பக்கத்துச் செடிகள் தலையாட்டி மகிழ்கின்றன.
   **விடை:** மொட்டின் வருகை.
3. சோலைக்குள் சத்தமில்லாமல் வீசியது தென்றல்; பூக்கள் அதன் வருகையை உணர்ந்து நறுமணத்துடன் வரவேற்கின்றன. பூவாசம் கலந்த தென்றலில் வண்டுகள் மிதந்து சென்று மலர்களில் அமர்கின்றன.
   **விடை:** மயக்கும் மலர்வனம்
4. இரவின் இருளமைதியில் இரைச்சலாய்ச் சில சுவர்க்கோழிகள். வறண்ட வானத்தின் இருண்ட புழுக்கம்; மழைக்கு ஏங்கும் புவி வெப்பப் பெருமூச்சு விடும்; கசகசத்த உயிரினங்கள்.
   **விடை:** உயிர்ப்பின் வாசம்.

5. நின்றுவிட்ட மழை தரும் குளிர்; சொட்டுச் சொட்டாக விளிம்புகளிலிருந்தும் மரங்களிலிருந்தும் விழும் மழைநீர்பட்டுச் சிலிர்க்கும் உயிரினம்.

விடை: நீரின் சிலிர்ப்பு

6. குயில்களின் கூவலிசை, புள்ளினங்களிலும் மேய்ச்சலும், பாய்ச்சலும், இலைகளின் அசைவுகள், சூறைக்காற்றின் ஆலோலம்,

விடை: வனத்தின் நடனம்.

## அகராதியில் காண்க:

அகன்சுடர், ஆர்கலி, கட்புள், கொடுவாய், திருவில்.

விடை:

அகன்சுடர் – சூரியன், உள்ளே பரந்து விரிந்த சுடர்.
ஆர்கலி – கடல், வெள்ளம், ஆரவாரம்.
கட்புள் – பறவை
கொடுவாய் – வளைந்த வாய், புலி, குறளை கூரிய கருவி
திருவில் – வானவில், சிறப்பான வில்.

## அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக:

## ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக. PTA



விடை:

அ) காற்றே உன் அருமை தெரியவில்லை;
மூச்சுக்கு நீ முக்கியம் புரியவில்லை.
மரம் ஒன்றையும் விடாமல் நாம் அழித்தோம்;
உணர்வில்லா உயிரினம் ஆகிவிட்டோம்.
வெட்டிய மரங்களுக்கு நாம் அளித்த விலை,
தொட்டிச் செடியுடன் நடமாடும் நிலை.

ஆ) 1. மரத்தை அளித்தாய்; மானிடத்தைச் சிதைத்தாய்.
2. உயிர்க்காற்று இன்று மூச்சியில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது.
3. அன்று மரத்தைத் தனக்கென அழித்தாய்; இன்றோ செடியைத் தனக்கு மட்டும் என்று வளர்க்கிறாய்.
4. விந்தை மனிதர்களைப் பார்த்தால் வேடிக்கையாகத்தான் இருக்கும்.
5. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையுமன்றோ.

## நிற்க அதற்குத் தக

### வானொலி அறிவிப்பு.

ஜல் புயல் சென்னைக்குத் தென்கிழக்கே 150 கி.மீ தொலைவில் மையம் கொண்டுள்ளது, இன்று இரவு சென்னைக்கும் நெல்லூருக்கும் இடையே கரையைக் கடக்கும் என்று சென்னை வானிலை ஆய்வு மையம் தெரிவித்துள்ளது.

புயலின் போது

| | |
|---|---|
| புயலின் போது வெளியே செல்ல வேண்டாம். | வெளியேற நேர்ந்தால் ஆரம்பகட்ட எச்சரிக்கையின் போதே வெளியேறவும். |
| தொலைபேசி, மின்சாதனங்கள் பயன்படுத்துவதைத் தவிர்க்கவும். | மாடியில் இருப்பதைத் தவிர்த்துப் தளப் பகுதியிலேயே தங்கவும். |
| வானொலி அறிவிப்பைக் கேட்டுப் பின்பற்றவும். | காற்று அடிப்பது நின்றாலும் எதிர்த்திசையிலிருந்து மறுபடி வேகமாக வீச ஆரம்பிக்கும். எனவே முடிந்துவிட்டதாக நினைக்க வேண்டாம். |
| மீனவர்கள் கடலுக்குச் செல்வதைத் தவிர்க்கவும். | வாகனத்தை ஓட்ட நேர்ந்தால் கடற்கரைப் பகுதிகளுக்குத் தொலைவிலும், மரங்கள் மின்கம்பிப் பாதைகள் நீர் வழிகள் ஆகியவற்றிலிருந்து விலகியும் வாகனத்தின் உள்ளேயே தங்கியிருக்கவும். |

மேற்கண்ட அறிவிப்பைக் கேட்ட நீங்கள் உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் காப்பாற்றும் வகையில் செய்யும் செயல்களை வரிசைப்படுத்தி எழுதுக.

விடை:

1. வானொலி அறிவிப்பைக் கேட்டுப் பின்பற்றுவேன்.
2. புயலின் போது வெளியே செல்ல மாட்டேன்.
3. வெளியேற நேர்ந்தால் ஆரம்பகட்ட எச்சரிக்கையின் போதே வெளியேறுவேன்.
4. மாடியில் இருப்பதைத் தவிர்த்துப் தளப் பகுதியிலேயே தங்குவேன்.
5. தொலைபேசி, மின்சாதனங்கள் பயன்படுத்துவதைத் தவிர்ப்பேன்.
6. மீனவர்கள் கடலுக்குச் செல்வதைத் தவிர்க்க வேண்டுவேன்.
7. வாகனத்தை ஓட்ட நேர்ந்தால் கடற்கரைப் பகுதிகளுக்குத் தொலைவிலும், மரங்கள் மின்கம்பிப் பாதைகள் நீர் வழிகள் ஆகியவற்றிலிருந்து விலகியும் வாகனத்தின் உள்ளேயே தங்கியிருப்பேன்.
8. காற்று அடிப்பது நின்றாலும் எதிர்த்திசையிலிருந்து மறுபடி வேகமாக வீச ஆரம்பிக்கும். எனவே முடிந்துவிட்டதாக நினைக்க மாட்டேன்.

### கலைச்சொல் அறிவோம்:

Storm - புயல்
Tornado - சூறாவளி PTA
Tempest - பெருங்காற்று PTA
Land Breeze - நிலக்காற்று
Sea Breeze - கடற்காற்று
Whirlwind - சுழல்காற்று

## அலகுத் தேர்வு இயல் - 2

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** 4 × 1 = 4

1. உனக்குப் பாட்டுகள் பாடுகிறோம்.
   உனக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறோம்'
   – பாரதியின் இவ்வடிகளில் இடம்பெற்றுள்ள நயங்கள் யாவை?
   அ) உருவகம், எதுகை ஆ) மோனை, எதுகை
   இ) முரண், இயைபு ஈ) உவமை, எதுகை.

2. 'வாயு வழக்கம் அறிந்து செறிந்தடங்கில்
   ஆயுள் பெருக்கம் உண்டாம்' என்று கூறியவர் __________.
   அ) பரணர் ஆ) வெண்ணிக்குயத்தியார்
   இ) ஔவையார் ஈ) கபிலர்

3. சுவல் என்பதன் பொருள் __________.
   அ) அவல் ஆ) தோள் இ) தலை ஈ) கால்

4. பெரிய மீசை! சிரித்தார் – வண்ணச் சொல்லுக்கான தொகையின் வகை எது?
   அ) பண்புத் தொகை ஆ) உவமைத் தொகை
   இ) அன்மொழித் தொகை ஈ) உம்மைத் தொகை

**II. விடைகேற்ற வினா அமைக்க:** 1 × 1 = 1

1. காற்று தெற்கிலிருந்து வீசும் போது தென்றல் காற்று எனப்படுகிறது.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. வசன கவிதை – குறிப்பு வரைக
2. மாஅல் – பொருளும் இலக்கணக்குறிப்பும் தருக.

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி.** 2 × 3 = 6

1. சோலைக் (பூங்கா) காற்றும், மின்விசிறிக் காற்றும் பேசிக் கொள்வது போல ஓர் உரையாடல் அமைக்க.
2. இலக்கியங்களில் காற்று எவ்வாறெல்லாம் குறிப்பிடப்படுகிறது?

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** 1 × 8 = 8

1. 'காற்றே வா' கவிதையில் பாரதியார் கூறுவன யாவை?

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.** 2 × 2 = 4

1. அன்மொழித் தொகையைச் சான்றுடன் விளக்குக.
2. வேற்றுமைத் தொகையைச் சான்றுடன் விவரி.

**VII. மொழிபெயர்க்க:** 1 × 3 = 3

1. The Golden sun gets up early in the morning and starts its bright rays to false away the dark. The milky clouds start their wandering. The colourful birds start twitting their morning melodies in percussion. The cut butterflies dance around the flowers. The flowers fragrance fills the breeze. The breeze gently blow everywhere and makes everything pleasant.



இயல் - 3

உரைநடை

பண்பாடு - கூட்டாஞ்சோறு

# 1. விருந்து போற்றுதும்



## பலவுள் தெரிக

### பாடநூல் வினாக்கள்:

1. பின்வருவனவற்றுள் முறையான தொடர் **PTA**

அ) தமிழர் பண்பாட்டில் தனித்த வாழை இலைக்கு இடமுண்டு.
ஆ) தமிழர் வாழை இலைக்குப் பண்பாட்டில் தனித்த இடமுண்டு.
இ) தமிழர் பண்பாட்டில் வாழை இலைக்குத் தனித்த இடமுண்டு.
ஈ) தமிழர் வாழை பண்பாட்டில் தனித்த இலைக்கு இடமுண்டு.

விடை : இ) தமிழர் பண்பாட்டில் வாழை இலைக்குத் தனித்த இடமுண்டு.

2. ''விருந்தினரைப் பேணுவதற்குப் பொருள் தேவைப்பட்டதால், தன் கருங்கோட்டுச் சீறியாழைப் பணையம் வைத்து விருந்தளித்தான் என்கிறது புறநானூறு''. இச்செய்தி உணர்த்தும் விருந்து போற்றிய நிலை

அ) நிலத்திற்கேற்ற விருந்து ஆ) இன்மையிலும் விருந்து
இ) அல்லிலும் விருந்து ஈ) உற்றாரின் விருந்து

விடை : ஆ) இன்மையிலும் விருந்து

### கூடுதல் வினாக்கள்:

3. ''விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண
மேன்மேலும் முகமலரும் மேலோர் போல'' என்று விருந்தைப் போற்றிப் பாடும் நூல்_______.

அ) புறநானூறு ஆ) கலிங்கத்துப்பரணி
இ) திருக்குறள் ஈ) பொருநராற்றுப்படை

விடை : ஆ) கலிங்கத்துப்பரணி

4. ''மருந்தே ஆயினும் விருந்தொடு உண்'' என்று கூறும் நூல்______. **PTA**

அ) கொன்றை வேந்தன் ஆ) நற்றிணை
இ) சிறுபாணாற்றுப்படை ஈ) புறநானூறு

விடை : அ) கொன்றை வேந்தன்

5. நான்கு குதிரைகள் பூட்டப்பட்ட தேர்வரை ஏழு அடி நடந்து சென்று விருந்தினரை வழியனுப்பியதைக் கூறும் நூல்________.

அ) சிலப்பதிகாரம் ஆ) பொருநராற்றுப்படை
இ) குறுந்தொகை ஈ) பெரியபுராணம்

விடை : ஆ) பொருநராற்றுப்படை

6. ‘‘அமிழ்தமே கிடைத்தாலும் தாமே உண்ணாது பிறருக்கும் கொடுப்பர் நல்லோர். இதனால் தான் உலகம் நிலைத்திருக்கிறது’’ என்று கூறும் நூல்________.

அ) மணிமேகலை ஆ) கலித்தொகை
இ) பரிபாடல் ஈ) புறநானூறு

விடை : ஈ) புறநானூறு

7. ‘‘அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்’’ என்ற அடிகள் இடம் பெற்ற நூல்

அ) அகநானூறு ஆ) நற்றிணை
இ) ஐங்குறுநூறு ஈ) பதிற்றுப்பத்து

விடை : ஆ) நற்றிணை

8. விடுபட்ட உணவு வகைகளை வரிசைப்படுத்துக. PTA

பச்சரியைக் கொண்டு________செய்து பாசிப்பருப்பினை வறுத்து________பிடித்து கேரட்டைத் துருவி நெய்யிட்டு ________ செய்து முடித்த அம்மா, இறுதியாக உருளைக்கிழங்கைச் சீவி ________ செய்து அனைவரையும் உணவு உண்ண அழைத்தார்.

அ) பொங்கல்,உருண்டை,சீவல்,அல்வா
ஆ) சீவல்,உருண்டை,அல்வா,சீவல்
இ) பொங்கல்,உருண்டை,அல்வா,சீவல்
ஈ) உருண்டை,சீவல்,அல்வா,பொங்கல்

விடை : இ) பொங்கல்,உருண்டை,அல்வா,சீவல்

9. ‘‘காலின் ஏழடிப்பின் சென்று’’ என்னும் பொருநராற்றுப்படை உணர்த்தும் செய்தி– PTA

அ) விருந்தினரின் காலைத்தொட்டு வணங்கினர்.
ஆ) விருந்தினரை ஏழு அடி வரை நடந்து சென்று வழியனுப்பினர்.
இ) எழுவர் விருந்தினரின் பின் சென்று வழியனுப்பினர்.
ஈ) ஏழுநாள்கள் விருந்தளித்துப் பின் விருந்தினரை வழியனுப்புவர்.

விடை : ஆ) விருந்தினரை ஏழு அடி வரை நடந்து சென்று வழியனுப்பினர்.

## விடைக்கேற்ற வினா அமைக்க

**கூடுதல் வினாக்கள்:**

1. வீட்டுக்கு வரும் விருந்தினருக்கு உண்ண உணவு கொடுத்து வரவேற்பது விருந்தோம்பல்.
விடை : விருந்தோம்பல் என்பது யாது?

2. விருந்தினரைப் போற்றுதல் இல்லறக் கடமையாக இருந்தது.
விடை : இல்லறக் கடமையாக இருந்தது எது?

3. விருந்தினரைப் போற்றிப் பேணல் பழந்தமிழர் மரபாக இருந்தது.
விடை : பழந்தமிழர் மரபு யாது?

4. தனித்து உண்ணாமை என்பது தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை.
விடை : தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை எது?

5. மருந்தே ஆயினும் விருந்தொடு உண் என்கிறார் ஔவையார்.
விடை : மருந்தே ஆயினும் விருந்தொடு உண் என்று கூறியவர் யார்?

6. தமிழர் வாழை இலையின் பயன்களை அன்றே அறிந்திருந்தனர்.
விடை : வாழை இலையின் பயன்களை அன்றே அறிந்திருந்தவர் யார்?

7. விருந்து புறப்பது குறைந்ததால் சத்திரங்கள் பெருகின.
விடை : சத்திரங்கள் பெருகக் காரணம் என்ன?

8. நாயக்கர், மராட்டியர் ஆட்சிக் காலங்களில் மிகுதியான சத்திரங்கள் வழிச் செல்வோர்காகக் கட்டப்பட்டன. PTA
விடை : வழிச் செல்வோர்களுக்காக சத்திரங்கள் யார் யார் காலத்தில் கட்டப்பட்டன?

9. அமெரிக்காவின் மினசோட்டா தமிழ்ச்சங்கம் 'வாழை இலை விருந்து விழாவை' ஆண்டுதோறும் கொண்டாடி வருகிறது.
விடை : அமெரிக்காவின் மினசோட்டா தமிழ்ச்சங்கம் ஆண்டுதோறும் கொண்டாடும் விழா எது?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

**கூடுதல் வினாக்கள்:**

1. விருந்தினரை போற்றி பேணல் பழந்தமிழர் மரபு.
விடை : விருந்தினரைப் போற்றிப் பேணல் பழந்தமிழர் மரபு.

2. விருந்தினரை போற்றுதல் இல்லற கடமையாக இருந்தது.
விடை : விருந்தினரைப் போற்றுதல் இல்லறக் கடமையாக இருந்தது.

3. கோவலனை பிரிந்த கண்ணகி விருந்தினரை போற்ற முடியாத நிலைக்கு வருந்தினாள்.
விடை : கோவலனைப் பிரிந்த கண்ணகி விருந்தினரைப் போற்ற முடியாத நிலைக்கு வருந்தினாள்.

4. மிகுதியான சத்திரங்கள் வழி செல்வோர்க்காக கட்டப்பட்டன.
விடை : மிகுதியான சத்திரங்கள் வழிச் செல்வோர்க்காகக் கட்டப்பட்டன.

5. பண்டை தமிழர் இல்லங்களில் உயரிய தமிழ் பண்பாடு இருந்தது.
விடை : பண்டைத் தமிழர் இல்லங்களில் உயரிய தமிழ்ப் பண்பாடு இருந்தது.

## நிறுத்தற் குறியிடுக

1. விருந்தே புதுமை என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்
விடை : ''விருந்தே புதுமை'' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

2. திருமணத்தை உறுதி செய்தல் திருமணம் வளைகாப்பு பிறந்தநாள் புதுமனை புகுவிழாக்களை விருந்தோடு கொண்டாடினர்
விடை : திருமணத்தை உறுதி செய்தல், திருமணம், வளைகாப்பு, பிறந்தநாள், புதுமனை புகுவிழாக்களை விருந்தோடு கொண்டாடினர்.

3. மருந்தே ஆயினும் விருந்தொடு உண் என்கிறார் ஔவையார்
விடை : ''மருந்தே ஆயினும் விருந்தொடு உண்'' என்கிறார் ஔவையார்.

4. இன்று வீட்டுக்குத் திண்ணை வைத்துக் கட்டுவதுமில்லை அறிமுகமில்லாத புதியவர்களை விருந்தினராக ஏற்பதுவுமில்லை
விடை : இன்று வீட்டுக்குத் திண்ணை வைத்துக் கட்டுவதுமில்லை; அறிமுகமில்லாத புதியவர்களை விருந்தினராக ஏற்பதுவுமில்லை.

5. வாயிலை இரவில் மூடுவதற்கு முன்னர் உணவு உண்ண வேண்டியவர்கள் யாரேனும் உள்ளீர்களா என்று கேட்கும் வழக்கம் இருந்தது.
விடை : வாயிலை இரவில் மூடுவதற்கு முன்னர், ''உணவு உண்ண வேண்டியவர்கள் யாரேனும் உள்ளீர்களா?'' என்று கேட்கும் வழக்கம் இருந்தது.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

தம் வீட்டிற்கு வரும் விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்று உண்ண உணவும் இருக்க இடமும் கொடுத்து அன்பு பாராட்டுவதே விருந்தோம்பல். விருந்தினர் என்றால் உறவினர் என்று இக்காலத்தினர் கருதுகின்றனர். உறவினர் வேறு, விருந்தினர் வேறு முன்பின் அறியாத புதியவர்களுக்கே விருந்தினர் என்று பெயர். அதனால்தான் 'விருந்தே புதுமை' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

1. விருந்தினர் என்போர் யாவர்?

   முன்பின் அறியாத புதியவர்களே விருந்தினர் என்பர்.

2. விருந்து குறித்துத் தொல்காப்பியல் கூறியது யாது?

   'விருந்தே புதுமை' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்.

3. இவ்வுரைப்பத்திக்குப் பொருத்தமான தலைப்பு ஒன்று தருக.

   தலைப்பு – விருந்தோம்பல்

**படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.**



1. இயற்கை தந்த உணவை இயற்கையோடு உண்டனர் நம் முன்னோர்கள்.
2. விருந்தோம்பல் என்பது பண்டைத் தமிழரின் வாழ்வியல் நிகழ்வாகும்.
3. உணவு ஆக்கலையும் அளித்தலையும் மனமுவந்து செய்தனர்.
4. ஓவியங்களும் பண்டைய வரலாற்றின் காலக் கண்ணாடிகள்.
5. விருந்தினர்களை உபசரிப்பது என்பதைப் பெரும்பேறாகக் கருதினர் தமிழர்கள்.

## குறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. தானியம் ஏதும் இல்லாத நிலையில் விதைக்காக வைத்திருந்த தினையை உரலில் இட்டுக் குற்றியெடுத்து விருந்தினருக்கு விருந்தளித்தாள் தலைவி என்பது இலக்கியச் செய்தி. விருந்தோம்பலுக்கு செல்வம் மட்டுமே இன்றியமையாத ஒன்றா? உங்கள் கருத்தைக் குறிப்பிடுக.
   - விருந்தோம்பலுக்குச் செல்வம் மட்டுமே இன்றியமையாத ஒன்று இல்லை. பண்டிகைகளுக்கு மட்டும் என்றில்லாமல் உறவுகளை பலப்படுத்தும் விதமாக உறவினர்களையும், நண்பர்களையும் விருந்துக்கு அழைக்கலாம்.
   - பணம் இல்லாவிட்டாலும் நம்மால் இயன்ற முறையில், நம்முடைய வசதி வாய்ப்புக்கு ஏற்ற வகையில் விருந்தினரை மகிழ்ச்சிப்படுத்தலாம்.

**கூடுதல் வினாக்கள்:**

2. விருந்தோம்பல் குறித்து வள்ளுவர் கூறும் கருத்துகள் யாவை?

- இல்வாழ்க்கை நடத்துவது எல்லாம், தன்னிடத்து வந்த விருந்தினரை உபசரிப்பதே.
- அனிச்ச மலர் முகர்ந்து பார்த்தாலே வாடிவிடும். அதுபோல விருந்தினரோ முகம் வேறுபட்டு நோக்க வாடிவிடுவர்.

''இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு'' 81

மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து 90

3. சிலப்பதிகாரம் உணர்த்தும் விருந்தோம்பல் குறித்து எழுதுக:

கோவலனைப் பிரிந்து வாழும் கண்ணகி கோவலனைப் பிரிந்ததை விட விருந்தினரைப் போற்ற முடியாத நிலையை எண்ணியே வருந்துவதாக சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். இல்லறக் கடமைகளில் விருந்தோம்பும் பண்பு உயர்வானது என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது.

"துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை".

4. கம்பரும், செயங்கொண்டாரும் விருந்து பற்றிக் கூறும் கருத்துகள் யாவை?

- "கல்வியும், செல்வமும் பெற்ற பெண்கள் விருந்தும் ஈகையும்" செய்வதாகக் கம்பரும்
- "வந்த விருந்தினர்களும், வறியவர்களும் அருகருகே அமர்ந்து உண்டதனைக் கண்டு முகமலர்ச்சி அடையும் தேவர்கள்" என்று செயங்கொண்டாரும் விருந்தோம்பலைப் புகழ்ந்துள்ளனர்.

''பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே'' – கம்பராமாயணம்

''விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண
மேன்மேலும் முகமலரும் மேலோர் போல – கலிங்கத்துப்பரணி

5. தனித்து உண்ணாமை குறித்து கூறுக.

தனித்து உண்ணாமை என்பது தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை. அமிழ்தமே கிடைத்தாலும் தாமே உண்ணாது பிறருக்கும் கொடுப்பர் நல்லோர்; அத்தகையோரால் தான் உலகம் நிலைபெற்று வாழ்கிறது என்கிறது புறநானூறு.

''உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே..... – புறநானூறு

6. நற்றிணை நூலில் விருந்தோம்பும் பண்பு குறித்த கருத்து யாது?

நடு இரவில் விருந்தினர் வந்தாலும் மகிழ்ந்து வரவேற்று உணவிடும் நல்லியல்பு குடும்பத் தலைவிக்கு உண்டு என்பதை நற்றிணை நூல் எடுத்தியம்புகிறது.

''அல்லல் ஆயினும் விருந்துவரின் உவக்கும்''

7. நிலத்திற்கேற்ற விருந்து பற்றி எழுதுக.

- தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்திற்கேற்ப தங்கள் நிலத்தில் விளைந்ததையும் தொழில் சார்ந்த பொருள்களையும் விருந்துண்ண அமைத்தனர் என்பது சங்க இலக்கியங்கள் வாயிலாக தெரிகிறது.

- நெய்தல் நிலத்தவர் பாணர்களை வரவேற்றுக் குழல்மீன் கறியும் பிறவும் கொடுத்தனர் என்கிறது சிறுபாணாற்றுப்படை.

  'தளைபவிழ் தெரியற் றகையோற் பாடி
  யறற்குழற் பாணி தூங்கி யவரொடு
  வறற்குழற் சூட்டின் வயின்வயிற் பெறுகுவீர்'

8. விருந்தினை எதிர்கொள்ளும் தன்மை குறித்துக் கூறுக.

- வீட்டில் பலரும் நுழையும் அளவிற்கு உள்ள பெரிய வாயிலை இரவில் மூடுவதற்கு முன்னர், 'உணவு உண்ண வேண்டியவர்கள் யாரேனும் உள்ளீர்களா?' என்று கேட்கும் வழக்கம் இருந்தது என்பதனை குறுந்தொகை விளக்குகிறது.
- ''மருந்தே ஆயினும் விருந்தொடு உண்'' என்று கொன்றை வேந்தனில் ஔவையார் பாடியுள்ளதன் மூலம் விருந்தினை எதிர்கொள்ளும் தன்மை புலப்படுகிறது.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. ● புதியதாக வருவோர் இரவில் தங்குவதற்கு வீட்டின் முன்புறம் திண்ணையும் அதில் தலை வைக்கத் திண்டும் அமைத்தனர்.
   ● திருவிழாக் காலங்களில் ஊருக்கு வரும் புதியவர்களையும் அழைத்து அன்போடு விருந்தளிப்பதைச் சில இடங்களில் காண முடிகிறது.

   இப்படியாக கால மாற்றம், தமிழர் விருந்தோம்பலில் ஏற்படுத்திய மாற்றங்கள் குறித்த கருத்துகளை எழுதுக. PTA

- திருமணம், வளைகாப்பு, பிறந்தநாள், புதுமனை புகுவிழா, காதணிவிழா, பூப்பெய்தும் விழா போன்றவற்றை இல்ல விழாக்களாகவே கொண்டாடினர் தமிழர்.
- இல்ல விழாக்களில் மிகுதியான விருந்தினர்களை வரவேற்று உணவளித்து மகிழ்ந்தனர்.
- இல்ல விழா நடைபெறும் நாள்களில் அப்பகுதி வாழ் மக்களும் வெளியூர் விருந்தினர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தனர்.
- தற்போது வீட்டில் நடைபெற்றுக் கொண்டிருந்த சிறு விழாக்கள் கூட திருமண மண்டபங்களுக்கும், உணவகங்களுக்கும் இடம் பெயர்ந்துவிட்டன.
- பண்பாட்டு மாற்றமாக இன்று சில இடங்களில் விருந்தினர்களை வரவேற்பது முதல் பந்தியில் உபசரித்து வழியனுப்புவது வரை திருமண ஏற்பாட்டாளர்களே செய்யும் விருந்தோம்பலே நடைபெறுகிறது.
- முன்பு திருமண விழாக்களில் உணவு பரிமாறும் போதும் விருந்தினர்கள் உண்ணும் போதும் இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள் என்று உறவுகள் சொல்லும் காலம் மலையேறிவிட்டது.
- ஒரு வாழை இலை சாப்பாட்டிற்கு இவ்வளவு கட்டணம் என்று இருக்கக் கூடிய காலகட்டம் தற்போது நிலவுகிறது.
- விருந்து அருகிப் போனதற்கு சுயநலமும், குறுகிய மனப்பான்மை பெருகியதும், நகர்ப்புறம் நோக்கி மக்கள் இடம் பெயர்ந்ததும் காரணமாக அமைகின்றன.

## கூடுதல் வினாக்கள்:

2. இன்மையிலும் விருந்தோம்பல் குறித்து எழுதுக.

- வீட்டிற்கு வந்தவருக்கு வறிய நிலையிலும் எவ்வழியிலாவது முயன்று விருந்தளித்து மகிழ்ந்தனர் நம் முன்னோர். தானியம் ஏதும் இல்லாத நிலையில் கூட விதைப்பதற்காக வைத்திருந்த தினையை உரலில் இட்டுக் குத்தியெடுத்து விருந்தினருக்கு விருந்தளித்தாள் தலைவி.

  குரல்உணங்கு விதைத் தினை உரல்வாய்ப் பெய்து

  சிறிது புறப்பட்டன்றோ இலள் – புறநானூறு

- நேற்று வந்த விருந்தினரைப் பேண பொருள் தேவைப்பட்டதால் இரும்பினால் செய்த பழைய வாளை அடகு வைத்தான் தலைவன். இன்றும் விருந்தினர் வந்ததால் தன் கருங்கோட்டுச் சீறியாழைப் பணையம் வைத்து விருந்தளித்தான் என்று கூறுகிறது புறநானூறு.

- இளையான்குடி மாறநாயனாரின் வீட்டுக்கு வந்த சிவனடியார்க்கு விருந்தளிக்க மாறநாயனாரிடம் தானியமில்லை. எனவே அன்று கழனியில் விதைத்துவிட்டு வந்த நெல்லை அரித்து வந்து பின் சமைத்து விருந்து படைத்த திறம் பெரியபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.

3. தமிழர் பண்பாட்டில் விருந்தோம்பலில் வாழை இலை பயன்பாடு குறித்து எழுதுக. PTA

தமிழர் பண்பாட்டில் வாழை இலைக்குத் தனித்த இடமுண்டு. தலைவாழை இலையில் விருந்தினருக்கு உணவளிப்பது நம் மரபாகக் கருதப்படுகிறது. நம் மக்கள் வாழை இலையின் மருத்துவப் பயன்களை அறிந்திருந்தனர்.

தமிழர்கள் உணவு பரிமாறும் முறையை நன்கு அறிந்திருந்தனர். உண்பவரின் இடப்பக்கம் வாழை இலையில் குறுகலான பகுதியும், வலப்பக்கம் இலையில் விரிந்த பகுதியும் வரவேண்டும். இலையின் இடது ஓரத்தில் உப்பு, ஊறுகாய், இனிப்பு முதலான அளவில் சிறிய உணவு வகைகளையும் வலது ஓரத்தில் காய்கறி, கீரை, கூட்டு முதலான அளவில் பெரிய உணவு வகைகளையும் நடுவில் சோறும் வைத்து எடுத்துண்ண வசதியாகப் பரிமாறுவர்.

அமெரிக்காவின் மினசோட்டா தமிழ்ச்சங்கம் ''வாழையிலை விருந்து விழா''வை தமிழரின் பாரம்பரிய உணவு வகைகளைக் கொண்டு விருந்து வைக்கின்றனர். முருங்கைக்காய் சாம்பார், மோர்க்குழம்பு, வேப்பம்பூ ரசம், வெண்டைக்காய்க் கூட்டு, தினைப் பாயாசம், அப்பளம் எனச் சுவையாகத் தமிழர் விருந்து கொடுக்கின்றனர்.

# நெடுவினா

## பாடநூல் வினா:

1. உங்கள் இல்லத்துக்கு வந்த உறவினருக்கு நீங்கள் செய்த விருந்தோம்பலை அழகுற விவரித்து எழுதுக.

எம் இல்லத்துக்கு வந்த மாமாவையும் அவரது குடும்பத்தையும் வரவேற்ற விதத்தையும் விருந்தோம்பிய விதத்தையும் எழுதுகிறேன்.

நெல்லை விரைவு தொடர்வண்டியில் எங்களின் மாமா குடும்பத்தார் கடந்த வாரம் வெள்ளியன்று வீட்டிற்கு வந்தனர். அத்தை, மாமாவின் மகன்களை வாங்க வாங்க என்று வணக்கம் கூறி வரவேற்றோம்.

''வாழை இலையின் அடி உண்பார் வலப்புறத்தில்
வீழ விரித்துக் கறிவகைகள் – சூழ வைத்துத்
தண்ணீர் வெந்நீரைத் தனித்தனியே செம்பிலிட்டு
வெண்சோ றிடுமுன் மிக இனிக்கும் – பண்ணியமும்
முக்கனியும் தேனில் நறுநெய்யில் மூழ்குவித்தே
ஒக்கநின்றே உண்டபின் – பால் சோறிட்டுத் தக்கபடி
கேட்டும் குறிப்பறிந்தும் கெஞ்சியும் மிஞ்சிமன்பால்
ஊட்டுதல் வேண்டும்''

என்ற பாரதிதாசனின் கூற்றுப்படி தலைவாழை இலையில் மாமா குடும்பத்தார்க்கு விருந்தளித்தோம். விருந்துண்டு முடித்த பின் வெற்றிலையுடன் சுண்ணாம்பும் தந்தோம்.

என்னுடைய மாமா குடும்பத்தினரை குற்றாலம் அழைத்துச் சென்று ஆனந்தமாகக் குளித்தோம். பின்பு திருக்குற்றாலநாதர் சுவாமி கோயிலுக்குச் சென்று தரிசனம் முடித்து மாலையில் வீட்டிற்கு வந்தவுடன் சூடான இட்லியுடன் சாம்பார், சட்னி, புதினா துவையலுடன் விருந்து வைத்தோம். பின்பு மலை வாழைப்பழங்கள் சாப்பிட்டு ஊர்க்கதைகள் பேசி மகிழ்ந்தோம். இரவில் தூங்கும் முன் வார்த்தை விளையாட்டு மற்றும் விரல் சுண்டாட்டம் விளையாடி மகிழ்ந்தோம்.

மறுநாள் காலையில் சூடான புதினா கலந்த தேநீர் பருகினோம். காலையில் காலாற நடந்து வந்தபின் குளித்துவிட்டு தினைப்பொங்கலும், ரவை கேசரியும் சாப்பிட்டு பாபநாசம், காரையார், மணிமுத்தாறுக்கு சுற்றிப் பார்க்க சென்றோம். தக்காளிச் சோறும், சப்பாத்தி குருமாவும், புளியோதரையும் கொண்டு வட்டமாக உணவருந்தி மகிழ்ந்தோம்.

### கூடுதல் வினா:

1. தமிழரின் விருந்தோம்பல் பண்பினை நும்பாடத்தின் வழியாக விளக்கிக் கூறுக.

**முன்னுரை:**

தமிழ் பண்பாட்டில் மகிழ்வோ துக்கமோ, எந்த நிகழ்வானாலும் இறுதியில் உணவுப் பரிமாற்றத்தோடு தான் நிறைவை எய்துகின்றது. அத்தகைய விருந்தோம்பலைப் பற்றி நாம் இங்கு காண்போம்.

**விருந்தோம்பல்:**

தம் வீட்டிக்கு வரும் விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்று, உண்ண உணவும் இருக்க இடமும் கொடுத்து அன்பு பாராட்டுவதே விருந்தோம்பல் ஆகும். விருந்தோம்பல் என்பது தமிழர்களின் சிறந்த பண்புகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.

**சங்ககாலம் முதல்:**

கல்வியும் செல்வமும் பெற்ற பெண்கள், விருந்தும் ஈகையும் செய்வதாகக் கம்பரும், விருந்தினர்க்கு உணவிடுவோரின் முகமலர்ச்சியை செயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில் உவமையாக்கியும் விளக்கியுள்ளனர்.

**தனித்து உண்ணார்:**

தனித்து உண்ணாமை என்பது தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை. அமிழ்தமே ஆனாலும் தாமே உண்ணாது பிறருக்குக் கொடுத்து வாழ்வோரால் தான் உலகம் நிலைத்திருக்கிறது என்று புறநானூறு கூறுகிறது.

**இன்மையிலும் விருந்தோம்பல்:**

தானியம் ஏதும் இல்லாத நிலையிலும் விதைக்காக வைத்திருந்த தினையை உரலில் இட்டுக் குத்தியெடுத்து விருந்தினருக்கு விருந்தளித்தாள் தலைவி எனப் புறநானூறு கூறுகிறது. அன்று விதைத்து விட்டு வந்த நெல்லை அரித்து வந்து, அவற்றைச் சமைத்து தன் வீட்டிற்கு வந்த சிவனடியாருக்கு இளையான்குடி மாறநாயனார் விருந்து படைத்ததை பெரியபுராணம் கூறுகிறது.

**வாழையிலையில் விருந்து:**

தலை வாழையிலையில் விருந்தினருக்கு உணவளிப்பது தமிழர்களின் தனிச்சிறப்பாகும். மருத்துவ குணமுள்ள வாழையிலையில் இடது ஓரத்தில் உப்பு, ஊறுகாய், இனிப்பு முதலியவும்; வலது ஓரத்தில் காய்கறி, கீரை, கூட்டு என்பனவும்: நடுவில் சோறும் வைத்து வலதுகைப் பழக்கமுள்ள தமிழர்கள் எடுத்துண்ண வசதியாகப் பரிமாறி மகிழ்பவர்கள் தமிழர்கள்.

**முடிவுரை:**

கால மாற்றத்தால் வீட்டில் நடைபெற்ற விழாக்களும் விருந்துகளும், உணவகங்களுக்கும் திருமண மண்டபங்களுக்கும் மாறிவிட்டன. பண்டைத் தமிழர் இல்லங்களிலும் உள்ளங்களிலும் விருந்தோம்பல் பண்பாடு செழித்திருந்தது. அந்த உயரிய தமிழ்ப் பண்பாடு இன்று குறைந்து காணப்பட்டாலும் காலந்தோறும் தமிழர்களின் அடையாளமாக விளங்கும் உயர் பண்பான விருந்தோம்பலை போற்றிப் பெருமிதம் கொள்வோம்.

## கற்பவை கற்றபின்

1. வீட்டில் திண்ணை அமைத்த காரணம், விருந்தினர் பேணுதல், தமிழர் பண்பாட்டில் ஈகை, பசித்தவருக்கு உணவிடல் – இதுபோன்ற செயல்கள் குறித்து உங்கள் வீட்டிலுள்ளவர்களிடம் கேட்டுத் தெரிந்து வந்து கலந்துரையாடல் செய்க. PTA

ஓவியா : நாங்கள் கடந்த வாரம் எங்கள் தாத்தா ஊருக்குச் சென்றிருந்தோம்.

கமலன் : எந்த ஊருக்குச் சென்றிருந்தீர்கள்?

ஓவியா : தென்காசிக்குப் பக்கத்தில் உள்ள சுந்தரபாண்டியபுரம் என்ற அழகிய வயல் சூழ்ந்த, மேற்குத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் அமைந்த ஊருக்குச் சென்றோம்.

சூர்யா : அங்கு என்ன சிறப்பு?

ஓவியா : அங்கு எல்லா வீடுகளிலும் வாசலில் திண்ணை அமைத்துள்ளார்கள். மாலை வேளைகளில் வயதானவர்கள் ஒன்றாகக் கூடி உலக நடப்பு, அரசியல், சமுதாயம் பற்றிய செய்திகளைப் பேசுகிறார்கள்.

கமலன் : வீண் அரட்டை என்று சொல்.

ஓவியா : அப்படி இல்லை. ஒரு காலத்தில் வீட்டுக்கு புதியதாக வருபவர்கள், திருச்செந்தூர் கோவிலுக்கு பாதயாத்திரை செல்பவர்கள் படுத்துறங்குவதற்கு வசதியாக திண்டு வைத்து கட்டியுள்ளனர்.

கமலன் : பாதயாத்திரை செல்லும் பக்தர்களுக்கு ஏதாவது கொடுப்பார்களா?

ஓவியா : பக்தர்கள் காலையில் நீராடி வந்தவுடன் இட்லி, பொங்கல், சாம்பார், சட்னி, வடை, தண்ணீர் போன்றவைகள் கொடுப்பார்கள். பல வீடுகளில் பக்தர்களுக்கு கருப்பட்டி, பானக்காரம் வழங்கி பாதயாத்திரையில் கொண்டு செல்லவும் அறிவுறுத்துவார்கள்.

சூர்யா : உங்களை தாத்தா வீட்டில் நன்கு கவனித்தார்களா?

ஓவியா : மிகச் சிறப்பாகக் கவனித்தார்கள். குதிரைவாலிச்சோறு, கம்பங்கூழ், கேழ்வரகு, தினைப்பொங்கல், சம்பா அரிசி சாதம் என்று நாங்கள் சுவைக்காத உணவுகளும் விவிக்கா, கலகலா போன்ற இனிப்பு பண்டங்களும் கிடைத்தன. நன்றாக உபசரித்தார்கள். பாலருவி, கும்பாவுருட்டி அருவி என்று பல அருவிகளுக்கும் அழைத்துச் சென்றார்கள். செங்கோட்டையில் இருந்து பாலருவிக்கு தொடர்வண்டிப் பயணத்தில் மலையைக் குடைந்து போடப்பட்ட குகைக்குள் சென்றது சிறப்பாய் இருந்தது.

2. இட்ட தோர் தாமரைப்பூ
இதழ்விரித் திருத்தல் போலே
வட்டமாய்ப் புறாக்கள்கூடி
இரையுண்ணும்... (பாரதிதாசனார்)
இவ்வாறாகக் கவிதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ள பகிர்ந்துண்ணல் குறித்து பேசுக.

1. தன்னினத்தைக்
கூவியழைக்கும்
காகம் போலிரு..
விருந்தோம்பலில்
எள்ளென்றாலும்
எட்டாகப் பகிர்ந்து உண்

2. வந்தாரை வாழவைக்கும் கலாச்சாரம் நமதே
வீட்டிற்கு வருவோரை வயிறு நிறைத்தே அனுப்பும்
எதிரியாய் இருந்தாலும் எழுந்து நின்று பரிமாறச் சொல்லும்
அறுசுவை உணவோடு அமுதவார்த்தை கூறச் சொல்லும்

3. ஒப்புடன் முகம் மலர்ந்தே உபசரித்து உண்மை பேசி
உப்பிலாக் கூழ் இட்டாலும் உண்பதே அமிர்தம் ஆகும்
முப்பழமொடு பால் அன்னம் முகம் கடுத்து இடுவாராயின்
கப்பிய பசியி னோடு கடும்பசி ஆகும் தானே.

– விவேக சிந்தாமணி

உழைத்துப் பகிர்ந்து உண்ணுதல் இயல்பான ஒன்றாகவே நமக்கு இருந்திருக்கிறது. அடுத்தவர் பசியைக் கண்டு கலங்கி அவர் பசியைப் போக்க அக்கறையோடு முனைவதைவிட உயர்ந்த மனிதநேயச் செயல் இந்த உலகில் இல்லை. பகிர்ந்து உண்ணும் பழக்கத்தை அனைவரும் ஏற்படுத்திக் கொண்டால் பசியின் கொடுமையை இங்கு பாதியாய்க் குறைக்கலாம். உணவு என்பது நாம் நுகர்வதற்கு அன்று. அடுத்தவருடன் பகிர்வதற்கு என்னும் ஈரமான இதயம் கொண்டவர் இறையன்பில் செழித்திருப்பார். ஏழைகளின் எளிய உணவாக இருந்தாலும் செல்வந்தர்களின் ஆடம்பர உணவாக இருந்தாலும் அது அடுத்தவருக்குப் பகிர்ந்து அளிக்கும்போது தான் சுவையாக மாறும்; உணவுப் பகிர்வு என்பதே உணவை இனிப்பாக்கும் நடவடிக்கையாகும்.

''பகிர்ந்து உண்டால் கூழும் இனிக்கும்
தனியே உண்டால் விருந்தும் கசக்கும்''

உண்ணுதல் என்பது தனித்த செயலாக இல்லாமல் கூட்டுச் செயல்பாடாக திகழ வேண்டும். அடுத்தவர் கொடுத்தால் உண்ணாதே என்று பெரியவர்கள் குழந்தைகளுக்குத் தரும் அறிவுரை மீறப்பட வேண்டும். மாணவர்கள் தம்மோடு கலந்து மனம்விட்டு பேசுகின்ற நிலை உருவாக வேண்டும். வெறும் மதிப்பெண் மட்டுமே வாழ்க்கையாகி விடாது என்பதனை உணரச் செய்ய வேண்டும்.

''தானாய்த் தின்று வீணாய் போகாதே''

இப்போது சிலர் தனித்து உணவை மூடி வைத்துக் கொண்டு உண்கின்றனர். இது இழிவிலும் இழிவு. பகிர்ந்து உண்பதால் மகிழ்ச்சியும், மனநிறைவும் ஏற்படும். பசியும் ஆறும்.

''பங்கித் தின்னா பசியாறும்''

மனிதனுக்குத் தன்னலம் கூடாது; பொதுநலம் வேண்டும் என்ற அரிய பண்பாட்டினையும் இப்பழமொழி உணர்த்துகிறது.

இவ்வாறாக பகுத்து உண்ணுதல் என்பது ஓர் மிகச்சிறந்த பண்பு அதை நாம் கடைபிடித்து நம் பண்பாட்டின் மாண்பினை உலகறியச் செய்வோம்.



இயல் - 3 செய்யுள்

பண்பாடு - கூட்டாஞ்சோறு

# 2. காசிக்காண்டம்

அதிவீரராம பாண்டியர்

## பாடல் :

*விருந்தினனாக ஒருவன் வந்து எதிரின்*
*வியத்தல் நன்மொழி இனிது உரைத்தல்*
*திருந்துற நோக்கல் வருக என உரைத்தல்*
*எழுதல் முன் மகிழ்வன செப்பல்*
*பொருந்து மற்றுஅவன் தன்அருகுற இருத்தல்*
*போமெனில் பின் செல்வதாதல்*
*பரிந்துநன் முகமன் வழங்கல் இவ்வொன்பான்*
*ஒழுக்கமும் வழிபடும் பண்பே*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| எதிரின் | – | எதிர்பட்டால் |
| வியத்தல் | – | வியந்து (மகிழ்வுடன்) பேசுதல் |
| நன்மொழி | – | நல்ல சொற்கள் |
| திருந்துற நோக்கல் | – | முகமலர்ச்சியுடன் நோக்குதல் |
| மகிழ்வன செப்பல் | – | மனம் மகிழ்ச்சியான வார்த்தைகளைப் பேசுதல் |
| பொருந்து மற்று | – | விடைபெற்றுச் செல்லும் வரை |
| அருகுற | – | அருகில் |
| போமெனில் | – | போகும் போது |
| முகமன் | – | ஒருவரை நலம் வினவிக் கூறும் விருந்தோம்பல் சொற்கள் |
| இவ்வொன்பான் | – | இந்த ஒன்பதும் ஆகும். |

## பொருளுரை:

விருந்தினராக ஒருவர் வந்தால்,

1. அவரை வியந்து உரைத்தல்,
2. நல்ல சொற்களை இனிமையாகப் பேசுதல்,
3. முகமலர்ச்சியுடன் விருந்தினரை நோக்குதல்,
4. வீட்டிற்குள் வருக என்று வரவேற்றல்,
5. விருந்தினர் எதிரில் நின்று உபசரித்தல்,
6. அவர் மனம் மகிழும்படி பேசுதல்,
7. விருந்தினர் அருகிலேயே அமர்ந்து இருத்தல்,
8. அவர் விடைபெற்றுச் செல்லும் போது வாயில் வரை பின் தொடர்ந்து செல்லல்,
9. விருந்தினரிடம் புகழ்ச்சியாக முகமன் கூறி வழியனுப்புதல்

ஆகிய ஒன்பதும் இல்லொழுக்கம் மற்றும் விருந்தினரை உபசரிக்கும் பண்புகள் ஆகும்.

## விளக்கவுரை:

இல்லற ஒழுக்கத்தில் முக்கியமான ஒன்று விருந்தினராக வந்தவரை உபசரிப்பது ஆகும். அப்படி நமது இல்லம் நாடி வரும் விருந்தினரை எவ்வாறு வரவேற்று எவ்வாறு உபசரிக்க வேண்டும் என்பதை காசிக்காண்டம் ஒன்பது பண்புகளாக நயத்துடன் எடுத்துரைக்கிறது.

## ஆசிரியர் குறிப்பு:

- ஆசிரியர் பெயர் : அதிவீரராம பாண்டியர்
- பட்டப்பெயர் : சீவலமாறன்
- ஊர் : கொற்கை
- படைப்புகள் : ✦**நைடதம், லிங்கபுராணம், வாயு சம்கிதை, திருக்கருவை அந்தாதி, கூர்மபுராணம்**, காசிக்காண்டம், வெற்றி வேற்கை என்றழைக்கப்படும் மிகச்சிறந்த அறக்கருத்துகளை எடுத்தியம்பும் நறுந்தொகை ஆகியவை.
- சிறப்புகள் : தென்காசியில் இருக்கும் சிவன் கோயில் இவரால் கட்டப்பட்டதே ஆகும்.

## நூற் குறிப்பு:

- காசி நகரத்தின் பெருமைகளைக் கூறுகிற நூல் காசிக் காண்டம்.
- இந்நூல் துறவு, இல்லறம், பெண்களின் பண்புகள், வாழ்வியல் நெறிகள், மறுவாழ்வில் அடையும் நன்மைகள் ஆகியவற்றைப் பாடுவதாக அமைந்துள்ளது.
- வடமொழி நூலான சங்கரசங்கிதையில் இருந்து இதற்குரிய பொருள் எடுத்தாளப்பட்டுள்ளது.
- பூர்வகாண்டம், உத்தரகாண்டம் எனும் இரு காண்டங்களையும் 2526 விருத்தப்பாக்களையும் கொண்டது.
- நம் பாடப்பகுதி இல்லொழுக்கங் கூறிய பகுதியில் உள்ள பதினேழாவது பாடலாகும்.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. வியத்தல் – வியந்து உரைத்தல்
2. திருந்துற – முகமலர்ச்சியுடன்
3. செப்பல் – கூறுதல்
4. அருகுற – அருகில்
5. பரிந்து – புகழ்ந்து

### இலக்கணக் குறிப்பு:

1. நன்மொழி – பண்புத்தொகை
2. வருக – வியங்கோள் வினைமுற்று
3. வியத்தல்
4. நோக்கல்
5. எழுதுதல்
6. உரைத்தல்
7. செப்பல்
8. இருத்தல்
9. வழங்கல்

(3–9) – தொழிற்பெயர்கள்

### பகுபத உறுப்பிலக்கணம்:

PTA

1. உரைத்த – உரை + த் + த் + அ
   - உரை – பகுதி
   - த் – சந்தி
   - த் – இறந்த கால இடைநிலை
   - அ – பெயரெச்ச விகுதி

2. வருக – வா (வரு) + க
வா – பகுதி (வரு) எனக் குறுகியது விகாரம்.
க – வியங்கோள் வினைமுற்று விகுதி

PTA

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. காசிக் காண்டம் என்பது
அ) காசி நகரத்தின் வரலாற்றைப் பாடும் நூல்
ஆ) காசி நகரத்தைக் குறிக்கும் மறுபெயர்
இ) காசி நகரத்தின் பெருமையைப் பாடும் நூல்
ஈ) காசி நகரத்திற்கு வழிப்படுத்தும் நூல்

விடை: இ) காசி நகரத்தின் பெருமையைப் பாடும் நூல்

### கூடுதல் வினா:

2. ''வெற்றிவேற்கை'' நூல் ________ என்றும் அழைக்கப்படும்.
அ) நெடுந்தொகை ஆ) நறுந்தொகை
இ) கலித்தொகை ஈ) கொன்றை வேந்தன் விடை: ஆ) நறுந்தொகை

3. கொற்கை ________ நாட்டின் துறைமுக நகராகும்.
அ) பாண்டிய ஆ) சேர
இ) சோழ ஈ) பல்லவ விடை: அ) பாண்டிய

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

விருந்தினனாக ஒருவன் வந்து எதிரின்
வியத்தல் நன்மொழி இனிது உரைத்தல்
திருந்துற நோக்கல் வருக என உரைத்தல்
எழுதல் முன் மகிழ்வன செப்பல்
பொருந்து மற்றுஅவன் தன்அருகுற இருத்தல்
போமெனில் பின் செல்வதாதல்
பரிந்துநன் முகமன் வழங்கல் இவ்வொன்பான்
ஒழுக்கமும் வழிபடும் பண்பே

1. இப்பாடலின் ஆசிரியர் யார்?
அ) கீரந்தையார் ஆ) பரஞ்சோதி முனிவர்
இ) மோசிகீரனார் ஈ) அதிவீரராம பாண்டியர்

விடை : ஈ) அதிவீரராம பாண்டியர்

2. இப்பாடல் இடம் பெற்ற நூல் எது?
அ) கலித்தொகை ஆ) நீதிவெண்பா
இ) பெரியபுராணம் ஈ) காசிக் காண்டம்

விடை : ஈ) காசிக் காண்டம்

3. "முகமன்" – சொல்லின் பொருள்
அ) விருந்தோம்பல் சொல் ஆ) கடுஞ்சொல்
இ) பழிச்சொல் ஈ) தீயசொல்

விடை : அ) விருந்தோம்பல் சொல்

4. இப்பாடலில் பயின்றுவரும் அடியெதுகைகளை எழுதுக.

அ) இனிது, இருத்தல், இவ்வொன்பான்

ஆ) விருந்து, வியத்தல், உறைத்தல், இருத்தல்

இ) மகிழ்வன, மற்று, முகமன், போமெனில்

ஈ) விருந்து, திருந்து, பொருந்து

விடை : ஈ) விருந்து, திருந்து, பொருந்து

## குறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. விருந்தினரை மகிழ்வித்துக் கூறும் முகமன் சொற்களை எழுதுக:

- வாங்க! வாங்க!
- பயணம் இனிமையாய் இருந்ததா?
- இன்னும் நன்றாகச் சாப்பிடுங்கள்.
- நீங்கள் வருகை புரிந்ததால் எங்களுக்கு மிக்க மகிழ்ச்சி.
- நீங்கள் இனிமேல் அடிக்கடி எங்கள் இல்லம் வர வேண்டும்.
- உங்களின் வருகை எங்களுக்குப் பெருமை.

### கூடுதல் வினாக்கள்

2. ''காசிக் காண்டம்'' - நூற் குறிப்புத் தருக.

- காசி நகரின் பெருமைகளைக் கூறும் நூல் காசிக் காண்டம்.ணணணணம், பெண்களுக்கு உரிய பண்புகள், வாழ்வியல் நெறிகள், மறுவாழ்வில் அடையும் நன்மைகள் ஆகியவற்றைக் கூறுகிறது.
- பூர்வ காண்டம், உத்தரகாண்டம் எனும் இரு காண்டங்களையும் 2526 விருத்தப்பாக்களையும் கொண்ட நூல்.
- காசிக்காண்டம் நூலை இயற்றியவர் அதிவீரராம பாண்டியர் ஆவார்.

3. அதிவீரராம பாண்டியர் - குறிப்பு தருக.

- காசிக்காண்டம், நைடதம், லிங்கபுராணம், நறுந்தொகை, வாயு சம்கிதை, திருக்கருவை அந்தாதி, கூர்ம புராணம் ஆகிய நூல்களை இயற்றியவர்.
- முத்துக் குளிக்கும் கொற்கையின் அரசராகவும் தமிழ்ப் புலவராகவும் திகழ்ந்தவர்.
- தென்காசியில் இருக்கும் சிவன் கோவிலைக் கட்டியவர்.

4. விவேக சிந்தாமணி கூறும் விருந்தோம்பல் கருத்துகளை கூறுக.

மனம் ஒத்த அன்புடன், முகம் மலர்ந்து உபசாரங்கள் செய்து, உண்மையான சொற்களைப் பேசி, உப்பு இல்லாத கூழை வார்த்தாலும் அதனை உட்கொள்வது அமுதம் போல இனிமையைத் தரும். உடலுக்கு நல்லதைச் செய்யும்.

முப்பழம் என்று சொல்லக்கூடிய மா, பலா, வாழை என்னும் பழவகைகளோடு பால் சோற்றையும், உள்ளத்தில் அன்பு இல்லாமல் முகம் சுளித்து விருந்தாக இடுவார்கள் ஆயின், அன்போடு இடப்படாத அந்த பகட்டான உணவை உண்டால், முன்னே வயிற்றை முட்டிக் கொண்டு இருந்த பசியோடு, முன்பு இருந்ததை விடக் கொடிய பசியானது உண்டாகும்.

## சிறுவினா

**கூடுதல் வினா:**

1. காசிக் காண்டம் உணர்த்தும் விருந்தோம்பல் செய்யும் இல்லற ஒழுக்கங்களைக் கூறுக.

இல்லற ஒழுக்கமானது விருந்தினராக ஒருவர் வந்தால்,

1. அவரை வியந்து உரைத்தல்,
2. நல்ல சொற்களை இனிமையாகப் பேசுதல்,
3. முகமலர்ச்சியுடன் விருந்தினரை நோக்குதல்,
4. வீட்டிற்குள் வருக என்று வரவேற்றல்,
5. விருந்தினர் எதிரில் நின்று உபசரித்தல்,
6. அவர் மனம் மகிழும்படி பேசுதல்,
7. விருந்தினர் அருகிலேயே அமர்ந்து இருத்தல்,
8. அவர் விடைபெற்றுச் செல்லும் போது வாயில் வரை பின் தொடர்ந்து செல்லல்,
9. விருந்தினரிடம் புகழ்ச்சியாக முகமன் கூறி வழியனுப்புதல்

ஆகிய ஒன்பதும் காசிக்காண்டம் நூலில் இல்லொழுக்கம் கூறிய பகுதியில் உள்ள கருத்துகள் ஆகும்.

## கற்பவை கற்றபின்

நெடுநாளாகப் பார்க்க எண்ணியிருந்த உறவினர் ஒருவர் எதிர்பாராத வகையில் உங்கள் வீட்டிற்கு வருகிறார். நீங்கள் அவரை எதிர்கொண்டு விருந்து அளித்த நிகழ்வினை விரிவாக எழுதிப் படித்துக் காட்டுக:–

அன்று என் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த போது, தொலைவில் பெரியப்பா வருவதைப் பார்த்தேன். உடனே ஓடிச் சென்று அவர் கையிலிருந்த பையை வாங்கிக் கொண்டு, "வாங்க பெரியப்பா வாங்க !" என்று சொல்லி வீட்டிற்குள் அழைத்து வந்தேன். அம்மாவும் அப்பாவும் கோயிலுக்குப் போயிருந்தார்கள். "பயணம் எல்லாம் சிறப்பாக இருந்ததா ! அம்மா அப்பா இப்போது வந்து விடுவார்கள். முதலில் போய் குளித்து விட்டு வாருங்கள்" என்று சொல்லிவிட்டு அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தேன்.

பெரியப்பா குளித்து வந்தவுடன் "பெரியம்மா, அக்கா, அண்ணன் எல்லோரும் நன்றாக இருக்கிறார்களா?" என்று நலம் விசாரித்து விட்டு காலை சிற்றுண்டியாக இட்லி, சாம்பார், சட்னி, துவையல் தயார் செய்து வழங்க ஆயத்தமானேன். தோசையும் இட்லியும் உணவருந்தத் தந்த பின்னர் "ரொம்ப நாளா உங்களைப் பார்க்க வேணும், பார்க்க வேணும் என்று நினைத்துக் கொண்டே இருந்தேன். நீண்டநாள் கழித்து வந்துள்ளீர்கள். மிக்க மகிழ்ச்சி.

ஏதாவது நல்ல சங்கதி சொல்லத்தான் வந்திருப்பீர்கள்" என்று கேட்டவுடன் "உன் அக்காவிற்கு மாப்பிள்ளை பார்த்துள்ளேன். திருமண நாள், எந்த இடத்தில் திருமணத்தை நடத்துவது என்பது குறித்து உன் அப்பாவிடம் பேசத்தான் வந்தேன்" என்று சொன்னவுடன் மனம் குதூகலித்தது. சென்னையில் உள்ள பெரியப்பா வீட்டில் நடக்கப் போகும் அக்காவின் திருமணத்திற்குச் சென்றுவிட்டு, சென்னையை சுற்றிப் பார்த்துவிட்டு வரலாம் என நினைத்து மகிழ்ச்சியடைந்தேன்.





# 3. மலைபடுகடாம்

பெருங்கௌசிகனார்

## பாடல் :

அன்று அவண் அசைஇ, அல்சேர்ந்து அல்கி,
கன்று எரி ஒள்இணர் கடும்பொடு மலைந்து
சேந்த செயலைச் செப்பம் போகி,
அலங்கு கழை நரலும் ஆரிப்படுகர்ச்
சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்
மான விறல்வேள் வயிரியம் எனினே,
நும்இல் போல நில்லாது புக்கு,
கிழவிர் போலக் கேளாது கெழீஇ
சேட் புலம்பு அகல இனிய கூறி
பருஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குருஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவிர்

## சொற்பொருள்:

அன்று அவண் அசைஇ - அங்கேயே பகலில் இளைப்பாறி
அல்சேர்ந்து அல்கி - இரவில் சேர்ந்து தங்கி
கன்று எரி - எரியும் நெருப்பு
ஒள்இணர் - ஒளிரும் பூங்கொத்து
கடும்பொடு மலைந்து - சுற்றத்தோடு அணிந்து கொண்டு
சேந்த செயலை - சிவந்த பூக்கள் கொண்ட அசோகமரத்தினையுடைய
செப்பம் போகி - சரியான பொருத்தமான பாதையில் சென்று
அலங்கு கழை நரலும் - அசையும் மூங்கில்கள் ஒலிக்கும்
ஆரிப் படுகர் - அருமையான பள்ளம்
சிலம்பு அடைந்திருந்த - மலைச்சரிவில் உள்ள சிற்றூரை அடைந்து பாக்கம் எய்தி
நோனாச் செருவின் வலம்படு - வெல்ல முடியாத போர்க்களத்தில் வெற்றி கொண்டு
நோன்தாள் - வலிமையான முயற்சி
மான விறல் வேள் - மானமும் வெற்றியும் கொண்ட மன்னன் (நன்னன்)
வயிரியம் எனினே - கூத்தர்கள் (இசைக் கலைஞர்கள்) என்று கூறினால்
நும்இல் போல - உங்களது இல்லம் போல
நில்லாது புக்கு - தயக்கம் இன்றி உள்ளே நுழைக
கிழவிர் போல - உறவினர்கள் போல
கேளாது கெழீஇ - கேட்காமலேயே பழகுவார்கள்
சேட்புலம்பு அகல இனிய கூறி - துன்பம் தீருமாறு இனிமையானவற்றைக் கூறி
பருஉக்குறை பொழிந்த - பெரிய கறித்துண்டுகள் போடப்பட்ட
நெய்க்கண் வேவையொடு - நெய்யினில் உருக்கப்பட்ட உணவோடு
குரூஉக்கண் இறடிப் பொம்மல் - வண்ணமயமான தினைச்சோறு
பெறுகுவிர் - பெறுவீர்கள்

**பொருளுரை:**

பகலில் இளைப்பாறிச் செல்லுங்கள்; இரவில் சேர்ந்து தங்குங்கள்; எரியும் நெருப்பைப் போல ஒளிரும் பூங்கொத்துகளைச் சுற்றத்தோடு அணிந்து கொள்ளுங்கள்; சிவந்த பூக்கள் கொண்ட அசோக மரங்களை உடைய பொருத்தமான பாதையில் செல்லுங்கள்; அசையும் மூங்கில்கள் ஓசை எழுப்பும் கடினமான பாதையில் சென்று மலைச்சரிவில் உள்ள சிற்றூரை அடையுங்கள்; அங்குள்ள மக்களிடம் "பகைவரைப் பொறாமல் போர் செய்யும் வலிய முயற்சியும் மானமும் வெற்றியும் உடைய நன்னனின் கூத்தர்கள் நாங்கள்" என்று சொல்லுங்கள். உங்கள் வீட்டிற்குள் போவது போலவே அவர்களுடைய வீட்டுக்குள் உரிமையுடன் நுழையுங்கள். உறவினர் போலவே அவர்கள் உங்களுடன் பழகுவர். நீண்ட வழியைக் கடந்து வந்த உங்களின் துன்பம் தீர இனிய சொற்களைக் கூறுவர். அங்கே நெய்யில் வெந்த மாமிசத்தின் பொரியலையும், தினைச் சோற்றையும் உணவாகப் பெறுவீர்கள்.

**விளக்கவுரை:**

நன்னனைப் புகழ்ந்து பாடிப் பரிசு பெற்ற கூத்தர், பரிசு பெறப்போகும் கூத்தரைக் கானவர்களின் வளம் நிறைந்த புதுவருவாயை உடைய சிறிய ஊர்களில் தங்கி உணவு பெறுவதற்கு வழிப்படுத்துதல்.

## ஆசிரியர் குறிப்பு:

மலைபடுகடாம் நூலை இயற்றியவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங் கௌசிகனார் ஆவார். இரணிய முட்டம் என்பது பாண்டிய நாட்டின் கண் உள்ள யானைமலை முதலிய இடங்களைத் தன்பாற் கொண்டதாகிய ஒரு சிறிய நாடாகும்.

## நூற் குறிப்பு:

✦பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான மலைபடுகடாம் 583 அடிகளைக் கொண்ட நூல். இந்நூலைக் கூத்தராற்றுப்படை எனவும் குறிப்பிடுவர். ✦நவிர மலைத் தலைவனான நன்னன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட நூல். ✦நவிர மலை மக்களின் வாழ்க்கை முறைகளையும், நன்னனின் கொடைத்திறத்தையும் புகழ்ந்து பாடும் நூல். ✦மலையை யானையாக உருவகம் செய்து மலையில் எழும் பலவகை ஓசைகளை அதன் மதம் என்று விளக்குவதால் இதற்கு மலைபடுகடாம் என்று பெயர்.

✦ஆற்றுப்படுத்தும் கூத்தன், வள்ளலை நாடி எதிர்வரும் கூத்தனை அழைத்து, யாம் இவ்விடத்தே சென்று இன்னவெல்லாம் பெற்று வருகின்றோம். நீயும் அந்த வள்ளலிடம் சென்று வளம் பெற்று வாழ்வாயாக என்று கூறுதலால் கூத்தராற்றுப்படை.

## மதிப்பீடு

**பொருள் தருக:**

1. அசைஇ – இளைப்பாறி
2. அல்கி – தங்கி
3. கடும்பு – சுற்றம்
4. நரலும் – ஒலிக்கும்
5. ஆரி – அருமை
6. படுகர் – பள்ளம்
7. வயிரியம் – கூத்தர்
8. வேவை – வெந்தது
9. இறடி – தினை
10. பொம்மல் – சோறு

### இலக்கணக் குறிப்பு:

1. அசைஇ, கெழீஇ – சொல்லிசை அளபெடைகள்
2. பரூஉக், குரூஉக்கண் – செய்யுளிசை அளபெடைகள்

### பகுபத உறுப்பிலக்கணம்:

1. மலைந்து – மலை + த்(ந்) + த் + உ
   - மலை – பகுதி
   - த் – சந்தி 'ந்' ஆனது விகாரம்
   - த் – இறந்த கால இடைநிலை
   - உ – வினையெச்ச விகுதி
2. பொழிந்த – பொழி + த்(ந்) + த் + அ
   - பொழி – பகுதி
   - த் – சந்தி 'ந்' ஆனது விகாரம்
   - த் – இறந்தகால இடைநிலை
   - அ – பெயரெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. "சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி" என்னும் அடியில் பாக்கம் என்பது
   அ) புத்தூர் ஆ) மூதூர் இ) பேரூர் ஈ) சிற்றூர்
   விடை: ஈ) சிற்றூர்

### கூடுதல் வினா:

2. மலைபடுகடாம் ________ அடிகளைக் கொண்ட நூல்.
   அ) 483 ஆ) 523 இ) 583 ஈ) 603
   விடை: இ) 583
3. பொருந்தாதனைத் தேர்ந்தெடு:
   அ) அகநானூறு ஆ) சிறுபாணாற்றுப்படை
   இ) மதுரைக் காஞ்சி ஈ) மலைபடுகடாம்
   விடை: அ) அகநானூறு
4. நவிர மலை மன்னன்
   அ) அதியமான் ஆ) நன்னன் இ) பாரி ஈ) ஓரி
   விடை: ஆ) நன்னன்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

PTA

"அன்று அவண் அசைஇ, அல்சேர்ந்து அல்கி,
கன்று எரி ஒள்இணர் கடும்பொடு மலைந்து
சேந்த செயலைச் செப்பம் போகி,
அலங்கு கழை நரலும் ஆரிப்படுகர்ச்
லம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி
நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்
மான விறல்வேள் வயிரியம் எனினே,"

1. 'அசைஇ' – இச்சொல்லின் இலக்கணக்குறிப்பு

அ) வினைத்தொகை ஆ) பண்புத்தொகை
இ) சொல்லிசை அளபெடை ஈ) செய்யுளிசை அளபெடை

விடை : இ) சொல்லிசை அளபெடை

2. 'சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி' – இவ்வடியில் 'பாக்கம்' என்னும் சொல்லின் பொருள்

அ) சிற்றூர் ஆ) பேரூர்
இ) கடற்கரை ஈ) மூதூர்

விடை : அ) சிற்றூர்

3. பாடல் இடம் பெற்ற நூல் –

அ) சிலப்பதிகாரம் ஆ) மலைபடுகடாம்
இ) முல்லைப்பாட்டு ஈ) காசிக்காண்டம்

விடை : ஆ) மலைபடுகடாம்

4. பாடலில் இடம்பெற்றுள்ள அடிஎதுகைச் சொற்கள்

அ)அன்று, கன்று, அலங்கு, சிலம்பு ஆ) அன்று, அவண், அசைஇ, அல்கி
இ)சேந்த, செயலை, செப்பம், சிலம்பு ஈ) அல்கி, எய்தி, போகி, எனினே

விடை : அ) அன்று, கன்று, அலங்கு, சிலம்பு

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. "இறடிப் பொம்மல் பெறுகுவிர்" – இத்தொடர் உணர்த்தும் பொருளை எழுதுக.

நவிர மலை மக்களின் தலைவனான நன்னனின் இடத்திற்குச் செல்லும் கூத்தர்கள் அங்குள்ள வீடுகளில் தினைச்சோற்றை உணவாகப் பெறுவீர்கள் என்று எதிர்வரும் கூத்தர்களிடம் ஆற்றுப்படுத்துகின்றனர்.

## சிறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

2. முல்லை நிலத்திலிருந்தும் மருத நிலத்திலிருந்தும் கிடைக்கும் உணவுப் பொருள்கள் யாவை? PTA

**முல்லை நில உணவுப் பொருள்கள்**

- தினை
- சாமை
- நெய்
- பால்
- வரகு
- முதிரை

**மருத நில உணவுப் பொருள்கள்**

- செந்நெல்லரிசி
- வெண்ணெல் அரிசி

3. கூத்தனைக் கூத்தன் ஆற்றுப்படுத்தலைக் கூத்தராற்றுப்படை எவ்வாறு காட்டுகிறது? PTA

ஆற்றுப்படுத்தும் கூத்தன் நவிரமலை மன்னனான நன்னனை நாடி எதிர்வரும் கூத்தனை அழைத்து, 'பகலில் இளைப்பாறிச் செல்லுங்கள்; இரவில் சேர்ந்து தங்குங்கள்; எரியும் நெருப்பைப் போல ஒளிரும் பூங்கொத்துகளைச் சுற்றத்தோடு அணிந்து கொள்ளுங்கள். சிவந்த பூக்கள் கொண்ட அசோக மரங்களை உடைய பொருத்தமான பாதையில் செல்லுங்கள். அசையும் மூங்கில்கள் ஓசை எழுப்பும் கடினப்பாதையில் சென்று மலைச்சரிவில் உள்ள சிற்றூரை அடையுங்கள். அங்குள்ளவர்களிடம் பகைவரைப் பொறாமல் போர் செய்யவும் வலிய முயற்சியும் மானமும் வெற்றியும் உடைய நன்னனின் கூத்தர்கள் என்று சொல்லுங்கள்'.

'நீங்கள் உங்கள் வீட்டிற்குள் போவது போலவே நவிர மலை நாட்டு மக்களின் வீட்டுக்குள் உரிமையுடன் நுழையுங்கள். உறவினர் போலவே அவர்கள் உங்களுடன் பழகுவர். நீண்ட வழியைக் கடந்து வந்த உங்களின் துன்பம் தீர இனிய சொற்களைக் கூறுவர். அங்கே நெய்யில் வெந்த மாமிசத்தின் பொரியலையும் தினைச் சோற்றையும் உணவாகப் பெறுங்கள்' என்று கூறி ஆற்றுப்படுத்தினான்.

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. ஆற்றுப்படுத்தல் என்பது அன்றைக்குப் புலவர்களையும், கலைஞர்களையும் வள்ளல்களையும் நோக்கி நெறிப்படுத்துவதாக இருந்தது. அது இன்றைய நிலையில் ஒரு வழிகாட்டுதலாக மாறியிருப்பதை விளக்குக. PTA

ஒருவன் தனக்கு தேவையானவற்றை புத்திசாலித்தனமாகத் தேர்வு செய்யவும், வாழ்வின் இக்கட்டான தருணங்களில் தான் செய்ய வேண்டியவை யாவை என்பதைப் புரிந்து கொண்டு செயலாற்றிடவும் உதவுவதே வழிகாட்டுதல் பண்பாகும்.

**வழிகாட்டலின் வகைகள்:**

கல்வி வழிகாட்டல், ஆளுமை வளர வழிகாட்டல், தொழில் தேர்வில் வழிகாட்டல், உடல்நிலை சார்ந்த வழிகாட்டல், ஓய்வு நேரத்தைப் பயனுள்ள வகையில் வழிகாட்டல், தனிநபர் பிரச்சனைக்குத் தீர்வுகாண வழிகாட்டல், திருமண வழிகாட்டல் என வழிகாட்டலில் பல துறைகள் உள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கு காண்போம்.

**கல்வியில் வழிகாட்டல்:**

நமது உளப்பண்புகளுக்கும், திறன்களுக்கும் ஏற்ற வகையில் கல்வியில் கிடைக்கும் வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளவும், திறமையாக கற்கவும், படிப்புகளைத் தேர்ந்தெடுக்கவும் கல்வி வழிகாட்டல் துணைபுரிகிறது. புதிய படிப்புகளை அறியவும் அதற்குத் தேவையான தகுதிகளை வளர்த்துக் கொள்ளவும் கல்வி வழிகாட்டல் துணைபுரியும்.

**தொழில் தேர்வில் வழிகாட்டுதல்:**

வெவ்வேறு பணிகளைப் பெறக்கூடிய வாய்ப்புகள், அப்பணிகளை பெறுவதற்கான கல்வித் தகுதிகள், பயிற்சிகள், பணியில் முன்னேறக் கூடிய வாய்ப்புகள் பற்றிய தகவல்களை அளிப்பதே தொழில் தேர்வில் வழிகாட்டுதல். இது ஒரேயொரு தொழிலைத் தேர்ந்தெடுக்க உதவுவதற்குப் பதிலாக குறிப்பிட்ட தொழில்துறையை தேர்ந்தெடுக்க உதவி செய்வது ஆகும்.

**தனிநபர் வழிகாட்டுதல்**

மனவெழுச்சி சமநிலையும், மனநலமும் சிறப்பாக அமைய தனிநபர் வழிகாட்டுதல் தேவைப்படுகிறது. வீண் கவலைகளைத் தடுப்பதற்கும் மனப்போராட்டங்களைத் தவிர்ப்பதற்கும் இவ்வகை வழிகாட்டல் தேவைப்படுகிறது.

இவ்வாறாக ஆற்றுப்படுத்தும் பழைய காலப் பண்பு இன்று வழிகாட்டலாக ஒரு மிகப்பெரிய சேவைத் துறையாக வளர்ந்து நிற்கிறது. நிலம் வாங்குவது தொடர்பாக வழிகாட்டல், திருமணங்களைப் பேசி முடிப்பதில் வழிகாட்டல், வாகனங்களை விற்பது வாங்குவது தொடர்பான வழிகாட்டல், அரசு, தனியார் துறைகள் வழங்கும் சேவைகள் தொடர்பான வழிகாட்டல் என இத்துறை செழித்து வளர்ந்து நிற்கிறது.

**படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.** PTA



1. நன்னனின் கூத்தர்கள் நாங்கள்.
2. பகலில் இளைப்பாறிச் செல்லுங்கள்.
3. தயக்கமின்றி வீடுகளுக்கு வாருங்கள்
4. ஒளிரும் பூங்கொத்துகளை அணிந்து செல்கிறார்கள்
5. அசோக மரங்களை உடைய பாதையில் செல்லுங்கள்
6. விருந்தினர்களை மகிழ்வோடு எதிர்கொண்டு அழைப்பவர்கள்

## கற்பவை கற்றபின்

1. உணவு, விருந்து குறித்த பழமொழிகளைத் திரட்டி, அவை சார்ந்த நிகழ்வுகளை எடுத்துரைக்க. PTA

**அ) உப்பிட்டவரை உள்ளளவும் நினை:**

கல்வித்துறையில் அதிகக் கவனம் செலுத்தி மிகுதியான பள்ளிகளையும், கல்லூரிகளையும் மதிய உணவுத்திட்டத்தையும் ஏற்படுத்தித் தந்த கர்மவீரர் காமராசரைக் கல்வியில் உயர்கின்ற தமிழகம் உப்பிட்டவரை உள்ளளவும் நினைப்பது போல் நினைக்க வேண்டும்.

**ஆ) கொட்டிய பாலை நினைத்து குமுறி அழாதே:**

வீட்டு வசதி வாரியத்தில் பயனாளிகளுக்கு குலுக்கல் முறையில் ஒதுக்கீடு நடைபெறும் போது ஒரு எண்ணில் வீடு கிடைக்காததை எண்ணி கந்தன் கொட்டிய பாலை நினைத்து குமுறி அழுததைப் போல என்று வருந்தினான்.

**இ) விருந்தும் மருந்தும் மூன்று நாளைக்கு:**

தன்னுடைய மாமனாரின் வீட்டில் ஒரு மாதத்திற்கு மேல் தங்கிய நண்பனைப் பார்த்து விருந்தும் மருந்தும் மூன்று நாளைக்குத் தான் என்று கூறினான் அவரது நண்பன் குமரன். நோய் ஏற்படின் மருந்து உண்டவுடன் மூன்று நாள்களில் குணமாக வேண்டும். விருந்தும் முதல் மூன்று நாள்கள் தான் தடபுடலாக இருக்கும்.

2. பத்தியைப் படித்து வார இதழ் ஒன்றுக்கு அனுப்பும் வகையில் சமையல் குறிப்பாக மாற்றுக.

**கம்மங்கூழ்**

பொசுக்குகிறது வெயில். ஒரு துளி மழை பட்டால் வறுத்த உளுந்தின் வாசம் பரப்பும் வறண்ட மண். வெடித்த நிலம். செழித்து விளைகிறது கம்பம் பயிர். உரலில் குத்தி, சுளகில் புடைக்க அதன் உமி நீங்கும். நீர் தெளித்துத் தெளித்து, மீண்டும் உரலில் இடிக்க அது ஒன்றுடன் ஒன்று ஒட்டி மாவாகும். உப்புக்கலந்து, உலையில் ஏற்றி, கொதிக்கும் நீரில் கரையவிட்டுக் கிண்ட, கட்டியாகி அது சோறாகும். கம்மஞ் சோற்றை உருட்டி வைத்து, பின் மோர் விட்டுக் கரைத்தால் அது கம்மங்கஞ்சி அல்லது கம்மங்கூழ். மோர் மிளகாய் வற்றல், உப்பில் தோய்த்த பச்சை மிளகாய் அல்லது சின்ன வெங்காயம் கடித்துக் கஞ்சியைக் குடித்தால் உச்சி தொட்டு உள்ளங்கால் வரை தேகம் குளிர்ந்துப் போகும். அனல் அடங்கும். உயிர் வரும். கம்பு – கறுப்பு நிறக் கரிசல் மண்ணின் இயற்கைத் தங்கம்.

### சமையல் குறிப்பு:

**தேவையானவை:**

கம்மம் பயிர், உப்பு, மோர், மிளகாய் வற்றல், பச்சை மிளகாய், சின்ன வெங்காயம்

**செய்முறை:**

கம்மம் பயிரை உரலில் குத்தி உமி நீங்கும் வரை சுளகில் புடைக்கவும். பின் நீர் தெளித்து மாவாகும் வரை உரலில் இடிக்கவும். வாணலியில் உப்பு கலந்த நீரைக் கொதிக்க விடவும். உரலில் இடித்த கம்ப மாவை கொதிக்கும் நீரில் கொட்டிக் கிண்ட, கட்டியாக சோறாக மாறிய பின் இறக்கி விடவும். சோறாக மாறிய கம்ப மாவை மோர் விட்டுக் கரைக்கவும். நல்ல சுவையான கம்மங்கூழ் கிடைக்கும். மோர் மிளகாய் வற்றல், உப்பில் ஊற வைத்த பச்சைமிளகாய், சின்ன வெங்காயத்துடன் கம்மங் கூழை குடிக்கலாம். உடல் குளிர்ந்து அனல் அடங்கும்.



இயல் - 3

விரிவானம்

பண்பாடு - கூட்டாஞ்சோறு

# 4. கோபல்லபுரத்து மக்கள்

கி.ராஜநாராயணன்

## பலவுள் தெரிக

### கூடுதல் வினாக்கள்:

1. கோபல்லபுரத்து மக்கள் என்னும் புதினம் 1991 – ஆம் ஆண்டு கி.ரா.வுக்கு ________ பரிசைப் பெற்றுத் தந்தது.

அ) புக்கர் ஆ) சாகித்திய அகாதெமி
இ) ஞானபீட ஈ) கலைமாமணி

விடை: ஆ) சாகித்திய அகாதெமி

2. கி.ராஜநாராயணனின் கதைகள் ________ நடையில் அமைந்திருக்கும்.

அ) கதை சொல்லும் ஆ) நாடக நடையில்
இ) கவிதை நடையில் ஈ) இலக்கிய

விடை: அ) கதை சொல்லும்

### வட்டார வழக்குச் சொற்பொருள்:

1. பாச்சல் – பாத்தி
2. பதனம் – கவனமாக
3. நீத்துப்பாகம் – மேல்கஞ்சி
4. கடிச்சுக் குடித்தல் – வாய்வைத்துக் குடித்தல்
5. மகுளி – சோற்றுக் கஞ்சி
6. வரத்துக்காரன் – புதியவன்
7. சடைத்து புளித்து – சலிப்பு
8. அலுக்கம் – அழுத்தம் (அணுக்கம்)
9. தொலவட்டையில் – தொலைவில்
10. புதாள் – புது நபர்

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. அன்னமய்யா என்னும் பெயருக்கும் அவரின் செயலுக்கும் உள்ள பொருத்தப்பாட்டினைக் கோபல்லபுரத்து மக்கள் கதைப்பகுதி கொண்டு விவரிக்க. PTA

(அல்லது)

கோபல்லபுரத்து மக்கள் என்னும் கதையைச் சுருக்கி எழுதுக.

**முன்னுரை:**

எழுத்தாளர் கி.ராஜ நாராயணன் எழுதிய கதையே "கோபல்லபுரத்து மக்கள்". கரிசல் காட்டு கிராமத்து வெள்ளந்தி மனிதர்கள் காட்டும் விருந்தோம்பலையும், பசித்த வேளையில் வந்தவர்களுக்கு தம்மிடம் இருப்பதை பகிர்ந்து கொடுக்கிற மனித நேயத்தையும் இக்கதைப்பகுதி அழகுற எடுத்துக்கூறுகிறது.

## அன்னமய்யா:

கோபல்லபுர கிராமத்து வெள்ளந்தி மனிதர்களில் ஒருவன் அன்னமய்யா. சாதாரண ஏழை புஞ்சை விவசாயி. எப்போதும் அந்தப் பகுதி சாலையோரமாக வரும் வயோதிகர்கள், தேசாந்திரிகளைப் பார்த்தவுடன் ஏதாவது குடிக்கக் கொடுப்பவன்.

## அன்னமய்யா கண்ட காட்சி:

அன்று தாடியும், அழுக்கு ஆடையுமாக தள்ளாட்டத்துடனும் ஒரு பார்வைக்கு சாமியாரைப் போலவும் தோற்றமளித்த ஒருவன் கை, கால்களை நீட்டி புளியமரத்தில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். அன்னமய்யா நெருங்கி கிட்டப் போய் பார்த்த பிறகு தான் தெரிந்தது அவன் ஒரு வாலிபன் என்று. பசியால் வாடிப் போய் விட்ட அந்த முகத்தில் தெரிந்த கண்களின் தீட்சண்யம் கவனிக்கக் கூடியதாய் இருந்தது.

## உதவும் மனம்:

அன்னமய்யாவைப் பார்த்து ஒரு நேசப் புன்னகை காட்டிய அந்த வாலிபனின் கிட்டே போய் நின்று "எங்கிருந்து வர்றீங்க?" என்று கேட்டான் அன்னமய்யா. அதற்கு பதிலேதும் கூறாத அந்த வாலிபன் கொஞ்சம் அலுப்புத் தீர்ந்தவுடன் அன்னமய்யாவைப் பார்த்து "தம்பி கொஞ்சம் குடிக்கத் தண்ணி கிடைக்குமா?" என்று கேட்டான். அதற்கு அன்னமய்யா "இந்தா பக்கத்துல அருகெடுத்துக் கிட்டிருக்கிறவங்ககிட்ட நீச்சுத் தண்ணி இருக்கும்; வாங்கிட்டு வரட்டுமா?" என்று கேட்டான். நாமே அங்கே போய்விடலாமே என்று எண்ணியது போல அந்த வாலிபன் சிரமப்பட்டு எழுந்து நடந்தான்.

## உபசரிப்பு:

அருகெடுத்துக் கொண்டிருந்தவர்களின் பக்கத்தில் இருந்த ஒரு வேப்பமரத்தின் அடியில் ஏகப்பட்ட மண் கலயங்கள் இருந்தன. அந்தக் கறுப்புக் கலயங்கள் அந்தக் கரிசல் மண் தரையில் பாதி புதைக்கப்பட்டிருந்தன. தேங்காய்ப் பருமனுள்ள கற்களால் அந்தக் கலயங்களின் வாய் மூடப்பட்டிருந்தது.

## அன்னமய்யாவின் தாய்மனம்:

அன்னமய்பா ஒரு கலயத்தின் மேல் வைக்கப்பட்ட கல்லை அகற்றினான். அந்த கலயத்தின் மூடியாய் இருந்த சிரட்டையில் கானத்துவையலும் ஊறுகாயும் இருந்தது. இன்னொரு சிரட்டையில் மோர்மிளகாய் இருந்தது. கலயத்தை தனது வலது பாதத்தின் மேல் வைத்து, ஒரு சிரட்டையில் நீத்து பாகத்தை வடித்து வாலிபனிடம் நீட்டினான். "சும்மா கடிச்சிக் குடிங்க" என்றான் அன்னமய்யா. கலயத்தில் இருந்து சிரட்டை வழியாக மடக்கு மடக்காய் வாலிபனிடத்தில் ஜீவ ஊற்று பொங்கி நிறைந்து வந்தது. அப்படியே வேப்பமரத்து நிழலில் சொர்க்கமாய் அயர்ந்து உறங்கினான் அந்த வாலிபன். வாலிபனுக்கு ஏற்பட்ட நிறைவை விட அன்னமய்யாவிற்கு தாய்மை உணர்வு மேலிட்டது. மார்பில் பால் குடித்துக் கொண்டிருக்கும் போதே வயிறு நிறைந்ததும் அப்படியே தூங்கிவிடும் குழந்தையைப் பார்ப்பது போல வாலிபனை பிரியத்தோடு பார்த்தான் அன்னமய்யா.

## கரிசல் காட்டு விருந்து:

வாலிபன் எழுந்ததும் அன்னமய்யாவின் நண்பன் சுப்பையாவின் புஞ்சைக்கு அவரைக் கூட்டிக் கொண்டு சென்று கம்மஞ்சோற்று உருண்டையை கொஞ்சம் துவையலோடு சேர்த்து இருவரும் சாப்பிட்டார்கள். பரமேஸ்வரன் என்ற சொந்தப் பெயரினை பின்பு மணி என்று மாற்றிக் கொண்ட அந்த வாலிபன் உண்ட மகிழ்ச்சியில் திரும்பவும் படுத்து அமைதியாகக் கண்களை மூட அன்னமய்யாவும் அவனுடைய நண்பர்களும் ஊர்க்கதைகள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

## முடிவுரை:

இக்கதை மூலம் அன்னமய்யா என்ற பெயர் கொண்டவன் பசியால் வாடிய இளைஞனுக்கு அன்னமிட்டு அவனைத் தேற்றிய நிகழ்வு, வறுமையிலும் வாடாத மல்லி மலர் போல் அன்னமய்யாவின் குணமும் செயலும் அமைந்ததை காணலாம். கரிசல்காட்டு இலக்கியவாதியாகிய கி.ராஜநாராயணன், மழையைச் சார்ந்து வாழ்கின்ற மானாவாரி மனிதர்களின் வாழ்க்கையையும், விருந்தோம்பலையும் மிகத் தெளிவாகப் படம்பிடித்து காட்டுகிறது.

## கற்பவை கற்றபின்

1. பசித்தவருக்கு உணவிடுதல் என்ற அறச்செயலையும் விருந்தினருக்கு உணவிடுதல் என்ற பண்பாட்டுச் செயலையும் ஒப்பிட்டுப் பேசுக.

பசித்தவருக்கு உணவிடுவது என்பது ஜீவகாருண்ய செயல்களில் ஒன்று. சிறிய தயவாகிய ஜீவதயவைக் கொண்டு பெரிய தயவாகிய கடவுள் அருளைப் பெற வேண்டும் என்பது வள்ளலாரின் கோட்பாடு. வீடுதோறும் இரந்தும் பசியறாது அயர்ந்தவரையும், நீடிய பிணியால் வருந்துவோரையும், ஈடில் மானிகளாய், ஏழைகளாய் நெஞ்சு இளைத்தோரையும் கண்டு வருந்தினார் வள்ளலார். இதனாலேயே வடலூரில் சத்திய தருமச் சாலையை நிறுவிச் சாதி, மத வேறுபாடின்றிப் பசித்தோர்க்கெல்லாம் உணவு என்ற அறச்செயல் நிகழ்த்தினார்.

வீட்டுக்கு வந்த விருந்தினரின் உள்ளம் குளிரும்படி உபசரித்து அவர் சென்றதும் அடுத்த விருந்தினரின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருப்பவன் தேவர்களுக்கு பிரியமானவன் என்கிறது வள்ளுவம். விருந்தினர் உண்டு மகிழ தேன்குழலும் பண்ணியமும் கொடுத்தாள் எனவும் குடிப்பதற்குப் பாலும், மென்று தின்பதற்கு வெற்றிலையும் பாக்கும் வைத்தாள் என்கிறது பாவேந்தரின் பாடல். வாழை இலையின் அடி உண்பவர்களின் வலப்பக்கத்தில் இருக்குமாறு இலையைப் போட்டு கறிவகைகள் சோற்றைச் சூழ்ந்து இருக்குமாறு வைத்து பரிமாற வேண்டும். விருந்தினருக்கு எந்த உணவு பிடிக்கும் என்பதை அறிந்து போதுமான அளவு திருப்தியுடன் பரிமாற வேண்டும் என்கிறார் பாரதிதாசன். விருந்தோம்பல் என்பது தமிழரின் பண்பாடு. பசித்தோர்க்கு உணவிடல் என்பது ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம் என்ற அறச்செயல். வீட்டிற்கு வரும் பசியுள்ளோரை கேள்வி கேட்காது, நாம் சாப்பிடும் உணவை அளிக்க வேண்டும். மீந்துள்ள கெட்டுப்போன பழைய உணவுகளை அளிப்பது மிக மோசமான செயல் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

2. உங்கள் கற்பனையை இணைத்து நிகழ்வைக் கதையாக்குக.

அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இடையே சின்னஞ்சிறு சச்சரவுகள் ஏற்பட்டு, இரண்டு பேருமே முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு ஆளுக்கொரு மூலையில் உட்கார்ந்திருக்கும்போது, விருந்தினர் வருகை அவர்களை அன்பான கணவன் மனைவியராக மாற்றிவிடும். அம்மாவின் கெடுபிடியும் அப்பாவின் கீழ்ப்படிதலும் ஆச்சரியமாக இருக்கும். விருந்தாளிகள் அடிக்கடி வர மாட்டார்களா என்று இருக்கும்.

விருந்தினர் தினம் என்பது எப்படி விடியும் தெரியுமா?

காலையில் வேப்பமரத்தில் காக்கா கத்துவதை வைத்து அன்று வீட்டிற்கு விருந்தினர் வரப்போவதை அம்மா உணர்ந்து கொண்டாள். அப்போது பலாப்பழ சீசன் என்பதால், அம்மாவின் தம்பி வருவார் என்று அப்பா கூறினார். சொன்னது போலவே ஊரிலிருந்து அறந்தாங்கி மாமா தலையில் பலாப்பழத்துடன் வந்து இறங்கினார்.

எங்கள் எல்லோருக்கும் மகிழ்ச்சி. அம்மாவின் மகிழ்ச்சியோ அளவிட முடியாததாய் இருந்தது. தன் கூடப்பிறந்த தம்பி அல்லவா? அன்று என்ன சமையல் செய்வது, எப்படி உபசரிப்பது என்பதிலேயே அவரது எண்ணம் இருந்தது.

காலை முழுவதும் விளையாடி விட்டு மதியம் பலாக்கொட்டை போட்ட சாம்பாருடன் உணவை ஒருபிடி பிடித்தோம். பின்னர் மாலையில் அனைவரும் கோயிலுக்குச் செல்ல தயார் செய்து கொண்டோம்.

அன்று முழுவதும் அப்பா என்ன சொன்னாலும் அம்மா தலையை ஆட்டினாள். எதிர்த்து ஒரு வார்த்தை பேசவில்லை. அப்பாவும், மாமாவுடன் பேசிக்கொண்டு எங்களை எதுவும் சொல்லவில்லை. அன்று வீடே அன்பு இல்லமாக இருந்தது.

இப்படியே ஒவ்வொரு நாளும் இருந்தால் எப்படி இருக்கும் என்று என் மனதுக்குள் மிகுந்த ஆசையாக இருந்தது. அன்றைய நாள் இனிதே கழிந்தது.





இயல் - 3 இலக்கணம்

பண்பாடு - கூட்டாஞ்சோறு

# 5. தொகாநிலைத் தொடர்கள்

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. அறிஞருக்கு நூல், அறிஞரது நூல் ஆகிய சொற்றொடர்களில் பொருளை வேறுபடுத்தக் காரணமாக அமைவது

அ) வேற்றுமை உருபு ஆ) எழுவாய்
இ) உவம உருபு ஈ) உரிச்சொல் **விடை:** அ) வேற்றுமை உருபு

### கூடுதல் வினா:

2. தீத்தீ – எவ்வகைத் தொடர்?

அ) இரட்டைக்கிளவி ஆ) அடுக்குத் தொடர்
இ) பெயரெச்சத் தொடர் ஈ) முற்றுப்போலி **விடை:** ஆ) அடுக்குத் தொடர்

3. மயிலே! நீ தூது செல்லாயோ? – எவ்வகைத் தொடர்?

அ) வினாத் தொடர் ஆ) எழுவாய்த் தொடர்
இ) விளித்தொடர் ஈ) பெயரெச்சத் தொடர் **விடை:** இ) விளித் தொடர்

4. ''விழியால் பேசினாள்'' – எவ்வகைத் தொடர்?

அ) வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்
ஆ) விளித்தொடர்
இ) வினைமுற்றுத் தொடர்
ஈ) அடுக்குத் தொடர் **விடை:** அ) வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்

5. ''அம்ம வாழி'' – எவ்வகைத் தொடர்?

அ) உரிச்சொல் தொடர் ஆ) வினைமுற்றுத் தொடர்
இ) பெயரெச்சத் தொடர் ஈ) இடைச்சொல் தொடர்

**விடை:** ஈ) இடைச்சொல் தொடர்

6. ''அழைத்தனர் உற்றார்'' – எவ்வகைத் தொடர்?

அ) வினையெச்சத் தொடர் ஆ) பெயரெச்சத் தொடர்
இ) விளித் தொடர் ஈ) வினைமுற்றுத் தொடர்

**விடை:** ஈ) வினைமுற்றுத் தொடர்

7. அன்பால் கட்டினார், அறிஞருக்குப் பொன்னாடை ஆகிய சொற்றொடர்களில் பொருளை வேறுபடுத்தக் காரணமாக அமைவது PTA

அ) வேற்றுமை உருபு ஆ) எழுவாய்
இ) உவம உருபு ஈ) உரிச்சொல் **விடை:** அ) வேற்றுமை உருபு

## குறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. ''எழுது என்றாள்'' என்பது விரைவு காரணமாக ''எழுது எழுது என்றாள்'' என அடுக்குத் தொடரானது. ''சிரித்துப் பேசினார்'' என்பது எவ்வாறு அடுக்குத் தொடராகும்?

சிரித்துச் சிரித்துப் பேசினார், உவகை காரணமாக அடுக்கு தொடராயிற்று.

2. பாரதியார் கவிஞர், நூலகம் சென்றார், அவர் யார்? ஆகிய தொடர்களில் எழுவாயுடன் தொடரும் பயனிலைகள் யாவை?

கவிஞர், சென்றார், யார்? ஆகியவை. பெயர் பயனிலை, வினை பயனிலை, வினா பயனிலை

### கூடுதல் வினாக்கள்:

3. தொகாநிலைத் தொடர் என்றால் என்ன?

பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும், பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும் சேர்ந்த இரண்டு சொற்களும் தம்மிடையே உருபுகளும் காலமும் தொகாமல் வெளிப்படையாக வந்து, தொடர் அமைந்தால், அதற்குத் தொகாநிலைத் தொடர் என்று பெயர். அதாவது இரண்டு சொற்களுக்கு இடையில் வேறு சொல் வேண்டாது நின்று பொருள் தருவது.

4. ''இளங்கோ படித்தான்'' – இது எவ்வாறு எழுவாய்த் தொடராகும்?

இளங்கோ– எழுவாய்

படித்தான்– பயனிலை

எழுவாய் முதலிலும் அதைத் தொடர்ந்து பயனிலையும் நின்று இடையில் வேறு சொற்கள் எவையும் மறையாது வருமாயின் அதனை எழுவாய்த் தொடர் என்போம். இத்தொடரிலும் அவ்வாறே வந்துள்ளது.

5. ''தம்பி! வா'' – எவ்வாறு விளித்தொடராகும்?

''தம்பி'' என்பது விளி (விளி – அழைத்தல்) விளியைத் தொடர்ந்து 'வா' என்ற சொல் வந்து நின்று பொருள் தருகிறது. இவ்வாறு விளியுடன் வினை தொடர்வது விளித்தொடராகும்.

6. ''கண்டேன் சீதையை'' – எவ்வாறு வினைமுற்றுத் தொடராகும்?

'கண்டேன்' என்ற வினைமுற்றைத் தொடர்ந்து சீதை என்ற பெபரைக் கொண்டு முடிந்துள்ளது. இவ்வாறு வினைமுற்றுடன் ஒரு பெயர் தொடர்வது வினைமுற்றுத் தொடர் ஆகும்.

7. ''படித்த பெண்'' – எவ்வாறு பெபரெச்சத் தொடராகும்?

'படித்து' என்ற எச்சவினை 'பெண்' என்னும் பெயரைக் கொண்டு முடிந்துள்ளது. இவ்வாறு முற்றுப் பெறாத வினை பெயர்ச்சொல்லைத் தொடர்வது பெயரெச்சத் தொடர் எனப்படும்.

8. ''படித்து முடித்தான்'' – இது எவ்வகைத் தொடர்?

'படித்து' என்னும் வினையெச்சம் 'முடித்தான்' என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிவதால் இதனை வினையெச்சத் தொடர் என்பர்.

9. ''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்''
– இக்குறட்பாவில் பயின்று வந்துள்ள இடைச்சொல் தொடரை விளக்குக.

மற்றொன்று – இடைச்சொல் தொடர்

மற்றொன்று என்பதில் 'மற்று' என்ற இடைச்சொல்லைத் தொடர்ந்து ''ஒன்று'' என்ற சொல் நின்று பொருள் தருகிறது. இவ்வாறு இடைச்சொல்லுடன் பெயரோ, வினையோ தொடர்வது இடைச்சொல் தொடர் எனப்படும்.

10. உரிச்சொல் தொடரை விளக்குக.

''சாலப் பேசினான்''

இதில் சால என்பது உரிச்சொல். உரிச்சொல்லைத் தொடர்ந்து பேசினான் என்ற சொல் நின்று பொருள் தருகிறது. இவ்வாறு உரிச்சொல்லுடன் பெயரோ வினையோ தொடர்வது உரிச்சொல் தொடர் ஆகும்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. கண்ணே கண்ணுறங்கு! PTA
காலையில் நீயெழும்பு!
மாமழை பெய்கையிலே
மாம்பூவே கண்ணுறங்கு!
பாடினேன் தாலாட்டு!
ஆடி ஆடி ஓய்ந்துறங்கு!
– இத்தாலாட்டுப் பாடலில் அமைந்துள்ள தொடர் வகைகளை எழுதுக.

| | | |
|---|---|---|
| கண்ணே கண்ணுறங்கு | – | விளித்தொடர் |
| காலையில் நீயெழும்பு | – | வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| மாமழை பெய்கையிலே | – | உரிச்சொல் தொடர் |
| மாம்பூவே கண்ணுறங்கு | – | விளித்தொடர் |
| பாடினேன் தாலாட்டு | – | வினைமுற்றுத் தொடர் |
| ஆடி ஆடி ஓய்ந்துறங்கு | – | அடுக்குத்தொடர் |

### கூடுதல் வினா:

2. வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்களை விளக்குக.

வேற்றுமை உருபுகள் வெளிப்பட அமையும் தொடர்கள் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர்கள் ஆகும்.

| | | |
|---|---|---|
| தமிழைக் கற்றான் | – | இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| தமிழால் வாழ்கிறோம் | – | மூன்றாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| தமிழுக்குத் தொண்டு செய் | – | நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| தமிழின் விலகேன் | – | ஐந்தாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| தமிழது சிறப்பு | – | ஆறாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர் |
| பிரிவின்கண் துன்பம் | – | ஏழாம் வேற்றுமைத் தொகாநிலைத் தொடர். |

3. அடுக்குத் தொடரை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

ஒரு சொல் இரண்டு மூன்று முறை அடுக்கித் தொடர்வது அடுக்குத் தொடராகும். வருக! வருக! வருக! ஒரே சொல் உவகையின் காரணமாக மீண்டும் மீண்டும் அடுக்கி வந்துள்ளதால் அடுக்குத் தொடரானது.

## நெடுவினா

**கூடுதல் வினா:**

1. தொகாநிலைத் தொடர் வகைகளை விவரி.

**1. எழுவாய்த் தொடர்**

எழுவாயுடன் பெயர், வினா, வினை பயனிலைகள் தொடர்வது.

எ.கா : இன்குலாப் கவிஞர் – பெயர்
தாமிரபரணி பாய்ந்தது – வினை
பேருந்து வருமா? – வினா

**2. விளித் தொடர்**

விளியுடன் வினை தொடர்வது. எ.கா : முருகா வருக!

**3. வினைமுற்றுத் தொடர்**

முற்றுப் பெற்ற வினையுடன் ஒரு பெயர் தொடர்வது.

எ.கா : பாடினாள் கண்ணகி.

**4. பெயரெச்சத் தொடர்**

முற்றுப் பெறாத வினை பெயர்ச் சொல்லைத் தொடர்வது.

எ.கா : படித்த பையன்.

**5. வினையெச்சத் தொடர்**

முற்றுப் பெறாத வினை, வினைச் சொல்லைத் தொடர்வது.

எ.கா : கேட்டு மகிழ்ந்தனர்.

**6. வேற்றுமைத் தொடர்**

வேற்றுமை உருபுகள் வெளிப்பட அமையும் தொடர்.

எ.கா : இராமனுக்குக் கொடுத்தான்.

**7. இடைச்சொல் தொடர்**

இடைச்சொல்லுடன் பெயரோ, வினையோ தொடர்வது.

எ.கா : மற்றொன்று = மற்று + ஒன்று

**8. உரிச்சொல் தொடர்**

உரிச்சொல்லுடன் பெயரோ, வினையோ தொடர்வது.

எ.கா : மாநாடு, சாலப் பேசினான்

**9. அடுக்குத் தொடர்**

ஒரு சொல் இரண்டு மூன்று முறை அடுக்கித் தொடர்வது

எ.கா : பாம்பு! பாம்பு! பாம்பு!

## கற்பவை கற்றபின்

1. சென்னை பெரம்பூரில் உள்ள தொடர்வண்டி இணைப்புப் பெட்டி தொழிற்சாலையானது பயணிகளின் தேவை மற்றும் காலத்திற்கு ஏற்ப அதிநவீன தொடர்வண்டிப்பெட்டி, மெட்ரோ தொடர்வண்டிப் பெட்டி, சுற்றுலா தொடர்வண்டி பெட்டி என ஐம்பது வகைகளில் தொடர் வண்டிப் பெட்டிகள் தயாரிக்கப்பட்டு வருகின்றன. ஆரம்பத்தில் ரயில் பெட்டிக்கான கூடுகள் மட்டுமே இங்கு தயாரிக்கப்பட்டன. அதன் பிறகு மென்மேலும் வளர்ச்சி கண்டு பயணிகளின் தொடர்வண்டிப் பெட்டிகள் தயாரிக்கப்பட்டன. கடந்த ஆண்டு முதல் நீலநிறப் பெட்டிகள் தயாரிப்பது நிறுத்தப்பட்டது. தற்போது உலகில் அதிக ரயில் பெட்டிகளைத் தயாரிக்கும் தொழிற்சாலையாக சென்னை பெரம்பூர் ரயில் இணைப்புப் பெட்டி தொழிற்சாலை (ஐ.சி.எஃப்) சாலச் சிறந்ததாக உருவெடுத்துள்ளது.

| | |
|---|---|
| மேன்மேல் | – அடுக்குத்தொடர் |
| சாலச் சிறந்ததாக | – உரிச்சொல் தொடர் |
| தொழிற்சாலையானது பயணிகள் | – ஆறாம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் |
| பயணிகளின் தொடர்வண்டி | – ஐந்தாம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் |
| காலத்திற்கு ஏற்ப | – நான்காம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் |
| வளர்ச்சி கண்டனர் | – வினையெச்சத் தொடர் |
| பெட்டிக்கான கூடுகள் | – பெயரெச்சத் தொடர் |
| தொழிற்சாலை பயணிகள் | – எழுவாய்த் தொடர் |
| பெட்டிகளைத் தயாரிப்பது | – இரண்டாம் வேற்றுமைத் தொகா நிலைத் தொடர் |

2. கீழ்க்காணும் பத்தியில் உள்ள தொடர் வகைகளை எடுத்து எழுதுக.

மாடியிலிருந்து இறங்கினார் முகமது. அவர் பாடகர். பாடல்களைப் பாடுவதும் கேட்பதும் அவருக்குப் பொழுதுபோக்கு. அவரது அறையில் கேட்ட பாடல்களையும் கேட்காத பாடல்களையும் கொண்ட குறுந்தகடுகளை அடுக்கு அடுக்காக வைத்திருப்பார்.

| | |
|---|---|
| மாடியிலிருந்து | – இடைச்சொல் தொடர் |
| இறங்கினார் முகமது | – வினைமுற்றுத் தொடர் |
| அவர் பாடகர் | – எழுவாய்த் தொடர் |
| பாடல்களைப் பாடுவதும் | – வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் |
| பாடுவதும் கேட்பதும் | – ‘உம்’ இடைச்சொல் தொடர் |
| அவருக்குப் பொழுது போக்கு | – வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் |
| அவரது அறையில் | – வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் |
| கேட்ட பாடல் கேட்காத பாடல் | – பெயரெச்சத் தொகாநிலைத்தொடர் |
| குறுந்தகடுகளை அடுக்கு | – வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் |
| அடுக்கு அடுக்காக | – அடுக்குத் தொடர் |

3. வண்ணச் சொற்களின் தொடர்வகைகளை எழுதுக.

- பழகப் பழகப் பாலும் புளிக்கும் – அடுக்குத் தொடர்.
- வந்தார் அண்ணன் – வினைமுற்றுத் தொடர்.
- வடித்த கஞ்சியில் சீலையை அலசினேன் – பெயரெச்சத் தொடர்.
- அரிய கவிதைகளின் தொகுப்பு இது – வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.
- மேடையில் நன்றாகப் பேசினான் – வினையெச்சத் தொடர்.

## மொழியை ஆள்வோம்

### மொழி பெயர்க்க

1. Respected ladies and gentleman, I am Ilangovan studying tenth standard. I have come here to say a few words about our Tamil culture. Sangam literature shows that Tamils were best in culture and civilization about two thousand years ago. Tamils who have defined grammar for language have also defined grammer for life. Tamil culture is rooted in the life styles of Tamils throughout India, Srilanka, Malaysia, Singapore, England and Worldwide. Though our culture is very old, it has been updated consistently. We should feel proud about our culture. Thank you one and all. [PTA]

### தமிழர் நாகரிகம்

மதிப்பிற்குரிய சகோதர சகோதரிகளே! என்னுடைய பெயர் இளங்கோவன். நான் பத்தாம் வகுப்பு படிக்கிறேன். தமிழர் நாகரிகத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் உங்களுடன் பகிர வந்துள்ளேன். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழரின் நாகரிகமும் பண்பாடும் சிறந்து விளங்கியதாக சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. மொழிக்காக இலக்கணம் வகுத்த தமிழர்கள், வாழ்க்கைக்காகவும் இலக்கணம் வகுத்துள்ளனர். தமிழ் நாகரிகம் இந்தியா முழுமைக்கும் மற்றும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், உலகம் முழுவதும் உள்ள தமிழர் வாழ்க்கை முறையில் வேரூன்றி உள்ளது. நம் நாகரிகம் பழைமையானதாக இருந்தாலும் காலத்திற்கேற்ப தொடர்ச்சியாக புதுமைப்படுத்தப்பட்டு வருகிறது. நாம் நம் நாகரிகத்தை எண்ணி பெருமை கொள்ள வேண்டும். அனைவருக்கும் இனிய நன்றி.

## பழமொழிகளை நிறைவு செய்க:

1. உப்பில்லாப் பண்டம் குப்பையிலே.
2. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்.
3. உப்பிட்டவரை உள்ளளவும் நினை.
4. விருந்தும் மருந்தும் மூன்று நாளைக்கு.
5. அளவுக்கு மீறினால் அமுதமும் நஞ்சு.

## பழமொழிகளை பொருத்துக: PTA

அ) ஆறில்லா ஊருக்கு – 1) சோற்றுக்கு ஒரு சோறு பதம்
ஆ) உப்பில்லாப் பண்டம் – 2) நூறுவயது
இ) நொறுங்கத் தின்றால் – 3) குப்பையிலே
ஈ) ஒரு பானை – 4) அழகு பாழ்

அ) அ – 4, ஆ – 1, இ – 3, ஈ – 2 ஆ) அ – 4, ஆ – 3, இ – 2, ஈ – 1
இ) அ – 2, ஆ – 4, இ – 1, ஈ – 3 ஈ) அ – 3, ஆ – 1, இ – 4, ஈ – 2

**விடை:** ஆ) அ – 4, ஆ – 3, இ – 2, ஈ – 1

## பத்தியைப் படித்துக் கருத்தைச் சுருக்கி எழுதுக:

### பழைய சோறு

பச்சை நெல் வயலைக் கண்கள் முழுதும் சுமந்து, இளநெல்லை நுகர்ந்து, அதன் பாலை ருசித்து, நீராவியில் அந்த நெல் அவியும் கதகதப்பான புழுங்கல் மணம் வரை சுவைத்தவள் நான். அவித்து, காய்ந்து, குத்திய அந்தப் புழுங்கல் அரிசியை, அதன் வழவழப்பை, கடுப்பு மணத்தை, சோறாகு முன் கை நிறைய அள்ளி வாயில் போட்டு நெரித்து மென்றவள் சொல்கிறேன். பகலெல்லாம் உச்சி வெயிலுக்கு அது சுடச்சுடப் புழுங்கலரிசிச் சோறு. இரவு முழுவதும் அந்தச் சோறு நீரில் ஊறும். விடிந்த இந்தக் காலையில் அதன் பெயர் பழைய சோறு அல்லது பழையது. காத்திருந்து, சின்ன வெங்காயம், பச்சை மிளகாய் கடித்து நீராகாரம் போல் குடிப்பது ஒருவகை. வாழை இலையில் அந்தப் பழைய சோற்றைப் பிழிந்து போட்டால், வடுமாங்காய் அல்லது உப்பு நாரத்தங்காய் அதனுடன் சேர்ந்து கொள்ளத் துடிப்பது இன்னொரு வகை. சுண்ட வைத்த முதல்நாள் குழம்பு இன்னும் உச்சம்! நல்ல பழையது மாம்பழ வாசம் வீசுமாம். பழைய சோறு – அது கிராமத்து உன்னதம்.

"மைக்கடல் முத்துக்கு ஈடாய் மிக்க நெல்முத்து" ..... முக்கூடற்பள்ளு.

விடை :

வயலில் விளைந்த நெல்லை நீராவியில் அவித்து காய்ந்து குத்திய புழுங்கல் அரிசியை சோறாகு முன் வாயில் அள்ளிப் போட்டேன். உச்சி வெயிலுக்கு அது புழுங்கலரிசிச் சோறு. இரவில் நீரில் ஊறினால் காலையில் பழைய சோறு. சின்ன வெங்காயம், பச்சை மிளகாய் கடித்து நீராகாரம் போலும் குடிக்கலாம். வடுமாங்காய், உப்பு நார்த்தங்காய், சுண்டவைத்த முதல் நாள் குழம்புடன் வாழை இலையில் பழைய சோற்றை சாப்பிடுவது கிராமத்து உன்னதம்.

## கதையாக்குக:

மனித வாழ்வில் ஒவ்வொருவரும் நாளும் நாளும் புதுப்புது மனிதர்களைப் பார்க்கிறோம்; புதுப்புதுச் செய்திகள் கிட்டும்! கிட்டுகிற கருப்பொருள்களைத் திரட்டி, கற்பனை நயம் கூட்டிக் கதையாக்குவது ஒரு கலை. அது சிறுகதையாக இருக்கலாம். புதினமாக இருக்கலாம். அன்பை எதிர்பார்த்திருப்பவராக, யாருமற்றவராக.... இருக்கும் ஒருவர் உங்களின் உதவியால் மனம் மகிழ்ந்த நிகழ்வினைக் கதையாக்குக.

### சிறுகதை

மிக மகிழ்வுடன் கைபேசியில் பேசிக் கொண்டிருந்தான் முகிலன். "ரொம்ப நன்றி. ஓ... அப்படியா! சரி சார். நாம நாளை சந்திப்போம்" என்று கூறிக் கொண்டே கைபேசியை மேசையில் வைத்தான். "கமலா... கமலா..." என்று உள்ளே பார்த்து குரல் கொடுத்தான்.

"என்னங்க..." என்று கேட்டவாறு உள்ளிருந்து வந்தாள் கமலா.

"போன வாரம் என் பிறந்த நாளைக்கு முதியோர் இல்லம் போனோமே... அங்கே இருந்த ஒருத்தரைப் பார்த்து நீ கூட உன் அப்பா மாதிரி இருக்காருன்னு சொன்னியே"

"ஆமாம்... இப்ப அதுக்கென்ன...?"

"நான் அவருக்கு ஏதாவது உதவி வேணுமான்னு அந்த இல்ல நிர்வாகிகிட்ட கேட்டிருந்தேன். அதுக்கு அவங்க பையன் அரசு இலவச வீடு திட்டத்தில் வீடு கிடைக்க முயற்சி பண்றாராம். அதுக்கு 3000 ரூபாய் இருந்தால் அந்த வீடு கிடைத்துவிடும் என்றார். நான் அதைத் தர்றேன்னு சொல்லிட்டேன். இப்ப அவர் தான் போன் பண்ணினார். அந்த வீடு ரெடியாயிட்டாம். இன்னும் ஆறு மாசத்தில அந்த பெரியவர அவர் பையன் கூட்டிட்டு போயிருவானாம்".

"அப்படியா ரொம்ப சந்தோசம்" என்றாள் கமலா, உண்மையிலேயே முகத்தில் மகிழ்ச்சி பொங்க.

"ஆமாம்... அதான், நான் நாளைக்குப் போயி அந்த பெரியவரைப் பார்த்து ஆசீர்வாதம் வாங்கலாம்னு நினைச்சிருக்கேன். நீயும் வா" என்றான் முகிலன். அவன் தனது ஒரு பிறந்த நாளை மிகவும் அர்த்தமுள்ளதாக ஆக்கியதாக எண்ணி மனம் மகிழ்ந்தான்.

## கடிதம் எழுதுக

உணவு விடுதியொன்றில் வழங்கப்பட்ட உணவு தரமற்றதாகவும் விலை கூடுதலாகவும் இருந்தது குறித்து உரிய சான்றுகளுடன் உணவுப் பாதுகாப்பு ஆணையருக்குக் கடிதம் எழுதுக. PTA

அனுப்புநர்,

அ. நெடுஞ்செழியன்
88, அரண்மனைத் தெரு,
ஐஸ்வர்யம் நகர்,
தாராபுரம்.

பெறுநர்.

உயர்திரு. உணவுப் பாதுகாப்பு ஆணையர் அவர்கள்,
உணவுப் பாதுகாப்பு அலுவலகம்,
திருப்பூர்.

மதிப்பிற்குரியீர்,

பொருள்: தரமற்ற உணவை கூடுதல் விலைக்கு விற்பது குறித்த புகார்க் கடிதம்.

வணக்கம், நான் கடந்த வாரம் எங்கள் பகுதியில் பிரபலமாக செயல்பட்டு வரும் கார்த்திகை உணவு விடுதிக்கு குடும்பத்துடன் சென்றேன். என்னுடைய துணைவியார் மற்றும் எனது மகன்கள், நான் உட்பட நான்கு பேரும் நான்கு தோசையும் ஆட்டுக்கறி குழம்பும், ஒரு கோழிக்கறி வறுவலும் தயார் செய்யக் கூறினோம். அரைமணி நேரம் கழித்து எங்களுக்கு வந்த ஆட்டுக்கறி குழம்பு, புளித்த வாடையும் ஒரு வித நாற்றத்துடனும் இருந்தது. ஆட்டுக்கறி குழம்பில் புழுக்கள் நெளிந்து கொண்டிருந்தது. நாங்கள் குழம்பை பார்த்தவுடன் இது உண்பதற்கு ஏற்றதல்ல என்று உணவுவிடுதி மேலாளரிடம் முறையிட்டோம்; அவர் உணவிற்கான கட்டணத்தொகையை செலுத்திவிட்டுச் செல்லுங்கள் என்று கூறி ரூ.1,400/– கட்டச் சொல்லி விட்டார். (ஜி.எஸ்.டி வரி குறிப்பிடவில்லை) வேறு வழியில்லாமல் சண்டை போட மனமின்றி பில் தொகையை கட்டி உணவகத்தை விட்டு வெளியில் வந்தோம். தயவு செய்து கார்த்திகை உணவு விடுதியை ஆய்வு செய்து காலாவதியான உணவுப் பொருள்களை விற்கிறார்களா என்பதை உறுதி செய்யவும். வேறு யாருக்கும் வயிற்றுத் தொந்தரவுகள் ஏற்பட்டு மருத்துவமனை செல்லும் முன்னர் நடவடிக்கை எடுக்க பணிவுடன் வேண்டுகிறேன்.

இடம் : தாராபுரம் — இப்படிக்கு

நாள் : 27.03.xxxx — அ. நெடுஞ்செழியன்

**இணைப்பு:**

1. கட்டணத்தொகை ரசீது.
2. கறிக்குழம்பு பொட்டலம்.

## நயம் பாராட்டுக

''கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போது அரிசிவரும் – குத்தி
உலையிலிட ஊரடங்கும் ஓர் அகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்'' – காளமேகப் புலவர்

**பாடல் உருவான வரலாறு:**

காளமேகப் புலவர் பசித்த வயிற்றுடன் நாகப்பட்டினம் நகரில் இருந்த காத்தன் என்பவனின் சத்திரத்துக்குப் போனாராம். ஆனால் அங்கே மாலை வரை சோறு சமைப்பதற்கான அறிகுறியே தென்படவில்லை. பசி முற்றியதால் புலவர் அங்கேயே சுருண்டு படுத்து விட்டார். பின் அடுத்த நாள் காலையில் சோறுண்ண அழைக்கப்பட்ட போது பாடிய பாடல்.

**பாடலின் கருத்து:**

ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த நாகையில் காத்தான் என்பவனின் சத்திரத்தில் மாலை மயங்கும் வேளையில் அரிசி மூட்டைகள் வரும். அதை குத்தி சமைக்கும் பக்குவத்திற்கு கொண்டு வந்து அடுப்பில் ஏற்ற இரவு வந்து விடும். சோறாக்கி இலையில் இடும் போது பொழுது விடிந்து விடும் என்ற பொருள் தொனிக்க பாடியதைக் கேட்ட காத்தன் பணிந்து காளமேகப் புலவரிடம் மன்னிப்பு வேண்டிட உட்பொருளை மாற்றினார் புலவர்.

காத்தனின் சத்திரத்தில் உலகில் எங்குமே அரிசி இல்லாமல் அஸ்தமிக்கும் வேளையிலும் அரிசி மூட்டைகள் வரும். அதை குத்தி சமைக்கும் பக்குவத்திற்கு கொண்டு வந்து அடுப்பில் ஏற்றுவதைக் கண்டதுமே ஊராரின் பசி அடங்கிவிடும். சோறாக்கி ஒரு கரண்டி அன்னம் இலையில் போட்டதும் விடிவெள்ளியாகிய சுக்கிரன் அதன் வெண்மை நிறம் கண்டு நாணி எழுந்து விடும்'' என்றாராம்.

**எதுகை நயம்:**

அடிதோறும் அல்லது சீர்தோறும் முதல் எழுத்து அளபொத்து நிற்க இரண்டாம் எழுத்து ஒன்று போல் வருவது எதுகை நயம்.

எ.கா: கத்துகடல்
அத்தமிக்கும்
உலையிட
இலையிட — அடி எதுகை

**மோனை நயம்:**

அடிதோறும் அல்லது சீர் தோறும் முதல் எழுத்து ஒன்று போல் வருவது மோனை நயம்.

எ.கா : அத்தமிக்கும் அரிசி
கத்துகடல் காத்தான்
உலையிலிட ஊரடங்கும்

**அணி நயம்:**

இப்பாடலில் இரட்டுற மொழிதலணி என்னும் சிலேடை அணி பயின்று வந்துள்ளது.

**பா நயம்:**

இப்பாடல் வெண்பா வகையைச் சார்ந்தது.

## மொழியோடு விளையாடு

**விடுபட்ட எழுத்துகளை நிரப்பி அந்த எழுத்துகளை மட்டும் இணைத்து ஒளிந்துள்ள ஒரு நூலின் பெயரைக் கண்டுபிடிக்க:**

1. இ ___ கு (பறவையிடம் இருப்பது)    கு ___ தி (சிவப்பு நிறத்தில் இருக்கும்)
   வா ___ (மன்னரிடம் இருப்பது)    அ ___ கா (தங்கைக்கு மூத்தவள்)
   ம ___ (அறிவின் மறுபெயர்)    பட ___ (நீரில் செல்வது)

**விடை :**

இறகு (பறவையிடம் இருப்பது)

குருதி (சிவப்பு நிறத்தில் இருக்கும்)

வாள் (மன்னரிடம் இருப்பது)

அக்கா (தங்கைக்கு மூத்தவள்)

மதி (அறிவின் மறுபெயர்)

படகு (நீரில் செல்வது)

நூலின் பெயர் திருக்குறள்.

## இரு சொற்களையும் ஒரே தொடரில் அமைத்து எழுதுக:

1. சிலை – சீலை PTA

சிலையைத் திரைச்சீலையால் மறைத்திருக்கிறார்கள்.

2. தொடு – தோடு PTA

தோடு செய்வது எப்படி என்று தொடுதிரையைப் பார்த்து அறிந்து கொண்டார்கள்.

3. மடு – மாடு

மடுவில் எருமை மாடுகள் குளித்தன.

4. மலை – மாலை PTA

அந்திமாலைப் பொழுதில் மலையினூடே சந்திரன் தோன்றும் காட்சி அழகானது.

5. வளி – வாளி

வளிமண்டல மேலடுக்கு சுழற்சியால் பெய்த மழையினால் வீட்டின் வெளியில் கிடந்த வாளியில் தண்ணீர் நிரம்பியது.

6. விடு – வீடு PTA

வீடு நோக்கி மகிழுந்தை விடுமாறு ஓட்டுநரிடம் கூறினாள் காவ்யா.

## அகராதியில் கண்டு பொருள் எழுதுக:

அ) ஊண் – உணவு
ஊன் – தசை, மாமிசம், உடல்

ஆ) திணை – ஒழுக்கம்
தினை – தானிய வகை

இ) அண்ணம் – மேல்வாய், உள்நாக்கு
அன்னம் – அரிசி, பறவை

ஈ) வெல்லம் – கரும்புச்சாறு
வெள்ளம் – நீர்ப்பெருக்கு

## அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக:

## ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.

விடை:

அன்புக்கு மொழியே இல்லை
அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்?
அஃறிணை உயிரிடமும் அன்பு
அன்பு எமது வடிவம்
அருளே ஆண்டவனின் குணம்



ஆ) 1. மானிடம் தழைக்க மகத்தான செயல் இது.

2. தனக்குக் கிடைத்த உணவையும் பகிர்ந்து உண்ணும் அன்பு உள்ளம்.

3. உயிரினங்களின் பசியைக் கூட பசியைக் கண்டவர்கள்தான் உணர முடியும்.

4. ஏழையின் உள்ளம் கடவுள் வாழும் இல்லமாகும்.

5. பகிர்ந்து உண்டு வாழ்வதே பூமிக்கு நல்லது.

## செயல் திட்டம்

**உணவு, விருந்து சார்ந்த பழமொழிகளையும் விழிப்புணர்வுத் தொடர்களையும் திரட்டி, அகரவரிசைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.**

1. அழையா வீட்டுக்கு நுழையாச் சம்பந்தி.
2. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது.
3. கூழானாலும் குளித்துக் குடி. கந்தையானாலும் கசக்கிக் கட்டு.
4. கொட்டிய பாலை நினைத்து குமுறி அழாதே.
5. சின்ன மீனைப் போட்டுப் பெரிய மீனைப் பிடி.
6. மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
7. மாரிக் காலத்தில் பதின்கல மோரும் கோடைக்காலத்தில் ஒரு படி நீருஞ் சரி.
8. முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படலாமா?
9. விருந்தும் மருந்தும் மூன்று நாளைக்கு.
10. வெளுத்ததெல்லாம் பாலாகுமா! கருத்ததெல்லாம் தண்ணீராகுமா!

## நிற்க அதற்கு தக

1. "தம்பி.. உனக்குப் பிடிச்ச காய் சொல்லு?" – "கேரட்"

"பிடிச்ச பழம்?" – "ஆப்பிள்"

பிடிச்ச காலை உணவு? – "நூடுல்ஸ்"

"மத்தியானத்துக்கு" – "ஃப்ரைடு ரைஸ்"

"ராத்திரி,,,,?" – "பீட்ஸா அல்லது பாஸ்தா"

இது ஏதோ ஆங்கிலப்படத்தின் வசனம் அல்ல. "சரியா சாப்பிட மாட்டேங்கிறான் டாக்டர்" என்று என்னிடம் அழைத்து வரப்பட்ட ஒரு சிறுவனுடனான என் உரையாடல். ஒட்டுமொத்த இளைய தலைமுறையும் பாரம்பரிய உணவை விட்டு வேகமாக விலகிச் சென்றது எப்படி? இட்லியும், சாம்பார் சாதமும். கத்தரிக்காய்ப் பொரியலும் இனி காணாமல் போய்விடுமா? அதிர்ச்சியான பதில், 'ஆம், காணாமல் போய்விடும்'! உங்கள் குழந்தைகள், "ஆடு, மாடுகளைத் தவிர மனுஷங்க கூட கீரையைச் சாப்பிடுவாங்களா மம்மி?" என எதிர்காலத்தில் கேட்கக்கூடும்!

மருத்துவர் கு. சிவராமனின் இக்கருத்திற்குச் சமூக அக்கறையுடனான உங்களின் பதில் என்னவாக இருக்கும்?

**நமது பதில்:**

இயற்கையோடு இயைந்த உணவுப் பழக்கத்தை நாம் கைவிட்டதாலேயே பன்னாட்டு மருந்து நிறுவனங்கள் பாரதத்தை நோக்கிப் படையெடுக்கின்றன. கடலை உருண்டையும், கல்கோனாவையும், பதநீரையும், சோளப் பணியாரத்தையும், தினைப் பாயாசத்தையும், குதிரைவாலி கொழுக்கட்டையையும் நாம் கைவிட்டதனாலேயே இன்று பலவித கொள்ளை நோய்களுக்கு ஆட்பட்டுக் கிடக்கிறோம்.

வளர்ச்சி, வேகம், கணினியுகம் என்று மாறி வரும் உலகில் இயற்கையை அழித்து முன்னேற முற்படுகிறோம். அமெரிக்க நிறுவனங்களுக்காக இங்கிருந்து கொண்டு நடு இரவில் வேலை பார்ப்பதால் பலர் மனநோயாளிகளாவே மாறி விடுகின்றனர். தூக்கமின்மையால் பல மோசமான பழக்க வழக்கங்களுக்கும் ஆட்படுகின்றனர். இந்நிலை மாற அளவோடு எல்லாச் சத்துகளும் கிடைக்கும்படியான உணவுகளை உண்டு சரியான நேரத்திற்கு உறங்கி, உடற்பயிற்சியும் செய்தால் வாழ்வு வளம் பெறும். விரைவு உணவகங்களில் விற்கப்படும் உணவுகளையும், பொட்டலப்படுத்தப்பட்ட உணவுகளையும் தவிர்த்தால் நோயின்றி வாழலாம்.

## கலைச் சொல் அறிவோம்:

1. செவ்விலக்கியம் - Classical literature
2. வட்டார இலக்கியம் - Regional literature
3. காப்பிய இலக்கியம் - Epic literature PTA
4. நாட்டுப்புற இலக்கியம் - Folk literature PTA
5. பக்தி இலக்கியம் - Devotional literature
6. நவீன இலக்கியம் - Modern literature
7. பண்டைய இலக்கியம் - Ancient literature





இயல் - 3 வாழ்வியல்

பண்பாடு - கூட்டாஞ்சோறு

# 6. திருக்குறள்

திருவள்ளுவர்

## ஆசிரியர் குறிப்பு:

- திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர்.
- தமிழுலகம் இவரை முதற்பாவலர், தெய்வப்புலவர், செந்நாப்போதார், பொய்யில் புலவர், பெரு நாவலர் முதலிய பல பெயர்களால் போற்றுகின்றது.
- பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் எனப் பொதுநெறி காட்டியவர் திருவள்ளுவர்.
- இவர் கி.மு.31 இல் பிறந்தவர் என உறுதி செய்யப்பட்டுத் திருவள்ளுவர் ஆண்டு கணக்கிடப்படுகிறது.
- தமிழக அரசு தைத் திங்கள் இரண்டாம் நாளைத் திருவள்ளுவர் நாளாக அறிவித்து கொண்டாடி வருகின்றது.

## நூற் குறிப்பு:

- திரு + குறள் = திருக்குறள். மேன்மையான குறள் வெண்பாக்களால் ஆகிய நூலாதலின், திருக்குறள் எனப் பெயர் பெற்றது.
- இஃது ஈரடிகளில் இயற்றப்பட்டிருப்பினும் விரிவான பொருளைத் தருகின்றது. இந்நூல் நாடு, மொழி, இனம், மதம், காலம் ஆகியவற்றைக் கடந்து நிற்கிறது. உலகப் பொதுமறை எனப் போற்றப் பெறுகிறது.
- திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.
- இஃது அறம், பொருள், இன்பம் என முப்பாலாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒன்பது இயல்களையும், நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களையும், ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்களையும் கொண்டு விளங்குகிறது.
- ஆங்கிலம், கிரேக்கம், இலத்தீன் முதலிய உலக மொழிகள் பலவற்றிலும் இந்நூல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.
- திருக்குறளுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர். தமிழ்ச் சான்றோர் பலரால் இயற்றப்பட்ட திருவள்ளுவமாலை, திருக்குறளின் பெருமைகளைப் போற்றிப் புகழ்கிறது.
- பாவேந்தர் பாரதிதாசன் திருக்குறளை

  'வள்ளுவனைப் பெற்றதால் பெற்றதே புகழ் வையகமே' என்றும்

  இணையில்லை முப்பாலுக்கு இந்நிலத்தே' என்றும், போற்றிப் புகழ்ந்துள்ளார்.

## ஒழுக்கமுடைமை

1. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| ஒழுக்கம் | – | உயர்ந்த ஒழுக்கமானது |
| விழுப்பம் | – | சிறப்பான உயர்வு |
| உயிரினும் | – | உயிரை விட |
| ஓம்பப் படும் | – | பேணி பாதுகாக்கப்படும். |

பொருளுரை :

ஒருவற்கு அனைத்துச் சிறப்புகளையும் தருவது ஒழுக்கமே. ஆதலால் அவ்வொழுக்கத்தை உயிரினும் மேலானதாகக் கருதிப் பேணிக் காக்க வேண்டும்.

2. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| எய்துவர் | – | சிறப்படைவர் |
| இழுக்கத்தின் எய்துவர் | – | ஒழுக்கம் தவறுபவர் |
| எய்தாப் பழி | – | அடையக் கூடாத பழி |

பொருளுரை :

ஒழுக்கமுடையோர் மேன்மை அடைவர்; ஒழுக்கம் இல்லாதவர் அடையக் கூடாத பழியை அடைவர்.

3. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| உலகத்தோடு ஒட்ட | – | உயர்ந்தாரோடு பொருந்தி |
| ஒழுகல் | – | நடத்தல், வாழ்தல் |
| பல கற்றும் | – | எவ்வளவு தான் கற்றிருந்தாலும் |
| கல்லார் | – | கல்லாதவர் |
| அறிவிலாதார் | – | அறிவில்லாதவர் |

பொருளுரை :

உலகத்தோடு ஒத்து வாழக் கல்லாதார் பல நூல்களைக் கற்றவராயினும் அறிவு இல்லாதவரே ஆவார்.

## மெய் உணர்தல்

4. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| எத்தன்மைத் தாயினும் | – | எந்த தன்மையோடு தோன்றினாலும் |
| மெய்ப்பொருள் | – | உண்மையான பொருள் |

பொருளுரை :

எந்த பொருளும் எந்தத் தன்மையோடு தோன்றினாலும் மயங்காமல், அந்த பொருளின் உண்மையான இயல்பைத் தெளிவாகக் காண்பதே அறிவாகும்.

5. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| காமம் | – | ஆசை |
| வெகுளி | – | சினம் |
| மயக்கம் | – | அறியாமை |
| நாமம் | – | பெயர் |

பொருளுரை:

ஆசை, சினம், அறியாமை என்ற மூன்றும் அழிந்தால் அவற்றால் வரும் துன்பமும் அழியும்.

## பெரியாரைத் துணைக்கோடல்

6. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| பேணி | – | போற்றி |
| தமரா | – | உறவினராக |

பொருளுரை:

அறிவறிந்த பெரியோரைப் போற்றி உறவாகக் கொள்ளுதலே, ஒருவர் பெற வேண்டிய பேறுகளுள் எல்லாம் அரிய பேறாகும்.

7. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| இடிப்பார் | – | கடிந்து அறிவுரை கூறும் பெரியோர் |
| ஏமரா | – | பாதுகாவல் இல்லாத |
| இலானும் | – | இல்லாமலேயே |

பொருளுரை:

குற்றம் கண்ட இடத்து இடித்துத் திருத்தும் பெரியாரின் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளாத அரசன், தன்னைக் கெடுக்கும் பகைவர்கள் இல்லை எனினும் தானே கெட்டழிவான்.

8. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| பல்லார் | – | பல பேர் |
| பகைகொளலிற் | – | பகைமை கொள்வதை விட |
| பத்தடுத்த | – | பத்து மடங்கு |
| தீமைத்தே | – | தீமையானதே |
| தொடர்கை விடல் | – | தொடர்பினைக் கைவிடுதல் |

பொருளுரை:

நல்லவர் ஒருவரின் நட்பைக் கைவிடுவது, பலரை பகைத்துக் கொள்வதனை விடப் பன்மடங்கு தீமை உடையதாகும்.

## கொடுங்கோன்மை

9. வேலோடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (உவமையணி)

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| வேலொடு நின்றான் | – | ஆட்சிக்குரிய செங்கோலை ஏந்தி நின்ற அரசன் |
| இடுவென்றது போலும் | – | குடிகளை வருத்தி வரிவிதிப்பது போல் |
| கோலொடு நின்றான் | – | ஆயுதங்களைக் காட்டி வழிப்பறி செய்பவன் |
| இரவு | – | யாசிப்பு |

பொருளுரை:

ஆட்சியதிகாரத்தைக் கொண்டுள்ள அரசன் தன் அதிகாரத்தைக் கொண்டு வரிவிதிப்பது, வேல் போன்ற ஆயுதங்களைக் காட்டி வழிப்பறி செய்வதற்கு நிகரானதாகும்.

10. நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும்.

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| நாடி | – | நன்மை, தீமைகளை ஆராய்ந்து |
| நாடி முறைசெய்யா | – | முறைப்படுத்தி சரிசெய்யாத |
| கெடும் | – | அழியும் |

பொருளுரை:

தன் நாட்டில் நிகழும் நன்மை தீமைகளை ஒவ்வொரு நாளும் ஆராய்ந்து முறைப்படுத்தி சரி செய்து ஆட்சி செய்யாத மன்னவன், தன் நாட்டை நாள்தோறும் இழக்க நேரிடுவான்.

## கண்ணோட்டம்

11. பண்என்னாம் பாடற் கியைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். (எடுத்துக்காட்டு உவமையணி)

சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| பண் | – | பாடல் |
| என்னாம் | – | என்ன பயன்? |
| இயைபின்றேல் | – | இயல்பாக (பொருத்தமாக) இல்லாவிட்டால் |
| கண்என்னாம் | – | கண்களால் என்ன பயன்? |
| கண்ணோட்டம் | – | இரக்கம் |

பொருளுரை :

பாடலோடு பொருந்தவில்லையெனில் இசையால் என்ன பயன்? அது போலவே இரக்கம் இல்லாவிட்டால் கண்களால் என்ன பயன்?

12. கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்
குரிமை உடைத்திவ் வுலகு.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| கருமம் சிதையாமல் | – | கடமை தவறாமல் |
| கண்ணோட வல்லார்க்கு | – | இரக்கம் காட்டுபவருக்கு |
| உரிமை | – | சொந்தம் |
| உடைத்திவ் வுலகு | – | உரிமையானதாகும் இந்த உலகு |

பொருளுரை:

நடுநிலையாகக் கடமை தவறாமல் இரக்கம் காட்டுபவருக்கு இவ்வுலகமே உரிமை உடையதாகும்.

13. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| பெயக்கண்டும் | – | கொடுப்பதைக் கண்டபிறகும் |
| நஞ்சுண் டமைவர் | – | நஞ்சையே தருபவர் |
| நயத்தக்க | – | விரும்பத்தக்க |

பொருளுரை:

எல்லாராலும் விரும்பத்தக்க நாகரிகத்தை விரும்புபவர், தமக்கு நெருக்கமானவர் நஞ்சையே தருகிறார் என அறிந்தும் கண்ணோட்டம் காரணமாக அதை உண்டு அவருடன் பழகுவர்.

## ஆள்வினை உடைமை

14. அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| அருமை உடைத்தென்று | – | முடியாது என்று எண்ணி |
| அசாவாமை | – | தளர்ச்சி இல்லாமை |
| பெருமை முயற்சி தரும் | – | முயற்சியானது பெருமையைத் தரும் |

பொருளுரை:

ஒரு செயல் முடிப்பதற்கு இயலாதது என்று எண்ணிச் சோர்வு அடையாதிருக்க வேண்டும். அச்செயலை முயற்சியுடன் முடிப்பது பெருமை தரும்.

15. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| தாளாண்மை | – | விடாமுயற்சி |
| தகைமைக்கண் | – | உயர்ந்த பண்பு |
| தங்கிற்றே | – | அமைந்ததே (அமைந்தால் தான்) |
| வேளாண்மை | – | பிறருக்கு உதவும் தன்மை |
| செருக்கு | – | உயர்ந்த நிலை |

பொருளுரை:

விடாமுயற்சி என்ற உயர்பண்பு கொண்டவர்களால் தான் பிறருக்கு உதவுதல் என்ற உயர்ந்த நிலையை அடைய முடியும்.

16. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

சொற்பொருள்

| | | |
|---|---|---|
| திருவினை | – | செல்வம் சேரும் செயல் |
| திரு | – | செல்வம் |
| முயற்றின்மை | – | முயற்சி இல்லாமை |
| இன்மை | – | வறுமை |
| புகுத்தி விடும் | – | கொடுத்து விடும் |

பொருளுரை:

முயற்சி செய்தால் ஒருவர்க்குச் செல்வம் பெருகும். முயற்சி இல்லாவிட்டால் அவருக்கு வறுமையே வந்து சேரும்.

17. பொறிஇன்மை யார்க்கும் பழவுன் அறிவறிந்தாறிவறிந்
தாள்வினை இன்மை பழி

சொற்பொருள்

| | |
|---|---|
| பொறியின்மை | – பொறிகள் இல்லாதிருத்தல் (பார்வை, கேட்டல், தொடுதல், நுகர்தல், சுவைத்தல் ஆகிய ஐந்து புலன்கள்) |
| அறிவறிந்து | – அறிய வேண்டியவற்றை அறிந்து |
| ஆள்வினை | – முயற்சி |
| பழி | – இழிவு |

பொருளுரை:

ஐம்புலன்களில் ஏதேனும் குறை இருப்பினும் இழிவன்று; அறிய வேண்டியதை அறிந்து முயற்சி செய்யாததே இழிவாகும்.

18. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

சொற்பொருள்

| | |
|---|---|
| ஊழையும் | – முன்வினையையும் |
| உப்பக்கம் காண்பர் | – தோற்கடித்து வெற்றி பெறுவர் |
| உலைவின்றி | – கலங்குதலின்றி |
| தாழாது | – சோர்வில்லாது |
| உஞற்று பவர் | – முயற்சி செய்வோர் |

பொருளுரை:

சோர்விலாது முயற்சி செய்வோர், செய்கின்ற செயலுக்கு இடையூறாக வரும் முன்வினை என்னும் விதியையும் தோற்கடித்து வெற்றியடைவர்.

## நன்றிஇல் செல்வம்

19. கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க் கடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்.

சொற்பொருள்

| | |
|---|---|
| கொடுப்பதூஉம் | – பிறருக்கு கொடுப்பது |
| துய்ப்பதூஉம் | – தானும் அனுபவிப்பது |
| இல்லார்க் கடுக்கிய | – இல்லாதவர்கள் கட்டுக்கட்டாய் அடுக்கிய |
| உண்டாயினும் இல் | – செல்வம் இருந்தாலும் பயன் இல்லை |

பொருளுரை:

பிறருக்குக் கொடுக்காமலும் தானும் அனுபவிக்காமலும் இருப்பவர் அடுக்கடுக்காய்ப் பல கோடிப் பொருள்கள் பெற்றிருந்தாலும் அதனால் பயன் இல்லை.

20. நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று. (உவமையணி)

சொற்பொருள்

| | |
|---|---|
| நச்சப்படாதவன் | – பிறருக்கு உதவி செய்யாதவனது |
| செல்வம் | – செல்வமானது |
| நடுஊருள் | – நடு ஊரில் |
| பழுத்தற்று | – பழுத்திருப்பதைப் போன்றது |

பொருளுரை:

பிறருக்கு உதவி செய்யாதவனிடத்தில் உள்ள செல்வம் நடு ஊரில் நச்சுமரம் நிறைய பழம் பழுத்து விளங்குவது போன்றது.

## மதிப்பீடு

**இலக்கணக் குறிப்பு:**

1. ஒழுக்கம் – தொழிற்பெயர்
2. படும் – செய்யும் என்னும் வாய்ப்பாட்டு வினைமுற்று
3. எய்தாப் – ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம்
4. எய்துவர் – படர்க்கை பலர்பால் வினைமுற்று
5. கொளல் – தொழிற்பெயர்
6. பகைகொளல் – இரண்டாம் வேற்றுமைத் தொகை
7. நாமம் கெட – இழிவு சிறப்பும்மை
8. கொடுப்பதூஉம், துய்ப்பதூஉம் – இன்னிசை அளபெடை

## பலவுள் தெரிக

**கூடுதல் வினா:**

1. பேணி என்ற சொல் தரும் பொருள் ________.
   அ) உறவு  ஆ) அன்பு  இ) போற்றி  ஈ) கடமை
   **விடை:** இ) போற்றி

2. எண்ணம் – எனும் பொருள் தரும் சொல் ________.
   அ) நினைவு  ஆ) நாமம்  இ) சிந்தனை  ஈ) உறவு
   **விடை:** ஆ) நாமம்

3. 'மயக்கம்' என்னும் சொல் தரும் பொருள் ________.
   அ) ஆசை  ஆ) சினம்  இ) அறியாமை  ஈ) அவா
   **விடை:** இ) அறியாமை

4. 'திரு' என்ற சொல்லின் பொருள் ________.
   அ) மேன்மை  ஆ) உயர்வு  இ) புகழ்  ஈ) செல்வம்
   **விடை:** ஈ) செல்வம்

5. 'ஊழ்' என்னும் சொல்லின் பொருள் ________.
   அ) சினம்  ஆ) மயக்கம்  இ) முன்வினை  ஈ) காலம்
   **விடை:** இ) முன்வினை

6. திருவள்ளுவர் நாள் ________.
   அ) தைத் திங்கள் இரண்டாம் நாள்  ஆ) தமிழ்ப்புத்தாண்டு நாள்
   இ) தைப்பூச திருநாள்  ஈ) பங்குனி உத்திர திருநாள்
   **விடை:** அ) தைத் திங்கள் இரண்டாம் நாள்

7. குறள் என்பது ________.
   அ) நேரிசை ஆசிரியப்பா  ஆ) கலிப்பா
   இ) இரண்டடி வெண்பா  ஈ) வஞ்சிப்பா
   **விடை:** இ) இரண்டடி வெண்பா

## குறுவினா

1. நச்சப்படாதவன் செல்வம் – இத்தொடரில் வண்ணமிட்ட சொல்லுக்குப் பொருள் எழுதுக.
   விடை: நச்சப்படாதவன் – பிறருக்கு உதவி செய்யாதவன்

2. கெடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
   கோடிஉண் டாயினும் இல் – இக்குறளில் வரும் அளபெடைகளை எடுத்து எழுதுக.
   விடை: கொடுப்பதூஉம், துய்ப்பதூஉம் – இன்னிசை அளபெடை

3. பொருளுக்கேற்ற அடியைப் பொருத்துக:

| | |
|---|---|
| உயிரை விடச் சிறப்பாகப் பேணிக் காக்கப்படும் | ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை |
| ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்தது போன்றது | உயிரினும் ஓம்பப்படும் |
| ஒழுக்கத்தின் வழி உயர்வு அடைவர் | நடு ஊருள் நச்சுமரம் பழுத்தற்று |

விடை:

| | |
|---|---|
| உயிரை விடச் சிறப்பாகப் பேணிக் காக்கப்படும் | உயிரினும் ஓம்பப்படும். |
| ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்தது போன்றது | நடு ஊருள் நச்சுமரம் பழுத்தற்று |
| ஒழுக்கத்தின் வழி உயர்வு அடைவர் | ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை |

4. எய்துவர் எய்தாப் பழி – இக்குறளடிக்குப் பொருந்தும் வாய்பாடு எது? PTA

அ) கூவிளம் தேமா மலர் ஆ) கூவிளம் புளிமா நாள்

இ) தேமா புளிமா காசு ஈ) புளிமா தேமா பிறப்பு

விடை: அ) கூவிளம் தேமா மலர்

**கூடுதல் வினா:**

5. பாடலோடு பொருந்தாத இசையால் பயனில்லை என்னும் உவமையைக் கொண்ட திருக்குறளை எழுதுக. PTA

விடை: பண்என்னாம் பாடற் கியைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. வேலொடு நின்றான் இடுஎன்றது போலும்
கோலொடு நின்றான் இரவு – குறளில் பயின்று வரும் அணியை விளக்குக.

இக்குறளில் உவமை அணி பயின்று வந்துள்ளது.

**அணி விளக்கம்:**

கூறக் கருதிய பொருளை நன்கு தெரிந்த ஒன்றைக் காட்டி விளக்குவது. ஒரு பொருளை இன்னொரு பொருளுடன் அழகுபடுத்திக் கூறுவது. உவமான உவமேயங்களுக்கிடையே உவம உருபு வெளிப்படையாக வருவது.

**அணிப் பொருத்தம்:**

ஆட்சியதிகாரத்தைக் கொண்டுள்ள அரசன் தன் அதிகாரத்தைக் கொண்டு வரிவிதிப்பது – உவமானம்

வேல் போன்ற ஆயுதங்களைக் காட்டி வழிப்பறி செய்யும் திருடர்களுக்குச் சமம் – உவமேயம்

போல என்பது உவம உருபு.

2. கவிதையைத் தொடர்க.



தண்ணீர் நிறைந்த குளம்
தவித்தபடி வெளிநீட்டும் கை
கரையில் கைபேசி படமெடுத்தபடி
முகநூலில் போட அலைகிறதே
தங்களுக்கும் இந்த நிலை
வரும் என தெரியாமல்

## கூடுதல் வினாக்கள்:

1. ஒழுக்கமுடைமை குறித்து வள்ளுவர் கூறும் கருத்துகள் யாவை?
   - ஒழுக்கம் எல்லார்க்கும் சிறப்பைத் தருவதால் அவ்வொழுக்கத்தை உயிரினும் மேலானதாகப் பேணிக் காக்க வேண்டும்.
   - ஒழுக்கமுடையவர் மேன்மை அடைவார்கள். அதில் தவறுபவர் அடையக் கூடாத பெரும்பழியை அடைவர்.
   - உலகத்தோடு ஒத்து வாழக் கல்லாதார், பல நூல்களைக் கற்றாராயினும் அறிவு இல்லாதவரே.

2. மெய் உணர்தல் அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் கருத்துகள் யாவை?
   - ஒரு பொருள் எத்தன்மை உடையதாயினும், அப்பொருளின் உண்மை நிலை காண்பதே அறிவு.
   - பெண்ணாசை, கோபம், அறியாமை மூன்றுமழிந்து வாழ்ந்தால் துன்பங்கள் வாராது ஒழியும்.

3. பெரியாரைத் துணைக்கோடல் அதிகாரம் வாயிலாக வள்ளுவம் உணர்த்தும் கருத்துகள் யாவை?
   - அறிவறிந்த பெரியோரைப் போற்றி உறவாகக் கொள்ளுதலே, ஒருவர் பெற வேண்டிய பேறுகளுள் எல்லாம் அரிய பேறாகும்.
   - குற்றம் கண்ட இடத்து இடித்துத் திருத்தும் பெரியாரின் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளாத அரசன், தன்னைக் கெடுக்கும் பகைவர்கள் இல்லை எனினும் தானே கெட்டழிவான்.
   - நல்லவர் ஒருவரின் நட்பைக் கைவிடுவது பலரைப் பகைத்துக் கொள்வதை விடப் பத்து மடங்கு தீமை உடையதாகும்.

4. கொடுங்கோன்மையால் ஏற்படுவன குறித்து விளக்குக.
   - செங்கோல் ஏந்திய மன்னன் தன் அதிகாரத்தைக் கொண்டு வரிவிதிப்பது. வழிப்பறி செய்வோன் வேல் போன்ற ஆயுதங்களைக் காட்டி பொருளைப் பறிப்பது போன்றதாகும்.
   - தன் நாட்டில் நிகழும் நன்மை தீமைகளை ஒவ்வொரு நாளும் ஆராய்ந்து ஆட்சி செய்யாத மன்னவன், தன் நாட்டை நாள் தோறும் இழக்க நேரிடுவான்.

5. இரக்கப் பண்பு குறித்து வள்ளுவர் கூறுவன யாவை?
   - பாடலோடு பொருந்தவில்லையெனில் இசையால் என்ன பயன்? அது போலவே இரக்கம் இல்லாவிட்டால் கண்களால் என்ன பயன்?
   - நடுநிலையாகக் கடமை தவறாமல் இரக்கம் காட்டுபவருக்கு இவ்வுலகமே உரிமை உடையதாகும்.
   - அனைவரும் விரும்பும் நாகரிகம் உடையவர். தம்முடன் பழகியவர் நஞ்சை இடக்கண்டும் அதை உண்பவர் போலாவார்.

6. ஆள்வினை உடைமை என்னும் விடாமுயற்சி குறித்து கூறுக.
   - ஒரு செயலைச் செய்புமுன் 'செய்வதற்கரியது' என மலைக்க வேண்டாம். அச்செயலை முயற்சியுடன் முடிப்பது பெருமை தரும்.
   - பிறருக்கு உதவும் உயர்ந்த எண்ணம், விடா முயற்சியுடன் உழைப்பவரிடம் உண்டாகும்.
   - முயற்சி ஒருவனுக்குச் செல்வத்தை பெருகச் செய்யும். முயற்சியின்மை வறுமையைக் கொடுக்கும்.

- உடல் ஊனம் ஒருவர்க்குப் பழியில்லை. அறிய வேண்டியவற்றை அறிந்து முயற்சி செய்யாமையே பழியாகும்.
- மனம் தளராமலும் காலம் தாழ்த்தாமலும் உழைப்பவரின் முயற்சியைக் கண்டு விதியும் தோல்வியுறும்.

7. 'நன்றியில் செல்வம்' – வள்ளுவர் வழி நின்று விளக்குக.

- பிறர்க்கு கொடுக்காதான், தானும் உண்ணாதானுக்குப் பல கோடி பொருள்கள் இருந்தென்ன பயன்?
- பிறருக்கு உதவி செய்யாதவன் பெற்ற செல்வம் ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்தது போன்றதாகும்.

## கற்பவை கற்றபின்

1. படங்கள் உணர்த்தும் குறளின் கருத்தினை மையமிட்டு வகுப்பில் கலந்துரையாடுக.



சிவக்குமார் : முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் தெரியுமா?

செழியன் : ஐம்பது ஆண்டுகளுக்கு முன் மும்பையில் சிறு அறையில் தன் துணிக்கடையை திறந்து வியாபாரம் செய்த திருபாய் அம்பானி தன் நிறுவனத்தை ரிலையன்ஸ் என்ற பெயரில் எந்தளவிற்கு விரிவுபடுத்தி உள்ளார் தெரியுமா?

ஆனந்த் : அதே போல் உழைத்து வாழ்வில் முன்னேறிய எத்தனையோ பெரிய மனிதர்கள் உள்ளனர்.

திருமால் : இதோ இந்தப் படத்தில் பாருங்கள்! வெயிலென்றும் பாராமல், மழையென்றும் பாராமல் தான் பாடுபட்டு வயலில் உழைத்த பயிரை அறுவடை செய்து கொண்டு செல்லும் விவசாயி போல் நாமும் உழைப்போம்.

கதிர் : விதைக்கும் காலத்தில் சோம்பலாக படுத்து விட்டால் அறுவடை எப்படி நடத்த முடியும்? நாமும் பள்ளிப் பருவத்திலே நன்கு படிக்காவிட்டால் வாலிப பருவத்தில் நல்ல உயர்ந்த பதவிகளுக்கு எப்படிச் செல்ல முடியும்?

சிவக்குமார் : படத்தில் உள்ளது போல் சோம்பியிருந்தால் முன்னேற்றம் எப்படிக் கிட்டும்? வாய்ப்புகள் வாசல் கதவைத் தட்டும் என்று நினைக்காமல் ஒவ்வொரு கதவாக நாம் தான் தேடிப்போய் தட்ட வேண்டும். கிடைக்கும் சிறு சிறு வாய்ப்புகளையும் பயன்படுத்தி முன்னேற வேண்டும்.

செழியன் : தளர்ச்சி இல்லாத ஊக்கமே வாழ்க்கையில் வெற்றிக்கு அடிப்படை. வாழ்க்கையாகிய பயணத்தில் ஓய்வுக்கு இடமே இல்லை. ஒரு செடியின் வெற்றி பூவில் உள்ளது. அதனைப் போல் நாமும் முயற்சி செய்து முன்னேறுவோம்.

முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்து விடும்.



பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல்; கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்.

மாயாண்டி : வாழ்க்கையில் இரக்கமும் மனிதாபிமானமும் அனைவருக்கும் வேண்டும்.

கருப்பசாமி : வறியோர்க்கு ஒன்று தருவதே ஈகை. அந்தப் பண்பு இரக்க குணம் இருந்தால் மட்டுமே வரும்.

முகிலன் : ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம் என்று சொல்வார்களே!

முருகன் : மற்றவர்களுடைய உணர்ச்சிகளைக் கொஞ்சங்கூட பொருட்படுத்தாமல் கருணையின்றி நடந்து கொண்டால் தான் வாழ்வில் வெற்றி பெற முடியும் என்று பொதுவான நினைப்பு உள்ளது.

தமிழ்ச்செல்வி : இறக்கும் வாழ்வில் இரக்கம் கொண்டே இருக்கும் நிலையில் இனிமை காண்போம்.

மாணிக்கம் : நண்பர்களே! படத்தைப் பாருங்கள் ஏழையின் வேண்டுதலுக்கு செவிமடுக்காமல் தனித்துண்ணும் காட்சியைப் பாருங்கள்.

சூர்யா : எங்கள் தெருவில் ஒரு குடும்பம் கரும்பாலையில் வேலை செய்து கொண்டிருந்தார்கள். திடீரென்று ஆலையை மூடிவிட்டதால் மிகவும் வறுமையில் உழன்றார்கள். எங்கள் தெருவில் மற்றவர்கள் எல்லாம் உதவியதால் மசாலாப் பொருள்களை வாங்கி வந்து அரைத்து பொட்டலப்படுத்தி சந்தையில் கொண்டு சென்று விற்றார்கள். இன்று மிகப்பெரிய சமையல் பொடி ஆலையை நடத்துகிறார்கள்.

அரவிந்த் : கண்ணுக்கு அழகே இரக்க குணம் தானே நண்பர்களே,

செல்வம் : ஆம். பாடலோடு பொருந்தாத இசை எப்படி பயன் இல்லையோ அதே போல இரக்கம் இல்லாத கண்ணும் பயனில்லாததே

ஆறுமுகம் : ஆம். அடுத்த படத்தில் சரியாகப் பாடாததால் பார்வையாளர்கள் அனைவரும் வெளியே செல்வதைக் கவனிக்கவும்.

முகமது : இசை என்பதே இனிமைக்குத்தான். இனிமையில்லாத இசையினால் என்ன பயன்? அதுபோல இரக்கம் இல்லாத கண்ணினாலும் பயன் இல்லை.

2. கதைக்குப் பொருத்தமான குறளைத் தேர்வு செய்து காரணத்தை எழுதுக.

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

எவ்வளவு தான் படித்து இருந்தாலும், கூட வியர்வை பொங்கிய உடலுடன் இருப்பவர்களைப் பார்த்து, அவர்களுடன் வண்டியில் ஏற மனமின்றி நடந்து வந்ததால், தலையில் அடிபட்டு ஆபத்தான நிலையில் இருக்கிறார் சூட்டுக்காரர். எனவே அவர் பல கற்றும் அறிவிலாதவரே.

## அலகுத் தேர்வு இயல் - 3

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** 4 × 1 = 4

1. காசிக் காண்டம் என்பது
   அ) காசி நகரின் வரலாற்றைப் பாடும் நூல்
   ஆ) காசி நகரத்தைக் குறிக்கும் மறு பெயர்
   இ) காசி நகரின் பெருமையைப் பாடும் நூல்
   ஈ) காசி நகரத்திற்கு வழிப்படுத்தும் நூல்

2. ''சிலம்பு அடைந்திருந்த பாக்கம் எய்தி'' – என்னும் அடியில் பாக்கம் என்பது _____.
   அ) புத்தூர் ஆ) மூதூர் இ) பேரூர் ஈ) சிற்றூர்

3. ''மருந்தே ஆயினும் விருந்தொடு உண்'' என்று கூறும் நூல்______.
   அ) கொன்றை வேந்தன் ஆ) நற்றிணை
   இ) சிறுபாணாற்றுப்படை ஈ) புறநானூறு

4. அறிஞருக்கு நூல், அறிஞரது நூல் ஆகிய சொற்றொடர்களில் பொருளை வேறுபடுத்தக் காரணமாக அமைவது
   அ) வேற்றுமை உருபு ஆ) எழுவாய்
   இ) உவம உருபு ஈ) உரிச்சொல்

**II. விடைக்கேற்ற வினாவை எழுதுக:** 1 × 1 = 1

1. விருந்து புரப்பது குறைந்ததால் சத்திரங்கள் பெருகின.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. விருந்தோம்பல் குறித்து வள்ளுவர் கூறும் கருத்துகள் யாவை?
2. 'இறடிப் பொம்மல் பெறுகுவீர்' – இத்தொடர் உணர்த்தும் பொருளை எழுதுக.

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி.** 2 × 3 = 6

1. காசிக்காண்டம் உணர்த்தும் இல்லற ஒழுக்கங்களை எடுத்தெழுதுக.
2. கூத்தனைக் கூத்தன் ஆற்றுப்படுத்தலைக் கூத்தராற்றுப்படை எவ்வாறு காட்டுகிறது?

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** 1 × 8 = 8

1. அன்னமய்யா என்னும் பெயருக்கும் அவரின் செயலுக்கும் உள்ள பொருத்தப்பாட்டினை கோபல்லபுரத்து மக்கள் கதைப்பகுதி கொண்டு கொண்டு விவரிக்க.

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.**

அ) இலக்கணக் குறிப்பு தருக:– 1 × 1 = 1

தமிழ் வாழ்க

ஆ) இரு சொற்களையும் ஒரே தொடரில் அமைத்து எழுதுக:– 2 × 1 = 2

1. சிலை – சீலை
2. வளி – வாளி

**VII. அடிபிறழாமல் எழுதுக.** 1 × 4 = 4

விருந்தினனாக என தொடங்கும் மனப்பாடலை எழுதுக.



இயல் - 4

உரைநடை

## அறிவியல் தொழில்நுட்பம் – நான்காம் தமிழ்

# 1. செயற்கை நுண்ணறிவு



## பலவுள் தெரிக

### பாடநூல் வினாக்கள்:

1. தலைப்புக்கும், குறிப்புக்கும் பொருத்தமான விடையைத் தேர்ந்தெடுக்க. PTA

தலைப்பு : செயற்கை நுண்ணறிவு

குறிப்புகள் : கண்காணிப்புக் கருவி, அசைவு நிகழும் பக்கம் தன் பார்வையைத் திருப்புகிறது.

திறன்பேசியில் உள்ள வரைபடம் போக்குவரத்திற்குச் சுருக்கமான வழியைக் காண்பிப்பது.

அ) தலைப்புக்குப் பொருத்தமான குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

ஆ) குறிப்புகளுக்குத் தொடர்பில்லாத தலைப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

இ) தலைப்புக்குத் தொடர்பில்லாத குறிப்புகள் அளிக்கப்பட்டுள்ளன.

ஈ) குறிப்புகளுக்குத் பொருத்தமில்லாத தலைப்பு வழங்கப்பட்டுள்ளது.

விடை : அ) தலைப்புக்குப் பொருத்தமான குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

2. பாரத ஸ்டேட் வங்கியின் உரையாடு மென்பொருள் எது? PTA

அ) துலா ஆ) சீலா இ) குலா ஈ) இலா

விடை : ஈ) இலா

### கூடுதல் வினாக்கள்:

1. ________ அழகான கட்டுரையைச் சில நொடிகளில் உருவாக்கிவிடும்.

அ) வாட்சன் ஆ) வேர்டுஸ்மித் இ) பெப்பர் ஈ) ஆப்பிள்

விடை : ஆ) வேர்டுஸ்மித்

2. __________ இயந்திர மனிதனை வரவேற்பாளராகவும், பணியாளராகவும் வணிக நிறுவனங்களில் பயன்படுத்துகின்றனர்.

அ) பெப்பர் ஆ) வாட்சன் இ) வேர்டுஸ்மித் ஈ) மேடிசன்

விடை : அ) பெப்பர்

3. மருத்துவம் செய்யும் முறைகளைப் பட்டறிவு மிக்க மருத்துவரைப் போல பரிந்துரை செய்ய __________ பயன்படுத்தப்படுகின்றது.

அ) மனிதவள ஆராய்ச்சி ஆ) தொழிற்புரட்சி

இ) செயற்கை நுண்ணறிவு ஆராய்ச்சி ஈ) மீத்திறன் ஆராய்ச்சி

விடை : இ) செயற்கை நுண்ணறிவு ஆராய்ச்சி

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. செயற்கை நுண்ணறிவைக் கொண்ட இயந்திரம் மனிதர்களுடன் சதுரங்கம் முதலான விளையாட்டுகளை விளையாடுகிறது.

விடை : மனிதர்களுடன் சதுரங்கம் முதலான விளையாட்டுகளை விளையாடும் இயந்திரம் எது?

2. பாரத ஸ்டேட் வங்கி 'இலா' என்னும் உரையாடு மென் பொருளை உருவாக்கியிருக்கிறது.

விடை : பாரத ஸ்டேட் வங்கி உருவாக்கியிருக்கும் மென் பொருள் யாது?

3. செயற்கை நுண்ணறிவு என்பது ஒரு மென்பொருள் அல்லது கணினிச் செயல்திட்ட வரைவு எனலாம்.

விடை : செயற்கை நுண்ணறிவு என்பது யாது?

4. இயல்பான மொழிநடையை உருவாக்குதல் என்னும் மென்பொருளுக்கு வேர்டுஸ்மித் என்று பெயர்.

விடை : இயல்பான மொழிநடையை உருவாக்குதல் என்னும் மென்பொருளின் பெயர் என்ன?

5. செயற்கை நுண்ணறிவுக் கருவியான வாட்சன், சில நிமிடங்களில் நோயாளி ஒருவரின் புற்றுநோயைக் கண்டுபிடித்தது.

விடை : சில நிமிடங்களில் நோயாளி ஒருவரின் புற்றுநோயைக் கண்டுபிடித்தது எது?

6. வேர்டுஸ்மித் என்ற எழுத்தாளி, தகவல்களைக் கொண்டு சில நொடிகளில் அழகான கட்டுரையை உருவாக்கிவிடும்.

விடை : எது தகவல்களைக் கொண்டு சில நொடிகளில் அழகான கட்டுரையை உருவாக்கிவிடும்?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. இணைய பயன்பாட்டின் பிறப்பும் இன்றைய மின்னணு புரட்சிக்கு காரணமாயின.

விடை : இணையப் பயன்பாட்டின் பிறப்பும் இன்றைய மின்னணுப் புரட்சிக்குக் காரணமாயின.

2. தற்போது வெளிவருகிற சில உயர்வகை திறன்பேசியின் ஒளிப்பட கருவி, செயற்கை நுண்ணறிவு தொழில் நுட்பத்தை கொண்டிருக்கிறது.

விடை : தற்போது வெளிவருகிற சில உயர்வகைத் திறன்பேசியின் ஒளிப்படக் கருவி, செயற்கை நுண்ணறிவுத் தொழில் நுட்பத்தைக் கொண்டிருக்கிறது.

3. எதிர்காலத்தில் நாம் பயணிக்கும் ஊர்திகளை செயற்கை நுண்ணறிவை கொண்டு இயக்க வேண்டியிருக்கும்.

விடை : எதிர்காலத்தில் நாம் பயணிக்கும் ஊர்திகளைச் செயற்கை நுண்ணறிவைத் கொண்டு இயக்க வேண்டியிருக்கும்.

4. காணொலிகளை தொகுக்கும் மென்பொருள்களில் இன்றைக்கு செயற்கை நுண்ணறிவு தொழில்நுட்பம் பயன்படுகிறது.

விடை : காணொலிகளைத் தொகுக்கும் மென்பொருள்களில் இன்றைக்குச் செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம் பயன்படுகிறது.

## நிறுத்தற் குறியிடுக

1. எதிர்காலத்தில் ரோபோவிடம் குழந்தைகளை ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக அலுவலகம் செல்லும் பெற்றோர்களை நாம் பார்க்கப் போகிறோம்

விடை : எதிர்காலத்தில் 'ரோபோ'விடம் குழந்தைககளை ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக அலுவலகம் செல்லும் பெற்றோர்களை நாம் பார்க்கப் போகிறோம்.

2. விடுதிகளில் வங்கிகளில் அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் அளிக்கும்

விடை : விடுதிகளில், வங்கிகளில், அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் அளிக்கும்.

3. இந்தியாவின் பெரிய வங்கியான பாரத ஸ்டேட் வங்கி இலா என்னும் உரையாடு மென்பொருளை உருவாக்கியிருக்கிறது

விடை : இந்தியாவின் பெரிய வங்கியான பாரத ஸ்டேட் வங்கி, 'இலா' என்னும் உரையாடு மென்பொருளை உருவாக்கியிருக்கிறது.

4. ஒளிப்படங்கள் எழுத்துகள் காணொலிகள் ஒலிகள் போன்றவற்றிலிருந்து கற்றுக் கொள்ளும் இயல்புடைய மென்பொருளை ஆராய்ச்சியாளர் வடிவமைக்கிறார்

விடை : ஒளிப்படங்கள், எழுத்துகள், காணொலிகள், ஒலிகள் போன்றவற்றிலிருந்து கற்றுக் கொள்ளும் இயல்புடைய மென்பொருளை ஆராய்ச்சியாளர் வடிவமைக்கிறார்.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

1. எந்த ஒரு புதிய தொழில்நுட்பமும் ஒரே நாளில் வந்து விடுவதில்லை. 1980 களில் ஒவ்வொருவருக்குமான தனிநபர் கணினிகளின் வளர்ச்சியும், இணையப் பயன்பாட்டின் பிறப்பும் இன்றைய மின்னணுப் புரட்சிக்குக் காரணமாயின. அவற்றுள் இவ்வுலகை மிகுதியாக ஆளக்கூடிய ஒரு தொழில்நுட்பம் செயற்கை நுண்ணறிவு. அறையின் மூலையில் நிறுவப்பட்டிருக்கும் கண்காணிப்புக் கருவி அசைவு நிகழும் பக்கம் தன் பார்வையைத் திருப்புகிறதே அதனுள் பொதிந்திருப்பது செயற்கை நுண்ணறிவு. அந்த வழியில் போக்குவரத்து நெரிசல் அதிகம், 'இதுவே சுருக்கமான வழி' என்று நமது திறன்பேசியில் உள்ள வழிகாட்டி வரைபடம் காட்டுகிறதல்லவா? அதற்குக் காரணமாக இருப்பதும் செயற்கை நுண்ணறிவே.

1. இணையப் பயன்பாடு எப்புரட்சி உருவாகக் காரணமாயின?

மின்னணுப் புரட்சி உண்டாக இணையப் பயன்பாடு காரணமாயின.

2. கண்காணிப்புக் கருவி அசைவு நிகழும் பக்கம் தன் பார்வைத் திருப்பக் காரணமானது எது?

செயற்கை நுண்ணறிவே கண்காணிப்புக் கருவி அசைவு நிகழும் தன் பார்வைத் திருப்பக் காரணமானதாகும்.

3. இப்பத்தியில் செயற்கை நுண்ணறிவு எதற்கெல்லாம் பயன்படுகிறது?

கண்காணிப்புக் கருவியின் பார்வையைத் திருப்பவும், திறன்பேசியில் உள்ள வழிகாட்டி வரைபடம் காட்டவும் பயன்படுகிறது.

2. செயற்கை நுண்ணறிவுள்ள ரோபோக்களால் மனிதர் செய்ய இயலாத, அலுப்புத் தட்டக்கூடிய கடினமான செயல்களையும் செய்ய முடியும். மனித முயற்சியால் உயிராபத்தை விளைவிக்கக்கூடிய செயல்களைச் செய்ய முடியும். புதிய வணிக வாய்ப்புகளைச் செயற்கை நுண்ணறிவு நல்குகிறது. பெருநிறுவனங்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்யவும் சந்தைப்படுத்தவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்துகின்றன. விடுதிகளில், வங்கிகளில், அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் அளிக்கும். மேலும் நம்முடன் உரையாடுவது ஆலோசனை வழங்குவது, பயண ஏற்பாடு செய்து தருவது, தண்ணீர் கொண்டு வந்து தருவது, உடன் வந்திருக்கும் குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டுவது எனப் பலவற்றைச் செய்யும்.

1. பெரு நிறுவனங்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்யவும், சந்தைப்படுத்தவும் பயன்படுவது எது?

   செயற்கை நுண்ணறிவு

2. விடுதி, வங்கி, அலுவலகம் இவற்றில் ரோபோவின் செயல்பாடுகள் யாவை?

   உரையாடுவதற்கும், ஆலோசனை வழங்கவும், பயண ஏற்பாடு செய்து தருவதற்கும், தண்ணீர் கொண்டு வந்து தருவதற்கும், குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டவும் பயன்படுகிறது.

3. இப்பத்திக்கு ஏற்ற பொருத்தமான தலைப்பு தருக.

   ரோபோவின் செயல்பாடுகள்

3. தற்போது வெளிவருகிற சில உயர்வகைத் திறன்பேசியின் ஒளிபடக்கருவி செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பத்தைக் கொண்டிருக்கிறது. கடவுச் சொல்லும் கைரேகையும் கொண்டு திறன்பேசியைத் திறப்பது பழமையானது. உரிமையாளரின் முகத்தை அடையாளம் கண்டு திறப்பது. இன்றைய தொழில்நுட்பம். செயற்கை நுண்ணறிவு படம் எடுக்கும் காட்சியை அடையாளம் கண்டு அதற்கு ஏற்பத் தன்னைத் தகவமைத்து கொள்கிறது. PTA

1. திறன்பேசியைத் திறக்கும் பழைய முறைகள் யாவை?

   கடவுச் சொல்லும், கைரேகையும் கொண்டு திறப்பேசியை திறப்பது பழைய முறையாகும்.

2. திறன்பேசியில் படம் எடுக்கும் காட்சியை அடையாளம் கண்டு செயற்கை நுண்ணறிவு எவ்வாறு செயல்படுகிறது?

   செயற்கை நுண்ணறிவு படம் எடுக்கும் காட்சியை அடையாளம் கண்டு அதற்கு ஏற்பத் தன்னைத் தகவமைத்து கொள்கிறது.

3. உயர்வகைத் திறன்பேசிகளில் பயன்படுத்தப்படும் தொழில்நுட்பம் எது?

   ஒளிபடக்கருவி செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம்.

## படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



1. இன்றைய உலகம் மின்னணு சாதனங்களினால் இயக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது.
2. காலத்தின் தேவையில் கட்டுண்டு கிடக்கிறோம்.
3. மின்னணு சாதனங்களின் வளர்ச்சி மனித உள்ளத்திற்குத் தளர்ச்சி ஆகும்.
4. வளர்ந்து வருகின்ற தொழில் நுட்பங்கள் அறிவியல் வளர்ச்சியின் உச்சம் ஆகும்.
5. மின்னணு சாதனங்களின் கட்டுப்பாட்டுக்குள் கட்டுண்டு கிடக்கிறோம்.

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. வருங்காலத்தில் தேவையெனக் கருதுகின்ற செயற்கை நுண்ணறிவு பொதிந்த இரண்டு அறிவியல் கண்டுபிடிப்புகளைக் குறிப்பிடுக.
   - வருங்காலத்தில் செயற்கை நுண்ணறிவால் ரோபோவிடம் குழந்தையை ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக பெற்றோர்கள் அலுவலகம் செல்வர்.
   - விடுதிகளில், வங்கிகளில், அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் அளிக்கும்.

**கூடுதல் வினாக்கள்:**

2. மின்னணுப் புரட்சிக்குக் காரணமாயிருப்பவை எவை?

தனிநபர் கணினிகளின் வளர்ச்சியும், இணையப் பயன்பாட்டின் பிறப்பும் மின்னணுப் புரட்சிக்குக் காரணமாயின.

3. செயற்கை நுண்ணறிவு எப்படி அறிமுகமாகிறது?

சமூக ஊடகங்கள் வழியாகவும், மின்னணுச் சந்தை வழியாகவும் செயற்கை நுண்ணறிவு அறிமுகமாகிறது.

4. பெப்பர் – விளக்குக.
   - ஜப்பானில் சாப்ட் வங்கி உருவாக்கிய இயந்திர மனிதனே பெப்பர்.
   - இது உலக அளவில் விற்பனையாகும் ஒரு ரோபோ.
   - பெப்பரை வரவேற்பாளராகவும், பணியாளராகவும், வீடுகளிலும், வணிக நிறுவனங்களிலும், உணவு விடுதிகளிலும் பயன்படுத்துகின்றனர்.

## சிறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. இன்றைய அறிவியல் கண்டுபிடிப்புகள் மனிதனை மேம்படுத்துகின்றனவா என்பது குறித்த சிந்தனைகளை முன் வைத்து எழுதுக. PTA
   - இன்றைய அறிவியல் கண்டுப்பிடிப்புகள் அனைத்திலும் நன்மை, தீமை என்று இரண்டு பக்கங்கள் உள்ளன. அதற்கேற்ப மனிதர்கள் தங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்.
   - செயற்கை நுண்ணறிவுக் கண்டுபிடிப்பு வேலைவாய்ப்புகளில் கணிசமான மாற்றங்களைச் செய்து வருகிறது.
   - இதனால் மனிதர் செய்ய இயலாத, அலுப்புத் தட்டக்கூடிய, கடினமான செயல்களைக் கூட செய்ய முடியும். பெரு நிறுவனங்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்யவும், சந்தைப்படுத்தவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்துகின்றன.
   - மனித இனத்தைத் தீங்குகளிலிருந்து காப்பாற்றவும், உடல் நலத்தைப் பேணவும், கொடிய நோய்களைத் தொடக்க நிலையிலேயே கண்டறியவும் மருத்துவம் செய்யும் முறைகளைப் பட்டறிவு மிக்க மருத்துவரைப் போலப் பரிந்துரை செய்யவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தும் ஆராய்ச்சிகள் மும்முரமாக நடந்து வருகின்றன. எனவே இன்றைய அறிவியல் கண்டுபிடிப்புகள் மனிதனை மேம்படுத்துகின்றன.

2. மனிதர்களின் மூளையைப் போன்றது செயற்கை நுண்ணறிவு கொண்ட கணினியின் மென்பொருள். மனிதனைப் போலவே பேச, எழுத, சிந்திக்க இத்தொழில்நுட்பம் மேம்படுத்தப்படுகிறது. இதனால் மனித குலத்துக்கு ஏற்படுகிற நன்மைகளைப் பற்றி அறிவியல் இதழ் ஒன்றுக்கு எதிர்காலத் தொழில்நுட்பம் என்ற தலைப்பில் எழுதுக.

### எதிர்காலத் தொழில்நுட்பம்

எதிர்காலத் தொழில்நுட்பக் கருவிகளின் பயன்பாடுகள் அசுர வேகத்தில் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வருகிறது.

**திறன்பேசி:**

- கண்ணுக்குப் புலப்படாத, மனிதனைப் போல் நம்முடன் உரையாடி நமக்குத் தேவையான உதவிகள் செய்யும்.
- நாம் திறக்கக் கட்டளையிடுகிற செயலியைத் திறக்கும்.
- நாம் கேட்பதை உலாவியில் (Browser) தேடும். சொல்வளத்தைப் பெருக்க உதவும்.
- இந்தச் செயலி நமக்குத் தேவையான தலைப்பில் கட்டுரைகள் எழுதுவதற்குப் பெரிதும் உதவும்.
- கலந்துரையாடல்களை இதன் வழி மேற்கொள்ளலாம். அயல்நாடுகள் குறித்த விவரங்களை கூடுதல் தகவல்களோடு இந்தச் செயலியின் வழி பெறலாம்.

**வங்கிகள்:**

- எதிர்காலத் தொழில்நுட்பத்தில் வங்கிகளில் மனிதர்களின் சேவை குறைவாகவும், கணினியின் சேவை அதிகமாகக் காணப்படும்.
- இதனால் மக்கள் துரித சேவையைப் பெறுவர். நேரம் மிச்சப்படும்.
- இதன் மூலம் வாடிக்கையாளர்களுடைய சந்தேகங்களை 'உரையாடு மென்பொருள்' பேசித் தீர்த்து வைக்கும். இதனால் முதியோர் பயனடைவர்.

**ரோபோவின் வளர்ச்சி:**

- எதிர்காலத்தில் ரோபோவிடம் குழந்தையை ஒப்படைத்துவிட்டு நிம்மதியாக பெற்றோர்கள் அலுவலகங்களுக்குச் செல்வர்.
- ரோபோ குழந்தைக்குத் தேவையான அனைத்துச் செயலையும் செய்துவிடும்.
- குழந்தையோடு விளையாடும்; தூங்க வைக்கும்; பேசி சிரிக்க வைக்கும்.
- பெற்றோர்கள் எவ்வளவு நேரம் கழித்து வந்தாலும் அதுவரை ரோபோ குழந்தைகளைப் பராமரித்துக் கொள்ளும்.
- இதனால் அவர்கள் கவலைப்படாமல் தங்கள் வேலைகளைப் பார்க்கலாம்.
- வயதானவர்களுக்கு உதவிகள் செய்வதும், அவர்களுக்கு உற்ற தோழனாய்ப் பேச்சு கொடுத்து உதவும் ரோபோக்கள் எதிர்காலத்தில் வந்துவிடும்.
- இதனால் வயதானவர்களின் ஆயுள்காலம் நீடிக்கும். அன்பு வெளிப்படும். அவர்களுடைய தேவைகள் நிவர்த்தியாகும்.
- வீட்டிலேயே அவர்களுக்கு மருத்துவ முதலுதவி செய்யும். இவ்வாறு செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பம் எதிர்காலத்தில் மனிதர்களைப் போலவே செயல்படும்.

## கூடுதல் வினாக்கள்:

3. செயற்கை நுண்ணறிவில் கல்வியறிவு – விளக்குக.

- ஒரு காலத்தில் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு எழுதப் படிக்க தெரிந்த கல்வியறிவே போதுமானதாக இருந்தது.
- இப்போது கல்வியறிவுடன் மின்னணுக் கல்வியறிவையும், மின்னணுச் சந்தைப்படுத்துதலையும் அறிந்திருப்பது வாழ்க்கையை எளிதாக்கவும், வணிகத்தில் வெற்றியடையவும் உதவுகிறது.
- ஆனால் எதிர்காலத்தில் செயற்கை நுண்ணறிவு பற்றிய அறிவும், நான்காவது தொழிற்புரட்சியின் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தும் அறிவுமே நம்மை வளப்படுத்த உதவும்.

4. செயற்கை நுண்ணறிவின் பொதுவான கூறுகள் யாவை?

- செயற்கை நுண்ணறிவு நமது வாழ்க்கையையும், வணிகத்தையும் நம்மை அறியாமலேயே வளப்படுத்திக் கொண்டிருக்கிறது.
- இந்தத் தொழில் நுட்பத்தைக் கண்டு அச்சப்பட்டவர்களின் அலறல்களை நாம் எதிர்கொள்வதே முதல் அறைகூவல்.
- ஒவ்வொரு புதிய கண்டுபிடிப்பு அறிமுகமாகும் போதும் பழைய வேலை வாய்ப்புகள் புதிய வடிவில் மாற்றம் பெறுகின்றன.
- மனித இனத்தைத் தீங்குகளிலிருந்து காப்பாற்றவும், உடல் நலத்தைப் பேணவும் கொடிய நோய்களைத் தொடக்க நிலையிலேயே கண்டறியவும், மருத்துவம் செய்யும் முறைகளைப் பட்டறிவு மிக்க மருத்துவரை போலப் பரிந்துரை செய்யவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தும் ஆராய்ச்சிகள் மும்முரமாக நடந்து வருகின்றன.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. ஒரு குழந்தையைத் தூக்கவும் கீழே விழுந்த ஒரு தேனீர்க் கோப்பையை எடுக்கவும் மென்பொருள் அக்கறை கொள்ளுமா? வெறும் வணிகத்துடன் நின்று விடுமா? இக்கருத்துகளை ஒட்டிச் செயற்கை நுண்ணறிவின் எதிர்கால வெளிப்பாடுகள் பற்றி ஒரு கட்டுரை எழுதுக. PTA

**முன்னுரை:**

மனிதர்கள் செய்யும் வேலைகள் அனைத்தும் இன்றைய தொழில்நுட்பமான செயற்கை நுண்ணறிவு செய்கிறது.

**செயற்கை நுண்ணறிவு:**

எந்த ஒரு புதிய தொழில்நுட்பமும் ஒரே நாளில் வந்து விடுவதில்லை. 1980களில் ஒவ்வொருவருக்குமான தனிநபர் கணினிகளின் வளர்ச்சியும், இணையப் பயன்பாட்டின் பிறப்பும் இன்றைய மின்னணுப் புரட்சிக்குக் காரணமாயின. அவற்றுள் இவ்வுலகை மிகுதியாக ஆளக்கூடிய ஒரு தொழில்நுட்பம் செயற்கை நுண்ணறிவு.

**ரோபோவின் செயல்பாடு:**

வேலைவாய்ப்புகளில் கணிசமான மாற்றங்களைச் செயற்கை நுண்ணறிவு கொண்டு வரப்போகிறது. அவற்றுள் ஒன்று ரோபோ. ரோபோவால் மனிதர் செய்ய இலயாத, அலுப்புத் தட்டக்கூடிய கடினமான செயல்களைச் செய்ய முடியும்.

- வயதானவர்களுக்கு உதவிகள் செய்யவும் அவர்களுக்கு உற்ற தோழனாய்ப் பேச்சுக் கொடுக்கும் ரோபோக்கள் எதிர்காலத்தில் வரப் போகின்றன.
- விடுதிகளில், வங்கிகளில், அலுவலகங்களில் தற்போது மனிதர் அளிக்கும் சேவைகளை ரோபோக்கள் செய்யும்.
- நம்முடன் உரையாடுவது, ஆலோசனை வழங்குவது, பயண ஏற்பாடு செய்து தருவது, தண்ணீர் கொண்டு தருவது, உடன் வந்திருக்கும் குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டுவது எனப் பலவற்றைச் செய்யும்.

**செயற்கை நுண்ணறிவின் எதிர்கால வெளிப்பாடுகள்:**

- எதை நாம் விரும்புகிறோமோ அதை செயற்கை நுண்ணறிவின் மூலம் செயல்படுத்தலாம். இணையத் தேடுபொறி, இயந்திரமான கூகுள் மற்றும் சமூக வலைத்தளக் கூட்டாண்மையான பேஸ்புக் போன்ற நிறுவனங்கள் பெரும் மின்தரவுகளின் அடிப்படையிலான பகுத்தாய்தலையும் செயற்கை நுண்ணறிவுத் தொழில்நுட்பத்தையும் வெற்றிகரமாகப் பயன்படுத்துகின்றன.
- சமூக வலைத்தளச் செயற்பாடுகள் யாவும் மின்தரவு மூலங்களாகின்றன. சமூக வலைத்தளங்கள் மூலமும், இணையம் மூலமும் சேகரிக்கும் தரவுகளே பெரும் மின்தரவின் விற்பனைப் பொருளாகின்றன.
- அவ்வகையில் தரவுகளின் ஊடு உலகைக் கட்டுப்படுத்த உதவுவன. தொழில்நுட்ப வளர்ச்சி நவீன போர் ஆயுதங்களையும், இரசாயன உயிரியல் ஆயுதங்களின் நவீன மயமாக்குதலையும் நடைமுறைப்படுத்தியுள்ளது.

- கல்வியறிவில் மின்னணுக் கல்வியறிவையும் மின்னணுச் சந்தைப்படுத்துதலையும் ஏற்படுத்தியுள்ளது.

முடிவுரை:

செயற்கை நுண்ணறிவு எதிர்காலத்தில் உலகின் ஒவ்வொரு துறையிலும் அளவிடற்கரிய முன்னேற்றத்தைத் தரும் என்பதில் வியப்பொன்றுமில்லை.

## கூடுதல் வினாக்கள்:

2. செயற்கை நுண்ணறிவு – ஒரு பக்க அளவில் கட்டுரை வரைக. (அல்லது) செயற்கை நுண்ணறிவின் பயன்பாடு எவ்வாறு அமையலாம் என விளக்குக.

முன்னுரை:

உயிரினங்களில் மனிதரை உயர்த்திக்காட்டுவது அவர்களின் சிந்தனை ஆற்றல், அதற்குத் தொழில் நுட்பமும் துணை செய்கிறது. அப்படிப்பட்ட தொழில்நுட்பம் ஒரே நாளில் வளர்ந்து விடுவது இல்லை. கணினியின் வளர்ச்சியும் இணையப் பயன்பாடும் இன்றைய மின்னணுப் புரட்சிக்கு வித்திட்டன. அவற்றுள் இவ்வுலகை மிகுதியாக ஆளக்கூடிய ஒரு தொழில்நுட்பம் செயற்கை நுண்ணறிவு. அது பற்றி இங்கே காண்போம்.

செயற்கை நுண்ணறிவு:

செயற்கை நுண்ணறிவு என்பது இயந்திரங்களின் நுண்ணறிவு மற்றும் இதனை உருவாக்குவதை நோக்கமாகக் கொண்ட கணினி அறிவியலின் ஒரு பிரிவாகும். தன் சூழ்நிலையை உணர்ந்து அதிக வெற்றி வாய்ப்புகளுக்குத் தக்கவாறு செயலில் ஈடுபடும் ஒரு அமைப்பாகும். செயற்கை நுண்ணறிவு பல வகைகளில் மனிதர்களுக்கு உதவுகிறது.

இதழியல்:

இதழியலில் செயற்கை நுண்ணறிவு குறிப்பிடத்தகுந்த மாறுதல்களைச் செய்து வருகிறது. அவற்றுள் விந்தையான ஒன்று இயல்பான மொழிநடையை உருவாக்குதல் என்னும் மென்பொருள். அதற்கு வேர்டுஸ்மித் என்று பெயர். தகவல்களைக் கொடுத்தால் போதும். வேர்டுஸ்மித் அழகான கட்டுரையைச் சில நொடிகளில் உருவாக்கிவிடும்.

வணிகம்:

இணையத்தில் வணிகம் செய்யும் தனியார் நிறுவனம் ஒன்று செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தி பெரும்பாலும் ஆளற்ற பல்பொருள் அங்காடிகளை உலகெங்கிலும் திறந்து வருகிறது. புதிய வணிக வாய்ப்புகளைச் செயற்கை நுண்ணறிவு நல்குகிறது. பெரு நிறுவனங்கள் தங்கள் பொருள்களை உற்பத்தி செய்யவும் சந்தைப்படுத்தவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்துகின்றன.

மெய்நிகர் உதவியாளர்:

செயற்கை நுண்ணறிவு திறன் பேசிகளில் இயங்கும் உதவு மென்பொருள் கண்ணுக்குப் புலப்படாத மனிதனைப் போல நம்முடன் உரையாடி, சில உதவிகள் செய்கின்றது. இவை நாம் சொல்கிறவர்களுக்கு தொலைபேசி அழைப்பு விடுக்கும். திறக்கக் கட்டளையிடுகிற செயலியைத் திறக்கும். நாம் கேட்பதை உலாவியில் தேடும். நாம் விரும்பும் அழகான கவிதையை இணையத்தில் தேடித்தரும். எந்தக்கடையில் எது விற்கும் என்று சொல்லும். படிப்பதற்கு உரிய நூல்களைப் பட்டியலிடும். நாம் எடுத்த ஒளிப்படங்களைப் பற்றிக் கருத்துரைக்கும்.

கண்காணிப்புக் கருவி:

அறையின் மூலையில் நிறுவப்பட்டிருக்கும் கண்காணிப்புக் கருவி அசைவு நிகழும் பக்கம் தன் பார்வையை செயற்கை நுண்ணறிவால் திருப்புகிறது.

முடிவுரை:

மனித இனத்தைத் தீங்குகளிலிருந்து காப்பாற்றவும், உடல் நலத்தைப் பேணவும், கொடிய நோய்களைத் தொடக்க நிலையிலேயே கண்டறியவும், மருத்துவம் செய்யும் முறைகளைப் பட்டறிவு மிக்க மருத்துவரைப் போலப் பரிந்துரை செய்யவும் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தும் ஆராய்ச்சிகள் மும்முரமாக நடந்து வருகின்றன.

## கற்பவை கற்றபின்

1. இன்றைய செயற்கை நுண்ணறிவுப் பயன்பாடுகளைச் செய்தித்தாளிலோ, இணையத்திலோ கண்டு அட்டவணையாகத் தருக.

| | துறைகள் | பயன்பாடுகள் |
|---|---|---|
| 1. | தேசப் பாதுகாப்பு | செயற்கை நுண்ணறிவின் மூலம் நமது எல்லைகளை மேலும் சிறப்பாகப் பாதுகாக்க முடியும். மேலும் செயற்கை ரோபோக்களை ரோந்துக்கு அனுப்புவதன் மூலம் தேவையற்ற உயிரிழப்புகளைத் தவிர்க்கலாம். போரின் போதும் இத்தகைய செயற்கைப் படைவீரர்களை அனுப்புவதனால் பல பயன்கள் உண்டு. |
| 2. | கல்வி | உயர் கல்வி மாணவர்கள் இணையச் செயல்பாடு மூலம் உயர் படிப்புகளுக்கு விண்ணப்பிக்கலாம். மருத்துவத் துறையில் செயற்கை நுண்ணறிவின் மூலம் கல்வி கற்பது எளிதாகும். |
| 3. | வேளாண்மை | வேளாண்மைக்கு செயற்கை நுண்ணறிவு பெரிதும் உதவும். எந்தப் பருவத்தில் எதை விதைக்க வேண்டும் என்பதிலிருந்து எத்தகைய முறையில் சாகுபடி செய்ய வேண்டும் என்பது வரை நாம் கற்றுக் கொடுக்கலாம். |
| 4. | இயற்கைப் பேரிடர் மேலாண்மை | செயற்கை நுண்ணறிவினை இயற்கைப் பேரிடர் நடக்கும் இடங்களை முன்கூட்டியே அறிந்து கொள்வதிலிருந்து துரிதமாக பேரிடர் மீட்பு செய்வது வரை பயன்படுத்திக் கொள்ளலாம். |

2. கொடுக்கப்படுகின்ற எல்லாவற்றையும் உள்ளீடு செய்து தேவைப்படும் வேளையில் வெளிப்படுத்துவதில் இன்று மூளைக்கு இணையாகத் தொழில்நுட்பமும் முன்னேறியுள்ளது. இக்கருத்தையும் படத்தையும் ஒப்புநோக்கிக் கலந்துரையாடுக.



கலந்துரையாடல்:

அமுதன் : நூலகத்திற்குச் சென்று நமக்கு வேண்டிய நூலை எடுப்பதற்குள் போதும் போதும் என்றாகி விடுகிறது.

கலா : ஏன்? அது தான் துறைவாரியாக பிரித்து வைத்திருப்பார்களே! மேலும் அங்கு நூலகர் இருப்பாரே. அவர் தேவையான நூலை எடுத்துக் கொடுத்து விடுவாரே!

அமுதன் : மக்கள் எடுத்த இடத்தில் புத்தகத்தை வைப்பதில்லை. எனவே நாம் தேடும் இடத்தில் அந்த புத்தகம் கிடைப்பதில்லை.

கலா : அதற்குத் தான் செயற்கை தொழில்நுட்பம் நமக்கு உதவி செய்கிறது.

அமுதன் : ஆம். அதில் தேவையான எல்லாத் தகவல்களையும் நாம் பதிவு செய்து கொள்ளலாம். நமக்குத் தேவைப்படும் போது தேவையான தகவல்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

கலா : மேலும் உனக்கு ஏதேனும் புத்தகம் வேண்டுமென்றாலும் தரவிறக்கம் செய்து கொள்ளலாம்.

அமுதன் : ஆம். அதைவிட வசதி என்னவென்றால், இதையெல்லாம் நாம் வீட்டிலிருந்த படியே செய்ய முடியும்.

கலா : இயந்திரங்கள் நம்மை மாதிரி யோசிக்கா விட்டாலும், அவற்றால் நமக்குப் பல நன்மைகள் உண்டு.



# 2. பெருமாள் திருமொழி

குலசேகராழ்வார்

## பாடல் :

*வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் பால்*
*மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்*
*மீளாத் துயர்தரினும் வித்துவக் கோட்டம்மா! நீ*
*ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே*

## சொற்பொருள்

| | |
|---|---|
| வாளால் அறுத்துச் சுடினும் | - புண்ணைக் கத்தியால் அறுத்துச் சுட்டாலும் |
| மருத்துவன் பால் | - மருத்துவர் மீது |
| மாளாத காதல் நோயாளன் போல் | - நன்மைக்கே என்று உணர்ந்து நோயாளி அவரை நேசிப்பார். |
| மாயத்தால் மீளாத் துயர்தரினும் | - விளையாட்டால் நீங்காத துன்பத்தைத் தந்தாலும் |
| வித்துவக் கோட்டம்மா! | - வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் அன்னையே |
| நீ ஆளா உனதருளே | - நான் உன் அருளையே |
| பார்ப்பன் அடியேனே | - எப்பொழுதும் எதிர்பார்த்து வாழ்கின்றேன் |

## பொருளுரை:

மருத்துவர் உடலில் ஏற்பட்ட புண்ணைக் கத்தியால் அறுத்துச் சுட்டாலும் அது நன்மைக்கே என்று உணர்ந்து நோயாளி அவரை நேசிப்பார். வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் அன்னையே! அதுபோன்று நீ உனது விளையாட்டால் நீங்காத துன்பத்தை எனக்குத் தந்தாலும் உன் அடியவனாகிய நான் உன் அருளையே எப்பொழுதும் எதிர்பார்த்து வாழ்கின்றேன்.

## விளக்கவுரை:

குலசேகராழ்வார் தாம் பெருமாளின் மீது கொண்ட அன்பை இப்பாடலில் விளக்கியுள்ளார். நோயாளி மருத்துவரை நேசிப்பதுபோல், இறைவன் நீங்காத துன்பம் தந்தாலும் அவனுடைய அருளையே எதிர்பார்த்து வாழ்வதாகக் கூறுகிறார்.

## ஆசிரியர் குறிப்பு:

- கேரள மாநிலத்திலுள்ள திருவஞ்சைக் களத்தில் பிறந்தவர் குலசேகர ஆழ்வார்.
- இவரது காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு.
- இராமபிரானிடம் பக்தி மிகுதியாக வாய்க்கப் பெற்ற காரணத்தால், இவர் குலசேகரப் பெருமாள் எனவும் அழைக்கப்பட்டார்.
- இவர் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர்.
- இவர் வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லவர்.
- குலசேகரர் தமிழில் பெருமாள் தமிழ்மொழியையும், வடமொழியில் முகுந்த மலை என்னும் நூலையும் இயற்றியுள்ளார்.
- குலசேகரர், திருவரங்கத்தின் மூன்றாவது மதிலைக் கட்டியதால், அதற்குக் குலசேகரன் வீதி என்றும் பெயர் இன்றும் வழங்கி வருகிறது.

## நூற் குறிப்பு:

- குலசேகர ஆழ்வார் அருளிய பெருமாள்திருமொழி, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ஐந்தாம் திருமொழியாக உள்ளது.
- இதில் 105 பாசுரங்கள் உள்ளன.
- திருமாலை முழுமுதற் கடவுளாய்க் கொண்டு போற்றும் பன்னிரு ஆழ்வார்கள் பாடியருளிய தேனினும் இனிய தீந்தமிழ்ப் பனுவல் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.
- நம் பாடப்பகுதி குலசேகர ஆழ்வார் பாடிய பெருமாள் திருமொழியின் முதலாயிரத்தில் 691வது பாசுரத்தில் உள்ளது.

## மதிப்பீடு

### பொருள் தருக.

1. சுடினும் – சுட்டாலும்
2. மாளாத – தராத
3. மாயம் – விளையாட்டு
4. வாள் – கத்தி
5. காதல் – அன்பு
6. துயர் – துன்பம்

### இலக்கணக் குறிப்புத் தருக.

1. மாளாத காதல்
2. மீளாத் துயர்
3. ஆளா உனதருளே

} – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

4. மருத்துவர் – வினையாலணையும் பெயர்
5. அறுத்து – வினையெச்சம்

## பலவுள் தெரிக

### பாடநூல் வினாக்கள்:

1. 'உனதருளே பார்ப்பன் அடியேனே' – யாரிடம் யார் கூறியது? PTA

அ) குலசேகராழ்வாரிடம் இறைவன்

ஆ) இறைவனிடம் குலசேகராழ்வார்

இ) மருத்துவரிடம் நோயாளி

ஈ) நோயாளியிடம் மருத்துவர்

விடை : ஆ) இறைவனிடம் குலசேகராழ்வார்

2. குலசேகர ஆழ்வார் 'வித்துவக்கோட்டம்மா' என்று ஆண் தெய்வத்தை அழைத்துப் பாடுகிறார். பூனையார் பால்சோற்றைக் கண்டதும் வருகிறார் ஆகிய தொடர்களில் இடம்பெற்றுள்ள வழுவமைதி முறையே – PTA

அ) மரபு வழுவமைதி, திணை வழுவமைதி

ஆ) இடவழுவமைதி, மரபு வழுவமைதி

இ) பால் வழுவமைதி, திணை வழுவமைதி

ஈ) கால வழுவமைதி, இடவழுவமைதி

விடை : இ) பால் வழுவமைதி, திணை வழுவமைதி

#### கூடுதல் வினாக்கள்:

3. குலசேகராழ்வார் பாடல் ______ தொகுப்பில் உள்ளது.

அ) திருவியற்பா ஆ) முதலாயிரம்
இ) பெரிய திருமொழி ஈ) பெருமாள் திருமொழி

விடை : ஆ) முதலாயிரம்

4. பெருமாள் திருமொழி நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் ______ திருமொழியாக உள்ளது.

அ) ஐந்தாம் ஆ) ஆறாம் இ) ஏழாம் ஈ) எட்டாம்

விடை : அ) ஐந்தாம்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக் கோட்டம்மா! நீ
ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே.

1. இப்பாடலில் இடம் பெறும் நூல் எது?

அ) பெரிய திருமடல் ஆ) திருப்பாவை
இ) பெருமாள் திருமொழி ஈ) சிறிய திருமடல்

விடை : இ) பெருமாள் திருமொழி

2. இப்பாடலின் ஆசிரியர் யார்?

அ) பெரியாழ்வார் ஆ) பேயாழ்வார்
இ) நம்மாழ்வார் ஈ) குலசேகர ஆழ்வார்

விடை : ஈ) குலசேகர ஆழ்வார்

3. 'மாயம்' என்ற சொல்லின் பொருள் ______

அ) மறைதல் ஆ) விளையாட்டு
இ) கோபம் ஈ) ஏமாற்றம்

விடை : ஆ) விளையாட்டு

4. பாடலில் பயின்று வரும் அடியெதுகைச் சொற்களை எடுத்தெழுதுக.

அ) வாளால், மாளாத, மீளாத், ஆளா ஆ) மாளாத, மருத்தவன், மாயத்தால்
இ) வாளால், வித்துவக், உனதருளே ஈ) அறுத்துச், அடியேனே

விடை : அ) வாளால், மாளாத, மீளாத், ஆளா

## குறுவினா

#### பாடநூல் வினா:

1. மருத்துவத்தில் மருந்துடன் அன்பும் நம்பிக்கையும் ஆற்றும் பாங்கினை எழுதுக. PTA

- மருத்துவத்தில் மருந்து அவசியம் தான். ஆனால் மருந்து மட்டும் நோயாளியைக் குணப்படுத்தி விட முடியாது.
- அன்பான வார்த்தையும், நீங்கள் விரைவாகக் குணமாகி விடுவீர்கள் என்ற நம்பிக்கையான வார்த்தையும் தான் நோயாளியை விரைவாகக் குணப்படுத்தும் என்பது உண்மையிலும் உண்மையாகும்.

**கூடுதல் வினாக்கள்:**

2. குலசேகர ஆழ்வார் எம்மொழிகளில் வல்லவர்?

குலசேகர ஆழ்வார் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டிலும் வல்லவர்.

3. ஆழ்வார்கள் பாடிய பாடல்களின் தொகுப்பின் பெயர் என்ன?

பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாடல்களின் தொகுப்பின் பெயர் நாலாயிரத் திவ்விய பிரபந்தம் ஆகும்.

4. ஆழ்வார்கள் – குறிப்பு வரைக.

உலகப்பற்று எதிலும் நாட்டமில்லாதவர்கள். திருமாலின் அளவற்ற அன்பினை மனதில் நினைப்பவர்கள். வைணவ சமயத்தைப் பின்பற்றும் இறையடியார்களாக ஆழ்வார்கள் கருதப்பட்டனர்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. 'மாளாத காதல் நோயாளன் போல்' என்றும் தொடரிலுள்ள உவமை சுட்டும் செய்தியை விளக்குக.

''மாளாத காதல் நோயாளன் போல்''

என்று கூறும் போது ஆழ்வார் தன்னை நோயாளியாகவும், பெருமாளை மருத்துவராகவும் உவமைப்படுத்துகிறார்.

**கூடுதல் வினாக்கள்:**

2. குலசேகராழ்வார் திருவித்துவக்கோட்டு அம்மானிடம் வேண்டுவது யாது?

- மருத்துவர் உடலில் ஏற்பட்ட புண்ணைக் கத்தியால் அறுத்துச் சுட்டாலும் அது நன்மைக்கே என்று உணர்ந்து நோயாளி மருத்துவரை நேசிப்பார்.
- வித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கும் அன்னையே! அதுபோன்று நீ உன் விளையாட்டால் நீங்காத துன்பத்தை எனக்குத் தந்தாலும் உன் அடியவனாகிய நான் உன் அருளையே எப்பொழுதும் எதிர்பார்த்து வாழ்கின்றேன் என்று குலசேகராழ்வார் வேண்டுகிறார்.

3. குலசேகர ஆழ்வார் – குறிப்பு வரைக.

- குலசேகர ஆழ்வார் திருவஞ்சைக் களத்தில் பிறந்தவர்.
- இராமபிரானிடம் பக்தி மிகுதியாக வாய்க்கப் பெற்ற காரணத்தால் இவர் குலசேகரப் பெருமாள் எனவும் அழைக்கப்பட்டார்.
- இவர் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர்.
- இவர் அருளிய பெருமாள் திருமொழி, நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் ஒன்று.
- இதில் நூற்றைந்து பாசுரங்கள் உள்ளன.
- இவர் வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லவர்.
- குலசேகரர் தமிழில் பெருமாள் திருமொழியையும், வடமொழியில் முகுந்தமாலை என்ற நூலையும் இயற்றியுள்ளார்.

4. நாலாயிரத் திவ்விய பிரபந்தம் – குறிப்பு வரைக.

- தமிழகத்தின் பழம்பெரும் சமயங்களுள் ஒன்று வைணவம்.
- வைணவம் திருமாலை முழுமுதற் கடவுளாய்க் கொண்டு போற்றும் பன்னிரு ஆழ்வார்கள் பாடியருளிய தேனினும் இனிய தீந்தமிழ்ப் பனுவல் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.
- இது மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டது. இது திராவிட வேதம் எனவும் அழைக்கப்படுகிறது.
- இதைத் தொகுப்பித்தவர் நாதமுனிகள் ஆவார்.

## கற்பவை கற்றபின்

தமிழர் மருத்துவமுறைக்கும், நவீன மருத்துவமுறைக்கும் உள்ள தொடர்பு குறித்து ஒப்படைவு உருவாக்குக.

தமிழர் மருத்துவம் பிற்போக்குத் தனமானது, அறிவியல் தன்மையற்றது என்றும் நவீன மருத்துவம் அறிவியல் பூர்வமானது என்றும் சிலர் விவாதித்து வருகின்றனர். எனினும் தமிழர் மருத்துவம் பழங்காலம் தொட்டு மேம்படுத்தப்பட்டு வந்துள்ளது என்பதை நாம் மறக்க முடியாது.

மனித உடல் குறித்தும், பழந்தமிழர் மருத்துவம் குறித்தும் சங்க காலம் தொட்டே தீவிர விழிப்புணர்வில் தமிழ்ச் சமூகம் இருந்தது என்பதற்கான இலக்கியச் சான்றுகள் பரவலாக காணக் கிடைக்கின்றன.

"அற்றால் அளவறிந்துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு"

என்கிறது, மருந்து என தனி அதிகாரம் கண்ட தமிழர் மறையான திருக்குறள்.

அளவறிந்து உண்பது குறித்து அன்றே சிந்தித்திருக்கிற தமிழர் மரபு முழுக்க முழுக்க அறிவியல் தன்மைகளை தனது பண்பாட்டு விழுமியங்கள் மூலம் கண்டடைந்து சிறந்திருக்கின்றது.

இன்றைய நவீன மருத்துவமுறையும், உணவு முறைகள் குறித்து நோய்க்கட்டுப்பாடு அறிவியல் விளக்கமாக எடுத்துரைக்கிறது.

ஒரு நோயாளியை கையாளுவதில் மருத்துவரின் கடமை என்ன என்பதை எளிமையாக இரண்டே வரிகளில் விளக்குகிறது தமிழர் மரபு.

"நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் சொல்"

நோயை இன்னதென்று அறிந்து அதன் மூலக் காரணத்தையும் கண்டறிந்து அந்த நோயை தணிக்கின்ற வழியையும் கண்டறிந்து அதை உடலுக்கு பொருந்தும் படியாக மருத்துவர் மருத்துவம் அளிக்க வேண்டும் என்கிறது குறள்.

இன்றைய நவீன மருத்துவமுறையும், ஒரு நோயின் காரணத்தை அறிந்து அதற்கான மருத்துவத்தை அளிக்க வேண்டும் என்று கூறுகிறது.

தற்போது மக்கள் ஆங்கில மருத்துவத்தை பெரிதும் நம்பும் நிலை உள்ளது. எனினும் இந்தியாவில் செயல்படுகிற மருத்துவர்களில் 50% தகுதியற்ற, பயிற்சியற்ற மருத்துவர்கள் என உலக சுகாதார அமைப்பு கூறுகிறது. இந்த நவீன மருத்துவக் கொள்கைகளுக்கு மாற்றாக பல்வேறு மருத்துவ முறைகள் இருக்கின்றன. தமிழ் மருத்துவம் அதில் ஒன்று என்றாலும், அதன் பல்லாண்டு கால அனுபவ வைத்தியம், பக்க விளைவுகள் இல்லாமை ஆகியவை தமிழ் மருத்துவத்தையும் ஒரு முக்கியமான மருத்துவ முறையாக வைத்திருக்கின்றது.





இயல் - 4

செய்யுள்

# அறிவியல் தொழில்நுட்பம் - நான்காம் தமிழ்

## 3. பரிபாடல்

கீரந்தையார்

### பாடல் :

*விசும்பில் ஊழி ஊழ் ஊழ் செல்லக்*
*கரு வளர் வானத்து இசையில் தோன்றி,*
*உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்;*
*உந்து வளி கிளர்ந்த ஊழி ஊழ் ஊழியும்*
*செந்தீச் சுடரிய ஊழியும்; பனியொடு*
*தண்பெயல் தலைஇய ஊழியும்; அவையிற்று*
*உள் முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு,*
*மீண்டும் பீடு உயர்பு ஈண்டி, அவற்றிற்கும்*
*உள்ளீடு ஆகிய இருநிலத்து ஊழியும்...*

### சொற்பொருள்

| | | |
|---|---|---|
| விசும்பில் ஊழி | - | வானத்தில் யுகமானது (ஊழிக்காலம்) |
| ஊழ் ஊழ் செல்லக் | - | முறை முறையாகச் செல்ல |
| கருவளர் வானத்து இசையில் தோன்றி | - | கரு வளர்கின்ற வானத்தில் பேரொலியுடன் தோன்றியது |
| உரு அறிவாரா ஒன்றன் ஊழியும் | - | எந்த உருவமும் தோன்றியிராத ஒன்றின் யுகமும் |
| உந்து வளி கிளர்ந்த ஊழி ஊழ் ஊழியும் | - | ஊதும் காற்று முதலான யுகமும் |
| செந்தீச் சுடரிய ஊழியும் | - | (பின்னர்) நெருப்புப் பந்தின் யுகமும் |
| பனியொடு தண்பெயல் | - | (பின்னர்) பனியோடு பெய்த குளிர்ந்த மழையாக |
| தலைஇய ஊழியும் | - | தோன்றிய புதிய யுகமும் |
| அவையீற்று | - | அவைகளுடன் |
| உள்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு | - | வெள்ளத்தில் புவி மூழ்கும்படியும் |
| மீண்டும் பீடு உயர்வு ஈண்டி | - | மீண்டும் ஏற்ற சூழல் தோன்ற |
| அவற்றிற்கும் உள்ளீடு ஆகிய இருநிலத்து | - | அவைகளுக்கு உள்ளிருக்கும் நிலம் |
| ஊழியும் | - | (மீண்டும் உயிர்கள் தோன்ற) வந்த ஊழிக்காலமும் |

### பொருளுரை:

எதுவுமேயில்லாமல் பெருவெளியில் அண்டத் தோற்றத்துக்குக் காரணமான கரு (பரமாணு) பேரொலியுடன் தோன்றியது. உருவம் இல்லாத காற்று முதலான பூதங்களின் அணுக்களுடன் வளர்கின்ற வானம் என்னும் முதல் பூதத்தின் ஊழி அந்த அணுக்களின் ஆற்றல் கிளர்ந்து பருப்பொருட்கள் சிதறும் படியாகப் பல ஊழிக்காலங்கள் கடந்து சென்றன. பிறகு நெருப்புப் பந்து போலப் புவி உருவாகி விளங்கிய ஊழிக்காலம் தொடர்ந்தது. பின்னர் பூமி குளிரும் படியாகத் தொடர்ந்து மழை பொழிந்த ஊழிக்காலம் கடந்தது. அவ்வாறு தொடர்ந்து பெய்த மழையால் பூமி வெள்ளத்தில் மூழ்கியது.

மீண்டும் மீண்டும் நிறை வெள்ளத்தில் மூழ்குதல் நடந்த இப்பெரிய உலகத்தில் உயிர்கள் உருவாகி வாழ்வதற்கு ஏற்ற சூழல் தோன்றியது. அச்சூழலில் உயிர்கள் தோன்றி நிலைபெறும் படியான ஊழிக்காலம் வந்தது.

**விளக்கவுரை:**

புவியின் உருவாக்கம் குறித்து அறிவியல் பூர்வமாக கீரந்தையார் இப்பாடலில் குறிப்பிட்டிருப்பது வியப்பிலும் வியப்பு. வானம் முதல் ஊழி (யுகம்); பின் நெருப்புப்பந்து போல் புவி; அடுத்து பூமி குளிரும்படி மழை; தொடர்ந்து உயிர்கள் உருவாகி வாழ்வதற்கு ஏற்ற சூழல் வந்தது என்று குறிப்பிட்டுள்ளார்.

## ஆசிரியர் குறிப்பு:

கீரந்தையார் சங்ககாலப் புலவர்களில் ஒருவர், கீரன் தந்தை என்னும் சொற்கள் சேர்ந்ததால் கீரந்தை என அமையும் என்பது தொல்காப்பியநெறி.

## நூற் குறிப்பு:

சங்ககாலத் தமிழிலக்கியத் தொகுதியான எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. பரிபாடலில் திருமாலுக்கு 8 பாடல்களும், முருகனுக்கு 31 பாடல்களும், காளிக்கு 1 பாடலும் படிப்பதற்கு இனிமையுள்ள வையைக்கு 26 பாடல்களும், மதுரைக்கு 4 பாடல்களும் என மொத்தம் 70 பாடல்கள் உள்ளன. இந்நூல் ‘ஓங்கு பரிபாடல்’ என்றும் புகழுடையது.

## மதிப்பீடு

**பொருள் தருக.**

1. ஊழி – யுகம்
2. விசும்பு – வானம்
3. வளி – காற்று
4. ஊழ் – முறை
5. தண்பெயல் – குளிர்ந்த மழை
6. ஆர் தருபு – வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்த
7. பீடு – சிறப்பு
8. ஈண்டி – செறிந்து திரண்டு

**இலக்கணக் குறிப்புத் தருக.**

1. ஊழ் ஊழ் – அடுக்குத் தொடர்
2. வளர்வானம் – வினைத்தொகை
3. செந்தீ – பண்புத்தொகை
4. வாரா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
5. கிளர்ந்த – பெயரெச்சம்
6. தோன்றி – வினையெச்சம்
7. கருவளர் – பண்புத்தொகை
8. தண்பெயல் – பண்புத்தொகை
9. ஈண்டி – வினையெச்சம்
10. மூழ்கி – வினையெச்சம்

பகுபத உறுப்பிலக்கணம்

1. கிளர்ந்த - கிளர் + த்(ந்) + த் + அ
   - கிளர் - பகுதி
   - த் - சந்தி; த்(ந்) - ந் ஆனது விகாரம்
   - த் - இறந்த கால இடைநிலை
   - அ - பெயரெச்ச விகுதி

2. அறுத்து - அறு + த் + த் + உ
   - அறு - பகுதி
   - த் - சந்தி
   - த் - இறந்தகால இடைநிலை
   - உ - வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. பரிபாடல் அடியில் 'விசும்பும், இசையும்' என்னும் தொடர் எதனைக் குறிக்கிறது? PTA

அ) வானத்தையும் பாட்டையும் ஆ) வானத்தையும் புகழையும்
இ) வானத்தையும் பூமியையும் ஈ) வானத்தையும் பேரொலியையும்

விடை : ஆ) வானத்தையும், புகழையும்

### கூடுதல் வினாக்கள்:

2. பரிபாடல் நூலில் உள்ள பாடல்களின் எண்ணிக்கை ________.

அ) 24 ஆ) 71 இ) 81 ஈ) 91 விடை : ஆ) 71

3. ஊழிக்காலம் என்பதன் பொருள்

அ) மழைக்காலம் ஆ) வெயில்காலம் இ) யூகக்காலம் ஈ) குளிர்காலம்

விடை : இ) யூகக்காலம்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. செந்தீச் சுடரிய ஊழியும்; பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும்; அவையிற்று
உள்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு,
மீண்டும் பீடு உயர்பு ஈண்டி, அவற்றிற்கும்
உள்ளீடு ஆகிய இருநிலத்து ஊழியும்

1. இப்பாடல் வரிகள் இடம்பெற்றுள்ள நூல் ________

அ) கலித்தொகை ஆ) பெரியபுராணம்
இ) பரிபாடல் ஈ) முல்லைப்பாட்டு விடை : இ) பரிபாடல்

2. "செந்தீ" என்பதன் இலக்கணக் குறிப்பு ________

அ) பண்புத்தொகை ஆ) உவமைத் தொகை
இ) உம்மைத் தொகை ஈ) வேற்றுமைத் தொகை

விடை : அ) பண்புத் தொகை

3. "தண்பெயல்" என்பதன் பொருள் ________

அ) இனிய ஓசை ஆ) வறண்ட வயல்
இ) குளிர்ந்த மழை ஈ) தணிந்த குடை விடை : இ) குளிர்ந்த மழை

4. இப்பாடலின் ஆசிரியர்________

அ) ஓதலாந்தையார் ஆ) அம்மூவனார்
இ) கபிலர் ஈ) கீரந்தையார் விடை : ஈ) கீரந்தையார்

2. விசும்பில் ஊழி ஊழ் ஊழ் செல்லக் **PTA**
கரு வளர் வானத்து இசையில் தோன்றி,
உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்;
உந்து வளி கிளர்ந்த ஊழி ஊழ் ஊழியும்

1. ஊழ் ஊழ் இலக்கணக்குறிப்பு ________
அ) இரட்டைக்கிளவி ஆ) பண்புத்தொகை
இ) அடுக்குத்தொடர் ஈ) வினைத்தொகை
விடை : இ) அடுக்குத்தொடர்

2. இப்பாடலின் ஆசிரியர்________
அ) ஒதலாந்தையார் ஆ) அம்மூவனார்
இ) கபிலர் ஈ) கீரந்தையார் விடை : ஈ) கீரந்தையார்

3. பாடலில் உணர்த்தப்படும் கருத்து
அ) தத்துவக்கருத்து ஆ) அறிவியல் செய்தி
இ) நிலையாமை ஈ) அரசியல் அறம்
விடை : ஆ) அறிவியல் செய்தி

4. விசும்பு, இசை, ஊழி________ பாடலில் இச்சொற்கள் உணர்த்தும் பொருள்கள் முறையே
அ) காற்று, ஓசை, கடல் ஆ) மேகம், இடி, ஆழம்
இ) வானம், பேரொலி, யுகம் ஈ) வானம், காற்று, கலம்
விடை : இ) வானம், பேரொலி, யுகம்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. உயிர்கள் உருவாகி வளர ஏற்ற சூழல் பூமியில் எவை எவையெனப் பரிபாடல் வழி அறிந்தவற்றைக் குறிப்பிடுக. **PTA**

உயிர்கள் உருவாகி வளர ஏற்ற சூழல் பூமியில் வெப்பமும், மழையும் எனப் பரிபாடல் கூறுகிறது.

### கூடுதல் வினாக்கள்:

2. முதல் ஊழி எது?

உருவம் இல்லாத காற்று முதலான பூதங்களின் அணுக்களுடன் வளர்கின்ற வானமே முதல் ஊழியாகும்.

3. பரிபாடல் – குறிப்பு வரைக

- எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று.
- இதில் 71 பாடல்கள் உள்ளன.
- ‘ஓங்கு பரிபாடல்’ என்றும் புகழுடையது.

## சிறுவினா

### கூடுதல் வினா:

1. விசும்பில்.... எனத் தொடங்கும் பரிபாடலில் கீரந்தையார் குறிப்பிடும் கருத்துகளை எழுதுக.

- பெருவெளியில் அண்டத் தோற்றத்தில் கரு பேரொலியுடன் தோன்றியது வானம் என்னும் முதல் பூதத்தின் ஊழி.
- பிறகு நெருப்புப் பந்து போல புவி உருவாகி விளங்கிய ஊழிக்காலம் தொடர்ந்தது.

- பின்னர் மழை பொழிந்த ஊழிக்காலம் வந்தது. அவ்வாறு தொடர்ந்து பெய்த மழையால் பூமி வெள்ளத்தில் மூழ்கியது.
- இப்பெரிய உலகத்தில் உயிர்கள் உருவாகி வாழ்வதற்கு ஏற்ற சூழல் தோன்றியது.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. நம் முன்னோர் அறிவியல் கருத்துகளை இயற்கையுடன் இணைத்துக் கூறுவதாகத் தொடங்குகின்ற பின்வரும் சொற்பொழிவைத் தொடர்ந்து நிறைவு செய்க:

பேரன்புக்குரிய அவையோர் அனைவருக்கும் வணக்கம்! இன்று இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுடன் அறிவியலை நான்காம் தமிழாகக் கூறுகின்றனர். ஆதிகாலந்தொட்டு இயங்கிவரும் தமிழ்மொழியில் அறிவியல் என்பது தமிழர் வாழ்வியலோடு கலந்து கரைந்து வந்துள்ளதை இலக்கியங்கள் மூலம் அறிகிறோம். அண்டத்தை அளந்தும், புவியின் தோற்றத்தை ஊகித்தும் கூறும் அறிவியல் செய்திகள் இலக்கியங்களில் உள்ளன. சங்க இலக்கியமான பரிபாடலில்......

**வானவியல்:**

கோடிக்கணக்கான விண்மீன்கள் விண்வெளியில் கண் சிமிட்டுகின்றன. இவற்றை உற்று நோக்கிய தமிழன் 27 விண்மீன்கள் மட்டும் கணக்கில் எடுத்துக் கொண்டு துல்லியமாகக் கணக்கிட்டுள்ளான். ஒரு மாதத்தில் நிலவு விண்ணிலே 27 நாட்கள் மட்டும் தான் பார்வையில் படுகிறது. அந்த 27 நாட்களில் அது உதயமாகிற நேரம் வேறுபடுகிறது. அப்போதெல்லாம் ஒவ்வொரு நாளும் 27 விண்மீன்களின் பக்கத்தில் மாறி மாறித் தோன்றும். ஒவ்வொரு மாதமும் நிலவு முதலில் சந்திக்கின்ற விண்மீன்கள் மாறி மாறி வரும். இந்த 27 விண்மீன்களையும் 12 ஆகப் பிரிந்தான். அவ்வாறு பிரித்ததற்குக் காரணமே ஒவ்வொரு மாதமும் இந்த விண்மீன் வட்டங்களின் வழியாகத்தான் கதிரவன் செல்லும் பாதை அமைகிறது. இந்த 12 வட்டங்களையே பிற்காலத்தில் ராசி என்ற பெயரில் மாற்றிவிட்டனர்.

'விரிகதிர் மதியமொடு வியல் விசும்பு புணர்ப்ப
எரிசடை எழில் வேழம் தலையெனக் கீழிலிருந்து
தெருவிடைப் படுத்த மூன்று ஒன்பதிற் றிருக்கையுள்
உருகெழு வெள்ளி வந்த தேற்றியல் சேர......

என்று பரிபாடல் கூறுகிறது. இப்பாடலில் கார்த்திகை முதலாக 27 விண்மீன்கள் செல்லும் பாதை 'சூரியவீதி தெரு' என்ற எளிய கலைச்சொல்லால் அழைக்கப்படுகிறது.

'நிலவழி' எனப்படும் ஊழிக்காலம் தோன்றிய பின்னரும் பல காலங்கள் அவ்வாறே மாற்றமின்றிக் கிடந்தது. நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் என்ற பேரெண்கள் கோடிக்கும் மேற்பட்டவை. இவ்வாறான எண்களுடன் அக்காலத் தமிழன் ஈடுபட்டிருந்தான் என்று பின்வரும் பரிபாடல் கூறுகிறது.

"உள்ளீடாகிய இருநிலத் தூழியும்
நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை"

**உலகம் தோன்றியமுறை:**

நெருப்புக் கோளமான சூரியனிலிருந்து தெறித்து விழுந்த அனற்பிழம்பு நீண்ட காலம் விண்ணில் சுழன்று பின்னர் படிப்படியாக குளிர்ந்து பூமி உருவானதாக அறிவியல் ஆய்வு தெரிவிக்கிறது. அதன் பின்னர் பூமியில் உயிரினங்கள் உருவாயின என்று உலகத்தின் உயிரின பரிணாமத் தோற்ற வரலாறு கூறுகிறது என்று பரிபாடலில் இடம் பெற்ற வரிகள் விளக்குகிறது.

'கருவளர் வானத்திசையில் தோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்

உந்துவளி கிளர்ந்த ஊழி உழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தன்பெயல் தலைஇய ஊழியும்
..........
உள்ளீடாகிய இருநிலத்து ஊழியும்'

முடிவுரை:

பழந்தமிழர்கள் பரந்துபட்ட அறிவியல் சிந்தனை உடையவர்கள். இயற்கையை விளக்கும் கற்பனைத் திறன் வாய்ந்தவர்கள்.

## கூடுதல் வினா:

2. சங்க இலக்கியமான பரிபாடலில் ஊழிகளை பட்டியலிடுக.

1. விசும்பில் ஊழி என்பது பசும்பொன் உலகமும், மண்ணுலகமும் தோன்றிய யுகம்.
2. உரு அறிவாரா ஒன்றன் ஊழி என்பது எந்த வகையான உருவமும் தோன்றியிராத காலத்தில் முதல் உருவம் தோன்றிய யுகம்.
3. உந்து வளி கிளர்ந்த ஊழி என்பது வீசுகின்ற காற்று தோன்றிய யுகத்தினைக் குறிக்கிறது.
4. செந்தீச் சுடரிய ஊழி என்பது நெருப்புப் பந்து தோன்றிய யுகம்
5. பனியொடு தண்பெயல் தலைஇய ஊழி என்பது பனியுடன் குளிர்ந்த மழை பெய்த யுகத்தினைக் குறிக்கிறது.
6. வெள்ளம் மூழ்கி என்பது மழையினால் பூமியானது வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்த யுகம் ஆகும்
7. இருநிலத்து ஊழி என்பது நீருக்கு உள்ளிருந்து நிலம் தோன்றிய ஊழி.
8. இவ்வாறு பூமி தோன்றிய யுகங்களை வரிசையாக பட்டியலிடுகிறது சங்க இலக்கியமான பரிபாடல்.

## கற்பவை கற்றபின்

. பரிபாடல் காட்டும் பெரு வெடிப்புக் காட்சியைப் படங்களாக வரைந்து பொருத்தமான செய்திகளுடன் வழங்குக.


நெருப்புப் பந்தாய் வந்து குளிர்ந்த பூமி

உருவம் இல்லாத காற்று முதலான பூதங்களின் அணுக்களுடன் வளர்கின்ற வானம் என்னும் முதல் பூதத்தின் ஊழி அது. அந்த அணுக்களின் ஆற்றல் கிளர்ந்து பருப்பொருள் சிதறி பல ஊழிக்காலங்கள் கடந்து சென்றன.





இயல் - 4

விரிவானம்

## அறிவியல் தொழில்நுட்பம் - நான்காம் தமிழ்

# 4. விண்ணைத் தாண்டிய தன்னம்பிக்கை

## மதிப்பீடு

**பாடநூல் வினா:**

1. அறிவியலாளர் ஸ்டீபன் ஹாக்கிங்குடன் விண்வெளிப் பயணம் என்னும் தலைப்பில் கற்பனைக் கதை ஒன்று எழுதுக.

**முன்னுரை:**

'வாழ்க்கை எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் வெற்றிக்கான வழி அதில் இருக்கவே செய்கிறது' என்ற கோட்பாட்டினை வலியுறுத்தியதோடு அதன் படி வாழ்ந்தவர் ஸ்டீபன் ஹாக்கிங்.

**ஸ்டீபன் ஹாக்கிங்குடன் சந்திப்பு:**

தனது இளம் வயதிலேயே நரம்பியக்க நோயினால் பாதிக்கப்பட்டு கை, கால் இயக்கம் மற்றும் பேச்சுப் பாதிப்புகளுக்கு உள்ளான அவரைக் காண அவரது இல்லத்திற்குச் சென்றிருந்தேன். அவர் விண்வெளியில் பயணிக்க பேரவா கொண்டவர். அவருக்காக பிரத்தியேகமாக விண்வெளி ஊர்தி ஒன்றை விஞ்ஞானி ஒருவர் உருவாக்கியிருந்தார்.

**விண்வெளிப் பயணம்:**

நானும் ஸ்டீபன் ஹாக்கிங்கும் அவருக்கென்று தயாரிக்கப்பட்டிருந்த வானூர்தியில் ஏறிக்கொண்டோம். ஹாக்கிங் மிகவும் உற்சாகமாக காணப்பட்டார்.

எங்கள் வானூர்தி கிளம்பியதும் எனக்குப் பெருங்கிளர்ச்சியாக இருந்தது. சிறிது நேரம் சென்றதும் நாங்கள் எடையற்ற தன்மையை உணர்ந்தோம். நாங்கள் வானில் செல்லும் போது வானத்தில் கோடிக்கணக்கான விண்மீன்கள் ஒளிர்வதைக் கண்டோம். அவற்றுள் நம் ஞாயிறும் ஒன்று. ஒரு விண்மீனின் ஆயுள் கால முடிவில் உள்நோக்கிய புவிஈர்ப்பு விசை கூடுகிறது. அதனால் விண்மீன் சுருங்குகிறது. விண்மீன் சுருங்கச் சுருங்க அதன் ஈர்ப்பாற்றல் உயர்ந்து கொண்டே செல்கிறது என்று சூரியனை எனக்குக் காண்பித்து ஹாக்கிங் விளக்கினார்.

**கருந்துளை:**

வானத்தில் ஒரு கருந்துளை காணப்படுகிறது என்று கூறினார். அதன் விவரத்தைக் கூறுங்களேன் என்று அவர் அருகாமையில் இருந்து கேட்டேன். அதற்கு அவர் கருந்துளையின் ஈர்ப்பு எல்லையிலிருந்து கதிர்வீச்சுகள் வெளிப்பட்டுக் கொண்டேயிருக்கும். கருந்துளை உண்மையிலேயே கருப்பாக இருப்பதில்லை. ஒருசில நாள்கள் கழித்து கருந்துளையிலிருந்து கதிர்வீச்சும் அணுத் துகள்களும் கசியத் தொடங்கி இறுதியில் கருந்துளை வெடித்து மறைந்து விடும் என்று கூறினார்.

**படைப்பின் ஆற்றல்:**

கருந்துளை என்பது அழிவின் ஆற்றல் என்றே நான் நம்பிக் கொண்டிருந்தேன். ஆனால் அவர் அது படைப்பின் ஆற்றல் என்றார்.

**பயண முடிவு:**

இவ்வாறாக மகிழ்ச்சியாக நாங்கள் பயணம் செய்தோம். பின்னர் ஒரு புதுமையான அனுபவம் கிடைத்த திருப்தியோடு நாங்கள் பூமி நோக்கித் திரும்பினோம். அங்கிருந்து அவரது வீட்டிற்குச் சென்று பின் நான் பிரியாவிடை பெற்றேன்.

**முடிவுரை:**

தற்காலத்தின் ஐன்ஸ்டீன் என்று போற்றப்படும் ஸ்டீபன் ஹாக்கிங்குடன் விண்வெளிப் பயணம் மேற்கொண்டது எனக்கு என்றும் அழியாத நினைவாக இருக்கும்.

### கூடுதல் வினாக்கள்:

2. ஸ்டீபன் ஹாக்கிங் என்ற அறிவியலாளர் பற்றிய கட்டுரை வரைக.

**முன்னுரை:**

ஆங்கிலேய கோட்பாட்டு அறிவியலாளரும், அண்டவியலாளரும், நூலாசிரியருமாகிய ஸ்டீபன் ஹாக்கிங் பற்றி பின்வருமாறு காண்போம்.

**இளமைக்காலம்:**

1942ம் ஆண்டு சனவரி 8ஆம் தேதி இங்கிலாந்தில் பிறந்தார். செயின்ட் அல்பான்சு பள்ளியில் பள்ளிப்படிப்பை முடித்தார். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் இளங்கலைப் பட்டமும், டிரினிட்டியில் முதுகலைப் பட்டமும் பெற்றார்.

தனது 21ஆம் வயதில் நரம்பு நோயால் பாதிக்கப்பட்டு படுக்கையில் கிடந்தார். பேசும் திறனையும் இழந்தார்.

**ஆராய்ச்சி:**

கணினி மூலம் பல அறிவியல் ஆராய்ச்சிகளை மேற்கொண்டார். இப்பேரண்டம் பெரு வெடிப்பினால் உருவானதே என்பதற்கான சான்றுகளைக் கணிதவியல் அடிப்படையில் விளக்கினார். இப்புவியின் படைப்பில் கடவுள் போன்ற ஒருவர் பின்னணியில் இருந்தார் என்பதை மறுத்தார். கருந்துளையிலிருந்து கதிர்வீச்சும், அணுத்துகள்களும் கசியத் தொடங்கி இறுதியில் கருந்துளை வெடித்து மறைந்துவிடும் என்று தன் ஆராய்ச்சியில் வெளிப்படுத்தினார்.

**பெற்ற விருதுகள்:**

இவரின் முயற்சிக்குக் கிடைத்த விருதுகள் அமெரிக்காவின் உயரிய விருதான அதிபர் விருது, ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் விருது, உல்ஃப் விருது, காப்ளி பதக்கம், அடிப்படை இயற்பியல் பரிசு ஆகும்.

**வானத்தில் பயணம்:**

சூடான காற்று நிரம்பிய பலூனில் வானில் பறந்து தனது 60வது பிறந்த நாளைக் கொண்டாடினார். போயிங் 727 என்ற விமானத்தில் பூஜ்ஜிய ஈர்ப்பு விசைப் பயணத்தை மேற்கொண்டு எடையற்ற தன்மையை உணர்ந்தார்.

**முடிவுரை :**

அறிவியல் உலகில் மட்டுமன்றி சமூக உளவியல் அடிப்படையிலும், தன்னம்பிக்கையின் சிகரமாக விளங்கியவர் ஸ்டீபன் ஹாக்கிங்.

3. 'விண்ணைத் தாண்டிய நம்பிக்கை' என்னும் துணைப்பாடம் மூலம் ஸ்டீபன் ஹாக்கிங்கின் வியத்தகு சாதனைகளை சுருக்கி எழுதுக.

**முன்னுரை:**

அறிவியலின் வளர்ச்சி மனிதனின் அறிவை விரிவாக்குகிறது. இயற்கையின் மர்ம முடிச்சுகளை அவிழ்க்கும் அறிவியல் சிந்தனை, போற்றுதலுக்குரியதாக இருக்கிறது. அதிலும் தன்னால் எந்த இயக்கமும் மேற்கொள்ள இயலாத நிலையிலும் அறிவியலின் இயங்கும் தன்மையை அறிந்து புது உண்மைகளைச் சொன்ன ஸ்டீபன் ஹாக்கிங்கினை உலகம் போற்றுவதில் வியப்பில்லை. அவருடைய விண்ணைத் தாண்டிய தன்னம்பிக்கையை விரிவாகக் காண்போம்.

**ஸ்டீபன் ஹாக்கிங்கின்:**

இங்கிலாந்தின் மருத்துவமனை ஒன்றில் 1963 ஆம் ஆண்டு 21 வயது இளைஞரான ஸ்டீபன் ஹாக்கிங்கின் அனுமதிக்கப்பட்டார். மருத்துவத்திற்குப் பின் அவர் இன்னும் சில திங்களே உயிர் வாழ்வார் என்றும் விரைவில் இறந்து விடுவார் என்றும் மருத்துவர்கள் அறிக்கை தந்தனர்.

பக்கவாதம் என்னும் நரம்பு நோய்ப்பாதிப்புடன் அவர், மருத்துவ உலகமே மிரண்டுபோகுமளவு மேலும் 53 ஆண்டுகள் இயங்கினார். 1985 இல் மூச்சுக்குழாய்த் தடங்கலால் பேசும் திறனை இழந்தார். இறுதியாக எஞ்சியது கன்னத்தின் தசையசைவும் கண்சிமிட்டலும் மட்டுமே. கன்னத் தசையசைவு மூலம் தன் கருத்தைக் கணினியில் தட்டச்சு செய்து வெளிப்படுத்தினார். அவரின் ஆய்வுகளுக்குத் துணையாகச் செயற்கை நுண்ணறிவுக் கணினி செயல்பட்டது.

**ஹாக்கிங் கதிர்வீச்சு:**

1. கருத்துளையினுள் செல்லும் எந்த ஒன்றும் தப்பித்து வெளியே வரமுடியாது.
2. கருத்துளையின் ஈர்ப்பு எல்லையிலிருந்து கதிர்வீச்சுகள் வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன.
3. கருந்துளை உண்மையிலேயே கருப்பாக இருப்பதில்லை. கருந்துளையிலிருந்து ஒரு கட்டத்தில் கதிர்வீச்சும் அணுத்துளைகளும் கசியத் தொடங்கி இறுதியில் கருந்துளை வெடித்து மறைந்துவிடும்.

ஸ்டீபன் ஹாக்கிங்கின் இந்த ஆராய்ச்சி முடிவு "ஹாக்கிங் கதிர்வீச்சு" என்று அழைக்கப்படுகிறது. அது கருந்துளை பற்றிய முந்தைய கருத்துகளைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டது. முன்னர் அண்டவெளியில் காணப்படும் கருத்துளை அழிவு ஆற்றல் என்று கருதப்பட்டது. ஆனால் ஹாக்கிங், கருத்துளை என்பது படைப்பின் ஆற்றல் என்று நிறுவினார்.

**முன்னோடிகள்:**

ஐன்ஸ்டைன், நியூட்டன் முதலானோர் ஸ்டீபன் ஹாக்கிங்கின் முன்னோடிகள். இவர், அவர்களுக்கு நிகராக மதிக்கப்படுகிறார். நியூட்டன் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் வகித்த கணக்கியல் துறையின் "லூகாசியன் பேராசிரியர்" என்ற மதிப்பு மிகுந்த பதவியை ஸ்டீபன் ஹாக்கிங்கும் வகித்திருக்கிறார்.

ஐன்ஸ்டைன் ஈர்ப்பலைகள் குறித்த முடிவுகளைக் கணிதச் சமன்பாடுகள் மூலம் கோட்பாடுகளாகச் சொன்னார். அவர் காலத்தில் $E = MC^2$ என்னும் கோட்பாட்டை யாரும் ஏற்றுக்கொள்ளவில்லை. 100 ஆண்டுகளுக்குப்பின் ஈர்ப்பலைகள் இருப்பதை உலகம் கண்டு கொண்டது.

கருந்துளை குறித்த தன்னுடைய ஆய்வை ஐன்ஸ்டைன் போல, கோட்பாடுகளாக வெளியிடாமல் விண்மீன் இயக்கத்தோடு ஒப்பிட்டு ஸ்டீபன் ஹாக்கிங் விளக்கியதால் உலகம் கருந்துளைக் கோட்பாட்டை எளிதில் புரிந்து கொண்டது.

**பெருமைகள்:**

- 2012 இல் நடைபெற்ற பாரா ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளின் "தொடக்க விழா நாயகர்" என்ற சிறப்பைப் பெற்றார்.
- 'அடுத்த தலைமுறை' 'பெருவெடிப்புக் கோட்பாடு' உள்ளீட்டதொலைக்காட்சித் தொடர்களில் பங்கேற்றார்.
- சூடான காற்று நிரம்பிய பலூனில் வானில் பறந்து தனது 60 வது பிறந்த நாளைக் கொண்டாடினார்.
- போயிங் 727 என்ற விமானத்தில் பூஜ்ஜிய ஈர்ப்பு விசைப் பயணத்தை மேற்கொண்டு எடையற்ற தன்மையை உணர்ந்தார்.

**முடிவுரை:**

ஸ்டீபன் ஹாக்கிங் வியக்கத்தக்க மனிதர் என்பதை அவரின் வாழ்க்கை நிகழ்வுகளும் ஆராய்ச்சிகளும் காட்டுகின்றன. உடலில் ஏற்பட்ட உறுப்பு இழப்போ, ஊனமோ ஒருவருக்குக் குறையாகாது; ஊக்கமும் உழைப்பும் சேர்ந்த ஆளுமைத் தன்மை இல்லாமல் இருப்பதே குறையாகும் என்ற உண்மையை உலகிற்கு எடுத்துக்காட்டியவர் ஸ்டீபன்.

## கற்பவை கற்றபின்

1. "அறிவை விட மிகவும் முக்கியமானது கற்பனைத் திறன். ஏனெனில் அறிவு என்பது நாம் தற்போது அறிந்தும் புரிந்தும் வைத்திருப்பவற்றோடு முடிந்துவிடுகிறது. கற்பனைத் திறனோ இந்த ஒட்டு மொத்தப் பேரண்டத்தையும் அளப்பது. இன்று நாம் அறிந்திருப்பதை மட்டுமன்று; இனி நாம் அறிந்து கொள்ளப்போவதையும் உள்ளடக்கியது" – ஐன்ஸ்டீன்.

"வாழ்க்கை எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் வெற்றிக்கான வழி அதில் இருக்கவே செய்கிறது. நிச்சயம் என் ஆராய்ச்சியில் நான் வெல்வேன். அதன்மூலம் மனித இனம் தொடர வழிவகுப்பேன்" – ஸ்டீபன் ஹாக்கிங்.

இவ்விருவரின் கூற்றுகளைப் பாடப்பகுதி உணர்த்தும் கருத்துகளோடு ஒப்பிட்டு உரையாடுக.

கவிதா : ஒரு மனிதன் வாழ்வில் முன்னேற அவனது முயற்சியும் தன்னம்பிக்கையும் மிகவும் முக்கியம்!

அமுதா : ஆம். இதற்குச் சரியான உதாரணம் ஸ்டீபன் ஹாக்கிங் தான்.

கவிதா : ஆம். உண்மையிலேயே அவர் ஓர் ஆச்சரியமானவர் தான்:

அமுதா : இல்லையென்றால் மருத்துவர்கள் இவர் இன்னும் சில திங்கள் தான் உயிரோடு இருப்பார் என்று கூறிய பிறகு, அவரது தன்னம்பிக்கையினாலும், விடாமுயற்சியாலும் அதன் பின் 53 ஆண்டுகள் வாழ்ந்தார்.

கவிதா : அறிவை விட முக்கியம் கற்பனைத் திறன். அது நாம் அறிந்திருப்பதை மட்டுமல்லாது அறிந்து கொள்ளப்போவதையும் உள்ளடக்கியது என்றார் ஐன்ஸ்டீன்.

அமுதா : ஆம். இல்லாவிட்டால் நரம்பு நோய்ப்பாதிப்பில் இருந்த ஒருவர், எந்த ஒரு அறிஞரும் கண்டுணர முடியாத கருந்துளையின் ரகசியத்தைக் கண்டறிய முடியுமா?

கவிதா : அவர் கூறியது போலவே, வாழ்க்கை எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் வெற்றிக்கான வழி அதில் இருக்கிறது.

அமுதா : அவரது வாழ்க்கை நமக்கெல்லாம் ஒரு தன்னம்பிக்கைப் பாடம்!

கவிதா : நாமும் அவரைப் போல் தன்னம்பிக்கையுடன் வாழ்ந்து இந்த மனித குலத்திற்கு ஏதேனும் நன்மை செய்ய வேண்டும்!

2. கருந்துளை சார்ந்த செய்தியை அறிவியல் இதழ் ஒன்றிற்குக் குறுங்கட்டுரையாக எழுதுக.



**கருந்துளை:**

கருந்துளை என்பது ஒளி உட்பட எதுவுமே வெளியேற முடியாத அளவு வலுவான ஈர்ப்புச் சக்தியைக் கொண்டுள்ளன. இதனைக் கருங்குழி என்கின்றனர். கருங்குழிகள் நட்சத்திரங்களின் பரிணாமத்தின் இறுதிக் கட்டமாகக் கருதப்படுகிறது. ஒரு விண்மீனின் ஆயுட்கால முடிவில் உள்நோக்கிய விசை கூடுகிறது. அதனால் விண்மீன் சுருங்குகிறது. விண்மீன் சுருங்கச் சுருங்க அதன் ஈர்ப்பாற்றல் உயர்ந்து கொண்டே சென்று அளவற்றதாகி விடுகிறது.

**கருந்துளைக் கோட்பாடு:**

பிரபஞ்சத்தில் ஆற்றல் ஒடுங்கிய நட்சத்திரங்கள் கருந்துளைகளாக மாறி இருப்பதாகவும், பிரபஞ்சத்தின் மையமே கூட மாபெரும் கருந்துளைதான் என்றும் ஒரு கோட்பாடு உள்ளது. எரிபொருள் தீர்ந்த விண்மீண்கள் இறுதியில் அடர்த்தி அதிகமாகி கருந்துளையாகக் கருதப்படுகிறது. இதனை தொலைநோக்கிகளாலோ, செயற்கைக் கோள் கருவிகளாலோ கண்டறிய முடியாது. ஆனால், விண்வெளியில் கருந்துளைகளின் அருகே செல்லும் பால்வளி மண்டலம் சிதைவடைவதை அதிலிருந்து வெளிப்படும் எக்ஸ் கதிர்களின் பதிவு மூலம் உணர முடியும் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.

**கருந்துளை இணைகள் கண்டுபிடிப்பு:**

இந்தியாவை பூர்வீகமாகக் கொண்ட ஆராய்ச்சியாளர் ஒருவர் உள்ளடங்கிய விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் குழுவானது அண்டவெளியின் மையத்தில் ஐந்து கருந்துளை இணைகளை கண்டறிந்துள்ளனர். இவை ஒவ்வொன்றும் சூரியனை விட மில்லியன் மடங்கு நிறையுடையவை. இக்கண்டுபிடிப்பு விண்வெளி ஆராய்ச்சிகளுக்கு எவ்வாறு கருந்துளைகள் வளர்கின்றன என்றும், எப்படி அவைகளால் வலிமையான புவிஈர்ப்பு அலைகளை வெளியிட முடிகின்றது என்பதைப் பற்றி அறிய நல்ல புரிதல்களை பெற உதவும்.

**முடிவுரை:**

இக்கருந்துளை இணைகள் விண்வெளியில் உள்ள இரு அண்டங்கள் ஒன்றோடு ஒன்று மோதி பின்பு இணைவதால் உருவாகும் பெரும் நிறையுடைய இரு கருந்துளைகள் ஒன்றுக்கொன்று மிகவும் நெருங்கி வரும்போது உருவாகின்றன.





இயல் - 4

இலக்கணம்

அறிவியல் தொழில்நுட்பம் – நான்காம் தமிழ்

# இலக்கணம் - பொது

## பலவுள் தெரிக

**கூடுதல் வினாக்கள்:**

1. இலக்கண முறையின்றி பேசுவதும் எழுதுவதும் __________ எனப்படும்.
   அ) வழு ஆ) வழாநிலை இ) வழுவமைதி ஈ) பால்வழுவமைதி
   விடை: வழு

2. 'வாடா இராசா, வாடா கண்ணா' என தன் மகளைப் பார்த்துத் தாய் அழைப்பது __________ வழுவமைதி ஆகும்.
   அ) திணை ஆ) பால் இ) இடம் ஈ) படர்க்கை விடை: பால்

3. 'குடியரசுத் தலைவர் நாளை தமிழகம் வருகிறார்!' என்பது __________ வழுவமைதி ஆகும்.
   அ) பால் ஆ) இட இ) கால ஈ) திணை விடை: கால

4. நீ, நீர், நீவிர், நீங்கள் என்பன __________ பெயர்கள்.
   அ) தன்மை ஆ) முன்னிலை இ) படர்க்கை ஈ) ஒன்றன்பால்
   விடை: முன்னிலை

5. பறந்தது, பறந்தன என்பது __________ வினைகள்.
   அ) தன்மை ஆ) முன்னிலை இ) படர்க்கை ஈ) செயபாட்டு
   விடை: படர்க்கை

6. பால் __________ வகைப்படும்.
   அ) இரண்டு ஆ) மூன்று இ) ஐந்து ஈ) நான்கு விடை: ஐந்து

7. திணை வழுவமைதி PTA
   அ) 'இந்தப் பாப்பா தூங்கமாட்டாள்' என்று தன்னையே குழந்தை குறிப்பிடுவது
   ஆ) இரவெல்லாம் நாய் கத்திக் கொண்டே இருந்தது.
   இ) 'வாடாச் செல்லம்' என்று தாய் மகளை அழைப்பது
   ஈ) 'என் தங்கை வந்தாள்' என்று பசுவைக் குறிப்பிடுவது
   விடை : ஈ) என் தங்கை வந்தாள்' என்று பசுவைக் குறிப்பிடுவது

8. தென்னை மரங்கள் நிறைந்த பகுதியைக் குறிப்பிடும் வழாநிலை PTA
   அ) தென்னந்தோட்டம் ஆ) தென்னஞ்சோலை
   இ) தென்னந்தோப்பு ஈ) தென்னங்காடு
   விடை : இ) தென்னந்தோப்பு

## குறுவினா

**பாடநூல் வினாக்கள்**

1. வருகின்ற கோடை விடுமுறையில் காற்றாலை மின் உற்பத்தியை நேரில் காண்பதற்கு ஆரல்வாய்மொழிக்குச் செல்கிறேன் – இத்தொடர் கால வழுவமைதிக்கு எடுத்துக்காட்டாக அமைவது எவ்வாறு? PTA

   விடை : இத்தொடர் 'ஆரல்வாய்மொழிக்குச் செல்ல இருக்கிறேன்' என அமைதல் வேண்டும்'. அவ்வாறு அமையவில்லை என்றாலும் நாம் பிழையாகக் கருதுவதில்லை. ஏனெனில் 'செல்ல இருப்பதை' உறுதியாகக் கூறுவதால் கால வழுவமைதியாகக் கருதுகிறோம்.

2. ''சீசர் எப்போதும் என் சொல் பேச்சைக் கேட்பான். புதியவர்களைப் பார்த்து கத்துவானே தவிர கடிக்க மாட்டான்'' என்று இளமாறன் தன்னுடைய வளர்ப்பு நாயைப் பற்றிப் பெருமையாகக் கூறினார் – இதில் உள்ள திணை வழுக்களைத் திருத்தி எழுதுக.

விடை : "சீசர் எப்போதும் என் சொல் பேச்சைக் கேட்கும். புதியவர்களைப் பார்த்து குரைக்குமே தவிர கடிக்காது" என்று கூறவேண்டிய இடத்தில் இளமாறன் கேட்பான், கடிப்பான் என அஃறிணையை உயர்திணையாக வழுவிக் கூறுகிறார்.

**கூடுதல் வினாக்கள்:**

3. இருதிணை – விளக்குக.

ஆறறிவுடைய மக்களை உயர்திணை என்றும், மற்ற உயிரினங்களையும், உயிரற்ற பொருள்களையும் அஃறிணை என்றும் கூறுவர்.

4. பால் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

பால் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என ஐவகைப்படும்.

5. உயர்திணைக்குரிய பால் பகுப்புகளை எடுத்துக்காட்டுடன் எழுதுக.

உயர்திணைக்குரிய பால் ஆண்பால், பெண்பால், பலர்பால் ஆகும்.

எ.கா : ஆண்பால் – அண்ணன், பெண்பால் – அரசி, பலர்பால் – பெண்கள்

6. அஃறிணைக்குரிய பால் பகுப்புகளை எடுத்துக்காட்டுடன் எழுதுக.

அஃறிணைக்குரிய பால் ஒன்றன்பால், பலவின்பால் ஆகும்.

எ.கா : ஒன்றன்பால் – யானை
பலவின்பால் – யானைகள்

7. மூவிடம் என்பன யாவை?

தன்மை – நான், முன்னிலை – நீ, படர்க்கை – அவன் என்பன.

8. வழாநிலை என்றால் என்ன?

இலக்கண முறையுடன் பிழையின்றிப் பேசுவதும், எழுதுவதும் வழாநிலை எனப்படும்.

எ.கா : வளவன் வருகிறான்.

9. வழு என்றால் என்ன?

இலக்கண முறையின்றிப் பேசுவதும், எழுதுவதும் வழு எனப்படும்.

எ.கா : வளவன் நேற்று படிக்கிறான்.

10. வழுவமைதி என்றால் என்ன?

இலக்கண முறைப்படி பிழையுடையது எனினும், இலக்கண ஆசிரியர்களால் ஏதேனும் ஒரு காரணம் கருதி பிழையன்று என ஏற்றுக் கொள்ளப்படுவது வழுவமைதி ஆகும்.

11. வழுவமைதி எத்தனை வகைப்படும்? அவை யாவை?

திணை வழுவமைதி, பால் வழுவமைதி, இட வழுவமைதி, கால வழுவமைதி, மரபு வழுவமைதி என வழுவமைதி ஐவகைப்படும்.

12. திணை வழுவமைதி – விளக்குக.

உயர்திணை எழுவாய் அஃறிணைப் பயனிலையையும், அஃறிணை எழுவாய் உயர்திணைப் பயனிலையையும் கொண்டு முடியும் சில இடங்கள் வழுவாக அமையும் போது அது திணை வழுவமைதி எனப்படும்.

எ.கா : பசுவை, 'என் அம்மை வந்தாள்' என்று கூறுவது திணை வழுவமைதி.

13. பால் வழுவமைதி – விளக்குக.

மகிழ்ச்சி, உயர்வு, சிறப்பு, கோபம், இழிவு ஆகிய காரணங்களால் பால் மயங்கி வருவது பால் வழுவமைதியாகும்.

எ.கா : மகிழ்ச்சியின் காரணமாக தன் மகளை "வாடா செல்லம்" என்று ஆண்பால் விளி கொண்டு அழைப்பது பால் வழுவமைதியாகும்.

14. இட வழுவமைதி – விளக்குக.

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களில் வெவ்வேறு இடங்கள் கலந்து வரும் போது ஏதாவது ஓர் இடத்திற்குரிய பயனிலையைக் கொண்டு முடிவது இட வழுவமைதி ஆகும்.

எ.கா : மாறன் என்பவன் தன்னைப் பற்றிப் பிறரிடம் கூறும் போது ''இந்த மாறன் ஒரு நாளும் பொய் கூற மாட்டான்'' என தன்மையினைப் படர்க்கையாகக் கூறுவதாகும்.

15. கால வழுவமைதி – விளக்குக.

மூன்று காலத்திலும் இடைவிடாது தன் தொழிலைச் செய்யும் பொருள்களை நிகழ்காலத்தில் குறிப்பிடுவது கால வழுவமைதியாகும்.

எ.கா : குடியரசுத் தலைவர் நாளை தமிழகம் வருகிறார்.

'குடியரசுத் தலைவர் நாளை வருவார்' என அமையவில்லை என்றாலும் அது பிழையாகக் கருதப்படாது. அவரது வருகையின் உறுதித் தன்மையே கால வழுவமைதியாகும்.

16. மரபு வழுவமைதி விளக்குக.

மரபுத் தொடர்கள் மயங்கி வருவது மரபு வழுவமைதி ஆகும்.

எ.கா : கத்தும் குயிலோசை எந்தன் காதினில் விழ வேண்டும். குயில் கூவும் என்பதே மரபு. பாரதி கத்தும் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். பெரும் புலவர் பாரதி என்பதால் மரபு வழுவமைதியாகக் கொள்ளப்பட்டது.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. நேற்றிரவு பெய்த மழை எல்லாம் தொட்டியை நிறைத்திருந்தது. வாழைத் தோப்பில் குட்டியுடன் நின்றிருந்த மாடு கத்தியது. தந்தை என்னிடம், "இலச்சுமி கூப்பிடுகிறாள், போய்ப் பார்" என்றார். "இதோ சென்றுவிட்டேன்" என்றவாறே அங்குச் சென்றேன். துள்ளிய குட்டியைத் தடவிக் கொடுத்து "என்னடா விளையாட வேண்டுமா?" என்று கேட்டு அவனை அவிழ்த்து விட்டேன். என் தங்கை அங்கே வந்தாள். அவளிடம், "நீயும் இவனும் விளையாடுங்கள்" என்று கூறினேன். அவிழ்த்து விடப்பட்ட இலச்சுமி தொட்டியிலிருந்த நீரைக் குடித்தாள்.

இப்பத்தியிலுள்ள வழுவமைதிகளைப் பட்டியலிட்டு எழுதுக. PTA

| | | |
|---|---|---|
| குட்டி | – | மரபு வழுவமைதி |
| இலச்சுமி கூப்பிடுகிறாள் | – | திணை வழுவமைதி |
| என்னடா | – | பால் வழுவமைதி |
| அவனை | – | திணை வழுவமைதி |
| நீரைக் குடித்தாள் | – | திணை வழுவமைதி |

## கற்பவை கற்றபின்

1. கீழ்க்காணும் தொடர்களில் வழுவமைதி வகைகளை இனங்கண்டு எழுதுக.

அ) அமைச்சர் நாளை விழாவிற்கு வருகிறார்.
கால வழுவமைதி

ஆ) ''இந்தக் கண்ணன் ஒன்றைச் செய்தான் என்றால் அதை அனைவரும் ஏற்பர்'' என்று கூறினான்.
இட வழுவமைதி

இ) சிறிய வயதில் இந்த மரத்தில் தான் ஊஞ்சல் கட்டி விளையாடுவோம்.
கால வழுவமைதி

ஈ) செல்வன் இளவேலன் இந்தச் சிறுவயதிலேயே விளையாட்டுத் துறையில் சாதனைப் புரிந்திருக்கிறார்.
பால் வழுவமைதி

2. அடைப்புக் குறிக்குள் உள்ளவாறு மாற்றுக.

அ) தந்தை, 'மகனே! நாளை உன்னுடைய தோழன் அழகனை அழைத்து வா?'' என்று சொன்னார். (ஆண்பாற்பெயர்களைப் பெண் பாலாக மாற்றித் தொடரை எழுதுக.)

**விடை :** தாய், 'மகளே! நாளை உன்னுடைய தோழி அழகு வள்ளியை அழைத்து வா?' என்று சொன்னார்.

ஆ) அக்கா நேற்று வீட்டுக்கு வந்தது. அக்கா புறப்படும் போது அம்மா வழியனுப்பியது. (வழுவை வழாநிலையாக மாற்றுக)

**விடை :** அக்கா நேற்று வீட்டுக்கு வந்தாள். அக்கா புறப்படும் போது அம்மா வழியனுப்பினார்.

இ) ''இதோ முடித்து விடுவேன்'' என்று செயலை முடிக்கும் முன்பே கூறினார். (வழா நிலையை வழுவமைதியாக மாற்றுக)

**விடை :** 'இதோ முடித்து விடுகிறேன்' என்று செயலை முடித்து விட்டதாகக் கூறினார்.

ஈ) அவன் உன்னிடமும் என்னிடமும் செய்தியை இன்னும் கூறவில்லை. (படர்க்கையை முன்னிலையாக, முன்னிலையைத் தன்மையாக, தன்மையைப் படர்க்கையாக மாற்றுக)

**விடை :** நான் அவனிடமும், உன்னிடமும் செய்தியை இன்னும் கூறவில்லை.

உ) குழந்தை அழுகிறான், பார் (வழுவை வழாநிலையாக மாற்றுக)

**விடை :** குழந்தை அழுகிறது, பார்.

## மொழியை ஆள்வோம்

### மொழி பெயர்க்க

PTA

**Malar** : Devi, switch off the lights when you leave the room.

**Devi** : Yeah. We have to save electricity.

**Malar** : Our nation spends a lot of electricity for lighting up our streets in the night.

**Devi** : Who knows? In future our country may launch artificial moons to light our night time sky!

**Malar** : I have read some other countries are going to launch these types of illumination satellites near future.

**Devi** : Superb news! If we launch artificial moons, they can assist in disaster relief by beaming light on areas that lost power!

விடை :

மலர் : தேவி! இந்த அறையிலிருந்து வெளியே வரும் போது மின் விளக்கை அணைத்துவிடு.

தேவி : ஆம்! நாம் மின்சாரத்தை சேமிக்க வேண்டும்.

மலர் : நம் நாடு மின்சாரத்தை அதிகளவில் தெரு விளக்குகளுக்கு இரவில் செலவிடுகிறது.

தேவி : யாருக்குத் தெரியும்? நம் நாடு எதிர்காலத்தில் செயற்கை நிலவுகளின் மூலம் இரவு நேரத்தில் வெளிச்சத்தை பரவும் முறையைக் கண்டுபிடிக்கலாம்!

மலர் : வேறு சில நாடுகள் இந்த வகையான ஒளியூட்டச் செயற்கைக் கோள்களை வருங்காலத்தில் தொடங்கப் போகிறது என்பதை நான் படித்துள்ளேன்.

தேவி : அருமையான செய்தி! நாம் செயற்கை நிலவுகளை தொடங்குவோமானால், பேரழிவுக் காலங்களில் ஒளியை இழந்த பகுதிகளுக்கு ஒளியைக் கொடுத்து உதவலாம்!

வல்லின ஒற்றை இட்டும் நீக்கியும் எழுதுக.

காகத்திற்கு காது உண்டா? அதற்கு காது கேட்குமா?

எல்லா பறவைகளுக்கும் காது உண்டு. செவி துளைகள் இறகுகளால் மூடி இருக்கும். மற்றப்படி பாலூட்டிகளில் உள்ளது போல் புறசெவிமடல் இருக்காது. காகத்திற்கு காது உண்டு. காதுக் கேட்கும்.

பறவைகளுக்கு பார்த்தல், கேட்டல் உணர்வு நன்றாக வளர்ச்சிப் பெற்று இருக்கும். சுவைத்தல் உணர்வுக் குறைவாகவும் நுகர்தல் உணர்வு இல்லையென்றேக் கூறலாம்.

விடை :

காகத்திற்குக் காது உண்டா? அதற்குக் காது கேட்குமா?

எல்லாப் பறவைகளுக்கும் காது உண்டு. செவித் துளைகள் இறகுகளால் மூடி இருக்கும். மற்றபடி பாலூட்டிகளில் உள்ளது போல் புறச் செவிமடல் இருக்காது. காகத்திற்குக் காது உண்டு. காது கேட்கும்.

பறவைகளுக்குப் பார்த்தல், கேட்டல் உணர்வு நன்றாக வளர்ச்சி பெற்று இருக்கும். சுவைத்தல் உணர்வு குறைவாகவும், நுகர்தல் உணர்வு இல்லையென்றே கூறலாம்.

கொடுக்கப்பட்டுள்ள இருசொற்களைப் பயன்படுத்தி ஒரு தொடர் அமைக்க.

அ) இயற்கை – செயற்கை PTA
பாதை தெரியாத இயற்கைக் காடுகளில் பயணிக்கச் செயற்கைக் கருவிகள் பயன்படுகின்றன.

ஆ) கொடு – கோடு
கொடுப்பதற்கு எல்லைக் கோடு இல்லை.

இ) கொள் – கோள்
நல்லுறவைக் கொள்ள கோள் சொல்வதைத் தவிர்த்திடு.

ஈ) சிறு – சீறு
சிறுமை கண்டு சீறுவாய் இளந்தலை முறையே.

உ) தான் – தாம் PTA
மகன் தான் செய்த குற்றத்திற்குப் பெற்றோர் தாம் தண்டிக்கப்பட்டனர்.

ஊ) விதி – வீதி
விதியை மதியால் வெல்ல முடியாமல் வீதிக்கு வந்து விட்டாயா?

பகுதியைப் படித்துப் பதில் தருக.

பருப்பொருள்கள் சிதறும்படியாகப் பல ஊழிக்காலங்கள் கடந்து சென்றன. புவி உருவானபோது நெருப்புப் பந்து போல் விளங்கிய ஊழிக்காலம் தோன்றியது. பின்னர் புவி குளிரும்படியாகத் தொடர்ந்து மழை பொழிந்த ஊழிக் காலம் கடந்தது. அவ்வாறு தொடர்ந்து பெய்த மழையால் புவி வெள்ளத்தில் மூழ்கியது. இப்படி மீண்டும் மீண்டும் சிறப்பாகிய ஆற்றல் மிகுந்து செறிந்து திரண்டு இப்படியாக (வெள்ளத்தில் மூழ்குதல்) நடந்த இந்தப் பெரிய உலகத்தில், உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழலாகிய உள்ளீடு தோன்றியது. உயிர்கள் தோன்றி நிலைபெறும்படியாக இப்பெரிய புவியில் ஊழிக்காலம் கடந்தது. PTA

1. பத்தியில் உள்ள அடுக்குத் தொடர்களை எடுத்து எழுதுக.
மீண்டும் மீண்டும்

2. புவி ஏன் வெள்ளத்தில் மூழ்கியது?
புவி தொடர்ந்து பெய்த மழையால் வெள்ளத்தில் மூழ்கியது.

3. பெய்த மழை இத்தொடரை வினைத்தொகையாக மாற்றுக.
பெய்மழை

4. இப்பத்தி உணர்த்தும் அறிவியல் கொள்கை யாது?
வெப்பமும் மழையும் மாறி மாறி உருவானதால் உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழல் அமைந்தது.

5. உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழலாக நீவிர் கருதுவன யாவை?
சீதோஷ்ண நிலை மாறி மாறி நடைபெறுவது உயிர்கள் வாழ்வதற்கு ஏற்ற சூழலாகும்.

## கட்டுரை எழுதுக

### 'விண்வெளியும், கல்பனா சாவ்லாவும்' PTA

**முன்னுரை:**

''வானை அளப்போம் கடல்மீனை அளப்போம்
சந்திர மண்டலத்து இயல் கண்டு தெளிவோம்''

என்றான் பெரும்புலவன் பாரதி. அவன் கண்ட கனவுகள் நனவாகி வருகின்றன. அவற்றுள் ஒன்றே விண்வெளி ஆராய்ச்சி ஆகும்.

**ஆரியபட்டர்:**

ஆரியபட்டர் என்னும் இந்தியக் கணிதமேதை கி.பி ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் அடுக்குமூலம் என்ற கணித இயல்களையும், சைன் என்னும் அளவுகளையம் கண்டறிந்தார். உலகம் தன்னைத்தானே சுற்றுகிறது என்பதையும் கண்டார். அன்று அவர் ஊன்றிய வித்து இன்று மரமாக வளர்ந்துள்ளது.

**இந்திய செயற்கைக்கோள்:**

முதன் முதலில் பெங்களூரில் தான் செயற்கைக் கோளை உருவாக்கினார்கள். அதற்கு இந்தியக் கணித மேதை ஆரியபட்டாவின் பெயரைச் சூட்டினார்கள். 300 கிலோ எடை கொண்ட இதனை உருவாக்கியவர்கள் இந்திய விண்ணியல் அறிஞர்கள் தவானும், இராவ்வும் ஆவார்கள். இதை ரஷ்ய விண்தளத்திலிருந்து பறக்க விட்டனர். அதன் பின்னர் 1978 இல் ரோகிணி என்னும் துணைக்கோளை உருவாக்கினர். அது முழுமையும் இந்திய அறிவியல் அறிஞர்களால் உருவாக்கப்பட்டது.

**ஆராய்ச்சி நிலையங்கள்:**

முதலில் விண்வெளி ஆய்வு மையம் பெங்களூரில் அமைக்கப்பட்டது. ஆந்திராவில் உள்ள ஸ்ரீஹரிகோட்டாவில் அமைந்த விண்வெளி ஆராய்ச்சி நிலையமே முதன்மையானது ஆகும். அடுத்து கேரளாவில் தும்பா ராக்கெட் தளமும், தமிழகத்தில் நெல்லையில் உள்ள மகேந்திரகிரி திரவத் திட்டமும் சிறப்பு வாய்ந்தவையாகும். அகமதாபாத்திலும் விண்வெளி ஆய்வு மையம் உள்ளது.

**கல்பனா சாவ்லா:**

கல்பனா 1995இல் மார்ச் மாதம் நாசா விண்வெளி வீரர் பயிற்சிக் குழுவில் சேர்ந்தார். 1984இல் சோவியத் விண்கலத்தில் பயணித்த ராகேஷ் சர்மாவை அடுத்து விண்வெளி சென்ற முதல் இந்தியப் பெண் வீராங்கனை என்ற அழியாப் பெருமையை இவர் பெற்றார். பலமுறை விண்வெளி ஆராய்ச்சி நடத்தினார். 2003ஆம் ஆண்டு ஜனவரி 16ஆம் தேதி விண்வெளி ஆராய்ச்சிக்காக அமெரிக்காவின் கென்னடி நிலையத்திலிருந்து கொலம்பியா விண்கலம் எஸ்.டி.எஸ்–107 அனுப்பி வைக்கப்பட்டது. அதில் கல்பனா உள்ளிட்ட ஏழு பேர் பயணித்தனர். 16ஆம் நாள் ஆய்வை முடித்து வெற்றிகரமாக பூமிக்குத் திரும்பிய அவர்கள் சென்ற அந்த விண்கலம் அமெரிக்காவின் டெக்ஸாஸ் வான்பரப்பில் வெடித்துச் சிதறியதால் அனைத்து விண்வெளி வீரர்களும் பலியாகினர்.

**முடிவுரை :**

விடா முயற்சியுடனும், முழு மனதோடும் செயல்பட்டால் வெற்றி நிச்சயம் என்ற உண்மையை உலகிற்கு உணர்த்திச் சென்ற வீரப்பெண்ணை நாமும் போற்றுவோம்.

## நயம் பாராட்டுக

நிலாவையும் வானத்து மீனையும் காற்றையும்
நேர்பட வைத்தாங்கே
குலாவும் அமுதக் குழம்பைக் குடித்தொரு
கோல வெறிபடைத்தோம்;
உலாவும் மனச்சிறு புள்ளினை எங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்;
பலாவின் கனிச்சுளை வண்டியில் ஓர் வண்டு
பாடுவதும் வியப்போ?

– பாரதியார்

**திரண்ட கருத்து:**

ஆசிரியர் இயற்கைப் பொருள்களை இப்பாடலில் இணைக்கிறார். நிலா, நட்சத்திரங்கள், காற்று, இலை அனைத்தும் அமுதமாக நினைத்து அனுபவிக்கும் வாய்ப்பைப் பெற்றோம். இவ்வியற்கையில் நமது மனப் பறவையை பறக்க விட்டு மகிழ்கின்றோம். அதற்கு உவமையாக பலாக்கனிச் சுளையின் மணத்தை நுகர்வது போல, வண்டு ரீங்காரம் இடுவது போல அவ்வியற்கையை பாடி மகிழ்கின்றோம்.

**மையக்கருத்து:**

இயற்கையைக் கொண்டாடி அதனை உயர்த்தி வியக்கிறார் கவிஞர்.

**அணி நயம்:**

இப்பாடலில் கவிஞர் இயற்கையை மிகவும் உயர்வுபடுத்திக் கூறியுள்ளமையால் உயர்வு நவிற்சி அணி பயின்று வந்துள்ளது.

**தொடை நயம்:**

''தொடையற்ற பாட்டு நடையற்றுப் போகும்'' என்ற தொடருக்கு ஏற்ப தொடைநயங்கள் பல பயின்று வந்துள்ளன.

**எதுகை நயம்:**

முதல் எழுத்து அளவொத்து இருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை.

எ.கா : நிலாவையும் – குலாவும்

உலாவும் – பலாவின்

**மோனை நயம்:**

''குயவனின் கைவண்ணம் பானையிலே

புலவனின் கைவண்ணம் மோனையிலே''

பாடலில் அடிதோறும், சீர்தோறும் முதல் எழுத்து ஒன்றி வருவது மோனை.

எ.கா : குலாவும் – குடித்தொரு குழம்பை

## மொழியோடு விளையாடு

### தொடரைப் படித்து விடையைக் கண்டறிக.

(சோறு, கற்றல், கரு, பூவில், எழுத்து)

1. நூலின் பயன் படித்தல் எனில் கல்வியின் பயன் ______. விடை : கற்றல்
2. விதைக்குத் தேவை எரு எனில், கதைக்குத் தேவை ______. விடை : கரு
3. கல் சிலை ஆகுமெனில், நெல் _______ ஆகும். விடை : சோறு
4. குரலில் இருந்து பேச்சு எனில் விரலில் இருந்து ______. விடை : எழுத்து
5. மீன் இருப்பது நீரில்; தேன் இருப்பது _____. விடை : பூவில்

### குறிப்பைப் பயன்படுத்தி விடை தருக.

PTA

| குறிப்பு | | எதிர்மறையான சொற்கள் |
|---|---|---|
| கொடுத்துச் சிவந்த | – | கொடாமல் கருத்த |
| மறைத்துக் காட்டு | – | வெளிப்படுத்தி மூடு |
| அருகில் அமர்க | – | தள்ளி நிற்க |
| பெரியவரின் அமைதி | – | சிறியவரின் ஆரவாரம் |
| புயலுக்குப் பின் | – | தென்றலுக்கு முன் |

### அகராதியில் காண்க

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அவிர்தல் | – | பிரகாசித்தல், விளங்குதல் | அழல் | – | நெருப்பு, வெப்பம், விடம் |
| உவா | – | முழுநிலா, கடல், இளமை | கங்குல் | – | இரவு, இருள் |
| கனலி | – | சூரியன், பன்றி | | | |

### அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.

### ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக. PTA



அ) அலைபேசி அமைதியாய் வந்தது;
ஆரவாரமாய் நம் வாழ்வில் நுழைந்தது;
இயற்கையான வாழ்வை இயந்திரமயமாக்கியது;
ஈடு செய்ய முடியாத நேர இழப்பைக் கொடுத்தது;
உதவாக்கரையாக மனிதனை மாற்றியது;
ஊர்தியாய் அலைபேசியின் கட்டுக்குள் அடக்கியது!

ஆ) 1. தேவைக்குப் பயன்படுத்திய காலம்போய் தேவையே அதுதான் என்ற காலமானது.
2. மாடுகளைக் கட்டுப்பாட்டில் வைக்க மூக்கணாங்கயிறு போட்டோம். ஆனால், இன்று திறன் பேசியின் கட்டுப்பாட்டில் உள்ளோம்.
3. திறன்பேசியை எஜமானனாக்கி நம்மை அடிமையாக்கிக் கொண்டோம்.
4. தேவைக்குப் பயன்படுத்தாததினால் தேவையில்லாததில் கட்டுப்பட்டோம்.
5. நாம் அடக்க வேண்டியது நம்மை அடக்கியது.

### நிற்க அதற்குத் தக

PTA

தொலைக்காட்சி நிகழ்வுகளையே பார்த்துக் கொண்டிருக்கும் தம்பி;
திறன் பேசியிலேயே விளையாடிக் கொண்டிருக்கும் தங்கை;
காணொலி விளையாட்டுகளில் மூழ்கியிருக்கும் தோழன்;
எப்போதும் சமூக ஊடகங்களில் இயங்கியபடி இருக்கும் தோழி
இவர்கள் எந்நேரமும் நடப்புலகில் இருக்காமல் கற்பனை உலகில் மிதப்பவர்களாக இருக்கிறார்கள்! இவர்களை நெறிப்படுத்தி நடைமுறை உலகில் செயல்படவைக்க நீங்கள் செய்யும் முயற்சிகளைப் பட்டியல் இடுக.

விடை :



1. நல்ல புத்தகங்களை வாசிக்கக் கொடுப்பேன்.
2. வீட்டுத் தோட்டம் உருவாக்க வழி செய்வேன்.
3. உடற்பயிற்சி செய்ய ஊக்குவிப்பேன்.
4. ஆன்மிகத்திற்கு முக்கியத்துவம் அளிக்க வைப்பேன்.

### கலைச்சொல் அறிக.

| | | |
|---|---|---|
| Nanotechnology | – | மீநுண் தொழில்நுட்பம் |
| Space Technology | – | விண்வெளித் தொழில்நுட்பம் |
| Biotechnology | – | உயிரித் தொழில்நுட்பம் |
| Cosmic rays | - | விண்வெளிக் கதிர்கள் PTA |
| Ultraviolet rays | - | புறஊதாக் கதிர்கள் PTA |
| Infrared rays | - | அகச்சிவப்புக் கதிர்கள் |

# அலகுத் தேர்வு இயல் - 4

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. சரியான விடையைத் தேர்ந்தெழுதுக.** 4 × 1 = 4

1. ஐ.பி.எம் நிறுவனத்தின் செயற்கை நுண்ணறிவுக் கணினி ________.
   அ) வாட்சன் ஆ) பெப்பர் இ) இலா ஈ) எதுவுமில்லை
2. பெருமாள் திருமொழியில் ________ பாடல்கள் உள்ளன.
   அ) 305 ஆ) 205 இ) 105 ஈ) 106
3. பரிபாடல் அடியில் 'விசும்பும், இசையும்' என்னும் தொடர் எதனைக் குறிக்கிறது?
   அ) வானத்தையும் பாட்டையும் ஆ) வானத்தையும் புகழையும்
   இ) வானத்தையும் பூமியையும் ஈ) வானத்தையும் பேரொலியையும்
4. 'வாடா இராசா, வாடா கண்ணா' என தன் மகளைப் பார்த்துத் தாய் அழைப்பது ________ வழுவமைதி ஆகும்.
   அ) திணை ஆ) பால் இ) இடம் ஈ) படர்க்கை

**II. விடைக்கேற்ற வினா அமைக்க.** 1 × 1 = 1

1. ஜப்பானில் சாப்ட்வங்கி உருவாக்கிய இயந்திர மனிதன் பெப்பர்.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. பெருமாள் திருமொழிப் பாடலில் நோயாளி மருத்துவரை நேசிக்கும் விதத்தை விளக்குக.
2. முதல் பூதத்தின் ஊழியாக பரிபாடல் விளக்குவது யாது?

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி.** 2 × 3 = 6

1. இன்றைய அறிவியல் கண்டுபிடிப்புகள் மனிதனை மேம்படுத்துகின்றனவா என்பது குறித்த சிந்தனைகளை முன் வைத்து எழுதுக.
2. வழுவமைதி வகைகளை விளக்குக.

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** 1 × 8 = 8

1. அறிவியலாளர் ஸ்டீபன் ஹாக்கிங் பற்றி கட்டுரை வடிவில் எழுதுக.

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.** 3 × 1 = 3

அ) இலக்கணக்குறிப்புத் தருக:

அறுத்து

ஆ) நிறுத்தற் குறியிடுக:

இதழியலில் செயற்கை நுண்ணறிவு குறிப்பிடத்தகுந்த மாறுதல்களைச் செய்து வருகிறது

இ) தொடர் அமைக்க:

சிறு – சீறு.

**VII. அடிபிறழாமல் எழுதுக.** 1 × 4 = 4

'வாளால் அறுத்துச்' என தொடங்கும் மனப்பாடலை எழுதுக.



இயல் - 5

உரைநடை

கல்வி - மணற்கேணி

# 1. மொழிபெயர்ப்புக் கல்வி

HYMNOLOGIA DAMULICA
SIVE
EX GERMANICO IN DAMULORUM IDIOMA, OBSERVATIS USQUE ET MELODIIS ET RHYTHMIS ODARUM, TRANSLATORUM
*CENTUM ET SEXAGINTA*
HYMNORUM SPIRITUALIUM
FASCICULUS :
in
Gratiam Juventutis Damulicæ æque ac Ecclesiæ hujus Gentis, Chrifto Nomen dantis, exhibita
a
BENJAMIN SCHULTZE
*Miffionario ad Indos Orientales.*

TRANQUEBARIÆ, In littore Coromandelino
Typis & fumptibus Miffionis Danicæ
Anno MDCCXXIII.

டேனிஷ் கிறித்துவ நிறுவனத்தால் 1723ஆம் ஆண்டு தரங்கம்பாடியில் மொழிபெயர்த்து அச்சுருவாக்கம் பெற்ற தமிழ் நூல்.

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. 'மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்னும் சின்னமனூர்ச் செப்பேட்டுக் குறிப்பு உணர்த்தும் செய்தி PTA

அ) சங்க காலத்தில் மொழிபெயர்ப்பு இருந்தது.
ஆ) காப்பியக் காலத்தில் மொழிபெயர்ப்பு இருந்தது.
இ) பக்தி இலக்கியக் காலத்தில் மொழி பெயர்ப்பு இருந்தது.
ஈ) சங்கம் மருவிய காலத்தில் மொழி பெயர்ப்பு இருந்தது.

விடை : அ) சங்க காலத்தில் மொழி பெயர்ப்பு இருந்தது

### கூடுதல் வினா:

2. ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது ______.

அ) மொழியாக்கம் ஆ) மொழிபெயர்ப்பு
இ) இலக்கியம் ஈ) பரப்புரை

விடை : ஆ) மொழி பெயர்ப்பு

3. ஒரு மொழி வளம்பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் ______ இன்றியமையாததாகும்.

அ) உறவுகள் ஆ) மனிதர்கள்
இ) மொழிபெயர்ப்பு ஈ) இலக்கியம்

விடை : இ) மொழிபெயர்ப்பு

4. மொழி பெயர்த்தல் என்ற தொடரைத் தொல்காப்பியர் ______ குறிப்பிட்டுள்ளார்.

அ) பெயரியலில் ஆ) செய்யுளியலில்
இ) மரபியலில் ஈ) தொல்லியலில்

விடை : இ) மரபியலில்

5. ________ மொழியில் மொழிபெயர்ப்பின் மூலம் அறிமுகம் ஆன ஷேக்ஸ்பியர், அந்நாட்டுப் படைப்பாளர் போலவே கொண்டாடப்பட்டார்.

அ) இத்தாலி　　ஆ) பிரான்ஸ்
இ) ஜெர்மன்　　ஈ) சீனா　　விடை : இ) ஜெர்மன்

6. தமிழுக்குரிய நூலாக இருந்த ________ உலக மொழிகளுக்குரியதாக மாறியது மொழிபெயர்ப்பால் தான்.

அ) சிலப்பதிகாரம்　　ஆ) மணிமேகலை
இ) குறவஞ்சி　　ஈ) திருக்குறள்　　விடை : ஈ) திருக்குறள்

7. 'வால்காவிலிருந்து கங்கை வரை' என்னும் நூலை எழுதியவர் ________.

அ) கம்பர்　　ஆ) ராகுல் சாங்கிருத்யாயன்
இ) பாரதியார்　　ஈ) வாணிதாசன்
விடை : ஆ) ராகுல் சாங்கிருத்யாயன்

8. ''சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்'' என்று பாடியவர் ________

அ) பாரதியார்　　ஆ) பாரதிதாசன்
இ) சுரதா　　ஈ) கபிலர்　　விடை : அ) பாரதியார்

9. ''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்'' – எனப் பாடியவர் ______

அ) பாரதிதாசன்　　ஆ) பாரதியார்
இ) வாணிதாசன்　　ஈ) வைரமுத்து　　விடை : ஆ) பாரதியார்

10. ''காசினியில் இன்று வரை அறிவின் மன்னர் கண்டுள்ள கலைகளெல்லாம் தமிழில் எண்ணி, பேசி மகிழ் நிலை வேண்டும்'' – எனக் கூறுபவர் ________

அ) பாரதியார்　　ஆ) குலோத்துங்கன்
இ) வைரமுத்து　　ஈ) மு.மேத்தா　　விடை : ஆ) குலோத்துங்கன்

11. கருத்துப் பகிர்வைத் தருவதால் மொழிபெயர்ப்பை ________ என்று குறிப்பிடுவார்கள்.

அ) ஓவியக்கலை　　ஆ) நுண்கலை
இ) பயன்கலை　　ஈ) கவின்கலை　　விடை : இ) பயன்கலை

12. சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்
செல்வம் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர் – பாரதியாரின் இக்கூற்று உணர்த்தும் கருத்து.

அ) பலதுறை நூல்கள் தமிழில் உருவாக்கப்பட வேண்டும்.　　PTA
ஆ) பலகலைகள் தமிழில் புதிதாகத் தோன்ற வேண்டும்.
இ) உலகெங்கும் காணப்படும் செல்வங்கள் தமிழகத்தில் வந்து சேர்தல் வேண்டும்.
ஈ) கலைச் செல்வங்களை உலகம் முழுவதும் பயணம் செய்து கண்டுகளிக்க வேண்டும்

விடை: இ) உலகெங்கும் காணப்படும் செல்வங்கள் தமிழகத்தில் வந்து சேர்தல் வேண்டும்.

## விடைக்கேற்ற வினா அமைத்திடுக

1. மொழி பெயர்ப்பைக் கல்வியாக ஆக்குவதன் மூலம் அனைத்துலக அறிவையும் நாம் எளிதாகப் பெற முடியும்.

விடை : எதனைக் கல்வியாக ஆக்குவதன் மூலம் நாம் அறிவை எளிதாகப் பெற இயலும்?
(அல்லது)
அனைத்துலக அறிவை எளிதாக நாம் பெற வழி யாது?

2. இலக்கியம் என்பது தன் அனுபவத்தை எழுதுவதாகும்.

விடை : இலக்கியம் என்பது யாது? (அல்லது)
தன் அனுபவத்தை எழுதுவது என்பது என்ன?

3. மொழிபெயர்ப்பின் மூலம் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளைப் பெற்றிருக்கிறோம்.

விடை : மொழி பெயர்ப்பின் மூலம் எக்கொள்கைகளைப் பெற்றிருக்கிறோம்?

(அல்லது)

இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளை எதன் மூலம் பெறுகிறோம்?

4. தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம், இதழ்கள் போன்ற ஊடகங்கள் மொழி பெயர்ப்பால் தான் வளர்ச்சி பெறுகின்றன.

விடை : எந்தெந்த ஊடகங்கள் மொழிபெயர்ப்பின் மூலம் வளர்ச்சி பெறுகின்றன?

5. மொழிபெயர்ப்பு, மொழியில் புதுக்கூறுகளை உருவாக்கி மொழிவளர்ச்சிக்கு வழிவகுக்கிறது. PTA

விடை : மொழிபெயர்ப்பு, எவ்வாறு மொழி வளர்ச்சிக்கு வழி வகுக்கிறது?

6. தமிழ் நூல்கள், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, இந்தி, கன்னடம், வடமொழி, ரஷ்ய மொழி, வங்க மொழி,மராத்திய மொழி போன்ற பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. PTA

விடை : தமிழ் நூல்கள், எந்தெந்த மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. சின்னமனூர் செப்பேட்டு குறிப்பு, சங்க காலத்திலேயே தமிழில் மொழிபெயர்ப்பு மேற் கொள்ளப்பட்டதை புலப்படுத்துகிறது.

விடை : சின்னமனூர்ச் செப்பேட்டுக் குறிப்பு, சங்க காலத்திலேயே தமிழில் மொழிபெயர்ப்பு மேற்கொள்ளப்பட்டதைப் புலப்படுத்துகிறது.

2. கருத்து பகிர்வை தருவதால் மொழிபெயர்ப்பை பயன்கலை என்று குறிப்பிடுவார்கள்.

விடை : கருத்துப் பகிர்வைத் தருவதால் மொழிபெயர்ப்பைப் பயன்கலை என்று குறிப்பிடுவார்கள்.

3. வடமொழியில் வழங்கி வந்த இராமாயண மகாபாரத தொன்ம செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

விடை : வடமொழியில் வழங்கி வந்த இராமாயண மகாபாரதத் தொன்மச் செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

4. பிறமொழி கருத்துகளை, கதைகளை தமிழ்படுத்தியமையை புலப்படுத்துகிறது புராண இலக்கியங்கள்.

விடை : பிறமொழிக் கருத்துகளை. கதைகளை தமிழ்ப்படுத்தியமையைப் புலப்படுத்துகிறது புராண இலக்கியங்கள்.

5. மொழிபெயர்ப்பு எல்லா காலக்கட்டங்களிலும் தேவையான ஒன்று.

விடை : மொழிபெயர்ப்பு எல்லாக் காலகட்டங்களிலும் தேவையான ஒன்று.

## நிறுத்தற் குறியிட்டு எழுதுக

1. மொழி பெயர்ப்பினால் பிற இனத்தவரின் பண்பாடு நாகரிகம் பழக்கவழக்கங்களை அறிய முடிகிறது

விடை : மொழி பெயர்ப்பினால் பிற இனத்தவரின் பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கங்களை அறிய முடிகிறது.

2. கருத்துப்பரிமாற்றம் தகவல் பகிர்வு அறநூல் அறிதல் இலக்கியம் தத்துவம் எல்லாம் மொழிபெயர்ப்பு வாயிலாகவே சர்வதேசத்தன்மை பெறுகின்றன

விடை : கருத்துப்பரிமாற்றம், தகவல் பகிர்வு, அறநூல் அறிதல், இலக்கியம், தத்துவம் எல்லாம் மொழி பெயர்ப்பு வாயிலாகவே சர்வதேசத்தன்மை பெறுகின்றன.

3. பெருங்கதை சீவகசிந்தாமணி கம்பராமாயணம் வில்லிபாரதம் முதலிய சில காப்பியங்களும் வடமொழிக் கதைகளைத் தழுவிப் படைக்கப்பட்டவையே

விடை : பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், வில்லிபாரதம் முதலிய சில காப்பியங்களும் வடமொழிக் கதைகளைத் தழுவிப் படைக்கப்பட்டவையே.

4. ஒரு மொழி வளம் பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகும் உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழி பெயர்ப்பும் ஒரு காரணமாகும் என்கிறார் மு கு ஜகந்நாத ராஜா.

விடை : "ஒரு மொழி வளம் பெறவும், உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழி பெயர்ப்பு இன்றியமையாததாகும்; உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும்" என்கிறார் மு.கு. ஜகந்நாத ராஜா.

5. ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழிபெயர்ப்பு என்கிறார் மணவை முஸ்தபா.

விடை : "ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழிபெயர்ப்பு" என்கிறார் மணவை முஸ்தபா.

## கீழ்க்காணும் உரைநடைப் பகுதியை படித்து வினாக்களுக்கு விடையளி

ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழிபெயர்ப்பு ஆகும். எல்லாக் காலகட்டங்களிலும் மொழிபெயர்ப்பு தேவையான ஒன்று. தேசிய உணர்வை ஊட்டுவதற்கும் ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதற்கும் இந்திய அரசு, மொழிபெயர்ப்பை ஒரு கருவியாகக் கொண்டது. ஒரு மொழியில் இருக்கும் நூல்களைப் பிற மொழியில் மொழிபெயர்த்தது; பல்வேறு மாநிலங்களில் இருந்த இருக்கின்ற எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் ஆகியோரைப் பற்றிய நூல்களையும் வெளியிட்டது. இத்தகைய மொழிபெயர்ப்பு முயற்சிகள் சாகித்திய அகாதெமி, தேசிய புத்தக நிறுவனம், தென்னிந்திய புத்தக நிறுவனம் ஆகியவற்றின் மூலம் செய்யப்பட்டன.

**வினாக்கள்:**

1. இந்திய அரசு எதனை உருவாக்க மொழிபெயர்ப்பைக் கருவியாகக் கொண்டது?

   தேசிய உணர்வை ஊட்டுவதற்கும், ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதற்கும் இந்திய அரசு மொழிபெயர்ப்பைக் கருவியாகக் கொண்டது.

2. மொழிபெயர்ப்பு முயற்சிகளை எந்தெந்த நிறுவனங்களின் மூலம் இந்திய அரசு மேற்கொண்டது?

   சாகித்திய அகாதெமி, தேசிய புத்தக நிறுவனம், தென்னிந்தியப் புத்தக நிறுவனங்கள் மூலம் மொழிபெயர்ப்பு முயற்சிகளை இந்திய அரசு மேற்கொண்டது.

3. எல்லாக் காலங்களிலும் மொழிபெயர்ப்பு தேவையான ஒன்றா?

   நாட்டின் எல்லாப் பகுதிகளையும் இணைத்து ஒற்றுமையை ஏற்படுத்த எல்லாக் காலங்களிலும் மொழிபெயர்ப்பு தேவையான ஒன்றே.

**படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.**



1. நாம் இயற்கையோடு பேசினால் இயற்கை நம்மோடு பேசும்.
2. இயற்கையோடு இயைந்த படிப்பு இன்பமான படிப்பு ஆகும்.
3. கல்வியை இயற்கையைக்கூட நமக்குக் கற்றுத் தரும்.
4. சிட்டுக்குருவிகள் கூட இசையை எழுப்பும்.
5. இளமையில் கல் என்ற முதுமொழியாக்கிக் கற்க வேண்டும்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. தாய்மொழியும் ஆங்கிலமும் தவிர நீங்கள் கற்க விரும்பும் மொழியினைக் குறிப்பிட்டுக் காரணம் எழுதுக.

நான் கற்க விரும்பும் மொழி மலையாளம்.

காரணம்:

- திராவிட மொழிகளுள் ஒன்றாக விளங்குகிறது.
- தமிழ்ச்சொற்களை அதிகமாகப் பயன்படுத்தும் மொழி மலையாளம்.
- எளிமையான மொழி. அதனால் மலையாள மொழியைக் கற்றுக் கொள்வதற்கு எளிமையாக இருக்கும்.
- சொல்லாடல்களும் தமிழைப் போலவே எளிமையாக உள்ளது. ஆகவே மலையாளத்தையே கற்றுக்கொள்ள விரும்புகிறேன்.

### கூடுதல் வினாக்கள்:

2. மொழிபெயர்ப்பு பற்றி மணவை முஸ்தபா என்ன கூறுகிறார்?

''ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழிபெயர்ப்பு'' என்கிறார்.

3. மொழிபெயர்ப்பு பற்றி மு.கு.ஜகந்நாதராஜா என்ன கூறுகிறார்?

''ஒரு மொழி வளம் பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகும்; உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும்'' என்கிறார்.

4. மொழிபெயர்ப்பு சமூகத்திற்கு எவ்வாறு உதவுகிறது?

ஒவ்வொரு மொழிச் சமூகத்திலும் ஒரு துறையில் இல்லாத செழுமையை ஈடுசெய்ய வேறு துறைகளில் உச்சங்களில் இருக்கும், மொழிகளுக்கு இடையேயான வேற்றுமைகளை வேற்றுமைகளாகவே நீடிக்கவிடாமல் ஒற்றுமைப்படுத்த உதவுவது மொழிபெயர்ப்பு.

5. சின்னமனூர்ச் செப்பேடு புலப்படுத்தும் செய்தி யாது?

'மாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்து' என்னும் சின்னமனூர்ச் செப்பேட்டுக் குறிப்பு, சங்க காலத்திலேயே தமிழில் மொழிபெயர்ப்பு மேற்கொள்ளப்பட்டதைப் புலப்படுத்துகிறது.

6. வடமொழிக் கதைகளைத் தழுவிப் படைக்கப்பட்ட தமிழ் இலக்கியங்கள் யாவை?

பெருங்கதை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், வில்லிபாரதம் முதலிய சில காப்பியங்கள் வடமொழிக் கதைகளைத் தழுவித் தமிழில் படைக்கப்பட்டவை.

7. சங்க இலக்கியங்களில் பரவலாக இடம்பெற்ற வடமொழிக் காப்பியங்கள் எவை?

- இராமாயணம்,
- மகாபாரதம்

8. விடுதலைக்குப் பிறகு நாட்டின் வளர்ச்சிக்கு மொழிபெயர்ப்பு எவ்வாறு உதவியது?

- விடுதலைக்குப் பிறகு நாட்டின் பல பகுதிகளையும் ஒரே ஆட்சியின் கீழ் இணைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது.
- தேசிய உணர்வு ஊட்டுவதற்கும் ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதற்கும் இந்திய அரசு, மொழிபெயர்ப்பை ஒரு கருவியாகக் கொண்டது;
- ஒரு மொழியில் இருக்கும் நூல்களைப் பிறமொழியில் மொழிபெயர்த்தது;
- பல்வேறு மாநிலங்களில் இருந்த, இருக்கின்ற எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் ஆகியோரைப் பற்றிய நூல்களையும் வெளியிட்டது. இதற்கு மொழிபெயர்ப்பு பெருந்துணை புரிந்தது.

9. இந்திய நாட்டின் மொழிபெயர்ப்பு முயற்சிக்கு உதவிய நிறுவனங்கள் யாவை?

சாகித்திய அகாதெமி, தேசிய புத்தக நிறுவனம், தென்னிந்தியப் புத்தக நிறுவனம்.

10. மொழிபெயர்ப்பு சரியாக அமையாததால் ஏற்பட்ட காலத்திற்கும் அழிவு தரும் விளைவு ஒன்றை கூறுக.

- உலகப் போரின் போது அமெரிக்கா, ''சரண் அடையாவிடில் குண்டு வீசப்படும்'' என்ற செய்தியை ஜப்பானுக்கு அனுப்பியதாகவும் அதற்கு ஜப்பான், 'மொகு சாஸ்ட்டு' என்று விடை அனுப்பியதாகவும் கூறுவர்.
- அந்த தொடரின் பொருள் தெரியாமையால் அமெரிக்கா, ஹீரோஷிமாவில் குண்டு வீசியது என்று சொல்கிறார்கள்.
- அந்தத் தொடருக்குப் பொருள், 'விடை தர அவகாசம் வேண்டும்' என்பதாம். ஆனால் அதற்கு அமெரிக்கர்கள், 'மறுக்கிறோம்' என்று பொருள் கொண்டதாகவும் கூறுவர்.
- இது உண்மை எனில் மொழிபெயர்ப்பு சரியாக அமையாததால் காலத்திற்கும் அழிவு தரும் களங்கம் நேர்ந்தது எனலாம்.

11. மொழிபெயர்ப்பைக் கல்வியாக ஆக்கினால் ஏற்படும் நன்மைகள் யாவை?

- மொழிபெயர்ப்பை கல்வியாக ஆக்குவதன் மூலம் அனைத்துலக அறிவையும் நாம் எளிதாகப் பெற முடியும்;
- பல அறிவுத்துறைகளுக்கும் தொழில் துறைகளுக்கும் வெளிநாட்டவரை எதிர்பார்க்காமல் நாமே நமக்கு வேண்டிய அனைத்தையும் உருவாக்கிக் கொள்ள முடியும்;
- மனித வளத்தை முழுமையாகப் பயன்படுத்த முடியும்; வேலைவாய்ப்புத் தளத்தை விரிவாக்க முடியும்;
- நாடு, இன, மொழி எல்லைகள் கடந்து ஒருலகத்தன்மையைப் பெற முடியும்.

12. மொழிபெயர்ப்பால் கிடைக்கும் அடையாளங்கள் யாவை?

- ஜெர்மன் மொழியில் மொழிபெயர்ப்பின் மூலம் அறிமுகம் ஆன ஷேக்ஸ்பியர், அந்நாட்டுப் படைப்பாளர் போலவே கொண்டாடப்பட்டார்.
- தமிழுக்குரிய நூலாக இருந்த திருக்குறள் உலக மொழிகளுக்குரியதாக மாறியது மொழிபெயர்ப்பால் தான்.
- இரவீந்திரநாத் தாகூர் வங்க மொழியில் எழுதிய கவிதைத் தொகுப்பான கீதாஞ்சலியை ஆங்கிலத்தில் அவரே மொழிபெயர்த்த பிறகுதான் அவருக்கு நோபல் பரிசு கிடைத்தது.

13. ஆங்கிலேயர்கள் வருகையால் மொழிபெயர்ப்பில் ஏற்பட்ட மாற்றங்கள் யாவை?

- 18ஆம் நூற்றாண்டு வரை வடமொழி நூல்கள் பல தமிழில் ஆக்கப்பட்டன.
- ஆங்கிலேயர் வருகைக்குப் பின் ஆங்கில நூல்களும், ஆங்கிலம் வழியாகப் பிற ஐரோப்பிய மொழி நூல்களும் அறிமுகமாயின.
- இதே போலத் தமிழ் நூல்களும் பிற மொழிகளுக்கு அறிமுகமாயின.
- தமிழுக்குரிய நூலாக இருந்த திருக்குறள் உலக மொழிகளுக்குரியதாக மாறியது மொழிபெயர்ப்பால் தான்.

14. ஒரு நாட்டின் பண்பாட்டையும், அறிவையும் எவற்றை வைத்து மதிப்பிடுவர்?

- ஒரு நாடு எவ்வளவு மின்னாற்றலைப் பயன்படுத்துகிறது என்பதைக் கொண்டு அதன் தொழில் வளர்ச்சியை மதிப்பிடுவார்கள்.
- அதுபோல ஒரு நாட்டின் மொழிபெயர்ப்பு நூல்களின் எண்ணிக்கையைக் கொண்டு அந்நாட்டின் பண்பாட்டையும் அறிவையும் மதிப்பிடுவார்கள்.

15. மொழிபெயர்ப்பின் மூலம் என்ன புதுமையைப் பெற்றிருக்கிறோம்?

- மொழிபெயர்ப்பின் மூலம் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளைப் பெற்றிருக்கிறோம்.
- இன்றுள்ள புதிய திறனாய்வு முறைகளை எல்லாம் நாம் ஆங்கிலத்தின் வழியாகவே பெற்றிருக்கிறோம்.

16. மொழிபெயர்ப்பு தமிழ் இலக்கியங்களுக்கு எவ்வாறு உதவுகிறது?

- பிறமொழி இலக்கியங்கள், இலக்கிய வடிவங்கள் பலவும் தமிழுக்கு அறிமுகமாகி அதுபோன்ற முயற்சிகள் இங்கு மேற்கொள்ளப்படுகின்றன.
- மொழிபெயர்க்கப்பட்ட நூல்களைத் தமிழ் இலக்கியங்களோடு ஒப்பு நோக்கி சிந்தனை, வடிவம், உத்தி, மையக்கரு, பண்பாடு போன்ற பலவகைக் கூறுககளை எடை போடவும் வளர்க்கவும் மொழிபெயர்ப்பு உதவுகிறது.

17. பல்துறை வளர்ச்சியில் மொழிபெயர்ப்பின் தேவை யாது?

- இன்றைக்குப் பல்வேறு துறைகளின் வளர்ச்சிக்கு மொழிபெயர்ப்பு தேவைப்படுகிறது.
- மொழிபெயர்ப்பு இல்லையெனில் உலகை எல்லாம் வலையாகப் பிடித்திருக்கிற ஊடகத்தின் வளர்ச்சி இல்லை.
- தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம், இதழ்கள் போன்ற ஊடகங்கள் மொழிபெயர்ப்பால் தான் வளர்ச்சி பெறுகின்றன. விளம்பர மொழிக்கு மொழிபெயர்ப்பு தேவைப்படுகிறது.
- திரைப்படங்கள், தொலைக்காட்சித் தொடர்கள் ஆகியன மொழிமாற்றம் செய்யப்பட்டு அனைத்து மொழி பேசும் மக்களையும் அடைகின்றன.
- இதனால் புதுமையான புதுவகையான சிந்தனைகள், மொழிக்கூறுகள் பரவுகின்றன.

18. அன்றாட வாழ்வில் மொழிபெயர்ப்பின் பங்கு யாது?

இது மொழிபெயர்ப்புக் காலம். காலையில் எழுந்தவுடன் நாளிதழ் படிப்பு, மொழிபெயர்ப்பு மூலமே நமக்குச் சாத்தியமாகிறது. இரவு தொலைக்காட்சியில் காணும் கேட்கும் செய்திகளும் மொழிபெயர்ப்பு மூலமே கிடைக்கின்றன. இடையில் நம் பணிகள் பலவற்றிலும் மொழிபெயர்ப்பின் துணை இருந்து கொண்டே இருக்கிறது.

19. வளரும் நாடுகளுக்கு மொழிபெயர்ப்பு எவ்வாறு உதவுகிறது?

இன்றைய வளரும் நாடுகளில் அறிவியலை உருவாக்க, அரசியலை உருவாக்க, பொருளியலை உருவாக்க, சமூகவியலை உருவாக்க, இலக்கியத்தை உருவாக்க மொழிபெயர்ப்பு உதவுகிறது.

20. மொழிபெயர்ப்பு எவ்வாறு பொதுமைத் தன்மையோடு விளங்குகிறது?

- மொழிபெயர்ப்பு, மனிதர்களையும், நாடுகளையும், காலங்களையும் இணைக்கிற நெடுஞ்சாலையாக இருக்கிறது.
- காலத்தால் இடத்தால் மொழியால் பிரிக்கப்பட்ட மானுடத்தை இணைக்கிறது.
- கடந்த காலத்தை எதிர்காலத்துடன் இணைக்கும் அது மனித வாழ்வின் ஒரு பகுதியாகவே இருக்கிறது.
- பல மொழிகளிலும் காணப்படும் சிறப்புக்கூறுகளை எல்லாம் ஒருங்கு சேர்த்து அனைவருக்கும் பொதுமையாக்குகிறது.

21. தமிழ்மொழி பிறமொழிகளில் ஏற்படுத்திய தாக்கம் யாது?

- புள்ளி விவரப்படி அதிகமான தமிழ் நூல்கள் பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.
- அவ்வரிசையில் முதலிடம் ஆங்கிலம்; இரண்டாமிடம் மலையாளம்.
- அதைத் தொடர்ந்து அடுத்தடுத்த நிலைகளில் முறையே தெலுங்கு, இந்தி, கன்னடம், வடமொழி, ரஷ்யமொழி, வங்க மொழி, மராத்தி மொழி போன்றவை இடம் பெறுகின்றன.

22. மொழிபெயர்ப்பு ஒரு நாட்டின் வரலாற்றிலும் பண்பாட்டிலும் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்துகிறது?

- மொழிபெயர்ப்பினால் புதிய சொற்கள் உருவாகி மொழிவளம் ஏற்படுகிறது. பிற இனத்தவரின் மொழிவளம் தெரிகிறது.
- பிற இனத்தவரின் பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கம் போன்றவற்றை அறிய முடிகிறது. அதிலிருந்து நல்லனவற்றை நாம் பெற்றுக் கொள்ள முடிகிறது.
- பிறமொழி இலக்கிய அறிவு கிடைக்கிறது. அதன் மூலம் நம் இலக்கியத்தை வளர்க்க முடிகிறது.
- உலகப்புகழ் பெற்ற அறிவியல் கண்டுபிடிப்புகளையும் இலக்கிய படைப்புகளையும் அறிவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.
- கருத்துப் பகிர்வைத் தருவதால் மொழிபெயர்ப்பைப் பயன்கலை என்று குறிப்பிடுவார்கள்.
- இவ்வாறு மொழி பெயர்ப்பு மூலம் ஒரு நாட்டின் வரலாற்றிலும் இலக்கியத்திலும் பண்பாட்டிலும் வலிமையான தாக்கத்தை ஏற்படுத்த முடியும்.

23. தமிழ் மொழிபெயர்ப்பு குறித்து குலோத்துங்கன் கூறுவது யாது?

''காசினியில் இன்று வரை அறிவின் மன்னர்
கண்டுள்ள கலைகளெல்லாம் தமிழில் எண்ணி
பேசி மகிழ் நிலை வேண்டும்''
என்று குலோத்துங்கன் குறிப்பிடுகிறார்.

24. மொழிபெயர்ப்பு குறித்து பாரதியார் கூறுவது யாது?

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''
''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்''
என்று பாரதி கூறுகிறார்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. ஐக்கிய நாடுகள் அவையில் மொழிபெயர்ப்பு.

ஐ.நா. அவையில் ஒருவர் பேசினார் அவரவர் மொழிகளில் புரிந்து கொள்வதற்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது. மொழிபெயர்ப்பு (Translation) என்பது எழுதப்பட்டதை மொழி பெயர்ப்பது; ஆனால் ஒருவர் பேசும்போதே மொழி பெயர்ப்பது விளக்குவது (Interpreting) என்றே சொல்லப்படுகிறது. ஐ.நா. அவையில் ஒருவர் பேசுவதை மொழிபெயர்க்கும் மொழிபெயர்ப்பாளர் பார்வையாளர்களுக்குத் தெரியாதபடி வேறு இடத்தில் இருப்பார். ஒருவர் பேசுவதைக் காதணி கேட்பியில் (Head phone) கேட்டபடி சில நொடிகளில் மொழி பெயர்த்து ஒலிவாங்கி வழியே பேசுவார். அவையில் உள்ள பார்வையாளர் தம்முன் உள்ள காதணிகேட்பியை எடுத்துப் பொருத்திக் கொண்டு அவரது மொழியில் புரிந்து கொள்வார்.

இப்பகுதியிலிருந்து ஐந்து வினாக்களை உருவாக்குக.

1. எந்த அவையில் ஒருவர் பேசினால் அவரவர் மொழிகளில் புரிந்து கொள்வதற்கு வசதி செய்யப்பட்டிருக்கிறது?
2. மொழிபெயர்ப்புக்கும் விளக்குவதற்கும் உள்ள வேறுபாடு என்ன?
3. ஐ.நா அமைப்பில் மொழிபெயர்ப்பாளர் எவ்விடத்தில் இருப்பார்?
4. ஐ.நா அவையில் மொழிபெயர்ப்பாளரின் செயல்பாடு என்ன?
5. ஐ.நா அவையில் பார்வையாளர், மற்றவர் பேசுவதை எவ்வாறு புரிந்து கொள்வார்?

## கூடுதல் வினாக்கள்:

2. மொழி பெயர்ப்பு குறித்து அறிஞர்களின் கூற்றுகள் யாவை?

- ''ஒரு மொழியில் உணரப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழி பெயர்ப்பு'' என்கிறார் மணவை முஸ்தபா.
- ''ஒரு மொழி வளம்பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகும். உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும்'' என்கிறார் மு.கு.ஜகந்நாதராஜா.
- ''தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து<br>அதர்ப்பட யாத்தலொடு அனை மரபினவே'' என்கிறார் தொல்காப்பியர்.
- ''எங்கோ தொலைதூரத்தில் வாழும் மனிதர்கள் தங்களின் மொழியில் சொன்னவற்றை, எழுதியவற்றை இன்னொரு மொழியில் நமக்குத் தெரிந்த மொழியில் மொழிபெயர்த்து அறிந்து கொள்கிறார்கள். அதுதான் மொழிபெயர்ப்பு'' என்கிறார் சா.கந்தசாமி.

3. மொழிபெயர்ப்பு ஏன் தேவைப்படுகிறது?

- மொழிபெயர்ப்பு, எல்லா காலக்கட்டங்களிலும் தேவையான ஒன்று.
- விடுதலைக்குப் பிறகு நாட்டின் பல பகுதிகளையும் ஒரே ஆட்சியின் கீழ் இணைக்கும் முயற்சி மேற்கொள்ளப் பட்டது.
- தேசிய உணர்வு ஊட்டுவதற்கும் ஒருமைப்பாட்டை ஏற்படுத்துவதற்கும் இந்திய அரசு, மொழி பெயர்ப்பை ஒரு கருவியாகக் கொண்டது.
- ஒரு மொழியில் இருக்கும் நூல்களைப் பிற மொழிகளில் மொழிபெயர்த்தது; பல்வேறு மாநிலங்களில் இருந்த இருக்கின்ற எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள் ஆகியோரைப் பற்றிய நூல்களையும் வெளியிட்டது.
- இத்தகைய மொழிபெயர்ப்பு முயற்சிகள் சாகித்திய அகாதெமி, தேசிய புத்தக நிறுவனம், தென்னிந்தியப் புத்தக நிறுவனம் ஆகியவற்றின் மூலம் செய்யப்பட்டன.
- உலகப் போரின் போது அமெரிக்கா, ''சரண் அடையாவிடில் குண்டு வீசப்படும்'' என்ற செய்தியை ஜப்பானுக்கு அனுப்பியதாகவும், அதற்கு ஜப்பான், 'மொகு சாஸ்ட்டு' என்று விடை அனுப்பியதாகவும் கூறுவர்.
- அந்தத் தொடரின் பொருள் தெரியாமையால் அமெரிக்கா, ஹிரோஷிமாவில் குண்டு வீசியது என்று சொல்கிறார்கள். அந்த தொடருக்குப் பொருள், 'விடைதர அவகாசம் வேண்டும்' என்பதாம்.
- ஆனால் அதற்கு அமெரிக்கர்கள், 'மறுக்கிறோம்' என்று பொருள் கொண்டதாகவும் கூறுவர்.
- இது உண்மையெனில், மொழிபெயர்ப்பு சரியாக அமையாததால் காலத்திற்கும் அழிவு தரும் களங்கம் நேர்ந்தது எனலாம்.
- இவ்வாறு பல தேவையின் பொருட்டு மொழிபெயர்ப்பு அவசியமாகிறது.

4. மொழி பெயர்ப்பைக் கற்பதனால் ஏற்படும் நன்மைகளை எழுதுக.

- மொழி பெயர்ப்பைக் கல்வியாக ஆக்குவதன் மூலம் அனைத்துலக அறிவையும் நாம் எளிதாகப் பெற முடியும்.
- பல அறிவுத்துறைகளுக்கும் தொழில் துறைகளுக்கும் வெளிநாட்டாரை எதிர்பார்க்காமல் நாமே நமக்கு வேண்டிய அனைத்தையும் உருவாக்கிக் கொள்ள முடியும்.
- மனித வளத்தை முழுமையாகப் பயன்படுத்த முடியும்.
- வேலை வாய்ப்புத் தளத்தை விரிவாக்க முடியும்.
- நாடு, இன, மொழி எல்லைகள் கடந்து ஒருலகத்தன்மையைப் பெற முடியும்.
- நாடு விடுதலை பெற்ற பிறகு பல நாட்டுத் தூதரகங்கள் நம்நாட்டில் நிறுவப்பட்டன. அவை தங்களுடைய இலக்கியம், பண்பாடு, தொழில் வளர்ச்சி, கலை போன்றவற்றை அறிமுகப்படுத்தும் நோக்கில் தத்தம் மொழிகளைக் கற்றுக் கொடுக்கின்ற முயற்சியை மேற்கொண்டு வருகின்றன.
- இதனைச் சார்ந்து பிற மொழிகளைக் கற்றுத்தரும் தனியார் நிறுவனங்களும் உருவாகியுள்ளன.
- பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் பிறமொழிகளைக் கற்கும் வாய்ப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன.

5. மொழி பெயர்ப்புக்காகச் செய்ய வேண்டுவன யாவை?

- மொழி பெயர்ப்பு நிறுவனங்களை அமைப்பதும், மொழி பெயர்ப்பைக் கல்வி ஆக்குவதும், மொழி பெயர்ப்புக்கு உதவும் சொற்களஞ்சியங்களை உருவாக்குவதும், ஒரு மொழியின் சிறப்புக் கூறுகளுக்கு இணையான சமன்பாடுகளை உருவாக்குவதும், பட்டறைகள் நடத்துவதும், நூல் வெளியிடுவதும் செய்யப்பட வேண்டும்.
- சாகித்திய அகாதெமி நிறுவனமும் தேசிய புத்தக நிறுவனமும் பல மொழிகளிலிருந்து நல்ல படைப்புகளை எல்லா இந்திய மொழிகளிலும் மொழி பெயர்த்துள்ளன.
- வெவ்வேறு படைப்புகள் மட்டுமின்றி, துறைசார்ந்த நூல் மொழி பெயர்ப்புகளையும் மேற்கொள்ள வேண்டும்.
- அவ்வகையில் தமிழில் பல நூல்கள் உருவாக்கப்பட வேண்டும்.

  ''சென்றிடுவீர் எட்டுத்திக்கும் – கலைச்
  செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''

  என்று பாரதி கூறுவதைத் தமிழுலகம் செயல்படுத்த வேண்டும்.
  அங்கிருந்து கொணர்ந்து சேர்ப்பதோடு அவர் கூறுவது போல,

  ''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
  பரவும் வகை செய்தல் வேண்டும்''.

- செப்பு மொழிகள் பலவாக இருப்பினும் சிந்தனை ஒன்றுடையதாக உலகம் ஆக்கப்பட வேண்டும். இதற்கு மொழி பெயர்ப்புக் கல்வி இன்றியமையாதது.

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. தமிழின் இலக்கிய வளம் – கல்விமொழி – பிறமொழிகளில் உள்ள இலக்கிய – அறிவியல் கருத்துகள் – பிறதுறைக் கருத்துகள் – தமிழுக்குச் செழுமை – மேற்கண்ட குறிப்புகளைக் கொண்டு 'செம்மொழித் தமிழுக்கு வளம் சேர்க்கும் மொழிபெயர்ப்புக் கலை' என்ற தலைப்பில் வார இதழ் ஒன்றுக்கு நடுப்பக்கக் கட்டுரை எழுதுக. PTA

முன்னுரை:

- உலகில் தோன்றி வளர்ந்த மொழிகள் பலவாயினும் நிலைத்து வாழும் தகுதி பெற்றன சிலவே ஆகும்.

- தமிழ்க்குடி தொன்மையானது என்பதை 'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தகுடி' எனும் பாடல் அடிகள் பறைசாற்றுகின்றன. நமது தாய்மொழியாம் தமிழில் இல்லாத சொல்வளமும் கருத்துவளமும் இல்லை.

**தமிழின் இலக்கிய வளம்:**

- வாழ்வுக்கே இலக்கணம் வகுத்த வண்டமிழ் மொழியில், பழந்தமிழர் வாழ்வைப் படம்பிடித்துக் காட்டும் வளமான இலக்கியங்களுக்குக் குறைவில்லை.
- பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ் சிறுகாப்பியம் போன்றன தமிழின் பெருமையைப் பறை சாற்றுகின்றன.
- பன்னிரு திருமறைகள், நாலாயிரத் திவ்விய பிரபந்தங்கள் பக்தி மணம் பரப்புகின்றன.
- நல்வழி, மூதுரை, உலகநீதி, கொன்றை வேந்தன், நீதிவெண்பா போன்றன நீதி நெறி காட்டும் வழிகாட்டிகளாய் விளங்குகின்றன.
- மகாபாரதம், கம்பராமாயணம், தேம்பாவணி, சீறாப்புராணம் போன்றன தமிழன்னைக்கு அணிகலன்களாய்த் திகழ்கின்றன.

**கல்வி மொழி:**

- தமிழ்மொழியில் இல்லாத சொல்வளம் இல்லை.
- தமிழ்மொழியைக் கற்றவர்கள் தமிழிலேயே எத்துறையைப் பற்றியும் கற்றுக்கொள்ளும் அளவிற்கு தமிழ்மொழி கல்வி மொழியாக விளங்குகிறது.
- மற்றமொழியினருக்கும் தமிழைக் கற்கும் ஆவலையும் தமிழ் மொழி கொடுக்கின்றது.

**பிற மொழிகளில் உள்ள இலக்கிய வளங்கள்:**

- பிற மொழிகளில் உள்ள இலக்கிய வளங்களை மொழி பெயர்ப்பின் மூலம் தன்வயப் படுத்தியதனால் தான் நாம் பல கவிஞர்களை நாம் அடையாளம் காண முடிந்தது.
- வரிசையில் பார்த்தால் கம்பராமாயணத்தின் மூலம் கம்பரையும், வில்லிபாரதம் வழியாகப் வில்லிபுத்தூராரையும், மனோன்மணீயம் வழியாக சுந்தரனாரையும், சீறாப்புராணம் வழியாக உமறுப்புலவரையும், தேம்பாவணி மூலமாக வீரமாமுனிவரையும் நம்மால் அடையாளம் காண முடிந்தது.

**அறிவியல் கருத்துகள்:**

- தமிழ் மொழியில் உள்ள அறிவியல் சிந்தனைகளும், அறிவியல் கோட்பாடுகளும் மலைக்க வைப்பவை.
- டார்வின் கூற்றை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியர் குறிப்பிட்டிருக்கிறார்.
- அறிவியல் சிந்தனைகளைத் தேவாரமும் திருவாசகமும் கூறுவதைக் காண முடிகின்றது.
- கலீலியோ கூற்றை கபிலர் கூறியிருப்பது வியப்பு. இயந்திரம் பற்றிய கருத்துகளை சங்க இலக்கியங்களில் தேடிப்பார்க்க முடிகின்றது. அணு பற்றிய கொள்கைகளை ஔவை பாடல் வழியாக உணர முடிகிறது.
- நீர்ச் சுழற்சியை வள்ளுவர் கூறி இருப்பதையும் உணர முடிகிறது.

**பிறதுறைக் கருத்துகள்:**

- மொழி பெயர்ப்பின் மூலமாக, பிறதுறைக் கருத்துகளையும் ஒப்பிட்டும் சிந்தித்தும் பார்க்க முடிகிறது.
- விண்ணியலறிவு குறித்து திருவாசகத்திலும் சங்க இலக்கியத்திலும் திருக்குறளிலும் படிக்க முடிகிறது.
- வானூர்தி குறித்துப் புறநானூற்றிலும் சிலப்பதிகாரத்திலும் காண முடிகிறது. பொறியியல் துறை குறித்த கருத்துகளைப் பதிற்றுப்பத்திலும் புறநானூற்றிலும் தேட முடிகிறது.
- கனிமவியல் தேடலைச் சங்க இலக்கியத்திலும், சிலப்பதிகாரத்திலும் காண முடிகிறது.

- மண்ணியல் துறை குறித்த செய்திகளைப் புறநானூற்றிலும் பார்க்க முடிகிறது. அணுவியல் துறை அறிவை வள்ளுவத்திலும், மருத்துவத்துறை அறிவை திருமந்திரத்திலும், சங்க இலக்கியத்திலும் பக்தி இலக்கியத்திலும் சுவைக்க முடிகிறது.
- இவ்வாறு பலதுறை அறிவை நாம் மொழிபெயர்ப்பின் மூலமாகவே பெற்றிருக்கிறோம்.

தமிழுக்குச் செழுமை:

- தமிழில் இல்லாத சொல்லும் இல்லை.
- பொருளும் இல்லை. இருப்பினும் மொழிபெயர்ப்பு என்ற கலையின் மூலம் தமிழ் இன்னும் கூடுதலாக செழுமை அடைந்து கொண்டிருக்கிறது என்பது நிதர்சனமே.
- மொழிபெயர்ப்பின் மூலமாக எல்லாத்துறைகளிலும் புதிய புதிய கலைச்சொற்களைப் பெற்றுத் தமிழ் செழுமை அடைந்து கொண்டே இருக்கிறது.
- இன்று எந்த துறை சம்மந்தமான புத்தகங்களையும் தமிழிலேயே கற்கலாம், எழுதலாம்.

முடிவுரை :

- பிறமொழிச் சாத்திரங்களைத் தமிழிலேயே இயற்ற வேண்டும் என்ற பாரதியின் கனவு நனவாகிவிட்டது.
- மொழிபெயர்ப்புக் கலை வழியாக செம்மொழித் தமிழ் வளமை பெற்று விளங்குகிறது என்பது உண்மையே.

## கூடுதல் வினாக்கள்:

2. மொழிபெயர்ப்பு எவ்வாறு இலக்கிய இறக்குமதியாக விளங்குகின்றது என்பதை விவரிக்க.

- பிறமொழி இலக்கியங்களை அறிந்து கொள்ளவும் அவை போன்ற புதிய படைப்புகள் உருவாகவும் மொழி பெயர்ப்பு உதவுகிறது.
- இலக்கியம் என்பது தன் அனுபவத்தை எழுதுவது என்றாலும் அது கலைச்சிறப்புடையதாக இருக்கிற போது அனைவரது அனுபவமாகவும் பொதுநிலை பெறுகிறது.
- பொதுநிலை பெற்ற இலக்கியத்தை மொழிவேலி சிறையிடுகிறது. மொழிவேலியை அகற்றும் பணியை மொழிபெயர்ப்பு செய்கிறது.
- ஜெர்மன் மொழியில் மொழிபெயர்ப்பின் மூலம் அறிமுகம் ஆன ஷேக்ஸ்பியர் அந்நாட்டு படைப்பாளர் போலவே கொண்டாடப்பட்டார்.
- 18 ஆம் நூற்றாண்டு வரை வடமொழி நூல்கள் பல தமிழில் ஆக்கப்பட்டன.
- ஆங்கிலேயர் வருகைக்குப் பின் ஆங்கில நூல்களும் ஆங்கிலம் வழியாகப் பிற ஐரோப்பிய மொழி நூல்களும் அறிமுகமாயின.
- இவற்றில் தரமான நூல்கள் என்று பார்த்தால் சிலதான் எஞ்சும்.
- தமிழ்நூல்களும் பிற மொழிகளுக்கு அறிமுகமாயின. தமிழுக்குரிய நூலாக இருந்த திருக்குறள் உலக மொழிகளுக்குரியதாக மாறியது.
- மொழிபெயர்ப்பு இல்லாவிடில் சில படைப்பாளிகளும் கூட உருவாகியிருக்க முடியாது. ஷேக்ஸ்பியர் இருந்திருக்க முடியாது; கம்பன் இருந்திருக்க முடியாது.
- இரவீந்திரநாத் தாகூர் வங்க மொழியில் எழுதிய கவிதைத் தொகுப்பான கீதாஞ் சலியை ஆங்கிலத்தில் அவரே மொழி பெயர்த்த பிறகுதான் அவருக்கு நோபல் பரிசு கிடைத்தது.
- மகாகவியான பாரதியின் கவிதைகளும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தால் உலக அளவில் உயரிய விருதுகளும் ஏற்பும் கிடைத்திருக்கும்.
- ஒரு நாடு எவ்வளவு மின்னாற்றலைப் பயன்படுத்துகிறது என்பதைக் கொண்டு அதன் தொழில் வளர்ச்சியை மதிப்பிடுகிறார்கள். அதுபோல ஒரு நாட்டில் மொழிபெயர்ப்பு நூல்களின் எண்ணிக்கையைக் கொண்டு அந்நாட்டின் பண்பாட்டையும் அறிவையும் மதிப்பிடுவார்கள்.

- நேரடி மொழிபெயர்ப்பாக பிரெஞ்சு, ஜெர்மன், ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்கா முதலான நாடுகளின் நூல்கள் இன்று கிடைக்கத் தொடங்கியிருப்பது நல்ல பயனை அளிக்கும் என எதிர்பார்க்கலாம்.
- மொழி பெயர்ப்பின் மூலம் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளையும் பெற்றிருக்கிறோம்.
- இன்றுள்ள புதிய திறனாய்வு முறைகளை எல்லாம் நாம் ஆங்கிலத்தின் வழியாகவே பெற்றிருக்கிறோம்.
- பிறமொழி இலக்கியங்கள், இலக்கிய வடிவங்கள் பலவும் தமிழுக்கு அறிமுக மாகியுள்ளன. மொழி பெயர்க்கப்பட்ட நூல்களைத் தமிழ் இலக்கியங்களோடு ஒப்பு நோக்கி சிந்தனை, வடிவம், உத்தி, மையக்கரு, பண்பாடு போன்ற பலவகைக் கூறுகளை சீர்தூக்கிப் பார்த்து வளர்க்க மொழி பெயர்ப்பு உதவுகிறது.

### 3. மொழிபெயர்ப்பு செம்மையாக அமையாவிடின் ஏற்படும் விளைவுகள் யாவை?

Hundred railsleepers were washed away என்பதை தொடர்வண்டியில் உறங்கிக் கொண்டிருந்த நூறு பேர், வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டார்கள் என்று ஒரு செய்தித்தாள் வெளியிட்டது. Railsleepers என்பது தொடர்வண்டியின் போக்குவரத்துப் பாதையான தண்டவாளத்தில் உள்ள குறுக்குக் கட்டைகளைக் குறிக்கும். அதனை உறங்கி கொண்டிருந்தோர் என மொழிபெயர்த்தது பெரும்பிழையே.

Camel என்பதற்கு வடம் (கயிறு), ஒட்டகம் என இருபொருள் உண்டு. ஊசி காதில் வடம் நுழையாது என்னும் வேற்றுமொழித் தொடரை 'ஊசி காதில் ஒட்டகம் நுழையாது' என்று மொழிபெயர்த்துப் பயன்படுத்துகிறோம். இத்தொடரில் வடம் என்பதே பொருத்தமான சொல்லாக அமையும் (அதாவது ஊசி காதில் நூல் நுழையுமே அன்றிக் கயிறு நுழையாது என்பதே). மொழிபெயர்ப்புகள் கழிவின்றி, சிதறலின்றி மூலமொழியின் கருத்துகளை வெளிப்படுத்துவதாக அமைய வேண்டும்.

Underground drainage என்ற தொடரை மொழி பெயர்ப்பதில் தடுமாற்றம் வந்தது. பாதாளச் சாக்கடை என்பது போன்றெல்லாம் மொழி பெயர்த்தனர். தமிழோடு தொடர்புடைய மலையாள மொழியில் பயன்படுத்திய 'புதைசாக்கடை' என்ற சொல் பொருத்தமாக இருப்பதைக் கண்டனர். அதையே பயன்படுத்தவும் தொடங்கினர்.

Tele என்பது தொலை என்பதைக் குறிக்கிறது. ஆகவே Telegraph, Television, Telephone, Telescope, Telemetry முதலிய சொற்கள் மொழி பெயர்க்கப்படுகிற போது தொலைவரி, தொலைக்காட்சி, தொலைபேசி, தொலைநோக்கி, தொலைஅளவியல் என்றவாறு முன் ஒட்டுகளுடன் மொழி பெயர்க்கப்பட்டன. இதற்கு மாறாக, Transcribe, Transfer, Transform, Transact ஆகியவற்றை மொழிபெயர்க்கும் போது படியெடுத்தல், மாறுதல், உருமாற்றுதல், செயல்படுத்துதல் என்றவாறு மொழி பெயர்க்கப்படுகின்றன. இங்கு Trans என்ற முன்ஒட்டை வைத்து மொழிபெயர்க்கவில்லை. இவ்வாறு இடம் பார்த்து மொழிபெயர்ப்பு, முறையாகச் செய்யப்பட வேண்டும்.

அதே போல், ஜப்பான் அனுப்பிய பதிலைச் சரியாக புரிந்து கொள்ளாததால் தான் அமெரிக்கா ஹிரோஷிமாவில் குண்டு வீசியதாகக் கூறுவர்.

### 4. மொழிபெயர்ப்பின் பயன்கள் யாவை?

- இது மொழிபெயர்ப்புக் காலம். காலையில் எழுந்தவுடன் நாளிதழ் படிப்பு, மொழிபெயர்ப்பு மூலமே நமக்குச் சாத்தியமாகிறது.
- இரவு தொலைக்காட்சியில் காணும், கேட்கும் செய்திகளும் மொழிபெயர்ப்பு மூலமே கிடைக்கின்றன.
- இடையில் நம் பணிகள் பலவற்றிலும் மொழிபெயர்ப்பின் துணை இருந்து கொண்டே இருக்கிறது.
- இன்றைய வளரும் நாடுகளில் அறிவியலை உருவாக்க – அரசியலை உருவாக்க – பொருளியலை உருவாக்க – சமூகவியலை உருவாக்க – இலக்கியத்தை உருவாக்க மொழிபெயர்ப்பே உதவுகிறது.

- மொழிபெயர்ப்பு மனிதர்களையும், நாடுகளையும், காலங்களையும் இணைக்கிற நெடுஞ்சாலையாக இருக்கிறது.
- காலத்தால் இடத்தால் மொழியால் பிரிக்கப்பட்ட மானுடத்தை இணைக்கிறது.
- கடந்த காலத்தை எதிர்காலத்துடன் இணைக்கும் மொழிபெயர்ப்பு மனித வாழ்வின் ஒரு பகுதியாகவே இருக்கிறது.
- பல மொழிகளிலும் காணப்படும் சிறப்புக் கூறுகளை எல்லாம் ஒருங்குசேர்த்து அனைவருக்கும் பொதுமையாக்குகிறது.
- ஜெர்மனியில் ஓர் ஆண்டில் பிறமொழிகளிலிருந்து 5000 நூல்கள் வரை மொழி பெயர்க்கப்படுகின்றன.
- புள்ளிவிவரப்படி அதிகமான தமிழ்நூல்கள் பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.
- அவ்வரிசையில் முதலிடம் ஆங்கிலம், இரண்டாமிடம் மலையாளம்; அதைத் தொடர்ந்து அடுத்தடுத்த நிலைகளில் முறையே தெலுங்கு, இந்தி, கன்னடம், வடமொழி, ரஷ்ய மொழி, வங்கமொழி, மராத்திமொழி போன்றவை இடம் பெறுகின்றன.
- மொழி பெயர்ப்பினால் புதிய சொற்கள் உருவாகி மொழி வளம் ஏற்படுகிறது.
- பிற இனத்தவரின் பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கம் போன்றவற்றை அறிய முடிகிறது. அதிலிருந்து நல்லனவற்றை நாம் பெற்றுக் கொள்ள முடிகிறது.
- பிறமொழி இலக்கிய அறிவு கிடைக்கிறது. அதன் மூலம் நம் இலக்கியத்தை வளப்படுத்த முடிகிறது. உலகப்புகழ் பெற்ற அறிவியல் கண்டுபிடிப்புகளையும், இலக்கியப் படைப்புகளையும் அறிவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.
- கருத்துப் பகிர்வைத் தருவதால் மொழி பெயர்ப்பைப் பயன்கலை என்று குறிப்பிடுவார்கள்.
- மொழிபெயர்ப்பு மூலம் ஒரு நாட்டின் வரலாற்றிலும் இலக்கியத்திலும் பண்பாட்டிலும் வலிமையான தாக்கத்தை ஏற்படுத்த முடியும்.

5. மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையைப் பற்றி எழுதுக. PTA

**முன்னுரை:**

மொழிகளுக்கு இடையேயான வேற்றுமைகளை வேற்றுமைகளாகவே நீடிக்கவிடாமல் ஒற்றுமைப்படுத்த உதவுவது மொழிபெயர்ப்பு. ஒரு மொழி வளம் பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகும். உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும் என்கிறார் மு.கு. ஜகந்நாத ராஜா. எனவே மொழி பெயர்ப்பின் இன்றியமையாமையைப் பற்றி இங்கே காண்போம்.

**தொடக்கம்:**

மொழிபெயர்த்தல் என்ற தொடரைத் தொல்காப்பியர் மரபியலில் (98) குறிப்பிட்டுள்ளார். 'மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்னும் சின்னமானூர் செப்பேட்டுக் குறிப்பு சங்க காலத்திலேயே தமிழில் மொழிபெயர்ப்பு மேற்கொள்ளப்பட்டதைப் புலப்படுத்துகிறது. பிறமொழிகளில் உள்ள இலக்கிய வளங்களை மொழிபெயர்ப்பின் மூலமாக தன்வயப்படுத்தலாம். அதன்மூலம் பல காப்பியங்களையும், புராணங்களையும், சிற்றிலக்கியங்களையும் நாம் பெற முடிந்தது.

**மொழிபெயர்ப்பு நூல்கள்:**

ஜெர்மனியில் ஓர் ஆண்டில் பிறமொழிகளிலிருந்து 5000 நூல்கள் வரை மொழி பெயர்க்கப்படுகின்றன. புள்ளிவிவரப்படி அதிகமான தமிழ்நூல்கள் பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. அவ்வரிசையில் முதலிடம் ஆங்கிலம், இரண்டாமிடம் மலையாளம்; அதைத் தொடர்ந்து அடுத்தடுத்த நிலைகளில் முறையே தெலுங்கு, இந்தி, கன்னடம், வடமொழி, ரஷ்ய மொழி, வங்கமொழி, மராத்திமொழி போன்றவை இடம் பெறுகின்றன.

### எட்டுத்திக்கின் கலைச்செல்வங்கள் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்:

தமிழில் பல நூல்கள் உருவாக்கப்பட வேண்டும்.

''சென்றிடுவீர் எட்டுத்திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''

என்று பாரதி கூறுவதைத் தமிழுலகம் செயல்படுத்த வேண்டும். அங்கிருந்து கொணர்ந்து சேர்ப்பதோடு அவர் கூறுவது போல,

''தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்''.

### மொழிபெயர்ப்பும் கல்வியே:

மொழி பெயர்ப்பைக் கல்வியாக ஆக்குவதன் மூலம் அனைத்துலக அறிவையும் நாம் எளிதாகப் பெறலாம். அறிவுக்குழு தேடலுக்கும் தொழிநுட்பத்திற்கும் வெளிநாட்டவரை எதிர்பார்க்காமல் அவற்றை நாமே உருவாக்கிக் கொள்ள இயலும். இலக்கியம், பண்பாடு தொழில் வளர்ச்சிக்குக் கலை போன்றவற்றை அறிமுகப்படுத்த தத்தம் மொழியைக் கற்றுக் கொடுக்க முடியும். பள்ளி, கல்லூரி மற்றும் பல்கலைக் கழகங்களில் பிறமொழி கற்றுக்கொடுக்கும் வாய்ப்புகளை உருவாக்கலாம்.

### பல்துறை வளர்ச்சி:

இன்றைக்குப் பல்வேறு துறைகளின் வளர்ச்சிக்கு மொழிபெயர்ப்பு தேவைப்படுகிறது. மொழிபெயர்ப்பு இல்லை எனில் உலகை எல்லாம் வகையாகப் பிடித்திருக்கின்ற ஊடகத்தின் வளர்ச்சி இல்லை. தொலைக்காட்சி, வானொலி, திரைப்படம், இதழ்கள் போன்ற ஊடகங்கள் மொழிபெயர்ப்பில் தான் வளர்ச்சி பெறுகின்றன.

விளம்பர மொழிக்கு மொழிபெயர்ப்பு தேவைப்படுகிறது. திரைப்படங்கள் தொலைக் காட்சித் தொடர்கள் ஆகிய வேற்று மொழிமாற்றம் செய்யப்பட்டு அனைத்து மொழி பேசும் மக்களையும் அடைகின்றன.

### பயன்கள்:

மொழி பெயர்ப்பினால் புதிய சொற்கள் உருவாகி மொழிவளம் ஏற்படுகிறது. பிற இனத்தவரின் பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கம் போன்றவற்றை அறிய முடிகிறது. அதிலிருந்து நல்லவற்றை நாம் பெற்றுக்கொள்ள முடிகிறது, பிறமொழி இலக்கிய அறிவும் கிடைக்கிறது. கருத்துக்களைப் பகிர்வதால் மொழிபெயர்ப்பை பயன்கலை என்றும் குறிப்பிடுவர். மொழிபெயர்ப்பு மூலம் ஒரு நாட்டின் வரலாற்றிலும் இலக்கியத்திலும் பண்பாட்டிலும் வலிமையான தாக்கத்தை ஏற்படுத்த முடியும்.

### மொழிபெயர்ப்பின் வளர்ச்சி:

செய்யுளையே தன் வெளியீட்டு வடிவமாகக் கொண்டிருந்த தமிழ் மொழி, காலமாற்றத்தாலும் அச்சு இயந்திரத்தின் வருகையாலும் பரிணாம வளர்ச்சி அடைந்து உரைநடை முறை வளர்ந்தது. மொழிபெயர்ப்பினால் மொழிவளம் வளர்ந்ததோடு மொழிபெயர்ப்பு தொழில்நுட்பமும் வளர்ந்துள்ளது. இதனை மேலும் மெருகூட்ட மொழிபெயர்ப்பு நிறுவனங்களை அமைப்பதும், மொழிபெயர்ப்பைக் கல்வி ஆக்குவதும், மொழிபெயர்ப்புக்கு உதவும் சொற்களஞ்சியங்களை உருவாக்குவதும் செய்யப்பட வேண்டும். வெவ்வேறு படைப்புகள் மட்டுமின்றி, துறை சார்ந்த நூல் மொழிபெயர்ப்புகளையும் மேற்கொள்ள வேண்டும்.

### முடிவுரை:

எப்பொழுது உலகத்தில் நான்கைந்து மொழிகள் உருவாயினவோ அப்பொழுதே மொழி பெயர்ப்பும் வந்துவிட்டது. கருத்துப் பரிமாற்றம், தகவல் பகிர்வு, அறநூல் அறிதல், இலக்கியம், தத்துவம் என்பன எல்லாம் மொழிபெயர்ப்பு வழியாகவே சர்வதேசத்தன்மை பெறுகின்றன. உலகம் ஆக்கப்பட வேண்டுமானால் அதற்கு மொழிபெயர்ப்புக் கல்வி இன்றியமையாத ஒன்றாகும்.

## கற்பவை கற்றபின்

1. தாகூரின் கீதாஞ்சலி தமிழ்மொழி பெயர்ப்பு பாடல் ஒன்றையும், கலீல் கிப்ரானின் கவிதை ஒன்றின் மொழிபெயர்ப்பையும் நூலகத்தில் படித்து எழுதி வருக.

**கீதாஞ்சலி (19)**

### காலையிலே எழும் கீதம்

என்னுடன் நீ
உரையாடாமல் இருந்தால்,
உன்னுடைய மௌனத்தைச் சேர்த்து
நிரப்பிக் கொள்வேன்.
எனது
நெஞ்சில் இட்டு!
எப்படியும் அதைத் தாங்கி
இனிமேல்
பொறுத்துக் கொள்வேன்!
ஆயினும்
விண்மீன்கள் கண் விழிப்புடன்
இரவைக்
கண்காணித்து வருவது போல்
சிரம் தாழ்ந்து
காத்திருப்பேன் கவலையுடன்!
காரிருள் மறைந்து நிச்சயம்
சூரியன் உதிக்கும்
காலையில்.
அப்போது
வானை இடித்துக் கொண்டு
கீழே
பொன்னொளிக் கதிர்களில்
உன்குரல் பொழிந்து பெய்யும்!
என் பறவைகளின்
ஒவ்வொரு கூட்டிலிருந்தும்
உன்னிதழ்கள் உதிர்க்கும்
வாசகங்கள்
சிறகுகளை ஏந்திப்
பறந்து வரும்,
இன்னிசைக் கீதங்களாய்!
என்னுடைய
வனாந்திரத் தோப்புகளில் எல்லாம்
மலர்ந்த
பிஞ்சுப் பூக்களில்
ஒலித்து வரும்
நெஞ்சை உலுக்கும்
உன்னினிய மெல்லிசைகள்!

**கலீல் கிப்ரான் கவிதை**

### வேனிற்காலம்

வயல் வழியே செல்வோம்
வா என் கண்மணி!
வருகிறது
அறுவடைக் காலம்!
பரிதியின் விழிகள்
பக்குவ மாக்கும் பயிர்களை!
காசினி விளைத்திடும்
கனிகளைக்
கண்காணித்து வருவோம்
இதயத்தின் ஆழத்தில்
விதைக்கும் காதல் வித்துக்கள்
விளைவிக்கும்
களிப்புத் தானியங்களை
ஊட்டி வளர்ப்பது
அந்த ஆத்மா!
முடிவில்லாக் கொடைகள்
அளிப்பது இயற்கை!
இதயத்தை ஆட்கொண்டு
வாழ்வு செழிப்படைந்து
மூழ்கிப் போவதால்
நிரம்பட்டும் நமது
சேமிப்புக் களஞ்சியம்
இயற்கையின் விளைவுப்
பயிர்களால்!
பூக்களால் நமது படுக்கை
ஆக்கப்படட்டும்
ஆகாயம் நமது போர்வையாய்
அமையட்டும்!
மெல்லிய வைக்கோல்
தலையணை மேல்
சாயட்டும்
நம்மிரு தலைகளும்!
உடல் உழைப்பில் சற்று ஓய்வெடுத்து
ஓடை முணு முணுப்பைக்
கேட்போம் நாம்!

2. மொழிபெயர்ப்புச் சிறுகதை ஒன்றைப் படித்து அதன் கதைச் சுருக்கத்தையும் உங்கள் கருத்துகளையும் வகுப்பறையில் கூறுக.

**எல்லோருக்கும் மரியாதை**

மேனாட்டில் புகழ் பெற்ற நாடகாசிரியர் ஒருவர் இருந்தார். தன் பேரனிடம் அவர், ''நற்பண்புகள் உள்ளவனாக நடந்து கொள். யாராக இருந்தாலும் மரியாதை செய்'' என்று அறிவுரை சொன்னார்.

''அப்படியே நடப்பேன்'' என்றான் பேரன்.

இருவரும் நடந்து சென்று கொண்டிருந்தனர். எதிரில் ஒரு பிச்சைக்காரன் தட்டுத் தடுமாறியபடி வந்தான். அவன் மார்பில் தொங்கிய அட்டையில் ''எனக்குக் கண் பார்வை தெரியாது, உதவி செய்யுங்கள்'' என்று எழுதி இருந்தது.

வெள்ளி நாணயம் ஒன்றை எடுத்துத் தன் பேரனிடம் தந்தார் அவர். ''பிச்சைக்காரனின் தட்டில் போட்டு விட்டு வா'' என்றார்.

பேரனும் அப்படியே அந்தக் காசைத் தட்டில் போட்டான். பிச்சைக்காரனும் அங்கிருந்து சென்றான்.

''உனக்குச் சிறிதுகூட மரியாதை தெரியவில்லையே. பிச்சைக்காரனுக்கு உன் தொப்பியைத் தூக்கி முதலில் வணக்கம் செலுத்தி இருக்க வேண்டும். அதன் பிறகு காசைத் தட்டில் போட்டிருக்க வேண்டும். நீ அப்படி செய்தாயா?'' என்று கேட்டார் அவர்.

''தாத்தா! அந்தப் பிச்சைக்காரனுக்கு கண் தெரியாது. நான் வணக்கம் செலுத்தி இருந்தால் அவன் பார்த்திருக்க முடியாது'' என்று பதில் சொன்னான் பேரன்.

''அந்த பிச்சைக்காரன் கண் பார்வை தெரியாதவனைப் போல் நடிப்பவனாக இருந்தால் நீ மரியாதை செய்யாததைப் பார்த்த அவனுக்கு வருத்தம் ஏற்படும் அல்லவா?'' என்று கேட்டார் அவர்.

''என் செயலுக்கு வருந்துகிறேன். இனி எல்லோருக்கும் வணக்கம் செலுத்துவேன். மரியாதை தருவேன்'' என்றான் அவன்.

**என் கருத்து**

மொழி பெயர்ப்பு என்பது ஒரு மொழியில் படைத்த படைப்பைத் தன் தாய்மொழியில் மாற்றியமைக்கும் தன்மை ஆகும். இதனால் பல மொழிகளில் சிறப்பாக விளங்கும் பல நூல்களை நாம் அறிந்து புரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகிறது. இதன் அடிப்படையில் இந்த மொழிப்பெயர்ப்பு சிறுகதை நன்றாக அமைந்திருக்கிறது. மனிதனாகப் பிறந்த எவரும் மரியாதையை எதிர்பார்ப்பது உலக நீதி. அப்படி இருக்கும் போது தன் பேரனுக்குச் சிறுவயதிலேயே பிறருக்கு மரியாதை கொடுக்க வேண்டும் என்பதை கற்றுக் கொடுக்கும் தாத்தாவின் செயல்பாடுகள் அருமையாக அமைந்திருக்கின்றன.

எதிரிலுள்ளவர் ஏமாற்றுபவராக இருந்தாலும் நாம் நமது பண்புநலன்களை விட்டுக் கொடுக்கக் கூடாது என்று அறிவுறுத்துவதன் மூலம், வாழ்வின் முக்கியமான பாடத்தைச் சொல்லிக் கொடுக்கிறார். இளைய தலைமுறையினரை எவ்வாறு வளர்க்க வேண்டும் என்பதை இக்கதை தெள்ளத்தெளிவாக எடுத்து இயம்புகிறது.

ஆகவே மொழிபெயர்ப்பின் வழியாக இக்கதை கருத்தாழம் கொண்டதாக விளங்குகிறது. இதைப் போன்ற பல கதைகள் பல மொழிகளில் விரவிக்கிடக்கின்றன. மொழிபெயர்ப்பின் வழியாகவே அனைத்தையும் உலகத்திற்கு எடுத்தியம்ப முடியும் என்பது தெளிவாக விளங்குகின்றது.

**பாரதியின் மொழிபெயர்ப்பு**

காட்சி, பொருட்காட்சி – Exhibition
புரட்சி – Revolution
தொழில் நிறுத்தி இருத்தல், தொழில் நிறுத்தம், வேலை நிறுத்தம் – Strike



இயல் - 5 செய்யுள்

கல்வி – மணற்கேணி

# 2. நீதிவெண்பா

காப.செய்குதம்பிப் பாவலர்

**பாடல் :**

*அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி*
*மருளை அகற்றி மதிக்கும் தெருளை*
*அருத்துவதும் ஆவிக்கு அருந்துணையாய் இன்பம்*
*பொருத்துவதும் கல்வியென்றே போற்று.*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| அருளைப் பெருக்கி | – | கருணையை அதிகரிக்கச் செய்து |
| அறிவைத் திருத்தி | – | அறிவைச் சீராக்கி |
| மருளை அகற்றி | – | மயக்கத்தை நீக்கி |
| மதிக்கும் தெருளை அருத்துவதும் | – | போற்றும் அறிவுக்குத் தெளிவைத் தருவதும் |
| ஆவிக்கு உறுதுணைபாய் | – | உயிருக்கு உற்றதுணையாய் |
| இன்பம் பொருத்துவதும் | – | மகிழ்ச்சியை சேர்ப்பதும் |
| கல்வியென்றே போற்று | – | கல்வி என்றே போற்றுக. |

## பொருளுரை:

அருளினைப் பெருக்கி, அறிவைச் சீராக்கி, மயக்கம் அகற்றி, அறிவுக்குத் தெளிவு தந்து, உயிருக்கு அரிய துணையாய் இன்பம் சேர்ப்பது கல்வியே ஆகும். எனவே அதைப் போற்றிக் கற்க வேண்டும்.

## விளக்கவுரை:

கல்வியைப் போற்ற வேண்டும் அதை எதற்காகப் போற்ற வேண்டும், எவ்வாறு போற்ற வேண்டும் என்று சதாவதானி செய்குதம்பிப் பாவலர் கூறுகிறார்.

## ஆசிரியர் குறிப்பு:

- **ஆசிரியர் பெயர்** : செய்குதம்பிப் பாவலர்
- **பிறப்பு** : 1874
- **ஊர்** : இடலாக்குடி, கன்னியாகுமரி மாவட்டம்
- **சிறப்புகள்** : சீறாப்புராணத்திற்கு உரை எழுதியவர்; 1907 மார்ச் 10 ஆம் நாளில் சென்னை விக்டோரியா அரங்கத்தில் அறிஞர் பலர் முன்னிலையில் நூறு செயல்களை ஒரே நேரத்தில் செய்து காட்டி 'சதாவதானி' என்று பாராட்டுப் பெற்றார்.
- **மறைவு** : 1950

## நூற் குறிப்பு:

- நீதிக் கருத்துக்களை வெண்பா யாப்பில் எடுத்துரைக்கும் நூலே ''நீதி வெண்பா'' ஆகும்.
- நூறு வெண்பாக்களையும் எளிய இனிய நடையழகையும் கொண்ட இந்நூல் பல்லோரை ஈர்க்கும் பாங்குடையது.
- இதை இயற்றியவர் கா.ப.செய்குதம்பிப் பாவலர் ஆவார்.

## மதிப்பீடு

### பொருள் தருக

1. அருள் – கருணை
2. மருள் – மயக்கம்
3. தெருள் – தெளிவு (அறிவு)
4. ஆவிக்கு – உயிருக்கு
5. அருத்துவது – பொருளைத் தருவது
6. அருந்துணை – உற்ற துணை
7. பொருத்துவது – சேர்ப்பது

### இலக்கணக் குறிப்பு தருக

1. பெருக்கி, திருத்தி, அகற்றி – வினையெச்சங்கள்
2. அருந்துணை – பண்புத்தொகை

### பகுபத உறுப்பிலக்கணம்

1. பெருக்கி – பெருக்கு + இ
   பெருக்கு – பகுதி
   இ – வினையெச்ச விகுதி
2. திருத்தி – திருத்து + இ
   திருத்து – பகுதி
   இ – வினையெச்ச விகுதி
3. அகற்றி – அகற்று + இ
   அகற்று – பகுதி
   இ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. அருந்துணை என்பதைப் பிரித்தால் ________.

அ) அருமை + துணை ஆ) அரு + துணை
இ) அருமை + இணை ஈ) அரு + இணை

விடை : அ) அருமை + துணை

2. ''அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி மருளை அகற்றி மதிக்கும் தெருளை'' – என்று இவ்வடிகளில் குறிப்பிடப்படுவது யாது? PTA

அ) தமிழ் ஆ) அறிவியல்
இ) கல்வி ஈ) இலக்கியம்

விடை : இ) கல்வி

**கூடுதல் வினாக்கள்:**

3. தோண்டும் அளவு ஊறும் நீர்போலக் கற்கும் அளவு அறிவு சுரக்கும் என்கிறது ______

ஆ) நற்றிணை　ஆ) குறுந்தொகை
இ) திருக்குறள்　ஈ) கலித்தொகை　விடை : இ) திருக்குறள்

4. உயிருக்கு அரிய துணையாய் இன்பம் சேர்ப்பது ______ ஆகும்.

அ) செல்வம்　ஆ) வீரம்
இ) கொடை　ஈ) கல்வி　விடை : ஈ) கல்வி

5. 'சதாவதானம்' என்னும் கலையில் சிறந்து விளங்கியவர் ______.

அ) பாரதியார்　ஆ) பாரதிதாசன்
இ) செய்குதம்பிப் பாவலர்　ஈ) சுரதா　விடை : இ) செய்குதம்பிப் பாவலர்

6. செய்குதம்பிப் பாவலர் ______ மாவட்டத்தில் இடலாக்குடியில் பிறந்தார்.

அ) திருநெல்வேலி　ஆ) கன்னியாகுமரி
இ) திருச்சி　ஈ) சேலம்　விடை : ஆ) கன்னியாகுமரி

7. செய்குதம்பிப் பாவலர் ______ நூலுக்கு உரை எழுதியவர்.

அ) கம்பராமாயணம்　ஆ) திருக்குறள்
இ) சீறாப்புராணம்　ஈ) மகாபாரதம்　விடை : இ) சீறாப்புராணம்

8. 1907 மார்ச் 10ஆம் நாளில் நூறு செயல்களைச் செய்து காட்டிய இடம் ______.

அ) நாயக்கர் மகால்　ஆ) அறிவாலயம்
இ) பெரிய கோவில்　ஈ) விக்டோரியா அரங்கம்

விடை : இ) விக்டோரியா அரங்கம்

9. நூறு செயல்களை ஒரே நேரத்தில் செய்து காட்டுபவரை ______ என்றழைப்பர்.

அ) காரியாசான்　ஆ) சித்திரக்காலி
இ) சதாவதானி　ஈ) தசாவதானி　விடை : இ) சதாவதானி

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி
மருளை அகற்றி மதிக்கும் தெருளை
அருத்துவதும் ஆவிக்கு அருந்துணையாய் இன்பம்
பொருத்துவதும் கல்வியென்றே போற்று.

PTA

**வினாக்கள்:**

1. இப்பாடல் இடம் பெற்ற நூல் எது?

அ) நீதிவெண்பா　ஆ) புறநானூறு
இ) வெற்றி வேற்கை　ஈ) கொன்றை வேந்தன்

விடை : அ) நீதிவெண்பா

2. பாடலின் சீர் மோனைச் சொற்கள் –

அ) அருளை, அருத்துவதும்　ஆ) அருளை, அறிவை
இ) அகற்றி, அருந்துணையாய்　ஈ) அறிவை, அகற்றி

விடை : ஆ) அருளை, அறிவை

3. அருந்துணையாய் இச்சொல்லை பிரித்தால்

அ) அருந்துணை + யாய்　ஆ) அருந்து + துணையாய்
இ) அருமை + துணையாய்　ஈ) அரு + துணையாய்

விடை : இ)அருமை + துணையாய்

4. உயிருக்கு அரிய துணையாய் இன்பம் சேர்ப்பது

அ) அன்பு ஆ) கல்வி

இ) மயக்கம் ஈ) செல்வம்

விடை : ஆ) கல்வி

## குறுவினா

### பாடநூல் வினா:

1. செய்குதம்பிப் பாவலரின் கல்வி பற்றிய கருத்தினை முழக்கத் தொடர்களாக்குக.

கல்வியைக் கொண்டு அருளைப் பெருக்கி அறிவைத் திருத்து!

கல்வியின் பேரொளியால் மருளை அகற்று!

ஆவிக்கு உற்ற கல்வியே போற்றி! போற்றி!

கல்வி ஆவிக்கு அருந்துணை நமக்கு பெருந்துணை!

### கூடுதல் வினாக்கள்:

2. கல்வியின் சிறப்பாக இலக்கியங்கள் கூறும் கருத்து யாது?

- கற்றவர் வழி அரசு செல்லும் என்கிறது சங்க இலக்கியம். அருளைப் பெருக்குவோம்! அறிவைத் திருத்துவோம்!
- தோண்டும் அளவு ஊறும் நீர்போலக் கற்கும் அளவு அறிவு சுரக்கும் என்கிறது திருக்குறள்.

3. கல்வியை எப்போதிருந்து போற்றுகின்றனர்?

கல்வியைப் போற்றுவதைப் புறநானூற்றுக் காலத்திலிருந்து தற்காலம் வரை தொடர்கின்றனர் தமிழர்.

4. எவ்வாறு சென்று அறிவு பெற வேண்டும்?

பூக்களை நாடிச் சென்று தேன் பருகும் வண்டுகளைப் போல, நூல்களை நாடிச் சென்று அறிவு பெற வேண்டும்.

5. 'ஆவிக்கு அருந்துணை' – விளக்கு

- 'ஆவி' என்றால் உயிர் என்று பொருள்.
- கல்வியானது உயிருக்கு அருந்துணையாக இருந்து இன்பம் சேர்க்கிறது. எனவே இதனை ஆவிக்கு அருந்துணை என்கிறார் செய்குதம்பிப் புலவர்.

6. சதாவதானம் என்றால் என்ன?

- 'சதம்' என்றால் நூறு என்று பொருள்.
- ஒருவரது புலமையையும் நினைவாற்றலையும் நுண் அறிவையும் சோதிப்பதற்காக ஒரே நேரத்தில் நிகழ்த்தப்படும் நூறு செயல்களையும் நினைவில் கொண்டு விடையளித்தலே சதாவதானம்.

7. செய்குதம்பிப் பாவலரைப் போற்றும் விதமாக அரசு செய்தது யாவை?

- செய்குதம்பிப் பாவலரின் நினைவைப் போற்றும் வகையில் இடலாக்குடியில் மணிமண்டபமும் பள்ளியும் உள்ளன.
- இவரது அனைத்து நூல்களும் நாட்டுடைமை ஆக்கப்பட்டுள்ளன.

8. நீதிவெண்பா உணர்த்தும் கல்வியின் சிறப்பு யாது?

அருளினைப் பெருக்கி, அறிவைச் சீராக்கி, மயக்கம் அகற்றி, அறிவுக்குத் தெளிவு தந்து, உயிருக்கு அரிய துணையாய் இன்பம் சேர்ப்பது கல்வியே ஆகும். எனவே அதைப் போற்றிக் கற்க வேண்டும்.

## சிறுவினா

**கூடுதல் வினா:**

1. செய்குதம்பிப் பாவலர் குறித்து எழுதுக.

- 'சதாவதானம்' என்னும் கலையில் சிறந்து விளங்கிய செய்குதம்பிப் பாவலர் (1874 – 1950) கன்னியாகுமரி மாவட்டம் இடலாக்குடி என்னும் ஊரைச் சேர்ந்தவர்;
- பதினைந்து வயதிலேயே செய்யுள் இயற்றும் திறன் பெற்றவர்; சீறாப்புராணத்திற்கு உரை எழுதியவர்.
- 1907 மார்ச் 10 ஆம் நாளில் சென்னை விக்டோரியா அரங்கத்தில் அறிஞர் பலர் முன்னிலையில் நூறு செயல்களை ஒரே நேரத்தில் செய்து காட்டி 'சதாவதானி' என்று பாராட்டுப் பெற்றார்.
- செய்குதம்பிப் பாவலரின் நினைவைப் போற்றும் வகையில் இடலாக்குடியில் மணிமண்டபமும் பள்ளியும் உள்ளன.
- இவரது அனைத்து நூல்களும் நாட்டுடமை ஆக்கப்பட்டுள்ளன.

## கற்பவை கற்றபின்

எதிர்காலத்தில் நீங்கள் பயில விரும்பும் கல்வி குறித்து வகுப்பறையில் கலந்துரையாடிக் குறிப்புரை உருவாக்குக.

''எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்'' என்கிறது வெற்றிவேற்கை. 'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்ற வரிசைப்படி பார்த்தால் எல்லாம் வல்ல இறைவனைக் காட்டும் தகுதி ஆசிரியனுக்கே உண்டு. அத்தகு சிறப்புடைய ஆசிரியப் பணியே நான் விரும்பும் பணியாகும்.

ஆசிரியர் பணியைச் செய்வதற்குத் தேவையான கல்வியைப் பயில விரும்புகிறேன். அதற்குத் தேவையான படிப்பாகிய, முதலில் பத்தாம் வகுப்பு, பதினொன்றாம் வகுப்பு, பன்னிரெண்டாம் வகுப்பு படிக்க வேண்டும். அந்தப் பள்ளிப் படிப்புகளை நன்றாகப் படித்து அதிக மதிப்பெண் பெறுவேன். அதனைத் தொடர்ந்து கல்லூரிக்குச் செல்வேன். கல்லூரியில் நான் படிக்க விரும்பும் துறை தமிழ்த்துறை. ஏனென்றால் எனக்குத் தமிழ் மீது பற்று உண்டு. ஆகவே பி.ஏ. தமிழ் மூன்றாண்டுகள் பயில்வேன். அந்த மூன்றாண்டுகளில் ஐந்து இலக்கணங்களையும் சங்க இலக்கியங்களையும் நன்றாகப் படித்துணர்வேன். உலகப் பொது மறையையும் கற்றுத் தெளிவேன். பிறகு எம்.ஏ. படிக்கவும் விருப்பம் உள்ளதால் எம்.ஏ. தமிழ் படிப்பேன். படிக்கும் காலத்தில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களையும், காப்பியங்களையும், சிற்றிலக்கியங்களையும் கற்பேன்.

பிறகு கல்வியியல் கல்லூரியில் இரண்டு ஆண்டுகள் கல்வியியல் பயிற்சியை முடித்ததும் நல்லதொரு ஆசிரியனாக எனது பணியைத் தொடர்வேன். அதுவும் தமிழாசிரியனாக.

ஆகவே எதிர்காலத்தில் நான் பயில விரும்பும் கல்வி எம்.ஏ., பி.எட்., ஆகும்.





இயல் - 5 செய்யுள்

கல்வி - மணற்கேணி

# 3. திருவிளையாடற் புராணம்

பரஞ்சோதி முனிவர்

காண்டம் படலம்:

## பாடல் :

இடைக்காடனார் மன்னனின் அவையில் கவிதை படித்தல்

*கழிந்த பெரும் கேள்வியினான் எனக் கேட்டு முழுது உணர்ந்த கபிலன் தன் பால்*
*பொழிந்த பெரும் காதல் மிகு கேண்மையினான் இடைக்காட்டுப் புலவன் தென் சொல்*
*மொழிந்து அரசன் தனைக் காண்டும் எனத் தொடுத்த பனுவலொடு மூரித் தீம் தேன்*
*வழிந்து ஒழுகு தாரானைக் கண்டு தொடுத்து உரைப்பனுவல் வாசித்தான் ஆல்.*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| கழிந்த பெரும் கேள்வியினான் | – | மிகுந்த கல்வியறிவு மிக்கவன் |
| எனக் கேட்டு | – | என்று கேள்விப்பட்டு |
| முழுது உணர்ந்த | – | முழுவதுமாக உணர்ந்த |
| கபிலன் தன் பால் | – | கபிலனின் மேல் |
| பொழிந்த பெரும் காதல் மிகு | – | மிகுந்த அன்பு கொண்ட |
| கேண்மையினான் | – | நட்பினையுடைய |
| இடைக்காட்டு புலவன் | – | இடைக்காடனார் என்ற புலவன் |
| தென் சொல் மொழிந்து | – | தேன் ஒழுகும் மொழியினில் |
| அரசன் தனைக் காண்டும் | – | பாண்டிய மன்னனைக் கண்டு |
| எனத் தொடுத்த பனுவலொடு | – | தான் இயற்றிய கவிதையோடு |
| மூரித் தீம் தேன் வழிந்து ஒழுகு தாரனைக் கண்டு | – | தேன் ஒழுகும் வேப்ப மாலையினை அணிந்த பாண்டியனைக் கண்டு |
| தொடுத்து உரைப்பனுவல் | – | தான் இயற்றிய கவிதையை |
| வாசித்தான் ஆல் | – | வாசித்தான். |

## பொருளுரை:

'குசேலபாண்டியன் என்னும் பாண்டிய மன்னன் மிகுந்த கல்வியறிவு மிக்கவன்' எனக் கற்றோர் கூறக் கேட்டார் இடைக்காடனார் என்னும் புலவர். கலைகளை முழுவதும் உணர்ந்த நண்பர் கபிலனின் மேல் அன்பு கொண்ட அப்புலவர், மிகவும் இனிய தேன் ஒழுகும் வேப்ப மாலையினை அணிந்த பாண்டியனின் அவைக்குச் சென்று தான் இயற்றிய கவிதையைப் படித்தார்.

## விளக்கவுரை:

புலவர்கள், தங்களின் வறுமையைப் போக்கவும். அரசர்கள் மத்தியில் நன்மதிப்பு பெறுவதற்காகவும் தாங்கள் இயற்றிய கவிதைகளை மன்னர் அவையில் வாசிப்பார்கள். இப்பாடலிலும் இடைக்காடனார் அவ்வாறே செய்கிறார்.

### பாடல் :

மன்னன் தன் புலமையை மதிக்காமை குறித்து இறைவனிடம் முறையிடல்

*சந்நிதியில் வீழ்ந்து எழுந்து தமிழ் அறியும் பெருமானே தன்னைச் சார்ந்தோர்*
*நல் நிதியே திரு ஆலவாய் உடைய நாயகனே நகுதார் வேம்பன்*
*பொன் நிதி போல் அளவு இறந்த கல்வியும் மிக்கு உளன் என்று புகலக் கேட்டுச்*
*சொல் நிறையும் கவி தொடுத்தேன் அவமதித்தான் சிறிது முடி துளக்கான் ஆகி.*

### சொற்பொருள்:

| | |
|---|---|
| சந்நிதியில் வீழ்ந்து எழுந்து | – இறைவன் திருமுன் விழுந்து வணங்கி எழுந்து |
| தமிழ் அறியும் பெருமானே | – தமிழின் இனிமையை அறிந்த பெருமானே |
| தன்னைச் சார்ந்தோர் | – தங்களைச் சார்ந்த புலவர்கள் |
| நல் நிதியே திரு ஆலவாய் உடைய நாயகனே | – அருட்செல்வங்களை வழங்கும் ஆலவாயில் வீற்றிருக்கும் தலைவரே |
| நகுதார் வேம்பன் | – அழகிய வேப்பம் மாலை அணிந்த |
| பொன் நிதி போல் அளவு இறந்த கல்வியும் | – செல்வங்களை அதிகம் கொண்டிருப்பவனாகிய அவன் கல்வியிலும் |
| மிக்கு உளன் என்று புகலக் கேட்டுச் | – சிறந்து விளங்குகிறான் என்று கேள்விப்பட்டு |
| சொல் நிறையும் கவி தொடுத்தேன் | – சொற்சுவை நிறைந்த கவிதையினைப் பாடினேன். |
| அவமதித்தான் சிறிது முடி துளக்கான் ஆகி | – பாடிய பாட்டிற்குச் சிறிது கூட தலைபசைக்காமல் என்னை அவமானப்படுத்தி விட்டான். |

### பொருளுரை :

இடைக்காடனார் இறைவன் திருமுன் விழுந்து வணங்கி எழுந்து, ''தமிழறியும் பெருமானே ! அடியார்க்கு நல்நிதி போன்றவனே ! திரு ஆலவாயிலில் உறையும் இறைவனே ! அழகிய வேப்பமலர் மாலையை அணிந்த பாண்டியன் பொருட் செல்வத்தோடு கல்விச் செல்வமும் மிக உடையவன் எனக் கூறக்கேட்டு, அவன் முன் சொற்சுவை நிரம்பிய கவிதை பாடினேன். அவனோ சிறிதேனும் சுவைத்துத் தலை அசைக்காமல் புலமையை அவமதித்தான் என்றார்.

### விளக்கவுரை:

புலவர்கள் எவ்வளவு தான் வறுமையில் வாடினாலும் தனக்கும் தன் கவிதைக்கும் ஓர் அவமானம் ஏற்டுகிறது என்றால், அந்த அவமானத்தை ஏற்படுத்தியது அரசனாக இருந்தாலும் கூட அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. உயிரை விடக்கூடத் துணிவார்களன்றி மானத்தை இழக்க மாட்டார்கள்.

### பாடல் :

*என்னை இகழ்ந்தனனோ சொல் வடிவாய் நின்இடம் பிரியா இமையப் பாவை*
*தன்னையும் சொல் பொருளான உன்னையுமே இகழ்ந்தனன் என் தனக்கு யாது என்னா*
*முன்னை மொழிந்து இடைக்காடன் தணியாத முனிவு ஈர்ப்ப முந்திச் சென்றான்*
*அன்ன உரை திருச்செவியின் ஊறுபாடு என உறைப்ப அருளின் மூர்த்தி.*

### சொற்பொருள்

| | |
|---|---|
| என்னை இகழ்ந்தனனோ | – அவன் என்னை மட்டும் அவமதிக்கவில்லை |
| சொல் வடிவாய் நின் இடம் | – சொல்லின் வடிவாய் உன் இடதுபுறம் |
| பிரியா இமையப் பாவை தன்னையும் | – பிரியாமல் இருக்கும் உமையவளையும் |
| சொல் பொருளான உன்னையுமே | – சொல்லின் பொருளாக விளங்கும் உன்னையும் |
| இகழ்ந்தனன் என் தனக்கு யாது | – இகழ்ந்தான் என தனக்கு எது |
| முன்னை மொழிந்து இடைக்காடன் | – இறைவன் முன் கூறி இடைக்காடன் |
| தணியாத முனிவு ஈர்ப்ப முந்திச் சென்றான் | – தணியாத கோபத்துடன் சன்னதியை விட்டு வெளியேறினான் |
| அன்ன உரை திருச்செவியின் | – அவனது புலம்பல் இறைவனது காதில் |
| ஊறுபாடு என உறைப்பு அருளின் மூர்த்தி | – வேற்படை ஈட்டி போல் தைத்தது. |

### பொருளுரை:

இடைக்காடனார் இறைவனிடம், ''பாண்டியன் என்னை இகழவில்லை, சொல்லின் வடிவாக உன் இடப்புறம் வீற்றிருக்கும் பார்வதி தேவியையும், சொல்லின் பொருளாக விளங்கும் உன்னையுமே அவமதித்தான்'' என்று சினத்துடன் கூறிச் சென்றார். அவரது சொல் வேற்படை போல் இறைவனின் திருச்செவியில் சென்று தைத்தது.

### விளக்கவுரை:

ஆதரவு அற்றவர்கள் இறுதியாக சரணடைவது இறைவனிடம் தான். வேறு யாரும் தங்கள் குரலுக்குச் செவி கொடுக்காமல் போனாலும் இறைவன் கட்டாயம் செவி கொடுப்பார் என்ற நம்பிக்கையில் இடைக்காடனாரின் புலம்பலும் இறைவனால் கேட்கப்படுகிறது.

### பாடல் :

இறைவன் கோவிலைவிட்டு நீங்குதல்

*போனஇடைக் காடனுக்கும் கபிலனுக்கும் அகத்துவகை பொலியுமாற்றான்*
*ஞானமய மாகியதன் இலிங்கவுரு மறைத்துஉமையாம் நங்கை யோடும்*
*வானவர்தம் பிரானெழுந்து புறம்போய்த்தன் கோவிலின்நேர் வடபால் வையை*
*ஆனநதித் தென்பாலோர் ஆலயங்கண்டு அங்கு இனிதின் அமர்ந்தான் மன்னோ.*

### சொற்பொருள்:

| | |
|---|---|
| போனஇடைக் காடனுக்கும் கபிலனுக்கும் | – ஆலயத்தை விட்டு வெளியே சென்ற இடைக்காடனாருக்கும் கபிலருக்கும் |
| அகத்துவகை பொலியுமாற்றான் | – உள்ளத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்த விரும்பினான் |
| ஞானமய மாகியதன் இலிங்கவுரு மறைத்து | – அறிவின் வடிவாகிய தன் இலிங்க வடிவத்தை மறைத்து |
| உமையாம் நங்கை யோடும் | – பார்வதி தேவியோடும் |
| வானவர்தம் பிரானெழுந்து | – தேவர்களுக்குத் தலைவனாகிய சிவன் எழுந்து |

| | | |
|---|---|---|
| புறம்போய்த்தன் கோவிலின் நேர் வடபால் | – | கோவிலை விட்டு வெளியேறிய இறைவன் நேர் வடக்கு திசையில் |
| வையை ஆனதித் தென்பாலோர் | – | வையை ஆற்றின் தென்பகுதியில் ஓர் |
| ஆலயங்கண்டு அங்கு இனிதின் அமர்ந்தான் மன்னோ | – | கோவிலைக் கண்டு அங்கு சென்று இனிமையாக அமர்ந்தார். |

**பொருளுரை:**

கோவிலை விட்டு வெளியேறிய இடைக்காடனாருக்கும் அவர் நண்பராகிய கபிலருக்கும் மனமகிழ்ச்சி உண்டாக்க நினைத்தார். இறைவன் ஞானமயமாகிய தம்முடைய இலிங்க வடிவத்தை மறைத்து உமா தேவியாரோடும் திருக்கோவிலை விட்டு வெளியேறி நேர் வடக்கே வையை ஆற்றின் தென் பக்கத்தே ஒரு திருக்கோவிலை ஆக்கி அங்கு சென்று இருந்தார்.

**விளக்கவுரை:**

இறைவனுடைய மாறாத அன்பை இவ்விடத்தில் காண முடிகின்றது. தான் துன்பப்பட்டாலும் பரவாயில்லை தன்னை நாடி வந்த இடைக்காடனாரும், கபிலரும் துன்பப் படக் கூடாது என்று எண்ணும் பரம்பொருளைக் காண முடிகின்றது.

**பாடல்:**

கோவிலை விட்டு நீங்கிய காரணம் அறியாது மன்னன் இறைவனை வேண்டுதல்

*அல்லதை என் தமரால் என் பகைஞரால் கள்வரால் அரிய கானத்து*
*எல்லை விலங்கு ஆதிகளால் இடையூறு இன் தமிழ் நாட்டில் எய்திற்றாலோ*
*தொல்லை மறையவர் ஒழுக்கம் குன்றினரோ தவம் தருமம் சுருங்கிற்றாலோ*
*இல்லறனும் துறவறனும் பிழைத்தனவோ யான் அறியேன் எந்தாய்! எந்தாய்!*

**சொற்பொருள்:**

| | | |
|---|---|---|
| அல்லதை என் தமரால் என் பகைஞரால் | – | என் படைகளால், என் பகைவர்களால் துன்பம் நேர்ந்ததோ |
| கள்வரால் அரிய கானத்து எல்லை விலங்கு | – | திருடர்களால் காட்டு மிருகங்களால் |
| ஆதிகளால் | – | நாட்டு மக்களால் |
| இடையூறு இன் தமிழ்நாட்டில் எய்திற்றாலோ தொல்லை | – | இத்தமிழ்நாட்டில் தங்களுக்கு இடையூறு ஏற்பட்டதோ |
| மறையவர் ஒழுக்கம் குன்றினரோ | – | அந்தணர்கள் ஒழுக்கத்தில் குறைந்தனரோ |
| தவம் தருமம் சுருங்கிற்றாலோ | – | தவமும் தருமமும் குறைந்ததாலோ |
| இல்லறனும் துறவனும் பிழைத்தனவோ | – | இல்லறத்தாரும் துறவறத்தாரும் தவறு செய்து விட்டனரோ |
| யான் அறியேன் எந்தாய்! எந்தாய்! | – | எனக்கு எதுவும் தெரியாது என் தந்தையே! |

**பொருளுரை:**

''இறைவனே, என்னால் என் படைகளால், என் பகைவரால், கள்வரால், காட்டில் உள்ள விலங்குகளால், இத்தமிழ்நாட்டில் தங்களுக்கு இடையூறு ஏற்பட்டதா? மறையவர் நல்ஒழுக்கத்தில் குறைந்தனரோ? தவமும் தருமமும் சுருங்கியதோ? இல்லறமும் துறவறமும் தத்தம் நெறியில் இருந்து தவறினவோ? எமது தந்தையே யான் அறியேன்'' என்று வேண்டினான் பாண்டியன்.

**விளக்கவுரை:**

புலவன் வருத்தப்பட்டான் என்பதற்காகக் கோவிலை விட்டு நீங்கிய இறைவன் தனக்கென்று ஒரு கோவிலை அமைத்தான். ஆனால் அங்கு இருந்தாலும் இறைவன் அரசனின் பிழையைச் சுட்டிக் காட்ட விரும்புகின்றார். அரசன் வருத்தப்பட்டு செய்த தவறு அறியாமல் தவிக்கிறான்.

**பாடல் :**

இறைவனின் பதில்

*ஓங்கு தண் பணைசூழ் நீப வனத்தை நீத்து ஒரு போதேனும்*
*நீங்குவம் அல்லேம் கண்டாய் ஆயினும் நீயும் வேறு*
*தீங்கு உளை அல்லை காடன் செய்யுளை இகழ்தலாலே*
*ஆங்கு அவன் இடத்தில் யாம் வைத்த அருளினால் வந்தேம் என்னா.*

**சொற்பொருள்:**

ஓங்கு தண் பணைசூழ் – சிறந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த
நீப வனத்தை நீத்து ஒரு போதேனும் – கடம்பவனத்தை விட்டு ஒரு பொழுதேனும்
நீங்குவம் அல்லேம் கண்டாய் – நீங்க மாட்டோம் காண்பாய்
ஆயினும் – இருப்பினும்
நீயும் வேறு தீங்கு உளை அல்லை – வேறு எந்த குற்றத்தையும் நான் உன்னிடத்தில் காணவில்லை
காடன் செய்யுளை இகழ்தலாலே ஆங்கு – இடைக்காடனின் கவிதையை இகழ்ந்ததாலேயே
அவன் இடத்தில் யாம் வைத்த அருளினால் வந்தேம் என்னா – அவனிடத்தில் நான் வைத்த அன்பினாலேயே வந்தேன் என்றார்.

**தெளிவுரை:**

இறைவன் மன்னனிடம் "சிறந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த கடம்பவனத்தை விட்டு ஒரு போதும் நீங்கமாட்டோம். இடைக்காடனார் பாடலை இகழ்ந்த குற்றம் தவிர வேறு குற்றம் உன்னிடம் இல்லை. இடைக்காடனார் மீது கொண்ட அன்பினால் இவ்வாறு இங்கு வந்தோம்" என்றார்.

**விளக்கவுரை:**

இறைவன் ஏழையின் மன்றாட்டுக்கும் அரசனின் மன்றாட்டிற்கும் செவி சாய்ப்பதன் மூலம் இறைவன் எல்லோருக்கும் சமமானவர் என்பதை இங்கு காண முடிகிறது.

**பாடல் :**

மன்னன் தன் பிழையைப் பொறுத்து அருளுமாறு இறைவனிடம் வேண்டுதல்

*பெண்ணினைப் பாகம் கொண்ட பெருந்தகைப் பரம யோகி*
*விண்ணிடை மொழிந்த மாற்றம் மீனவன் கேட்டு வானோர்*
*புண்ணிய சிறியோர் குற்றம் பொறுப்பது பெருமை அன்றோ*
*எண்ணிய பெரியோர்க்கு என்னா ஏத்தினான் இறைஞ்சி னானே.*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| பெண்ணினைப் பாகம் கொண்ட | – பார்வதியை இடப்புறத்தில் வைத்த |
| பெருந்தகைப் பரம யோகி | – மேலான பரம் பொருளே |
| விண்ணிடை மொழிந்த மாற்றம் | – வானிலிருந்து ஒலித்த குரலை |
| மீனவன் கேட்டு | – மீன் கொடியை உடைய பாண்டியன் கேட்டு |
| வானோர் புண்ணிய | – இறைவனே, புண்ணியனே |
| சிறியோர் குற்றம் பொறுப்பது பெருமை அன்றோ | – சிறியவர்களின் தவறைப் பொறுப்பது பெருமையல்லவா |
| எண்ணிய பெரியோர்க்கு | – சிறந்த பெரியோர்களுக்கு |
| என்னா ஏத்தினான் இறைஞ்சினானே | – பாண்டியன் வேண்டினான் |

## தெளிவுரை:

வானிலிருந்து ஒலித்த இறைவனின் சொற்கேட்டுப் பாண்டிய மன்னன், "உமையை ஒரு பாகத்திற் கொண்ட மேலான பரம்பொருளே, புண்ணியனே, சிறியவர்களின் குற்றம் பொறுப்பது பெரியவருக்குப் பெருமையல்லவா?" என்று தன் குற்றத்தைப் பொறுக்க வேண்டிப் போற்றினான்.

## விளக்கவுரை:

இறைவனின் குரலைக் கேட்டவுடன் பாண்டியன் தன் தவற்றை எண்ணி மனம் வருந்துகிறான். இறைவனின் மன்னிப்பையும் இறைஞ்சுகிறான். இறைவனும் மன்னிக்கின்றார். இறைவனின் கோபம் ஒரு நொடிப் பொழுதில் மாறிவிடும் என்பதை உணர முடிகிறது.

## பாடல்:

மன்னன், புலவருக்கு மரியாதை செய்தல்

*விதிமுறை கதலி பூகம் கவரிவால் விதானம் தீபம்*
*புதியதோர் நிறைநீர்க் கும்பங் கதலிகை புனைந்த மன்றல்*
*கதிர்மணி மாடத் தம்பொற் சேக்கைமேற் கற்றோர் சூழ*
*மதிபுனை காடன் தன்னை மங்கல அணிசெய் தேற்றி.*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| விதிமுறை கதலி பூகம் | – விதிப்படி வாழை பாக்கு |
| கவரிவால் விதானம் தீபம் | – (மாளிகையை அழகு செய்ய) சாமரம், அலங்காரத்துணி, விளக்கு |
| புதியதோர் நிறைநீர்க்கும்பங் | – நீரால் நிறைக்கப்பட்ட புதிய கும்பம் |
| கதலிகை புனைந்த மன்றல் | – வாழையைச் சுற்றிய அழகுக் கொடி |
| கதிர்மணி மாடத் | – ஒளி நிறைந்த மணிகளால் |
| தம்பொற் சேர்க்கை மேற் | – அலங்கரிக்கப்பட்ட மாளிகையில் தங்க இருக்கையில் |
| கற்றோர் சூழ | – புலவர்கள் சூழ |
| மதிபுனை காடன் தன்னை | – அறிவை அணிகலனாக அணிந்த காடனை |
| மங்கல அணிசெய் தேற்றி | – மங்கலமாக ஒப்பனை செய்து அமர்த்தினான் |

### தெளிவுரை:

மன்னனது மாளிகை, வாழையும் கமுகும் சாமரையும் வெண்ணிற மேல்விதானமும் விளக்கும் உடையது; அன்றலர்ந்த மலர்களால் தொடுத்த மாலை பூரண கும்பம் கொடி ஆகியவற்றால் ஒப்பனை செய்யப்பட்டது; போற்றத்தக்க ஒளியையுடைய மணிகள் பதிக்கப் பெற்றது. அங்குள்ள புலவர்கள் சூழ அறிவை அணிகலனாகப் பூண்ட இடைக்காடனாரை மங்கலமாக ஒப்பனை செய்து பொன் இருக்கையில் விதிப்படி அமர்த்தினான்.

### விளக்கவுரை:

மன்னனால், புலவரின் உள்ளம் எவ்வளவு துன்பப்பட்டதோ அதே அளவிற்கு இன்று இன்பத்தைக் காண்கிறார். வாழ்க்கையில் இன்பம் உண்டென்றால் துன்பமும் உண்டு. துன்பம் உண்டென்றால் இன்பமும் உண்டு என்பதை இந்நிகழ்வு எடுத்துக்காட்டுகிறது.

### பாடல் :

மன்னன், புலவரிடம் மன்னிப்பை வேண்டுதல்

*புண்ணியப் புலவீர் யான் இப்போழ்து இடைக் காடனார்க்குப்*
*பண்ணிய குற்றம் எல்லாம் பொறுக்க எனப் பரவித் தாழ்ந்தான்*
*நுண்ணிய கேள்வி யோரும் மன்னநீ நுவன்ற சொல்லாம்*
*தண்ணிய அமுதால் எங்கள் கோபத்தீத் தணிந்தது என்னா.*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| புண்ணியப் புலவீர் | – | புண்ணிய வடிவான புலவர்கள் |
| யான் இப்போழ்து | – | நான் இப்பொழுது |
| இடைக் காடனார்க்குப் பண்ணிய குற்றம் எல்லாம் | – | இடைக்காடனாருக்குச் செய்த குற்றத்தையெல்லாம் |
| பொறுக்க எனப் பரவித் தாழ்ந்தான் | – | பொறுத்துக் கொள்க என பணிந்து வணங்கினான் |
| நுண்ணிய கேள்வி யோரும் | – | நுட்பமான கேள்வியறிவுடைய புலவர்களும் |
| மன்னநீ நுவன்ற சொல்லாம் | – | மன்னா நீ கூறிய சொல்லால் |
| தண்ணிய அமுதால் | – | குளிர்ந்த அமுதால் |
| எங்கள் கோபத்தீத் தணிந்தது என்னா | – | எங்களுடைய சினமான தீ தணிந்தது என்றனர் |

### தெளிவுரை:

பாண்டியன், "புண்ணிய வடிவான புலவர்களே, நான் இடைக்காடனாருக்குச் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று பணிந்து வணங்கினான். நுண்ணிய கேள்வியறிவுடைய புலவர்களும், "மன்னா, நீ கூறிய அமுதம் போன்ற குளிர்ந்த சொல்லால் எங்கள் சினமான தீ தணிந்தது" என்றனர்.

### விளக்கவுரை:

நாடாளும் மன்னனாக இருந்தாலும் தவறு செய்தால் ஏடாளும் புலவர்களிடம் பணிந்து தான் போக வேண்டும். அரசன் தான் என்ற நிலையை விட்டு இறங்கி வரும் போது எல்லார் மனதிலும் இடம் பிடிக்கிறான். தனது தவறை உணர்ந்ததால் புலவர்களும் அவனை மன்னிக்கின்றனர்.

## ஆசிரியர் குறிப்பு:

- பரஞ்சோதி முனிவர் நாகை மாவட்டத்திலுள்ள திருமறைக்காடு (வேதாரண்யம்) என்னும் ஊரில் பிறந்தவர்.
- தமிழிலும், வடமொழியிலும் புலமைப் பெற்றவர். இவரின் தந்தையார் மீனாட்சிசுந்தர தேசிகர் ஆவார்.
- பரஞ்சோதி முனிவர் துறவியாகிச் சிவாலயங்கள் தோறும் சென்று இறைவனை வழிபட்டு வந்தார். அவ்வாறு மதுரை நகரினை அடைந்து மீனாட்சி அம்மனையும், சோமசுந்தரக் கடவுளையும் வணங்கியவர், அந்நகரிலேயே சில காலம் தங்கியிருந்தார். அந்நகரத்தார் அவரைக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, திருவிளையாடற் புராணத்தை இயற்றினார்.
- அந்நூலைச் சிவபெருமான் திருக்கோவிலின் எதிரே உள்ள அறுகால் பீடத்தில் இருந்து வடமொழி, தென்மொழிப்புலவர் யாவரும் போற்ற அரங்கேற்றினார்.
- இவர், திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரை பதிற்றுப்பத்தந்தாதி, வேதாரண்யப் புராணம் முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

## நூற் குறிப்பு:

- திருவிளையாடற் கதைகள் சிலப்பதிகாரம் முதற்கொண்டு கூறப்பட்டு வந்தாலும் பரஞ் சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணமே விரிவும் சிறப்பும் கொண்டது.
- திருவிளையாடற்புராணம், மதுரைக்காண்டம் (18 படலம்) கூடற்காண்டம் (30 படலம்), திருவாலவாய்க் காண்டம் (16 படலம்) என்னும் முப்பெரும் பகுதிகளையும் படலம் என்னும் அறுபத்து நான்கு உட்பிரிவுகளையும் உடையது. இதில் 3363 விருத்தப்பாக்கள் உள்ளன.
- மதுரையில் இறைவன் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களை இப்படலங்கள் விளக்குகின்றன.
- இந்நூல், இறைவனின் திருவிளையாடல்களை விளக்கி எழுந்த நூல்களுள் விரிவானதும் சிறப்பானதும் ஆகும்.
- தொடைநயமும் பக்திச் சுவையும் மிக்க இந்நூலுக்கு ந.மு. வேங்கடசாமி உரையெழுதியுள்ளார்.

## மதிப்பீடு

**பொருள் தருக :**

1. கேள்வியினான் – நூல் வல்லான்
2. கேண்மையினான் – நட்பினன்
3. தார் – மாலை
4. முடி – தலை
5. முனிவு – சினம்
6. அகத்து உவகை – மனமகிழ்ச்சி
7. தமர் – உறவினர்
8. நீபவனம் – கடம்பவனம்
9. மீனவன் – பாண்டிய மன்னன்
10. கவுரி – சாமரை (கவரிமாவின் முடியில் செய்த விசிறியாகிய அரசச் சின்னம்)
11. நுவன்ற – சொல்லிய
12. என்னா – அசைச்சொல்

### இலக்கணக் குறிப்பு:

1. கேள்வியினான் – வினைபாலணையும் பெயர்
2. காடனுக்கும் கபிலனுக்கும் – எண்ணும்மை
3. உணர்ந்த கபிலன் – பெயரெச்சம்
4. தொடுத்த பனுவல் – பெயரெச்சம்
5. மொழிந்து, வழிந்து – வினையெச்சங்கள்
6. ஒழுகுதாரானை – வினைபாலணையும் பெயர்
7. தொடுத்து – வினையெச்சம்
8. கழிந்த, மொழிந்த – பெயரெச்சங்கள்
9. வீழ்ந்து, எழுந்து – வினையெச்சங்கள்
10. பிரியா இமையப் பாவை – ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம்
11. ஊறுபாடு – வினைத்தொகை
12. இல்லறனும் துறவறனும் – எண்ணும்மை
13. எந்தாய் – எம் தந்தாய் என்பதன் மரூஉ
14. இகழ்தல் – தொழிற்பெயர்
15. பெருந்தகை – பண்புத்தொகை
16. புனைந்தமன்றல் – பெயரெச்சம்
17. கோபத்தீ – உருவகம்
18. நுவன்ற சொல் – பெயரெச்சம்
19. பண்ணிய குற்றம் – பெயரெச்சம்
20. புண்ணியப் புலவீர் – வியங்கோள் வினைமுற்று

### பகுபத உறுப்பிலக்கணம்:

#### பாடநூல் வினா:

1. தணிந்தது – தணி + த்(ந்) + த் + அ + து PTA

தணி – பகுதி
த் – த் சந்தி ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – சாரியை
து – படர்க்கை வினைமுற்று விகுதி

#### கூடுதல் வினாக்கள்:\

2. பொழிந்த = பொழி + த்(ந்) + த் + அ

பொழி – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

3. கழிந்த = கழி + த்(ந்) + த் + அ
கழி – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்த கால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

4. மொழிந்த = மொழி + த்(ந்) + த் + அ
மொழி – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

5. உணர்ந்த = உணர் + த்(ந்) + த் + அ
உணர் – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

6. தொடுத்தேன் = தொடு + த் + த் + ஏன்
தொடு – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

7. வந்தேம் = வா(வ) + த்(ந்) + த் + ஏம்
வா என்பது வ என்று குறுகியது
வா – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஏம் – தன்மை பன்மை வினைமுற்று விகுதி

8. ஏத்தினான் = ஏத்து + இன் + ஆன்
ஏத்து – பகுதி
இன் – இறந்தகால இடைநிலை
ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

9. தாழ்ந்தான் = தாழ் + த்(ந்) + த் + ஆன்
தாழ் – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

10. மொழிந்து = மொழி + த்(ந்) + த் + உ
மொழி – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

11. வாசித்தான் = வாசி + த் + த் + ஆன்

வாசி – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

12. வீழ்ந்து = வீழ் + த்(ந்) + த் + உ

வீழ் – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

13. எழுந்து = எழு + த்(ந்) + த் + உ

எழு – பகுதி
த் – சந்தி, த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

14. மறைத்து = மறை + த் + த் + உ

மறை – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. இடைக்காடனாரின் பாடலை இகழ்ந்தவர் __________ இடைக்காடனாரிடம் அன்பு வைத்தவர் __________.

அ) அமைச்சர், மன்னன் ஆ) அமைச்சர், இறைவன்
இ) இறைவன், மன்னன் ஈ) மன்னன், இறைவன்

விடை : ஈ) மன்னன், இறைவன்

### கூடுதல் வினாக்கள்:

2. திருவிளையாடற்புராணத்தை இயற்றியவர் __________.

அ) தாயுமானவர் ஆ) மாணிக்கவாசகர்
இ) பரஞ்சோதி முனிவர் ஈ) திருநாவுக்கரசர்

விடை : இ) பரஞ்சோதி முனிவர்

3. திருவிளையாடற்புராணம் __________ காண்டங்களை உடையது.

அ) மூன்று ஆ) நான்கு
இ) ஆறு ஈ) பத்து

விடை : அ) மூன்று

4. திருவிளையாடற்புராணம் __________ படலங்களை உடையது.

அ) 54 ආ) 64
இ) 72 ஈ) 74

விடை : ஆ) 64

5. முரசுக் கட்டிலில் கண்ணயர்ந்தவர் __________.

அ) இடைக்காடனார் ஆ) கபிலர்
இ) ஒட்டக்கூத்தர் ஈ) மோசிகீரனார் விடை : ஈ) மோசிகீரனார்

6. மோசிகீரனார்க்கு கவரி வீசிய மன்னன் __________.

அ) குலோத்துங்கன்
ஆ) செங்குட்டுவன்
இ) தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை
ஈ) ராஜராஜன்

விடை : இ) தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

7. வேதாரண்யப் புராணத்தை இயற்றியவர் __________ .

அ) இடைக்காடனார் ஆ) பரஞ்சோதி முனிவர்
இ) கபிலர் ஈ) பரணர் விடை :ஆ) பரஞ்சோதி முனிவர்

8. மதுரை பதிற்றுப்பத்தந்தாதியை இயற்றியவர் __________ .

அ) பரஞ்சோதி முனிவர் ஆ) கல்லாடனார்
இ) இடைக்காடனார் ஈ) கபிலர் விடை : அ) பரஞ்சோதி முனிவர்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. "கழிந்த பெரும் கேள்வியினான் எனக் கேட்டு முழுது உணர்ந்த கபிலன் தன் பால் பொழிந்த பெரும் காதல்மிகு கேண்மையினான் இடைக்காட்டுப் புலவன் தென்சொல்" – இவ்வடிகளில் கழிந்த பெரும் கேள்வியினான் யார்? காதல்மிகு கேண்மையினான் யார்? PTA

- கழிந்த பெரும் கேள்வியினான் குசேலபாண்டியன்.
- காதல் மிகு கேண்மையினான் இடைக்காடனார்.

2. 'அமர்ந்தான்' – பகுபத உறுப்பிலக்கணம் தருக.

அமர்ந்தான் = அமர் + த்(ந்) + த் + ஆன்

| | | |
|---|---|---|
| அமர் | – | பகுதி |
| த் | – | சந்தி |
| த் | – | த் சந்தி ந் ஆனது விகாரம் |
| த் | – | இறந்தகால இடைநிலை |
| ஆன் | – | ஆண்பால் வினைமுற்றுவிகுதி |

### கூடுதல் வினா:

3. பண்டைய காலத்தில் புலவர்களுக்குக் கிடைக்கும் சிறப்புகள் யாவை?

- கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்புச் செய்வது தமிழ் கூறும் நல்லுலகம்.
- அரசரும் புலவருக்குக் கவரி வீசுவர்;
- கண்ணுக்கு எட்டிய திசை வரை தெரியும் நிலங்களைப் புலவருக்குக் கொடை கொடுத்து மகிழ்வர்;
- இறைவனும் அறிவிற் சிறந்த புலவருக்காகத் தூது சென்றான்.

4. குசேலபாண்டியன் செய்த தவறு யாது?

கபிலரின் நண்பரான இடைக்காடனார் என்னும் புலவர், தாம் இயற்றிய கவிதையினை குசேல பாண்டியன் முன்பு பாட, அதைப் பொருட்படுத்தாமல் குசேலபாண்டியன் புலவரை அவமதித்தான்.

5. இறைவன் எதற்கு கடம்பவனக் கோவிலை விட்டு நீங்கினார்?

குசேல பாண்டியனால் அவமதிக்கப்பட்ட இடைக்காடனார், மனம் வருந்தி இறைவனிடம் முறையிட்டார். மன்னனின் பிழையை உணர்த்துவதற்காக இறைவன் கடம்பவனக் கோவிலை விட்டு நீங்கி, வடதிரு ஆலவாயில் சென்று தங்கினார்.

6. இறைவன் கடம்பவனக் கோவிலுக்கு மீண்டும் ஏன் திரும்பினார்?

குசேல பாண்டியன், தன் பிழையைப் பொறுத்தருளுமாறு இறைவனை வேண்டி, இடைக்காடனாருக்குச் சிறப்புச் செய்தான். அதனால் இறைவன் மீண்டும் கடம்பவனக் கோவிலுக்குத் திரும்பினார்.

7. மன்னனது மாளிகையின் தோற்றம் குறித்து எழுதுக.

- குசேல பாண்டிய மன்னனது மாளிகை, வாழையும் கமுகும் சாமரையும் வெண்ணிற மேல்விதானமும் விளக்கும் உடையது;
- அன்றலர்ந்த மலர்களால் தொடுத்த மாலை பூரண கும்பம் கொடி ஆகியவற்றால் ஒப்பனை செய்யப்பட்டது;
- போற்றத்தக்க ஒளியுடைய மணிகள் பதிக்கப் பெற்றது.

8. மன்னன் இடைக்காடனாருக்குச் செய்த சிறப்பு யாது?

மன்னன் மாளிகையில், அங்குள்ள புலவர்கள் சூழ அறிவை அணிகலனாகப் பூண்ட இடைக்காடனாரை மங்கலமாக ஒப்பனை செய்து வான் இருக்கையில் விதிப்படி அமர்த்தினான்.

9. திருவிளையாடற்புராணம் எத்தனை காண்டங்களை உடையது? அவை யாவை?

திருவிளையாடற்புராணம் மூன்று காண்டங்களையும் 64 படலங்களையும் உடையது. அவை

1. மதுரைக்காண்டம் (18 படலம்)
2. கூடற்காண்டம் (30 படலம்)
3. திருவாலவாய்க்காண்டம் (16 படலம்)

10. பரஞ்சோதி முனிவர் இயற்றிய நூல்கள் யாவை?

திருவிளையாடற்புராணம், வேதாரண்யப் புராணம், திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா, மதுரை பதிற்றுப்பத்தந்தாதி முதலிய பரஞ்சோதி முனிவர் இயற்றிய நூல்களாகும்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. மன்னன் இடைக்காடனார் என்ற புலவனுக்குச் சிறப்பு செய்தது ஏன்? விளக்கம் தருக. PTA

பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த குசேல பாண்டியன் என்னும் மன்னன் தமிழ்ப் புலமையில் சிறந்து விளங்கினான். கபிலரின் நண்பரான இடைக்காடனார் என்னும் புலவர், தாம் இயற்றிய கவிதையினை மன்னன் முன்பு பாட, அதைப் பொருட்படுத்தாமல் மன்னன் புலவரை அவமதித்தான். மனம் வருந்திய இடைக்காடனார், இறைவனிடம் முறை யிட்டார். மன்னனின் பிழையை உணர்த்துவதற்காக இறைவன் கடம்பவனக் கோவிலை விட்டு நீங்கி, வடதிரு ஆலவாயில் சென்று தங்கினார். இதை அறிந்த மன்னன் தன் பிழையைப் பொறுத்தருளுமாறு இறைவனை வேண்டி, இடைக்காடனாருக்குச் சிறப்புச் செய்தான்.

## கூடுதல் வினாக்கள்:

2. இறைவன் கோவிலை விட்டு எதற்காக நீங்கினார்? எவ்வாறு நீங்கினார்?

- இடைக்காடனார், மன்னன் தன்னை அவமதித்ததை இறைவனின் கோவிலில் இறைவனிடம், சினத்துடன் கூறிச் சென்றார்.
- இடைக்காடனார் சொல் வேற்படை போல் இறைவனின் திருச்செவியில் சென்று தைத்தது. கோவிலை விட்டு வெளியேறிய இடைக்காடனாருக்கும் அவர் நண்பராகிய கபிலருக்கும் மனமகிழ்ச்சியை உண்டாக்க நினைத்தார். அதற்காக கோவிலை விட்டு நீங்கினார்.
- இறைவன் ஞானமாகிய தம்முடைய இலிங்க வடிவத்தை மறைத்து உமாதேவியாரோடும் திருக்கோவிலை விட்டு வெளியேறி நேர் வடக்கே வையை ஆற்றின் தென் பக்கத்தே ஒரு திருக்கோவிலை ஆக்கி அங்கு சென்று இருந்தார்.

3. பரஞ்சோதி முனிவர் குறிப்பு வரைக.

- பெயர் : பரஞ்சோதி முனிவர்
- ஊர் : நாகை மாவட்டம் திருமறைக்காடு (வேதாரண்யம்)
- புலமை : தமிழ், வடமொழி
- தந்தை : மீனாட்சிசுந்தர தேசிகர்
- பணி : சிவாலயங்கள் தோறும் சென்று வழிபடுதல்
- நூல்கள் : வேதாரண்யப் புராணம், திருவிளையாடற்புராணம், திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரை பதிற்றுப்பத்தந்தாதி.
- காலம் : 17 – ஆம் நூற்றாண்டு

4. சொல்லேருழவனுக்குக் கவரி வீசிய வில்லேருழவன் நிகழ்வை நயத்துடன் எழுதுக.

- ஏடாளும் புலவரொருவர் நாடாளும் மன்னரைக் காண அரண்மனை சென்றார். களைப்பு மிகுதியால் முரசுக் கட்டிலில் கண்ணயர்ந்தார்.
- அரச குற்றமான அச்செயலைச் செய்த புலவருக்குத் தண்டனை வழங்காமல் கவரி வீசினார் மன்னர்.
- உறங்கிய புலவர் மோசிகீரனார். கவரி வீசிய மன்னர் தகடூர் எறித்த பெருஞ்சேரல் இரும்பொறை.
- கண் விழித்த புலவர் மன்னரின் செயலைக் கண்டு வியந்து பா மழை பொழிந்தார்.

5. இடைக்காடனார் இறைவனிடம் எவ்வாறு முறையிட்டார் என்பதை விளக்குக.

இடைக்காடனார் இறைவன் திருமுன் விழுந்து வணங்கி எழுந்து, “தமிழறியும் பெருமானே! அடியார்க்கு நல்நிதி போன்றவனே! திருஆலவாயிலில் உறையும் இறைவனே! அழகிய வேப்பமலர் மாலையை அணிந்த பாண்டியன், பொருட்செல்வத்தோடு கல்விச் செல்வமும் மிக உடையவன் என்று கூறக் கேட்டு, அவன் முன் சொற்சுவை நிரம்பிய கவிதை பாடினேன். மன்னன் சிறிதேனும் சுவைத்துத் தலை அசைக்காமல் புலமையை அவமதித்தான்” என்றார்.

மேலும் இடைக்காடனார் இறைவனிடம், “பாண்டியன் என்னை இகழவில்லை, சொல்லின் வடிவமாக உன் இடப்புறம் வீற்றிருக்கும் பார்வதி தேவியையும், சொல்லின் பொருளாக விளங்கும் உன்னையுமே அவமதித்தான்” என்று கூறி இறைவனிடம் இடைக்காடனார் முறையிட்டார்.

6. இடஞ்சுட்டி விளக்கம் தருக.

“புண்ணிய புலவீர்யான் இப்போழ்து இடைக்காடனார்க்குப்
பண்ணிய குற்றம் எல்லாம் பொறுக எனப் பரவித் தாழ்ந்தாள்”

இடம்:

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தின் திரு ஆலவாய்க் காண்டப் பகுதியில் இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலத்தில், பாண்டிய மன்னன் குசேல பாண்டியன், இறைவனிடம் கூறிய சொற்கள் இவை.

விளக்கம்:

பாண்டிய மன்னன் குசேலபாண்டியனது அரசவையில் உள்ள புலவர்கள் சூழ அறிவை அணிகலனாகப் பூண்ட இடைக்காடனாரை மங்கலமாக ஒப்பனை செய்து பொன் இருக்கையில் விதிப்படி அமர்த்தி ''புண்ணிய வடிவான புலவர்களே, நான் இடைக்காடனாருக்குச் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று பணிந்து வணங்கிக் கூறினான் பாண்டியன்.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. இறைவன், புலவர் இடைக்காடன் குரலுக்குச் செவிசாய்த்த நிகழ்வை நயத்துடன் எழுதுக. PTA

மதுரையை ஆண்ட குசேல பாண்டியன் பொருட்செல்வமும் கல்விச் செல்வமும் மிக்கவன். இதைக் கேள்விப்பட்டார் இடைக்காடனார் என்னும் சொல்லேரு வித்தகன். அவர், கபிலருக்குக் கட்டித் தழுவும் நட்பினன். அதனால் சொல்லேருழவன் சென்றான் வில்லேருழவன் அவைக்கு; புரட்டினான் ஏட்டை பாடினான் பாட்டை; கேட்டும் எந்தவித சலனமும் இல்லாதவன் போல் மன்னன் காட்டினான் சேட்டை. அதனால் புலவன் நெஞ்சினில் விழுந்தது ஓட்டை; அதன்பின், புலவர் சென்று சேர்ந்தார் இறைவனின் வீட்டை; தனக்கு நடந்த அவமானத்தை இறைவனிடம் முறையிட்டார்.

இறைவனே! மன்னன் அவமதித்தது என் பாட்டையும் என்னையும் மட்டுமல்ல, உன்னையும் உன் மனைவியையும் தான் என முறையிட்டு சினத்துடன் கூறி, பிறகு வேகமாகச் சென்றடைந்தார் தன் வீட்டை; புலவனின் சொல் வேற்படைபோல் இறைவனின் திருச்செவியில் சென்று போட்டது ஒரு ஓட்டை; கோபத்துடன் சென்ற இடைக்காடனாருக்கும் கபிலருக்கும் மனமகிழ்ச்சியை உண்டாக்க இறைவன் போட்டார் ஒரு திட்டம்; அதனால் பாண்டியனுக்குத் கிடைத்தது பெரிய மட்டம்; இறைவன், கடம்பவனத்தை விட்டு, திருஆலவாயில் சென்று தங்க போட்டார் பெரிய திட்டம்; மன்னன் தன் பிழையை உணர்ந்தான் இறைவனிடம் மன்றாடினான்.

தான் செய்தது தவறு தான், "உமையை ஒரு பாகத்திற்கொண்ட மேலான பரம்பொருளே, புண்ணியனே, சிறியவர்களின் குற்றம் பொறுப்பது பெரியவருக்குப் பெருமையல்லவா" என்று தன் குற்றத்தைப் பொறுக்க வேண்டிப் போற்றினான். அதனால் இறைவன் மனதில் கிடைத்தது மகிழ்ச்சி; ஆனால், இறைவன் மன்னனுக்குக் கொடுத்தான் நல்ல பயிற்சி. பிறகு மன்னன் கூட்டினான் அவையை; அச்சேவையைக் கண்டதும் இறங்கியது இறைவன் மனம்; அதனால் இறைவன் சென்றார் கடம்பவனம்.

### கூடுதல் வினா:

2. இறைவனுக்கும் பாண்டியனுக்கும் நடந்த உரையாடலை எழுதுக.

பாண்டியன் : இறைவனே, என்னால், என் படைகளால், என் பகைவரால், கள்வரால், காட்டில் உள்ள விலங்குகளால் இத்தமிழ்நாட்டில் தங்களுக்கு இடையூறு ஏற்பட்டதா? மறையவர் நல்ஒழுக்கத்தில் குறைந்தனரோ? தவமும் தருமமும் சுருங்கியதோ? இல்லறமும் துறவறமும் தத்தம் நெறியில் இருந்து தவறினவோ? எமது தந்தையே யான் அறியேன்.

இறைவன் : சிறந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த கடம்பவனத்தை விட்டு ஒரு போதும் நீங்க மாட்டோம். இடைக்காடனார் பாடலை இகழ்ந்த குற்றம் தவிர வேறு குற்றம் உன்னிடம் இல்லை. இடைக்காடனார் மீது கொண்ட அன்பினால் இவ்வாறு இங்கு வந்தோம்.

பாண்டியன் : உமையம்மையை ஒரு பாகத்திற்கொண்ட மேலான பரம்பொருளே, புண்ணியனே, சிறியவர்களின் குற்றம் பொறுப்பது பெரியவருக்குப் பெருமையல்லவா.

## கற்பவை கற்றபின்

இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலத்தை நாடகமாக்கி வகுப்பில் நடித்துக் காட்டுக.

### காட்சி – 1

இடம் : குசேலபாண்டியன் அவை
பங்கேற்போர் : மன்னன், காவலன், இடைக்காடனார்.

காவலன் : பொதிய மலைக்குத் தலைவனே வாழ்க!
கொற்கை துறைமுகத்தின் தலைவனே வாழ்க!
மீன்கொடிக்குத் தலைவனே வாழ்க!
வேப்பம் பூவின் உரிமையாளனே வாழ்க!
தங்களைக் காண இடைக்காடன் என்ற புலவன் வந்துள்ளார் மன்னா!

மன்னன் : அப்படியா! வரச் சொல்.
(புலவர் அவைக்குள் நுழைதல்)

புலவர் : ஆன்றோர்களையும் சான்றோர்களையும் கொண்டு விளங்கும் பாண்டிய நாட்டின் தலைவனே நீர் வாழ்க!
என்னுடைய வாழ்த்தையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மன்னன் : தாங்கள் வந்ததன் நோக்கம் என்னவோ?

புலவர் : மன்னா! நான் இயற்றிய கவிதை ஒன்றை தங்கள் முன் பாடிக் காட்ட வந்துள்ளேன்.

மன்னன் : அப்படியா! சரி ஆகட்டும்.
(புலவர் கவிதையைப் பாடுகிறார்)

புலவர் : மன்னா! ஆவலுடன் நான் இயற்றிய கவிதையை உன்முன் பாடிக் காட்ட வந்தேன். பாடியும் காட்டினேன். ஆனால், நீயோ என் பாட்டுக்குச் செவி சாய்க்கவில்லை. ரசிக்கவும் இல்லை. என் பாட்டிற்குத் தலையைக் கூட அசைக்கவில்லை. அதனால் நீ என் கவிதையையும் என்னையும் அவமதித்து விட்டாய். ஆகவே, நான் இச்சபையை விட்டு மிகுந்த வருத்தத்துடன் செல்கிறேன்.
(புலவர் மிகுந்த வருத்தத்துடன் அவையை விட்டு நீங்குதல்)

### காட்சி – 2

இடம் : கடம்பவனக் கோவில்
பங்கேற்போர் : இறைவன், புலவர்.
(புலவர் கோவிலில் நுழைந்து இறைவனை வீழ்ந்து வணங்குதல்)

புலவர் : தமிழறியும் பெருமானே! அடியார்க்கு நல்நீதி போன்றவனே! திருஆலவாயிலில் உறையும் இறைவனே! அழகிய வேப்பமலர் மாலையை அணிந்த பாண்டியன், பொருட்செல்வத்தோடு கல்விச் செல்வமும் மிக உடையவன் எனக் கூறக்கேட்டு, அவன் முன் சொற்சுவை நிரம்பிய கவிதை பாடினேன். அவனோ சிறிதேனும் சுவைத்துத் தலை அசைக்காமல் புலமையை அவமதித்தான். பாண்டியன் என்னை இகழவில்லை. சொல்லின் வடிவாக உன் இடப்புறம் வீற்றிருக்கும் பார்வதி தேவியையும், சொல்லின் பொருளாக விளங்கும் உன்னையுமே அவமதித்தான்.
(சினத்துடன் கூறி கோவிலை விட்டு நீங்கினார்)

இறைவன் : காடனது இந்தப் புலம்பல் சொல் என் திருச்செவியில் வேற்படைபோல் தைத்தது. ஆகவே, இடைக்காடனாருக்கும் அவர் நண்பனாகிய கபிலனுக்கும் மனமகிழ்ச்சியை உருவாக்கவும், ஞானவடிவமாகிய எனது இலிங்கத்தை மறைத்து உமாதேவியாரோடு இக்கோவிலை விட்டு நீங்குவோம்.

(இறைவன் கோவிலை விட்டு நீங்குதல்)

## காட்சி – 3

இடம் : திருக்கோவில்

பங்கேற்போர் : இறைவன், மன்னன்.

**(இறைவன் திருக்கோவிலை விட்டு நீங்கிய செய்தியினை அறிந்த மன்னன், தற்போது இறைவன் குடி கொண்டிருக்கும் கோவிலுக்குள் சென்று முறையிடல்)**

மன்னன் : இறைவனே ! என்னால், என்படைகளால், என் பகைவரால், கள்வரால், காட்டில் உள்ள விலங்குகளால் இத்தமிழ்நாட்டில் தங்களுக்கு இடையூறு ஏற்பட்டதா? மறையவர் நல்ஒழுக்கத்தில் குறைந்தனரோ? தவமும் தருமமும் சுருங்கியதோ? இல்லறமும் துறவறமும் தத்தம் நெறியில் இருந்து தவறினவோ? எமது தந்தாய் யான் அறியேன்.

இறைவன் : சிறந்த குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த கடம்பவனத்தை விட்டு ஒரு போதும் நீங்க மாட்டோம். இடைக்காடனார் பாடலை இகழ்ந்த குற்றம் தவிர வேறு குற்றம் உன்னிடம் இல்லை. இடைக்காடனார் மீது கொண்ட அன்பினால் இவ்வாறு இங்கு வந்தோம்.

மன்னன் : உமையை ஒரு பாகத்திற்கொண்ட மேலான பரம்பொருளே, புண்ணியனே, சிறியவர்களின் குற்றம் பொறுப்பது பெரியவருக்குப் பெருமையல்லவா? என் குற்றத்தையும் பொறுத்தருள்க. நான், இடைக்காடனாருக்கு உரியன செய்கிறேன். மீண்டும் கோவிலுக்குத் திரும்பி வாருங்கள்.

(இறைவன் திரும்பி வருவதற்கு இசைதல்)

## காட்சி – 4

இடம் : பாண்டியன் அவை

பங்கேற்போர் : மன்னன், புலவர்கள்.

(மன்னன் கல்லாடனாரை உரிய மரியாதைகளுடன் பொன் இருக்கையில் அமரச் செய்து பின் கூறியது)

மன்னன் : புண்ணிய வடிவான புலவர்களே, நான் இடைக்காடனாருக்குச் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

புலவர்கள் : மன்னா, நீ கூறிய அமுதம் போன்ற குளிர்ந்த சொல்லால் எங்கள் சினமான தீ தணிந்தது.

(இத்துடன் இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம் இனிதே முடிவுற்றது)





இயல் - 5

விரிவானம்

கல்வி – மணற்கேணி

# 4. புதிய நம்பிக்கை

கமலாலயன்

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. உங்களுடன் பயிலும் மாணவர் ஒருவர் பள்ளிப் படிப்பைப் பாதியில் நிறுத்தி வேலைக்குச் செல்ல விரும்புகிறார். அவரிடம் கற்பதன் இன்றியமையாமையை எவ்வகையில் எடுத்துரைப்பீர்கள்? PTA

'இளமையில் கல்வி சிலையில் எழுத்து' என்றார் ஔவையார். அதனால் தான் 'இளமையில் கல்' என்று கட்டளை இடுகின்றார். ஒரு மனிதன் தனக்கு வேண்டிய பிற எல்லாவற்றையும் தன் வாழ்நாளின் எப்பகுதியிலும் பெறலாம். ஆனால், கல்வியை இளமையில் தான் பெற முடியும்.

ஒரு மனிதனின் இளமைப் பருவம் இனிமைப் பருவம். வரவுகள் இன்றிச் செலவுகள் செய்திடும் பருவம். அந்த துள்ளித் திரிகின்ற பருவத்தில் துடுக்கடக்கிப் பள்ளிக்குச் சென்று படித்திட வேண்டும். அப்பருவம் தான் கேட்டவை விடாது கல்வியை உள்ளத்து அமைத்துப் பசுமரத்தாணி போலப் பதிய வைத்திடும் பருவம். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?' என்பதற்கேற்ப இளமையே கற்பதற்குரிய பருவம் ஆகும்.

'கண்ணுடையர் என்பவர் கற்றோர்'; 'கேடில் விழுச்செல்வம் கல்வி' என்றெல்லாம் கல்வியின் அருமை பெருமைகளைப் பாராட்டுகின்றார் பொய்யில் புலவர். அவரே அத்தகு சிறப்புடைய கல்வியைச் சாவுமளவும் கற்க வேண்டுமென்கிறார். 'ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டா' என்கிறது உலக நீதி. 'கல்லாமல் இருப்பதைவிடப் பிறவாமல் இருப்பதே மேல்' என்றார் பிளேட்டோ.

கல்விச் செல்வமானது வெள்ளத்தால் அழியாது; நெருப்பால் வேகாது; அரசராலும் கவர்ந்து கொள்ள முடியாது. கள்வரால் கவர இயலாது; பிறர்க்குக் கொடுப்பதால் நிறையுமேயன்றி குறைவுபடாது எனக் கவிஞர் ஒருவர் கல்வியின் சிறப்பைப் பாராட்டியுள்ளார்.

அத்தகைய கல்வியை கற்காமல் வேலைக்கு செல்வது முறையா என்று கூறிக் கல்வியைத் தொடரச் செய்வேன். அண்ணா, அப்துல் கலாம் போன்றோர் படித்ததனால் அடைந்த சிறப்பைக் கூறி படிப்பைத் தொடர வேண்டும் என்பதனை வலியுறுத்துவேன்.

## நெடுவினா

1. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சைப் புகினும் கற்கை நன்றே'
என்கிறது வெற்றிவேற்கை.
மேரியிடமிருந்து பறிக்கப்பட்ட புத்தகம், அச்சிறுமியின் வாழ்க்கையில் கல்விச் சுடரை ஏற்றிய கதையைப் பற்றிய உங்களின் கருத்துகளை விவரிக்க. PTA

**மேரியின் குடும்பம் :**

ஒவ்வொரு நாளும் காலை ஐந்து மணிக்கு மேரியின் குடும்பம் விழித்துக் கொள்ளும். அவர்களுக்குப் பகல் முழுவதும் பருத்திக் காட்டில் வேலைகள் இருக்கும். ஒரு நாளில் ஒரே ஒரு நிமிடத்தைக் கூட வீணாக்கி விடக் கூடாது என்று நினைக்கும் குடும்பம் அது.

பருத்திக் காட்டில் இருந்து பகலில் மேரியின் தாய் பாட்ஸி மட்டும் வீட்டிற்குத் திரும்புவாள், தனது குடும்பத்தினருக்கு உணவு சமைக்க. உணவு தயாரானதும் "பசியார வாங்க செல்வங்களே" என்று ஓங்கிக் கூப்பிடுவார். வீட்டு வாசலிலிருந்து ஒவ்வொரு வயதிலும் ஒவ்வொரு உயரமுமாக இருந்த அந்தக் குடும்பத்தார் வயல் வெளியிலிருந்து வியர்வை சொட்டச் சொட்ட வீட்டினுள் நுழைவர்.

**நொறுங்கியது மேரியின் மனம் :**

மேரி தன் தாயாருடன், துவைத்துத் தேய்த்து வைத்திருந்த துணிகளைத் தூக்கிக்கொண்டு, பென் வில்ஸனுடைய மாளிகைக்குச் சென்றாள். அந்த வீட்டினுள் பின்புறமாக நுழைந்த மேரி அந்த மேசையில் இருந்த புத்தகத்தை எடுத்துப் பார்த்தாள். அதைக் கண்ட வில்ஸனின் இரு பெண் குழந்தைகளுள் சிறுமியாக இருந்தவள், "புத்தகத்தை என்னிடம் கொடு! நீ இதை எடுக்கக் கூடாது! உன்னால் படிக்க முடியாது...!" என்று மேரியிடமிருந்து புத்தகத்தை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டாள். அச்செயலினால் மேரியின் மனம் உடைந்தது. கண்ணீர் கண்களில் முட்டியது.

**முதல் புறக்கணிப்பை முதலில் புறக்கணி :**

நாம் எங்கு முதலில் புறக்கணிக்கப்பட்டோமோ அதை முதலில் புறக்கணிக்க வேண்டும். மேரியை முதலில் புறக்கணித்த அந்தச் சிறுமியின் செயலை மேரி முதலில் புறக்கணித்தாள். அந்தச் செயல் அவள் நெஞ்சில் ஆணியாய் தைத்தது. தன் உள்ளத்தில் அவள் அடிக்கடிச் சொல்லிக் கொண்ட வார்த்தை 'நான் படிக்க வேண்டும், நான் படிக்க வேண்டும்' என்று, அவ்வார்த்தையை தினமும் அசைபோட்டாள்.

**முயன்றால் முடியாதது உண்டோ?**

அவளது ஆசை மிஸ் வில்ஸன் மூலமாக நிறைவேறும் நாளும் வந்தது. அவர் மூலமாக பள்ளிக்குச் செல்ல ஆரம்பித்தாள். அவள் நெஞ்சில் குத்திய வார்த்தை நெருப்பாய் மாறியதால் அவள் நன்றாகப் படித்தாள். தன் சமூகத்தில் படித்த முதல் பெண் என்ற புகழையும் கொடுத்தது. அவ்வார்த்தைகளால் அவள் சோர்ந்து போய் இருந்தால் அவளால் அந்தச் சமூகத்தில் உயர்ந்திருக்க முடியாது. அவள் எடுத்த முயற்சிக்கும் ஆசிரியர் கொடுத்த பயிற்சிக்கும் நல்ல பலன் கிடைத்தது. உயர்கல்வியைத் தொடரவும் வாய்ப்பு கிடைத்தது. சமூகத்தில் தனக்கென தனி முத்திரையையும் பதிக்க முடிந்தது. வரலாற்றிலும் இடம் கிடைத்தது. வெற்றி என்பது நம் கைக்குக் கிடைக்கும் எளிய கனியல்ல; அது ஓர் எட்டாத கனி அதை நாம் தான் தட்டிப் பறிக்க வேண்டும். மேரியும் தட்டிப் பறித்தார். ஊர்மக்கள் மனதிலும் உலக மக்கள் நினைவிலும் இடம் பிடித்தாள்.

**முடிவுரை :**

மேரியின் இச்செயல் நம் அனைவருக்கும் நல்ல ஓர் எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது. நாம் எதைப் பற்றிக் கனவு காண்கிறோமோ அப்படியாகவே நாம் மாறி விடுகின்றோம். உழைப்பிற்கு எப்பொழுதுமே ஊதியம் உண்டு.

## கூடுதல் வினாக்கள்:

2. மேரியின் பண்பு நலன்களை எழுதுக.

- மேரி ஒவ்வொரு நாளும் ஐந்து மணிக்கு எழும் பழக்கம் கொண்டவள்.
- சிறுவயதிலேயே அயராது உழைப்பவள். சுட்டித்தனம் நிறைந்தவள்.
- சாம் குடும்பத்திலேயே வித்தியாசமான பெண்ணாக விளங்கியவள்.
- மாலைப் பொழுதை மகிழ்ச்சியுடன் பாட்டியிடம் கழிப்பவள்.
- நன்றாகப் பாடும் திறமையும் செபிக்கும் திறனும் கொண்டவள்.

- பருத்திச் செடிகளை வளர்ப்பதில் அதிகம் நாட்டம் கொண்டவள். பருத்திச் செடிகளைக் கவனமாகப் பார்த்துக் கொள்பவள். பருத்திச் செடியில் அரும்புகின்ற முதல் பூ மொட்டைப் பார்க்கிற முதல் ஆளாக, தானே இருக்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டவள்.
- பூவைப் பார்த்ததும் மகிழ்ச்சியில் குதிப்பவள். உலகக் காரியங்களைத் திகைப்புடன் பார்ப்பவள்.
- மேரியின் கையிலிருந்து புத்தகத்தை வெடுக்கென்று பிடுங்கிய அந்தச் சிறுமியின் செயலுக்காக மனம் வருத்தப்பட்டவள்.
- நான் படிப்பேன்; அதற்கான முயற்சியை எடுப்பேன் என்று மனதில் சபதம் செய்யும் குணம் படைத்தவள்.
- கல்வியின் மீது தீராதத் தாகம் கொண்டவள். அதற்காகப் பள்ளிக்குச் செல்ல முயற்சி செய்து வெற்றியும் பெற்றவள்.
- தன் ஆசிரியரின்பால் மிகுந்த மரியாதையும் பக்தியும் கொண்டவள்.
- தான் கற்றதை மற்றவர்களுக்கும் கற்றுத் தரும் வேட்கை கொண்டவள்.
- பள்ளியின் தூரத்தையும் பொருட்படுத்தாமல் ஆனந்தத்துடன் கல்வி பயின்றவள். தான் கண்ட கனவை நனவாக்கியவள்.
- மேரி தனது டிப்ளொமாவை வாஞ்சையுடன் வாங்கி, பூப்போல அதை ஏந்தி, தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டவள்.
- தனக்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்க அரும்பாடுபட்டவள்.
- உயர்நிலைப் பள்ளிக்கும், கல்லூரிக்கும் செல்ல ஆசைப்பட்டவள். அதற்காக முயற்சியையும் மேற்கொண்டவள்.
- ஊர்மக்களின் நன்மதிப்பையும் அன்பையும் நிறைவாகப் பெற்றவள்.
- முதல் புறக்கணிப்பை முதலில் புறக்கணித்தவள்.
- மேல்படிப்புக்காக தாய் தந்தையை விட்டு டவுனுக்குச் சென்ற தைரியமான மங்கை மேரி ஆனவர்.

3. 'புதிய நம்பிக்கை' என்னும் கதையை சுருக்கி எழுதுக:

**முன்னுரை:**

வரலாற்றில் மனிதர்கள் வருகிறார்கள்; சிலர் வரலாறாகவே இருக்கிறார்கள். இவர்கள் பாதையே இல்லாத இடத்தில் தங்கள் காலடிகளால் ஒற்றையடிப் பாதையிட்டு அதையே பெருஞ்சாலையாக ஆக்குகிறார்கள். எந்த ஒரு சமூகம் கல்வி இல்லாமல் இருக்கிறதோ அச்சமூகம் அழிவை நோக்கி செல்கிறது என்பதாகும். அத்தகு சமூகத்தில் பிறந்த கல்வி எனும் ஒளிச்சுடரைத் தன் கையில் ஏந்தி ஓராயிரம் விளக்கை ஏற்றிய மேரி ஜேனின் வாழ்க்கையோடு என் கருத்தையும் இங்கு விளக்க உள்ளேன்.

**மேரியின் குடும்பம்:**

தந்தை சாம், தாய் பாட்ஸி, பாட்டி, பல சகோதர சகோதரிகளைக் கொண்ட ஏழ்மையான குடும்பம் மேரியின் குடும்பம். காலை ஐந்து மணி முதல் மாலை வரை உழைக்கும் குடும்பம். கல்வி அறிவு இல்லாததால் இவர்களின் உழைப்பு சுரண்டப்படுகிறது. அக்குடும்பத்தில் மேரி மட்டும் வித்தியாசமானவள். எதையும் தான் முதலில் செய்ய வேண்டும் என்று எண்ணுபவள்.

**மேரியின் வேட்கை:**

ஒரு நாள் மேரி, தேய்த்து வைத்த துணிகளை எடுத்துக் கொண்டு பென் வில்ஸனுடைய மாளிகைக்குச் சென்றாள். அங்கு மேசையில் இருந்த புத்தகத்தை ஆர்வமாக எடுத்துப் பார்த்தாள்.

அதைக் கண்ட வில்ஸலின் மகள், "புத்தகத்தை என்னிடம் கொடு! நீ இதை எடுக்க கூடாது! உன்னால் படிக்க முடியாது ...! " என்று மேரியிடமிருந்து புத்தகத்தை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டாள். அச்செயலினால் மேரியின் மனம் உடைந்தது.

**மேரியின் ஏக்கம்:**

மேரி தனது தந்தையுடன் சேர்ந்து கொள்வதற்கு ஓடிச் சென்றாள். "நான் பள்ளிக் கூடத்திற்குப் போக முடியுமாப்பா?" என்று கேட்டாள் மேரி. "அடடே மேரிச் செல்லம் இங்கே நமக்கென்று பள்ளிக் கூடமே கிடையாதம்மா!" சாமின் குரல் வருத்தத்தில் தளர்ந்து ஒலித்தது. "நான் படிக்கணும் அப்பா... எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ளணும்னு விரும்புகிறேன்" என்று ஏக்கத்துடன் கூறினாள் மேரி. சாம் பதில் எதுவும் கூறாமல் நடந்தார்.

**புதிய நம்பிக்கை:**

பதினொரு வயதான மேரி தனக்குள் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை வளர்த்துக் கொண்டாள். ஒரு நாள் மிஸ் வில்ஸன் வந்து மேரியிடம் "உன்னைப் போன்ற குழந்தைகள் படிக்க வேண்டும். அதற்கு நீ சிக்கிரமாக மேயெஸ்வில்லிக்கு வரவேண்டும்" என்றாள். மேரிக்கு புதிய நம்பிக்கை பிறந்தது. ஏனெனில் அந்தத் தலைமுறையில் படிக்கப்போகும் முதல் ஆள் அவள் தான். ஆர்வமும் மகிழ்ச்சியும் அவளை அணைத்துக் கொண்டன.

**கல்விச்சுடர்:**

மேயெஸ்வில்லிக்குப் போகவும் வரவும் ஐந்து ஐந்து மைல்கள் அவள் நடக்க வேண்டும். அதைப் பற்றி கவலை கொள்ளாத மேரி ஜேன் தான் பெற்ற புதிய கல்வியினால் எழுதப் படிக்க கணக்குப் பார்க்க முடிகிறது. மேரி தனது பள்ளியில் புதிதுபுதிதாய் நிறையக் கற்றுக் கொண்டாள். சில வருடம் கழித்து மேரிக்குப் பட்டமளிப்பு விழா நடைபெற்றது. மதிப்புமிக்க வெள்ளத்தாள் சுருளில், "இந்தப் பட்டம் பெறும் மாணவர் எழுதம் படிக்கவும் கூடியவர்" என்று எழுதப்பட்டிருந்தது. அந்த டிப்ளொமாவைப் பெறும்போது மேரி மட்டுமல்ல மேயெஸ்வில்லியின் மக்களுக்கும் பெருமகிழ்வு தான்.

**மேரியின் கல்விப் பயணம்:**

சில நாட்கள் கழித்து, மீண்டும் ஒருநாள் மிஸ் வில்சன் வந்து, "உனக்கு ஒரு நல்ல செய்தி. மேற்கு பகுதியில் வாழ்கின்ற ஒரு வெள்ளைக்காரப் பெண்மணி ஒரு கருப்பினக் குழந்தையின் படிப்பிற்காகப் பணம் அனுப்பி இருக்கிறாள். அதற்கு தேர்வு செய்யப்பட்ட நீ மேல்படிப்பிற்காக டவுனுக்குப் போக வேண்டும்." என்றாள். மேரி பெற்ற மகிழ்விற்கு அளவே இல்லை; தன்னுடைய மகிழ்வைப் பிறருடனும் பகிர்ந்து கொண்டாள்.

**கல்வியின் சிறப்பு:**

மேரியும் அவளது பெற்றோரும் டவுனுக்குப் புறப்பட்ட போது அண்டை வீட்டுக்காரர் ஒருவர் தனது பண்ணை வாகனத்துடன் வந்து அவர்கள் டவுனுக்கு அழைத்துச் செல்லத் தயாரானார். அவளின் பெற்றோர் கூட இதை எதிர்பார்க்கவில்லை. அவர்களோடு பலர் இணைந்து கொண்டு மேரியை டவுனுக்கு வழியனுப்ப இரயில் நிலையத்திற்கு வந்தார்கள். அங்கு மிஸ் வில்ஸனும் வந்தார். மேரி புகை வண்டியில் ஏறி டவுனுக்குச் சென்ற போது, கூடி இருந்தவர்களின் வாழ்த்தொலி "கற்றவருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு" என்பதை நிரூபித்தது.

**முடிவுரை:**

எண்ணற்றோர் கல்வி அறிவற்ற இருட்சமூகத்தில் ஒற்றைச் சுடராக வந்து ஓராயிரம் சுடர்களை ஏற்றுகிறார்கள். இவர்கள் வாழ்க்கையை அறிவது கல்வி வரலாற்றை அறிவதாகும். சாதாரணப் பெண்ணாகப் பிறந்து, தனது முயற்சியாலும் பலரது உதவியாலும் வாழ்வில் உயர்ந்து, சமுதாயத்தின் அறியாமை இருளைப் போக்கத் தோன்றிய மேரி ஜேன்னின் வாழ்வியல் நிகழ்வுகளைப் போல, நாமும் அவமானங்களை வெகுமானமாக மாற்ற முயற்சிப்போம்.

## கற்பவை கற்றபின்

1. கல்வி வாய்ப்பற்ற சூழலில் ஒற்றைச் சுடராக வந்து ஒளியேற்றினார் மேரி மெக்லியோட் பெத்யூன். அதுபோலத் தமிழகத்தில் கல்வி வாய்ப்பற்றவர்களின் வாழ்வில் முதற்சுடர் ஏற்றியவர்களுள் யாதேனும் ஒருவர் குறித்த செய்திகளைத் தொகுத்துச் சில படங்களுடன் குறும்புத்தகம் ஒன்றைக் குழுவாக உருவாக்குக.

### அயோத்திதாசப் பண்டிதர்



| | | |
|---|---|---|
| பெயர் | : | அயோத்திதாசப் பண்டிதர் |
| இயற்பெயர் | : | காத்தவராயன் |
| பிறப்பு | : | 1845 மே 20 |
| ஊர் | : | சென்னை ஆயிரம் விளக்கில் மக்கிமா நகர் |
| தந்தை | : | கந்தசாமி |
| பணி | : | இதழாசிரியர், மருத்துவர், சமூகப்பணி, எழுத்துப்பணி, எழுத்துச் சீர்திருத்தப்பணி. |
| படைப்புகள் | : | புத்தரது ஆதிவேதம், இந்திரதேச சரித்திரம், திருவாசகத்துக்கு உரை, 30 கட்டுரைகள், 2 விரிவுரை, 12 சுவடிகளுக்கு உரை, விபூதி ஆராய்ச்சி, விவாஹ விளக்கம், புத்தர் எனும் இரவு பகலற்ற ஒளி, நூதன சாதிகளின் உள்ளே பீடிகை, நந்தன் சரித்திர தந்திரம், சாக்கிய முனிவரலாறு முதலியன. |
| இதழ் | : | ஒருபைசாத் தமிழன் |
| அறிந்த மொழி | : | தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், பாலி, மலையாளம், பர்மியமொழி, மலாய், சமஸ்கிருதம். |
| இறப்பு | : | 1914 மே 5 |

அயோத்திதாசப் பண்டிதர், பள்ளிக்குச் சென்று கல்வி கற்கும்போது, அவர் பிஞ்சு நெஞ்சில் நஞ்சாய் இறங்கியது தீண்டாமைக் கொடுமை. ஆம்! தீண்டாமை என்பது பெருங்குற்றம் என்றும், மனிதநேயமற்ற செயல் என இன்றும் பேசப்பட்டாலும், அன்றே அவர் உள்ளத்தை அது வாட்டி வதைத்தது.

இவர் மனித வாழ்க்கைக்குத் தேவையற்ற சாதி மதப் பிரச்சனைகள் தீர, மக்கள் அடிப்படை உரிமைகள் பெற, அல்லும்பகலும் அயராது உழைத்தார். சித்த மருத்துவத்தில் கைதேர்ந்ததால் மருத்துவர் என்றும் பண்டிதர் என்றும் அழைக்கப் பெற்றார். அவர் வாழ்ந்த காலத்தில், தாழ்த்தப்பட்ட மக்களைத் தரக்குறைவாய் நடத்தியதும், உரிய ஊதியம் கொடுக்காது வேலை செய்யச் சொன்னதும் அவர் உள்ளத்தைத் தீயாய் சுட்டெரித்தது.

அயோத்திதாசர் தாமே முன்னின்று தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமைக்கு அரும்பாடுபட்டார். எவரையும் சாதிப் பெயரைச் சொல்லி அழைப்பது தவறு என்றார். மேலும், தாழ்த்தப்பட்டவர்களுக்குக் கல்வி வசதியோடு கல்வி உதவித்தொகை அளிக்கவும், கல்வியில் தேர்ச்சி பெற்றவருக்கு அரசுவேலையும், உள்ளாட்சி அமைப்புகளில் வாய்ப்பும், பொது இடங்களில் நுழைய உரிமையும், கிராம அலுவலராய்ப் பணியமர்த்த ஆணைகளும் வேண்டுமென்று துணிவோடு வலியுறுத்தி, வெற்றி கண்டார். தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கல்வி கற்க அனுமதி மறுக்கப்பட்ட சூழலில் பிரம்ம ஞானசபை ஆல்காட் (1832 – 1907) தொடர்பால், சென்னையில் முக்கியமான ஐந்து இடங்களில் ஆல்காட் பஞ்சமர் பள்ளிகள் எனத் தலித்துகளுக்கு இலவசப் பள்ளிகளை நிறுவினார்.

இவ்வாறு கல்வி வாய்ப்பற்ற சூழலில் இருந்த மக்களுக்கு ஒற்றைச் சுடராக வந்து ஒளியேற்றியவர்தான் அயோத்தி தாசப் பண்டிதர்

2. கல்விக்கண் திறந்தவர்களுக்கிடையில் கைவிடப்பட்ட பெண்களுக்காக உழைத்த தமிழகத்தின் முதல் பெண் மருத்துவர் முத்துலெட்சுமி பற்றிய ஒரு தொகுப்பேட்டினை உருவாக்கி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

| | |
|---|---|
| பெயர் | : முத்துலெட்சுமி ரெட்டி |
| ஊர் | : புதுக்கோட்டை |
| பிறப்பு | : 1886 ஜூலை 30 |
| பெற்றோர் | : தந்தை: நாராயணசாமி, தாய்: சந்திரம்மாள் |
| உடன்பிறப்பு | : தங்கைகள்: சுந்தரம்மாள், நல்லமுத்து, தம்பி: இராமையா |
| கணவர் | : டி.சுந்தரரெட்டி |
| திருமணம் | : 1914 ஏப்ரல் மாதம் |
| பிள்ளைகள் | : இராம்மோகன், கிருஷ்ணமூர்த்தி |
| பணி | : மருத்துவர், எழுத்தாளர், சமூகப்போராளி, பெண் உரிமையாளர், தன்னார்வலர் |
| பட்டம் | : 1912 ஆம் ஆண்டு சென்னை மருத்துவக் கல்லூரியில் டாக்டர் பட்டம். |
| இறப்பு | : 1968 ஜூலை 22 (அகவை 81) |

**சமூகப்பணி:**

1926 – ஆம் ஆண்டு 43 நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்ட அகில உலக பெண்கள் மாநாடு, பிரான்சு நாட்டுத் தலைநகர் பாரீசில் நடைபெற்றது. அதில் இந்தியாவின் சார்பில் முத்துலெட்சுமி ரெட்டி கலந்து கொண்டார். அப்போது அவர் நிகழ்த்திய சொற்பொழிவில், ஆண்களுக்கு நிகராகப் பெண்கள் முன்னேற வேண்டும். பெண்களை அடிமைகளாக நடத்தும் வழக்கம் ஒழிய வேண்டும் என்று வலியுறுத்தினார். இந்தியப் பெண்கள் சங்கத்தின் முதல் தலைவர் என்னும் பெருமையைப் பெற்றவர்.

சென்னை மாநகராட்சியின் முதல் துணை மேயர் என்னும் பெருமையும் இவருக்குண்டு.

அனாதையாக்கப்பட்ட குழந்தைகளை வளர்த்து, அவர்களுக்கு நல்ல எதிர்காலத்தை உருவாக்க உருவானதே அவ்வை இல்லம். அடையாறில் அமைந்துள்ள இதனை அமைத்தவர் முத்துலெட்சுமி.

முத்துலட்சுமியின் சேவைகளுக்காக மத்திய அரசு 1956 இல் பத்மபூஷண் விருது கொடுத்து கௌரவித்தது.

இந்தி மொழிக் கிளர்ச்சியில் பங்கு பெற்றார். தமிழிசை இயக்கம், தமிழ் வளர்ச்சி, தமிழாசிரியர்களின் ஊதிய உயர்வுப் போராட்டம் எனத் தமிழ்ப் பணிகள் செய்தார். மாதர் இந்திய சங்கம் நடத்திய பெண்களுக்கான 'ஸ்திரி தருமம்' என்னும் மாத இதழின் ஆசிரியராக விளங்கினார்.





இயல் - 5 இலக்கணம்

கல்வி – மணற்கேணி

## 5. வினா, விடை வகைகள், பொருள்கோள்

### பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. "இங்கு நகரப் பேருந்து நிற்குமா?" என்று வழிப்போக்கர் கேட்பது ______ வினா. "அதோ, அங்கே நிற்கும்." என்று மற்றொருவர் கூறியது ______ விடை.
   அ) ஐயவினா, வினா எதிர் வினாதல்.
   ஆ) அறிவினா, மறை விடை.
   இ) அறியாவினா, சுட்டு விடை
   ஈ) கொளல் வினா, இனமொழி விடை
   விடை : இ) அறியா வினா, சுட்டு விடை.

**கூடுதல் வினாக்கள்:**

2. வினா ______ வகைப்படும்.
   அ) ஐந்து ஆ) ஆறு
   இ) ஏழு ஈ) எட்டு
   விடை : ஆ) ஆறு
3. ஆசிரியரிடம், "இந்தக் கவிதையின் பொருள் யாது?" என்று மாணவர் கேட்டல் ______.
   அ) அறிவினா ஆ) ஐயவினா
   இ) அறியாவினா ஈ) கொளல் வினா
   விடை : இ) அறியாவினா
4. மாணவரிடம், "இந்தக் கவிதையின் பொருள் யாது?" என்று ஆசிரியர் கேட்டல் ______.
   அ) அறியா வினா ஆ) அறிவினா
   இ) ஐயவினா ஈ) கொளல் வினா
   விடை : ஆ) அறிவினா
5. "இச்செயலைச் செய்தது மங்கையா? மணிமேகலையா?" என வினவுதல் ______.
   அ) ஏவல் வினா ஆ) அறியாவினா
   இ) அறிவினா ஈ) ஐய வினா
   விடை : ஈ) ஐய வினா
6. 'வீட்டில் தக்காளி இல்லை. நீ கடைக்குச் செல்கிறாயா?' என்று அக்கா தம்பியிடம் வினவி வேலையைச் சொல்லுதல் ______.
   அ) ஏவல் வினா ஆ) அறிவினா
   இ) கொளல் வினா ஈ) ஐயவினா
   விடை : அ) ஏவல் வினா
7. 'என்னிடம் பாரதிதாசன் கவிதைகள் இரண்டு படிகள் உள்ளன. உன்னிடம் பாரதிதாசனின் கவிதைகள் இருக்கிறதா?' என்று கொடுப்பதற்காக வினவுதல் ______.
   அ) கொளல் வினா ஆ) ஏவல் வினா
   இ) கொடை வினா ஈ) ஐய வினா
   விடை : இ) கொடை வினா
8. 'ஜெயகாந்தன் சிறுகதைகள் இருக்கிறதா?' என்று நூலகரிடம் வினவுதல் ______.
   அ) கொடை வினா ஆ) கொளல் வினா
   இ) அறியாவினா ஈ) அறிவினா
   விடை : ஆ) கொளல் வினா

9. விடை _______ வகைப்படும்.

அ) ஐந்து ஆ) ஆறு

இ) ஏழு ஈ) எட்டு

விடை : ஈ) எட்டு

10. நேரடி விடைகளைத் தருவதை _______ விடை என அழைப்பர்.

அ) குறிப்பு ஆ) எதிர்மறை

இ) வெளிப்படை ஈ) உடன்பாடு

விடை : இ) வெளிப்படை

11. விடைகள் குறிப்பாக இருந்தால் அவ்விடைகள் _______ விடைகள் எனவும் கொள்ளப்படும்.

அ) முற்று ஆ) குறிப்பு

இ) தெரிநிலை ஈ) முன்னிலை

விடை : ஆ) குறிப்பு

12. 'என்னுடன் ஊருக்கு வருவாயா?' என்ற வினாவிற்கு 'வராமல் இருப்பேனா?' என்று கூறுவது

அ) ஏவல் விடை ஆ) வினா எதிர் வினாதல் விடை

இ) இனமொழி விடை ஈ) மறைவிடை

விடை : ஆ) வினா எதிர் வினாதல் விடை

13. 'கடைக்குப் போவாயா?' என்ற கேள்விக்குப் 'போவேன்' என்று உடன்பட்டுக் கூறல்,

அ) நேர் விடை ஆ) மறை விடை

இ) சுட்டு விடை ஈ) ஏவல் விடை

விடை : அ) நேர் விடை

14. 'கடைத்தெரு எங்குள்ளது?' என்ற வினாவிற்கு 'வலப்பக்கத்தில் உள்ளது' எனக் கூறல்,

அ) மறை விடை ஆ) நேர் விடை

இ) சுட்டு விடை ஈ) ஏவல் விடை

விடை : இ) சுட்டு விடை

15. 'நீ விளையாடவில்லையா?' என்ற வினாவிற்குக் 'கால் வலிக்கிறது' என்று உற்றதை உரைப்பது _______

அ) உறுவது கூறல் விடை ஆ) இனமொழி விடை

இ) உற்றது உரைத்தல் விடை ஈ) ஏவல் விடை

விடை : இ) உற்றது உரைத்தல் விடை

16. 'கடைக்குப் போவாயா?' என்ற கேள்விக்குப் 'போக மாட்டேன்' என மறுத்துக் கூறல்,

அ) சுட்டு விடை ஆ) மறை விடை

இ) நேர் விடை ஈ) இனமொழி விடை

விடை : ஆ) மறை விடை

17. 'இது செய்வாயா?' என்று வினவியபோது 'நீயே செய்' என்று ஏவிக் கூறுவது _______

அ) ஏவல் விடை ஆ) சுட்டு விடை

இ) மறை விடை ஈ) நேர் விடை

விடை : அ) ஏவல் விடை

18. 'உனக்குக் கதை எழுதத் தெரியுமா?' என்ற வினாவிற்குக் 'கட்டுரை எழுதத் தெரியும்' என்று கூறுவது,

அ) உறுவது கூறல் விடை ஆ) இனமொழி விடை

இ) உற்றது உரைத்தல் விடை ஈ) நேர் விடை

விடை : ஆ) இனமொழி விடை

19. பொருள்கோள் _______ வகைப்படும்.

அ) 10 ஆ) 8

இ) 6 ஈ) 12

விடை : ஆ) 8

20. ஒரு செய்யுளில் சொற்கள் முறை பிறழாமல் வரிசையாக அமைந்து வருவது ______ ஆகும்.

அ) ஆற்றுநீர்ப் பொருள்கோள் ஆ) நிரல்நிறைப் பொருள்கோள்
இ) தாப்பிசைப் பொருள்கோள் ஈ) கொண்டு கூட்டுப் பொருள்கோள்

விடை : ஆ) நிரல் நிறைப் பொருள்கோள்

21. ஒரு செய்யுளில் பல அடிகளில் சிதறிக்கிடக்கும் சொற்களைப் பொருளுக்கு ஏற்றவாறு ஒன்றோடொன்று கூட்டிப் பொருள் கொள்வது ______ பொருள்கோளாகும்.

அ) ஆற்று நீர்ப் ஆ) கொண்டு கூட்டுப்
இ) நிரல் நிறைப் ஈ) தாப்பிசை

விடை : ஆ) கொண்டு கூட்டுப்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. இந்த அறை இருட்டாக இருக்கிறது. மின்விளக்கின் சொடுக்கி எந்தப் பக்கம் இருக்கிறது? இதோ..... இருக்கிறதே! சொடுக்கியைப் போட்டாலும் வெளிச்சம் வரவில்லையே! மின்சாரம் இருக்கிறதா, இல்லையா?

மேற்கண்ட உரையாடலில் உள்ள வினாக்களின் வகைகளை எடுத்தெழுதுக. PTA

இந்த அறை இருட்டாக இருக்கிறது. மின் விளக்கின் சொடுக்கி எந்தப் பக்கம் இருக்கிறது?

இவ்வுரையாடல், அறியா வினா ஆகும்.

இதோ..... இருக்கிறதே! சொடுக்கியைப் போட்டாலும் வெளிச்சம் வரவில்லையே! மின்சாரம் இருக்கிறதா, இல்லையா?

இவ்வுரையாடல், ஐய வினா ஆகும்.

### கூடுதல் வினாக்கள்:

2. வினா எத்தனை வகைப்படும்? அவை யாவை?

வினா ஆறு வகைப்படும். அவை, அறிவினா, அறியா வினா, ஐயவினா, கொளல் வினா, கொடை வினா, ஏவல் வினா ஆகும்.

3. அறிவினா என்றால் என்ன? சான்று தருக.

தான் விடை அறிந்திருந்தும், அவ்விடை பிறருக்குத் தெரியுமா என்பதை அறியும் பொருட்டு வினவுவது அறிவினா ஆகும்.

(எ.கா) மாணவரிடம்,'இந்தக் கவிதையின் பொருள் யாது?' என்று ஆசிரியர் கேட்டல்.

4. அறியா வினா என்றால் என்ன? சான்று தருக.

தான் அறியாத ஒன்றை அறிந்து கொள்வதற்காக வினவுவது அறியா வினா ஆகும்.

(எ.கா) ஆசிரியரிடம், 'இந்தக் கவிதையின் பொருள் யாது?' என்று மாணவர் கேட்டல்.

5. ஐய வினா என்றால் என்ன? சான்று தருக.

ஐயம் நீங்கித் தெளிவு பெறுவதற்காகக் கேட்கப்படுவது ஐய வினா ஆகும்.

(எ.கா) 'இச்செயலைச் செய்தது மங்கையா? மணிமேகலையா?' என வினவுதல்.

6. கொளல் வினா என்றால் என்ன? சான்று தருக.

தான் ஒரு பொருளை வாங்கிக் கொள்ளும் பொருட்டு வினவுவது கொளல் வினா ஆகும்.

(எ.கா) 'ஜெயகாந்தன் சிறுகதைகள் இருக்கிறதா?' என்று நூலகரிடம் வினவுதல்.

7. கொடை வினா என்றால் என்ன? சான்று தருக.

பிறருக்கு ஒரு பொருளைக் கொடுத்து உதவும் பொருட்டு வினவுவது கொடை வினா ஆகும்.

(எ.கா) 'என்னிடம் பாரதிதாசன் கவிதைகள் இரண்டு படிகள் உள்ளன. உன்னிடம் பாரதிதாசனின் கவிதைகள் இருக்கிறதா?' என்று கொடுப்பதற்காக வினவுதல்.

8. ஏவல் வினா என்றால் என்ன? சான்று தருக.

ஒரு செயலைச் செய்யுமாறு ஏவுதற் பொருட்டு வினவுவது ஏவல் வினா ஆகும்.

(எ.கா) 'வீட்டில் தக்காளி இல்லை. நீ கடைக்குச் செல்கிறாயா? என்று அக்கா தம்பியிடம் வினவி வேலையைச் சொல்லுதல்.

9. விடை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

விடை எட்டு வகைப்படும். அவை, சுட்டு விடை, மறை விடை, நேர்விடை, ஏவல் விடை, வினா எதிர் வினாதல் விடை, உற்றது உரைத்தல் விடை, உறுவது கூறல் விடை, இனமொழி விடை ஆகும்.

10. வெளிப்படை, குறிப்பு விடைகள் என்றால் என்ன?

சுட்டுவிடை, மறைவிடை, நேர்விடை ஆகிய மூன்று விடை வகைகளும் நேரடி விடைகளாக இருப்பதால் வெளிப்படை விடைகள் எனவும், அடுத்த ஏவல் விடை, வினா எதிர் வினாதல் விடை, உற்றது உரைத்தல் விடை, உறுவது கூறல் விடை, இனமொழி விடை ஆகிய ஐந்து விடைகளும் குறிப்பாக இருப்பதால் குறிப்பு விடைகள் எனவும் கொள்ளலாம்.

11. சுட்டு விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒன்றைச் சுட்டிக் காட்டிக் கூறும் விடை சுட்டு விடை எனப்படும்.

(எ.கா) 'கடைத்தெரு எங்குள்ளது?' என்ற வினாவிற்கு 'வலப்பக்கத்தில் உள்ளது' எனக் கூறல்.

12. மறை விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒன்றை மறுத்துக் கூறும் விடை மறை விடை எனப்படும்.

(எ.கா) 'கடைக்குப் போவாயா?' என்ற கேள்விக்குப் 'போகமாட்டேன்' என மறுத்துக் கூறல்.

13. நேர் விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒன்றை உடன்பட்டுக் கூறும் விடை நேர் விடை எனப்படும்.

(எ.கா) 'கடைக்குப் போவாயா?' என்ற கேள்விக்குப் 'போவேன்' என்று உடன்பட்டுக் கூறல்.

14. ஏவல் விடை என்றால் என்ன? சான்று தருக.

விடுத்த வினாவுக்கு எதிராக ஏவுதல் மூலம் விடையிறுத்தல் ஏவல் விடை எனப்படும்.

(எ.கா) 'இது செய்வாயா?' என்று வினவிய போது, 'நீயே செய்' என்று ஏவிக் கூறுவது.

15. வினா எதிர் வினாதல் விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒரு வினாவிற்கு விடையாக இன்னொரு வினாவைக் கேட்பது வினா எதிர் வினாதல் விடை எனப்படும்.

(எ.கா) 'என்னுடன் ஊருக்கு வருவாயா?' என்ற வினாவிற்கு 'வராமல் இருப்பேனா?' என்று கூறுவது.

16. உற்றது உரைத்தல் விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒரு வினாவிற்கு விடையாக ஏற்கனவே நேர்ந்ததைக் கூறுவது உற்றது உரைத்தல் விடை எனப்படும்.

(எ.கா) 'நீ விளையாடவில்லையா?' என்ற வினாவிற்குக் 'கால் வலித்தது' என்று உற்றதை உரைப்பது.

17. உறுவது கூறல் விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒரு வினாவிற்கு விடையாக இனிமேல் நேர்வதைக் கூறுவது உறுவது கூறல் விடை எனப்படும்.

(எ.கா) 'நீ விளையாடவில்லையா?' என்ற வினாவிற்குக் 'கால் வலிக்கும்' என்று உறுவதை உரைப்பது.

18. இனமொழி விடை என்றால் என்ன? சான்று தருக.

ஒரு வினாவிற்கு விடையாக இனமான மற்றொன்றை விடையாகக் கூறுவது இனமொழி விடை எனப்படும்.

(எ.கா) 'உனக்குக் கதை எழுதத் தெரியுமா?' என்ற வினாவிற்குக் 'கட்டுரை எழுதத் தெரியும்' என்று கூறுவது.

19. பொருள்கோள் என்றால் என்ன?

செய்யுளில் சொற்களைப் பொருளுக்கு ஏற்றவாறு சேர்த்தோ, மாற்றியோ பொருள் கொள்ளும் முறைக்கு பொருள்கோள் என்று பெயர்.

20. பொருள்கோள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

பொருள்கோள் எட்டு வகைப்படும். அவை, ஆற்றுநீர்ப் பொருள்கோள், மொழிமாற்றுப் பொருள்கோள், நிரல்நிறைப் பொருள்கோள், விற்பூட்டுப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறிப்பாப்புப் பொருள்கோள், கொண்டுகூட்டுப் பொருள்கோள், அடிமறி மாற்றுப் பொருள்கோள் ஆகியன.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.
இக்குறட்பாவில் அமைந்துள்ள பொருள்கோளின் வகையைச் சுட்டி விளக்குக.

இக்குறட்பா ஆற்றுநீர்ப் பொருள்கோள் ஆகும்.

**ஆற்றுநீர்ப் பொருள்கோள்:**

திரும்பாமல் ஓடுகின்ற ஆற்றுநீர் ஓட்டம்போல், சொற்கள் முன்பின்னாக மாறாமல் நேராகவே பொருள் கொள்ளப்படுவது ஆற்றுநீர்ப் பொருள்கோள் ஆகும்.

**குறள் விளக்கம்:**

இக்குறளில் முயற்சி என்னும் சொல் தொடங்கி விடும் என்னும் சொல் முடியும் வரை, ஆற்று நீர் ஓட்டம் போல் நேராக சென்று பொருளை உணர்த்துவதால் இது ஆற்றுநீர்ப் பொருள்கோள் ஆயிற்று.

### கூடுதல் வினா:

2. ஆற்றுநீர்ப் பொருள்கோளைச் சான்றுடன் விளக்குக.

பாடலின் தொடக்கம் முதல் முடிவு வரை ஆற்றுநீரின் போக்கைப் போல நேராகவே பொருள் கொள்ளுமாறு அமைவது ஆற்றுநீர்ப் பொருள்கோள் எனப்படும்.

எ.கா:

'சொல்லவரும் சூல்பகும் பாம்பின் தோற்றம் போல்
மெல்லவே கருஇருந்து ஈன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்த நூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'

– சீவகசிந்தாமணி

**விளக்கம்:**

நெற்பயிர், கருவுற்ற பச்சைப் பாம்பின் வடிவம் போல் கருக்கொண்டு, பின்பு கதிர்விட்டு, செல்வம் சேர்ந்தவுடன் பண்பற்ற மக்கள் பணிவின்றித் தலை நிமிர்ந்து நிற்பது போல் குத்திட்டு நின்று, முடிவில் கதிர் முற்றியவுடன் கற்றவர்கள் வணங்குதல் போல் வளைந்து காய்த்தன.

'நெல்' என்னும் எழுவாய் அதன் தொழில்களான இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் வினையெச்சங்களைப் பெற்றுக் 'காய்த்தவே' என்னும் பயனிலையைக் கொண்டு முடிந்தது. பாடலின் தொடக்கம் முதல் முடிவுரை ஆற்றுநீரின் போக்கைப்போல நேராகவே பொருள் கொள்ளுமாறு அமைந்ததால் இது 'ஆற்றுநீர்ப் பொருள்கோள்' ஆகும்.

3. நிரல் நிறைப் பொருள்கோளைச் சான்றுடன் விளக்குக.

ஒரு செய்யுளில் சொற்கள் முறை பிறழாமல் நிரல்நிறையாக (வரிசையாக) அமைந்து வருவது 'நிரல்நிறைப் பொருள்கோள்'ஆகும்.

இது முறை நிரல்நிறைப் பொருள்கோள், எதிர் நிரல்நிறைப் பொருள்கோள் என இருவகைப்படும்.

**அ) முறை நிரல்நிறைப் பொருள்கோள்:**

செய்யுளில் எழுவாயாக அமையும் பெயர்ச் சொற்களை அல்லது வினைச் சொற்களை வரிசையாக நிறுத்தி, அவை ஏற்கும் பயனிலைகளையும் அவ்வரிசைப்படியே நிறுத்திப் பொருள் கொள்ளுதல் 'முறை நிரல்நிறைப் பொருள்கோள்' ஆகும்.

எ.கா:

'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.' – குறள்:45

**விளக்கம்:**

இக்குறளில் பண்பு, பயன் என்ற இரு சொற்களை வரிசைப்படுத்தி, அவற்றிற்குரிய விளைவுகளாக அன்பு, அறன் என்று வரிசைப்படுத்தி உள்ளார். அவற்றை இல்வாழ்க்கையின் பண்பு, அன்பு என்றும் அதன் பயன், அறம் என்றும் பொருள் கொள்ள வேண்டும். எனவே, அன்புக்குப் பண்பும் அறத்துக்குப் பயனும் பயனிலைகளாக நிரல்நிறையாக நிறுத்தி பொருள்கொள்வதால், இப்பாடல் 'முறை நிரல்நிறைப் பொருள்கோள்' எனப்படும்.

**ஆ) எதிர் நிரல்நிறைப் பொருள்கோள்:**

செய்யுளில் எழுவாய்களை வரிசைப்படுத்தி அவை ஏற்கும் பயனிலைகளை எதிர் எதிராகக் கொண்டு பொருள் கொள்ளுதல் 'எதிர் நிரல்நிறைப் பொருள்கோள்'ஆகும்.

எ.கா:

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். – குறள்: 410

**விளக்கம்:**

இக்குறளில் முதல் அடியில் விலங்கு, மக்கள் என்று எழுவாய்களை வரிசைப்படுத்திவிட்டு, அடுத்த அடியில் பயனிலைகளாகக் கற்றார், கல்லாதார் (ஏனையவர்) என வரிசைப்படுத்தியுள்ளார். அவற்றைக் கற்றார் மக்கள் என்றும், கல்லாத ஏனையவர் விலங்குகள் என்றும் எதிர் எதிராகக் கொண்டு பொருள் கொள்ள வேண்டும். எனவே, இக்குறள் 'எதிர் நிரல்நிறைப் பொருள்கோள்' ஆகும்.

4. கொண்டுகூட்டுப் பொருள்கோளைச் சான்றுடன் விளக்குக. PTA

ஒரு செய்யுளில் பல அடிகளில் சிதறிக் கிடக்கும் சொற்களைப் பொருளுக்கு ஏற்றவாறு ஒன்றோடொன்று கூட்டிப்பொருள் கொள்வது கொண்டுக்கூட்டுப் பொருள்கோள் ஆகும்.

எ.கா:

'ஆலத்து மேல குவளை குளத்துள
வாலின் நெடிய குரங்கு' – மயிலைநாதர் உரை

விளக்கம்:

மேற்கண்ட பாடலில் ஆலத்து மேல் குவளை என்றும் குளத்தில் வாலின் நெடிய குரங்கு என்றும் பொருள் கொண்டால் பொருத்தமற்றதாகிவிடும். இதில் ஆலத்து மேல குரங்கு, குளத்துள குவளை என்று கருத்தைக் கொண்டு அங்குமிங்கும் கொண்டு பொருள்கோள் அமைந்திருப்பதால் இது கொண்டு கூட்டுப் பொருள்கோள் எனப்படும்.

## கற்பவை கற்றபின்

1. வினா வகையையும் விடை வகையையும் சுட்டுக.

அ) "காமராசர் நகர் எங்கே இருக்கிறது? இந்த வழியாகச் செல்லுங்கள்" – என்று விடையளிப்பது.

"காமராசர் நகர் எங்கே இருக்கிறது?" – இது அறியா வினா ஆகும்
"இந்த வழியாகச் செல்லுங்கள்" – இது சுட்டு விடையாகும்

ஆ) "எனக்கு எழுதித் தருகிறாயா?" என்ற வினாவுக்கு, "எனக்கு யார் எழுதித் தருவார்கள்?" என்று விடையளிப்பது.

"எனக்கு எழுதித் தருகிறாயா?" – இது ஏவல் வினா
"எனக்கு யார் எழுதித் தருவார்கள்?" – இது வினா எதிர் வினாதல் விடை

2. உரையாடலில் இடம்பெற்றுள்ள வினாவிடை வகைகளைக் கண்டு எழுதுக.

பாமகள் : வணக்கம் ஆதிரை! ஏதோ எழுதுகிறீர்கள் போலிருக்கிறதே (அறியா வினா)

ஆதிரை : ஆமாம்! கவியரங்கத்துக்குக் கவிதை எழுதிக் கொண்டிருக்கிறேன். (நேர்விடை)

பாமகள் : அப்படியா! என்ன தலைப்பு? (அறியா வினா)

ஆதிரை : கல்வியில் சிறக்கும் தமிழர்! (நேர்விடை)

நீங்கள் கவியரங்கத்துக்கு எல்லாம் வருவீர்களோ? மாட்டீர்களோ? (ஐயவினா)

பாமகள் : ஏன் வராமல்? (வினா எதிர் வினாதல் விடை)

## மொழியை ஆள்வோம்

### மொழிபெயர்ப்பு

1. ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களைக் கவிதையில் கண்டு எழுதுக.

| யாழிசை | It's like new lute music |
|---|---|
| அறைக் குள் யாழிசை<br>ஏதென்று செ ன்று<br>எட்டிப் பார்தேன்;<br>பேத்தி,<br>நெட்டுருப் பண்ணினாள்<br>நீதிநூல் திரட்டையே .<br>பாரதிதாசன் | Wondering at the lute music<br>Coming from the chamber<br>Entered I to look up to in still<br>My grand-daughter<br>Learning by rote the verses<br>Of a didactic compilation.<br>*Translated by* Kavignar Desini |

PTA

| | | |
|---|---|---|
| lute music | – | யாழிசை |
| Chamber | – | அறை |
| to look up | – | எட்டிப் பார்த்தல் |
| grand-daughter | – | பேத்தி |
| rote | – | நெட்டுரு |
| didactic compilation | – | நீதிநூல் திரட்டு |

2. அட்டவணையில் விடுபட்டதை எழுதுக.

| வேர்ச் சொல் | எழுவாய்த் தொடர் | பெயரெச்சத் தொடர் | வினையெச்சத் தொடர் | விளித் தொடர் | வேற்றுமைத் தொடர் |
|---|---|---|---|---|---|
| ஓடு | அருணா ஓடினாள் | ஓடிய அருணா | ஓடி வந்தாள் | அருணா ஓடாதே! | அருணாவிற்காக ஓடினாள் |
| சொல் | அம்மா சொன்னார் | சொன்ன அம்மா | சொல்லிச் சென்றார் | அம்மா சொல்லாதே! | கதையைச் சொன்னார் |
| தா | அரசர் தந்தார் | தந்த அரசர் | தந்து சென்றார் | அரசே தருக! | அரசரால் தரப்பட்டது |
| பார் | துளிர் பார்த்தாள் | பார்த்த துளிர் | பார்த்துச் சிரித்தாள் | துளிரே பார்! | துளிருடன் பார்த்தேன் |
| வா | குழந்தை வந்தது | வந்த குழந்தை | வந்து நின்றது | குழந்தையே வா! | (குழந்தையோடு வந்தான்) |

3. தொடர்களில் உள்ள எழுவாயைச் செம்மை செய்க.

கடம்பவனத்தை விட்டு இறைவன் நீங்கினான்.

எ.கா : அழகிய குளிர்ந்த கடம்வனத்தை விட்டு இறைவன் நீங்கினான்.

1. மரத்தை வளர்ப்பது நன்மை பயக்கும். PTA
2. வாழ்க்கைப் பயணமே வேறுபட்ட பாடங்களைக் கற்றுத் தருகிறது. PTA
3. கல்வியே ஒருவருக்கு உயர்வு தரும்.
4. குழந்தைகள் தனித்தனியே எழுதித் தரவேண்டும்.

விடைகள்:

1. குளிர்ந்த நிழல் தரும் மரத்தை வளர்ப்பது நன்மை பயக்கும்.
2. மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கைப் பயணமே வேறுபட்ட பாடங்களைக் கற்றுத் தருகிறது.
3. அறிவின் ஊற்றாகிய கல்வியே ஒருவருக்கு உயர்வு தரும்.
4. சுட்டித்தனம் நிறைந்த குழந்தைகள் தனித்தனியே எழுதித் தரவேண்டும்.

## மதிப்புரை எழுதுக.

பள்ளி ஆண்டுவிழா மலருக்காக, நீங்கள் நூலகத்தில் படித்த கதை/கட்டுரை/சிறுகதை/கவிதை நூலுக்கான மதிப்புரை எழுதுக.

குறிப்பு – நூலின் தலைப்பு – நூலின் மையப்பொருள் – மொழி நடை – வெளிப்படுத்தும் கருத்து – நூலின் நயம் – நூல் கட்டமைப்பு – சிறப்புக் கூறு – நூல் ஆசிரியர். PTA

**நூல் தலைப்பு:**

கண்ணீர்ப் பூக்கள் (கவிதைப் பக்கம்)

**நூலின் மையப்பொருள்:**

இன்றைய சூழலில் மனிதனின் ஏக்கங்களும் மனதில் ஏற்படும் தாக்கங்களுமே நூலின் மையப்பொருளாக அமைந்துள்ளன.

**மொழிநடை:**

இலக்கணக் கலப்புகள் அதிகம் இல்லாமல் இலக்கிய கலப்புகளுடன் பாமரரும் எளிதாக வாசித்துப் பொருள் உணரும் நடையில் எளிமையாக அமைந்துள்ளது. சீரிய செம்மார்ந்த நடையில் தொய்வு இல்லாமல் அமைந்துள்ளது.

**வெளிப்படுத்தும் கருத்து:**

இக்கவிதை நூல் வாழ்வியல் எதார்த்தங்களை அப்படியே படம்பிடித்து காட்டுகின்றது. இந்த உலகம் போட்டி நிறைந்த உலகம்; பூசல்களைக் குறைத்தால் பூவுலகு பிறக்கும். ஆசைகளைத் துறந்தால் ஆனந்தம் பிறக்கும். மனிதர்கள் நிகழ்காலத்தில் கிடைக்கும் கலாக்காயை விட்டு எதிர்காலத்தில் கிடைக்கும் பலாக்காய்க்கே ஆசைப்படுகின்றனர். இறைவன் படைத்த படைப்பில் அனைவரும் சமமாகப் பார்க்கப்பட வேண்டும். சமமாக நடத்தப்படவும் வேண்டும். சுதந்திர இந்தியாவில் சுதந்திரம் இல்லாமல் தான் இருக்கின்றோம். கிடைத்த வாய்ப்புக்களைத் தவறவிட்டு கிடைக்காத வாய்ப்புக்காக ஏக்கம் கொண்டு இழந்த வாய்ப்புக்காகத் துக்கம் கொண்டாடுகின்றோம். பெண்மையைப் போற்றும் இந்நாட்டில் பெண்ணை இழிவுபடுத்துகின்றோம். வாழ்வின் ருசியான தருணங்களைப் பசியாற மறக்கின்றோம். சுய நலத்திற்காகப் பிறர் நலத்தைக் கெடுக்கின்றோம். நாம் யாரையும் அன்பு செய்யாமல் நம்மை அன்பு செய்ய ஆள் இல்லையே என்று அங்கலாய்க்கின்றோம். மரங்களை வெட்டி வீழ்த்துகின்றோம், அதற்கும் உயிர் இருப்பதை மறந்து இதுபோன்ற பலவகையான கருத்துகளை இப்புத்தகம் வெளிப்படுத்துகிறது.

**நூலின் நயம்:**

இந்நூல் கவிதை நூலுக்குரிய அனைத்து நயங்களையும் நலமுடன் பெற்றுத் திகழ்கிறது. எதுகை, மோனை, இயைபு என்னும் தொடை நயங்கள் அதிகமாக கவிதையில் விரவி வருவதைக் காணமுடிகிறது.

"பங்களா தேசத்துப் பாதையில் நின்றொரு
பாடகன் பாடுகிறேன் – வீர
பாரத பூமியின் பாரதி சீமையின்
பாடகன் பாடுகிறேன்!"

**நூல் கட்டமைப்பு:**

இந்நூல் 28 கவிதைகளை உள்ளடக்கிய தொகுப்பாகும். இதில் உள்ள ஒவ்வொரு கவிதைகளும் ஒவ்வொரு கருத்தையும், வாழ்வியல் எதார்த்தங்களையும் எடுத்தியம்புகிறது. 28 கவிதைகளில் ஒன்று கண்ணீர்ப் பூக்கள் என்னும் கவிதை. இக்கவிதையையே புத்தகத்தின் தலைப்பாக மாற்றியிருக்கிறார் ஆசிரியர். சில கவிதைகள் சிறியதாகவும், சில கவிதைகள் பெரியதாகவும் இந்நூலில் இடம்பிடித்துள்ளன. ஆனால் கருத்துகள் நிறைவாகவே சொல்கின்றன.

**சிறப்புக் கூறு:**

இக்கவிதைத் தொகுப்பு முப்பதாவது பதிப்பாகும். ஒரு புத்தகம் முப்பது முறை பதிப்பு பெற்று வெளிவந்திருக்கிறது என்றால் அதைவிட சிறப்புக் கூறு வேறு என்ன வேண்டும்? அந்த அளவிற்கு இப்புத்தகம் சிறப்பாக உள்ளது. தலைப்புகள் ஒன்றோடு ஒன்று விரவி காணப்படவில்லையென்றாலும் பல கருத்துகள் பரவி காணப்படுகின்றன.

**நூல் ஆசிரியர்:**

கண்ணீர்ப் பூக்கள் நூலின் ஆசிரியர் மு.மேத்தா அவர்கள்.

இத்தகைய சிறப்பான நூலை ஒவ்வொருவரும் படித்து பயன்பெறுவோமாக.

**படிவத்தை நிரப்புக:** PTA

## நூலக உறுப்பினர் படிவம்

திருநெல்வேலி மாவட்ட நூலக ஆணைக்குழு மைய / கிளை / ஊர்ப்புற நூலகம் மைய நூலகம்

### உறுப்பினர் சேர்க்கை அட்டை

அட்டை எண் : 154176 உறுப்பினர் எண்: 144567

1. பெயர் — பாரதி
2. தந்தை பெயர் — கண்ணன்
3. பிறந்த தேதி — 03-03-2004
4. வயது — 15
5. படிப்பு — பத்தாம் வகுப்பு
6. தொலைபேசி எண் — 0462 - 2325656
7. முகவரி (அஞ்சல் குறியீட்டு எண்ணுடன்) — 6/540, சாந்திநகர், பாளையங்கோட்டை - 627 002

நான் மாவட்ட மைய நூலகத்தில் உறுப்பினராகப் பதிவு செய்ய இத்துடன் காப்புத்தொகை ரூ.200, சந்தா தொகை ரூ.50 ஆக மொத்தம் ரூ.250 ரொக்கமாகச் செலுத்துகிறேன். நூலக நடைமுறை மற்றும் விதிகளுக்குக் கட்டுப்படுகிறேன் என உறுதியளிக்கிறேன்.

இடம்: பாளையங்கோட்டை — பாரதி

நாள்: 10.03.XXXX — தங்கள் உண்மையுள்ள

திரு/திருமதி/செல்வி/செல்வன் பாரதி அவர்களை எனக்கு நன்கு தெரியும் என சான்று அளிக்கிறேன்.

சேகர்

பிணைப்பாளர் கையொப்பம்

அலுவலக முத்திரை

(பதவி மற்றும் அலுவலகம்)

(மாநில / மைய அரசு அதிகாரிகள், கல்லூரி முதல்வர்கள், பேராசிரியர்கள், உயர் / மேல்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர்கள், சட்டமன்ற / நாடாளுமன்ற உறுப்பினர்கள், நகராட்சி/மாநகராட்சி/ஒன்றிய/பேரூராட்சி உறுப்பினர்கள்)

## மொழியோடு விளையாடு

**புதிர்ப் பாடலைப் படித்து விடையைக் கண்டுபிடிக்க**

தார்போன்ற நிறமுண்டு கரியுமில்லை
பார் முழுதும் பறந்து திரிவேன் மேகமுமில்லை
சேர்ந்து அமர்ந்து ஒலிப்பேன் பள்ளியுமில்லை
சோர்ந்து போகாமல் வீடமைப்பேன் பொறியாளருமில்லை
வீட்டுக்கு வருமுன்னே, வருவதைக் கூறுவேன்.
நான் யார்?

விடை : காகம்

**தொழிற்பெயர்களின் பொருளைப் புரிந்து கொண்டு தொடர்களை முழுமை செய்க.**

1. நிலத்துக்கு அடியில் கிடைக்கும் ________ யாவும் அரசுக்கே சொந்தம். நெகிழிப் பொருள்களை மண்ணுக்கு அடியில் ________ நிலத்தடி நீர்வளத்தைக் குன்றச் செய்யும்.
விடை: புதையல், புதைத்தல்

2. காட்டு விலங்குகளைச் ________ தடை செய்யப்பட்டுள்ளது. செய்த தவறுகளைச் ____ திருந்த உதவுகிறது. PTA
விடை: சுடுதல், சுட்டல்,

3. காற்றின் மெல்லிய ______ பூக்களைத் தலையாட்ட வைக்கிறது. கைகளின் நேர்த்தியான ______ பூக்களை மாலையாக்குகிறது. விடை: தொடுத்தல், தொடுதல்

4. பசுமையான ______ஐக் ______ கண்ணுக்கு நல்லது. PTA
விடை: காட்சி, காணுதல்

5. பொதுவாழ்வில் ______கூடாது. ______ இல் அவரை மிஞ்ச ஆள் கிடையாது. விடை: நடித்தல், நடிப்பு

## அகராதியில் காண்க:

மன்றல் – வாசனை, கல்யாணம், நெடுந்தெரு
அடிச்சுவடு – அடித்தடம்
அகராதி – அகர வரிசைப்படுத்திப் பொருள் விளக்கும் நூல்
தூவல் – தூவுதல், துலை, இறகு
மருள் – மயக்கம், திரிபுணர்ச்சி, வியப்பு, உன்மத்தம், கள், புதர், பேய்

## அ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.

## ஆ) காட்சியைக் கவிதையாக்குக:



அ) கற்பதற்கு வயதில்லை
கடந்து போனால் பயனில்லை
ஆனந்தமாய்க் கற்றிட
அனைவரையும் ஒன்றாய்க் கூட்டிட
அனைவருக்கும் கல்வி
என்றுரைப்போம் நாளும் சொல்லி

ஆ) 1. மரங்களை வெட்டிவிட்டு மரம் வளர்ப்பதைப் பற்றிப் படிக்கின்றோம்.
2. மரத்தின் தேவையைச் சிறுவர் முதல் பெரியவர் வரை உணர்த்தியாக வேண்டும்.
3. கரும்பலகையால் பாடம் நடத்திய காலம் போய்; கணினியால் பாடம் நடத்தும் காலத்தில் உள்ளோம்.
4. மரங்களை வளர்த்து அடுத்த தலைமுறையினைக் காக்க வழி வகுக்க வேண்டும்.
5. மரம் பற்றிப் படிக்க மரத்தின் நிழல் இல்லை.

## நிற்க அதற்குத் தக:

பள்ளியில் நான், வீட்டில் நான் – என்னும்தலைப்புகளில் நீங்கள், பள்ளியிலும் வீட்டிலும் நடந்து கொள்ளும் முறைகள் ஐந்தினைப் பட்டியலிடுக. PTA

| பள்ளியில் நான் | வீட்டில் நான் |
|---|---|
| குறிப்பிட்ட நேரத்தில் காலந்தவறாமல் பள்ளிக்கு வருவேன், | தினமும் காலையில் ஒரு மணிநேரம் படிப்பேன். |
| தூய்மையான உடைகளை உடுத்தி வருவேன். | உடன்பிறப்புகளுடன் நட்புறவு கொள்வேன் |
| ஆசிரியர்கள், பெரியோர்களை வணங்கி அவர்களுக்கு மதிப்பு தருவேன் | பெற்றோருக்குக் கீழ்படிந்து நடப்பேன் |
| குறிப்பிட்ட நேரத்தில் வீட்டிலிருந்து பள்ளிக்குப் புறப்படுவேன். | தினந்தோறும் வீட்டுப் பாடங்களை மறவாமல் செய்து வருவேன். |
| பள்ளி வளாகத்தையும் வகுப்பறையையும் தூய்மையாக வைத்திருப்பேன். | அம்மாவுக்கு என்னால் முடிந்த உதவிகளைச் செய்வேன் |

## கலைச்சொல் அறிவோம்

Emblem – சின்னம்
Intellectual – அறிவாளர்
Thesis – ஆய்வேடு
Symbolism – குறியீட்டியல்

## அலகுத் தேர்வு இயல் - 5

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக.** 4 × 1 = 4

1. கற்றவர் வழி அரசு செல்லும் என்கிறது __________.

அ) பக்தி இலக்கியம் ஆ) சங்க இலக்கியம்
இ) சிற்றிலக்கியம் ஈ) பேரிலக்கியம்

2. பரஞ்சோதி முனிவர் பிறந்த ஊர் __________.

அ) மயிலாடுதுறை ஆ) திருத்தணி
இ) மதுரை ஈ) திருமறைக்காடு

3. "இங்கு நகரப் பேருந்து நிற்குமா?" என்று வழிப்போக்கர் கேட்பது _______ வினா. "அதோ, அங்கே நிற்கும்." என்று மற்றொருவர் கூறியது ______ விடை.

அ) ஐயவினா, வினா எதிர் வினாதல் ஆ) அறிவினா, மறை விடை
இ) அறியாவினா, சுட்டு விடை ஈ) கொளல் வினா, இனமொழி விடை

4. ''அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி
மருளை அகற்றி மதிக்கும் தெருளை'' – என்று இவ்வடிகளில் குறிப்பிடப்படுவது யாது?

அ) தமிழ் ஆ) அறிவியல்
இ) கல்வி ஈ) இலக்கியம்

**II. கீழ்க்காணும் வினாக்களுக்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. நீதி வெண்பா உணர்த்தும் கல்வியின் சிறப்பு யாது?
2. சின்னமனூர்ச் செப்பேடு புலப்படுத்தும் செய்தி யாது?

**III. கீழ்க்காணும் வினாக்களுக்கு ஆறு வரிகளில் விடையளி.** 2 × 3 = 6

1. செய்குதம்பிப் பாவலர் குறித்து எழுதுக.
2. மொழிபெயர்ப்பு குறித்து அறிஞர்களின் கூற்றுகள் யாவை?

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** 1 × 8 = 8

1. இறைவன், புலவர் இடைக்காடன் குரலுக்குச் செவிசாய்த்த நிகழ்வை நயத்துடன் எழுதுக.

**V. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.** 2 × 2 = 4

1. விடை எத்தனை வகைப்படும்? அவை யாவை?
2. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும் – இக்குறட்பாவில் அமைந்துள்ள பொருள்கோளின் வகையைச் சுட்டி விளக்குக.

**VI. அடிப்பிறழாமல் எழுதுக:** 1 × 4 = 4

1. 'அருளைப்....' எனத் தொடங்கும் மனப்பாட பாடல்.



இயல் - 6 உரைநடை

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 1. நிகழ்கலை



## பலவுள் தெரிக

பாடநூல் வினாக்கள்:

1. ஒயிலாட்டத்தில் இருவரிசையில் நின்று ஆடுகின்றனர். இத்தொடரின் செயப்பாட்டு வினைத்தொடர் எது? PTA

அ) ஒயிலாட்டத்தில் இருவரிசையில் நின்று ஆடுவர்.
ஆ) ஒயிலாட்டத்தில் இருவரிசையில் நின்று ஆடப்படுகிறது.
இ) ஒயிலாட்டம் இருவரிசையில் நின்று ஆடப்படுகிறது.
ஈ) ஒயிலாட்டம் இருவரிசையில் நின்று ஆடப்படுகின்றனர்.

விடை : இ) ஒயிலாட்டம் இருவரிசையில் நின்று ஆடப்படுகிறது.

2. கரகாட்டத்தைக் கும்பாட்டம் என்றும் குடக்கூத்து என்றும் கூறுவர். இத்தொடருக்கான வினா எது?

அ) கரகாட்டம் என்றால் என்ன?
ஆ) கரகாட்டம் எக்காலங்களில் நடைபெறும்?
இ) கரகாட்டத்தின் வேறுவேறு வடிவங்கள் யாவை?
ஈ) கரகாட்டத்தின் வேறு பெயர்கள் யாவை?

விடை : ஈ) கரகாட்டத்தின் வேறு பெயர்கள் யாவை?

கூடுதல் வினாக்கள்

3. ________ நிகழ்த்துதலில் இத்தனை பேர் தான் நிகழ்த்த வேண்டும் என்ற வரையறை இல்லை.
அ) கரகாட்டம் ஆ) மயிலாட்டம்
இ) காவடியாட்டம் ஈ) ஒயிலாட்டம் **விடை:** அ) கரகாட்டம்

4. பாரந்தாங்கும் கோல் எனப் பொருள் தரும் சொல் ________.
அ) பா ஆ) கா
இ) சோ ஈ) பை **விடை:** ஆ) கா

5. "நீரற வறியாக் கரகத்து" என்று குறிப்பிடும் இலக்கியம் ________.
அ) அகநானூறு ஆ) புறநானூறு
இ) குறுந்தொகை ஈ) பரிபாடல் **விடை:** ஆ) அகநானூறு

6. நாட்டுப்புற மக்களால் நிகழ்த்தப்பட்டு வரும் கலையே ________.
அ) தெருக்கூத்து ஆ) புலி ஆட்டம்
இ) தப்பு ஆட்டம் ஈ) தேவராட்டம் **விடை:** அ) தெருக்கூத்து

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. கரகாட்டம் நடனம் கரகம், கும்பாட்டம் என்றும் அழைக்கப்படுகிறது.
**விடை:** கரகாட்டம் எவ்வாறெல்லாம் அழைக்கப்படுகிறது?

2. கரகாட்டம் நிகழ்த்துதலில் இத்தனை பேர் தான் நிகழ்த்த வேண்டும் என்ற வரையறை இல்லை.
**விடை:** கரகாட்டம் நிகழ்த்துதலில் எத்தனை பேர் நிகழ்த்த வேண்டும் என்ற வரையறை இருக்கிறது?

3. கரகாட்டத்தின் துணையாட்டமாக மயிலாட்டம் ஆடப்படுகிறது.
**விடை:** கரகாட்டத்தின் துணையாட்டமாக கருதப்படும் ஆட்டம் எது?

4. கா என்பதற்குப் பாரந்தாங்கும் கோல் என்று பொருள்.
**விடை:** கா என்பதன் பொருள் யாது?

5. தப்பாட்டம் நிகழ்த்தப்படும் சூழலுக்கேற்ப பல்வேறு ஆட்டக்கூறுகளைக் கொண்டுள்ளது. PTA
**விடை:** எவ்வாட்டம் நிகழ்த்தப்படும் சூழலுக்கேற்ப பல்வேறு ஆட்டக்கூறுகளைக் கொண்டுள்ளது?

6. ஒயிலாட்டத்தில் தோலால் கட்டப்பட்ட குடம், தவில், சிங்கி, டோலக், தப்பு போன்ற இசைக்கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. PTA
**விடை:** ஒயிலாட்டத்தில் எந்தெந்த இசைக்கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. கரக செம்பின் அடிபாகத்தை உட்புறமாக தட்டி ஆடுபவரின் தலையில் நன்கு படியும் படி செய்கின்றனர்.
**விடை:** கரகச் செம்பின் அடிப்பாகத்தை உட்புறமாகத் தட்டி ஆடுபவரின் தலையில் நன்கு படியும்படி செய்கின்றனர்.

2. இருமுனைகளிலும் சம எடைகளை கட்டிய தண்டினை தோளில் சுமந்து ஆடுவது காவடியாட்டம்.

**விடை:** இருமுனைகளிலும் சம எடைகளைக் கட்டிய தண்டினைத் தோளில் சுமந்து ஆடுவது காவடியாட்டம்.

3. தேவராட்டம், வானத்து தேவர்கள் ஆடிய ஆட்டம் என பொருள் கொள்ளபடுகிறது.

**விடை:** தேவராட்டம், வானத்துத் தேவர்கள் ஆடிய ஆட்டம் எனப்பொருள் கொள்ளப் படுகிறது.

## தேவையான இடங்களில் நிறுத்தற் குறியிடுக

1. போலச் செய்தல் பண்புகளைப் பின்பற்றி நிகழ்த்திக் காட்டும் கலைகளில் பொய்க்கால் குதிரையாட்டம் ஒன்று

**விடை:** "போலச் செய்தல்" பண்புகளைப் பின்பற்றி நிகழ்த்திக் காட்டும் கலைகளில் பொய்க்கால் குதிரையாட்டம் ஒன்று.

2. தப் தப் என்று ஒலிப்பதால் அந்த ஒலியின் அடியாகத் தப்பு எனப் பெயர் பெற்றதெனக் கூறப்படுகிறது.

**விடை:** 'தப் தப்' என்று ஒலிப்பதால், அந்த ஒலியின் அடியாகத் தப்பு எனப் பெயர் பெற்றதெனக் கூறப்படுகிறது.

3. நீரற வறியாக் கரகத்து புறம் 1 என்ற புறநானூற்றுப்பாடலடியில் கரகம் என்ற சொல் இடம் பெறுகிறது

**விடை:** "நீரற வறியாக் கரகத்து" (புறம். 1) என்ற புறநானூற்றுப் பாடலடியில் கரகம் என்ற சொல் இடம் பெறுகிறது.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

1. தமிழ் மக்களின் வீரத்தைச் சொல்லும் கலையாகத் திகழ்வது புலி ஆட்டமாகும். பாட்டும் வசனமும் இல்லாத ஆட்டங்களில் புலி ஆட்டமும் ஒன்று. விழாக்களில் புலிவேடமிடுவோர் உடம்பெங்கும் புலியைப் போன்று கறுப்பும் மஞ்சளுமான வண்ணக்கோடுகளையிட்டுத் துணியாலான வாலை இடுப்பில் கட்டிக் கொள்வர். தப்பு மேளத்திற்கேற்ப ஒருவரோ, இருவரோ ஆடுவர். புலியைப் போன்று நடந்தும் பதுங்கியும் பாய்ந்தும் எம்பிக்குதித்தும் நாக்கால் வருடியும் பற்கள் தெரிய வாயைப் பிளந்தும் உறுமியும் பல்வேறு அடவுகளை வெளிப்படுத்துகின்றனர்.

**வினாக்கள்:**

1. புலி ஆட்டத்தில் பாட்டும் வசனமும் உண்டா?

பாட்டும் வசனமும் இல்லாத ஆட்டங்களில் புலி ஆட்டமும் ஒன்று.

2. புலிவேடமிடுவோர் தங்களை எவ்வாறு அலங்கரித்துக்கொள்வர்?

புலி வேடமிடுவோர் உடம்பெங்கும் புலியைப் போன்று கறுப்பும் மஞ்சளுமான வண்ணக் கோடுகளையிட்டுத் துணியாலான வாலை இடுப்பில் கட்டிக்கொள்வர்.

3. புலியாட்டம் ஆடுபவர் எப்படி அடவுகளை வெளிப்படுத்துகின்றனர்?

புலியைப் போன்று நடந்தும் பதுங்கியும் பாய்ந்தும் எம்பிக்குதித்தும் நாக்கால் வருடியும் பற்கள் தெரிய வாயைப் பிளந்தும் உறுமியும் பல்வேறு அடவுகளை வெளிப்படுத்து கின்றனர்.

2. சிற்றூர் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளில் பிரித்துப் பார்க்க இயலாக் கூறுகளாகத் திகழ்பவை நிகழ்கலைகள். இவை மக்களுக்கு மகிழ்ச்சியெனும் கனி கொடுத்துக் கவலையைப் போக்குகின்றன. சமுதாய நிகழ்வுகளின் ஆவணங்களாகவும், செய்திகளைத் தரும் ஊடகங்களாகவும் திகழ்கின்றன. பழந்தமிழ் மக்களின் கலை, அழகியல், புதுமை ஆகியவற்றின் எச்சங்களை அறிவதற்குத் தற்காலத்தில் நிகழ்த்தப்படும் கலைகள் துணைசெய்கின்றன. PTA

1. பழந்தமிழ் மக்களின் எந்தெந்த எச்சங்களை அறிவதற்கு நிகழ்கலைகள் துணை செய்கின்றன?

பழந்தமிழ் மக்களின் கலை, அழகியல், புதுமை ஆகியவற்றின் எச்சங்களை அறிவதற்கு நிகழ்கலைகள் துணைசெய்கின்றன.

2. நிகழ்கலைகளின் பயன்கள் இரண்டினை எழுதுக.

- மக்களுக்கு மகிழ்ச்சியெனும் கனி கொடுத்துக் கவலையைப் போக்குகின்றன.
- சமுதாய நிகழ்வுகளின் ஆவணங்களாகவும், செய்திகளைத் தரும் ஊடகங்களாகவும் திகழ்கின்றன.

3. நிகழ்கலைகள் எப்பகுதி மக்களின் வாழ்வியல் கூறுகளில் ஒன்றாகத் திகழ்கின்றன?

சிற்றூர் மக்களின் வாழ்வியல் கூறுகளில் ஒன்றாகத் திகழ்கின்ற

## படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.

1.



1. பண்டைய காலத்திலிருந்தே இசைக் கலைஞர்கள் இருந்துள்ளனர்.
2. இசைக்கு மயங்காத உயிர்களே இவ்வுலகில் இல்லை.
3. இசைக்கருவிகள் பல வடிவங்களில் இருந்துள்ளன.
4. பண்டைய காலங்களில் தோற்கருவிகளும், காற்றுக் கருவிகளும் அதிகம் பயன்படுத்தப்பட்டன.
5. இசைக் கலைஞர்கள் சமூகத்தின் உணர்ச்சியின் வெளிப்பாடாக இருந்தனர்.

## கூடுதல் வினா:

PTA

2.



1. தமிழகத்தின் பாரம்பரிய நிகழ்கலைகள்
2. குடக்கூத்து என்று அழைக்கப்படும் நீர் பானை நடனம் தமிழர்களின் பாரம்பரிய நிகழ்கலையில் ஒன்று.
3. ஒரே நிறத் துணியை முண்டாசு போல கட்டி ஆடும் ஆட்டம் ஒயிலாட்டம்.
4. இருமுனைகளிலும் சம எடைகளைக் கட்டிய தண்டினைத் தோளில் சுமந்து ஆடுவது காவடியாட்டம்
5. குதிரை கூடு அணிந்து அதன்மேல் சவாரி செய்வது போல் பாங்கு செய்து ஆடும் ஆட்டம் பொய்க்கால் குதிரை ஆட்டம்.

Don

## குறுவினா

**கூடுதல் வினாக்கள்:**

1. கரகாட்டம் என்பது யாது?
   - பன்னெடுங்காலமாக மக்களால் விரும்பப்படும் உயர்ந்த கலைகளில் ஒன்றே கரகாட்டம்.
   - ''கரகம்'' என்னும் பித்தளைச் செம்பையோ, சிறிய குடத்தையோ தலையில் வைத்துத் தாளத்திற்கு ஏற்ப ஆடுவது கரகாட்டம்.
   - இந்த நடனம் கரகம், கும்பாட்டம் என்றும் அழைக்கப்படுகிறது.

2. கரகாட்டம் எந்தெந்த மாவட்டங்களில் நிகழ்த்தப்படுகிறது?

   தமிழகத்தில் மதுரை, திண்டுக்கல், திருச்சி, தஞ்சாவூர், கோயம்புத்தூர், திருநெல்வேலி முதலிய மாவட்டங்களில் கரகாட்டம் நிகழ்த்தப்படுகிறது.

3. காவடியாட்டம் என்பது யாது?

   இருமுனைகளிலும் சம எடைகளைக் கட்டிய தண்டினைத் தோளில் சுமந்து ஆடுவது காவடியாட்டம்.

4. காவடியாட்டத்தை எவ்வாறெல்லாம் அழைக்கின்றனர்?

   மச்சக்காவடி, சர்ப்பக்காவடி, பூக்காவடி, தேர்க்காவடி, பறவைக்காவடி என்று காவடியாட்டத்தை அதன் அமைப்புக்கேற்ப அழைக்கின்றனர்.

5. ஒயிலாட்டம் என்பது யாது?

   ஒரே நிறத் துணியை முண்டாசு போலக் கட்டியும், காலில் சலங்கை அணிந்தும், கையில் வைத்துள்ள துணியை இசைக்கேற்ப வீசியும் ஒயிலாக ஆடும் குழு ஆட்டமே ஒயிலாட்டமாகும்.

6. சேவையாட்டம் என்பது யாது?
   - சேவையாட்டம் ஆட்டக்கலைஞர்கள் சேவைப்பலகை, சேமக்கலம், ஜால்ரா ஆகிய இசைக்கருவிகளை இசைத்துக் கொண்டே ஆடுவர்.
   - இசைச்சார்புக் கலையாகவும், வழிபாட்டுக் கலையாகவும் நிகழ்த்துகின்றனர்.

7. பொய்க்கால் குதிரையாட்டம் என்பது யாது? PTA

   மரத்தாலான பொய்க்காலில் நின்று கொண்டும் குதிரை வடிவுள்ள கூட்டை உடம்பில் சுமந்து கொண்டும் ஆடும் ஆட்டமே பொய்க்கால் குதிரையாட்டமாகும்.

8. புலி ஆட்டத்தில் வெளிப்படும் அடவுகள் யாவை?

   புலியைப் போன்று நடந்தும், பதுங்கியும், பாய்ந்தும், எம்பிக்குதித்தும் நாக்கால் வருடியும், பற்கள் தெரிய வாயைப் பிளந்தும், உறுமியும் பல்வேறு அடவுகளை வெளிப் படுத்துகின்றனர்.

9. தோற்பாவைக் குறித்து விளக்கம் தருக.
   - தோலில் செய்த வெட்டு வரைபடங்களை விளக்கின் ஒளி ஊடுருவும் திரைச்சீலையில் பொருத்துவர்.
   - கதைக்கேற்ப மேலும் கீழும் பக்கவாட்டிலும் அசைத்துக்காட்டி உரையாடியும் பாடியும் காட்டுவது தோற்பாவைக் கூத்து.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. படங்கள் வெளிப்படுத்தும் நிகழ்க்கலை குறித்து இரண்டு வினாக்களையும் அவற்றுக்கான விடைகளையும் எழுதுக. PTA





அ) பரதநாட்டியம் பற்றிக் குறிப்பிடுக.

பரதம் – பாவம் ராகம், தாளம்

பாவம் – வெளிப்படுத்தும் தன்மை உணர்ச்சி

ராகம் – இசை

- கூத்து, ஆடல், நாட்டியம், சதிர், சின்னமேளம் என பல பெயர்களில் இக்கால வடிவம் அழைக்கப்பட்டது.
- இந்த நடனத்தை ஆடுவோர் பெரும்பான்மையோர் பெண்களே என்றாலும் ஆண்களும் இதனை ஆடுவதுண்டு.
- சிவபெருமான் ஆடும் நடனம் "தாண்டவம்" என்று சொல்லப்படும். காலில் சலங்கை கட்டி ஆடும் ஆட்டம். உடல் அசைவுகளும் 'கை' முத்திரைகளையும் சேர்த்து அடவு என்பர்.
- பல அடவுகள் சேர்ந்தது 'ஜதி' எனப்படும்.
- நிருத்தம், நிருத்தியம், நாட்டியம் என்னும் மூன்று ஆடல் முறைகளைக் கொண்டது பரதநாட்டியம்.

ஆ) கரகாட்டம் பற்றிக் குறிப்பிடுக.

- கரகம் என்னும் பித்தளைச் செம்பையோ. சிறிய குடத்தையோ தலையில் வைத்துத் தாளத்திற்கு ஏற்ப ஆடுவது கரகாட்டம்.
- கரகச் செம்பு தலையில் நிற்கும் அளவு எடையை ஏற்றுவதற்குச் செம்பில் மணலையோ, பச்சரிசியையோ நிரப்புவர்.
- கண்ணாடியாலும் பூக்களாலும் அழகூட்டிய கரகக் கூட்டின் நடுவில் கிளி பொம்மை பொருத்திய மூங்கில் குச்சியைச் செருகி வைத்து ஆடுவர்.

## கூடுதல் வினாக்கள்:

2. கரகாட்டத்தில் எத்தகைய அடவுகளைக் கலைஞர்கள் ஆடிக்காட்டுவர்?

- ஊர்ந்து ஆடுதல்
- மிதந்து ஆடுதல்
- சுற்றி ஆடுதல்
- இற கை விரித்தாடுதல்
- தலையைச் சாய்த்தாடுதல்
- தாவியாடுதல்
- இருபுறமும் சுற்றியாடுதல்
- அகவுதல்
- தண்ணீர் குடித்துக் கொண்டே ஆடுதல்

ஆகிய அடவுகளைக் கலைஞர்கள் கரகாட்டத்தில் ஆடிக்காட்டுவர்.

3. நிகழ்கலைகள் எவ்வெவ்வாறு திகழ்கின்றன?

- சிற்றூர் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளில் பிரித்துப் பார்க்க இயலாக் கூறுகளாகத் திகழ்பவை நிகழ்கலைகள்.
- இவை மக்களுக்கு மகிழ்ச்சியெனும் கனி கொடுத்துக் கவலையைப் போக்குகின்றன.
- சமுதாய நிகழ்வுகளின் ஆவணங்களாகவும், செய்திகளைத் தரும் ஊடகங்களாகவும் திகழ்கின்றன.
- பழந்தமிழ் மக்களின் கலை, அழகியல், புதுமை ஆகியவற்றின் எச்சங்களை அறிவதற்குத் தற்காலத்தில் நிகழ்த்தப்படும் கலைகள் துணை செய்கின்றன.

4. ஒயிலாட்டத்தின் சிறப்புகள் யாவை?

- ஒயிலாட்டத்தை இருவரிசையாக நின்றும் ஆடுகின்றனர்.
- ஒருவருக்கொருவர் இடம் விட்டு விலகி நின்று ஆடும் இந்த ஒயிலாட்டத்தைப் பெரும்பாலும் ஆண்கள் ஆடுவதே வழக்கில் உள்ளது.
- ஒரே குழுவில் வயது முதிர்ந்தவர்களும், இளைஞர்களும் இணைந்து ஆடுவதும் உண்டு.
- இந்த ஆட்டத்தில் தோலால் கட்டப்பட்ட குடம், தவில், சிங்கி, டோலக், தப்பு போன்ற இசைக்கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

5. தப்பாட்டம் அல்லது பறை பற்றிய இலக்கியச் செய்திகளைக் குறிப்பிடுக.

- தகக தகதகக தந்தத்த தந்தகக
  என்று தாளம்
  பதலை திமிலைதுடி தம்பட்ட மும் பெருக
  என்று அருணகிரிநாதர், தப்பாட்ட இசை குறித்துப் பாடியுள்ளார்.
- தொல்காப்பியம் குறிப்பிடும் கருப்பொருள்களில் ஒன்றாகப் பறை இடம் பெறுகிறது.

6. தப்பாட்டத்தின் ஆட்டக்கூறுகள் யாவை?

வட்டமாக ஆடுதல், இரண்டு வரிசையாக எதிர் எதிர்த் திசையில் நின்று ஆடுதல், அனைவரும் நேர் வரிசையில் நின்று ஆடுதல், குதித்துத் குதித்து ஆடுதல், உட்கார்ந்து எழுதல், நடையாட்டம் ஆகிய ஆட்டக்கூறுகளைத் தப்பாட்டத்தில் நாம் காணலாம்.

7. தெருக்கூத்து பற்றி விளக்குக.

- நாட்டுப்புற மக்களால் நிகழ்த்தப்பட்டு வரும் கலையே தெருக்கூத்து.
- கூத்து இசையுடன் கூடிய உடல் அசைவியக்கத்துடன் தொடர்புடையது.
- திறந்த வெளியை ஆடுகளமாக்கி, ஆடை அணி ஒப்பனைகளுடன் இது வெளிப் படுத்தப்படுகிறது.
- களத்துமேடுகளில் நிகழ்த்தப்பட்ட தெருக்கூத்து, தெருச் சந்திப்புகளிலும் நிகழ்த்தப் படுகிறது.

8. கூத்துக்கலை வளர்ப்பதில் முத்துசாமி அவர்களின் பங்களிப்பினைக் குறிப்பிடுக.

- தெருக்கூத்தைத் தமிழ்க்கலையின் முக்கிய அடையாளமாக்கியவர் முத்துசாமி
- "நாடகக்கலையை மீட்டெடுப்பதே தமது குறிக்கோள்" என்றவர்.
- தமிழ்நாட்டின் வழிவழி நாடகமுறையான கூத்துக்கலையின் ஒப்பனைமுறை, கதை சொல்லும் முறைகளையும் எடுத்துக்கொண்டு புதுவிதமான நாடகங்களை உருவாக்கியவர்.
- நாடகத்தில் பயன்படுத்தும் நேரடி இசைமுறையை அறிமுகம் செய்து இசையிலும் மாற்றங்களை ஏற்படுத்தியவர் ந.முத்துசாமி ஆவார்.

## நெடுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. நெகிழிப் பைகளின் தீமையைக் கூறும் பொம்மலாட்டம் ஒன்று உங்களின் பள்ளியின் ஆண்டு விழாவில் நிகழ்த்தப்படுகிறது. அதற்குப் பாராட்டுரை ஒன்றினை எழுதுக.

**உரையாடலும் பாடலும்:**

- நெகிழிப் பைகளின் தீமையை உரையாடல் மூலம் விளக்கிய தன்மை வியப்புக்குரியது,
- மக்களிடம் எளிதில் சென்று சேரும் தன்மை வாய்ந்த எளிய சொற்றொடர்களால் இனிமையாக உரையாடலை அமைத்த தன்மை பாராட்டுக்குரியது.

தற்கால இசையில் இனிய பாடல் மூலமாக ''நெகிழியே நீ ஓடிப்போ'' என்ற கருத்தை அனைவர் மனங்களின் விதைத்த தன்மை சிறப்புக்குரியது.

**கண்களுக்கு விருந்து:**

பொம்மலாட்டத்தில் இடம் பெற்ற நடனம், நாடகம், பல குரலில் பேசிய தன்மை, பொம்மைகளின் அசைவுகள் அனைத்தும் கண்களுக்கு விருந்தாக அமைந்தன. கருத்துகளை அள்ளித்தந்து விழிப்புணர்வைத் தந்தன.

**முயற்சி தொடரட்டும்:**

- தற்காலத் தேவைகளில் முதலாவதாக விழிப்புணர்வு தரக்கூடிய நெகிழியின் தீமையைப் பற்றிய இந்நிகழ்வு பாராட்டுக்குரியது.

- தொடர்ந்து இத்தகைய நிகழ்வுகள் பல இடங்களிலும், பல விழாக்களிலும் நிகழ்த்தப்பட வேண்டும்.
- உங்கள் முயற்சி சமுதாயத்தில் விழிப்புணர்வை உண்டாக்கட்டும்; மாற்றத்தை கொண்டு வரட்டும் என பாராட்டுகிறேன்.

2. நிகழ்கலை வடிவங்கள் – அவை நிகழும் இடங்கள் – அவற்றின் ஒப்பனைகள் – சிறப்பும் பழைமையும் – இத்தகைய மக்கள் கலைகள் அருகிவருவதற்கான காரணங்கள் – அவற்றை வளர்த்தெடுக்க நாம் செய்ய வேண்டுவன – இவை குறித்து நாளிதழ் தலையங்கம் எழுதுக. PTA

**நிகழ்கலை வடிவங்கள்:**

- சிற்றூர் மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளில் பிரித்துப் பார்க்க இயலாக் கூறுகளாகத் திகழ்பவை நிகழ்கலைகள்.
- இவை மக்களுக்கு மகிழ்ச்சியெனும் கனி கொடுத்துக் கவலையைப் போக்குகின்றன.
- சமுதாய நிகழ்வுகளின் ஆவணங்களாகவும் செய்திகளை தரும் ஊடகங்களாகவும் திகழ்கின்றன.
- பழந்தமிழ் மக்களின் கலை, அழகியல், புதுமை ஆகியவற்றின் எச்சங்களை அறிவதற்குத் தற்காலத்தில் நிகழ்த்தப்படும் கலைகள் துணை செய்கின்றன.

**கரகாட்டம்:**

- பன்னெடுங்காலமாக மக்களால் விரும்பப்படும் மரபார்ந்த கலைகளில் ஒன்று கரகாட்டம்.
- ஆணும் பெண்ணும் சேர்ந்து நிகழ்த்தும் கரகாட்டத்தில் சில நேரங்களில் ஆண், பெண் வேடமிட்டு ஆடுவதும் உண்டு.
- கரகாட்டம் நிகழ்த்துதலில் இத்தனை பேர் தான் நிகழ்த்த வேண்டும் என்ற வரையறையில்லை.

**மயிலாட்டம்:**

- மயில் வடிவுள்ள கூட்டுக்குள் ஒருவர் தன் உருவத்தை மறைத்துக் கொண்டு நையாண்டி மேளத்திற்கேற்ப ஆடும் ஆட்டமே மயிலாட்டமாகும்.
- நையாண்டி மேளம் இசைக்க, காலில் கட்டப்பட்டுள்ள சலங்கை ஒலிக்க அசைவுகளை ஆடிக்காட்டுவர்.
- கரகாட்டத்தின் துணையாட்டமாகவும் மயிலாட்டம் ஆடப்படுகிறது.

**காவடியாட்டம்:**

- இரு முனைகளிலும் சம எடைகளைக் கட்டிய தண்டினைத் தோளில் சுமந்து ஆடுவது காவடியாட்டம்.
- மயிலிறகுக் கற்றைகளை இருபுறமும் பொருத்தி, மணிகளால் அழகுபடுத்திக் காவடியை உருவாக்குகின்றனர்.
- இலங்கை, மலேசியா உட்பட, புலம்பெயர் தமிழர் வாழும் பிற நாடுகளிலும் காவடியாட்டம் ஆடப்படுகிறது.

**ஒயிலாட்டம்:**

- ஒரே நிறத் துணியை முண்டாசு போலக் கட்டியும், காலில் சலங்கை அணிந்தும், கையில் வைத்துள்ள சிறுதுணியை இசைக்கேற்ப வீசியும் ஒயிலாக ஆடும் குழு ஆட்டமே ஒயிலாட்டம்.
- இருவரிசையாக நின்று ஆடும் இவ்வாட்டத்தை பெரும்பாலும் ஆண்கள் ஆடுவதே வழக்கில் உள்ளது.

**தேவராட்டம்:**

- இது வானத்துத் தேவர்கள் ஆடிய ஆட்டம் எனப் பொருள் கொள்ளப்படுகிறது.
- இது ஆண்கள் மட்டுமே ஆடும் ஆட்டம்.
- தேவராட்டம் குறிப்பாகச் சடங்கு சார்பாக ஆடப்படுகின்றது.

- தேவராட்டம் போன்றே ஆடப்பட்டும் வருகின்ற கலை, சேவையாட்டம்.
- இதனை இசைச் சார்புக் கலையாகவும் வழிபாட்டுக் கலையாகவும் நிகழ்த்துகின்றனர்.

**பொய்க்கால் குதிரையாட்டம்:**

- மரத்தாலான பொய்க்காலில் நின்று கொண்டும் குதிரை வடிவுள்ள கூட்டை உடம்பில் சுமந்துகொண்டும் ஆடும் ஆட்டமே பொய்க்கால் குதிரையாட்டம்.
- குதிரைமேல் ஏறிப் பயணம் செய்வது போன்று கடிவாளத்தை ஆட்டியும் காலை உயர்த்தியும் நான்கு புறமும் ஓடியும் ஆடுகின்றனர்.
- இது மராட்டியர் காலத்தில் தஞ்சைக்கு வந்ததாகக் கூறப்படுகிறது.

**தப்பு ஆட்டம்:**

- 'தப்பு' என்ற தோற்கருவியை இசைத்துக் கொண்டே, அதன் இசைக்கு ஏற்ப ஆடுகின்ற நிகழ்கலையே தப்பாட்டமாகும்.
- ஆண்கள் மட்டுமே ஆடிவந்த இந்த ஆட்டம் தற்போது பெண்களாலும் ஆடப்படுகின்றது.
- இவ்வாட்டம் தப்பாட்டம், தப்பட்டை, தப்பு என்றும் அழைக்கப்படுகிறது.
- கோயில் திருவிழா, திருமணம், இறப்பு, விழிப்புணர்வு முகாம், விளம்பர நிகழ்ச்சி ஆகியவற்றில் தப்பாட்டம் ஆடப்படுகிறது.

**புலி ஆட்டம்:**

- தமிழ் மக்களின் வீரத்தைச் சொல்லும் கலையாகத் திகழ்வது புலி ஆட்டமாகும்.
- விழாக்களில் புலி வேடமிடுவோர் உடம்பெங்கும் புலியைப் போன்று கறுப்பும் மஞ்சளுமான வண்ணக் கோடுகளையிட்டு துணியாலான வாலை இடுப்பில் கட்டிக் கொண்டு புலி போல் ஆடுவர்.

**கூத்துக்கலை:**

- நாட்டுப்புற மக்களால் நிகழ்த்தப்பட்டு வரும் கலையே தெருக்கூத்து.
- திறந்த வெளியை ஆடுகளமாக்கி ஆடை அணி ஒப்பனைகளுடன் இது வெளிப்படுத்தப்படுகிறது.
- தெருக்கூத்து, வேளாண்மை செய்வோரின் கலையாக இருந்தது.
- தோலில் செய்த வெட்டு வரைபடங்களை, விளக்கின் ஒளி ஊடுருவும் திரைச் சீலையில் பொருத்தி, கதைக்கேற்ப மேலும், கீழும், பக்கவாட்டிலும் அசைத்துக்காட்டி, உரையாடியும் பாடியும் காட்டுவது தோற்பாவைக் கூத்து.

**சிறப்பும் பழமையும்:**

- நிகழ்கலைகள் மக்களோடு நேரடித் தொடர்பான கலைகளாகும்.
- மக்களுக்கு மகிழ்ச்சியளித்து அவர்கள் கவலையைப் போக்குகின்றன.
- சமுதாயத்தின் பண்பாட்டு நிகழ்வுகளை வெளிப்படுத்தும் சாதனங்களாகத் திகழ்கின்றன.

**அருகி வரக்காரணங்கள்:**

- திரைப்படம் மற்றும் தொலைக்காட்சித் தொடர்களின் ஆதிக்கம்,
- கிராமப்புறங்களில் உள்ள மக்கள் நாட்டுப்புறக் கலைகளை வளர்ப்பதில் ஆர்வம் காட்டாத நிலை,
- கலைஞர்கள் போதிய வாய்ப்பின்றி வறுமையில் வாடுகின்ற நிலை ஆகியவை இக்கலை அருகி வருவதற்குக் காரணங்களாக உள்ளன.

**முடிவுரை:**

நிகழ்கலைகள் ஊரக மக்களின் வாழ்வில் இரண்டறக் கலத்திருக்கின்றன. இவை கற்றோராலும் மற்றோராலும் விரும்பப்படும் கலைகளாக உள்ளன. உழைப்பாளிகளின் உணர்வுகளாக உள்ளன; மக்களின் எண்ண வெளிப்பாடாக, வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடியாக, மக்களின் சமய வழிபாட்டிலும் வாழ்வியல் நிகழ்வுகளிலும் பிரிக்க முடியாத பண்பாட்டுக் கூறுகளாக விளங்குகின்றன.

## கற்பவை கற்றபின்

நீங்கள் வாழும் பகுதியிலுள்ள நிகழ்கலைக் கலைஞர்களை நேர்முகம் கண்டு, அவற்றைத் தொகுத்து வகுப்பறையில் படித்துக்காட்டுக. PTA

(நிகழ்கலைக் கலைஞர்கள் மும்பைக்கு நிகழ்ச்சி நடத்த புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அப்போது அவர்களுடன் நடத்திய நேர்முகம்)

போட்டியாளர் : உங்கள் அனைவரையும் ஒரே இடத்தில் காண்பது மகிழ்ச்சி. எங்கே புறப்படத் தயாராக உள்ளீர்கள்?

நிகழ்கலைக் கலைஞர் : நாங்கள் மும்பைக்கு ஒரு வாரம் கலை நிகழ்ச்சிகள் நடத்தச் செல்கின்றோம். அங்குள்ள தமிழ்ச் சங்கம் எங்களுக்கு அழைப்பு விடுத்துள்ளது.

போட்டியாளர் : என்னென்ன நிகழ்கலைகளை நடத்தச் செல்கிறீர்கள்?

நிகழ்கலைக் கலைஞர் : தப்பாட்டம், மயிலாட்டம், கரகாட்டம், பொம்மலாட்டம், ஒயிலாட்டம் நடத்தக் கூடிய கலைஞர்கள் 50 பேர் செல்கின்றோம்.

போட்டியாளர் : நீங்கள் கலைகள் மூலம் சமுதாயத்தில் ஏற்படுத்தும் மாற்றங்கள், விழிப்புணர்வு அனைத்தும் சிறப்புக்குரியவை. உங்கள் பயணம் சிறக்க வாழ்த்துக்கள்.

நிகழ்கலைக் கலைஞர் : உங்கள் ஊரிலும், உங்கள் நண்பர்களிடமும் கூறி எங்களுக்கு நிகழ்ச்சி நடத்த வாய்ப்புத் தாருங்கள்.

போட்டியாளர் : நிச்சயமாக இந்த ஆண்டு தசரா கொண்டாட்டத்தின் போது உங்களை அழைப்போம். நன்றி.

நிகழ்கலைக் கலைஞர் : நன்றி!





இயல் - 6 | செய்யுள்

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 2. பூத்தொடுத்தல்

உமா மகேஸ்வரி

## பாடல்:

இந்த பூவைத் தொடுப்பது எப்படி?
சாந்தமானதொரு பிரபஞ்சத்தைச்
சுமக்கின்றன ஒல்லித் தண்டுகள்
இறுக்கி முடிச்சிட்டால்
காம்புகளின் கழுத்து முறியும்.
தளரப் பிணைத்தால்
மலர்கள் தரையில் நழுவும்,
வாசலில் மரணம் நிற்பதறிந்தும்
வருந்தாமல் சிரிக்கும்
இந்தப் பூவை
எப்படித் தொடுக்க நான்–
ஒருவேளை,
என் மனமே நூலாகும்
நுண்மையுற்றாலொழிய.

## சொற்பொருள்:

| | |
|---|---|
| இந்தப்பூவைத் தொடுப்பது எப்படி? | – இந்த மணமிக்க பூவினை எப்படித் தொடுப்பது? |
| சாந்தமானதொரு பிரபஞ்சத்தை | – மிகவும் அமைதியும் அன்பும் நிறைந்த உலகத்தை |
| சுமக்கின்றன ஒல்லித்தண்டுகள் | – மிகவும் ஒல்லியான தண்டுகள் தாங்கிப் பிடிக்கின்றன |
| இறுக்கி முடிச்சிட்டால் | – மிகவும் இறுக்கி முடிச்சு போட்டால் |
| காம்புகளின் கழுத்து முறியும் | – தாங்கிப்பிடிக்கின்ற காம்புகளின் கழுத்து முறியும் |
| தளரப் பிணைத்தால் | – சிறிது நெகிழ்வாக கட்டினால் |
| மலர்கள் தரையில் நழுவும் | – மலர்கள் தரையில் நழுவி கீழே விழும் |
| வாசலில் மரணம் நிற்பதறிந்தும் | – தன் முன்னால் மரணம் தயாராக இருப்பதை அறிந்தும் |
| வருந்தாமல் சிரிக்கும் | – சிறிதளவு கூட வருத்தப்படாமல் சிரிக்கும் |
| இந்தப் பூவை | – இத்தகைய சிறப்பு வாய்ந்த பூவை |
| எப்படித் தொடுக்க நான் | – எப்படி நான் சேர்த்துக் கட்டுவது? |
| ஒருவேளை | – ஒரு சமயம் |
| என் மனமே நூலாகும் | – என் மனமாகிய நூலாக்கி |
| நுண்மையுற்றாலொழிய | – நுட்பத்தை அறிந்தால் ஒழிய |

## பொருளுரை:

இந்த மணமிக்க மலரை நான் எப்படித் தொடுக்கப்போகிறேன்? அமைதியும் சாந்தமும் மிகுந்த உலகத்தைத் தாங்கிப் பிடிக்கின்றன ஒல்லித் தண்டுகள்.

இத்தகைய மலர்களை இறுக்கமாக முடிச்சிட்டால் காம்புகளின் கழுத்து முறியும். சற்று தளர்வாகப் சேர்த்துக் கட்டினால் மலர்கள் தரையில் நழுவி கீழே விழும். வருத்தப்படாமல் சிரிக்கும் இந்தப் பூவை எப்படி நான் தொடுக்க?

ஒரு வேளை என் மனத்தை நூலாக்கும் நுட்பத்தை அறிந்தால் தான் நான் இதனைத் தொடுக்க இயலும்.

**விளக்கவுரை:**

இப்பாடலில் மலரைத் தொடுக்கும் திறமையை வியந்து பாடுகிறார். அதனை இறுக்கமாகவும் அன்றி, தளர்வாகவும் அன்றி சரியாகத் தொடுக்க தனது மனத்தையே நூலாக்கினால் தான் முடியும் என்று கூறுகிறார் ஆசிரியர்.

## ஆசிரியர் குறிப்பு:

- ஆசிரியர் பெயர் : உமா மகேஸ்வரி
- பிறந்த மாவட்டம் : மதுரை
- எழுதிய நூல்கள் : நட்சத்திரங்களின் நடுவே, வெறும் பொழுது, கற்பாவை.
- பல்துறைகள் : கவிதை, சிறுகதை, புதினம் என்று பல தளங்களில் சிறப்பு மிக்கவர்.

## மதிப்பீடு

**பொருள் தருக:**

1. தொடுப்பது – சேர்ப்பது
2. பிரபஞ்சம் – உலகம்
3. சாந்தம் – அமைதி
4. பிணைத்தால் – ஒன்று சேர்த்தால்
5. நுண்மை – கூர்மையான

**பகுபத உறுப்பிலக்கணம் தருக:**

1. தொடுப்பது – தொடு + ப் + ப் + அ + து

   தொடு – பகுதி
   ப் – சந்தி
   ப் – எதிர்கால இடைநிலை
   அ – சாரியை
   து – ஒன்றன்பால் வினைமுற்று விகுதி

2. பிணைத்தால் – பிணை + த் + த் + ஆல்

   பிணை – பகுதி
   த் – சந்தி
   த் – எதிர்கால இடைநிலை
   ஆல் – விகுதி

3. தொடுக்க – தொடு + க் + க் + அ

   தொடு – பகுதி
   க் – சந்தி
   க் – எதிர்மறை இடைநிலை
   அ – பெயரெச்ச விகுதி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. மலர்கள் தரையில் நழுவும். எப்போது? PTA

அ) அள்ளி முகர்ந்தால் ஆ) தளரப் பிணைத்தால்
இ) இறுக்கி முடிச்சிட்டால் ஈ) காம்பு முறிந்தால் **விடை:** ஆ) தளரப் பிணைத்தால்

**கூடுதல் வினாக்கள்:**

2. என் மனமே நூலாகும். எப்போது?

அ) நுண்மையுற்றால் ஆ) தளரப்பிணைத்தால்
இ) இறுக்கி முடிச்சிட்டால் ஈ) அப்படியே இருந்தால்

**விடை:** அ) நுண்மையுற்றால்

3. எப்போது காம்புகளின் கழுத்து முறியும்?

அ) திருகும் போது ஆ) இறுக்கி முடிச்சிடும் போது
இ) தளரப் பிணைத்தால் ஈ) மனத்தை நூலாக்கினால்

**விடை:** ஆ) இறுக்கி முடிச்சிடும் போது

4. 'பிரபஞ்சம்' என்பதன் பொருள்

அ) அன்பு ஆ) ஆற்றல்
இ) உலகம் ஈ) மலர் **விடை:** அ) உலகம்

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. சாந்தமானதொரு பிரபஞ்சத்தைச்
சுமக்கின்றன ஒல்லித் தண்டுகள்
– இக்கவிதை அடிகள் உணர்த்தும் உள்ளழகை எழுதுக. PTA

மலரின் ஒல்லியான தண்டுகள் அமைதியானதொரு உலகத்தைச் சுமப்பதாக இந்த அடிகள் கூறுகின்றன. அதாவது மலரை ஒரு பிரபஞ்சமாக இந்தப் பாடலில் ஆசிரியர் உருவகிக்கிறார்.

**கூடுதல் வினாக்கள்:**

2. இறுக்கி முடிச்சிட்டால்
காம்புகளின் கழுத்து முறியும்
தளரப் பிணைத்தால்
மலர்கள் தரையில் நழுவும்
வாசலில் மரணம் நிற்பதறிந்தும்
வருந்தாமல் சிரிக்கும்
இப்பாடலில் அமைந்துள்ள இயைபு நயங்களை எடுத்தெழுதுக. PTA

அடிகளில் இறுதிச்சீர் ஒன்று போல் அமைவது இயைபுத் தொடை ஆகும்.

இப்பாடலில் கழுத்து <u>முறியும்</u>
தரையில் <u>நழுவும்</u>
வருந்தாமல் <u>சிரிக்கும்</u>

என இயைபு நயம் சிறப்பாக அமைந்துள்ளது.

3. இந்த பூவை எப்பொழுது தொடுக்க முடியும்?

மலரின் காம்பு முறியாமலும், மலர்கள் தளர்ந்து தரையில் விழாமலும் தொடுப்பது எப்படி? மனத்தை நூலாக்கி கூர்மையாகத் தொடுத்தால் மட்டும் இந்த பூவைத் தொடுக்க முடியும்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. நவீன கவிதையில் வெளிப்படும் நுண்மை உள்ளம், பூத்தொடுக்கும் நாட்டுப்புறப்பாடலில் வெளிப்படுகிறது. ஒப்பிட்டு எழுதுக. PTA

| இறுக்கி முடிச்சிட்டால்<br>காம்புகளின் கழுத்து முறியும்.<br>தளரப் பிணைத்தால்<br>மலர்கள் தரையில் நழுவும்.<br>வாசலில் மரணம் நிற்பதறிந்தும்<br>வருந்தாமல் சிரிக்கும்<br>இந்தப்பூவை<br>எப்படித் தொடுக்க நான்<br>– நவீன கவிதை | கையாலே பூவெடுத்தா – மாரிக்குக்<br>காம்பழுகிப் போகுமின்னு<br>விரலாலே பூவெடுத்தா – மாரிக்கு<br>வெம்பி விடுமென்று சொல்லி<br>தங்கத் துரட்டி கொண்டு – மாரிக்குத்<br>தாங்கி மலரெடுத்தார்<br>– நாட்டுப்புறப்பாடல் |
|---|---|

- நவீன கவிதையில் பூக்களை இறுக்கமாக முடிச்சிட்டால் காம்புகளின் கழுத்து முறிந்து விடும்.
- தளர்வாகப் பூக்களைச் சேர்த்தால் தரையில் வீழ்ந்து விடும்.
- இங்கு பூவின் மென்மையும், அழகும், நளினமும் அருமையாக எடுத்துரைக்கப்படுகிறது.
- நாட்டுப்புறப்பாடலில் பூவைக் கையால் எடுத்து மாரியம்மனுக்குச் சூட்டினால் காம்பு அழுகிப்போகுமாம்.
- விரலால் பூவை எடுத்தால் வெதும்பி விடுமாம். அதனால் தங்கத்துரட்டியால் மலரை எடுத்து மாரியம்மனுக்கு மலர் சூட்டுவார்கள் என்று கூறப்படுகிறது.
- இரு பாடல்களிலும் பூக்களின் மென்மை, அவற்றைக் கையாள வேண்டிய நுட்பத்தன்மை போன்றவற்றை நாம் காண்கிறோம்.

## கற்பவை கற்றபின்

ஒவ்வொரு நாளும் நீங்கள் பார்க்கும் காட்சிகளில் எதிர்கொள்ளும் நிகழ்வுகளில் கண்டுணரும் அழகை மூன்று நிமிடங்கள் சொற்களில் விவரிக்க.

அதிகாலை கதிரவன் காரிருளைக் கிழித்துக் கொண்டு வெளியே வருகின்ற தங்க நிறக்காட்சி கண்கொள்ளா காட்சி. கண்களுக்கு ஓர் எழுச்சி. மனதிற்கு ஓர் நம்பிக்கைக் கீற்று. கதிரவனின் ஒளி உலகின் இருளை மட்டுமல்ல. மனதின் இருளையும் அகற்றும் மாமருந்தாய் இருக்கட்டும்.

சில்லென்று, பஞ்சு போல வெண்மையாய் மேலிருந்து வீழ்கின்ற அருவியின் அழகைக் கண்களால் கண்டு கொண்டே இருக்கலாம். எவ்வளவு அழகான காட்சி! தண்ணீரின் வீழ்ச்சி அருகே சென்றால், மேனியின் மீது குளிர்ந்த நீர்பட்டதும் ஏற்படுகின்ற குதூகலம், ஆனந்தம், அக்களிப்பு. நனைந்துக் கொண்டே இருக்கலாம்; ஆனந்தமாய் இருக்கலாம்.

இயற்கைத் தரும் இன்பமான காட்சிகளைக் காண்போம். எல்லையில்லா ஆனந்தம் என்றும் காண்போம்.





கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 3. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்

குமரகுருபரர்

## பாடல் :

**ஆடுக செங்கீரை !**

*செம்பொ னடிச்சிறு கிங் கிணியோடு சிலம்பு கலந்தாடத்*
*திருவரை யரைஞா ணரைமணி யொடு மொளி திகழரை வடமாடப்*
*பைம்பொ னசும்பிய தொந்தி யொடுஞ்சிறு பண்டி சரிந்தாடப்*
*பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச் சுட்டி பதிந்தாடக்*
*கம்பி விதம்பொதி குண்டல முங்குழை காது மசைந்தாடக்*
*கட்டிய சூழியு முச்சியு முச்சிக் கதிர்முத் தொடுமாட*
*வம்பவ ளத்திரு மேனியு மாடிட ஆடுக செங்கீரை*
*ஆதி வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை*

**செங்கீரைப் பருவம், பா.எண்.8**

## சொற்பொருள்:

செம்பொ னடிச்சிறு கிங் கிணியோடு – செம்மையான திருவடியில் அணிந்த சிறு செம்பொன் கிண்கிணிகளோடு

சிலம்பு கலந்தாடத் – சிலம்புகளும் சேர்ந்து ஆட

திருவரை யரைஞா ணரைமணியொடு – இடையில் அரைஞாண் மணியோடு

ஒளி திகழ் அரை வடமாடப் – ஒளி வீசுகின்ற அரைவடங்கள் ஆட

பைம்பொன் அசும்பிய தொந்தியொடும் – பசுமையான பொன் என ஒளிரும் தொந்தியுடன் கூடிய

சிறு பண்டி சரிந்தாடப் – சிறு வயிறு சரிந்தாட

பட்ட நுதல்பொலி பொட்டொடு – பட்டம் கட்டிய நெற்றியில் விளங்கும் பொட்டுடன்

வட்டச் சுட்டி பதிந்தாடக் – வட்ட வடிவமான சுட்டி பதிந்தாட

கம்பி விதம் பொதி குண்டலமும் – கம்பிகளில் உருவான குண்டலங்களும்

குழைகாது மசைந்தாடக் – காதின் குழைகளும் அசைந்தாட

கட்டிய சூழியும் உச்சியும் – கட்டப்பட்ட சூழியக் கொண்டையும் தலையுச்சிக் கொண்டையும்

உச்சிக் கதிர் முத்தொடு மாட – உச்சியில் ஒளியுள்ள முத்துகளோடு ஆட

வம்பவளத்திரு மேனியு மாடிட – அழகிய பவளம் போன்ற உடலும் ஆட

ஆடுக செங்கீரை – செங்கீரை ஆடி அருள்க

ஆதி வயித்தியநாதபுரிக் – பழமையான வைத்தியநாதபுரியில்

குக னாடுக செங்கீரை – எழுந்தருளிய முருகனே செங்கீரை ஆடுக.

### பொருளுரை:

செம்மையான திருவடியில் அணிந்த சிறு செம்பொன் கிண்கிணிகளோடு சிலம்புகளும் சேர்ந்து ஆடட்டும். இடையில் அரைஞாண் மணியோடு ஒளி வீசுகின்ற அரைவடங்கள் ஆடட்டும். பசுமையான பொன் என ஒளிரும் தொந்தியுடன் சிறு வயிறு சரிந்தாடட்டும். பட்டம் கட்டிய நெற்றியில் விளங்குகின்ற பொட்டுடன் வட்ட வடிவான சுட்டி பதிந்தாடட்டும். கம்பிகளில் உருவான குண்டலங்களும், காதில் குழைகளும் அசைந்தாட, கட்டப்பட்ட சூழியக் கொண்டையும், தலையுச்சிக் கொண்டையும் ஒளியுள்ள முத்துகளோடு ஆட, அழகிய பவளம் போன்ற உடலும் ஆட செங்கீரை ஆடி அருள்க. பழமையான வைத்தியநாதபுரியில் எழுந்தருளிய முருகனே செங்கீரை ஆடுக!

### விளக்கவுரை:

குழந்தையின் தலை 5, 6 ஆம் மாதங்களில் மென்மையாக அசையும், செங்கீரைச் செடி காற்றில் ஆடுவது போன்று குழந்தையின் தலை அசைவதால் இப்பருவத்தைச் செங்கீரைப் பருவம் என்பர். பாதம் முதல் தலை வரை அணிகலன்களை அணிவித்து குழந்தையை ஆடச்சொல்லி அழகுபார்க்கும் கவிஞரின் திறன் தான் என்னே! குழந்தை தன் இரு கை ஊன்றி ஒரு காலினை மடக்கி மற்றொரு காலை நீட்டி தலைநிமிர்ந்தும் முகமசைத்தும் ஆடுகின்ற தன்மையைக் காணக் கண்கோடி வேண்டும். திருவடியில் கிண்கிணி சிலம்புகள், இடையில் அரைவடங்கள், தொந்தியில் பசும்பொன், நெற்றியில் பட்டம், சுட்டி, காதில் குண்டலங்கள், குழைகள், தலையில் முத்துகள் என அணிகலன்களை அணிவித்துக் குழந்தையை ஆடவைத்து அழகு பார்க்கிறார் கவிஞர்.

### ஆசிரியர் குறிப்பு:

- பிறப்பு : திருவைகுண்டத்தைச் சார்ந்த திருக்கயிலாயத்தில் பிறந்தவர்.
- தொடங்கியவை : காசியில் குமாரசாமி மடம் நிறுவினார். இதன் கிளை திருப்பனந்தாள் மடமாகத் திகழ்கின்றது.
- காலம் : 17 ஆம் நூற்றாண்டு
- சிறப்பு : வடமொழி, தமிழ், இந்துஸ்தானி ஆகிய மொழிகளில் புலமைமிக்கவர்.
- எழுதிய நூல்கள் : ✦ கந்தர் கலிவெண்பா ✦ மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ✦ மதுரைக்கலம்பகம் ✦ சகலகலாவல்லி மாலை ✦ நீதிநெறி விளக்கம் ✦ திருவாரூர் மும்மணிக்கோவை

### நூற் குறிப்பு:

- 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று.
- இறைவனையோ, தலைவரையோ, இறைவனையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, அவரைக் குழந்தையாகக் கருதிப் பாடுவர்.
- பத்துப் பருவங்களாக அமைத்து, பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் என நூறு பாடல்களால் பிள்ளைத்தமிழ் பாடப்பெறும்.
- இது ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இருவகையாகப் பிரிப்பர்.
- கடைசி மூன்று பருவங்கள் மட்டும் ஆண்பால் பிள்ளைத் தமிழுக்கும், பெண்பால் பிள்ளைத்தமிழுக்கும் மாறுபடும்.

## மதிப்பீடு

**பொருள் தருக:**

1. அரை – இடை
2. அரைஞாண் – இடுப்பில் கட்டும் கயிறு
3. பண்டி – வயிறு
4. நுதல் – நெற்றி
5. குழை – காதணி
6. சூழி – உச்சி
7. அசும்பிய – ஒளி வீசுகிற
8. கதிர் – ஒளி
9. மேனி – உடல்
10. முச்சி – தலையுச்சிக் கொண்டை

**இலக்கணக் குறிப்பு தருக:**

1. குண்டலமும் குழைகாதும் – எண்ணும்மை
2. ஆடுக – வியங்கோள் வினைமுற்று
3. பைம்பொன், செம்பொன் – பண்புத் தொகைகள்
4. கட்டிய – பெயரெச்சம்

**பகுபத உறுப்பிலக்கணம்:**

1. பதிந்து – பதி + த்(ந்) + த் + உ

பதி – பகுதி
த் – சந்தி 'ந்' ஆனது விகாரம்
த் – இறந்த கால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

**கூடுதல் வினாக்கள்:**

1. பிள்ளைத்தமிழ் ________ வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று.
அ) 96 ஆ) 16 இ) 20 ஈ) 10 விடை : அ) 96

2. பிள்ளைத்தமிழ் ________ பாடல்களால் பாடப்பெறும்.
அ) பத்து ஆ) இருநூறு இ) நூறு ஈ) ஐம்பது விடை : இ) நூறு

3. குமரகுருபரரின் காலம் ______ நூற்றாண்டு.
அ) 16ஆம் ஆ) 18ஆம் இ) 10ஆம் ஈ) 17ஆம் விடை : ஈ) 17ஆம்

4. சுட்டி ______ அணியும் அணிகலனாகும்.
அ) காலில் ஆ) கையில் இ) நெற்றியில் ஈ) இடையில்
விடை : இ) நெற்றியில்

5. செங்கீரைப் பருவத்தின் ________ பாடல் பாடப்பகுதியாக இடம் பெற்றுள்ளது.
அ) ஆறாம் ஆ) எட்டாம் இ) ஐந்தாம் ஈ) பத்தாம் விடை : ஆ) எட்டாம்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

செம்பொ னடிச்சிறு கிங் கிணியோடு சிலம்பு கலந்தாடத்
திருவரை யரைஞா ணரைமணி யொடு மொளி திகழரை வடமாடப்
பைம்பொ னசும்பிய தொந்தி யொடுஞ்சிறு பண்டி சரிந்தாடப்
பட்ட நுதற்பொலி பொட்டொடு வட்டச் சுட்டி பதிந்தாடக்
கம்பி விதம்பொதி குண்டல முங்குழை காது மசைந்தாடக்
கட்டிய சூழியு முச்சியு முச்சிக் கதிர்முத் தொடுமாட
வம்பவ ளத்திரு மேனியு மாடிட ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குக னாடுக செங்கீரை

PTA

**வினாக்கள்:**

1. இப்பாடலின் ஆசிரியர் யார்?

அ) கீரந்தையார்    ஆ) குமரகுருபரர்
இ) நம்பூதனார்    ஈ) செய்குதம்பிப் பாவலர்

விடை : ஈ) குமரகுருபரர்

2. இப்பாடலில் இம்பெற்றுள்ள பிள்ளைத்தமிழ்பருவம்

அ) அம்மானை    ஆ) சப்பானி
இ) சிறுதேர்    ஈ) செங்கீரை

விடை : ஈ) செங்கீரை

3. "குண்டலமும் குழைகாதும்" – இலக்கணக் குறிப்பு தருக.

அ) எண்ணும்மை    ஆ) உம்மைத்தொகை
இ) பண்புத்தொகை    ஈ) அடுக்குத்தொடர்

விடை : அ) எண்ணும்மை

4. கிண்கிணி, அரைநாண், சுட்டி என்பன முறையே

அ) காலில் அணிவது, இடையில் அணிவது, தலையில் அணிவது
ஆ) நெற்றியில் அணிவது, இடையில் அணிவது, தலையில் அணிவது
இ) காலில் அணிவது, இடையில் அணிவது, நெற்றியில் அணிவது
ஈ) இடையில் அணிவது, காதில் அணிவது, தலையில் அணிவது

விடை : இ) காலில் அணிவது, இடையில் அணிவது, நெற்றியில் அணிவது

## குறுவினா

**கூடுதல் வினாக்கள்:**

1. செங்கீரைப் பருவம் – குறிப்பு வரைக.

- செங்கீரைச் செடி ஆற்றில் ஆடுவது போன்று குழந்தையின் தலை 5–6 ஆம் மாதங்களில் மென்மையாக அசையும். இப்பருவத்தைச் செங்கீரைப் பருவம் என்பர்.
- இப்பருவத்தில் குழந்தை தன் இருகை ஊன்றி ஒரு காலினை மடக்கி, மற்றொரு காலை நீட்டி தலை நிமிர்ந்தும் முகமசைந்தும் ஆடும்.

2. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் குறிப்பிடப்படும் அணிகலன்கள் யாவை?

| | | |
|---|---|---|
| சிலம்பு, கிண்கிணி | – | காலில் அணிவது |
| அரைஞாண் | – | இடையில் அணிவது |
| சுட்டி | – | நெற்றியில் அணிவது |
| குண்டலம், குழை | – | காதில் அணிவது |
| சூழி | – | தலையில் அணிவது |

## சிறுவினா

### பாடநூல் வினா

1. வைத்தியநாதபுரி முருகன் குழந்தையாக அணிந்திருக்கும் அணிகலன்களுடன் செங்கீரை ஆடிய நயத்தை விளக்குக. PTA

- திருவடியில் அணிந்த சிறு செம்பொன் கிண்கிணிகளோடு சிலம்புகளும் சேர்ந்து ஆடட்டும்.
- இடையில் அரைஞாண் மணியோடு ஒளிவீசுகின்ற அரைவடங்கள் ஆடட்டும்.
- பசும்பொன் என ஒளிரும் தொந்தியுடன் சிறு வயிறு சரிந்தாடட்டும்.
- பட்டம் கட்டிய நெற்றியில் விளங்குகின்ற பொட்டுடன் வட்ட வடிவமான சுட்டி பதிந்தாடட்டும்.
- உச்சிக் கொண்டையும் ஒளியுள்ள முத்துகளோடு ஆடட்டும்
- தொன்மையான வைத்தியநாதபுரியில் எழுந்தருளிய முருகனே செங்கீரை ஆடி அருள்க !

### கூடுதல் வினாக்கள்:

2. குமரகுருபரர் – ஆசிரியர் குறிப்புத் தருக.

| | | |
|---|---|---|
| பிறப்பு | : | திருவைகுண்டத்தைச் சார்ந்த திருக்கயிலாயத்தில் பிறந்தவர். |
| தொடங்கியவை | : | காசியில் குமாரசாமி மடம் நிறுவினார். இதன் கிளை திருப்பனந்தாள் மடமாகத் திகழ்கின்றது. |
| காலம் | : | 17 ஆம் நூற்றாண்டு. |
| சிறப்பு | : | வடமொழி, தமிழ், இந்துஸ்தானி ஆகிய மொழிகளில் புலமைமிக்கவர். |
| எழுதிய நூல்கள் | : | ✦ கந்தர் கலிவெண்பா ✦ மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ✦ மதுரைக்கலம்பகம் ✦ சகலகலாவல்லி மாலை ✦ நீதிநெறி விளக்கம் ✦ திருவாரூர் மும்மணிக்கோவை. |

3. பிள்ளைத்தமிழ் – குறிப்பு தருக.

- 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று.
- இறைவனையோ, தலைவரையோ, இறைவனையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, அவரைக் குழந்தையாக கருதிப் பாடுவர்.
- பத்துப் பருவங்களாக அமைத்து, பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் என நூறு பாடல்களால் பிள்ளைத்தமிழ் பாடப்பெறும்.
- இதனை ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத்தமிழ் என இருவகையாகப் பிரிப்பர்.
- கடைசி மூன்று பருவங்கள் மட்டும் ஆண்பால் பிள்ளைத் தமிழுக்கும், பெண்பால் பிள்ளைத்தமிழுக்கும் மாறுபடும்.

## கற்பவை கற்றபின்

சந்த நயமிக்க குழந்தைப் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து வழங்குக. வகுப்பறையில் பாடி மகிழ்க.

வட்டமான தட்டு
தட்டு நிறைய லட்டு
லட்டு மொத்தம் எட்டு
எட்டில் பாதி விட்டு
எடுத்தான் மீதம் கிட்டு
மீதம் உள்ள லட்டு
முழுதும் தங்கை பட்டு
போட்டாள் வாயில் பிட்டு
கிட்டு நான்கு லட்டு
பட்டு நான்கு லட்டு
மொத்தம் தீர்ந்த தெட்டு
மீதம் காலித்தட்டு

– அழ.வள்ளியப்பா.

**நல்லவனும் கெட்டவனும்**

ராமு மிகவும் நல்லவனாம்
நடத்தையில் மிக்க உயர்ந்தவனாம்
எவருக்கும் அன்பாய் நடப்பவனாம்
இரக்கம் மிகவும் உடையவனாம்
ஆயினும் நல்லவன் என்றவனை
அறிபவர் மிகமிகச் சிலரேதான்
ஒருநாள் வீதியில் பெருங்கூட்டம்
ஒன்றுகூடி நிற்பதை நான்
கண்டேன். உடனே சென்றங்கே
காரணம் யாதெனக் கேட்டேன் நான்
பாலு என்னும் ஒரு பையன்
பழக்கடை ஒன்றில் நுழைந்தானாம்
மாம்பழம் ஒன்றை எடுத்தானாம்
மறைத்து மடியில் வைத்தானாம்
பார்த்ததும் உடனே கடைக்காரர்
பட்டென அறைகள் விட்டாராம்
'திருடன் திருடன்' என்றவனைத்
திட்டினர். அங்கு யாவருமே
பாலு கெட்டவன் என்றறியப்
பத்து நிமிடம் ஆனதடா
ராமு நல்லவன் என்றுணர
நாட்கள் பற்பல ஆகுமடா
கெட்டவன் என்ற பெயரெடுக்க
சட்டென முடியும். ஆனாலோ
நல்லவன் என்று பெயர் பெறவே
நாட்கள் மிகவும் ஆகுமென
அறிந்தேன் அன்று ஓர் உண்மை
அடைவோம் இதனால் பெரும் நன்மை.

– அழ.வள்ளியப்பா.



இயல் - 6 செய்யுள்

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 4. கம்பராமாயணம்

கம்பர்

## பாடல் :

பாலகாண்டம் – ஆற்றுப்படலம்

தாதுகு சோலைதோறுஞ் சண்பகக் காடுதோறும்
போதவிழ் பொய்கைதோறும் புதுமணற் றடங்கடோறும்
மாதவி வேலிப்பூக வனம்தொறும் வயல்கடோறு
மோதிய வுடம்புதோறு முயிரென வுலாயதன்றே.

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| தாதுகு சோலைதோறுஞ் | – | மகரந்தம் சிந்துகின்ற மரங்கள் அடர்ந்த சோலைகளிலும் |
| சண்பகக் காடுகள்தோறும் | – | மரங்கள் செறிந்த செண்பகக் காடுகளிலும் |
| போதவிழ் பொய்கைதோறும் | – | அரும்புகள் அவிழ்ந்து மலரும் குளங்களிலும் |
| புதுமணல் தடங்கள் தோறும் | – | புதுமணல் நிறைந்த தடாகங்களிலும் |
| மாதவி வேலிப்பூக வனம்தொறும் | – | குருக்கத்தி, கொடி வேலியுடைய கமுகந் தோட்டங்களிலும் |
| வயல்கள் தோறும் | – | நெல் வயல்கள் தோறும் |
| மோதிய வுடம்புதோறும் | – | பல உடல்களில் ஊடுருவி |
| உயிரென வுலாயதன்றே | – | உலாவுவது போல உயிர் பல இடங்களில் சரயு ஆறு பாய்கிறது. |

## தெளிவுரை:

மகரந்தம் சிந்துகின்ற சோலைகள், மரம் செறிந்த செண்பகக் காடுகள், அரும்புகள் அவிழ்ந்து மலரும் பொய்கைகள், புதுமணல் தடாகங்கள், குருக்கத்தி, கொடி வேலியுடைய கமுகந்தோட்டங்கள், நெல்வயல்கள் இவை அனைத்திலும் பரவிப் பாய்கிறது சரயு ஆறு. அது, ஓர் உயிர் பல உடல்களில் ஊடுருவி உலாவுவது போல் பல இடங்களில் பாய்கிறது.

## விளக்கவுரை

இங்கு சரயு ஆற்றலின் அழகான ஓட்டத்தை நம் கண்முன் படைக்கின்றார் கவிஞர், ஆறு இயற்கையின் தோற்றமாக இல்லாமல் ஓர் ஓவியமாக நம் கண்முன்னே விரிகிறது. அந்த அழகுணர்ச்சி இங்கு கவிதையாக விரிகிறது. இதற்காக ஆசிரியர் எடுத்தாளும் உவமை நம் மனதைக் கொள்ளைக் கொள்கிறது, உயிரானது பல உடல்களில் ஊடுருவி உலாவுவது போல் பல இடங்களில் சரயு ஆறு பாய்ந்து ஓடுவதாகக் குறிப்பிடுகிறார்.

**பாடல் :**

**பாலகாண்டம் – நாட்டுப்படலம்**

*தண்டலை மயில்களாட தாமரை விளக்கந் தாங்க*
*கொண்டல்கள் முழவினேங்க குவளைகண் விழித்து நோக்க,*
*தெண்டிரை யெழினி காட்ட தேம்பிழி மகரயாழின்*
*வண்டுகளி னிதுபாட மருதம் வீற்றிருக்கும் மாதோ*

**சொற்பொருள்:**

| | | |
|---|---|---|
| தண்டலை மயில்களாட | – | குளிர்ந்த சோலைகளில் மயில்கள் அழகுற ஆட |
| தாமரை விளக்கந் தாங்க | – | விரிந்த தாமரை மலர்கள் விளக்குகள் ஏற்றியது போல் தோன்ற |
| கொண்டல்கள் முழவினேங்க | – | சூழ்ந்த மேகங்கள் மத்தள ஒலியாய் எழ |
| குவளைகண் விழித்து நோக்க | – | மலரும் குவளை மலர்கள் கண்கள் விழித்துப் பார்ப்பது போல் காண |
| தெண்டிரை யெழினிகாட்ட | – | நீர் நிலைகள் எழுப்பும் அலைகள் திரைச்சீலைகளாய் விரிய |
| தேம்பிழி மகரயாழின் | – | மகர யாழின் தேன் ஒத்த இசை போல |
| வண்டுகளினிது பாட | – | வண்டுகள் ரீங்காரம் இசைக்க |
| மருதம் வீற்றிருக்கும் மாதோ | – | மருத நிலம் அழகுடன் அமைந்துள்ளது. |

**பொருளுரை:**

குளிர்ந்த சோலைகளில் மயில்கள் அழகுற ஆட, விரிந்த தாமரை மலர்கள் விளக்குகள் ஏற்றியது போல் தோன்ற, சூழும் மேகங்கள் மத்தள ஒலியாய் எழ, மலரும் குவளை மலர்கள் கண்கள் விழித்துப் பார்ப்பது போல் காண, நீர் நிலைகள் எழுப்பும் அலைகள் திரைச்சீலைகளாய் விரிய, மகர யாழின் தேன் ஒத்த இசைபோல் வண்டுகள் ரீங்காரம் பாட மருத நிலமானது அமைந்திருக்கிறது.

**விளக்கவுரை**

இயற்கை கொலு வீற்றிருக்கும் காட்சியைப் பெரிய கலை நிகழ்வே நடப்பதாகக் கம்பர் நம் கண்முன் படைக்கிறார். மயில்களின் நடனம், தாமரை மற்றும் குவளை மலர்கள் ஆகியவை கண்ணுக்கு விருந்தாகவும், மேகங்களின் மத்தள ஒலி, வண்டுகளின் தேன் ஒத்த இசை ஆகியவை காதுக்கு விருந்தாகவும் அங்கு ஓர் இசைக்கச்சேரி நடப்பதைப் போன்ற காட்சியைத் தருகிறார் கம்பர்.

**பாடல் :**

**பாலகாண்டம் – நாட்டுப்படலம்**

*வண்மையில்லை யோர் வறுமை யின்மையால்*
*திண்மையில்லை நேர் செறுந ரின்மையால்*
*உண்மையில்லை பொய்யுரை யிலாமையால்*
*வெண்மையில்லை பலகேள்வி மேவலால்*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| வண்மையில்லை யோர் வறுமையின்மையால் | – | (கோசல நாட்டில்) வறுமை சிறிதும் இல்லாததால் கொடைக்கு அங்கே இடமில்லை. |
| திண்மையில்லை நேர் செறுந ரின்மையால் | – | நேருக்கு நேர் நின்று போர் புரிபவர் இல்லாததால் உடல் வலிமையை வெளிக்காட்ட வாய்ப்பில்லாமல் ஆயிற்று. |
| உண்மையில்லை பொய்புரை யிலாமையால் | – | பொய் பேசுவது இல்லாததால் உண்மை தனித்து விளங்கவில்லை |
| வெண்மையில்லை பலகேள்வி மேவலால் | – | பல வகையான கேள்விச் செல்வங்கள் மிகுந்து விளங்குவதால் அங்கு அறியாமை சிறிதும் இல்லை. |

### பொருளுரை:

கோசல நாட்டில் வறுமை சிறிதும் இல்லாததால் கொடைக்கு அங்கே இடமில்லை. நேருக்கு நேர் போர் புரிபவர் இல்லாததால், உடல் வலிமையை எடுத்துக்காட்ட வாய்ப்பில்லை. பொய்மொழி இல்லாமையால் உண்மையானது தனித்து விளங்கவில்லை. பலவகைக் கேள்வி செல்வம் மிகுந்து விளங்குவதால் அங்கு அறியாமை சிறிதும் இல்லை.

### விளக்கவுரை

ஒரு நாட்டின் பெருமையை கூற வரும் போது எல்லா வளங்களும் உடைய நாடு என்று ஒரே வரியில் கூறிவிடலாம். ஆனால் கம்பர் நாட்டின் வளத்தை கூறும் அழகு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது. அங்கு இவை இவை இல்லாததால் இவை இவை இல்லை என்ற மெய்யியல் உண்மையை ஆசிரியர் நயமாக எடுத்துரைப்பது இன்பம் பயக்கிறது.

### பாடல்:

**அயோத்தியா காண்டம் – கங்கைப்படலம்**

*வெய்யோன் ஒளி தன் மேனியில் விரி சோதியில் மறையப்*
*பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்;*
*மையோ? மரகதமோ? மறிகடலோ? மழை முகிலோ?*
*ஐயோ இவன் வடிவு என்பது ஓர் அழியா அழகு உடையான்*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| வெய்யோன் ஒளி தன் மேனியில் | – | பகலவனின் பட்டொளி தனது நீலநிற உடலில் |
| விரிசோதியில் மறையப் | – | ஒளியில் பட்டு இல்லையெனும்படி மறைந்து விட |
| பொய்யோ எனும் இடையாளொடும் | – | இடையே இல்லையெனும்படியான நுண்ணிய இடையாள் சீதையொடும் |
| இளையானொடும் போனான் | – | இளைவனாகிய இலக்குவனொடும் சென்றான். |
| மையோ? மரகதமோ? | – | அவன் நிறம் மையோ? பச்சை நிற மரகதமோ? |
| மறிகடலோ? மழை முகிலோ | – | மறிக்கின்ற நீலக்கடலோ? மழை தரும் கருமையான மேகமோ? |
| ஐயோ! இவன் வடிவு என்பது | – | ஐயோ! ஒப்பற்ற இவனது வடிவு என்பது |
| ஓர் அழியா அழகு உடையான் | – | ஓர் அழியாத அழகு உடையவன் (இராமன்)! |

## பொருளுரை:

பகலவன் பட்டொளியானது இராமனின் நீலநிற உடல் ஒளியில் பட்டு இல்லையெனும்படி மறைந்துவிட, இடையே இல்லையெனும்படியான நுண்ணிய இடையாள் சீதையொடும், இளையவன் இலக்குவனோடும் போனான். அவன் நிறம் மையோ? பச்சை நிற மரகதமோ? மறிக்கின்ற நீலக்கடலோ? கார்மேகமோ? ஐயோ! ஒப்பற்ற அழியாத அழகினை உடைய வடிவு கொண்டவன் இராமன்.

## விளக்கவுரை

கம்பர் கம்பராமயணத்தின் கதாநாயகன் இராமனின் கருமைநிற அழகைக் கூறும் அழகே அழகு! மேலும் சீதையின் இடையழகை 'பொய்யோ எனும் இடையாள்' எனக் கூறி குறுகிய இடை என்று வர்ணிக்கிறார். இராமனின் நிறத்தை எதனோடு ஒப்பிட்டுக் கூறலாம் என மயங்கி, தயங்கி இறுதியில் ஐயோ என்னால் கூற முடியவில்லை என தன் இயலாமையைக் கூறுகிறார் கவிஞர்.

### பாடல்:

**அயோத்தியா காண்டம் – கங்கை காண்படலம்**

*ஆழ நெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரோ?*
*வேழ நெடும் படை கண்டு விலங்கிடும் வில் ஆளோ?*
*தோழமை என்று அவர் சொல்லிய சொல் ஒருசொல் அன்றோ?*
*"ஏழைமை வேடன் இறந்திலன்" என்று எனை ஏசாரோ?*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| ஆழ நெடுந்திரை | – ஆழமும் பெரிய அலைகளையும் உடைய |
| ஆறு கடந்து இவர் போவாரோ | – (கங்கை) ஆற்றைக் கடந்து இவர்கள் போவார்களோ? |
| வேழ நெடும் படை கண்டு | – யானைகள் கொண்ட நீளமான படையைக் கண்டு |
| விலங்கிடும் வில் ஆளோ? | – புறமுதுகு காட்டி விலகிச் செல்கின்ற வில் வீரனோ? |
| தோழமை என்று அவர் | – தோழன் என்று அவர் (இராமன்) |
| சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ | – சொன்ன சொல் ஒப்பற்ற சொல் அல்லவா? |
| ஏழைமை வேடன் இறந்திலன் | – அற்பனாகிய வேடன் இறந்திருக்கலாமே |
| என்று எனை ஏசாரோ? | – என உலகத்தார் என்னைப் பழி சொல்ல மாட்டார்களா? |

## பொருளுரை:

ஆழமும் பெரிய அலைகளையும் உடைய கங்கை ஆற்றைக் கடந்து செல்வார்களா? யானைகள் கொண்ட படையைக் கண்டு, புறமுதுகு காட்டி விலகிச் செல்கின்ற வில் வீரனோ நான்! தோழமை என்று இராமன் சொன்ன சொல் ஒப்பற்ற சொல் அல்லவா? தோழமையை எண்ணாமல் இவர்களைக் கடந்து போகவிட்டால் அற்பனாகிய இந்த வேடன் இறந்திருக்கலாமே என உலகத்தார் என்னைப் பழி சொல்ல மாட்டார்களா?

## விளக்கவுரை

இராமனின் நண்பனாக வந்து, இறுதியில் உடன்பிறந்தோனாக ஏற்றுக்கொண்ட குகன் "உயிர்கொடுப்பான் தோழன்" என்ற உயர்ந்த இலக்கணத்திற்கு உயிர் கொடுக்கின்றான்.

## பாடல் :

**யுத்த காண்டம் – கும்பகருணன் வதைப்படலம்**

*'உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய வாழ்வெ லாம்*
*இறங்குகின்றது! இன்று காண்; எழுந்திராய்! எழுந்திராய்!*
*கறங்கு போல வில் பிடித்த கால தூதர் கையிலே*
*உறங்குவாய், உறங்குவாய்! இனிக்கிடந்து உறங்குவாய்!*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| உறங்குகின்ற கும்பகன்ன! | – | நன்றாக தூங்குகின்ற கும்பகருணனே! |
| உங்கள் மாய வாழ்வெலாம் | – | உம்முடைய பொய்யான வாழ்வு எல்லாம் |
| இறங்குகின்றது! இன்று காண் | – | இன்று முதல் இறங்குவதற்குத் தொடங்கி விட்டது. |
| எழுந்திராய்! எழுந்திராய்! | – | (அதனைக் காண) எழுந்திடுவாய்! எழுந்திடுவாய்! |
| கறங்கு போல் வில் பிடித்த | – | காற்றாடி போல எல்லா இடங்களிலும் திரிகின்ற வில்லைப் பிடித்த |
| கால தூதர் கையிலே | – | காலனுக்குத் தூதரானவர் கையில் |
| இனிக் கிடந்து உறங்குவாய் | – | இனிப் படுத்து உறங்குவாயாக! |

### பொருளுரை:

உறங்குகின்ற கும்பகருணனே! உம்முடைய பொய்யான வாழ்வு எல்லாம் இன்றிலிருந்து இறங்குவதற்குத் தொடங்கி விட்டது. அதனைக் காண்பதற்காக எழுந்திடுவாய்! எழுந்திடுவாய்! காற்றாடி போல எல்லா இடங்களிலும் திரிகின்ற வில்லைப் பிடித்த காலனுக்குத் தூதரானவர் கையில் இனிப்படுத்து உறங்குவாயாக!

### விளக்கவுரை

உலக்கையால் மாறி மாறி இடித்து கும்பகர்ணனை உறக்கத்திலிருந்து எழுப்பும் காட்சியை இந்தச் செய்யுள் நம் கண்முன்னே படைக்கிறது. போரில் தோல்வி நிகழ்ந்து கொண்டிருக்கிறது எனக் கூறி கலக்கத்தை உண்டு பண்ணி அவனை எழுப்புகிறார்கள்.

### ஆசிரியர் குறிப்பு:

| | | |
|---|---|---|
| ◆ பிறந்த ஊர் | – | தேரழுந்தூர் |
| ◆ தந்தை | – | ஆதித்தன் |
| ◆ ஆதரித்தவர் | – | சடையப்ப வள்ளல் |
| ◆ காலம் | – | கி.பி.12 ஆம் நூற்றாண்டு |
| ◆ சிறப்பு பெயர்கள் | – | கவிச்சக்கரவர்த்தி கம்பர், கல்வியில் பெரியவர் கம்பர் |
| ◆ அறிந்த மொழிகள் | – | சமஸ்கிருதம், தமிழ் |
| ◆ சம காலப் புலவர்கள் | – | ஒட்டக்கூத்தர், சேக்கிழார் |
| ◆ எழுதிய நூல்கள் | – | ✦சிலையெழுபது ✦சடகோபர் ✦அந்தாதி ✦சரசுவதி அந்தாதி ✦திருக்கை வழக்கம் ✦ஏரெழுபது ✦மும்மணிக் கோவை. |
| ◆ கம்பரின் பெருமை | – | 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்', 'விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர்கம்பன். யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்' கம்பன் இசைத்த கவியெல்லாம் நான் என்று பாரதியாரால் புகழப் பெற்றவர். |

## நூற் குறிப்பு:

- இராமனது வரலாற்றைக் கூறும் நூல் இராமாயணம்.
- கம்பர் இந்நூலை இயற்றியதால் கம்பராமாயணம் எனப்பட்டது.
- கம்பர் தாம் இயற்றிய நூலுக்கு இராமாவதாரம் எனப் பெயரிட்டார்.
- கம்பராமாயணம் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம். கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம் மற்றும் யுத்த காண்டம் என ஆறு காண்டங்களை உடையது.
- காண்டம் என்பது பெரும்பிரிவையும், படலம் என்பது உட்பிரிவையும் குறிக்கும்.
- கம்பராமாயணப் பாடல்கள் சந்தநயம் மிக்கவை, கற்போருக்கு இனிமை தரும் கவிச்சுவை நிறைந்தது. சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்தது.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. கொண்டல் – மேகம்
2. முடிவு – மத்தளம்
3. திரை – அலைகள்
4. வண்மை – வளமை
5. செறுநர் – பகைவர்
6. திண்மை – வலிமை
7. வெய்யோன் – பகலவன்
8. மேனி – உடல்
9. முகில் – மேகம்
10. வேழம் – யானை
11. கறங்கு – காற்றாடி

### இலக்கணக் குறிப்பு தருக:

1. இடையாளோடும், இளையானோடும் – எண்ணும்மை
2. நெடுந்திரை, நெடும்படை – பண்புத்தொகை
3. வில் பிடித்த – இரண்டாம் வேற்றுமைத் தொகை
4. கால தூதர் – நான்காம் வேற்றுமைத் தொகை
5. விரிசோதி – வினைத்தொகை

### பகுபத உறுப்பிலக்கணம்:

1. உறங்குகின்ற – உறங்கு + கின்று + அ

உறங்கு – பகுதி
கின்று – நிகழ்கால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

2. உறங்குவாய் – உறங்கு + வ் + ஆய்

உறங்கு – பகுதி
வ் – எதிர்கால இடைநிலை
ஆய் – முன்னிலை ஒருமை வினைமுற்று பகுதி.

Don

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. கோசல நாட்டில் கொடை இல்லாத காரணம் என்ன? PTA

அ) நல்ல உள்ளம் உடையவர்கள் இல்லாததால்
ஆ) ஊரில் விளைச்சல் இல்லாததால்
இ) அரசன் கொடுங்கோல் ஆட்சி புரிவதால்
ஈ) அங்கு வறுமை இல்லாததால் விடை : ஈ) அங்கு வறுமை இல்லாததால்

**கூடுதல் வினாக்கள்:**

2. கம்பராமாயணம் ________ காண்டங்களை உடையது.

அ) இரண்டு ஆ) ஆறு இ) ஐந்து ஈ) நான்கு விடை : ஆ) ஆறு

3. ஆற்றுப்படலத்தில் ________ ஆறு குறிப்பிடப்படுகிறது.

அ) கோதாவரி ஆ) கங்கை இ) காவிரி ஈ) சரயு விடை : ஈ) சரயு

4. பாலகாண்டம் ஆற்றுப்படலத்தில் ______ நில வளம் கூறப்படுகிறது.

அ) முல்லை ஆ) மருத இ) நெய்தல் ஈ) பாலை விடை : ஆ) மருத

5. 'தோழமை' என்ற சொல்லைச் சொன்னவன்

அ) இலக்குவன் ஆ) குகன் இ) இராமன் ஈ) அனுமன் விடை : இ) இராமன்

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. 'உறங்குகின்ற கும்பகன்ன' 'எழுந்திராய் எழுந்திராய்'
கால தூதர் கையிலே 'உறங்குவாய் உறங்குவாய்'
கும்பகன்னனை என்ன சொல்லி எழுப்புகிறார்கள்?
எங்கு அவனை உறங்க சொல்கிறார்கள்? PTA

- உம்முடைய பொய்யான வாழ்வு எல்லாம் இன்றிலிருந்து இறங்கத் தொடங்கிவிட்டது. அதனைக் காண்பதற்காக எழுந்திடுவாய் என்று எழுப்புகிறார்கள்.
- காற்றாடி போல எல்லா இடங்களிலும் திரிகின்ற வில்லைப் பிடித்த காலனுக்குத் தூதரானவர் கையில் படுத்து உறங்குவாயாக என்ற சொல்கிறர்கள்.

**கூடுதல் வினாக்கள்:**

2. மோதிய உடம்புதோறு உயிரென உலாயதன்றே – உவமையை விளக்குக.

ஓர் உயிர் பல உடல்களில் ஊடுருவி உலாவுவது போல் பல இடங்களிலும் சரயு நதி பாய்கிறது.

3. கோசல நாட்டில் ஏன் வண்மையில்லை? திண்மையில்லை?

- கோசல நாட்டில் வறுமை சிறிதும் இல்லாததால், அங்கு வண்மையாகிய கொடைக்கு இடமில்லை.
- அங்கு நேருக்கு நேர் நின்று போர் புரியவல்ல பகைவர் இல்லாததால், உடல் வலிமையை எடுத்துக்காட்ட வாய்ப்பில்லை.

4. இராமனுடைய அழகிற்கு எவற்றையெல்லாம் ஆசிரியர் ஒப்பிடுகிறார்?

- இராமனது நிறம் மையோ? பச்சை நிற மரகதமோ? மறிக்கின்ற நீலக் கடலோ? கார்மேகமோ? என்று அவனது ஒப்பற்ற அழியாத அழகினை ஆசிரியர் கூறுகிறார்.
- இராமனின் நிறத்தை எதனோடு ஒப்பிட்டுக் கூறலாம் என மயங்கி, தயங்கி இறுதியில் ஐயோ என்னால் கூற முடியவில்லை என தன் இயலாமையைக் கூறுகிறார் கவிஞர்.

## சிறுவினா

**கூடுதல் வினாக்கள்:**

1. சரயு ஆறு எங்கெங்கு பாய்ந்து செல்கிறது?
   - மகரந்தம் சிந்துகின்ற சோலைகள்
   - மரங்கள் செறிந்த செண்பகக் காடுகள்
   - அரும்புகள் அவிழ்ந்து மலரும் பொய்கைகள்
   - புதுமணல் தடாகங்கள்
   - குருக்கத்தி, கொடி வேலியுடைய கமுகந்தோட்டங்கள்
   - நெல் வயல்கள் அனைத்திலும் பரவிப் பாய்கிறது சரயு ஆறு.

2. மருத நிலக் காட்சியை விளக்குக.
   - குளிர்ந்த சோலைகளில் மயில் அழகுற ஆட
   - விரிந்த தாமரை மலர்கள் விளக்குகள் ஏற்றியது போல் தோன்ற
   - சூழும் மேகங்கள் மத்தள ஒலியாய் எழ
   - மலரும் குவளை மலர்கள் கண்கள் விழித்துப் பார்ப்பது போல் காண
   - நீர்நிலைகள் எழுப்பும் அலைகள் திரைச்சீலைகளாய் விரிய
   - மகர யாழின் தேன் ஒத்த இசைபோல் வண்டுகள் ரீங்காரம் பாட

   மருத நில காட்சி இருந்தது.

3. கோசல நாட்டின் வளத்தை விளக்குக.

   **கோசல நாட்டில்,**
   - வறுமை சிறிதும் இல்லாததால் கொடைக்கு அங்கே இடமில்லை.
   - நேருக்கு நேர் போர் புரிபவர் இல்லாததால், உடல் வலிமையை எடுத்துக்காட்ட வலிமையில்லை.
   - பொய் மொழி இல்லாமையால், உண்மை தனித்து விளங்கவில்லை.
   - பலவகைக் கேள்விச் செல்வம் மிகுந்து விளங்குவதால் அங்கு அறியாமை சிறிதும் இல்லை.

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. சந்தக் கவிதையில் சிறக்கும் கம்பன் என்ற தலைப்பில் இலக்கிய உரை எழுதுக.

   அன்பும், பண்பும் குணச்சித்திரமும் கொண்ட தலைவர் அவர்களே! தேர்ந்தெடுத்த பூக்களைப் போன்று வரிசை தொடுத்து அமர்ந்திருக்கும் ஆன்றோர்களே! அறிஞர் பெருமக்களே! வணக்கம். இயற்கை கொலு வீற்றிருக்கும் காட்சியைப் பெரிய கலை நிகழ்வே நடப்பதான தோற்றமாகக் காட்டும் கவி.... தண்டலை மயில்கள் ஆட.... இவ்வுரையைத் தொடர்க!

கம்பராமாயணப் பாடல்கள் சந்தநயம் மிக்கவை. கற்போருக்கு இனிமை தரும் கவிச்சுவை நிறைந்தவை.

*தாதுகு சோலைதோறுஞ் சண்பகக் காடுதோறும்*
*போதவிழ் பொய்கைதோறும் புதுமணற் றடங்கடோறும்*
*மாதவி வேலிப்பூக வனம்தொறும் வயல்கடோறு*
*மோதிய வுடம்புதோறு முயிரென வுலாயதன்றே*

இதில் இயற்கை கொலு வீற்றிருக்கும் காட்சியைப் பெரிய கலை நிகழ்வே நடப்பதான தோற்றமாகக் காட்டுகிறார் கவி.

*வெய்யோன் ஒளி தன் மேனியில் விரி சோதியில் மறையப்*
*பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்;*
*மையோ? மரகதமோ? மறிகடலோ? மழை முகிலோ?*
*ஐயோ இவன் வடிவு என்பது ஓர் அழியா அழகு உடையான்*

இராமனின் அழகையும் சீதையையும் வர்ணிக்கும் போது சந்த நயத்தை நயமாக எடுத்துக் கையாள்கிறார் கம்பர். இராமனது நிறம் மையோ? பச்சை நிற மரகதமோ? மறிக்கின்ற நீலக் கடலோ கார்மேகமோ? என்று அவனது ஒப்பற்ற அழியாத அழகினை ஆசிரியர் கூறுகிறார்.

அதே போல் ஆழமும் பெரிய அலைகளையும் உடைய கங்கை ஆற்றைக் கடந்து செல்வார்களா? யானைகள் கொண்ட படையைக் கண்டு, புறமுதுகு காட்டி விலகிச் செல்கின்ற வில் வீரனோ நான்! தோழமை என்று இராமன் சொன்ன சொல் ஒப்பற்ற சொல் அல்லவா? தோழமையை எண்ணாமல் இவர்களைக் கடந்து போகவிட்டால் அற்பனாகிய இந்த வேடன் இறந்திருக்கலாமே என உலகத்தார் என்னைப் பழி சொல்ல மாட்டார்களா? என்று குகன் கூறுவதாக அழகிய சந்தக் கவிதையைப் படைக்கிறான் கம்பன்.

மேலும் உறக்கத்திலிருந்து கும்பகர்ணனை எழுப்பும் போதும் கீழ்க்கண்டவாறு பாடி சந்தக் கவிதையில் சிறந்தவன் கம்பன் என நிரூபிக்கிறான்.

*'உறங்குகின்ற கும்பகன்ன! உங்கள் மாய வாழ்வெ லாம்*
*இறங்குகின்றது! இன்று காண்; எழுந்திராய்! எழுந்திராய்!*
*கறங்கு போல வில் பிடித்த கால தூதர் கையிலே*
*உறங்குவாய், உறங்குவாய்! இனிக்கிடந்து உறங்குவாய்!*

## கற்பவை கற்றபின்

**கம்பராமாயணக் கதை மாந்தர்களுள் எவரேனும் ஒருவர் குறித்து வகுப்பில் உரையாற்றுக.**

கம்பராமாயணத்தில் சுந்தர காண்டம் ஒன்று உண்டு. அனுமனுக்குச் சுந்தரன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அனுமனின் அளப்பரிய ஆற்றல் இக்காண்டத்துள் வெளிப்படுகிறது.

அனுமனின் கூரிய அறிவாற்றல், விரைவாகச் செயலாற்றும் திறன், குறிப்பால் செயல்படும் தன்மை எல்லோரையும் கவரும் தன்மை வாய்ந்தது.

நாட்கள் பல கடந்தும் நாயகன் வந்து மீட்கவில்லையே என்னும் சீதையில் துயரும், தன்னை மணந்து கொள்ளுமாறு இராவணன் தரும் தொடர் இன்னல்களும் ''இராமபிரான் இனிமேல் காணவே இயலாது'' என்ற முடிவிற்குச் சீதையை வர வைத்தன.

மனமுடைந்த சீதையின் முன் அனுமன் தோன்றினான்; ஆறுதல் படுத்தினான்; இராமனின் திருப்பெயர் சொல்லி அவன் தந்த கணையாழியைச் சீதையிடம் அளித்தான். சீதை உயிர் மீண்டு வர உதவினான்.

இலங்கையில் அசோக வனத்தில் சீதையைக் கண்டு திரும்பிய அனுமன், இராமனை அடைந்ததும் தனது பேரருள் தலைவனாம் இராமனின் திருவடிகளை அவன் வணங்கிலன், மாறாகச் சீதாதேவி இருந்த திசையினை நோக்கித் தலைமேல் கரம் குவித்தான்.

அனுமன் தன்னை வணங்காது தென்திசை நோக்கி வணங்குவதை இராமன் கண்டான். அனுமனின் இச்செயலால் ''அனுமன் சீதையைக் கண்டுள்ளார்; கற்பு நிலையில் சீதை உயர்ந்து நிற்கிறாள்'' என்ற உண்மைகளை இராமன் குறிப்பினால் அறிந்து கொண்டான். ''கண்டனென் கற்பினிக்கணியை'' என்று கம்பராமாயணம் கூறுகிறது.

அனுமனின் செயல்பாடுகள் கம்பராமாயணத்தின் அழகு மிக்க பகுதியாக இருப்பதைக் காணலாம். இராமனிடம் வந்து நல்ல செய்தியைக் கூறுகிறான். அனுமன் ஆற்றின் நீரோட்டம் போல் இராமபிரானிடம் கூறிய சொற்கள் இனிமையானவை. எழுச்சிதரத்தக்கவை.

எனவே கம்பராமாயணக் கதை மாந்தர்களுள் என் மனம் கவர்ந்தவர் அனுமன் ஆவார்.



இயல் - 6

விரிவானம்

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 5. பாய்ச்சல்

சா.கந்தசாமி

## நெடுவினா

### கூடுதல் வினாக்கள்:

1. பாய்ச்சல்' என்னும் கதையை கருக்கி எழுதுக: PTA
(அல்லது) பாய்ச்சல் கதை மூலம் சா.கந்தசாமி உணர்த்தும் கருத்துகளை விவரி.

**முன்னுரை:**

சா. கந்தசாமி சிறுகதை, புதினம் எழுதுவதில் வல்லவர். விசாரணைக் கமிஷன் என்னும் புதினத்திற்கு சாகித்திய அகாதெமி விருதைப் பெற்றவர். அவருடைய பாய்ச்சல் கதை நுட்பமான உணர்வுகளின் உறைவிடமாக விளங்குகின்றது. கலை ஈடுபாட்டின் முழுமையை இக்கதையில் நாம் காண்கிறோம்.

**தெரு முனையில்:**

வீதிகளில் அன்றாடம் எத்தனையோ கலை நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. சாதாரண எளிய மக்களின் பொழுதுபோக்கு வீதிகளில் நடக்கும் நிகழ்வுகளைப் பார்ப்பதே. அனுமார் போல வேடமிட்டு அனைவரையும் மகிழ்வித்த நிகழ்வை அழகு காண்கிறான்.

**கண்காட்சி:**

அனுமார் குரங்கு போல ஓடி வந்தார். வலது காலையும் இடது காலையும் மாறி மாறித் தரையில் உதைத்து வேகமாகக் கைகளை வீசி, நடக்க ஆரம்பித்தார். ஒரு கடையில் தொங்கிய வாழைத்தாரிலிருந்து பழங்களைப் பறித்து எட்டியவர்களுக்கெல்லாம் கொடுத்தார். அழகுக்கும் ஒரு பழம் கிடைத்தது. இவ்வாறு விவரிப்பதன் மூலம் அக்கால மேடைக்கலைஞர்கள் பிறரை மகிழ்விப்பதற்காக எவ்வாறு நடந்து கொண்டனர் என்று விவரிக்கிறார்.

**சதங்கை மேளம்:**

சதங்கையும் மேளமும் தாளமும் நாதசுரமும் ஒன்றாக இசைந்தன. அனுமார் தாவிக் குதித்துக் குறுக்கும் நெடுக்குமாகப் பாய்ந்து சென்றார். நீண்ட வால் மேலே சுழன்று சரேலென்று தரையில் படர்ந்து புழுதியைக் கிளப்பியது.

**அனுமாரின் அதிசய நடனம்:**

அனுமார் 'கீச் கீச்' என்று கத்திக் கொண்டே பந்தல் காலைப்பற்றி மேலே சென்றார். மரத்தின் மேலே ஏறிப் பந்தலில் மறைந்தார். திடீரென்று மேளமும் நாதசுரமும் துரித கதியில் ஒலிக்கத் தொடங்கின. அனுமார் பந்தல் கால் வழியாக கீழே குதித்தார். கைகளைத் தரையில் ஊன்றி அனுமார் கரணமடித்தார். காரில் வந்த ஒருவன் கொடுத்த பணத்தை அனுமார் மேளக்காரனைப் பார்க்க, அவர் வாங்கிக் கொண்டார்.

**அழகு அனுமார் அருகில்:**

அனுமார் அருகில் அழகு சென்றான். வாலை பிடித்துப் பார்த்தான். அனுமாரோடு இவனால் நடக்க முடியவில்லை. அனுமார் திரும்பவும் ஆட ஆரம்பித்தார். பதுங்கியும் பாய்ந்தும் ஆடினார். ஆட.. ஆட... புழுதிப் புகை போல எழுந்தது.

**அனுமாரின் ஓய்வு:**

ஆட்டம் முடிந்தது. ஆற்றங்கரையையொட்டி சின்னக்கோவில் பக்கம் அனுமார் தன் வேடத்தை கொஞ்சம் கொஞ்சமாக களைந்தார். அனுமார் இருமிக் கொண்டே இருப்பதை அழகு கவனித்தான். அழகு அனுமாரைப் பார்த்து "எனக்குக் கூட உங்களை மாதிரி ஆடனுமுன்னு ரொம்ப ஆசைங்க" என்றான். அதற்கு அவர், "எங்க ஒரு சின்ன ஆட்டம் ஆடிக்காட்டு. ஒனக்கு வருமான்னு பார்க்கறேன். சலங்கையைக் கட்டிக்கிட்டே ஆடு" என்றார்.

**அழகின் ஆட்டம்:**

முதலில் மரத்திலிருந்து கீழே குதிக்கும் ஆட்டத்தை ஆடினான் அழகு. அழகின் ஆட்டம் தாளகதிக்கு ரொம்பவும் இணங்கி வருவது அனுமாருக்கு மகிழ்ச்சியளித்தது. அழகு பற்களெல்லாம் தெரிய சப்தமாகச் சிரித்து கைகளை ஆட்டி எம்பி எம்பி காற்றில் மிதப்பது போல் முன்னே வந்தான். அவனைப் பிடிக்கப் பாய்ந்த அனுமார் கால் தடுக்கி கீழே விழுந்தார். அழகோ தன் ஆட்டத்தில் மூழ்கி உற்சாகம் பொங்க ஆடிக்கொண்டிருந்தான்.

**முடிவுரை:**

இக்கதையில் கூட்டத்தினரை மகிழ்வித்த அனுமாரின் ஆட்டத்தைப் பார்த்த அழகு அதே போல் ஆட விரும்பினான்; ஆடிக் காட்டினான்; ஆட்ட நாயகனாகவே மாறி விட்டான். ஒரு கலைஞன் இன்னொரு கலைஞனை உருவாக்கும் உன்னத நிகழ்வு இங்கே நடப்பதை நாம் காண்கிறோம்.

## கற்பவை கற்றபின்

**மேடைக் கலைஞர்களும் பகல் வேடக் கலைஞர்களும் எதிர்கொள்ளும் இடர்ப்பாடுகள் குறித்து வகுப்பறையில் விவாதிக்க.** PTA

மேடைக்கலைஞர்கள் பிறரை மகிழ்விப்பதற்காக வாழ்பவர்கள். நடனம், நளினமான அசைவுகள், நெளிவுகளால் பார்ப்பவர்களைப் பரவசப்படுத்துவார்கள். பகல் வேடக்கலைஞர் களும் பிறரை மகிழ்விக்கும் அளப்பரிய பணியைச் செய்பவர்களே!

**கலைஞர்களின் நிலை:**

கலைஞர்கள் தம் உழைப்பால் நடனமாடி சம்பாதிப்பவர்கள்; வறுமையில் வாழ்பவர்கள்; ஏதோ கிடைக்கின்ற பணத்தை வைத்து வாழ்க்கையை நடத்துபவர்கள். ஏதாவது ஆடுவதற்கு வாய்ப்பு கிடைத்தால் மட்டுமே அவர்களால் வாழ்க்கையைச் சிறப்பாக நடத்த முடியும்.

**எதிர்கொள்ளும் சவால்கள்:**

கலைஞர்கள் செல்கின்ற இடங்களிலெல்லாம் ஆடம்பரமான வரவேற்பு, மாலை மரியாதைகள் கிடைப்பதில்லை. சில இடங்களில் மக்களின் வரவேற்பு கிடைக்காது. நிகழ்ச்சியைப் பார்ப்பதற்கு கூட்டம் மிகக்குறைவாக இருக்கும். கிடைக்கக் கூடிய வருமானமும் குறைவாகவே இருக்கும். மேளக்காரர், நாதஸ்வரம் ஊதுபவர், சிங்கியடிப்பவர் எல்லோருக்கும் பணத்தைப் பிரித்துக் கொடுத்தது போக மீதி கொஞ்சம் தான் கிடைக்கும். சில இடங்களில் ஏளனப் பேச்சுகளையும் எதிர்கொள்ள வேண்டிய நிலை இருக்கும்.

**இன்னலே வாழ்க்கை:**

மேடைக் கலைஞர்களும் பகல் வேடக் கலைஞர்களும் எதிர்கொள்ளும் இன்னல்கள் ஏராளம். எல்லோரையும் தங்கள் கலையில் மகிழ்விக்கும் அவர்களால் மகிழ்ச்சியாக வாழ முடியாத நிலையை சமுதாயத்தில் நாம் காண்கிறோம். பிறர் மகிழ தங்களையே வருத்திக் கொள்ளும் ஆடற்கலைஞர்களின் தியாகம் தான் என்னே!





இயல் - 6

இலக்கணம்

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 6. அகப்பொருள் இலக்கணம்

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. குளிர்காலத்தைப் பொழுதாகக் கொண்ட நிலங்கள்

அ) முல்லை, குறிஞ்சி, மருத நிலங்கள்
ஆ) குறிஞ்சி, பாலை, நெய்தல் நிலங்கள்
இ) குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலங்கள்
ஈ) மருதம், நெய்தல், பாலை நிலங்கள்

விடை: இ) குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலங்கள்

### கூடுதல் வினாக்கள்:

2. பொருளிலக்கணம் ____________ வகைப்படும்.

அ) இரண்டு ஆ) மூன்று இ) ஆறு ஈ) எட்டு

விடை: அ) இரண்டு

3. அகத்திணைகள் ____________ வகைப்படும்.

அ) ஆறு ஆ) ஏழு இ) ஐந்து ஈ) இரண்டு

விடை: ஆ) ஏழு

4. கடலும் கடல் சார்ந்த இடமும் ____________ நிலமாகும்.

அ) நெய்தல் ஆ) முல்லை இ) மருதம் ஈ) பாலை

விடை: அ) நெய்தல்

5. பாலை நிலத்திற்குரிய பறவைகள் ____________.

அ) கிளி, மயில் ஆ) நாரை, அன்னம்
இ) புறா, பருந்து ஈ) ஆந்தை, வாத்து

விடை: இ) புறா, பருந்து

6. மருத நிலத்திற்குரிய தெய்வம் ____________.

அ) முருகன் ஆ) திருமால்
இ) இந்திரன் ஈ) கொற்றவை

விடை: இ) இந்திரன்

7. முல்லை நிலத்தின் சிறுபொழுது ____________.

அ) காலை ஆ) மாலை
இ) நண்பகல் ஈ) ஏற்பாடு

விடை: ஆ) மாலை

8. ஆறு பெரும் பொழுதுகளையும் கொண்ட திணைகள் மருதம், ____________ ஆகும்.

அ) பாலை ஆ) முல்லை
இ) நெய்தல் ஈ) குறிஞ்சி

விடை: இ) நெய்தல்

9. குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம் ____________.

அ) இந்திரன் ஆ) வருணன் இ) திருமால் ஈ) முருகன் விடை: ஈ) முருகன்

10. கருப்பொருளுக்கேற்ற உரிப்பொருளைப் பொருத்துக. PTA

அ) குறிஞ்சி - 1. உப்பு விளைவித்தல்
ஆ) முல்லை - 2. நெல்லரித்தல்
இ) மருதம் - 3. நிரைமேய்த்தல்
ஈ) நெய்தல் - 4. தேனெடுத்தல்

அ) அ - 4, ஆ- 3, இ - 2, ஈ - 1
ஆ) அ - 3, ஆ- 2, இ - 4, ஈ - 1
இ) அ - 1, ஆ- 3, இ - 2, ஈ - 4
ஈ) அ - 4, ஆ- 1, இ - 2, ஈ - 3 விடை: அ) அ - 4, ஆ- 3, இ - 2, ஈ - 1

11. முல்லைநில மக்களின் உணவுப் பொருள்கள் ____________. PTA

அ) வெண்நெல், வரகு ஆ) மலைநெல், தினை
இ) வரகு, சாமை ஈ) மீன், செந்நெல் விடை: இ) வரகு, சாமை

## குறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. காட்டில் விளைந்த வரகில் சமைத்த உணவு மழைக்கால மாலையில் சூடாக உண்ணச் சுவை மிகுந்திருக்கும். - இத்தொடரில் அமைந்துள்ள முதற்பொருள், கருப்பொருள்களை வகைப்படுத்தி எழுதுக. PTA
   - முல்லைத்திணை: காடும் காடு சார்ந்த இடமும்
   - சிறுபொழுது - மாலை
   - உணவு - வரகு
   - பெரும் பொழுது - கார்காலம் (மழைக்காலம்)

2. "நேற்று நான் பார்த்த அருச்சுனன் தபசு என்ற கூத்தில் அழகிய ஒப்பனையையும் சிறந்த நடிப்பையும் இனிய பாடல்களையும் நுகர்ந்து மிக மகிழ்ந்தேன்! " என்று சேகர் என்னிடம் கூறினான். இக்கூற்றை அயற்கூற்றாக மாற்றுக.

   முன் தினம் தான் பார்த்த அர்ச்சுனன் தபசு என்ற கூத்தில் அழகிய ஒப்பனையையும் சிறந்த நடிப்பையும் இனிய பாடல்களையும் நுகர்ந்து மிக மகிழ்ந்ததாக சேகர் என்னிடம் கூறினான்.

3. கீழ்வரும் தொடர்களில் பொருந்தாத கருப்பொருளைத் திருத்தி எழுதுக.
   உழவர்கள் மலையில் உழுதனர்.
   முல்லைப் பூச் செடியைப் பார்த்தவாறே பரதவர் கடலுக்குச் சென்றனர்.
   - மருத நிலம் - வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகும்.
     உழவர்கள் வயலில் உழுதனர்.
   - நெய்தல், தாழைப் பூவைப் பார்த்தவாறே பரதவர் கடலுக்குச் சென்றனர்.

**கூடுதல் வினாக்கள்:**

4. பொருள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
   - அகப்பொருள் ஏழு வகைப்படும்.
   - அவை: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை.

5. அகத்திணை என்பது யாது?

அன்புடைய தலைவன் தலைவி இடையிலான உறவுநிலைகளைக் கூறுவது அகத்திணை ஆகும்.

6. பொழுது எத்தனை வகைப்படும்? அவை யாவை?

பொழுது இரண்டு வகைப்படும்.

- சிறு பொழுது
- பெரும் பொழுது

7. பெரும் பொழுது எத்தனைக் கூறுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது? அவை யாவை?

- ஓராண்டின் ஆறு கூறுகளைப் பெரும்பொழுது என்று நம் முன்னோர் பிரித்துள்ளனர்.
- கார்காலம் – ஆவணி, புரட்டாசி
- குளிர்காலம் – ஐப்பசி, கார்த்திகை
- முன் பனிக்காலம் – மார்கழி, தை
- பின் பனிக்காலம் – மாசி, பங்குனி
- இளவேனிற்காலம் – சித்திரை, வைகாசி
- முதுவேனிற்காலம் – ஆனி, ஆடி

8. கருப்பொருள் என்றால் என்ன?

ஒரு நிலத்தின் தெய்வம், மக்கள், தொழில், விலங்கு, உணவு, பூ, மரம், பறவை, ஊர், நீர், பறை, யாழ், பண் மற்றும் தொழில் போன்றவையெல்லாம் கருப்பொருளாகும்.

## சிறுவினா

பாடநூல் வினா:

1. கடற்கரையில் உப்புக் காய்ச்சுதல் நடைபெறுகிறது; மலைப் பகுதிகளில் மலைப் பயிர்களும் நிலப் பகுதிகளில் விவசாயமும் நடைபெறுகின்றன – காலப்போக்கில் பல மாற்றங்கள் நிகழ்ந்த போதிலும், பண்டைத் தமிழரின் திணைநிலைத் தொழில்கள் இன்றளவும் தொடர்வதையும் அவற்றின் இன்றைய வளர்ச்சியையும் எழுதுக. PTA

- அந்தந்த நிலங்களில் அந்தந்த நிலத்திற்குரிய தொழில் நடைபெறுகிறது.
- கடற்கரையில் உப்புக்காய்ச்சுதல் தொடர்ந்து இன்றளவும் நடைபெற்று வருகிறது.
- மருத நிலத்தில் உழவுத் தொழில், நெல் பயிரிடுதல், களை பறித்தல் நடைபெறுகிறது.
- குறிஞ்சி நிலத்தில் தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல் போன்றவை நடைபெறுகின்றன.

வளர்ச்சி

- குறிஞ்சி நில மக்கள் வீட்டுத் தோட்டம் அமைப்பதில் கவனம் செலுத்துகின்றனர்.
- தங்கள் வீட்டிற்குத் தேவையான காய்கறித் தோட்டங்களை அமைத்துக் கொள்கின்றனர்.
- முல்லை நிலமக்கள் நிரை மேய்த்தல் தொழிலை மேற்கொள்கின்றனர்.
- முல்லை நில மக்களும் தங்கள் வீட்டின் அருகிலுள்ள காட்டுப் பகுதிகளைத் திருத்தி அழகான தோட்டம் அமைத்து பயிரிடுகின்றனர். தினை, காய்கறிகள், கிழங்கு வகைகள் போன்றவற்றைப் பயிரிட்டு வாழ்க்கையை வளமாக்கிக் கொள்கின்றனர்.
- இன்றைய தமிழரின் வாழ்க்கை முறையும் பண்டையத் தமிழரின் திணை நிலை வாழ்க்கை முறையும் ஓரளவு அதே நிலையில் இருந்தாலும் முல்லை, மருத, குறிஞ்சி நிலங்களில் பல மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டே உள்ளன.

கருப்பொருள் அட்டவணை:

| கருப் பொருள் | குறிஞ்சி | முல்லை | மருதம் | நெய்தல் | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | முருகன் | திருமால் | இந்திரன் | வருணன் | கொற்றவை |
| மக்கள் | வெற்பன், குறவர், குறத்தியர் | தோன்றல் ஆயர். ஆய்ச்சியர் | ஊரன், உழவர், உழத்தியர் | சேர்ப்பன், பரதன், பரத்தியர் | எயினர், எயிற்றியர் |
| உணவு | மலைநெல், தினை | வரகு, சாமை | செந்நெல், வெண்ணெல் | மீன், உப்புக்குப் பெற்ற பொருள் | சூறையாடலால் வரும் பொருள் |
| விலங்கு | புலி, கரடி, சிங்கம் | முயல், மான், புலி | எருமை, நீர்நாய் | முதலை, சுறா | வலியிழந்த யானை |
| பூ | குறிஞ்சி, காந்தள் | முல்லை, தோன்றி | செங்கழுநீர், தாமரை | தாழை, நெய்தல் | குரவம், பாதிரி |
| மரம் | அகில், வேங்கை | கொன்றை , காயா | காஞ்சி, மருதம் | புன்னை , ஞாழல் | இலுப்பை, பாலை |
| பறவை | கிளி, மயில் | காட்டுக்கோழி, மயில் | நாரை, நீர்க்கோழி, அன்னம் | கடற்காகம் | புறா, பருந்து |
| ஊர் | சிறுகுடி | பாடி, சேரி | பேரூர், மூதூர் | பட்டினம், பாக்கம் | குறும்பு |
| நீர் | அருவி நீர், சுனை நீர் | காட்டாறு | மனைக்கிணறு, பொய்கை | மணற்கிணறு, உவர்க்கழி | வற்றிய சுனை, கிணறு |
| பறை | தொண்டகம் | ஏறு கோட்பறை | மணமுழா, நெல்லரிகிணை | மீன் கோட்பறை | துடி |
| யாழ் | குறிஞ்சி யாழ் | முல்லை யாழ் | மருத யாழ் | விளரி யாழ் | பாலை யாழ் |
| பண் | குறிஞ்சிப் பண் | முல்லைப்பண் | மருதப்பண் | செவ்வழிப்பண் | பஞ்சுரப்பண் |
| தொழில் | தேனெடுத்தல், கிழங்கு அகழ்தல் | ஏறு தழுவுதல், நிரை மேய்த்தல் | நெல்லரிதல், களை பறித்தல் | மீன் பிடித்தல், உப்பு விளைத்தல் | வழிப்பறி, நிரை கவர்தல் |

| ஐவகை நிலங்கள் | |
|---|---|
| குறிஞ்சி | மலையும் மலை சார்ந்த இடமும் |
| முல்லை | காடும் காடு சார்ந்த இடமும் |
| மருதம் | வயலும் வயல் சார்ந்த இடமும் |
| நெய்தல் | கடலும் கடல்சார்ந்த இடமும் |
| பாலை | சுரமும் சுரம் சார்ந்த இடமும். |

# மொழியை ஆள்வோம்

## மொழி பெயர்ப்பு

**Koothu**

**Therukoothu is, as its name indicates, a popular form of theatre performed in the streets. It is performed by rural artists. The stories are derived from epics like Ramayana, Mahabharatha and other ancient puranas. There are more songs in the play with dialogues improvised by the artists on the spot. Fifteen to twenty actors with a small orchestra forms a koothu troupe. Though the orchestra has a singer, the artists sing in their own voices. Artists dress themselves with heavy costumes and bright makeup. Koothu is very popular among rural areas.**

விடை :

**கூத்து:**

தெருக்கூத்து என்பது, அதனுடைய பெயர் குறிப்பிட்டுக் காட்டுவதைப் போல, தெருக்களில் நடத்தப்படுகின்ற ஒரு பிரபலமான கலைநிகழ்ச்சியாகும். இது கிராமப்புற கலைஞர்களால் நடத்தப்படுகிறது. இதில் இராமாயண, மகாபாரதம் மற்றும் பழைமையான புராணங்களில் உள்ள கதைகளை எடுத்தாள்கிறார்கள். இதில் அதிகப்படியான பாடல்களும், அந்தந்த நேரத்தில் தெருக்கலைஞர்களால் மேம்படுத்தப்பட்ட உரையாடல்களும் இடம்பெறுகின்றன.

ஒரு கூத்து குழுவில் இருபது முதல் முப்பது நடிகர்கள் ஒரு சிறிய இசைக்குழுவோடு இருப்பார்கள். அந்த இசைக்குழுவில் ஒரு பாடகர் இருந்தாலும், கூத்தாடும் கலைஞரே தம் சொந்தக் குரலில் பாடுவார். கலைஞர்கள் ஆடம்பரமான ஆடை அணிகலன்களுடனும், பிரகாசமான ஒப்பனைகளுடனும் தங்களை அலங்கரித்துக் கொள்வர். கிராமப் பகுதிகளில் தெருக்கூத்து மிகவும் பிரபலமானதாகும்.

### தொடர்களை அடைப்புக்குறிக்குள் குறிப்பிட்டுள்ளவாறு மாற்றுக.

எ.கா.

அழைப்புமணி ஒலித்தது. கயல்விழி கதவைத் திறந்தாள். PTA

(தனிச் சொற்றொடர்களைக் கலவைச் சொற்றொடராக மாற்றுக)

அழைப்புமணி ஒலித்ததும், கயல்விழி கதவைத் திறந்தாள்.

1. இன்னாசியார் புத்தகங்களை வரிசைப்படுத்தினார். அவற்றைப் புத்தக அடுக்கங்களில் அடுக்கி வைத்தார். கேட்டவர்களுக்கு எடுத்துக்கொடுத்தார்.

(தொடர் சொற்றொடராக மாற்றுக.)

விடை : இன்னாசியார் புத்தகங்களை வரிசைப்படுத்தி, புத்தக அடுக்கங்களில் அடுக்கி, கேட்டவர்களுக்கு எடுத்துக் கொடுத்தார்.

2. ஒயிலாட்டத்தில் குழுவினர் ஒரே நிறத் துணியை முண்டாசு போலக் கட்டிக் கொண்டு, காலில் சலங்கை அணிந்து கொண்டு, கையில் ஒரு சிறுதுணியை இசைக்கேற்ப வீசியும் ஆடுவர்.

(தனிச் சொற்றொடர்களாக மாற்றுக.)

விடை : ஒயிலாட்டத்தில் குழுவினர் ஒரே நிறத் துணியை முண்டாசு போலக் கட்டிக் கொள்வர். காலில் சலங்கை அணிந்து கொள்வர். கையில் ஒரு சிறுதுணியை இசைக்கேற்ப வீசியும் ஆடுவர்.

3. கூத்துக் கலைஞர் பாடத் தொடங்கினார். கூடியிருந்த மக்கள் அமைதியாயினர்.

(கலவைச் சொற்றொடராக மாற்றுக.) PTA

விடை : கூத்துக் கலைஞர் பாடத் தொடங்கியதும் கூடியிருந்த மக்கள் அமைதியாயினர்.

4. ஓடிக்கொண்டிருந்த மின்விசிறி சட்டென நின்றவுடன், அறையில் உள்ளவர்கள் பேச்சு தடைபட்டது. (தனிச் சொற்றொடர்களாக மாற்றுக.) PTA

விடை : ஓடிக்கொண்டிருந்த மின்விசிறி சட்டென நின்றது. அறையில் உள்ளவர்கள் பேச்சு தடைபட்டது.

## பிறமொழிச் சொற்களைத் தமிழ்ச்சொற்களாக மாற்றி எழுதுக.

புதிர்

உங்களிடம் ஏழு கோல்டு பிஸ்கட் உள்ளது. அதில் ஒன்று மட்டும் எடை குறைவானது. உங்களிடம் உள்ள ஒரு தராசை இரு முறைகள் மட்டுமே யூஸ் பண்ணி வெயிட் குறைந்த கோல்டு பிஸ்கட்டைக் கண்டுபிடிக்கவும். PTA

விடை :

தராசின் இரண்டு தட்டுகளிலும் மூன்று மூன்று கோல்டு பிஸ்கட்டுகளை வையுங்கள். இரண்டு தட்டுகளும் ஈக்வலாக இருந்தால், கையில் மிச்சம் உள்ள பிஸ்கட்டே வெயிட் குறைவானது. பட் ஆனால், ஒரு பக்க தராசுத் தட்டு உயர்ந்தால் அதில் உள்ள மூன்று பிஸ்கட்களில் ஒன்று வெயிட் குறைவானது. அந்த மூன்று பிஸ்கட்டுகளை மட்டும் எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். இரண்டு தட்டுகளிலும் ஒரு ஒரு பிஸ்கட்டைப் போட்டு இதே எக்ஸ்பெரிமெண்ட்டை ரிப்பீட் செய்து ஆன்சரைக் கண்டுபிடியுங்கள்! ஆல் தி பெஸ்ட்!

| பிறமொழிச் சொல் | தமிழ்ச் சொல் | பிறமொழிச் சொல் | தமிழ்ச் சொல் |
|---|---|---|---|
| கோல்டு பிஸ்கட் | தங்கக் கட்டி | ஈக்வலாக | சமமாக |
| யூஸ் | பயன்படுத்தி | எக்ஸ்பெரிமெண்ட் | பரிசோதனை |
| வெயிட் | எடை | ரிப்பீட் | திரும்பவும் |
| ஆன்சர் | விடை | ஆல் தி பெஸ்ட் | வாழ்த்துக்கள் |

## நாட்டுப்புறப் பாடலுக்கேற்ற சூழலை எழுதுக.

**பாடல்:**

ஆத்துக்கு அந்தண்டையே அண்ணன் வச்ச தென்னம்புள்ளே!
அண்ணன் புள்ள வாடினாலும் யம்மாடி! யம்மாடி!
தென்ன ம்புள்ள வாடலாமோ ? யம்மாடி! யம்மாடி!
வாய்க்காலுக்கு மேற்குப்புறம் வஞ்சி வெச்ச வாழை மரம்
வஞ்சி மனம் வாடினாலும் யம்மாடி! யம்மாடி!
வாழை மரம் வாடலாமோ யம்மாடி! யம்மாடி!

பாடல் எழுந்த சூழல்:

அண்ணன் நட்டு வைத்த தென்னம்பிள்ளைக்கு நீர் பாய்ச்ச, தோப்புக்கு வரும் பெண்ணொருத்தி குழந்தையை இடுப்பிலிருந்து இறக்கி விடுகிறாள். தென்னம்பிள்ளைக்கு நீரூற்றுகிறாள்; குழந்தை அழுகிறது; பாடலைப் பாடியவாறே குழந்தையின் அழுகையை நிறுத்தி நீரூற்றுதலைத் தொடர்கிறாள்.

**பாடல்:**

பாடறியேன் படிப்பறியேன் – நான்தான்
பள்ளிக்கூடம் தானறியேன்
ஏடறியேன் எழுத்தறியேன் – நான்தான்
எழுத்துவகை தானறியேன்

படிக்க நல்லா தெரிஞ்சிருந்தா – நான்தான்
பங்காளிய ஏன் தேடுறேன்
எழுத நல்லா தெரிஞ்சிருந்தா – நான்தான்
எதிராளிய ஏன் தேடுறேன்
நாலெழுத்துப் படிச்சிருந்தா – நான்தான்
நாலு தேசம் போய்வருவேன்
நாலு பக்கம் வரப்புக்குள்ளே – தெனமும்
நான் பாடுறேன் தெம்மாங்குதான்

பாடல் எழுந்த சூழல்

பள்ளிக் கூடம் சென்று கல்வியறிவு பெறாத இளைஞன் ஒருவன் வயலில் உழுது கொண்டே பாடிக்கொண்டிருக்கிறான். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாததால் எந்த வித வேலைக்கும் செல்ல முடியாமல் வயல் வேலைக்கு வந்து வரப்பில் இருந்து பாடுவதை நினைத்து வருத்தமாகவும், அலுப்பு தீருமாறும் பாடுகிறான்.

**மனிதனுக்கும் மலருக்குமான மணம் வீசும் இந்த நயவுரையைத் தொடர்க.**

வண்டுகளை ஈர்க்கும் வாசனையில்
பூக்களிடம் வசப்படுவது மனிதர்களே!
பூச்சியைக் கவரும் வண்ணங்களில்
பூக்களிடம் விழுவது மனிதர்களே!
பூக்களின் நறுமணம் கவர்ந்திடுதே!
பூவையர் தலைகளில் மலர்ந்திடுதே!

## கட்டுரை எழுதுக

உங்கள் பகுதியில் நடைபெற்ற அரசுப் பொருட்காட்சிக்குச் சென்று வந்த நிகழ்வை கட்டுரையாக்குக. PTA

முன்னுரை:

எங்கள் ஊர் திருநெல்வேலி மாநகரமாகும். நெல்லையில் கோயில் கொண்டிருக்கும் நெல்லையப்பரின் தேரோட்டத்தின் போது ஒருமாதக் காலம் அரசுப் பொருட்காட்சி சிறப்பாக நடைபெறும்.

இனிய காட்சி

நெல்லையப்பர் நெடுஞ்சாலையில் மாநகராட்சி அலுவலகத்திற்கு எதிரில் மாநகராட்சி பொருட்காட்சி அமைக்கப்படுகிறது. நாங்கள் அதைக் கண்டுகளிக்க குடும்பத்துடன் ஒரு நாள் மாலை அங்கு சென்றோம்.

பல்துறை அரங்குகள்

உள்ளே நுழைந்ததும் அரசு சார்பாக நடத்தப்படுகின்ற பொருட்காட்சியாக இருப்பதால் காவல்துறை, சுற்றுலாத்துறை, அறநிலையத் துறை, விளம்பரத் துறை, வனத்துறை, தீயணைப்புத் துறை, போக்குவரத்துத் துறை சார்பாக தனித்தனி அரங்குகள் எங்கள் கண்களைக் கவர்ந்தது. வண்ண விளக்குகளுடன், ஏராளமான புகைப்படங்களுடன், செய்முறைக் காட்சிகளுடன் அரங்குகள் பார்ப்பவர்கள் மனதிற்கு விருந்தாக அமைந்திருந்தன.

விளையாட்டு அரங்குகள்

சிறுவர்கள், பெரியவர்கள் பொழுதுபோக்க ஏராளமான விளையாட்டுகள் அமைக்கப்பட்டிருந்தன. ராட்டினங்கள், ஊஞ்சல், மின்சாரத் தொடர்வண்டிகள், பேய்வீடு, இராட்சச ராட்டினங்கள் போன்றவற்றில் நாங்கள் விளையாடி மகிழ்ந்தோம். எண்ணிலா மகிழ்ச்சியடைந்தோம்.

**உணவு அரங்குகள்**

எங்களைப் போல் ஏராளமானோர் குடும்பத்துடன் வந்திருந்தனர். நாங்கள் பஜ்ஜி, போண்டா, அப்பளம் போன்றவற்றை வாங்கி உண்டு மகிழ்ந்தோம். குளிர்பானங்கள் அருந்தி மகிழ்ந்தோம். ஒன்றாக அமர்ந்து இனிமையுடன் பேசி நேரத்தை மகிழ்வுடன் கழித்தோம்.

**விளையாட்டுப் பொருட்கள்**

பல விளையாட்டு அரங்குகளில் விளையாட்டுப் பொருட்களை வாங்கினோம். வீட்டிற்குத் தேவையான வீட்டு உபயோகப் பொருட்களை வாங்கினோம். துணிமணிகள் ஏராளமாக வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் சிலவற்றை வாங்கி மகிழ்ந்தோம்.

**முடிவுரை**

பொருட்காட்சியைக் கண்டு களித்தது, பேருந்தில் வந்தது, உணவு உண்டு மகிழ்ந்தது அனைத்தும் மகிழ்ச்சியாக அமைந்திருந்தது. குடும்பமாகச் சேர்ந்து மகிழ்ந்த இப்பொருட்காட்சியை என்றும் என்னால் மறக்க இயலாது.

## மொழியோடு விளையாடு

### தொடரில் விடுபட்ட வண்ணங்களை உங்களின் எண்ணங்களால் நிரப்புக.

1. வானம் கருக்கத் தொடங்கியது. மழை வரும் போலிருக்கிறது. PTA
2. அனைவரின் பாராட்டுகளால், வெட்கத்தில் பாடகரின் முகம் ________. விடை : சிவந்தது
3. ________ மனம் உள்ளவரை அப்பாவி என்கிறோம். விடை :வெள்ளை
4. கண்ணுக்குக் குளுமையாக இருக்கும் ________ புல்வெளிகளில் கதிரவனின் ________ வெயில் பரவிக் கிடக்கிறது. PTA விடை : பசுமை, கதிர்
5. வெயிலில் அலையாதே; உடல் ________ விடை : கறுத்து விடும்

### பொருத்தமானவற்றைச் சொற்பெட்டியில் கண்டு எழுதுக.

(துங்கும், மரம் வீடு, அவிழும், தயங்கும், மரவீடு, தோற்பாவை, விருது, தோற்பவை, கவிழும், விருந்து)

1. விரட்டாதீர்கள் – பறவைக்கு மரவீடு.
   வெட்டாதீர்கள் – மனிதருக்கு அவைதரும் மரம் வீடு.
2. காலை ஒளியினில் மலரிதழ் அவிழும்.
   சோலைப் பூவினில் வண்டினம் கவிழும்.
3. மலை முகட்டில் மேகம் தங்கும் – அதைப்
   பார்க்கும் மனங்கள் செல்லத் தயங்கும்
4. வாழ்க்கையில் தோற்பவை மீண்டும் வெல்லும் இதைத்
   தத்துவமாய்த் தோற்பாவை கூத்து சொல்லும்.
5. தெருக்கூத்தில் நடிகருக்குக் கை தட்டலே விருது – அதில்
   வரும்காசு குறைந்தாலும் அதுவேயவர் விருந்து.

### அகராதியில் காண்க.

1. தால் – தாலாட்டு
2. உழுவை – புலி
3. அகவுதல் – ஒலித்தல்
4. ஏந்தெழில் – மிகுந்த அழகு
5. அணிமை – அண்மை

அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.

ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



அ) மேள தாளத்தோடு ஆடி மகிழுங்கள்
தாளம் தப்பாமல் நெளிந்து ஆடுங்கள்
அழகான துணியசைத்து ஆடுங்கள்
கால் தடம் மாற்றி ஆடுங்கள்
கண்ணுக்கினிய நடனத்தை அளித்திடுங்கள்.

ஆ) 1. கிராமியக் கலைகளில் ஒன்றாக ஒயிலாட்டம் வளர்ந்துள்ளது.
2. மக்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் கலை நம் கிராமியக் கலை.
3. உள்ளத்தின் வெளிப்பாடு உவகையின் களிப்பாடாக உள்ளது.
4. நமது கலையைப் போற்ற வேண்டியது நம் கடமையாகும்.
5. பழங்காலங் கலையை அழிக்காமல் பாதுகாக்க வேண்டும்.

நிற்க அதற்கு தக.

அரசின் பொங்கல் விழாவில் சிற்றூர்க் கலைகளைக் காட்சியாக்கியிருக்கிறார்கள். ஒருபுறம் திரைகட்டித் தோற்பாவைக் கூத்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இன்னொருபுறம் பொம்மலாட்டம் ஆடிக்கொண்டிருந்தனர். சற்று நடந்தால் தாரை தப்பட்டை முழங்க ஒயிலாட்டம் ஆடியவாறு மண்ணின் மக்கள்.... இக்கலைகளை நீங்கள் நண்பர்களுடன் பார்த்தவாறும் சுவைத்தவாறும் செல்கிறீர்கள்.

இக்கலைகளைப் பாதுகாக்கவும், வளர்க்கவும் மேன்மேலும் பரவலாகவும் நீங்கள் செய்யவிருப்பனவற்றை வரிசைப்படுத்துக. PTA

1. பிறந்த நாள் விழாக்களில் மயிலாட்டம் முதலான கலைகளை நிகழ்த்த முனைவேன்.
2. எங்கள் குடும்ப விழாக்களில் பொம்மலாட்டம் நிகழ்த்த ஏற்பாடு செய்வேன்.
3. எங்கள் ஊர் திருவிழாவில் தாரைத் தப்பட்டை நிகழ்வை நடத்துவேன்.
4. எம் பள்ளியில் பொம்மலாட்டம் நிகழ்வுக்கு ஏற்பாடு செய்வேன்.
5. எங்கள் ஊர் இளைஞர்கள் இணைந்து ஒயிலாட்டம் பயிற்சி பெறுவோம்.
6. எங்கள் கிராமத்தில் நாட்டுப்புறக் கலையை வளர்ப்போம்.

கலைச்சொல் அறிவோம் PTA

| | | |
|---|---|---|
| Aesthetics | – | அழகியல், முருகியல் |
| Terminology | – | கலைச்சொல் |
| Artifacts | – | கலைப் படைப்புகள் |
| Myth | – | தொன்மம் |



இயல் - 6

வாழ்வியல்

கலை, அழகியல், புதுமைகள் – நிலாமுற்றம்

# 7. திருக்குறள்

## அமைச்சு

1. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு.

சொற்பொருள்:

காலமும் – ஏற்ற காலமும்
செய்கை – செயல்
அருவினை – அரிய சொல்
ஆண்டது – ஆகியவற்றைக் கொண்டது

பொருளுரை : தொழில் செய்வதற்குத் தேவையான கருவி, அதற்கு ஏற்ற காலம், செயலின் தன்மை, செய்யும் முறை ஆகியவற்றை அறிந்து அரிய செயலைச் செய்பவரே அமைச்சர் ஆவார்.

2. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

சொற்பொருள்:

வன்கண் – மனவலிமை
கற்றறிதல் – ஆட்சி முறைகளைக் கற்றல்
ஆள்வினை – ஆட்சி செய்யும் திறன்

பொருளுரை : மனவலிமை, குடிகளைக் காத்தல், ஆட்சி முறைகளைக் கற்றல், நூல்களைக் கற்றல், விடாமுயற்சி ஆகிய ஐந்தும் சிறப்பாக அமைந்தவரே அமைச்சராவார்.

3. மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.

சொற்பொருள்:

மதிநுட்பம் – கூர்மையான அறிவு
அதிநுட்பம் – நுட்பமான சூழ்ச்சி

பொருளுரை : இயற்கையான நுண்ணறிவும், நூலறிவும் உடைய அமைச்சர்களுக்கு முன், எந்த நுட்பமான சூழ்ச்சிகள் நிற்க முடியும்? (எந்த சூழ்ச்சியும் நிற்க இயலாது).

4. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்
தியற்கை அறிந்து செயல். *

சொற்பொருள்:

கடைத்தும் – முறைகளையும்
செயல் – செயல்படுதல்

பொருளுரை : ஒரு செயலைச் செய்வதற்குரிய முறைகளை நூல்வழியாக அறிந்திருப்பினும், உலகியல் நடைமுறைகளை அறிந்து செயல்பட வேண்டும்.

## பொருள்செயல் வகை

5. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். *

அணி : சொற்பொருள்பின்வருநிலை அணி

சொற்பொருள்:

பொருள் – செல்வம்

பொருளாக – மதிப்புடையவராக

பொருளுரை : ஒரு பொருளாக மதிக்கத் தகாதவரையும் மதிப்புடையவராகச் செய்வது செல்வம். அஃது அல்லாமல் உலகில் சிறந்த பொருள் வேறு இல்லை.

6. அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

சொற்பொருள்:

அறனீனும் – அறத்தைத் தரும்

திறனறிந்து – முறையறிந்து

தீதின்றி – தீமையில்லாமல்

பொருளுரை : முறையறிந்து தீமையற்ற வழியில் சேர்த்த பொருள் ஒருவருக்கு அறத்தையும் தரும்; இன்பத்தையும் தரும்.

7. அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

சொற்பொருள்:

அருள் – இரக்கம்

பொருளாக்கம் – ஈட்டும் பொருள்

புல்லார் – அறிவில்லாதவர்

புரள விடல் – நீக்கி விடுதல்

பொருளுரை : மற்றவர்களிடம் இரக்கமும் அன்பும் இல்லாமல் ஈட்டும் பொருளை ஏற்றுக் கொள்ளாமல் நீக்கிவிட வேண்டும்.

8. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. *

அணி : உவமை அணி

சொற்பொருள்:

குன்று – மலை

கண்டற்றால் – காண்பது போன்றது

கைத்தொன்று – கைப்பொருள்

வினை – செயல்

பொருளுரை : தன் கைப்பொருளைக் கொண்டு ஒருவர் ஒரு செயலைச் செய்வது, மலைமேல் பாதுகாப்பாக நின்று கொண்டு யானைப்போரைக் காண்பது போன்றது.

9. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.

சொற்பொருள்:

செறுநர் – பகை

செருக்கு – ஆணவம்

கூரிய – கூர்மையான

பொருளுரை : ஒருவர் பொருளை ஈட்ட வேண்டும்; அவருடைய பகைவரை வெல்லும் கூர்மையான ஆயுதம் அதைவிட வேறு இல்லை.

## கூடாநட்பு

10. தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

சொற்பொருள்:

ஒடுங்கும் – மறைந்திருக்கும்
ஒன்னார் – பகைவர்

பொருளுரை : பகைவரின் தொழுது நிற்கும் கையின் உள்ளும், கொலைக்கருவி மறைந்து இருக்கும். அதுபோல் அவர்அழுத கண்ணீரின் உள்ளும் வஞ்சகம் மறைந்து இருக்கும் என்பதை உணர வேண்டும்.

## பகை மாட்சி

11. அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.

சொற்பொருள்:

துணை – சுற்றம்
ஏதிலான் – பகைவன்

பொருளுரை : சுற்றத்தாரிடம் ஒருவர் அன்பு இல்லாமலும் பொருந்திய துணை இல்லாமலும், வலிமையில்லாமலும் இருந்தால் அவர் எப்படிப் பகைவரின் வலிமையை எதிர்கொள்வார்? (எதிர்கொள்ள முடியாது)

12. அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு.

சொற்பொருள்:

அஞ்சும் – பயப்படும்
ஈதல் – கொடுத்தல்
தஞ்சம் – அடைக்கலம்

பொருளுரை : மனத்தில் துணிவு இல்லாதவராய், அறிய வேண்டியவற்றை அறியாதவராய், பொருந்தும் பண்பு இல்லாதவராய், பிறர்க்குக் கொடுத்து உதவாதவராய் இருந்தால் எளிதில் பகைக்கு ஆட்பட நேரும்.

## குடிசெயல் வகை

13. ஆள்வினையும் ஆன்ற அறிவு மெனவிரண்டின்
நீள்வினையால் நீளும் குடி.

சொற்பொருள்:

ஆள்வினை – விடாமுயற்சி
நீள்வினை – தொடர்முயற்சி
நீளும் – வளரும்

பொருளுரை : விடா முயற்சி, சிறந்த அறிவாற்றல் இவ்விரண்டையும் இடைவிடாமல் பின்பற்றுபவரின் குடி உயர்ந்து விளங்கும்.

14. குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. *

சொற்பொருள்:

இலன் – இல்லாமல்
சுற்றும் – சுற்றிவரும்

பொருளுரை : குற்றம் இல்லாமல் தன் குடிப்பெருமையை உயரச் செய்து வாழ்பவரை உலகத்தார் உறவாகக் கொண்டு போற்றுவர்.

## நல்குரவு

15. இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. *

அணி : சொற்பொருள்பின்வருநிலை அணி

சொற்பொருள்:

இன்மை – வறுமை
இன்னாதது – துன்பம் தருவது

பொருளுரை : ஒருவருக்கு வறுமையைப் போன்று துன்பம் தருவது எது என்றால் அது வறுமையே ஆகும்.

## இரவு

16. கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும்.

சொற்பொருள்:

கரப்பு – மறைத்து வைத்தல்
இடும்பை – துன்பம்
நிரப்பு – வறுமை
ஒருங்கு – ஒன்றாக

பொருளுரை : தம்மிடமுள்ள பொருளை மறைத்து வைத்தல் என்னும் துன்பம் தராத நல்லாரைக் காணின் வறுமையின் கொடுமை முழுதும் கெடும்.

17. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்ப துடைத்து.

சொற்பொருள்:

இகழ்ந்து – இழிவாகபேசி
எள்ளாது – ஏளனம் செய்யாது
ஈவாரை – பொருள் கொடுப்பவரை
உள்ளுள் – உள்ளத்துள்
உவப்ப – மகிழ்ந்து

பொருளுரை : இகழ்ந்து ஏளனம் செய்யாமல் பொருள் கொடுப்பவரைக் கண்டால், இரப்பவரின் உள்ளத்தின் உள்ளே மகிழ்ச்சி பொங்கும்.

## கயமை

18. மக்களே போல்வர் கயவர்; அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில்.

அணி : உவமை அணி

சொற்பொருள்:

போல்வர் – போலவே இருப்பர்
கயவர் – திருடர்
அன்ன – போல
ஒப்பார் – ஒற்றுமை
இல் – இல்லை

பொருளுரை : கயவர் மக்களைப் போலவே இருப்பர்; கயவர்க்கும் மக்களுக்கும் உள்ள தோற்ற ஒப்புமையை வேறெதிலும் நாம் கண்டதில்லை.

19. தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

அணி : வஞ்சப் புகழ்ச்சி அணி

சொற்பொருள்:

அனையர் – தன்மையர்
மேவன – விரும்புவன
தொழுகலான் – ஒழுகி வாழ்வார்

பொருளுரை : தேவரும் கயவரும் ஒரு தன்மையர்; எவ்வாறு எனில் தேவர்களைப் போலக் கயவர்களும் தாம் விரும்புவனவற்றைச் செய்து ஒழுகுவர்.

20. சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.

அணி : உவமை அணி

சொற்பொருள்:

சான்றோர் – நற்பண்புடையவர்
கரும்பு போல – கரும்பைப் போல்

பொருளுரை : ஒருவர் தம் குறையைச் சொல்வதைக் கேட்டவுடனேயே உதவி செய்வர் சான்றோர்; கரும்பைப் பிழிவது போல நெருக்கிப் பிழிந்தால் தான் பயன்படுவர் கயவர்.

## பொருள் தருக

### அமைச்சு

அருவினை – அரிய செயல்
வன்கண் – மன வலிமை
ஆள்வினை – விடா முயற்சி
மதி நுட்பம் – நூலறிவு
சுதி நுட்பம் – சூழ்ச்சிகள்

### பொருள் செயல் வகை

புல்லார், செறுநர் – பகைவர்
செறுக்கு – ஆணவம், தற்பெருமை
ஒன்னார் – பகைவர்
ஏதிலான் – பகைவன்

### குடிசெயல் வகை

நீள்வினை – இடைவிடா முயற்சி
சுற்றம் – உறவினர்

### நல்குரவு:

இன்மை – வறுமை

### இரவு:

இடும்பை – துன்பம்
எள்ளா – ஏளனம் செய்யாமல்
ஈவார் – கொடுப்பவர்
உவப்பு – மகிழ்ச்சி

### கயமை:

ஒப்பார் – சமமானவர்
ஒழுகுதல் – நடத்தல்

**இலக்கணக் குறிப்பு தருக:**

| | | |
|---|---|---|
| கருவியும் காலமும் | - | எண்ணும்மை |
| அருவினை, வன்கண் | - | பண்புத்தொகை |
| அறிந்து | - | வினையெச்சம் |
| ஆள்வினை | - | வினைத்தொகை |

## பலவுள் தெரிக

**கூடுதல் வினாக்கள்:**

1. அமைச்சராவதற்கு _______ பண்புகளை வள்ளுவர் கூறுகிறார்.

அ) ஆறு ஆ) ஐந்து இ) இரண்டு ஈ) நான்கு விடை : ஆ) ஐந்து

2. பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்வது _______.

அ) அருள் ஆ) அன்பு இ) செல்வம் ஈ) அறிவு விடை : இ) செல்வம்

3. தீதின்றி - என்ற சொல்லைப் பிரித்தால் _______ என வரும்.

அ) தீது+இன்றி ஆ) தீ+தின்றி இ) தீது+தின்றி ஈ) தீதி+இன்றி

விடை : அ) தீது+இன்றி

4. செறுநர் என்பதன் பொருள் _______.

அ) அன்பர் ஆ) பகைவர் இ) நண்பர் ஈ) அயலார் விடை : ஆ) பகைவர்

5. அன்பு+இலன் என்பதைச் சேர்த்தெழுதினால் _______.

அ) அன்பிலன் ஆ) அன்புஇலன் இ) அன்புலன் ஈ) அன்பிலான்

விடை : அ) அன்பிலன்

6. தேவர் அனையர் கயவர் அவரும்தாம்
மேவன செய்தொழுக லான் - இப்பாடலில் _______ அணி பயின்று வந்துள்ளது.

அ) பிறிதுமொழிதல் ஆ) வஞ்சகப்புகழ்ச்சி

இ) சொற்பொருள் ஈ) தற்குறிப்பேற்ற

விடை : ஆ) வஞ்சப்புகழ்ச்சி

7. ஈவார் என்பதன் பொருள் _______.

அ) கொடுப்பவர் ஆ) பெறுபவர் இ) பார்ப்பவர் ஈ) பறிப்பவர்

விடை : அ) கொடுப்பவர்

## குறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. கரப்பிடும்பை இல்லார் - இத்தொடரின் பொருள் கூறுக. PTA

தம்மிடம் உள்ள பொருளை மறைத்து வைத்தல் என்னும் துன்பம் தராத நல்லவர் என்பது இத்தொடரின் பொருள்.

2. தஞ்சம் எளியர் பகைக்கு - இவ்வடிக்குரிய அசைகளையும் வாய்பாடுகளையும் எழுதுக.

| | | |
|---|---|---|
| தஞ்சம் | நேர் + நேர் | தேமா |
| எளியர் | நிரை + நேர் | புளிமா |
| பகைக்கு | நிரை + நேர் (நிரைபு பிறப்பு) | புளிமா |

3. வறுமையின் காரணமாக உதவி கேட்டு வருபவரின் தன்மானத்தை எள்ளி நகையாடுவது குறித்துக் குறளின் கருத்து என்ன?

இகழ்ந்து ஏளனம் செய்யாமல் உதவி செய்ய வேண்டும்; பொருள் கொடுக்க வேண்டும். அப்போது உதவி பெறுபவரின் (இருப்பவரின்) உள்ளத்தின் உள்ளே மகிழ்ச்சி பொங்கும்.

4. பின்வருவனவற்றுள் கூரான ஆயுதம் எது என்று செந்நாப் போதார் கூறுகிறார்? ஏன் என்பதை எழுதுக. (பெரிய கத்தி, இரும்பு ஈட்டி, உழைத்ததால் கிடைத்த ஊதியம், வில்லும் அம்பும்) PTA

- இக்குறளில் கூரான ஆயுதம் உழைத்ததால் கிடைத்த ஊதியம் ஆகும்.
- மற்ற உலக ரீதியான ஆயுதங்கள் எல்லா நேரங்களிலும் கூர்மையாக செயல்படுவதில்லை. நிலையாக இருப்பதில்லை. ஆனால் உழைத்து ஈட்டிய செல்வமோ எப்போதும் கூரான ஆயுதமாகத் திகழ்கிறது.

## கூடுதல் வினாக்கள்:

5. அமைச்சர் என்பதன் இலக்கணம் யாது?

தொழில் செய்வதற்குத் தேவையான கருவி, அதற்கு ஏற்ற காலம், செயலின் தன்மை, செய்யும் முறை ஆகியவற்றை அறிந்து அரிய செயலைச் செய்பவரே அமைச்சர் ஆவார்.

6. அமைச்சரிடம் அமைய வேண்டிய திறன்கள் யாவை?

மனவலிமை, குடிகளைக் காத்தல், ஆட்சிமுறைகளைக் கற்றல், நூல்களைக் கற்றல், விடாமுயற்சி ஆகிய ஐந்தும் சிறப்பாக அமைந்தவரே அமைச்சராவார்.

7. பொருளல்லவரைப் பொருளாகச் செய்வது எது?

ஒரு பொருட்டாக மதிக்கத் தகாதவரையும், பிறர் மதிக்குமாறு செய்வதே பொருளின் செயலாகும்.

8. தீதின்றி வந்த பொருளின் பயன் யாது?

- பிறருக்குத் தீங்கு தராமல் நல்ல வழியில் பொருள் ஈட்ட வேண்டும்.
- அத்தகைய பொருள் அறத்தையும் இன்பத்தையும் தரும்.

9. எப்போது பகைக்கு ஆட்பட நேரும்?

மனத்தில் துணிவு இல்லாதவராய், அறிய வேண்டியவற்றை அறியாதவராய், பொருந்தும் பண்பு இல்லாதவராய், பிறர்க்குக் கொடுத்து உதவாதவராய் இருந்தால் எளிதில் பகைக்கு ஆட்பட நேரும்.

10. உலகத்தார் யாரை உறவாகக் கொண்டு போற்றுவர்?

குற்றம் இல்லாமல் தன் குடிப்பெருமையை உயரச் செய்து வாழ்பவரை உலகத்தார் உறவாகக் கொண்டு போற்றுவர்.

11. சான்றோர், கயவர் இயல்புகள் யாவை?

- ஒருவர் தம் குறையைச் சொல்வதைக் கேட்டவுடனேயே உதவி செய்வர் சான்றோர்.
- கரும்பை பிழிவது போல நெருக்கிப் பிழிந்தால் தான் பயன்படுவர் கயவர்.

12. குற்றம் இல்லாமல் தன் குடிப்பெருமையை உயரச்செய்து வாழ்பவரை உலகத்தார் உறவாகப் போற்றுவர் என்னும் பொருளைக் கொண்ட திருக்குறளை எழுதுக. PTA

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. *

13. மலைமேல் பாதுகாப்பாக நின்றுகொண்டு யானைப்போரைக் காணும் உவமையைக் கொண்ட திருக்குறளை எழுதுக. PTA

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. *

அணி : உவமை அணி

## சிறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. வள்ளுவம், சிறந்த அமைச்சருக்குக் கூறிய இலக்கணங்கள் நமக்கும் பொருந்துவதைக் குறள்வழி விளக்குக.

- தொழில் செய்வதற்குத் தேவையான கருவி, அதற்கு ஏற்ற காலம், செயலின் தன்மை, செய்யும் முறை ஆகியவற்றை அறிந்து அரிய செயலைச் செய்பவரே அமைச்சர் ஆவார்.
- மனவலிமை. குடிகளைக் காத்தல், ஆட்சிமுறைகளைக் கற்றல், நூல்களைக் கற்றல், விடாமுயற்சி ஆகிய ஐந்தும் சிறப்பாக அமைந்தவரே அமைச்சராவார்.
- ஒரு செயலைச் செய்வதற்குரிய முறைகளை நூல்வழியாக அறிந்திருப்பினும், உலகியல் நடைமுறைகளை அறிந்து செயல்பட வேண்டும்.
- மேற்கூறிய பண்புகள் நம் வாழ்விலும் இருந்தால் தான் நாமும் நம்மை ஆள முடியும்.

2. பலரிடம் உதவி பெற்றுக் கடின உழைப்பால் முன்னேறிய ஒருவர், அவருக்கு உதவிய நல்ல உள்ளங்களையும், சுற்றங்களையும் அருகில் சேர்க்கவில்லை. அவருக்கு உணர்த்தும் நோக்கில் வள்ளுவர் குறிப்பிடும் கருத்துகள் யாவை?

- சுற்றத்தாரிடம் ஒருவர் அன்பு இல்லாமலும் பொருந்திய துணை இல்லாமலும் வலிமையில்லாமலும் இருந்தால் அவர் எப்படிப் பகைவரின் வலிமையை எதிர்கொள்வார்?
- மனத்தில் துணிவு இல்லாதவராய், அறிய வேண்டியவற்றை அறியாதவராய். பொருந்தும் பண்பு இல்லாதவராய், பிறர்க்குக் கொடுத்து உதவாதவராய் இருந்தால் எளிதில் பகைக்கு ஆட்பட நேரிடும்.
- தம்மிடமுள்ள பொருளை மறைத்து வைத்தல் என்னும் துன்பம் தராத நல்லாரைக் காணின் வறுமையின் கொடுமை முழுதும் கெடும்.

### கூடுதல் வினாக்கள்:

3. வஞ்சப் புகழ்ச்சி அணியை விளக்குக.

இலக்கணம் : புகழ்வது போல பழிப்பதும், பழிப்பது போல புகழ்வதும் வஞ்சப்புகழ்ச்சி அணி.

சான்று : தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்

விளக்கம் : கயவர்களைத் தேவர்களுக்கு ஒப்பாவர் என்று புகழ்ந்து கூறி கயவர்கள் தம் மனம் போன போக்கில் தீய செயல்களைச் செய்வர் என்று பழித்துக் கூறியதால் வஞ்சப் புகழ்ச்சி அணி ஆயிற்று.

4. சொற்பொருள் பின்வருநிலையணியைச் சான்றுடன் விவரி.

இலக்கணம் : செய்யுளில் முன்னர் வந்த சொல். மீண்டும் மீண்டும் வந்து ஒரே பொருளைத் தருவது சொற்பொருள் பின்வருநிலையணி ஆகும்.

சான்று : இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது

விளக்கம் : இக்குறட்பாவில் இன்மை என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்து வறுமை என்ற ஒரே பொருளைத் தந்ததால் சொற்பொருள் பின்வருநிலையணி ஆயிற்று.

5. உவமை அணியைச் சான்றுடன் விளக்குக.

இலக்கணம் : ஒரு பொருளை அத்தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது உவமை அணி எனப்படும். உவமை, உவமிக்கப்படும் பொருள், உவம உருபு மூன்றும் வெளிப்படையாய் அமைந்திருக்கும்.

எ.கா : மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம் கண்டதில்

விளக்கம் : கயவர் மக்களைப் போலவே இருப்பர். கயவர்க்கும் மக்களுக்கும் உள்ள தோற்ற ஒப்புமையை வேறெதிலும் நாம் கண்டதில்லை. இப்பாடலில் போல்வர் என்ற உவம உருபு வெளிப்படையாய் வந்துள்ளது. மக்களைப் போலவே கயவர் இருப்பர் என்பது விளக்கம்.

6. கீழ்க்காணும் குறட்பாக்களில் பயின்று வந்துள்ள அணியைச் சுட்டுக.

1. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லைப் பொருள் – சொற்பொருள் பின்வருநிலை அணி.

2. குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை – உவமை அணி.

3. மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில் – உவமை அணி.

## கற்பவை கற்றபின்

1. புதுக்கவிதையையும் குறளையும் ஒப்பிட்டுப் பேசுக.

புதுக்கவிதை

தக்காளியையும் வெண்டைக்காயையும்
தள்ளுவண்டிக்காரர் தராசில் நிறுக்கையில்,
தள்ளி நிற்கும் பிள்ளை
அவசியமாகக் கேட்கும் ஆயிரம் ரூபாயை
எப்படிக் கொடுக்க என்றே அவர் மனம் யோசிக்கும்....
“அத்தனைக் காய்களையும் விற்றால்தான்
மீதி ஐந்நூறாவது மிஞ்சும்; என்ன செய்ய ...”
காய்கறி வாங்கியவர்
கவனக் குறைவாகக் கொடுத்த
இரண்டாயிரம் ரூபாயைக்
கூப்பிட்டுத் தந்துவிட்டுப்
பிள்ளைக்கு உதவ யாரிடம் கேட்கலாம்
என்பதை அடுத்தபடி யோசிக்கும் அவர் மனம்!

குறள்:

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

விடை :

புதுக்கவிதையில் காய்கறி விற்பவரின் பண்பு, வறுமையிலும் செம்மையுள்ளவராய் விளங்குகின்ற தனித்தன்மை சிறப்பாக வெளிப்படுகிறது.

கவனக் குறைவாகக் கொடுத்த இரண்டாயிரம் ரூபாயைக் கூப்பிட்டுத் தந்து விட்டுப் பிள்ளைக்கு உதவ யாரிடம் கேட்கலாம் என்பதை அடுத்தபடி யோசிக்கும் அவர் மனம்!

இதே கருத்தை தான் குறளும் எடுத்துரைக்கிறது. மற்றவர்கள் இரக்கமும் அன்பும் இல்லாமல் ஈட்டும் பொருளை ஏற்றுக் கொள்ளாமல் நீக்கி விட வேண்டும்.

காய்கறி விற்பவர் மனதில் இரக்கமும் அன்பும் இருந்ததால் அடுத்தவர் பொருளின் மீது அவருக்கு விருப்பம் ஏற்படவில்லை.

2. குறிப்புகள் உணர்த்தும் குறளின் கருத்துகள் குறித்துக் கலந்துரையாடுக.

அ) அவருக்கு அறிவும் அதிகம்; படிப்பும் அதிகம். யாராலும் அவருக்கெதிராகச் செயல்பட முடியாது.

இயற்கையான நுண்ணறிவும், நூல்களைக் கற்றதனால் ஏற்பட்ட அறிவும் உடையவர்களுக்கு எதிராக யாரும் எதுவும் செய்ய முடியாது. அவர்கள் முன் எந்த சூழ்ச்சியும் நிற்காது.

மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.

ஆ) எச்சரிக்கையாக இரு. பழகுபவர்களில் யார் நல்லவர், யார் கெட்டவர் என்று கண்டுபிடிப்பது கடினம்.

வாழ்க்கையில் எப்போதும் எச்சரிக்கையுடனும், கவனமுடனும் இருக்க வேண்டும் ஏனென்றால் உன்னை தொழுது நிற்கும் பகைவரின் கையின் உள்புறத்தில் கூட உன்னைக் கொல்லக்கூடிய கொலைக்கருவி மறைந்திருக்கும். அதனால் கெட்டவர்களைக் கண்டுபிடிப்பது எளிதான காரியமல்ல.

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

இ) அவர் குடும்பம் முன்னேறியிருப்பதற்குக் காரணம் தொடர்ந்து முயல்வதும் தொழிலில் அவருக்கிருந்த அறிவும்.

ஒரு குடும்பம் எல்லா வசதிகளுடனும் முன்னேறி இருப்பதற்கு விடா முயற்சியும், சிறந்த அறிவாற்றலும் வேண்டும். இவ்விரண்டையும் இடைவிடாமல் பின்பற்றுபவரின் குடும்பமானது வளம் பெற்று விளங்கும்.

ஆள்வினையும் ஆன்ற அறிவு மெனவிரண்டின்
நீள்வினையால் நீளும் குடி.

ஈ) வாழ்க்கையில் நன்றாகப் பொருளீட்டு. அதுதான் உன்னைத் தாழ்வாக நினைத்தவர்களின் வாயை அடைக்கும்.

வாழ்க்கையில் எவ்வளவு பொருள் ஈட்ட முடியுமோ அவ்வளவு ஈட்ட வேண்டும். அவருடைய பகைவர்கள், அவரைத் தாழ்வாக நினைத்தவர்கள், அவரை ஏளனமாக பேசியவர்கள் வாயை அடைக்க அதுவே சிறந்த வழி.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.

உ) அக்கம்பக்கத்தாரிடம் பழகாமல் ஒதுங்கியே இருந்தார்; துணைக்கும் யாரும் இல்லை. இப்போது உடம்பு சரியில்லாத போது யாருமின்றித் திண்டாடுகிறார்.

தன்னைச் சுற்றி வாழ்கின்ற சுற்றத்தாரிடம் அன்பு காட்டாமல் ஒதுங்கியே இருந்தார். அவருக்கு ஏற்ற துணை இல்லாமல் இருந்தார். அதனால் பகைவரை எதிர்கொள்ளும் போது யார் வருவார்? ஒருவரும் வரவில்லை. வலிமையில்லாத நிலை அவருக்கு வந்த போது பகைவரின் வலிமையை எதிர்கொள்ள முடியாமல் தவித்தார்.

அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.



## அலகுத் தேர்வு இயல் - 6

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** 4 × 1 = 4

1. மலர்கள் தரையில் நழுவும். எப்போது?

அ) அள்ளி முகர்ந்தால் ஆ) தளரப் பிணைத்தால்
இ) இறுக்கி முடிச்சிட்டால் ஈ) காம்பு முறிந்தால்

2. கரகாட்டத்தைக் கும்பாட்டம் என்றும் குடக்கூத்து என்றும் கூறுவர். இத்தொடருக்கான வினா எது?

அ) கரகாட்டம் என்றால் என்ன?
ஆ) கரகாட்டம் எக்காலங்களில் நடைபெறும்?
இ) கரகாட்டத்தின் வேறு வேறு வடிவங்கள் யாவை?
ஈ) கரகாட்டத்தின் வேறு பெயர்கள் யாவை?

3. பாலை நிலத்திற்குரிய பறவைகள் ____________.

அ) கிளி, மயில் ஆ) நாரை, அன்னம்
இ) புறா, பருந்து ஈ) ஆந்தை, வாத்து

4. 'தோழமை' என்ற சொல்லைச் சொன்னவன்

அ) இலக்குவன் ஆ) குகன் இ) இராமன் ஈ) அனுமன்

**II. விடைகேற்ற வினா அமைக்க.** 1 × 1 = 1

1. கா என்பதற்குப் பாரந்தாங்கும் கோல் என்று பொருள்.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. ஒயிலாட்டம் என்பது யாது?
2. கோசல நாட்டில் ஏன் வண்மையில்லை? திண்மையில்லை?

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி:** 2 × 3 = 6

1. வைத்தியநாதபுரி முருகன் குழந்தையாக அணிந்திருக்கும் அணிகலன்களுடன் செங்கீரை ஆடிய நயத்தை விளக்குக.
2. மருத நிலக்காட்சியை விவரி.

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக:** 1 × 8 = 8

1. கம்பராமாயணத்தில் உன்னைக் கவர்ந்த கதை மாந்தர் பற்றி எழுதுக.

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக:** 3 × 1 = 3

1. பொருள் தருக: உழுவை
2. மொழிபெயர்க்க:
Therukoothu is, as its name indicates, a popular form of theatre performed in the streets.
3. கலைச்சொல் தருக.
Terminology, myth.

**VII. அடிப்பிறழாமல் எழுதுக:** 1 × 4 = 4

1. 'தண்டலை....' எனத் தொடங்கும் கம்பராமயண பாடல்.



இயல் - 7

உரைநடை

நாகரிகம், தொழில், வணிகம், நாடு, சமூகம், அரசு, நிர்வாகம்–விதைநெல்

# 1. சிற்றகல் ஒளி (தன் வரலாறு)

ம.பொ.சிவஞானம்

## பலவுள் தெரிக



### பாடநூல் வினாக்கள்:

1. 'மாலவன் குன்றம் போனாலென்ன? வேலவன் குன்றமாவது எங்களுக்கு வேண்டும்' – மாலவன் குன்றமும் வேலவன் குன்றமும் குறிப்பவை முறையே PTA

அ) திருப்பதியும், திருத்தணியும்
ஆ) திருத்தணியும், திருப்பதியும்
இ) திருப்பதியும், திருச்செந்தூரும்
ஈ) திருப்பரங்குன்றமும், பழனியும்

விடை : அ) திருப்பதியும், திருத்தணியும்

2. தமிழினத்தை ஒன்றுபடுத்தும் இலக்கியமாக ம.பொ.சி. கருதியது

அ) திருக்குறள் ஆ) புறநானூறு
இ) கம்பராமாயணம் ஈ) சிலப்பதிகாரம்

விடை: ஈ) சிலப்பதிகாரம்

### கூடுதல் வினாக்கள்:

3. காந்தியடிகள் சத்தியாக்கிரகம் என்னும் அறப்போர் முறையைத் தொடங்கிய ஆண்டு

அ) 1906 ஆ) 1916 இ) 1926 ஈ) 1910

விடை: அ) 1906

4. மா.பொ. சிவஞானத்தின் இயற்பெயர் ________.

அ) அறிவுப் பிரகாசம் ஆ) ஞானப்பிரகாசம்
இ) மணிப்பிரகாசம் ஈ) மாணிக்கவாசகம்

விடை: ஆ) ஞானப்பிரகாசம்

5. ம.பொ.சி.யால் இந்திய வரலாற்றில் புனித நாள் என்று குறிப்பிடப்படும் நாள்

அ) 1942ஆம் ஆண்டு ஆகஸ்ட் 8 ஆ) 1942ஆம் ஆண்டு ஆகஸ்ட் 10
இ) 1942ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15 ஈ) 1942 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 20

விடை: அ) 1942ஆம் ஆண்டு ஆகஸ்ட் 8

6. மத்திய அரசால் அமைக்கப்பட்ட மொழிவாரி ஆணையத்தின் தலைவராக இருந்தவர்

அ) ம.பொ.சி. ஆ) மங்கலங்கிழார்
இ) சர்தார் கே.எம்.பணிக்கர் ஈ) அம்பேத்கர்

விடை: இ) சர்தார் கே.எம்.பணிக்கர்

7. "தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்" என்று முழங்கியவர்

அ) ம.பொ.சி. ஆ) மங்கலங்கிழார் இ) ரஷீத் ஈ) திருப்பூர் குமரன்

விடை: அ) ம.பொ.சி.

8. புறநானூற்றிலும், சிலப்பதிகாரத்திலும் தமிழகத்தின் வடக்கெல்லை ________, தெற்கெல்லை ________ கூறப்பட்டுள்ளது.

அ) குமரிமுனை, வேங்கட மலை ஆ) சென்னை, குமரிமுனை
இ) வேங்கட மலை, குமரிமுனை ஈ) திருப்பதி, பழனி

விடை : இ) வேங்கட மலை, குமரிமுனை

9. குமரி மாவட்ட போராட்டத்தை முன்னெடுத்துச் சென்றவர் PTA

அ) திரு. பிரகாசம் ஆ) மார்ஷல் ஏ.நேசமணி

இ) தனிநாயகம் அடிகள் ஈ) ந.முத்துசாமி

விடை : ஆ) மார்ஷல் ஏ.நேசமணி

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. ம.பொ.சி.யின் அன்னையார் அல்லி அரசாணி மாலை, பவளக்கொடி மாலை ஆகிய அம்மானைப் பாடல்களைப் பாடுவார்.

   விடை: ம.பொ.சியின் அன்னையார் எப்பாடல்களைப் பாடுவார்?

2. 1942 ஆகஸ்ட் 8 ஆம் நாள் இந்திய வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கத்தக்க புனித நாளாகும்.

   விடை: இந்திய வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கத்தக்க புனித நாள் எது?

3. இளங்கோ தந்த சிலம்பு தமிழினத்தின் பொதுச் சொத்து ஆகும்.

   விடை: தமிழினத்தின் பொதுச்சொத்து எது?

4. ஆந்திர மாநிலம் பிரியும் போது சென்னை தான் அதன் தலைநகரமாக இருக்க வேண்டும் என்று ஆந்திரத் தலைவர்கள் கருதினர்.

   விடை: ஆந்திர மாநிலம் பிரியும் போது அதன் தலைநகராக எது இருக்க வேண்டும் என்று ஆந்திரத் தலைவர்கள் கருதினர்?

5. 'தமிழா! துள்ளி எழு' என்னும் துண்டறிக்கையை கடற்கரையில் குழுமியிருந்த மக்களுக்கு வழங்கியதற்காக ம.பொ.சி. சிறையிலிடப்பட்டார்.

   விடை: ம.பொ.சி. எதற்காகச் சிறையிலிடப்பட்டார்?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. காலையிலேயே பாட புத்தங்களோடு வராததற்காக ஆசிரியர் என்னை கண்டித்தார்.

   விடை: காலையிலேயே பாடப் புத்தகங்களோடு வராததற்காக ஆசிரியர் என்னைக் கண்டித்தார்.

2. நூல் வாங்குவதற்கு போதிய பணமில்லாத குறையால் பழைய புத்தகங்கள் விற்கும் கடைகளுக்கு சென்று எனக்கு விருப்பமான புத்தகங்களை மிக மிக குறைந்த விலைக்கு வாங்குவதை வழக்கமாக கொண்டிருந்தேன்.

   விடை: நூல் வாங்குவதற்குப் போதிய பணமில்லாத குறையால் பழைய புத்தகங்கள் விற்கும் கடைகளுக்குச் சென்று, எனக்கு விருப்பமான புத்தகங்களை மிக மிகக் குறைந்த விலைக்கு வாங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

3. மார்ஷல் நாகர்கோவில் நகர்மன்ற தலைவராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும், நாடாளுமன்ற தலைவராகவும் பணியாற்றினார்.

   விடை: மார்ஷல் நாகர்கோவில் நகர்மன்றத் தலைவராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும், நாடாளுமன்றத் தலைவராகவும் பணியாற்றினார்.

4. மலையும் கடலும் ஒரு நாட்டின் இயற்கை எல்லைகளாக அமைவதென்பது அந்த நாட்டின் தவபயனாகும்.

   விடை: மலையும் கடலும் ஒரு நாட்டின் இயற்கை எல்லைகளாக அமைவதென்பது அந்த நாட்டின் தவப் பயனாகும்.

5. ஆஸ்டிரியா நாட்டு தலைநகரமான வியன்னாவில் அமைந்துள்ள அருங்காட்சியகத்தில் பேபிரஸ் தாளில் எழுதப்பட்ட அரிய கையெழுத்து சுவடி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது.

விடை: ஆஸ்டிரியா நாட்டுத் தலைநகரமான வியன்னாவில் அமைந்துள்ள அருட்காட்சியகத்தில் பேபிரஸ் தாளில் எழுதப்பட்ட அரிய கையெழுத்துச் சுவடி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது.

## நிறுத்தற் குறியிடுக

1. திருக்குறளையோ கம்பராமாயணத்தையோ விரும்பாதவனல்லன் நான் என்றார் மபொசி

விடை : திருக்குறளையோ, கம்பராமாயணத்தையோ விரும்பாதவனல்லன் என்றார் ம.பொ.சி.

2. மாலவன் குன்றம் போனாலென்ன வேலவன் குன்றமாவது எங்களுக்கு வேண்டும் என்று முழங்கினோம்

விடை: "மாலவன் குன்றம் போனாலென்ன? வேலவன் குன்றமாவது எங்களுக்கு வேண்டும்" என்று முழங்கினோம்.

3. சரபையர் என்ற முதியவர் ஒருவர் என்னுடைய பெயரை மாற்றி சிவஞானி என்றே அழைத்தார்

விடை: சரபையர் என்ற முதியவர் ஒருவர், என்னுடைய பெயரை மாற்றி 'சிவஞானி' என்றே அழைத்தார்.

4. மாநகராட்சியின் சிறப்புக் கூட்டமொன்றை மாநகரத் தந்தை செங்கல்வராயன் தலைமையில் கூட்டி சென்னை பற்றிய தீர்மானமொன்றை முன்மொழிந்து தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம் என்று முழங்கினேன்

விடை: மாநகராட்சியின் சிறப்புக் கூட்டமொன்றை மாநகரத் தந்தை செங்கல்வராயன் தலைமையில் கூட்டி, சென்னை பற்றிய தீர்மானமொன்றை முன்மொழிந்து, 'தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்' என்று முழங்கினேன்.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

1. இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றில் 1906 ஆம் ஆண்டு மிகவும் சிறப்புடைய ஆண்டாகக் கருதப்படுகிறது. அந்த ஆண்டில் தான் காந்தியடிகள் சத்தியாக்கிரகம் என்ற அறப்போர் முறையைத் தென்னாப்பிரிக்காவில் தொடங்கி வைத்தார். வ.உ.சிதம்பரனார் ஆங்கிலேயர்களுக்கு எதிராகச் சுதேசி கப்பல் நிறுவனத்தைத் தொடங்கினார். இத்தகைய சிறப்புள்ள ஆண்டில் ஜூன் 26 ஆம் நாள் சென்னை ஆயிரம் விளக்கு வட்டம் சால்வன் குப்பம் என்னும் பகுதியில் ம.பொ.சிவஞானம் பிறந்தார்.

   1. காந்தியடிகள் சத்தியாக்கிரகத்தை எங்கு தொடங்கி வைத்தார்?
      தென்னாப்பிரிக்கா.
   2. வ.உ.சிதம்பரனார் ஆங்கிலேயர்களுக்கு எதிராகத் தொடங்கிய நிறுவனம் எது?
      சுதேசிக் கப்பல் நிறுவனம்.
   3. ம.பொ.சிவஞானம் பிறந்த ஊர் எது?
      சென்னை ஆயிரம் விளக்கு வட்டத்தில் சால்வன்குப்பம் என்னும் பகுதி.

2. 1931 இல் காந்தி – இர்வின் ஒப்பந்தத்தில் நாடு முழுவதிலுமிருந்த பேராயக்கட்சிக்காரர்கள் ஆக்கவழிப்பட்ட வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டனர் அந்நியத் துணிக்கடை மறியல், காந்தி – இர்வின் ஒப்பந்தப்படி அனுமதிக்கப்படவில்லை. ஆகவே தீண்டாமை விலக்கு, கதர் விற்பனை ஆகியவற்றிலே பேராயக்கட்சிக்காரர்களை ஈடுபடுத்தியது கட்சித்தலைமை. 30/09/1932 இல் தமிழா! துள்ளி எழு! என்னும் தலைப்புடைய துண்டறிக்கை ஒன்றைக் கடற்கரையில் குழுமியிருந்த மக்களிடையே வழங்கியதற்காக, ம.பொ.சி சிறையிலிடப் பட்டார். ஆறு மாதம் கடுங்காவல் தண்டனை அனுபவித்தார்.

   1. பேராயக் கட்சிக்காரர்களை கட்சித்தலைமை எப்போராட்டங்களில் ஈடுபடுத்தியது?
      தீண்டாமை விலக்கு, கதர் விற்பனை.

2. ம.பொ.சி எதற்காகச் சிறையிலிடப்பட்டார்?

30/9/1932 இல் 'தமிழா துள்ளி எழு' என்னும் தலைப்புடைய துண்டறிக்கையை கடற்கரையில் வழங்கியதற்காக சிறையிலிடப்பட்டார்.

3. இப்பத்திக்கு பொருத்தமான தலைப்பு ஒன்று தருக.

காந்தி – இர்வின் ஒப்பந்த விளைவுகள்

3. அம்மானை பாடல்கள், சித்தர் பாடல்கள், சொற்பொழிவுகள் போன்றவற்றின் மூலமாக நான் இலக்கிய அறிவு பெற்றேன். அப்போது அவர்கள் வெளியிடும் சிறந்த கருத்துகளை ஏடுகளில் குறித்து வைத்துக்கொள்வேன். யான் முறையாக ஏட்டுக்கல்வி பெற இயலாமல் போனதால் ஏற்பட்ட இழப்பை ஈடு செய்யக் கேள்வி ஞானத்தைப் பெறுவதிலேயே மிகுந்த ஆர்வம் காட்டினேன். எனது கேள்வி ஞானத்தைப் பெருக்கிய பெருமை திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளுக்கே அதிகம் உண்டு என்றெல்லாம் தமது செவிச்செல்வம் பற்றி ம.பொ.சிவஞானம் குறிப்பிட்டுள்ளார். PTA

1. ம.பொ.சி அவர்கள் கேள்வி ஞானத்தை அதிகமாக யாரிடம் பெற்றதாகக் குறிப்பிடுகிறார்?

ம.பொ.சி அவர்கள் கேள்வி ஞானத்தை அதிகமாக திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளிடம் பெற்றதாகக் குறிப்பிடுகிறார்.

2. ம.பொ.சி அவர்கள் இலக்கிய அறிவினை எவ்வாறு பெற்றார்?

அம்மானை பாடல்கள், சித்தர் பாடல்கள், சொற்பொழிவுகள் போன்றவற்றின் மூலமாக இலக்கிய அறிவினை பெற்றார்.

3. ஏட்டுக்கல்வி பெற இயலாத ம.பொ.சி. அதனை எவ்வாறு ஈடு செய்தார்?

ஏட்டுக்கல்வி பெற இயலாமல் போனதால் ஏற்பட்ட இழப்பை ஈடு செய்யக் கேள்வி ஞானத்தைப் பெறுவதிலேயே மிகுந்த ஆர்வம் காட்டினார்.

## படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



1. மேற்கத்தியர் கடல்வழிக் குதிரை வணிகம் மேற்கொண்டர்.
2. பண்டைத் தமிழர்கள் கடல் வணிகத்திலும் சிறந்து விளங்கினர்.
3. வாணிகம் என்பது நாகரிகத்தின் வளர்ச்சியின் வெளிப்பாடாகும்.
4. தமிழர்கள் கப்பல் கட்டும் தொழிலில் சிறந்து விளங்கினர்.
5. மேற்கத்தியர் தங்களது பொருள்களைக் கொடுத்து இங்குள்ள இயற்கைப் பொருள்களைப் பெற்றுச் சென்றனர்.

## குறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. வறுமையிலும் படிப்பின் மீது நாட்டம் கொண்டவர் ம.பொ.சி. என்பதற்குச் சான்று தருக. PTA

- ம.பொ.சி. மூன்றாம் வகுப்பு படிக்கும் போது தமிழ், ஆங்கிலப் பாடப்புத்தகங்கள் கூட வாங்க முடியாத வறுமை நிலையில் இருந்தார்.
- ஆனால் படிப்பில் அவருக்கு நாட்டம் ஏற்பட்டதால் பழைய புத்தகக் கடைக்குச் சென்று மிகக் குறைந்த விலையில் பழைய புத்தகங்களை வாங்கி, பல வேளைகளில் பட்டினியும் கிடந்து, தமிழ்மொழியில் புலமை பெற்றார்.
- உடற்பசியைப் பொருட்படுத்தாமல் அறிவுப் பசிக்கு முக்கியத்துவம் கொடுத்தார். வறுமையிலும் படிப்பின் மீது நாட்டம் கொண்டவர் ம.பொ.சி. என்பதற்கு இதுவே சான்றாகும்.

2. பொருத்தமான இடங்களில் நிறுத்தற்குறியிடுக.

பழங்காலத்திலே பாண்டியன் ஆண்ட பெருமையைக்கூறி சோழன் ஆண்ட சிறப்பைச் சொல்லி சேரன் ஆண்ட மாண்பினைக் காட்டி நம் அருமைத் தமிழ்நாடு ஆங்கிலே யருக்கு அடிமைப்பட்டிருந்த சிறுமையையும் நினைவூட்டி விடுதலைப் போரில் ஈடுபட வருமாறு தமிழர்க்கு அழைப்பு விடுத்திருந்தேன் – ம.பொ.சி.

பழங்காலத்திலே பாண்டியன் ஆண்ட பெருமையைக் கூறி, சோழன் ஆண்ட சிறப்பைச் சொல்லி, சேரன் ஆண்ட மாண்பினைக் காட்டி, நம் அருமைத் தமிழ்நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டிருந்த சிறுமையையும் நினைவூட்டி விடுதலைப் போரில் ஈடுபட வருமாறு தமிழர்க்கு அழைப்பு விடுத்திருந்தேன். – ம.பொ.சி.

### கூடுதல் வினாக்கள்:

3. ம.பொ.சி யின் பெற்றோர் யாவர்?

ம.பொ.சி. யின் பெற்றோர் பொன்னுசாமி – சிவகாமி ஆவார்.

4. ம.பொ.சி. இளமையில் படித்த அம்மானைப் பாடல்கள் யாவை?

ம.பொ.சி. அல்லி அரசாணி மாலை, பவளக் கொடி மாலை போன்ற அம்மானைப் பாடல்களைப் படித்தார்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. "தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்".
இடம் சுட்டிப் பொருள் விளக்குக: PTA

இடம் : இத்தொடர் மாநகராட்சியின் சிறப்புக் கூட்டத்தில் மாநகரத் தந்தை செங்கல்வராயன் முன்னிலையில் ம.பொ.சிவஞானம் கூறியது.

பொருள் : ஆந்திராவின் தலைநகரம் சென்னையை வைக்க வேண்டும் என்று நீதிபதி வாஞ்சுவின் கருத்தை எதிர்த்து ம.பொ.சி. வாதிட்டார்.

விளக்கம்: ஆந்திர மாநிலம் பிரியும் போது சென்னைதான் அதன் தலைநகராக இருக்க வேண்டும் என்று ஆந்திரத் தலைவர்கள் கருதினர். நீதிபதி வாஞ்சு தலைமை யிலான ஒரு நபர் ஆணையம் ஆந்திரத்தின் தலைநகரம் சென்னை தான் இருக்க வேண்டும் என்ற இடைக்கால ஏற்பாட்டினை பரிந்துரைந்தது.

மாநகராட்சியின் சிறப்புக் கூட்டத்தில் மாநகரத் தந்தை செங்கல்வராயன் தலைமையில் சென்னை பற்றிய தீர்மானமொன்றை முன்மொழிந்து "தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்பேன்" என்று ம.பொ.சிவஞானம் முழங்கினார்.

## கூடுதல் வினாக்கள்

2. மார்ஷல் ஏ.நேசமணி – குறித்து விளக்குக.

- மார்ஷல் ஏ.நேசமணி இளம் வயதிலேயே சமூக விடுதலைக்காகப் போராடியவர். வழக்கறிஞர்.
- நாகர்கோவில் நகர்மன்றத் தலைவராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும், நாடாளுமன்ற உறுப்பினராகவும் பணியாற்றியவர்.
- குமரி மாவட்டப் போராட்டத்தை முன்னெடுத்துச் சென்றவர்.
- 1956 நவம்பர் 1 ஆம் நாள் கன்னியாகுமரி மாவட்டம் தமிழ்நாட்டுடன் இணைந்து தமிழகத்தின் தென் எல்லையாக மாறியது.
- இவருடைய நினைவைப் போற்றும் வகையில் தமிழக அரசு இவருக்கு நாகர்கோவிலில் சிலையோடு மணிமண்டபமும் அமைந்துள்ளது.

3. ம.பொ.சி. பெற்ற கேள்வி ஞானம் குறித்து எழுதுக.

- ம.பொ.சி சில சொற்பொழிவுகளைக் கேட்பதன் மூலமாவும் இலக்கிய அறிவு பெற்றார்.
- சொற்பொழிவில் அறிஞர்கள் வெளியிடும் சிறந்த கருத்துகளை ஏடுகளில் குறித்து வைத்துக் கொள்வார்.
- தான் முறையாக ஏட்டுக்கல்வி பெற இயலாமல் போனதால் ஏற்பட்ட இழப்பை ஈடு செய்யக் கேள்வி ஞானத்தைப் பெறுவதிலே மிகுந்த ஆர்வம் காட்டினார்.
- அவரது கேள்வி ஞானத்தை வளர்த்த பெருமை திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளுக்கே உண்டு.

## நெடுவினா

1. நாட்டு விழாக்கள் – விடுதலைப் போராட்ட வரலாறு – நாட்டின் முன்னேற்றத்தில் மாணவர் பங்கு – குறிப்புகளைக் கொண்டு ஒரு பக்க அளவில் "மாணவப் பருவமும் நாட்டுப் பற்றும்" என்ற தலைப்பில் மேடை உரை எழுதுக. PTA

### "மாணவப் பருவமும் நாட்டுப் பற்றும்"

**நாட்டு விழாக்கள்:**

நாம் நம் நாட்டை நினைத்து உவகை கொள்ள நாட்டு விழாக்கள் பல உள்ளன. நம் பாரத நாட்டில் கொண்டாடப் பெறும் ஆகஸ்ட் பதினைந்தும், ஜனவரி இருபத்தாறும் விடுதலை விழாவும், குடியரசு விழாவும் ஆகும். இவ்விரண்டு முக்கியமான நாட்டு விழாக்கள் போக எண்ணற்ற விழாக்கள் உள்ளன.

**இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு:**

நமது இந்தியாவில் விடுதலைக்காக நாடு முழுவதும் ஆயிரக்கணக்கான மக்கள் போராடினர். கொடி காத்த குமரன் இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது ஆங்கிலேய போலீசாரின் தாக்குதலையும் தாங்கிக் கொண்டு நமது தேசியக் கொடி கீழே விழாமல் பிடித்திருந்தார். வாஞ்சிநாதன் திருநெல்வேலி கலெக்டர் ஆஷ்துரையைச் சுட்டுக் கொன்று பின்னர் தன்னையும் சுட்டு மரணம் அடைந்தவர். இவர் தமிழகத்தின் பகத்சிங் என அழைக்கப்பட்டார்.

இவர்களைப் போல் தீரன் சின்னமலை, வீரபாண்டிய கட்டபொம்மன், சுப்பிரமணிய சிவா, மருதுபாண்டியர்கள், நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ், சர்தார் வல்லபாய் படேல், பாலகங்காதர திலகர் இன்னும் ஏராளமானோர் இந்திய விடுதலைக்காக தன் இன்னுயிரைத் தந்துள்ளனர். பெண் விடுதலை வீரர்களும் ஏராளமானோர் இருந்துள்ளனர், அவர்களில் ராணி லட்சுமிபாய் அம்மையாரும், தமிழகத்தில் வீரமங்கை வேலுநாச்சியாரும் முக்கியமானவர்கள்.

### நாட்டு முன்னேற்றத்தில் மாணவர் பங்கு:

நாட்டுக்காக மாணவர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் உள்ளன. இன்றைய மாணவர்கள் நாளைய தலைவர்கள். அவர்கள் சமுதாய உணர்வுடையவர்களாய் வளர்ந்தால் தான் நாடும், வீடும் நலம் பெறும். ஓர் உயிர் படும் துன்பத்தை கண்டு அதனைத் தாங்கிக் கொள்ளாமல் உடனே ஓடிச் சென்று உதவுவது தான் தொண்டு. நம் சமுதாயம் வறுமை, கல்வியின்மை, அறியாமை, சாதிமத வேறுபாடுகள், தீண்டாமை, மூடப்பழக்க வழக்கங்கள் ஆகிய கொடுமைகளால் சிதைந்துள்ளது. குறிப்பாகக் கிராமங்களில் வாழும் மக்கள் மிகவும் பின்தங்கியுள்ளனர். சமுதாயத்தின் உறுப்பாய் விளங்கும் மாணவர்கள் சமுதாய மேம்பாட்டுக்குத் தொண்டாற்றுவது பெருங்கடமையாகும்.

### மாணவப் பருவமும் நாட்டுப்பற்றும்:

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை"

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க, நமக்குப் பிறர் எதை செய்யக் கூடாது என்று நாம் நினைக்கின்றோமோ அதனை நாம் மற்றவர்களுக்கு செய்யக் கூடாது.

இந்தியாவின் வளர்ச்சியே மாணவர்களின் கையில் தான் உள்ளது. மண்ணைக் குழைத்தால் தான் மட்பாண்டம் வரும். மாணவர்களை செம்மைப்படுத்தினால் தான் இந்தியா வளரும். தேசியத் தலைவர்கள் மாணவப் பருவத்திலேயே இந்தியாவிற்கு ஆற்ற வேண்டிய பங்குகளை செய்ததினால் தான் இன்றும் அவர்கள் சரித்திரத்தில் நிலைத்து இருக்கிறார்கள். இன்றைய காலகட்டத்தில் தீவிரவாதச் சக்திகளுக்கு எதிரான போராட்டம் மாணவர்களின் முக்கியமான கடமை. இந்தியாவின் வேலிகளாக மாணவர்கள் இருந்தால் தான் தீவிரவாதம் தலை தூக்காது. காந்தி தேசத்தில் கோட்சேக்களை வளர விடக் கூடாது. இந்தியாவை அச்சுறுத்தும் தீவிரவாதத்தை ஒடுக்குவதற்கு மாணவச் சமுதாயம் பல நல்ல யுக்திகளை கையாள வேண்டும்.

நம் நாட்டை அனைத்துப் பக்கங்களிலிருந்தும் துண்டாட பல தீய சக்திகள் முயற்சிக்கின்றன. அவற்றை ஒழிக்க மாணவர்கள் முனைந்து செயல்பட வேண்டும்.

### புதிய இந்தியா:

நாட்டின் வளர்ச்சிக்கு மாணவர்களின் பங்கு மிக முக்கியமானது. தூய்மை இந்தியா திட்டத்தில் மாணவர்கள் தங்களை இணைத்துக் கொள்ள வேண்டும். மாணவர்கள் நாட்டு முன்னேற்றத்தில் இணைந்து செயல்பட்டால், நாடும் முன்னேறும்; வீடும் முன்னேறும். புதிய இந்தியா உருவாகும்.

## கூடுதல் வினா:

2. ம.பொ.சியின் போராட்டத்தால் தமிழகத்திற்கு ஏற்பட்ட நன்மைகள் யாவை?

### முன்னுரை:

ம.பொ.சி. 1906 ஆம் ஆண்டு ஜுன் 26 ஆம் நாள் சென்னை ஆயிரம் விளக்குப்பகுதியில் சால்வன் குப்பத்தில் திரு. பொன்னுசாமி திருமதி.சிவகாமி ஆகியோருக்கு மகனாகப் பிறந்தவர் ஞானப்பிரகாசம் என்னும் இயற்பெயர் கொண்டவர். அவரே பிற்காலத்தில் சிவஞானம் என அழைக்கப்பட்டவர். தமிழ் நாட்டிற்காகப் போராடியவர். அவரின் போராட்டம் பற்றியும் அதன்கண் விளைந்த நன்மைகள் குறித்தும் இங்கே காண்போம்.

### கேள்வி ஞானம்:

ம.பொ.சி. சில சொற்பொழிவுகளைக் கேட்பதன் மூலமாகவும் இலக்கிய அறிவு பெற்றார். சொற்பொழிவில் அறிஞர்கள் வெளியிடும் சிறந்த கருத்துகளை ஏடுகளில் குறித்து வைத்துக் கொள்வார். தான் முறையாக ஏட்டுக்கல்வி பெற இயலாமல் போனதால் ஏற்பட்ட இழப்பை ஈடு செய்யக் கேள்வி ஞானத்தைப் பெறுவதிலே மிகுந்த ஆர்வம் காட்டினார். அவரது கேள்வி ஞானத்தை வளர்த்த பெருமை திருப்பாதிரிப் புலியூர் ஞானியாரடிகளுக்கே உண்டு.

#### தமிழர்க்கு அழைப்பு:

30.3.1992 அன்று "தமிழா! துள்ளி எழு" என்னும் தலைப்பில் துண்டறிக்கை ஒன்றைக் கடற்கரையில் குழுமியிருந்த மக்களுக்கு வழங்கினார். நம் நாடு ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டிருந்த சிறுமையை நினைவூட்டி விடுதலைப் போரில் ஈடுபட வருமாறு தமிழர்க்கு அழைப்பு விடுத்தார். இதனால் ஏராளமான தமிழர்கள் போராட்டத்தில் இணைந்தனர். ம.பொ.சியும் அவருடைய தோழர்களையும் கைது செய்து சிறையில் அடைத்து கடுங்காவல் தண்டனை கொடுத்தது ஆங்கில அரசு.

#### பிரிவினை:

1947, ஆகஸ்ட் பதினைந்தாம் நாளன்று விடுதலை பெற்ற இந்தியாவில் மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்பட்டன. தமிழகத்தின் வடபகுதியும், தென்பகுதியும் ஆந்திர மாநிலத்திற்கும் கேரளா மாநிலத்திற்கும் செல்ல இருந்த பல பகுதிகளைத் தமிழ்ப் பெரியோர்கள் போராட்டங்கள் மூலமே மீட்டெடுத்தனர். இதில் ம.பொ.சி.யின் பங்கு அளப்பரியது.

#### வடவெல்லை மீட்டல்:

ஆந்திரத் தலைவர்கள் சித்தூர் மாவட்டம் முழுவதையும் புதிதாக அமையவிருக்கும் ஆந்திராவில் சேர்க்க முயற்சி செய்தனர். அப்போது ம.பொ.சி., மங்களகிழார், விநாயகம், ஈ.எஸ்.தியாகராஜன், ரஷித் போன்றவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டனர். போராட்டத்தில் ஈடுப்பட்டவர்களுள் கோவிந்தராசனும், மாணிக்கமும் சிறையிலேயே உயிர் துறந்தனர். சித்தூர் மாவட்டம் முழுவதையும் ஆந்திராவிற்குக் கொடுத்ததால், இறுதியில் படாஸ்கர் ஆணையம் மூலம் திருத்தணி வரையுள்ள தமிழ் நிலங்களைப் போராட்டக் குழு மீட்டெடுத்தது.

#### சென்னையை மீட்டல்:

ஆந்திர மாநிலம் பிரியும் போது சென்னை தான் அதன் தலைநகராக இருக்க வேண்டும் என்று தலைவர்கள் விரும்பினார்கள். இதற்காக அந்நாளைய தமிழக முதல்வர் இராஜாஜி தன் முதல்வர் பதவியைத் துறக்கவும் முன்வந்தார். அப்போதையை மாநகரத் தந்தை செங்கல்வராயன் தலைமையில் கூடி 'தலையைக் கொடுத்தேனும் தலைநகரைக் காப்போம்' என்று தீர்மானம் நிறைவேற்றினர். கடைசியாக 25.03.1953 அன்று நாடாளுமன்றத்தில் பிரதமர் நேரு வெளியிட்ட அறிக்கையின்படி ஆந்திர நாட்டின் தலைநகரம் ஆந்திராவிலேயே அமையும். மேலும் சென்னை தமிழருக்கே என்பதும் உறுதியானது.

#### தெற்கெல்லை மீட்டல்:

திருவிதாங்கூர் ஆட்சி அகன்று கேரள மாநிலம் உருவானது. அப்போது தமிழர்கள் மிகுதியாக வாழக்கூடிய தேவிகுளம், பீர்மேடு, தோவாளை, அகத்தீசுவரம், கல்குளம், விளவங்கோடு, நாகர்கோவில் ஆகிய பகுதிகளைத் தமிழகத்தோடு சேர வேண்டும் எனப் போராடினர். இப்பகுதிகளோடு கோவை மாவட்டத்தின் மேற்குப் பகுதி, நீலகிரியில் உள்ள கூடலூர், ஊட்டி ஆகியவற்றைக் கேரளத்துடன் சேர்க்க வேண்டுமென்று அவர்கள் போராடினர். 1955 அக்டோபர் 10 ஆம் நாளன்று வெளியான கொள்கையின்படி சென்னை மாநிலத்தோடு மலபார் மாவட்டத்தைக் கேரளத்தோடும், கல்குளம், விளவங்கோடு, தோவாளை, அகத்தீசுவரம், செங்கோட்டை ஆகிய பகுதிகள் தமிழ் நாட்டோடும் இணைய வேண்டும் என்பதும் குறிப்பிட்டிருந்தது. தேவிகுளம், பீர்மேடு நம் கைவிட்டுப் போனது.

#### முடிவுரை:

புறநானூற்றிலும் சிலப்பதிகாரத்திலும் தமிழகத்தின் வடக்கெல்லை வேங்கடமலையாகவும் தெற்கெல்லை குமரிமுனையாகவும் கூறப்படுவதனைப் படிக்கும் போது நமது நெஞ்சம் இறும்பூது எய்கிறது.

மலையும் கடலும் ஒரு நாட்டின் இயற்கை எல்லைகளாக அமைவதென்பது அந்த நாட்டின் தவப்பயனாகும். அந்த தெய்வீக எல்லைகளை ஓரளவேனும் தமிழகம் திரும்பப் பெற்றது என்பதே ம.பொ.சி.யின் வாழ்நாள் சாதனைக்குச் சான்றாகும்.

## கற்பவை கற்றபின்

1. எவரேனும் ஓர் அறிஞர் வாழ்வில் நடந்த நிகழ்வுகளில் உங்களைக் கவர்ந்த ஒன்றை அவரே சொல்வதைப் போன்று தன் வரலாறாக மாற்றி எழுதுக. PTA

**காமராசர் வாழ்வில் நடந்த நிகழ்வு**

நான் ஒருமுறை தஞ்சை மாவட்டத்தில் உள்ள பழமையான கோயில் ஒன்றைப் பார்வையிடச் சென்றிருந்தேன். அந்தக் கோயிலின் கட்டுமானம் என்னை வியக்க வைத்தது. உடனே நான் உடன் வந்த அதிகாரிகளிடம் இந்த கோயிலைக் கட்டியது யார்? என்று கேட்டேன். அதிகாரிகள் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தனர். அப்போது மேலே மாட்டியிருந்த மின்விளக்கைப் பார்த்தேன். அது எரியவில்லை. ஆனால் அதன் மேல் அதனை உபயம் செய்தவரின் பெயர் மிளிர்ந்து கொண்டிருந்தது.

அதிகாரிகளிடம், "ஒழுங்காக எரியாத இந்த டியூப்லைட்ல உபயதாரர் யாருன்னு எவ்வளவு பெரிசா எழுதி வைத்திருக்கிறாங்க. ஆனால், இவ்வளவு காலம் நிலைச்சு நிற்கிற இந்தக் கோயிலைக் கட்டியவர் யாருன்னு தெரியல"

இப்படி நான் சொன்னவுடன் என்னுடன் இருந்தவர்கள் எல்லோரும் வாய்விட்டுச் சிரித்தனர்.

2. நீங்கள் படித்துச் சுவைத்த வரலாற்றுக் கதைகள் பற்றி வகுப்பறையில் உரை நிகழ்த்துக.

ஒருமுறை மூதறிஞர் ஒருவர் அதியமானை நாடி வந்திருந்தார். அதியமானின் உபசரிப்பில் மயங்கிய மூதறிஞர் அவருக்கு குதிரைமலை இரகசியத்தைக் கூறினார். ‘குதிரைமலையின் பிளவில் ஒரு நெல்லிமரம் உண்டு. அதில் பல ஆண்டுக்கு ஒருமுறை இரண்டொரு கனிகள் உண்டாகும். அம்மரத்திலிருந்து நெல்லிக்கனியை பறித்து உண்டால் நீண்ட நாட்கள் வாழலாம். நீ தக்கபடி முயன்றால் அதனைப் பெறுவாய்’ என்று அதியமானிடம் கூறிவிட்டுச் சென்றார். அதியமான் அன்றிலிருந்து அந்த நெல்லி மரத்தைக் கண்டுபிடிக்க முயன்றான். அப்பிளவில் உள்ள அந்த மரத்தை தானே கண்டறிந்து பக்குவமாய் மரத்திலிருந்த ஒரே ஒரு கனியை பறித்துக் கொண்டு தனது மாளிகையை நோக்கி சென்றான்.

வழக்கப்படி அன்று அதியமானைக் காண வந்திருந்த ஔவையார் அதியமானின் வருகைக்காகக் காத்திருந்தார். அச்சமயம் அங்கே வந்த அதியமான் முகமலர்ந்து இன்சொல் பகர்ந்தான். ஔவையாருடைய முகவாட்டத்தைக் கண்டான். அவர் பசியினால் களைத்திருக்கிறார் என்று உணர்ந்து, தான் கொண்டு வந்த நெல்லிக்கனியை ஔவையிடம் கொடுத்து உண்ணும்படி வேண்டினான். ஔவையாரும் அவ்வண்ணமே உண்டு களைப்பை போக்கினார். கனியின் சுவையை அறிந்த ஔவை அதியமானிடம் அதைப் பற்றி வினவினாள். அதியமான் அக்கனியின் வரலாற்றைக் கூறினான். அக்கனியை தான் உண்ணுவதைக் காட்டிலும் ஔவை உண்டால் அது அவர் உலகிற்கு பல நற்போதனைகளை செய்ய உதவும் என்று உரைத்தான். அதியமானின் மேன்மை கண்டு உவகையுற்றார் ஔவையார்.





இயல் - 7

செய்யுள்

நாகரிகம், தொழில், வணிகம், நாடு, சமூகம், அரசு, நிர்வாகம்-விதைநெல்

# 2. ஏர் புதிதா?

கு.ப.ராஜகோபாலன்

## பாடல் :

முதல்மழை விழுந்ததும்
மேல்மண் பதமாகிவிட்டது.
வெள்ளி முளைத்திடுது, விரைந்துபோ நண்பா!
காளைகளை ஓட்டிக் கடுகிச்செல், முன்பு!

பொன் ஏர் தொழுது, புலன் வழிபட்டு
மாட்டைப் பூட்டி
காட்டைக் கீறுவோம்.
ஏர் புதிதன்று, ஏறும் நுகத்தடி கண்டது,

காடு புதிதன்று, கரையும் பிடித்ததுதான்
கை புதிதா, கார் புதிதா? இல்லை.
நாள்தான் புதிது, நட்சத்திரம் புதிது!
ஊக்கம் புதிது, உரம் புதிது!

மாட்டைத் தூண்டி, கொழுவை அமுத்து
மண்புரளும், மழை பொழியும்,
நிலம் சிலிர்க்கும், பிறகு நாற்று நிமிரும்.
எல்லைத் தெய்வம் எல்லாம் காக்கும்;

கவலையில்லை!
கிழக்கு வெளுக்குது
பொழுதேறப் பொன்பரவும் ஏரடியில்
நல்லவேளையில் நாட்டுவோம் கொழுவை.

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| மேல்மண் பதமாகி விட்டது | – | மண் உழுவதற்கு பதமாகி விட்டது |
| வெள்ளி முளைத்திடுது | – | சூரியன் உதிக்க ஆரம்பித்து விட்டது |
| கடுகிச் செல் முன் | – | விரைவாக முன்னே செல் |
| பொன் ஏர் தொழுது, புலன் வழிபட்டு | – | ஐம்புலன்களை ஒடுக்கி பொன் போன்ற ஏரினை வழிபட்டு |
| காட்டைக் கீறுவோம் | – | நிலத்தின் மண்ணை உழுவோம் |
| ஏர் புதிதன்று, ஏறும் நுகத்தடி கண்டது | – | காளையின் கழுத்தில் பூட்டியுள்ள மரத்தடியைக் கண்டது ஏர். புதியதன்று |
| காடு புதிதன்று, கரையும் பிடித்ததுதான் | – | வயல்நிலம் உழுவதற்கு புதிதல்ல; ஏற்கனவே அறுவடை செய்த நிலம் தான். |
| மாட்டைத் தூண்டி, கொழுவை அமுத்து | – | காளை மாடுகளை ஏற்பாடு செய்து, உழவனின் கையிலுள்ள கொழுகொம்புவை நிலத்தில் பதியச் செய். |
| மண்புரளும் | – | கீழ்மண் மேலே வந்துவிடும் |

| | | |
|---|---|---|
| நிலம் சிலிர்க்கும் பிறகு நாற்று நிமிரும் | – | நிலம் வளப்படும், பிறகு நாற்று நிமிர்ந்து வளரும் |
| கிழக்கு வெளுக்குது | – | கிழக்கு வானம் வெளுத்துவிட்டது (சூரியன் தோன்றி விட்டது) |
| பொழுதேறப் பொன்பரவும் ஏரடியில் | – | நேரம் கூடக் கூட பிரகாசிக்கும் உழும் நிலத்தில் |
| நல்லவேளையில் நாட்டுவோம் கொழுவை | – | நல்ல நேரத்தில் நிலைநாட்டுவோம் நாற்றுக்கு கொழு கொம்பை |

### பொருளுரை:

'முதல்நாள் மழை பெய்ததும், மண் உழுவதற்கு பதமாகிவிட்டது. ஆற்றில் வெள்ளம் புரண்டு ஓட ஆரம்பித்துவிட்ட்து. சூரியன் உதிக்க ஆரம்பித்து விட்டது. விரைந்து செல் நண்பனே! வயலை நோக்கி காளைகளை விரைவாக ஓட்டி விடு உழவனே! சித்திரை மாதத்தில் ஐம்புலன்களை ஒடுக்கி வழிபாடு செய்து நிலத்தை உழுவதற்கு, காளை மாடுகளைக் கொண்டு நிலத்தை பிளவுபடுத்து. ஏர் புதியதல்ல. காளையின் கழுத்தில் பூட்டியுள்ள மரத்தடியால் உழுவதற்கு தயாராகு. வயல் நிலம் உழுவதற்கு புதிதல்ல; ஏற்கனவே அறுவடை செய்த நிலம்தான். உழவர்களின் கையும் புதிதல்ல; பெய்கின்ற மழையும் புதிதல்ல; விதைக்கும் நாள்தான் புதியது; நட்சத்திரமாகிய விதையும் புதியது; முயற்சி புதியது; உரமும் புதியது; காளை மாடுகளை ஏற்பாடு செய்து உழவனின் கையிலுள்ள கொழுக் கொம்புவை நிலத்தில் பதியச் செய். அவ்வாறு அழுத்தும் போது கீழ் மண் மேலே வந்துவிடும். மழை பெய்தவுடன் மண் தானாகவே புரளும். நிலமும் வளப்படும். பிறகு நாற்று நிமிர்ந்து வளரும். திசை காக்கும் தெய்வம் வயல் பகுதியை நன்றாகக் காத்துக் கொள்ளும். இனி கவலையில்லை. சூரியன் தோன்றிவிட்டது. உழும் நிலத்தில் நேரம் கூட கூட பிரகாசிக்கும். ஆகவே நல்ல நேரம் நெருங்கிவிட்டது. நாற்றுக்கு அருகில் கொழுவை நிலை நாட்டுவோம்.

### விளக்கவுரை:

"உழவுண்டெனில் உயர்வுண்டு" என்பதைக் கவிஞர் கு.ப. ராஜகோபாலன் உழவின் மாண்பை அழகாக விவரிக்கிறார். பொன் ஏர் பூட்டுதல், நிலம் உழுதல், காளைமாடுகளைப் பயன்படுத்தி நிலத்தை பண்படுத்துதல், நாற்று நடுதல், நாற்றுக்கு கொழுவை நட்டுதல் போன்ற உழவின் ஒவ்வொரு செயலையும் இப்பாடலில் காணமுடிகிறது.

### ஆசிரியர் குறிப்பு:

- கு.ப. ராஜகோபாலன் 1902 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கும்பகோணத்தில் பிறந்தார்.
- அவருடைய பெற்றோர் பட்டாபிராமையர் – ஜானகி அம்மாள்.
- இவர் ஒரு தமிழ் எழுத்தாளர். சிறுகதை, நாவல், கவிதை, வசனகவிதை, ஓரங்க நாடகம், திறனாய்வு வாழ்க்கை வரலாறு, மொழிபெயர்ப்பு எனப் பலவகையான படைப்புகளை அளித்துள்ளார்.
- அவரது சிறுகதைகளின் சிறப்பினால் "சிறுகதை ஆசான்" என்று அழைக்கப்படுகிறார்
- தமிழ்நாடு, பாரதமணி, பாரததேவி, கிராம ஊழியன் ஆகிய இதழ்களில் ஆசிரியராகப் பணிபுரிந்தார்.
- அகலிகை, கண்ணன் என்கவி, பாரதியே மகாகவி, ஆறு நவயுக நாவல்கள், ஸ்ரீஅரவிந்த யோகி, டால்ஸ்டாய் வாழ்க்கையும் உபதேசமும் போன்றவை இவரது படைப்புகளாகும்.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. கடுகி – விரைவாக
2. பதம் – பக்குவம்
3. நுகத்தடி – மாடுகளின் கழுத்தில் வைத்துக் கட்டப்படும் நீளமான கட்டை
4. கார் – மழைக்காலம்
5. ஏரடி – உழுதல்
6. கொழு – கொம்பு (கம்பு)

### இலக்கணக் குறிப்பு வரைக:

1. விரைந்து – வினையெச்சம்
2. தொழுது – வினையெச்சம்
3. கீறுவோம் – தன்மைப் பன்மை வினைமுற்று
4. விரைந்துபோ – வினையெச்சம்
5. கடுகிச்செல் – வினையெச்சம்
6. கீறுவோம் – தன்மைப் பன்மை வினைமுற்று
7. காட்டைக் கீறுவோம் – இரண்டாம் வேற்றுமை விரித்தொடர்
8. கண்டது – தன்மை ஒருமை வினைமுற்று
9. நாட்டுவோம் – தன்மைப் பன்மை வினைமுற்று
10. மாட்டைப் பூட்டி – இரண்டாம் வேற்றுமை விரித்தொடர்
11. நண்பா – விளித்தொடர்

### பகுபத உறுப்பிலக்கணம்:

1. தொழுது – தொழு + த் + உ
   தொழு – பகுதி
   த் – இறந்தகால இடைநிலை
   உ – வினையெச்சவிகுதி

2. கீறுவோம் – கீறு + வ் + ஓம்
   கீறு – பகுதி
   வ் – எதிர்கால இடைநிலை
   ஓம் – தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. சரியான அகரவரிசையைத் தேர்ந்தெடுக்க. PTA

   அ) உழவு, மண், ஏர், மாடு ஆ) மண், மாடு, ஏர், உழவு
   இ) உழவு, ஏர், மண், மாடு ஈ) ஏர், உழவு, மாடு, மண்

   விடை : இ) உழவு, ஏர், மண், மாடு

**கூடுதல் வினாக்கள்:**

2. சங்கத் தமிழரின் திணை வாழ்வு __________ அடிப்படையாகக் கொண்டது.

அ) வேளாண்மையை ஆ) மீன்பிடித்தலை
இ) குடிசைத் தொழிலை ஈ) நெசவுத் தொழிலை

விடை : அ) வேளாண்மையை

3. 'ஏரடி' என்பதன் பொருள் __________.

அ) உழுதல் ஆ) விதைத்தல்
இ) நீர்ப்பாய்ச்சுதல் ஈ) களைபறித்தல்

விடை : அ) உழுதல்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. வெள்ளி முளைத்திடுது, விறைந்துபோ நண்பா!
காளைகளை ஓட்டிக் கடுகிச்செல் முன்பு!
பொன்ஏர் தொழுது, புலன் வழிபட்டு
மாட்டைப் பூட்டி
காட்டைக் கீறுவோம்

1. பொன் ஏர் பூட்டுதல் என்றால் __________

அ) தங்க தேர் இழுத்தல் ஆ) சித்திரைத் திங்கள் உழவர் விழா
இ) பொங்கல் திருவிழா ஈ) தீப திருவிழா

விடை : ஆ) சித்திரைத் திங்கள் உழவர் விழா

2. பாடலில் இடம்பெறும் அடிஎதுகைகள்__________

அ) வெள்ளி முளைத்து ஆ) மாட்டை காட்டை
இ) மாட்டைப் பூட்டி ஈ) காளை, கடுகி

விடை : ஆ) மாட்டை காட்டை

3. இப்பாடலின் ஆசிரியர் __________

அ) மேத்தா ஆ) அப்துல் ரகுமான்
இ) ராஜகோபாலன் ஈ) தமிழன்பன்

விடை : இ) ராஜகோபாலன்

4. "தொழுது" என்பதன் இலக்கணக் குறிப்பு __________

அ) பெயரெச்சம் ஆ) வினையெச்சம்
இ) ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் ஈ) வினையாலனையும் பெயர்

விடை : ஆ) வினையெச்சம்

2. மாட்டைத் தூண்டி, கொழுவை அழுத்து
மண்புரளும், மழை பொழியும்
நிலம் சிலிர்க்கும் பிறகு நாற்று நிமிரும்
எல்லைத் தெய்வம் எல்லாம் காக்கும்
கவலையில்லை
கிழக்கு வெளுக்குது
பொழுதேறப் பொன்பரவும் ஏரடியில்
நல்ல வேளையில் நாட்டுவோம் கொழுவை.

1. இப்பாடல் இடம் பெறும் கவிதைத் தொகுப்பின் பெயர் யாது?

அ) சி.வா.க படைப்புகள் ஆ) ஈரோடு தமிழன்பன் படைப்புகள்
இ) கு.ப. ராஜகோபாலன் படைப்புகள் ஈ) மு.மேத்தா படைப்புகள்

விடை : இ) கு.ப. ராஜகோபாலன் படைப்புகள்

2. "கொழு" என்பதன் பொருள் __________

அ) பெரிய ஆ) வளமான
இ) கம்பு ஈ) மாலைப் பொழுது

விடை : இ) கம்பு

3. நாட்டுவோம் – இலக்கணக்குறிப்பு தருக.

அ) வினையாலணையும் பெயர் ஆ) தொழிற் பெயர்

இ) ஏவல் வினைமுற்று ஈ) தன்மை பன்மை வினைமுற்று

விடை : ஈ) தன்மை பன்மை வினைமுற்று

4. இப்பாடல் இடம்பெறும் சீர்மோனைகளை எழுதுக

அ) மண் – மழை ஆ) கிழங்கு – வெளுக்குது

இ) நல்ல – கெழுவை ஈ) மாட்டை – அழுத்து

விடை : அ) மண் – மழை

## குறுவினா

### கூடுதல் வினாக்கள்:

1. பொன் ஏர் பூட்டுதல் என்றால் என்ன? PTA

உழவர்கள் தங்களது வேளாண்மை செழிக்கவும், மானுடம் தழைக்கவும் சித்திரை மாதத்தின் முதல் நாளில் இறைவனுக்கு விழா எடுப்பர். இதுவே பொன் ஏர் பூட்டுதல் எனப்படும்.

2. கு.பா.ராஜகோபாலன் ஆசிரியராக பணிபுரிந்த இதழ்கள் யாவை?

தமிழ்நாடு, பாரதமணி, பாரததேவி, கிராம ஊழியன் ஆகிய இதழ்களில் கு.ப.ரா. ஆசிரியராக பணிபுரிந்தார்.

3. எவையெல்லாம் புதிது என்று 'ஏர் புதிதா'? கவிதையில் கு.ப.ரா. கூறுகிறார்?

நாள் புதிது, நட்சத்திரம் புதிது, ஊக்கம் புதிது, உரம் புதிது என்று கு.ப.ரா கூறுகிறார்.

4. உழவுத்தொழில் பற்றி உனக்குத் தெரிந்த சில கருத்துகளைக் கூறுக.

- உழுவோர் உலகத்திற்கு அச்சாணி எனப் போற்றப்பட்டனர்.
- உழவே தலையான தொழில். 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்பது திருக்குறள்.
- தமிழர், உழுது பயிர் செய்து உலகைக் காக்கும் இத்தொழிலைப் பெரிதும் போற்றினர்.
- மருதநிலம் வயலும் வயல் சார்ந்த பகுதியாகும்.
- மருத நிலத்தின் பெருமை கருதியே வேந்தனை முதன்மைப்படுத்தினர் தமிழர்.

## சிறுவினா

### கூடுதல் வினாக்கள்:

1. கு.ப.ராஜகோபாலன் – குறிப்பு வரைக.

- கு.ப. ராஜகோபாலன் 1902 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கும்பகோணத்தில் பிறந்தார். அவருடைய பெற்றோர் பட்டாபிராமையர் – ஜானகி அம்மாள்.
- இவர் ஒரு தமிழ் எழுத்தாளர். சிறுகதை, நாவல், கவிதை, வசனகவிதை, ஓரங்க நாடகம், திறனாய்வு வாழ்க்கை வரலாறு, மொழிபெயர்ப்பு எனப் பலவகையான படைப்புகளை அளித்தாலும் அவரது சிறுகதைகளின் சிறப்பினால் "சிறுகதை ஆசான்" என்று அழைக்கப்படுகிறார்.
- தமிழ்நாடு, பாரதமணி, பாரததேவி, கிராம ஊழியன் ஆகிய இதழ்களில் ஆசிரியராகப் பணிபுரிந்தார்.
- அகலிகை, கண்ணன் என்கவி, பாரதியே மகாகவி, ஆறு நவயுக நாவல்கள், ஸ்ரீஅரவிந்த யோகி, டால்ஸ்டாய் வாழ்க்கையும் உபதேசமும் போன்றவை இவரது படைப்புகளாகும்.

2. உழவின் மேன்மையை உணர்த்தும் வள்ளுவனின் குறட்பாக்களுள் ஏதேனும் இரண்டை எழுதுக.

1. சுழன்றும் ஏர்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.

2. உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து.

3. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.

## நெடுவினா

### கூடுதல் வினா:

1. 'ஏர் புதிதா'? என்னும் கவிதையில் கு.ப.ரா. கூறும் கருத்துகளை எழுதுக. PTA

**முன்னுரை:**

உழவே தலையான தொழில், உழவு தொழிலாக இல்லாமல் பண்பாடாக நிகழ்ந்தது என்பதை பின்வருமாறு காண்போம்.

**மழை விழுந்தது:**

முதல்நாள் மழை பெய்ததும், மண் உழுவதற்கு பதமாகிவிட்டது, ஆற்றில் வெள்ளம் புரண்டு ஓட ஆரம்பித்துவிட்டது. சூரியன் முளைத்து விட்டது. விரைந்து செல் நண்பனே! வயலை நோக்கி காளைகளை விரைவாக ஓட்டி விடு. உழவனே! சித்திரை மாதத்தில் ஐம்புலன்களை ஒடுக்கி வழிபாடு செய்து நிலத்தை உழுவதற்கு, காளைமாடுகளைக் கொண்டு நிலத்தை பிளவுபடுத்து.

**வயல்நிலம் உழுதல்:**

காளையின் கழுத்தில் பூட்டியுள்ள மரத்தடியால் உழுவதற்கு தயாரானது. வயல் நிலம் உழுவதற்கு புதிதல்ல; ஏற்கனவே அறுவடை செய்த நிலம் தான். உழவர்களின் கையும் புதிதல்ல; பெய்கின்ற மழையும் புதிதல்ல; விதைக்கும் நாள் தான் புதியது; உரமும் புதியது; காளை மாடுகளை ஏற்பாடு செய்து, உழவனின் கையிலுள்ள கொழுக் கொம்புவை நிலத்தில் பதியச் செய்.

**கொழுகொம்புவை அழுத்துதல்:**

கொழுகொம்புவை அழுத்தும் போது கீழ்மண் மேலே வந்துவிடும். மழை பெய்தவுடன் மண் தானாகவே புரளும். நிலமும் வளப்படும். பிறகு நாற்றும் நிமிர்ந்து வளரும். திசை காக்கும் தெய்வம் வயல்பகுதியை நன்றாகக் காத்துக் கொள்ளும். இனி கவலை என்பதேயில்லை.

சூரியன் தோன்றிவிட்டது. உழும் நிலத்தில் நேரம் கூட கூட பிரகாசிக்கும். ஆகவே நல்ல நேரம் நெருங்கிவிட்டது. நாற்றுக்கு அருகில் கொழுவை நிலைநாட்டுவோம் என்று உழவனின் மேன்மையை கு.ப.ரா. கூறுகிறார்.

**முடிவுரை:**

"உழுவோர் உலகத்தார்க்கு அச்சாணி" என்பதை கு.ப.ராஜகோபாலன் அழகாக விவரிக்கிறார்.

## கற்பவை கற்றபின்

முதல்மழை விழுந்தது – தொடர்ந்து நிகழும் உழவுச் செயல்களை 'ஏர் புதிதா'? கவிதை கொண்டு வரிசைப்படுத்திப் பேசுக. PTA

'பொன்னேர் பூட்டுதல் தமிழர் பண்பாட்டின் மகுடம்' என்பதையும் விளக்குக.

- முதல் மழை விழுந்ததும் மண்ணைத் தயார் செய்தல் வேண்டும். இது உழுதல், சமன்படுத்தல் மற்றும் உரமிடல் ஆகிய செயல்களை உள்ளடக்கியது.
- உழுதல் என்பது கீழ்மண்ணை மேலே கொண்டு வருதலும் அதன் கடினத்தன்மையை நீக்கி மென்மையாக்குதலும் ஆகும். எருதுகள் மற்றும் ஏர்கலப்பையைக் கொண்டு உழுதல் பாரம்பரியமுறை.
- மண்ணில் விதையை ஊன்றும் செயலுக்கு விதைத்தல் என்று பெயர். விதைகள் தரமானதாகவும், தொற்று நோய்க்கிருமிகள் இல்லாததாகவும் இருக்க வேண்டும்.
- உரங்கள் மூலம் தாவரங்கள் மண்ணிலிருந்து தனது வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்தினைப் பெறுகின்றன.
- விதை முளைத்தல், மண்ணிலிருந்து ஊட்டச்சத்தை உறிஞ்சுதல் மற்றும் ஒளிச்சேர்க்கை போன்ற செயல்களைச் செய்ய தாவரங்களுக்கு நீர் இன்றியமையாதது.
- ஒரு குறிப்பிட்ட இடைவெளியில் தாவரங்களின் வளர்ச்சிக்காக நீர்ப்பாய்ச்சும் செயல் நீர் மேலாண்மை எனப்படும். விவசாயிகள் பற்றாக்குறையினை நிரப்ப நீர்ப்பாசனத்தைப் பயன்படுத்துகின்றனர்.
- சாகுபடி செய்யப்படும் பயிரினூடாக வளரும் தேவையற்ற புல் முதலிய களைச் செடிகளை விளைநிலத்திலிருந்து நீக்கும் செயலுக்கு களையெடுத்தல் எனப் பெயர். பொதுவாக களைச் செடிகள் மனிதர்களால் வேருடன் பிடுங்கி எறியப்படுகின்றன.
- வயல்கள் வறண்டபின் நெல்மணிகள் நன்கு முதிர்ச்சி அடைந்துவிடும். பிறகு அறுவடை செய்வர்.
- பிறகு சேமித்து வைத்து சந்தைக்கு அனுப்பி வைப்பர்.
- இவ்வாறு முதல் மழை விழுந்தது முதல் செய்யப்படும் உழவுச் செயல்கள் 'ஏர் புதிதா' என்னும் கவிதையில் வரிசைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது.
- இதன் மூலம் 'பொன்னேர் பூட்டுதல் தமிழர் பண்பாட்டின் மகுடம்' என்பதை அறியலாம்.







# 3. மெய்க்கீர்த்தி

இரண்டாம் இராசராச சோழன்

## பாடல் :

*இந்தி ரன்முதற் திசாபாலர் எண் மரும்ஒரு வடிவாகி*
*வந்தபடி யென நின்று மனுவாணை தனி நடாத்திய*
*படியானையே பிணிப்புண்பன*
*வடிமணிச்சிலம்பே யரற்றுவன*
*செல்லோடையே கலக் குண்பன*
*வருபுனலே சிறைப்படுவன*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| இந்திரன் முதற் திசாபாலர் | – | இந்திரன் முதலாகத் திசைபாலகர் |
| எண் மரும் ஒருவடிவாகி | – | எட்டுபேரும் ஒருருவமாக பெற்றது போல் |
| வந்தபடியென நின்று | – | வந்தது போல் நின்று |
| மனுவானை தனி நடாத்திய | – | ஆட்சி செய்தான் சோழன் அவன் நாட்டில் |
| படியானையே பிணிப்புண்பன | – | யானைகள் மட்டுமே பிணிக்கப்படுவன |
| வடிமணிச்சிலம்பே யரற்றுவன | – | சிலம்புகள் மட்டுமே புலம்புகின்றன |
| செல்லோடையே கலக்கண்பன | – | ஓடைகள் மட்டுமே கலக்கமடைகின்றன, |
| வருபுனலே சிறைப்படுவன | – | ஓடும் புனல் மட்டுமே அடைக்கப்படுகின்றது. |

### பொருளுரை:

இந்திரன் முதலாகத் திசைபாலகர் முதலான எட்டுத் தெய்வம் ஒருருவம் பெற்றது போல் ஆட்சி செலுத்தினான் சோழன். அவன் நாட்டில் யானைகள் மட்டுமே பிணிக்கப்பட்டன. சிலம்புகள் மட்டுமே புலம்புகின்றன. ஓடைகள் மட்டுமே கலக்கமடைகின்றன. புனல் மட்டுமே அடைக்கப்படுகின்றது.

### விளக்கவுரை:

இரண்டாம் இராசராசசோழன் கல்வெட்டுகளில் 'மெய்க்கீர்த்தி' என்னும் பெயரில் கல்இலக்கியமாய் அமைந்தது. சோழனது நாட்டில் மக்கள் பிணைக்கப்படுவதில்லை; புலம்புவதில்லை; கலக்கமடைவதில்லை; அடைக்கப்படுவதில்லை என நயம்பட உள்ளது.

## பாடல் :

*மாவே வடுப்படுவன*
*மாமலரே கடியவாயின*
*காவுகளே கொடியவாயின*
*கள்ளுண்பன வண்டுகளே*
*பொய்யுடையன வரைவேயே*
*போர்மலைவன எழுகழனியே*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| மாவே வடுப்படுவன | – | மாங்காய்கள் மட்டுமே வடுப்படுகின்றன. |
| மாமலரே கடியவாயின | – | மலர்கள் மட்டுமே பறிக்கப்படுகின்றன. |

காவுகளே கொடியவாயின – காடுகள் மட்டுமே கொடி உடையனவாக உள்ளன.
கள்ளுண்பன வண்டுகளே – வண்டுகள் மட்டுமே தேன் உண்ணுகின்றன.
பொய்யுடையன வரைவேயே – மலை, மூங்கில் மட்டுமே வெறுமையாய் இருக்கின்றது.
போர்மலைவன எழுகழனியே – வயலில் நெற்கதிர்கள் மட்டுமே போராக எழுகின்றன.

**பொருளுரை:**

மாங்காய்கள் மட்டுமே வடுப்படுகின்றன. மலர்கள் மட்டுமே பறிக்கப்படுகின்றன. காடுகள் மட்டுமே கொடி உடையனவாக உள்ளன. வண்டுகள் மட்டுமே தேன் உண்ணுகின்றன. மலை, மூங்கில் மட்டுமே வெறுமையாய் இருக்கின்றது. வயலில் நெற்கதிர்கள் மட்டுமே போராக எழுகின்றன.

**விளக்கவுரை:**

அங்கு மக்கள் வடுபடுவதில்லை; அவர்களது உரிமைகள் பறிக்கப்படுவதில்லை; அவர்கள் கொடியவர்களாக இல்லை; கள் உண்பதில்லை; அவர்களிடையே வெறுமை இல்லை; அங்கு போர் இல்லை என நயம்பட இப்பாடல் கூறுகிறது.

**பாடல் :**

மையுடையன நெடுவரையே
மருளுடையன இளமான்களே
கயற்குலமே பிறழ்ந்தொழுகும்
கைத்தாயரே கடிந்தொறுப்பார்
இயற்புலவரே பொருள்வைப்பார்
இசைப் பாணரே கூடஞ்செய்வார்
என்று கூறி இவன்காக்கும் திருநாட்டி னியல்இதுவென

**சொற்பொருள்:**

மையுடையன நெடுவரையே – நீண்ட மலைகள் இருள் சூழ்ந்திருக்கின்றன
மருளுடையன இளமான்களே – இளமான்கள் மருளுகின்றன.
கயற்குலமே பிறழ்ந்தொழுகும் – குளத்து மீன்களே பிறழ்ந்துச் செல்கின்றன.
கைத்தாயரே கடிந்தொறுப்பார் – செவிலித்தாயார் மட்டும் கோபப்படுவர்.
இயற்புலவரே பொருள்வைப்பார் – புலவர் இயற்றும் பாட்டில் மட்டுமே பொருளை மறைத்து வைப்பர்.
இசைப் பாணரே கூடஞ்செய்வார் – இசைப்பாணரே தெருவில் கூடி ஆடிப்பாடுவர்
என்று கூறி இவன்காக்கும் – என்று கூறி இராசராசன் காக்கும்
திருநாட்டி னியல்இதுவென – திருநாட்டின் இயல்பு இது என்று

**பொருளுரை:**

நீண்ட மலைகள் இருள் சூழ்ந்திருக்கின்றன. இளமான்களின் கண்களே மருள்கின்றன. குளத்து மீன்களே பிறழ்ந்துச் செல்கின்றன. செவிலித் தாயார் சினங்காட்டுவர். புலவர் பாட்டில் மட்டுமே பொருள் பொதிந்து இருக்கின்றது. இசைப்பாணரே தெருவில் கூடி ஆடிப்பாடுவர். இராசராசன் காக்கும் திருநாட்டின் இயல்பு இது.

**விளக்கவுரை:**

இராசராசன் தன் நாட்டைக் காக்கும் இயல்பைக் கூறுகிறது. அங்கு நாட்டில் வறுமை இருள் இல்லை. மக்கள் கண்களில் மருட்சி இல்லை. அவர்கள் நிலை பிறழ்வதில்லை. யாரும் சினங்கொள்வதில்லை. மக்கள் யாரும் பொருளை மறைப்பதில்லை. தேவையற்று யாரும் தெருவில் கூடி ஆடிப் பாடுவதில்லை என்று கூறுகிறது.

## பாடல் :

*நின்றுகாவல் நெறிபூண்டு நெறியல்லது நினையாது*
*தந்தையில்லோர் தந்தையாகியுந் தாயரில்லோர் தாயராகியும்*
*மைந்தரிலொரு மைந்தராகியும் மன்னுயிர்கட்குயிராகியும்*
*விழிபெற்ற பயனென்னவும் மெய்பெற்ற அருளென்னவும்*
*மொழிபெற்ற பொருளென்னவும் முகம்பெற்ற பனுவலென்னவும்*
*எத்துறைக்கும் இறைவனென்னவும் யாஞ்செய்....*

### சொற்பொருள்:

நின்றுகாவல் நெறிபூண்டு – சோழன் நெறியோடு நின்று
நெறியல்லது நினையாது – நெறியைத் தவிர மற்றவற்றை நினைக்காது
தந்தையில்லோர் தந்தையாகியுந் – தந்தையில்லாதோருக்குத் தந்தையாய்
தாயரில்லோர் தாயராகியும் – தாயில்லாதோர்க்கு தாயாய் இருக்கின்றான்
மைந்தரிலொரு மைந்தராகியும் – மகனில்லாதோர்க்கு மகனாக இருக்கின்றான்
மன்னுயிர்கட்குயிராகியும் – உலகில் உயிர்களுக்கு எல்லாம் உயிராக இருக்கின்றான்
விழிபெற்ற பபனென்னவும் – விழி பெற்ற பயனாகவும்
மெய்பெற்ற அருளென்னவும் – உடல் பெற்ற அருளாகவும்
மொழிபெற்ற பொருளென்னவும் – மொழி பெற்ற பொருளாகவும்
முகம்பெற்ற பனுவலென்னவும் – புகழ்பெற்ற நூல் போலவும் (திகழ்கிறான்)
எத்துறைக்கும் – அனைத்திற்கும்
இறைவனென்னவும் யாஞ்செய்.... – தலைவனாகி எல்லாம் புரிகின்றான்.

### பொருளுரை:

அவன் நெறியோடு நின்று காவல் காக்கின்றான். தந்தையில்லாதோருக்குத் தந்தையாய் இருக்கின்றான், மகனில்லாதோருக்கு மகனாக இருக்கின்றான். உலகில் உயிர்களுக்கு எல்லாம் உயிராக இருக்கின்றான். விழி பெற்ற பயனாகவும், மெய்பெற்ற அருளாகவும், மொழி பெற்ற பொருளாகவும், புகழ் பெற்ற நூல் போலவும் திகழ்கிறான். புகழ் அனைத்திற்கும் தலைவனாகி யாதும் புரிகின்றான்.

### விளக்கவுரை:

இராசராசன் நாட்டை எவ்வாறு காவல் காத்தான் என்று அவன் பெருமையை இங்கு கூறுகிறது இந்தச் செய்யுள்.

### ஆசிரியர் குறிப்பு:

- கோப்பரகேசரி, திருபுவனச் சக்கரவர்த்தி என்ற பட்டங்கள் கொண்ட இரண்டாம் இராசராச சோழன், இரண்டாம் குலோத்துங்கனின் மகனாவான்.
- இவனது ஆட்சியைப் பற்றி பல கல்வெட்டுகள் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன.
- அவற்றில் அடங்கியுள்ள பல மெய்க்கீர்த்திகள் அவனுடைய ஆட்சியின் நிலப்பரப்பையும், அவனுக்கு அடங்கிய ஏராளமான சிற்றரசர்களின் பெயர்களையும் நிலைமைகளையும் தெரிவிக்கின்றன.

#### மெய்க்கீர்த்தி:

- மெய்க்கீர்த்தி என்பது எழுதப்படும் காலத்தில் ஆட்சியில் உள்ள அரசனின் உண்மையான புகழுக்குரிய செயல்களைச் செதுக்கும் கல்வெட்டாகும்.
- கல்வெட்டுகள் முன்னரே தமிழ்நாட்டு மன்னர்களால் ஆக்கப்பட்டாலும் அவற்றில் விரிவான மெய்க்கீர்த்திகள் இருக்கவில்லை.
- சோழ மன்னன் முதலாம் இராசராசன் காலத்திலேயே கல்வெட்டுகளில் விரிவான மெய்க்கீர்த்திகள் இடம் பெறலாயின.

Don

## நூற் குறிப்பு:

இரண்டாம் இராசராச சோழனின் மெய்க்கீர்த்திப் பகுதியின் இலக்கிய நயம், நாட்டின் வளத்தையும் ஆட்சிச் சிறப்பையும் ஒரு சேர உணர்த்துவதாக உள்ளது. இவருடைய மெய்க்கீர்த்திகள் இரண்டு. அதில் ஒன்று 91 வரிகளைக் கொண்டது.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. எண்மரும் – எட்டுப்பேரும்
2. உருவம் – வடிவம்
3. மை – இருள்
4. மருள் – மயக்கம்
5. பனுவல் – புத்தகம் (நூல்)
6. கடிந்து – கண்டித்தல்
7. கைத்தாயர் – செவிலித் தாயார்

### இலக்கணக் குறிப்பு தருக:

1. உருபுனல் – வினைத்தொகை
2. மாமலர் – உரிச்சொல் தொடர்
3. நெடுவரை – பண்புத்தொகை
4. செய்வார் – வினையாலணையும் பெயர்

### பகுபத உறுப்பிலக்கணம் தருக:

1. செய்வார் – செய் + வ் + ஆர்

செய் – பகுதி
வ் – எதிர்கால இடைநிலை
ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி

2. நின்று – நில் (ன்) + ற் + உ

நில் – பகுதி
ன் – ல், ன்ஆனது விகாரம்
ற் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. 'தன்நாட்டு மக்களுக்கு தந்தையும் தாயும் மகனுமாக இருந்த அரசன்' – என்னும் மெய்க்கீர்த்தித் தொடர் உணர்த்தும் பொருள்

அ) மேம்பட்ட நிருவாகத்திறன் பெற்றவர் ஆ) மிகுந்த செல்வம் உடையவர்
இ) பண்பட்ட மனிதநேயம் கொண்டவர் ஈ) நெறியோடு நின்று காவல் காப்பவர்

விடை: ஈ) நெறியோடு நின்று காவல் காப்பவர்

## கூடுதல் வினாக்கள்:

2. இராசராசனின் மெய்க்கீர்த்திகள் ______.

அ) இரண்டு ஆ) மூன்று இ) நான்கு ஈ) ஐந்து

விடை : அ) இரண்டு

3. சோழனுடைய நாட்டில் புலம்புவது எது?

அ) யானைகள் ஆ) சிலம்புகள் இ) ஓடைகள் ஈ) வீதிகள்

விடை : ஆ) சிலம்புகள்

4. சோழனின் நாட்டில் ______ மட்டுமே தேன் உண்ணுகின்றன.

அ) ஈ ஆ) வண்டு இ) குருவி ஈ) அணில்

விடை : ஆ) வண்டு

5. முதலாம் இராசராசன் காலத்தில் மெய்க்கீர்த்திகள் ______ வடிக்கப்பட்டுள்ளன.

அ) மலையில் ஆ) குகையில் இ) கல்லில் ஈ) மணலில்

விடை : இ) கல்லில்

6. இரண்டாம் இராசராசன் புகழ் எல்லாவற்றிற்கும் ______ ஆக எல்லாம் செய்கின்றான்.

அ) இறைவன் ஆ) தலைவன் இ) நண்பன் ஈ) பகைவன்

விடை : ஆ) தலைவன்

7. 'பனுவல்' என்பதன் பொருள் ______.

அ) சிறு ஆணி ஆ) நூல் இ) எழுதுகோல் ஈ) ஆணி

விடை : ஆ) நூல்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. காவுகளே கொடிய வாயின
கள்ளுண்பன வண்டுகளே
பொய்யுடையனே வரைவேயே
போர்மலைவன எழுகழனியே
மையுடையன நெடுவரையே
மருளுடையன இளமான்களே

1. இப்பாடல் வரிகள் இடம்பெறும் நூல் ______

அ) மெய்க்கீர்த்தி ஆ) திருவிளையாடற்புராணம்
இ) முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ஈ) திருக்குற்றாலக் குறவஞ்சி

விடை : அ) மெய்க்கீர்த்தி

2. பாடலில் இடம்பெறும் சீர்மோனைகளை எழுதுக ______

அ) மையுடை மருளுடை ஆ) பொய்யுடை, மையுடை
இ) எழுகனியே இளமான்களே ஈ) வண்டுகளே கழனியே

விடை : அ) மையுடை மருளுடை

3. "கள்" என்பதன் பொருள் ______

அ) தேன் ஆ) கல்வி
இ) தேடு ஈ) கறி

விடை : அ) தேன்

4. மக்கள் கண்களில் இல்லாதது ______

அ) வறுமை ஆ) மருட்சி
இ) கொடுமை ஈ) தெளிவு

விடை : ஆ) மருட்சி

2. மையுடையன நெடுவரையே
மருளுடையன இளமான்களே
கயற்குலமே பிறழ்ந்தொழுகும்
கைத்தாயரே கடிந்தொறுப்பார்
இயற்புலவரே பொருள்வைப்பார்
இசைப் பாணரே கூடஞ்செய்வார்
என்று கூறி இவன்காக்கும் திருநாட்டி னியல்இதுவென

1. இப்பாடல் இடம்பெறும் நூல் எது?
அ) பரிபாடல் ஆ) நீதிவெண்பா
இ) முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ஈ) மெய்க்கீர்த்தி
விடை : ஈ) மெய்க்கீர்த்தி

2. "கைத்தாயர்" என்பதன் பொருள் யாது?
அ) தோழி ஆ) தலைவி
இ) செவிலித்தாய் ஈ) நற்றாய்
விடை : இ) செவிலித்தாய்

3. "செய்வார்" என்பதன் இலக்கணக் குறிப்பு
அ) தொழிற்பெயர் ஆ) வினையாலணையும் பெயர்
இ) தன்மை பன்மை வினைமுற்று ஈ) ஏவல் வினைமுற்று
விடை : ஆ) வினையாலணையும் பெயர்

4. மருளுடையன – பிரித்து எழுதுக.
அ) மருள் + உடையன ஆ) மரு + உடையன
இ) மருளுடை + அன ஈ) மருள் + உடை + அன் + அ
விடை : அ) மருள் + உடையன

## குறுவினா

### பாடநூல் வினா:

1. மெய்க்கீர்த்தி பாடப்படுவதன் நோக்கம் யாது? PTA

மெய்க்கீர்த்தி என்பது உண்மையான புகழுக்குரிய செயல்களைக் கூறும் கல்வெட்டு ஆகும். மெய்க்கீர்த்தி பாடுவதன் மூலம் ஒவ்வொரு மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் நடந்த நிகழ்வுகளையும், எந்தக் கல்வெட்டு எந்த மன்னனுடையது எனவும் அறியமுடிகிறது.

### கூடுதல் வினாக்கள்:

2. எண்திசை தெய்வங்களின் பெயர்களைக் கூறுக.

இந்திரன், அக்னிதேவன், எமன், நிருதி, வர்ணதேவன், வாயுதேவன், குபேரன், திசைபாலகர்.

3. இராசராச சோழன் எவ்வாறு காவல் காக்கின்றான்?

இராசராச சோழன் தந்தையில்லாதோருக்குத் தந்தையாகவும், தாயில்லாதோருக்குத் தாயாகவும், மகனில்லாதோருக்கு மகனாகவும், உலகில் உள்ள உயிர்களுக்கு எல்லாம் உயிராக இருந்து காவல் காக்கின்றான்.

4. இராசராசன் நாட்டின் இயல்புகளைக் கூறுக?

இராசராசன் நாட்டில் மலைகள் இருளாகவும், மான்களின் கண்கள் மருண்டும், குளத்து மீன்கள் பிறழ்ந்தும், செவிலித்தாயர் சினங்கொண்டும், புலவர் பாட்டில் பொதிந்தும், இசைப்பாணர் தெருவில் ஆடிப்பாடியும் மகிழ்ந்தனர்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. பின்வரும் பத்தியைப் படித்து மையக் கருத்தை எழுதுக.

பேரரசனது மெய்ப் புகழை எடுத்துக்கூறுவது மெய்க்கீர்த்தி. பொதுவாக இது சோழ மன்னருடைய சாசனங்களின் தொடக்கத்தில் அரசனுடைய இத்தனையாவது ஆட்சியாண்டு என்று கூறுமிடத்து அமைக்கப்பெறும். சிறப்பாக அவனுடைய போர் வெற்றிகளையும் வரலாற்றையும் முறையாகக் கூறி, அவன் தன் தேவியோடு வீற்றிருந்த நீடு வாழ்க எனக் கூறி பிறகே சாசனம் எழுந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடும்.

சோழ மன்னர் பரம்பரையில் மெய்க்கீர்த்தியோடு சாசனங்களைப் பொறிக்கும் வழக்கம் நெடுநாள் இருந்ததில்லை. முதல் இராசராசனுடைய எட்டாம் ஆண்டில்தான் மெய்க்கீர்த்திகளின் வம்ச பரம்பரையை மிகவும் விரித்துக் கூறியுள்ளன.

தலைப்பு – மெய்க்கீர்த்தி

**மையக்கருத்து:**

சோழ மன்னருடைய போர் வெற்றிகள் அவனது வரலாறு, தன் தேவியோடு நீடு வாழ்தல் போன்ற மெய்ப்புகழை எடுத்து கூறுகிறது.

### கூடுதல் வினாக்கள்:

2. இரண்டாம் இராசராச சோழன் பற்றிக் குறிப்பு வரைக.

- இரண்டாம் இராசராசன் கோப்பர கேசரி, திருபுவனம் சக்கரவர்த்தி என்ற பட்டங்கள் கொண்டவன்.
- இவனது தந்தை இரண்டாம் குலோத்துங்கன் ஆவான். இவனது ஆட்சியைப் பற்றி பல கல்வெட்டுகள் விளக்குகின்றன.
- இவற்றில் அடங்கியுள்ள பல மெய்க்கீர்த்திகள் இவனுடைய ஆட்சியின் நிலப்பரப்பையும், சோழனுக்கு அடங்கியுள்ள ஏராளமான சிற்றரசர்களின் பெயர்களையும் அவர்களது நிலைமைகளையும் தெரிவிக்கின்றன. இவருடைய மெய்க்கீர்த்திகள் இரண்டு.

3. மெய்க்கீர்த்தி – விளக்குக (அ) மெய்கீர்த்திக் குறித்துத் தாங்கள் அறிந்த இரண்டு கருத்துகளை எழுதுக. PTA

- மெய்க்கீர்த்தி என்பது எழுதப்படும் காலத்தில் ஆட்சியில் உள்ள அரசனின் உண்மையான புகழுக்குரிய செயல்களைக் கூறும் கல்வெட்டின் பகுதியாகும்.
- கல்வெட்டுகள் முன்னரே தமிழ்நாட்டு மன்னர்களால் ஆக்கப்பட்டாலும் அவற்றில் விரிவான மெய்க்கீர்த்திகள் இருக்கவில்லை.
- சோழ மன்னன் முதலாம் இராசராசன் காலத்திலேயே கல்வெட்டுகளில் விரிவான மெய்க்கீர்த்திகள் இடம் பெறலாயின.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. மெய்க்கீர்த்திப் பாடலின் நயத்தை விளக்குக. PTA

**முன்னுரை:**

இரண்டாம் இராசராசன் பற்றி மெய்க்கீர்த்தியில் அவன் நாட்டு மக்களைக் காக்கும் விதத்தை சிறப்பாக காணமுடிகிறது.

**திரண்ட கருத்து:**

- இரண்டாம் இராசராச சோழன் எண்திசை காவல் தெய்வம் ஒரே வடிவம் பெற்றது போல் ஆட்சி செலுத்தினான்.
- அவன் நாட்டில் யானைகள் மட்டும் பிணைக்கப்பட்டும், சிலம்புகள் மட்டும் புலம்பியும், ஓடைகள் மட்டும் கலக்கமடைந்தும், புனல் மட்டும் அடைக்கப்பட்டும், மாங்காய்கள் மட்டும் வடுபட்டும், மலர்கள் மட்டும் பறிக்கப்பட்டும், காடுகள் மட்டும் கொடியை உடையனவாகவும், வண்டுகள் மட்டுமே தேன் உண்பதாகவும், நெற்கதிர்கள் மட்டும் போராகவும், மலைகள் இருள் சூழ்ந்தனவாகவும், இளமான்களின் கண்கள்

மருண்டதாகவும், குளத்து மீன்கள் பிறழ்ந்து சென்றதாகவும், செவிலித்தாயார் மட்டும் சினம் கொண்டதாகவும், புலவர் பாட்டில் மட்டும் பொருள் பொதிந்ததாகவும், இசைப்பாணன் தெருவில் கூடி ஆடிப்பாடியதாகவும் இராசராசன் காக்கும் நாட்டின் இயல்புகளாக கல்வெட்டுகள் கூறுகின்றன. மக்கள் அவ்வாறின்றி வளமாக இருந்தனர்.

- மேலும் இராசராசன் தந்தையல்லாதோருக்குத் தந்தையாகவும், தாயில்லாதோருக்குத் தாயாகவும், மகனில்லாதோருக்கு மகனாகவும், எல்லா உயிர்களுக்கும் உயிராகவும், விழி பெற்ற பயனாகவும், மெய்ப்பெற்ற அருளாகவும், மொழி பெற்ற பொருளாகவும், புகழ் பெற்ற நூலாகவும், புகழ் அனைத்திற்கும் தலைவனாகவும் இருந்து நாட்டைக் காக்கின்றான்.

**மையப்பொருள்:**

இராசராசன் நாட்டில் வாழும் மக்கள் எல்லா உரிமைகளும் பெற்று வாழ்ந்தனர் என்பதை இப்பாடல் தெளிவாக விளக்குகிறது.

**மோனை நயம்:**

"மோனையில்லாத பாடல் சேனையில்லாத அரசனுக்குச் சமம்." செய்யுளில் முதலெழுத்து ஒன்றி வருவது மோனை நயம் ஆகும்.

மாவே

மாமலரே

இயற்புலவரே

இசைப்பாணரே போன்ற தொடர்களில் சீர் மோனை பயின்று வந்துள்ளது.

**எதுகை நயம்:**

"எது கை கொடுக்காவிட்டாலும் எதுகை கை கொடுக்கும்," என்பதற்கேற்ப செய்யுளின் முதல் எழுத்து அளவொத்து இருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை நயமாகும்.

இந்திரன்

வந்தபடி

படி யானையே

வடிமணிச் சிலம்பே

கயற்குலமே

இயற்புலவரே

விழி பெற்ற

மொழி பெற்ற போன்ற அடிகளில் எதுகை நயம் சிறப்பாக அமைந்துள்ளது.

**அணிநயம்:**

இப்பாடலில் உயர்வு நவிற்சி அணி அமைந்துள்ளது. இராசராசன் நாட்டைக் காக்கும் தன்மை உயர்வாகக் கூறப்பட்டுள்ளது. ஆகவே, இப்பாடல் உயர்வு நவிற்சி அணியாயிற்று.

**இயைபு நயம்:**

அடிதோறும் இறுதிச்சீர் ஒன்று போல வந்து சுவை தருவது இயைபு நயமாகும்.

பிணிப்புண்பன

யரற்றுவன

கலக்குண்பன

சிறைப்படுவன

வகுப்படுவன

என இப்பாடலில் இயைபு நயம் அமைந்துள்ளது.

**சந்த நயம்:**

இப்பாடலானது பாடுவதற்கு இனிமையாகவும், பொருள் புரிவதற்கு எளிமையாகவும் அழகிய சந்த நயத்துடன் காணப்படுகிறது.

**முடிவுரை:**

இப்பாடலில் இராசராசனின் நாட்டின் வளம் அழகாகக் காட்டப்பட்டுள்ளது.

கூடுதல் வினா:

2. மெய்க்கீர்த்தி பாடலில் கூறப்படும் கருத்துகள் யாவை?

**இராசராசன் காக்கும் நாட்டின் இயல்புகள்:**

- இந்திரன் முதலாகத் திசைபாலகர் போன்ற எட்டுப் பேரும் ஒரே உருவம் பெற்றது போல் ஆட்சி செய்தான், சோழன். அவன் நாட்டில் யானைகள மட்டுமே பிணிக்கப்பட்டன. மக்கள் பிணைக்கப்படுவதில்லை. சிலம்புகள் மட்டுமே புலம்பின; மக்கள் புலம்புவதில்லை. ஓடைகள் மட்டுமே கலக்கமடைந்தன;
- மக்கள் கலக்கமடைவதில்லை. புனல் மட்டுமே அடைக்கப்பட்டது; மக்கள் அடைக்கப்படுவதில்லை.
- மாங்காய்கள் மட்டுமே வடுபட்டன; மக்கள் வடுபடுவதில்லை. மலர்கள் மட்டுமே பறிக்கப்பட்டன; மக்கள் உரிமைகள் பறிக்கப்படவில்லை. காடுகள் மட்டுமே கொடி உடையனவாக இருந்தன;
- மக்கள் கொடியவர்களாக இல்லை. வண்டுகள் மட்டுமே தேன் உண்ணுகின்றன; மக்கள் கள் உண்பதில்லை.
- மலைமூங்கில் மட்டுமே உள்ளீடு இன்றி வெறுமையாய் இருக்கின்றது; மக்களிடையே வெறுமை இல்லை. வயலில் நெற்கதிர்கள் மட்டுமே போராக எழுகின்றன; வேறு போர்கள் எழும்பவில்லை.
- நீண்ட மலைகள் இருள் சூழ்ந்திருந்தன; ஆனால் நாட்டில் வறுமை இருள் இல்லை. இளமான்களின் கண்களே மருண்டன;
- மக்கள் கண்கள் மருளவில்லை. குளத்து மீன்கள் பிறழ்ந்து சென்றன. மக்கள் நிலை பிறழ்வதில்லை. செவிலித்தாயர் மட்டுமே கோபப்பட்டனர். ஆனால் வேறு யாரும் கோபப்படவில்லை. புலவர் பாட்டில் மட்டுமே பொருள் பொதிந்து உள்ளது; வேறு யாரும் பொருளை மறைப்பதில்லை.
- இசைப் பாணர் மட்டுமே தெருவில் ஆடிப்பாடுவர்; தேவையற்று வேறு யாரும் அவ்வாறு செய்வதில்லை.

**இராசராசன் உரிமையோடு காவல் காக்கும் தன்மை:**

- இராசராசன் தந்தையல்லாதோருக்குத் தந்தையாகவும், தாயில்லாதோருக்குத் தாயாகவும், மகனில்லாதோருக்கு மகனாகவும், எல்லா உயிர்களுக்கும் உயிராகவும் இருந்து காவல் காத்தான்.
- விழி பெற்ற பயனாகவும், மெய் பெற்ற அருளாகவும், மொழி பெற்ற பொருளாகவும், புகழ் பெற்ற நூல் போலவும் திகழ்ந்தான். எல்லாப் புகழுக்கும் தலைவனாகி அருள் புரிந்தான்.

இவ்வாறு புலவர்களால் இரண்டாம் இராசராச சோழன் பற்றி புகழப்பட்டு, கல் தச்சர்கள் கல்லில் பொறித்தனர்.

## கற்பவை கற்றபின்

உங்கள் ஊரில் உள்ள பண்டைய வரலாற்றுச் சின்னங்களின் ஒளிப்படங்களைத் திரட்டி படத்தொகுப்பேடு ஒன்றை உருவாக்குக.


தஞ்சைப் பிரகதிசுவரர் கோயில்


கோனார்க் சூரியக்கோயில்


தாராசுரம் சிற்பங்கள்


மாமல்லபுரம்



இயல் - 7 செய்யுள்

நாகரிகம், தொழில், வணிகம், நாடு, சமூகம், அரசு, நிர்வாகம்-விதைநெல்

# 4. சிலப்பதிகாரம்

இளங்கோவடிகள்

## பாடல் :

*வண்ணமும் சுண்ணமும் தண்நறுஞ் சாந்தமும்*
*பூவும் புகையும் மேவிய விரையும்*
*பகர்வனர் திரிதரு நகர வீதியும்;*
*பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்*
*கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்;*

## சொற்பொருள் :

| | |
|---|---|
| வண்ணமும் சுண்ணமும் | – மருவூர்ப்பாக்கத்தில் வணிக வீதிகளில் வண்ணக் குழம்பு, சுண்ணப் பொடி |
| தண் நறுஞ்சாந்தமும் | – குளிர்ந்த மணச் சாந்தும் |
| பூவும் புகையும் | – பூ, நறுமணப் புகைப் பொருள்கள், மணப் பொருள்கள் |
| பகர்வனர் திரிதரு நகர வீதியும் | – முதலியன விற்போர் விலைகூறித் திரியும் பெருந்தெருக்களும் |
| பட்டினும் மயிரினும் | – பட்டு நூலாலும் நுண்ணிய மயிராலும் |
| பருத்தி நூலினம் | – பருத்தி நூலாலும் |
| கட்டு நுண்வினைக | – அழகாகப் பின்னிக் கட்டும் கைத்தொழில் |
| காருகர் இருக்கையும் | – வல்லுநரான நெசவாளர் வாழும் வீதிகள் உள்ளன |

## பொருளுரை:

புகார் நகர மருவூர்ப்பாக்கத்தின் வணிக வீதிகளில் வண்ணக்குழம்பு, சுண்ணப்பொடி, குளிர்ந்த மணச்சாந்து, பூ, நறுமணப் புகைப் பொருட்கள், அகில் முதலான மணப் பொருள்கள் விற்பவர்கள் வீதிகளில் வணிகம் செய்து கொண்டிருக்கின்றனர். இங்கு பருத்தி, பட்டுநூல், முடி இவற்றினைக் கொண்டு அழகாகப் பின்னிக்கட்டும் கைத்தொழில் வல்லுநரான நெசவாளர் வாழும் வீதிகள் உள்ளன.

## விளக்கவுரை:

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள வீதிகளில் வாணிகமும் தொழிலும் ஒழுங்கு முறையுடன் சிறந்திருந்ததை இவ்வடிகள் காட்சிப்படுத்துகின்றன.

## பாடல் :

**தூசும் துகிரும் ஆரமும் அகிலும்*
*மாசுஅறு முத்தும் மணியும் பொன்னும்*
*அருங்கல வெறுக்கையோடு அளந்துகடை அறியா*
*வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும்;*
*பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு*
*கூலம் குவித்த கூல வீதியும்; **

### சொற்பொருள் :

| | |
|---|---|
| தூசும் துகிரும் ஆரமும் அகிலும் | – பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும் |
| மாசு அறுமுத்தும் மணியும் பொன்னும் | – மாசில்லா முத்தும் மணியும் பொன்னும் |
| அருங்கல வெறுக்கையோடு | – கையினால் அளக்க முடியாத அளவிற்கு |
| அளந்து கடை அறியா | – கடைகளில் குவிந்து கிடக்கும் |
| வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும் | – வளம் நிறைந்த, அகன்ற வணிக வீதிகளும் |
| பால்வகை தெரிந்த | – மேலும் இவ்வீதிகளில் வேறு பலப் பல |
| பகுதிப் பண்டமொடு | – ஆகிய பண்டங்களுடன் |
| கூலம் குவித்த கூலவீதியும் | – குவிந்து கிடக்கும் தெருக்களும் |

### பொருளுரை:

இங்குப் பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும், முத்தும், மணியும், பொன்னும், அளக்க முடியாத அளவிற்குக் குவிந்து கிடக்கும் வளம் நிறைந்த அகன்ற வணிக வீதிகளில் உள்ளன. மேலும் இவ்வீதிகளில் வேறு பலப் பல பண்டங்களின் விற்பனை நடைபெறுகின்றது. எட்டுவகைத் தானியங்களும் குவிந்து கிடக்கும் கூலக்கடைத் தெருக்களும் உள்ளன.

### விளக்கவுரை:

மருவவூர்ப்பாக்கத்தில் விலை உயர்ந்த பொருட்கள் அளக்க முடியாத அளவிற்குக் குவிந்து கிடக்கும் என அதன் வளமை கூறப்படுகிறது.

**பாடல் :**

*காழியர், கூவியர், கள்நொடை ஆட்டியர்,*
*மீன்விலைப் பரதவர், வெள்உப்புப் பகருநர்,*
*பாசவர், வாசவர், பல்நிண விலைஞரோடு*
*ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்;*
*கஞ்ச காரரும் செம்புசெய் குநரும்*
*மரம்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்*

### சொற்பொருள் :

| | |
|---|---|
| காழியர் கூவியர் | – பிட்டு வணிகரும், அப்பம் சுடுபவரும் |
| கள்நொடை ஆட்டியர் | – கள் விற்கும் வலைச்சியரும் |
| மீன்விலைப் பரதவர் | – மீன் விற்கும் பரதவரும் |
| வெள் உப்புப் பகருநர் | – வெண்மையான உப்பு விற்கும் உமணரும் |
| பாசவர், வாசவர் | – வெற்றிலை விற்பவரும், ஏலம் விற்பவரும் |
| பல்நிண விலைஞரோடு | – (இவர்களுடன்) இறைச்சி விற்பவரும் |
| ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும் | – எண்ணெய் வணிகர் நிறைந்திருக்கும் |
| கஞ்ச காரரும் செம்புசெய்தநரும் | – வெண்கலம், செப்புப் பாத்திரங்கள் செய்வோர் |
| மரம்கொல் தச்சரும் | – மரத்தச்சரும் |
| கருங்கைக் கொல்லரும் | – இரும்புக் கொல்லரும் |

### பொருளுரை:

மருவூர்ப்பாக்கத்தின் தெருக்களில், பிட்டு வணிகரும், அப்பம் சுடுபவரும், கள் விற்கும் வலைச்சியரும், மீன் விற்கும் பரதவரும் உள்ளனர். மேலும் வெண்மையான உப்பு விற்கும் உமணரும், வெற்றிலை விற்பவரும், ஏலம் முதலான ஐந்து நறுமணப் பொருள் விற்பவரும், பல வகையான இறைச்சிகள் விற்பவரும், எண்ணெய் வணிகரும் இங்கு வணிகம் செய்கின்றனர்.

இவற்றுடன் அத்தெருக்களில் பல்வகைப் பொருள்களை விற்கின்ற கடைகளும், வெண்கலம், செப்புப் பாத்திரங்கள் செய்வோர், மரத்தச்சர், இரும்புக் கொல்லர் முதலியோர் உள்ளனர்.

**விளக்கவுரை:**

பல்வேறு வணிகர்கள் நிறைந்து அந்நகரம் தொழில் நகரமாக இருந்தது காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

**பாடல்:**

*மண்ணுள் வினைஞரும் மண்ணீட்டு ஆளரும்*
*பொன்செய் கொல்லரும் நன்கலம் தருநரும்*
*துன்ன காரரும் தோலின் துன்னரும்*
*கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்*

**சொற்பொருள் :**

| | |
|---|---|
| மண்ணுள் வினைஞரும் | – ஓவியர்களும், மண் பொம்மைகள் செய்பவர்களும் |
| மண்ணீட்டு ஆளரும் | – சிற்பிகளும் |
| பொன்செய் கொல்லரும் | – பொற்கொல்லரும் |
| நன்கலம் தருநரும் | – இரத்தின வேலை செய்பவர் |
| துன்னகாரரும் தோலின் துன்னரும் | – தையற்காரரும், தோல்பொருள் தைப்பவரும் |
| கிழியினும் கிடையினும் | – துணியாலும், கட்டைகளாலும் (பொம்மைகள் செய்வோர்) |
| தொழில் பல பெருக்கிப் | – பல்வேறு தொழில்கள் பெருகி |

**பொருளுரை:**

ஓவியர், மண்பொம்மை செய்பவர், சிற்பிகள், பொற்கொல்லர், இரத்தின வேலை செய்பவர், தையற்காரர், தோல் தைப்பவர், துணியாலும், கட்டைகளாலும் பொம்மைகள் செய்பவர் ஆகிய பல தொழில் செய்வோர் உள்ளனர்.

**விளக்கவுரை:**

என்னென்ன தொழில் செய்வோர் உள்ளனர் என விளக்கமாகக் கூறும் பகுதி இது.

**பாடல்:**

*பழுதுஇல் செய்வினைப் பால்கெழு மாக்களும்;*
*குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்*
*வழுவின்றி இசைத்து வழித்திறம் காட்டும்*
*அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்;*
*சிறுகுறுங் கைவினைப பிறர்வினை யாளரொடு*
*மறுஇன்றி விளங்கும் மருவூர்ப் பாக்கமும்*

**சொற்பொருள் :**

| | |
|---|---|
| பழுதுஇல் செய்வினைப் | – இவ்வாறாகப் பழுதின்றிப் கைத்தொழில் |
| பால்கெழு மாக்களும் | – பல செய்யும் மக்களும் (இங்கு நிறைந்துள்ளனர்) |
| குழலினும் யாழினும் குரல் | – குழலிலும், யாழிலும் |
| குரல் முதல் ஏழும் | – குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு இசைகளையும் |

| | | |
|---|---|---|
| வழுவின்றி இசைத்து | – | குற்றமில்லாமல் இசைத்து |
| வழித்திறம் காட்டும் | – | சிறந்த திறமையைக் காட்டும் |
| அரும்பெறல் மரபின் | – | அருமையான மரபில் |
| பெரும்பாண் இருக்கையும் | – | பெரும்பாணர்களின் இருப்பிடங்களும் உள்ளன |
| சிறுகுறுங் கைவினைப் | – | சிறுசிறு கைத்தொழில் செய்வோர் |
| பிறர் வினையாளரொடு | – | பிறர்க்கு ஏவல் செய்வோர் வாழும் இடங்களும் |
| மறுஇன்றி விளங்கும் | – | குற்றமின்றிச் சிறப்புடன் அமைந்து விளங்கும் |
| மருவூர்ப்பாக்கமும் | – | மருவூர்ப்பாக்கம் ஊரும் |

**பொருளுரை:**

இவ்வாறு பழுதின்றி கைத்தொழில் பல செய்யும் மக்கள் வாழும் பகுதிகள் இங்கு நிறைந்துள்ளன. குழலிலும் யாழிலும், குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு இசைகளைக் குற்றமில்லாமல் இசைத்துச் சிறந்த திறமையைக் காட்டும் பெரும்பாணர்களின் இருப்பிடங்களும் உள்ளன. இவர்களுடன் மருவூர்ப்பாக்கத்தின் தெருக்களில் சிறுசிறு கைத்தொழில் செய்வோர், பிறருக்கு ஏவல் செய்வோர் வாழும் இடங்களும் உள்ளன. இவை அனைத்தும் குற்றமின்றிச் சிறப்புடன் அமைந்து விளங்கப் பரந்து கிடந்தன.

**விளக்கவுரை:**

மருவூர்ப்பாக்கத்தில் பழுதின்றி பெருவணிகர் முதல் கைத்தொழில் புரியும் சிறு வணிகர், குற்றேவல் புரிவோர் ஆகியோர் இருந்தனர் என்று இப்பாடல் கூறுகிறது.

## ஆசிரியர் குறிப்பு:

- இளங்கோவடிகள் சேர மரபினர்.
- இளங்கோவடிகளின் தந்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தாய் – நற்சோணை.
- இவர் தம் தமையன் சேரன் செங்குட்டுவன்.
- இளையவரான இளங்கோவே நாடாள்வார் என்று கணியன் கூறிய கருத்தைப் பொய்ப்பிக்கும் பொருட்டு, இளங்கோ இளமையிலேயே துறவு பூண்டு குணவாயிற் கோட்டத்தில் தங்கினார். இளங்கோவடிகள் அரசியல் வேறுபாடு கருதாதவர்.
- சமய வேறுபாடற்ற துறவி.
- இவர் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.

## நூற் குறிப்பு:

சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம். கண்ணகியின் சிலம்பால் விளைந்த கதையை முதன்மையாகக் கொண்டது ஆதலின், சிலப்பதிகாரமாயிற்று. சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ்க் காப்பியம் புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்னும் முப்பெருங் காண்டங்களையும், முப்பது காதைகளையும் உடையது. புகார்க் காண்டம் பத்துக் காதைகளையும், மதுரைக் காண்டம் பதின்மூன்று காதைகளையும், வஞ்சிக் காண்டம் ஏழு காதைகளையும் கொண்டுள்ளது.

முதற்காப்பியம், முத்தமிழ்க்காப்பியம், குடிமக்கள் காப்பியம், ஒற்றுமைக் காப்பியம், நாடகக் காப்பியம் என சிலப்பதிகாரத்தைப் போற்றிப் புகழ்வர். இஃது 'உரையிடப்பட்ட பாட்டுடைச் செய்யுள்' எனவும் வழங்கப் பெறும். "நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரம் படைத்த தமிழ்நாடு" எனப் பாரதியாரால் போற்றப்பட்டது இக்காப்பியம்.

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியன தமிழில் உள்ள ஐம்பெருங்காப்பியங்கள். இவற்றுள் முதன்மையானது சிலப்பதிகாரம். காலத்தாலும் கதைத் தொடர்பாலும் பாவகையாலும் ஒன்றுபட்ட சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் இரட்டைக் காப்பியம் என வழங்குவர்.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. சுண்ணம் – நறுமணப்பொடி
2. காருகர் – நெய்பவர்
3. தூசு – பட்டு
4. துகிர் – பவளம்
5. வெறுக்கை – செல்வம்
6. நொடை – விலை
7. பாசவர் – வெற்றிலை விற்போர்
8. ஓசுநர் – எண்ணெய் விற்போர்
9. மண்ணுள் வினைஞர் – ஓவியர்
10. மண்ணீட்டாளர் – சிற்பி
11. கிழி – துணி
12. பரதவர் – மீன்பிடித் தொழில் செய்பவர்
13. துன்னகாரர் – தைப்பவர்
14. குரல் முதல் ஏழு – ஏழிசை
    (குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்)
15. மறுஇன்றி – குற்றமின்றி
16. கூலம் – தானியம்

### இலக்கணக் குறிப்பு தருக:

1. வண்ணமும் சுண்ணமும் – எண்ணும்மை
2. பயில் தொழில் – வினைத்தொகை
3. செய்வினை – வினைத்தொகை
4. இசைத்து – வினையெச்சம்
5. ஆரமும் அகிலும் – எண்ணும்மை
6. மணியும் பொன்னும் – எண்ணும்மை
7. குரலினும் யாழினும் – எண்ணும்மை
8. அரும்பெறல் – பண்புத்தொகை
9. தெரிந்த – பெயரெச்சம்
10. அறியா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
11. பருத்தி நூல் – இருபெயரொட்டுப் பண்புத் தொகை

### பகுபத உறுப்பிலக்கணம் தருக:

1. மயங்கிய – மயங்கு இ(ன்) + ய் + அ
   - மயங்கு – பகுதி
   - இ(ன்) – இறந்தகால இடைநிலை; 'ன்' புணர்ந்து கெட்டது
   - ய் – உடம்படுமெய்
   - அ – பெயரெச்ச விகுதி

2. இசைத்து – இசை + த் + த் + உ
   - இசை – பகுதி
   - த் – சந்தி
   - த் – இறந்தகால இடைநிலை
   - உ – வினையெச்ச விகுதி

3. குவிந்த – குவி + த்(ந்) + த் + அ

குவி – பகுதி
த் – சந்தி த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

4. செறிந்த – செறி + த்(ந்) + த் + அ

செறி – பகுதி
த் – சந்தி த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அ – பெயரெச்ச விகுதி

## பலவுள் தெரிக

**கூடுதல் வினாக்கள்:**

1. சிலப்பதிகாரம் ________ காப்பியங்களில் ஒன்று.
அ) ஐம்பெருங் ஆ) ஐஞ்சிறு
இ) பதினெண்கீழ்க்கணக்கு ஈ) எட்டுத்தொகை
விடை: அ) ஐம்பெருங்

2. இளங்கோவடிகள் ________ மரபைச் சேர்ந்தவர்.
அ) சேர ஆ) சோழ இ) பாண்டிய ஈ) பல்லவ
விடை: அ) சேர

3. 'கிழி' என்பதன் பொருள் ________ .
அ) பட்டு ஆ) பவளம் இ) துணி ஈ) மலர்
விடை: இ) துணி

4. கருங்கை என்ற சொல்லைப் பிரிக்கும் முறை ________ .
அ) கருங் + கை ஆ) கரு + கை இ) கருமை + கை ஈ) கரு + ங்கை
விடை: இ) கருமை + கை

5. ________ இசைகளை இப்பாடல் வருணிக்கிறது.
அ) ஏழு ஆ) எட்டு இ) ஒன்பது ஈ) ஆறு
விடை: அ) ஏழு

6. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என அழைக்கப்படும் நூல்
அ) மணிமேகலை ஆ) சிலப்பதிகாரம் இ) அகநானூறு ஈ) ஏலாதி
விடை: ஆ) சிலப்பதிகாரம்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

1. பழுதுகில் செய்வினைப் பால்கெழு மாக்களும்
குழலிலும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழுவின்றி இசைத்து வழித்திறம் காட்டும்
அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்

**வினாக்கள்:**

1. "பெரும்பாண்" என்பதன் பொருள் ________
அ) புலவர் ஆ) பாணர்
இ) அமைச்சர் ஈ) அந்தணர்
விடை : ஆ) பாணர்

2. பாடலில் இடம்பெறும் அடிஎதுகைகள் ________
அ) பழுதுகில் வழுவின்றி ஆ) வழுவின்றி வழித்திறம்
இ) குழலினும் குரல்முதல் ஈ) அரும்பெறல் பெரும்பாள்
விடை : அ) பழுதுகில் வழுவின்றி

3. "வழு" என்பதன் பொருள் ______

அ) குற்றம் ஆ) சரி

இ) பொய் ஈ) ஏமாற்றுதல் விடை : அ) குற்றம்

4. இப்பாடலின் ஆசிரியர் ______

அ) திருத்தக்க தேவர் ஆ) சீத்தலைச் சாத்தனார்

இ) கம்பர் ஈ) இளங்கோவடிகள்

விடை : ஈ) இளங்கோவடிகள்

2. மண்ணுள் வினைஞரும் மண்ணீட்டு ஆளரும்
பொன்செய் கொல்லரும் நன்கலம் தருநரும்
துன்னகாரரும் தோலின் துன்னரும்
கிழியினும் கிடையினும் தொழில்பல பெருக்கிப்

1. மண்ணீட்டு ஆளர் என்போர் ______

அ) சிற்பி ஆ) பரதவர்

இ) உமணர் ஈ) தச்சர் விடை : அ) சிற்பி

2. துன்ன காரர் என்பவர் ______

அ) பொற்கொல்லர் ஆ) தையல்காரர்

இ) ஓவியர் ஈ) வணிகர் விடை : ஆ) தையல்காரர்

3. இப்பாடல் இடம்பெற்றுள்ள நூல் ______

அ) கம்பராமாயணம் ஆ) மணிமேகலை

இ) சிலப்பதிகாரம் ஈ) சீவகசிந்தாமணி விடை : இ) சிலப்பதிகாரம்

4. பாடலில் இடம்பெறும் சீர்எதுகைச் சொற்கள் ______

அ) பொன்செய், நன்கலம் ஆ) கிழியினும் கிடையினும்

இ) துன்ன, தோலின் ஈ) மண்ணுள் விணைளர்

விடை : அ) பொன்செய், நன்கலம்

## குறுவினா

### பாடநூல் வினா:

1. பாசவர், வாசவர், பல்நிண விலைஞர், உமணர் – சிலப்பதிகாரம் காட்டும் இவ்வணிகர்கள் யாவர்? PTA

- பாசவர் – வெற்றிலை விற்போர்
- வாசவர் – நறுமண பொருள்கள் (ஏலம்) விற்பவர்
- பல்நிண விலைஞர் – பல வகை இறைச்சி விற்பவர்
- உமணர் – உப்பு விற்பவர்.

### கூடுதல் வினாக்கள்:

2. சிலம்பு உணர்த்தும் மூன்று உண்மைகள் யாவை?

- அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாகும்.
- ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்
- உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்.

3. மருவூர்ப்பாக்கத்தில் எவ்வித மணப்பொருள்களை வணிகம் செய்தனர்?

மருவூர்ப்பாக்கத்தில் வண்ணக்குழம்பு, சுண்ணப்பொடி, குளிர்ந்த மணச் சாந்து, பூ, நறுமணப் புகைப் பொருள்கள், அகில் போன்ற மணப்பொருள்களை வணிகம் செய்தனர்.

4. ஏழு இசைகள் யாவை?

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன ஏழு இசைகள் ஆகும்.

5. மருவூர்ப்பாக்கத்தில் வணிகம் செய்யும் விலை உயர்ந்த பொருட்கள் யாவை?

மருவூர்ப்பாக்கத்தில் பட்டு, பவளம், சந்தனம், அகில், முத்து, மணி, பொன் போன்ற விலை உயர்ந்த பொருட்களை வணிகம் செய்கின்றனர்.

6. ஐம்பெருங்காப்பியங்கள் யாவை?

சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, போன்றவை ஐம்பெருங்காப்பியங்கள் ஆகும்.

7. மருவூர்ப்பாக்கத்தில் உள்ள நெசவாளர்கள் எத்தொழிலில் சிறந்து விளங்கினர்?

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள நெசவாளர்கள் பட்டு, பருத்தி நூல், முடி இவற்றினைக் கொண்டு அழகாகப் பின்னிக் கட்டும் கைத்தொழிலில் சிறந்து விளங்கினர்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. “பகர்வனர் திரிதிரு நகரவீதியும்;
பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்;
தூசும் துகிரும் ஆரமும் அகிலும்”

அ) இவ்வடிகள் இடம்பெற்ற நூல் எது?
சிலப்பதிகாரம்

ஆ) இப்பாடலில் அமைந்துள்ள மோனையை எடுத்து எழுதுக.
அடிமோனை   பகர்வனர்
பட்டினும்

இ) இப்பாடலில் அமைந்துள்ள எதுகைச் சொற்களை அடிக்கோடிடுக.
பகர்வனர் – நகரவீதியும், பட்டினும் – கட்டு

ஈ) காருகர் பொருள் தருக.
நெய்பவர்

உ) இப்பாடலில் காணப்படும் நறுமணப்பொருள்கள் யாவை?
சந்தனம், ஏலம், அகில்

### கூடுதல் வினாக்கள்:

2. இளங்கோவடிகள் – குறிப்பு வரைக.

- இளங்கோவடிகள் சேர மரபினர்.
- இளங்கோவடிகளின் தந்தை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தாய் – நற்சோணை.
- இவர் தம் தமையன் சேரன் செங்குட்டுவன்.
- இளையவரான இளங்கோவே நாடாள்வார் என்று கணியன் கூறிய கருத்தைப் பொய்ப்பிக்கும் பொருட்டு, இளங்கோ இளமையிலேயே துறவு பூண்டு குணவாயிற் கோட்டத்தில் தங்கினார். இளங்கோவடிகள் அரசியல் வேறுபாடு கருதாதவர்.
- சமய வேறுபாடற்ற துறவி.
- இவர் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
- இளங்கோவடிகளின் சிறப்புணர்ந்த பாரதியார், ‘யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதெனில் யாங்கனுமே கண்டதில்லை; உண்மை வெறும் புகழ்ச்சியில்லை’’ எனப் புகழ்கிறார்.

3. சிலப்பதிகாரம் – குறிப்பு வரைக.

- சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம்.
- கண்ணகியின் சிலம்பில் விளைந்த கதையை முதன்மையாகக் கொண்டது ஆதலின், சிலப்பதிகாரமாயிற்று.
- சிலப்பதிகாரம் புகார்காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக்காண்டம் என்னும் முப்பெருங் காண்டங்களையும், முப்பது காதைகளையும் உடையது.
- புகார்க் காண்டம் பத்து காதைகளையும், மதுரைக் காண்டம் பதின்மூன்று காதைகளையும், வஞ்சிக் காண்டம் ஏழு காதைகளையும் கொண்டுள்ளது.

- முதற்காப்பியம், முத்தமிழ்க் காப்பியம், குடிமக்கள் காப்பியம், ஒற்றுமைக் காப்பியம், நாடகக் காப்பியம் எனச் சிலப்பதிகாரத்தைப் போற்றி புகழ்வர். இஃது உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் எனவும் வழங்கப் பெறும்.
- காலத்தாலும், கதைத் தொடர்பாலும், பாவகையாலும் ஒன்றுபட்ட சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் இரட்டைக் காப்பியம் என வழங்குவர்.

4. மருவூர்ப்பாக்கத்தில் வாழ்ந்தவர்களை விளக்குக.

- மருவூர்ப்பாக்கத்தில் பட்டு, பருத்தி நூல், முடி இவற்றினைக் கொண்டு அழகாகப் பின்னிக் கட்டும் கைத்தொழிலில் வல்லுநரான நெசவாளர்கள் அங்கு வாழ்ந்தனர்
- வெண்கலம், செப்புப் பாத்திரங்கள் செய்வோர், மரத்தச்சர், இரும்புக் கொல்லர், ஓவியர், மண் பொம்மைகள் செய்பவர், சிற்பிகள், பொற்கொல்லர், இரத்தின வேலை செய்பவர், தையற்காரர், தோல் பொருள் தைப்பவர், துணியாலும் கட்டைகளாலும் பொம்மைகள் செய்பவர் போன்ற கைத்தொழில் பல செய்யும் மக்கள் வாழும் பகுதிகள் மருவூர்ப்பாக்கத்தில் நிறைந்துள்ளனர்.
- இசைத்துச் சிறந்த திறமையைக் காட்டும் பெரும்பாணர்களின் இருப்பிடங்களும், உள்ளன.

5. சிலப்பதிகாரப் பாடலில் கூறப்படும் இசை பற்றிய செய்திகளைக் கூறுக.

சிலப்பதிகாரப் பாடலில் மருவூர்ப்பாக்கத்தில் குழலிலும், யாழிலும், குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு இசைகளைக் (ஸ, ரி, க, ப, த, நி என்னும் ஏழு சுரங்கள்) குற்றமில்லாமல் இசைத்துச் சிறந்த திறமையைக் காட்டும் பெரும்பாணர்களின் இருப்பிடங்கள் உள்ளன என்று கூறப்பட்டுள்ளது.

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. சிலப்பதிகார மருவூர்ப்பாக்க வணிக வீதிகளை இக்கால வணிக வளாகங்களோடும், அங்காடிகளோடும் ஒப்பிட்டு எழுதுக. PTA

**முன்னுரை:**

வணிக வளாகம் என்பது வணிகம் நடைபெறுவதற்காகக் கட்டமைக்கப்பட்ட இடம். விற்பதும், விற்கும் பொருளை வாங்குவதும் இங்கு நடைபெறும். முற்காலத்தில் வணிக வீதிகளில் பல்வேறு வணிகங்கள் நடைபெற்றன.

**வணிக விளம்பரம்:**

சிலப்பதிகார மருவூர்ப்பாக்கத்தில் நடைபெறும் வணிகத்திற்கு விளம்பரம் கிடையாது. மக்கள் அமர்ந்து வீதிகளில் செய்யும் வணிகமே விளம்பரமாக செயல்பட்டது. ஆனால் தற்போதுள்ள வணிக வளாகங்கள் செய்தித்தாள், தொலைக்காட்சி, துண்டுப் பிரசுரம் ஆகிய ஊடகங்கள் மூலம் விளம்பரம் செய்கின்றனர்.

**பண்டமாற்று முறை:**

மருவூர்ப்பாக்கத்தில் நடைபெறும் வணிகத்தில் ஒரு பொருளுக்கு இணையாக மற்ற பொருளைக் கொடுத்து பண்டமாற்றம் செய்தனர்.

ஆனால் தற்போதுள்ள வணிக வளாகம் மற்றும் அங்காடிகளில் ஒரு பொருள் வாங்குவதற்கு சில இலவசப் பொருள்களை விநியோகிக்கின்றனர்.

**உணவகங்கள்:**

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள தெருக்களில் பிட்டு வணிகம் செய்தலும், அப்பம் சுட்டு விற்பனை செய்தலும் போன்ற உணவகங்கள் செய்யப்பட்டன.

ஆனால் தற்போதுள்ள வணிக வளாகம் மற்றும் அங்காடிகளிலும் உணவகங்களுக்கென்று ஒரு அறையே உள்ளது. அங்கு பலவிதமான உணவுப் பொருள்கள் விற்பனையாகின.

**வணிக வளாகக் கட்டிடங்கள்:**

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள வணிகங்கள் தெருக்களிலே காற்றோட்டமான சூழலில் நடைபெறுகின்றன.

ஆனால் தற்போதுள்ள வணிக வளாகங்கள் வானுயர் கட்டிடங்களாக விஸ்வரூபம் எடுத்துள்ளன.

**வணிகங்களில் பொழுதுபோக்கு:**

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள வணிக வீதிகளில் பாணன், பாடினி முதலியோர்களின் தெருக்கூத்துக்கள் அங்கு வரும் மக்களுக்கு பொழுது போக்காக நடைபெற்றது.

ஆனால் தற்போது வணிக வளாகங்கள் 24 மணி நேரமும் செயல்படுகிறது. மக்களின் பொழுது போக்கிற்காக திரையரங்குகளும் அங்கேயே செயல்படுகிறது.

**வணிகத்துடன் விளையாட்டரங்கம்:**

மருவூர்ப்பாக்கத்தின் வீதிகளில் மண் பொம்மைகள் செய்வோர், துணியாலும் கட்டைகளாலும் பொம்மைகள் செய்பவர் ஆங்காங்கே பொம்மை செய்ததால் குழந்தைகளின் விளையாட்டரங்கமாக மாறிற்று.

தற்போது வணிக வளாகத்திலும் குழந்தைகள் மற்றும் பெரியோர்களுக்கு விளையாட்டரங்கம் செயல்படுகிறது.

**முடிவுரை:**

மருவூர்ப்பாக்கத்தின் வணிகத்தை முன் மாதிரியாகக் கொண்டு, பல வணிக வளாகங்கள் தற்போது செயல்படுகின்றன.

## கூடுதல் வினா:

**2. சிலப்பதிகார மருவூர்ப்பாக்கத்தில் நடைபெற்ற வணிகங்கள் பற்றி விளக்குக.**

**முன்னுரை:**

'எங்கும் வணிகம் எதிலும் வணிகம்' பண்டைக் காலந்தொட்டே வாணிகமும் தொழிலும் ஒழுங்கு முறையுடன் சிறந்திருந்ததை மருவூர்ப்பாக்கம் வணிகம் மூலம் அறியலாம்.

**அழகிய பொருள்கள் விற்பனை:**

'புகார் நகர மருவூர்ப்பாக்கத்தின் வணிக வீதிகளில் வண்ணக்குழம்பு, சுண்ணப்பொடி, குளிர்ந்த மணச் சாந்து, பூ, நறுமணப் புகைப் பொருள்கள், அகில் முதலான மணப் பொருள்கள் விற்பவர்கள் வீதிகளில் வணிகம் செய்து கொண்டிருந்தனர்.

பட்டு, பருத்தி நூல், முடி இவற்றினைக் கொண்டு அழகாகப் பின்னிக் கட்டு கைத்தொழில் வல்லுநரான நெசவாளர் வாழும் வீதிகளும் இருந்தன.

**விலை மிகுந்த பொருட்கள் விற்பனை:**

பட்டும், பவளமும், சந்தனமும், அகிலும், முத்தும், மணியும், பொன்னும் அளக்க முடியாத அளவிற்குக் குவிந்து கிடக்கும் வளம் நிறைந்த வணிக வீதிகளும் இருந்தன.

**தானிய விற்பனை:**

எட்டு வகைத் தானியங்களும் குவிந்து கிடக்கும் கூலக்கடைத் தெருக்களும் இருந்தன.

**உணவுப் பொருட்கள் விற்பனை:**

- மருவூர்ப்பாக்கத்தின் தெருக்களில் பட்டு வணிகம் செய்பவரும், அப்பம் சுடுபவரும், கள் விற்கும் வலைச்சியரும், மீன் விற்கும் பரதவரும் உள்ளனர்.
- மேலும் வெண்மையான உப்பு விற்கும் உமணரும், வெற்றிலை விற்பவரும், ஏலம் முதலான ஐந்து நறுமணப் பொருள் விற்பவரும், பல வகையான இறைச்சிகள் விற்பவரும், எண்ணெய் வணிகரும் இங்கு வணிகம் செய்தனர்.

**கைத்தொழில் வணிகம்:**

- வெண்கலம், செப்புப் பாத்திரங்கள் செய்வோர், மரத்தச்சர், இரும்பு கொல்லர், ஓவியர், மண் பொம்மைகள் செய்பவர், சிற்பிகள் ஆகியோர் உள்ளனர்.
- பொற்கொல்லர், இரத்தின வேலை செய்பவர், தையற்காரர், தோல் பொருள் தைப்பவர், துணியாலும் கட்டைகளாலும் பொம்மைகள் செய்பவர் ஆகியோர் இருந்தனர்

- இவ்வாறாகப் பழுதின்றிக் கைத்தொழில் பல செய்யும் மக்கள் வாழும் பகுதிகள் இங்கு நிறைந்திருந்தன.

**இசைக்கலை:**

குழலிலும், யாழிலும் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு இசைகளைக் குற்றமில்லாமல் இசைத்துச் சிறந்த திறமையைக் காட்டும் பெரும்பாணர்களின் இருப்பிடங்களும் இருந்தன.

**முடிவுரை:**

மருவூர்ப்பாக்கத்தில் அனைத்து தொழில்களும் குற்றமின்றிச் சிறப்புடன் அமைந்து விளங்கியது.

## கற்பவை கற்றபின்

1. சிலப்பதிகாரக் கதைச் சுருக்கத்தை அறிந்து வந்து வகுப்பறையில் கூறுக:

**மாநாய்கன்:**

காவிரிப்பூம்பட்டினத்துப் பெருவணிகன் மாசாத்துவானின் மகன் கோவலன். இவன் கலையுணர்வும், வறியோர்க்கு உதவும் நற்பண்பும் மிக்கவன். காவிரிப்பூம்பட்டினத்து பெருவணிகன் மாநாய்கனின் மகள் கண்ணகி. இவள் திருமகள் போன்ற அழகும், பெண்கள் போற்றும் பெருங்குணச் சிறப்பும், கற்புத்திறனும் மிக்கவள். இவ்விருவரும் மனையறம் பூண்டு இன்புற்று வாழ்ந்தனர்.

கோவலன் ஆடலரசி மாதவியை விரும்பியதால், கண்ணகியை விட்டுப் பிரிந்தான். அவன், மாதவி இல்லத்திலேயே தங்கித் தன் செல்வத்தையெல்லாம் இழந்தான். மாதவி இந்திரவிழாவில் கானல்வரிப் பாடலைப் பாடினாள். பாடலின் பொருளைத் தவறாகப் புரிந்துகொண்ட கோவலன், மாதவியைப் விட்டுப் பிரிந்தான். பிரிந்தவன், தன் மனைவி கண்ணகியிடம் சென்றான். அவன், தான் இழந்த செல்வத்தை ஈட்ட எண்ணினான்.

வாணிகம் செய்தற் பொருட்டுக் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்றான். அவர்களுக்கு வழித்துணையாகக் கவுந்தியடிகள் என்னும் சமணத்துறவி சென்றார். அவர் மதுரை நகர்ப்புறத்தில் மாதரி என்னும் இடையர்குல மூதாட்டியிடம் அவ்விருவரையும் அடைக்கலப்படுத்தினார். கோவலன் சிலம்பு விற்றுவர மதுரைநகரக் கடைவீதிக்குச் சென்றான். விலைமதிப்பற்ற காற்சிலம்பு ஒன்றனைக் கோவலன் விற்பதனைப் பாண்டிய மன்னனின் பொற்கொல்லன் அறிந்தான்.

பாண்டிமாதேவியின் காற்சிலம்பைக் களவாடிய பொற்கொல்லன், பொய்யான பழியைக் கோவலன் மேல் சுமத்தினான். அதனை ஆராய்ந்து பாராத மன்னன் 'அவனைக் கொன்று சிலம்பைக் கொணர்க' என்று ஆணையிட்டான். கோவலன் கொலை செய்யப்பட்ட செய்தியை மாதரி மூலம் அறிந்த கண்ணகி பெருந்துயருற்றாள். அவள், 'தன் கணவன் கள்வன் அல்லன்', என்பதனை மன்னனுக்கும், உலகோர்க்கும் உணர்த்த எண்ணினாள். பாண்டிய மன்னன் அவைக்குச் சென்று வழக்குரைத்தாள்.

2. சிலப்பதிகாரம் காட்டும் மருவூர்ப்பக்கம் பற்றி விவரிப்பை இன்றைய கடைத் தெருவுடன் ஒப்பிட்டு உரையாடுக:

மருவூர்ப்பாக்கத்தில் கடை வீதிகளில் உள்ளது போல் இன்றைய கடைத் தெருவுடன் நடைபாதைகளாக உள்ளன.

அன்றைய நாள்களில் தெருக்களில் அனைத்துப் பொருள்களும் விற்பனை செய்தது போல் நடுத்தர மக்களுக்கும் கடைத்தெருக்கள் வசதியாக உள்ளன.

கடைத் தெருக்களில் உள்ள பொருள்கள் மிகக்குறைந்த விலையில் கிடைக்கும். மருவூர்ப்பாக்கத்திலும் பொருள்கள் குறைந்த விலையிலும், பண்டமாற்று முறையிலும் நடந்தது.

மருவூர்ப்பாக்கத்தில் உள்ள கடைவீதிகள் நாளங்காடிகள் போல் செயல்பட்டன. தற்போது பல அங்காடிகள் உருவாகியுள்ளது.





# 5. மங்கையராய் பிறப்பதற்கே

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. நிகழ்வுகளைத் தொகுத்து அறிக்கை எழுதுக. PTA

**மகளிர்நாள் விழா**

இடம் : பள்ளி கலையரங்கம். நாள் : 08.03.20XX

கலையரங்கத்தில் ஆசிரியர்கள், மாணவர்கள் கூடுதல் – தலைமையாசிரியரின் வரவேற்பு – இதழாளர் கலையரசியின் சிறப்புரை – ஆசிரியர்களின் வாழ்த்துரை – மாணவத் தலைவரின் நன்றியுரை.

திருவாரூர், 8 மார்ச்

மார்ச் 8, 2019 திருவாரூரில் உள்ள தியாகராயர் பள்ளிக் கலையரங்கத்தில் மகளிர் நாள் விழா கொண்டாடப்பட்டது. காலை 9.00 மணி அளவில் தொடங்கிய இவ்விழாவிற்கு பள்ளி ஆசிரியர்கள், மாணவர்கள் பலர் கலந்து கொண்டனர். இப்பள்ளியின் தலைமையாசிரியர் திரு. வள்ளிநாயகம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார்.

சிறப்பு விருந்தினராக வந்திருந்த இதழாளர் திருமதி.கலையரசி அவர்கள் மகளிருக்கான உரிமைகள் பற்றியும் சமுதாயத்தில் முன்னேறியுள்ள சில மாதரசிகளைப் பற்றியும் சிறப்புரை ஆற்றினார். பள்ளி மாணவர்கள் பல கலை நிகழ்ச்சிகள் நடத்தினர். தமிழ் ஆசிரியர் திருமதி.பாலா அவர்கள் சிறப்பு விருந்தினரையும், ஆசிரியர்களையும் வாழ்த்திப் பேசினார். பின்பு பள்ளியின் மாணவர் தலைவர் காமேஷ் நன்றியுரை கூறினார். நிகழ்ச்சி காலை 11 மணியளவில், நாட்டுப்பண் முழங்க இனிதே நிறைவடைந்தது.

### கூடுதல் வினாக்கள்:

2. இசைப் பேரரசி' எம்.எஸ்.சுப்புலட்சுமி பற்றிக் கட்டுரை வடிவில் எழுதுக.

**முன்னுரை:**

தமிழரின் பெருமையை ஐ.நா. சபையில் தமிழ்நாட்டின் செவ்வியல் இசையைப் பாடிய எம்.எஸ் .சுப்புலட்சுமி பற்றிக் கட்டுரை வடிவில் காண்போம்.

**இளமைக்காலம்:**

எம்.எஸ்.சுப்புலட்சுமியின் முழுப் பெயர் மதுரை சண்முகவடிவு சுப்புலட்சுமி. இவர் குடும்பத்தின் காரணமாக இசைச் சூழலில் வளர்ந்தார். அவரது தாய் முதல் குரு ஆவார். அவர் ஒரு வீணை இசைக்கலைஞர். பத்து வயதிலே இசைத்தட்டுக்காகப் பாடலைப் பதிவு செய்தார். பல்வேறு இசை மேதைகளின் வழிகாட்டுதல் அவருக்குக் கிட்டியது.

**திரைப்படங்களில் கிடைத்த வாய்ப்பு:**

எம்.எஸ்.சுப்புலட்சுமி ஐந்தாம் வகுப்பு வரை தான் கல்வி பயின்றார். பதினேழு வயதில் சென்னை மியூசிக் அகாதெமியில் மேதைகள் பலர் முன்பு கச்சேரி செய்து பாராட்டைப் பெற்றார். பல திரைப்படங்களில் நடித்தார். அவர் நடித்த மீரா திரைப்படம் மிகப்பெரிய வெற்றியை ஈட்டியது. அது அவருடைய கடைசித் திரைப்படமாகும். இதனால் இந்தியா முழுவதிலும் பலரின் பாராட்டுக்களைப் பெற்றார்.

காற்றினிலே வரும் கீதம், பிருந்தாவனத்தில் கண்ணன் முதலிய பாடல்களுக்கு மிகப்பெரிய வரவேற்பு அவருக்குக் கிடைத்தது. ஜவஹர்லால் நேரு, சரோஜினி நாயுடு போன்ற பெரியோர் அவரைப் பெருமைப்படுத்தினர்.

**காந்தியைச் சந்தித்தல்:**

எம்.எஸ்.சுப்புலட்சுமி ஒருமுறை காந்தியடிகளைத் தில்லியில் சந்தித்தபோது 'இரகுபதி இராகவ இராஜாராம்' என்ற பாடலைப் பாடினார். காந்தி, மீரா எழுதிய பாடல்களையும் பாடச்சொன்னார். சென்னை வானொலியில், 1947 இல் காந்தியடிகளின் பிறந்த நாளன்று 'ஹரி தும் ஹரோ' என்னும் மீரா பஜன் பாடலைப் பாடி யாவரையும் மகிழ்விக்கச் செய்தார்.

**பெற்ற பட்டங்கள்:**

1954 இல் இவர் 'தாமரையணி விருது' பெற்ற போது இவரைத் தொட்டுத் தடவிப் பார்த்துப் பாராட்டினார் பார்வையற்றவரான ஹெலன் கெல்லர். 1963 இல் இங்கிலாந்திலும், 1966 இல் ஐ.நா. அவையிலும் பாடினார்.

1974 இல் நோபல் பரிசுக்கு இணையான 'மகசேசே' விருது இவருக்குக் கிடைத்தது. இது இவருக்குக் கிடைத்த இசை மகுடமாகும். இந்தியாவின் மிக உயரிய விருதான 'இந்திய மாமணி' விருது இவருக்குக் கிடைத்தது.

**பலமொழிகளிலும் பாடியுள்ளார்:**

இவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தி, மராத்தி, குஜராத்தி ஆகிய இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் கூடப் பாடியுள்ளார்.

**முடிவுரை:**

ஒரு பெண் நினைத்தால், எதையும் சாதிக்கலாம். முயன்றால் முன்னேறலாம், வெல்லலாம் என்பதற்கு எம்.எஸ்.சுப்புலட்சுமியே சான்றாகத் திகழ்கிறார் என்பதில் ஐயம் ஒன்றுமில்லை.

3. சமுதாயத்தில் உழைத்த மகளிர் பற்றிக் கட்டுரை வடிவில் எழுதுக.

**முன்னுரை:**

விடுதலைக்காக, சமுதாயக் கொள்கைகளுக்காக, மூடநம்பிக்கைகளுக்காக – இப்படி எண்ணற்ற கொடுமைகளுக்காக போராட்டம் நடத்திய தியாகிகள் பலர். அவர்களில் பெண்களும் தம்மால் முடிந்த செயல்களைச் செய்துள்ளார்கள். பாரதத்திற்குப் பெருமை சேர்த்துள்ளார்கள். சில பெண்கள் 'முயன்றால் வெல்லலாம்' என்பதை மனதிற் கொண்டு சமுதாயத்தில் பல சாதனைகளைப் புரிந்துள்ளனர். அவர்களில் ஒரு சிலரைப் பற்றி இங்கு காண்போம்.

**எம்.எஸ்.சுப்புலட்சுமி:**

இசைச் சூழலில் வளர்ந்த எம்.எஸ்.சுப்புலட்சுமி இசை மேதை ஆனார். பதினேழு வயதில் கச்சேரியில் பாடி பலரின் பாராட்டைப் பெற்றார். மீரா என்ற திரைப்படத்தில் நடித்ததால் இந்தியா முழுவதும் பாராட்டு இவருக்குக் கிடைத்தது. காந்தியடிகளின் முன் 'இரகுபதி இராகவ இராஜாராம்' என்ற பாடலைப் பாடினார். சென்னை வானொலியில் 1947 இல் காந்தியடிகளின் பிறந்த நாளன்று 'ஹரிதும் ஹரோ' என்னும் மீரா பஜன் பாடலைப் பாடினார்.

1954 இல் இவருக்கு தாமரையணி விருதும், 1974 இல் மகசேசே விருதும், இந்திய மாமணி விருதும் கிடைத்தது. இந்தி, தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம், மலையாளம், இந்தி, குஜராத்தி ஆகிய இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும் கூடப் பாடியுள்ளார்.

**மோகனா (பாலசரஸ்வதி):**

இவர் பரதநாட்டியத்தில் சிறப்புப் பெற்றவர். இவர் பதினைந்து வயதில் சென்னையில் உள்ள சங்கீத சமாஜம் என்னும் அரங்கில் தனது நடன நிகழ்ச்சியை நடத்தினார். கல்கத்தாவிலும், காசியில் நடந்த அனைத்திந்திய இசை மாநாட்டிலும், சென்னையில் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் கண்காட்சியிலும் நம் நாட்டுப் பண்ணாகிய 'ஜனகணமன' பாடலுக்கு மெய்ப்பாடுகளோடு ஆடினார். ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் நடன நிகழ்ச்சிகள் நடத்தியுள்ளார்.

**வளர்மதி (இராஜம் கிருஷ்ணன்):**

இவர் சமூகத்தில் எழுந்த சிக்கல்களைப் பற்றி கதைகளாகவும், புதினங்களாகவும் எழுதக்கூடிய ஆற்றல் பெற்றவர். இவர் 'பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி' என்னும் வரலாற்றுப் புதினம் ஒன்றை எழுதி வெளியிட்டார். தூத்துக்குடி உப்பளத் தொழிலாளர்களின் வாழ்க்கையை 'கரிப்பு மணிகள்' என்னும் புதினமாக வடிவமைத்தார். படுகர் இனமக்களின் வாழ்வியலை 'குறிஞ்சித் தேன்' என்னும் புதினமாகவும், கடலோர மீனவர்களின் சிக்கல்களை 'அலைவாய்க்கரையில்' என்னும் புதினமாகவும், வேளாண் தொழிலாளர்களின் உழைப்பு சுரண்டலை 'சேற்றில் மனிதர்கள்', வேருக்கு நீர்' என்னும் புதினங்களாகவும் எழுதியுள்ளார்.

**அன்பரசி (கிருஷ்ணம்மாள் ஜெகந்நாதன்):**

இவர் காந்தி நடத்திய ஒத்துழையாமை இயக்கம், சட்ட மறுப்பு இயக்கம், வெள்ளையனே வெளியேறு இயக்கம் ஆகியவற்றில் பங்கு பெற்றவர். 'உழுபவருக்கே நில உரிமை இயக்கம்' எனத் தொடங்கி வேளாண்மை இல்லாத காலத்திலும் உழவருக்கு வேறு பணிகள் மூலம் வருமானம் வர ஏற்பாடு செய்தார்.

**மாதவி (சின்னப்பிள்ளை):**

இவர் மகளிரின் வாழ்வு மேம்பாட்டுக்காகப் பாடுபட்டார். எல்லாப் பெண்களோடும் இணைந்து வேலை செய்து கூலியை எல்லாருக்கும் சரிசமமாகப் பங்கிட்டவர். வயதானவர்களுக்கும், மாற்றுத்திறனாளிகளுக்கும் அவரவர் திறமைக்கு ஏற்ற வேலை கொடுத்து அவர்களின் குடும்பங்களுக்கும் உதவியாக இருந்தார். நம் இந்திய நாட்டு நடுவண் முதன்மை அமைச்சராக இருந்த மாண்புமிகு. வாஜ்பாயிடம் 'பெண் ஆற்றல்' விருதையும், தமிழக அரசின் 'ஔவை' விருதையும், தூர்தர்ஷனின் 'பொதிகை' விருதையும் பெற்றவர்.

**முடிவுரை:**

இந்திய சமுதாயத்தில் பல பெண்கள் தங்களது முயற்சியையும் திறமையையும் கொண்டு சாதித்துள்ளனர் என்பதற்கு இவர்களே எடுத்துக்காட்டுகளாகும்.

## கற்பவை கற்றபின்

உங்கள் ஊரில் கடின உழைப்பாளர் – சிறப்பு மிக்கவர் – போற்றத் தக்கவர் – என்ற நிலைகளில் நீங்கள் கருதுகின்ற பெண்கள் தொடர்பான செய்திகளைத் தொகுத்து வழங்குக.

**மனோன்மணி:**

இவரது ஊர் திருநெல்வேலி மாவட்டம், தென்பத்து கிராமம். நெல் சாகுபடியில் இவர் சாதனை படைத்ததால் தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகச் சார்பில் 2004–ஆம் அண்டு 'வேளாண்மைச் செம்மல் விருது' கிடைத்தது. கூட்டுப் பண்ணையம் என்ற புதிய திட்டத்தை செயல்படுத்தி, விவசாயிகளின் உற்பத்திப் பொருள்களை மதிப்புக் கூட்டி விற்பனை செய்ய நவீன அரிசி ஆலை அமைக்க வேண்டும் என்ற நோக்கத்தை நிறைவேற்றினார்.

**வெ.ஜெயபாரதி:**

இவர் சிறு வயதில் இருந்தே இயற்கையை விரும்பி நேசித்துள்ளார். பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி மூலம் களக்காடு முண்டந்துறை புலிகள் காப்பகத்திற்குட்பட்ட கடையம் வனப்பகுதியில் வன மூலிகைகள் குறித்து ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றார். வனங்கள் குறித்து மாணவ, மாணவிகளிடம் விழிப்புணர்வு ஏற்படுத்தி வந்தார். அவருக்கு தினமணி நாளிதழ் 'மகளிர் மணி' சாதனையாளர் விருது அளித்து கௌரவப்படுத்தியது.



இயல் - 7

இலக்கணம்

நாகரிகம், தொழில், வணிகம், நாடு, சமூகம், அரசு, நிர்வாகம்-விதைநெல்

# 6. புறப்பொருள் இலக்கணம்

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. இரு நாட்டு அரசர்களும் தும்பைப் பூவைச் சூடிப் போரிடுவதன் காரணம் ________.
   அ) நாட்டைக் கைப்பற்றல் ஆ) ஆநிரை கவர்தல்
   இ) வலிமையை நிலைநாட்டல் ஈ) கோட்டையை முற்றுகையிடல்
   விடை: இ) வலிமையை நிலைநாட்டல்

**கூடுதல் வினாக்கள்:**

2. நிரைகவர்தல் என்பது ________ திணை.
   அ) கரந்தை ஆ) வெட்சி இ) உழிஞை ஈ) நொச்சி
   விடை: ஆ) வெட்சி

3. மண்ணாசை கருதிப் போருக்குச் செல்வது ________ திணை.
   அ) வஞ்சி ஆ) காஞ்சி இ) வாகை ஈ) தும்பை
   விடை: அ) வஞ்சி

4. மாற்றரசனின் கோட்டையைக் கைப்பற்ற தன் வீரர்களுடன் கோட்டை வெளியே சுற்றி வளைத்தல் ________ திணை.
   அ) நொச்சி ஆ) உழிஞை இ) தும்பை ஈ) வெட்சி
   விடை: ஆ) உழிஞை

5. வெட்சி முதல் பாடாண் வரை கூறப்பட்டதையும், கூறப்படாததையும் கூறுவது ________ திணை.
   அ) கைக்கிளை ஆ) பெருந்திணை இ) பொதுவியல் ஈ) நொச்சி
   விடை: ஆ) பொதுவியல்

6. ஒரு தலைக்காமம் என்பது ________.
   அ) அன்பின் ஐந்திணை ஆ) கைக்கிளை
   இ) பெருந்திணை ஈ) பொதுவியல்
   விடை: ஆ) கைக்கிளை

7. பாடாண் திணை என்பது ________.
   அ) ஆண் மகனின் ஒழுகலாறுகள் ஆ) பெண்மகளின் ஒழுகலாறுகள்
   இ) போரின் தன்மைகள் ஈ) களவொழுக்கம்
   விடை: அ) ஆண் மகனின் ஒழுகலாறுகள்

## குறுவினாக்கள்

**பாடநூல் வினா:**

1. புறத்திணைகளில் எதிரெதிர்த் திணைகளை அட்டவணைப்படுத்துக. PTA

   1. வெட்சி – கரந்தை
   2. வஞ்சி – காஞ்சி
   3. நொச்சி – உழிஞை
   4. தும்பை – வாகை
   5. பாடாண் – பொதுவியல்
   6. கைக்கிளை – பெருந்திணை

## கூடுதல் வினாக்கள்:

2. புறத்திணை என்பது யாது?

- வாழ்க்கைக்குத் துணைபுரியும் கல்வி, செல்வம், புகழ், வீரம், அரசியல் முதலிய பொருள்களைப் பற்றிக் காணுவது புறப்பொருள்.
- புறம் பற்றிய நெறிகளைக் காணுவது புறத்திணையாகும்.

3. புறத்திணை எத்தனை வகைப்படும்? அவை யாவை?

புறத்திணை பன்னிரண்டு வகைப்படும். அவை வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை.

4. மதில் போர் பற்றிய திணைகள் யாவை?

நொச்சித்திணை, உழிஞைத்திணை ஆகியவை மதில் போர் பற்றிய திணைகள் ஆகும்.

5. வெட்சித்திணை என்பது யாது?

பகை நாட்டின் மீது போர் தொடங்கு முன், அந்நாட்டிலுள்ள பசுக்கூட்டங்களுக்கு தீங்கு வரக் கூடாது எனக் கருதும் மன்னன், தன் வீரர்களை அனுப்பி அவற்றை வெட்சிப் பூவைச் சூடிக் கவர்ந்து வரச் செய்வது வெட்சித்திணையாகும்.

6. கரந்தைத் திணை என்பது யாது?

வெட்சி வீரர்களால் கவர்ந்து செல்லப்பட்ட தம் ஆநிரைகளைக் கரந்தைப் பூவைச் சூடிச் சென்று மீட்பது, கரந்தை திணையாகும்.

7. வஞ்சித்திணை என்பது யாது?

மண்ணாசை காரணமாக, பகைவர் நாட்டைக் கைப்பற்றக் கருதி வஞ்சிப்பூவைச் சூடி போருக்குச் செல்வது வஞ்சித் திணையாகும்.

8. காஞ்சித்திணை என்பது யாது?

தன் நாட்டைக் கைப்பற்ற வந்த மாற்றரசனோடு காஞ்சிப்பூவைச் சூடி எதிர்த்துப் போரிடல் காஞ்சித்திணையாகும்.

9. நொச்சித்திணை என்பது யாது?

பகையரசனால் முற்றுகையிடப்பட்டிருந்த தம் கோட்டையைக் காத்தல் வேண்டிக் உள்ளிருந்தே வெளியே இருக்கும் பகையரசனோடு நொச்சிப்பூவைச் சூடி போரிட்டு அம்மதிலைக் காப்பது நொச்சித்திணையாகும்.

10. உழிஞைத்திணை என்பது யாது?

உழிஞைப் பூவைச் சூடி தன் வீரர்களுடன் மாற்றரசன் கோட்டைக்குள் புகுந்து மதிலைச் சுற்றி வளைத்தல் உழிஞைத் திணையாகும்.

11. தும்பைத்திணை என்பது யாது? (அ) பகைவேந்தர் இருவரும் வலிமையே பெரிது என்பதை நிலைநாட்ட, போரிடும் திணை குறித்து எழுதுக. PTA

பகைவேந்தர் இருவரும் வெற்றி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தம் வீரர்களுடன் போரிடுவது தும்பைத் திணையாகும். இவ்வீரர்கள் தும்பைப்பூவைச் சூடிப் போரிடுவர்.

12. வாகைத்திணை என்பது யாது?

வெற்றி பெற்ற மன்னன் வாகைப்பூவைச் சூடி மகிழ்வது வாகைத் திணையாகும்

13. பாடாண்திணை என்பது யாது?

பாடுவதற்குத் தகுதியுடைய ஓர் ஆண்மகனின் கல்வி, வீரம், செல்வம், புகழ், கருணை முதலியவற்றைப் போற்றிப்பாடுவது பாடாண் திணையாகும்.

14. பொதுவியல் திணை என்பது யாது?

வெட்சி முதல் பாடாண் வரை உள்ள புறத்திணைகளின் பொதுவானவற்றையும் அவற்றுள் கூறப்படாதவற்றையும் கூறுவது பொதுவியல் திணை எனப்படும்.

15. கைக்கிளை என்பது யாது?

கைக்கிளை என்பது ஒரு தலைக்காமம். இஃது ஆண்பால் கூற்று, பெண்பால் கூற்று என இரு வகைப்படும்.

16. பெருந்திணை என்பது யாது?

பெருந்திணை என்பது பொருந்தாக்காமம். இஃது ஆண்பால் கூற்று, பெண்பால் கூற்று என இருவகைப்படும்

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. அவந்தி நாட்டு மன்னன் மருதநாட்டு மன்னனுடன் போர் புரிந்து அந்நாட்டைக் கைப்பற்ற நினைக்கிறான். அப்போர் நிகழ்வைப் புறப்பொருள் வெண்பாமாலை கூறும் இலக்கணத்தின் வழி விளக்குக. PTA

**வெட்சித்திணை**

அவந்தி நாட்டு மன்னன் போர் தொடங்கும் முன் பசுக்கூட்டங்களுக்குத் தீங்கு வரக்கூடாது என நினைத்து தன் வீரர்களை அனுப்பி அவற்றை வெட்சிப்பூவைச் சூடி கவர்ந்து வரச் செய்வான்.

**கரந்தைத்திணை**

அவந்தி நாட்டு வீரர்களால் கவரப்பட்ட தம் ஆநிரைகளை மருத நாட்டு வீரர்கள் கரந்தைப் பூவைச் சூடி மீட்பர்.

**வஞ்சித்திணை**

மண்ணாசை காரணமாக அவந்தி நாட்டு மன்னன் மருத நாட்டைக் கைப்பற்ற போருக்கு செல்வர். வீரர்கள் வஞ்சிப்பூவைச் சூடுவர்.

**காஞ்சித்திணை**

தன் நாட்டைக் கைப்பற்ற வந்த அவந்தி நாட்டு மன்னனோடு எதிர்த்துப் போரிடுவர். வீரர்கள் காஞ்சிப்பூவைச் சூடுவர்.

**நொச்சித்திணை**

அவந்தி நாட்டு மன்னனால் முற்றுகையிடப்பட்ட தம் மதிலைக் காத்தல் வேண்டி உள்ளிருந்தே, வெளியே இருக்கும் பகையரசனோடு போரிட்டு அம்மதிலைக் காத்தல். வீரர்கள் நொச்சிப் பூவைச் சூடுவர்.

**உழிஞைத்திணை**

அவந்தி நாட்டு மன்னன் தன் வீரர்களுடன் மாற்றரசன் கோட்டைக்குள் புகுந்து மதிலைச் சுற்றி வளைப்பர். வீரர்கள் உழிஞைப் பூவைச் சூடுவர்.

**தும்பைத்திணை**

அவந்தி நாட்டு வீரர்களும், மருத நாட்டு வீரர்களும் தும்பைப் பூவைச் சூடி போரிடுவர்.

**வாகைத்திணை**

போர்க்களத்தில் வெற்றி பெற்ற மன்னன் வாகைப்பூவைச் சூடி மகிழ்வான்.

## மொழியை ஆள்வோம்

## மொழி பெயர்ப்பு

Among the five geographical divisions of the Tamil country in sangam literature, the Marutam region was the fit for cultivation, as it had the most fertile lands. The prosperity of a farmer depend on getting the necessary sunlight, seasonal rains and the fertility of the soil. Among these elements of nature, sunlight was considered indispensible by the ancient Tamils. PTA

தமிழ் நாட்டில் உள்ள சங்கத்தமிழ் இலக்கியங்களில் ஐந்து புவியியல் பிரிவுகள் உள்ளன. அவற்றுள் மருத நிலமே சாகுபடிக்கு ஏற்ற வளமான நிலப்பரப்பைக் கொண்டது. உழவர்களின் வளமை சூரிய ஒளி, பருவகால மழை, மண்வளம் முதலியவற்றை நம்பியிருந்தது. பழங்காலத் தமிழர்களின் கணிப்புப்படி இந்த அனைத்து இயற்கை உறுப்புகளிலும் சூரிய ஒளியே மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

## பின்வரும் தொடர்களைக் கொண்டு பொருத்தமான தொடர் அமைக்க.

வரப்போகிறேன், இல்லாமல் இருக்கிறது, கொஞ்சம் அதிகம், முன்னுக்குப் பின், மறக்க நினைக்கிறேன்

எ.கா. இன்னும் சிறிது நேரத்தில் வரப் போகிறேன்.

விடை:

இல்லாமல் இருக்கிறது – மனித நேயம் கலியுகத்தில் இல்லாமல் இருக்கிறது.

கொஞ்சம் அதிகம் – தென் பகுதியில் கல்வி கற்றவர்களின் எண்ணிக்கை கொஞ்சம் அதிகம்.

முன்னுக்குப் பின் – காவல் அதிகாரியின் விசாரணையில் திருடன் முன்னுக்குப் பின் பதிலளித்தான்.

மறக்க நினைக்கிறேன் – நடந்த இழிவை மறக்க நினைக்கிறேன்; ஆனாலும் மறக்க முடியவில்லை.

## தொகைச் சொற்களைப் பிரித்து எழுதி, தமிழ் எண்ணுரு தருக.

மூவேந்தர்களால் நாற்றிசையும் போற்றி வளர்க்கப்பட்ட முத்தமிழே, உலக மொழிகளில் உயர்ந்ததென்ற செம்மாந்த கூற்றிற்கு, தமிழ் இலக்கியங்களில் அமைந்துள்ள இருதிணை அமைப்பே காரணமாகும். முப்பாலை முழுமையாகத் தந்த தமிழின் சிறப்பினை ஐந்திணை களில் அழகுற விளக்குபவை சங்க இலக்கியங்கள். நானிலத்தில் பசித்தவர்க்கு அறுசுவை உணவுபோல் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் படிப்பவர்க்கு மனதிற்கினிமை ஈந்து தமிழ்ப்பெருமை சாற்றுகிறது.

- மூவேந்தர்களால் – ௩
- நாற்றிசையும் – ௪
- முத்தமிழே – ௩
- இருதிணை – ௨
- முப்பாலை – ௩
- ஐந்திணை – ௫
- நானிலத்தில் – ௪
- அறுசுவை – ௬
- பத்துப்பாட்டும் – ௰
- எட்டுத்தொகை – ௮

## கடிதம் எழுதுக

1. நாளிதழ் ஒன்றில் பொங்கல் மலரில் 'உழவுத் தொழிலுக்கு வந்தனை செய்வோம்' என்ற உங்கள் கட்டுரையை வெளியிட வேண்டி நாளிதழ் ஆசிரியருக்குக் கடிதம் எழுதுக.

அனுப்புநர்:

அ அ அ
ஆ ஆ ஆ
திருநெல்வேலி.

பெறுநர்

ஆசிரியர்,
தினத்தந்தி நாளிதழ் அலுவலகம்,
மதுரை.

மதிப்பிற்குரிய ஐயா

பொருள்: நாளிதழ் பொங்கல் மலரில் கட்டுரையை வெளியிட வேண்டி......

வணக்கம் இத்துடன் எம் 'உழவுத் தொழிக்கு வந்தனை செய்வோம்' என்ற கட்டுரையை இணைத்துள்ளேன். தங்கள் பொங்கல் மலரில் அதனை வெளியிடுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நன்றி

இப்படிக்கு,
தங்கள் தாழ்மையுள்ள,
அ அ அ

உறைமேல் முகவரி:

பெறுநர்:

ஆசிரியர்,
தினத்தந்தி நாளிதழ் அலுவலகம்,
மதுரை.

## கட்டுரை

PTA

### உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்

**முன்னுரை:**

நாட்டின் சாயம் எதில் வேண்டுமானாலும் வெளுக்கலாம். ஆனால் விவசாயம் வெளுத்து விட்டால் நாடு சுடுகாடாகும் என்பதை உணர்ந்ததால்தான் நம் முன்னோர்கள் விவசாயத்தை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். விவசாயத்தை உழவர் திருநாள் கொண்டாடி முதல் மரியாதையையும் செய்தனர்.

**உழவின் பெருமை:**

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்றார் பாரதி. அதில் கூட உழவைத்தான் முதலில் வைத்தார். தெய்வப்புலவர் திருவள்ளுவர், அதற்கும் ஒரு படி மேலாக "உழுவதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுவதுண்டு பின் செல்பவர்" எனப் பாடினார். சர்தார் பட்டேல் ஒரு முறை அன்னிய தேசத்துக்குச் சென்றிருந்த போது "உங்கள் கல்ச்சர் எது?" என அவரிடம் கேட்டபோது "எங்கள் கல்ச்சர் அக்ரிகல்ச்சர்" எனப் பதிலளித்தார். இவையெல்லாம் விவசாயத்தின் மேன்மையை எடுத்துரைக்கின்றன.

**உழவனின் இன்றைய நிலை:**

"புஞ்சை உண்டு நஞ்சை உண்டு
பொங்கி வரும் கங்கை உண்டு பஞ்சம் மட்டும்
இன்னும் இங்கு மாறவில்லை – எங்க பாரதத்தில்
சொத்துச் சண்ட தீரவில்லை
வீதிக்கொரு கட்சியுண்டு
சாதிக்கொரு சங்கமுண்டு
நீதி சொல்ல மட்டும் இங்கு நாதியில்ல – சனம்
நிம்மதியா வாழ ஒரு நாளுமில்ல" – என்று பாடுகிறான் ஒரு திரைக்கவிஞன். இந்த

பாடல் வரிகளுக்கு ஏற்ப இன்றைய சூழலின் விவசாயிகளின் நிலை மிகவும் கவலைக்கிடமாகி இருக்கிறது. போராட்டம் நிறைந்த இன்றைய வாழ்க்கையில் விவசாயப் போராட்டம் ஒரு பக்கம் நடந்து வருகிறது.

விவசாய நிலங்கள் ஏன் இன்று வறண்டு போயின? சுமார் 60 – 70 வருடங்களுக்கு முன்பு இந்தியாவில் இருந்த காடுகளின் மொத்தப்பரப்பளவு எவ்வளவு? அது ஏன் இன்று குறுகிப் போனது? மழைவளம் பொய்த்துப் போனது தான் உண்மை. பல விளைநிலங்கள் வீட்டு மனைகளாகவும், தொழிற்சாலைகளாகவும் மாற்றப்பட்டது தான் இதன் முக்கியக் காரணம்.

**அரசு உழவுத் தொழிலுக்கு செய்ய வேண்டியவை:**

பிற தொழில் வளர்ச்சிக்கு நாட்டில் அளிக்கப்படும் முக்கியத்துவம் போல் விவசாயத் தொழில்களுக்கும் முக்கியத்துவம் கொடுத்து விளைநிலங்களையும் விவசாயிகளையும் அரசு பாதுகாக்க உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும். நாடு முழுவதும் நதி நீர் இணைப்புத் திட்டம் விரைவு படுத்தப்பட வேண்டும். எந்த மாநிலத்தில் எந்த கட்சி ஆட்சி நடத்தினாலும் நாடு முழுமைக்குமான விவசாய அமைப்புகள் உற்பத்தி சார்ந்த கொள்கைகளையும், தங்கள் நிலங்கள், நீர் ஆதாரங்கள் ஆகியவற்றைப் பேணுவதில் புதிய திட்டங்கள் யுக்திகளை முன்னிறுத்தி, அரசை நிர்பந்தித்து, நீர் ஆதாரத்தை பேணிக்காக்க விழிப்புடன் இருக்க வேண்டும். தாய் மண்ணின் பசுமையை மீட்டெடுக்க கடமையுணர்ச்சியுடன் செயல்பட வேண்டும்.

**உழவர் திருநாள்:**

உழவுக்கு வந்தனை செய்யும் திருநாள் பொங்கல் திருநாள். பொங்கலுக்கு அடுத்த நாளான மாட்டுப் பொங்கல் உழவுக்கு உறுதுணையான மாடுகளை நன்றியுணர்வோடு மதித்துப் போற்றிடும் திருநாளாகத் திகழ்கிறது.

"பாலைப் பொழிந்து தரும் பாப்பா!
அந்தப் பசுமிக நல்லதடி பாப்பா!
நெல்லு வயலில் உழுதுவரும் மாடு – இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா"

பாரதி காட்டும் இந்நன்றியுணர்வு மாட்டுப் பொங்கலாக மலரக் காண்கிறோம்.

**முடிவுரை:**

''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்''

பொங்கல் பெருநாளை இயற்கையைப் போற்றும் இனிய திருநாளாக மனித குலத்தின் மாண்புகளுக்கு மங்கலம் கூறும் இனிய நாளாக கொண்டாடுவோம்.

2. கவிதையை உரையாடலாக மாற்றுக. PTA

**மகள் சொல்லுகிறாள்:**

அம்மா என் காதுக்கொரு தோடு – நீ
அவசியம் வாங்கி வந்து போடு!
சும்மா இருக்க முடியாது – நான்
சொல்லி விட்டேன் உனக்கு இப்போது!

**தாய் சொல்லுகிறாள்:**

காதுக்கு கம்மல் அழகன்று – நான்
கழறுவதைக் கவனி நன்று
நீதர் மொழியை வெகுபணிவாய் – நிதம்
நீ கேட்டு வந்து காதில் அணிவாய்!

**மகள் மேலும் சொல்லுகிறாள்:**

கைக்கிரண்டு வளைல் வீதம் – நீ
கடன்பட்டுப் போட்டிடினும் போதும்!
பக்கியென் றென்னை யெல்லோரும் – என்
பாடசாலையிற் சொல்ல நேரும்!

**தாய் சொல்லும் சமாதானம்:**

வாரா விருந்து வந்த களையில் – அவர்
மகிழ உபசரித்தல் வளையல்!
ஆராவமுதே மதி துலங்கு – பெண்ணே
அவர்சொல்வ துன்கைகட்கு விலங்கு!

**பின்னும் மகள்:**

ஆபரணங்கள் இல்லை யானால் – என்னை
யார் மதிப்பார் தெருவில் போனால்?
கோபமோ அம்மா இதைச் சொன்னால் – என்
குறைதவிர்க்க முடியும்

**அதற்கு தாய்:**

கற்பது பெண்களுக்கா பரணம் – கெம்புக்
கல்வைத்த, நகைதீராத ரணம்!
கற்ற பெண்களை இந்த நாடு – தன்
கண்ணில் ஒற்றிக் கொள்ளுமன் போடு!

– பாரதிதாசன்

மகள் : அம்மா! என் காதுக்கு ஒரு தோடு வாங்கித் தாங்கம்மா. நான் சொல்லிவிட்டேன். என்னால் சும்மா இருக்க முடியாது.

அம்மா : மகளே! காதுக்கு கம்மல் அழகல்ல. நான் இப்போது கூறுவதை நன்றாகக் கவனி. சான்றோரின் மொழிகளை பணிவுடன் கேட்டு உன் காதில் போட்டுக்கொள்.

அம்மா : அம்மா! கைக்கு இரண்டு வளையலாவது வாங்கிக் கொடுங்க. கடன்பட்டாவது வாங்கிக் கொடுங்க. வளையல் நான் போடவில்லையென்றால் பக்கி என்று பள்ளிக் கூடத்தில் என்னை எல்லோரும் சொல்லிடுவாங்கம்மா.

அம்மா : மகளே! வராத விருந்தினர் கூட வந்தாலும் கையில் வளையல் அணிந்து தான் உபசரித்து மகிழவேண்டும் என்பதில்லை. மகளே! உனக்குள்ள அறிவே உன்னை சிறந்து விளங்கச் செய்யும். அவர்கள் உன் அறிவைப் புகழ்வது தான் உன் கைக்கு விலங்காகும்.

மகள் : அணிகலன்கள் அணியாமல் சென்றால் என்னை ஒருவரும் தெருவில் மதிக்கமாட்டார்களே. என் மேல் உங்களுக்கு கோபமோ அம்மா? நீங்கள் நினைத்தால் என் குறையைப் போக்க முடியும்.

அம்மா : மகளே! கற்பது தான் பெண்களுக்கு அணிகலன். சிவப்பு இரத்தினக்கல் வைத்த நகை ஆறாத ரத்தம் போன்றது. கல்வியைக் கற்ற பெண்களை இந்த நாடு அன்போடு கண்களில் ஒற்றிக் கொள்ளும்.

## மொழியோடு விளையாடு

**ஊர்ப்பெயர்களின் மருஉவை எழுதுக.**

புதுக்கோட்டை, திருச்சிராப்பள்ளி, உதகமண்டலம், கோயம்புத்தூர், நாகப்பட்டினம், புதுச்சேரி, கும்பகோணம், திருநெல்வேலி, மன்னார்குடி, மயிலாப்பூர், சைதாப்பேட்டை.

எ.கா. தஞ்சாவூர் – தஞ்சை

புதுக்கோட்டை – புதுகை
திருச்சிராப்பள்ளி – திருச்சி
உதகமண்டலம் – உதகை
கோயம்புத்தூர் – கோவை

நாகப்பட்டினம் – நாகை
புதுச்சேரி – புதுவை
கும்பகோணம் – குடந்தை
திருநெல்வேலி – நெல்லை
மன்னார்குடி – மன்னை
மயிலாப்பூர் – மயிலை
சைதாப்பேட்டை – சைதை

**படம் தரும் செய்தியை பத்தியாகத் தருக.**


வீறுகொண்டு முன்னேறும் காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை
17ஆம் நூற்றாண்டுச் சுவரோவியம், திருப்புடைமருதூர், திருநெல்வேலி.

இப்படம். திருநெல்வேலி மாவட்டம் திருப்புடைமருதூரில் உள்ள 17ஆம் நூற்றாண்டு சுவரோவியம்.

தொல்காப்பியர் காலத்தில் காலாட்படை, யானைப்படை, குதிரைப்படை ஆகிய படைகள் இருந்தன.

பண்டைக்காலத்தில் அரசன் போர் செய்யக் கருதியவுடன் அவனது போர்பறை முழங்கும். அப்பறையின் ஓசை நாற்றிசையையும் அதிரச் செய்யும். அவ்வோசையைக் கேட்ட போர்வீரர்கள். யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய படைகளும் திரண்டெழும். அரசன் படைத்தலைவனோடு சென்று அவற்றைப் பார்த்து மகிழ்வான்.

அவ்வாறு வீறு கொண்டு முன்னேறிச் செல்லும் படையைப் பற்றிய ஓவியம் இது.

**அகராதியில் காண்க:**

மிரியல் – மிளகு
வருத்தனை – பெருக்குதல்
ஆதசி – சணல்
துரிஞ்சல் – வௌவால், உசிலமரம்

**அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**

**ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.**



அ) நெற்றி வியர்வை நிலத்திலே
உழுது உழைக்கும்
கரம் நீட்டி கொடுக்கும் வள்ளல்
கரத்தை ஒரு போதும்
நிமிர்த்திடாதவன் உழவன்
உழைக்கும் உழவன்
உழவை நிறுத்தினால்
உயர்ந்தோர் தாழ்ந்தோர்
ஒருவர் கூட உயிரோடு இருப்பதில்லை

ஏட்டிலே எழுதிய உண்மை
உழுவதை உரமாட்டு
நிலத்திலே நீர்பாய்ச்சி
களை எடுத்து
காவல் காத்து களம் சேர்த்தான்
உழவனுக்கு செய்வோமா
செய்ந்நன்றி.

ஆ) 1. உழவர்களைப் போற்றுவோம். உண்ண உணவளித்தவர்கள் அவர்கள்.
2. உலகமே உழவர்களை நம்பியிருக்கும் போது நாம் மதிக்காமல் இருக்கலாமா?
3. உழவன் ஓய்ந்து போவதில்லை; பசியால் காய்ந்து போகிறான்.
4. உணவளிப்போர் உன்னத இறைவன் ஆவர்.
5. உழவன் சேற்றில் கால் வைத்தால் தான் நாம் சோற்றில் கை வைக்க முடியும்.

## கலைச்சொல் அறிவோம்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Consulate | – | துணைத்தூதரகம் | Gaild | – | வணிகக்குழு |
| Patent | – | காப்புரிமை | Irrigation | – | பாசனம் |
| Document | – | ஆவணம் | Territors | – | நிலப்பகுதி |

## நிற்க அதற்குத் தக:

அரசால் நிறுவப்படும் கட்டடங்களிலும் சிலைகளிலும் நிறுவியவர் பெயர், நிறுவப்பட்ட காலம், நோக்கம் சேர்ந்த பிற செய்திகளும் தாங்கிய கல்வெட்டுகளைப் பார்த்திருப்பீர்கள். இவை நமது இன்றைய வரலாற்றைப் புலப்படுத்தபவை. அதுபோலவே கோவில்களிலும் பழமையான சின்னங்களிலும் கட்டியவர்கள் பெயர்களும் வரலாறும் இடம் பெற்றிருக்கும். அவை நம் பழம்பெருமையையும் வரலாற்றையும் அறியச் செய்யும் அரிய ஆவணங்கள் என்று அறிவீர்கள்தானே? இவற்றைப் பராமரிக்கவும், பாதுகாக்கவும் உங்களால் இயன்ற செயல்கள். PTA

| | |
|---|---|
| கல்வெட்டுகளின் வழி அறியலாகும் செய்திகளை என் நண்பர்களுக்குக் கூறுவேன். | அவற்றின் மதிப்பைக் குறைக்கும்படி எதுவும் கூற அனுமதிக்க மாட்டேன். |
| கல்வெட்டுகள் குறித்து அவர்களைப் பெருமிதம் அடையச் செய்வேன். | கல்வெட்டில் பொறித்துள்ள எழுத்துகளை யாரும் சிதைத்து அழிப்பதற்கு விடமாட்டேன். |
| கோவில்களில் உள்ள நினைவுச் சின்னங்களில் எழுதியுள்ள வரலாற்றின் பெருமையை மற்றவர்களுக்கு எடுத்துரைப்பேன் | நினைவுச் சின்னங்கள் திருடு போவதற்கு அனுமதிக்க மாட்டேன் |



## அலகுத் தேர்வு இயல் - 7

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** 4 × 1 = 4

1. சோழனுடைய நாட்டில் புலம்புவது எது?
   அ) யானைகள் ஆ) சிலம்புகள் இ) ஓடைகள் ஈ) வீதியில்
2. தமிழினத்தை ஒன்றுபடுத்தும் இலக்கியமாக ம.பொ.சி. கருதியது
   அ) திருக்குறள் ஆ) புறநானூறு
   இ) கம்பராமாயணம் ஈ) சிலப்பதிகாரம்
3. இரு நாட்டு அரசர்களும் தும்பைப் பூவைச் சூடிப் போரிடுவதன் காரணம் ________.
   அ) நாட்டைக் கைப்பற்றல் ஆ) ஆநிரை கவர்தல்
   இ) வலிமையை நிலைநாட்டல் ஈ) கோட்டையை முற்றுகையிடல்
4. சரியான அகரவரிசையைத் தேர்ந்தெடுக்க
   அ) உழவு, மண், ஏர், மாடு ஆ) மண், மாடு, ஏர், உழவு
   இ) உழவு, ஏர், மண், மாடு ஈ) ஏர், உழவு, மாடு, மண்

**II. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** 2 × 2 = 4

1. மெய்க்கீர்த்தி என்பது யாது?
2. சிலம்பு உணர்த்தும் மூன்று உண்மைகள் யாவை?

**III. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி:** 2 × 3 = 6

1. ம.பொ.சிவஞானத்தின் அன்னையார் பாடிய அம்மானைப் பாடல்கள் யாவை?
2. இரண்டாம் இராசராச சோழன் பற்றிக் குறிப்பு வரைக

**IV. பின்வரும் வினாக்களுள் ஒன்றனுக்கு மட்டும் கட்டுரை வடிவில் எழுதுக:** 1 × 8 = 8

1. சிலப்பதிகாரம் மருவூர்ப்பாக்கத்தில் நடைபெற்ற வணிகத்தை கட்டுரை வடிவில் எழுதுக.

**VI. 1. இலக்கணக்குறிப்பு தருக:** 4 × 1 = 4

அ) வண்ணமும் எண்ணமும்
ஆ) பயில் தொழில்

**2. பின்வரும் தொடர்களைக் கொண்டு பொருத்தமான தொடர் அமைக்க:**

அ) கொஞ்சம் அதிகம்
ஆ) முன்னுக்குப் பின்

**VII. அடிமாறாமல் எழுதுக:** 1 × 4 =4

தூசும் துகிரும் – கூலவீதியும் வரை சிலப்பதிகாரப் பாடலை எழுதுக.





இயல் - 8

உரைநடை

அறம், தத்துவம், சிந்தனை – பெருவழி

# 1. சங்க இலக்கியத்தில் அறம்









## பலவுள் தெரிக

### பாடநூல் வினாக்கள்:

1. மேன்மை தரும் அறம் என்பது ________ PTA

அ) கைம்மாறு கருதாமல் அறம் செய்வது

ஆ) மறுபிறப்பில் பயன்பெறலாம் என்ற நோக்கில் அறம் செய்வது.

இ) புகழ் கருதி அறம் செய்வது

ஈ) பதிலுதவி பெறுவதற்காக அறம் செய்வது

**விடை:** அ) கைம்மாறு கருதாமல் அறம் செய்வது

2. உலகமே வறுமையுற்றாலும் கொடுப்பவன் என்றும் பொருள்களின் இருப்பைக்கூட அறியாமல் கொடுப்பவன் என்றும் பாராட்டப்படுவோர்

அ) உதியன்; சேரலாதன் ஆ) அதியன்; பெருஞ்சாத்தன்

இ) பேகன்; கிள்ளிவளவன் ஈ) நெடுஞ்செழியன்; திருமுடிக்காரி

**விடை:** ஆ) அதியன்; பெருஞ்சாத்தன்

### கூடுதல் வினாக்கள்:

3. அறநெறிக்கால அறங்கள் ________ சார்ந்தவை.

அ) சமயம் ஆ) மொழி

இ) இணம் ஈ) இலக்கியம்

**விடை:** அ) சமயம்

4. குற்றங்களை ________ அடிப்படையில் ஆராய்ந்து தண்டனை வழங்க வேண்டும் என்கிறார் ஊன்பொழிப் பசுங்குடையார்.

அ) அன்பின் ஆ) அறத்தின்

இ) பாசத்தின் ஈ) வெறுப்பின்

**விடை:** ஆ) அறத்தின்

5. ____________ இலக்கியங்கள் கொடை இலக்கியங்களாகவே உள்ளன.

அ) அற ஆ) ஆற்றுப்படை

இ) பக்தி ஈ) தற்கால

விடை: ஆ) ஆற்றுப்படை

6. ____________ ஓர் அதிசயத் திறவுகோல் என்பார்கள்.

அ) வாய் ஆ) மூக்கு

இ) நாக்கு ஈ) கால்

விடை: இ) நாக்கு

7. 'பிழையா நன்மொழி' என்று வாய்மையை ____________ குறிப்பிடுகின்றது.

அ) குறுந்தொகை ஆ) நற்றிணை

இ) புறநானூறு ஈ) அகநானூறு

விடை: ஆ) நற்றிணை

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. சங்க காலத்திற்குப் பிந்தைய அற இலக்கியங்களின் காலத்தை அறநெறிக்காலம் என்பர்.
   விடை: அறநெறிக்காலம் என்று எக்காலத்தைக் கூறுவர்?
2. 'கவிதை வாழ்க்கையின் திறனாய்வு' என்று திறனாய்வாளர் ஆர்னால்டு கூறுகிறார்.
   விடை: கவிதைப் பற்றி திறனாய்வாளர் ஆர்னால்டு கூறுவதென்ன?
3. 'செம்மை சான்ற காவிதி மாக்கள்' என்று அமைச்சர்களை மாங்குடி மருதனார் போற்றுகிறார்.
   விடை: அமைச்சர்களை மாங்குடி மருதனார் எவ்வாறு போற்றுகிறார்?
4. வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.
   விடை: எதனை சிறந்த அறமாக சங்க இலக்கியங்கள் பேசுகின்றன?

## சந்திப் பிழைகளை நீக்கி எழுதுக

1. வீரத்தை போலவே கொடையும் தமிழர்களால் விரும்பபட்டது.
   விடை : வீரத்தைப் போலவே கொடையும் தமிழர்களால் விரும்பப்பட்டது.
2. பதிற்றுபத்து சேர அரசர்களின் கொடை பதிவாகவே உள்ளது.
   விடை : பதிற்றுப்பத்து சேர அரசர்களின் கொடைப் பதிவாகவே உள்ளது.
3. வாய்மையை சிறந்த அறமாக சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன.
   விடை : வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன.
4. இதற்கு மாறாக 'பொய் மொழி கொடுஞ்சொல்' என்று பொய்யை குறிப்பிடுகிறது.
   விடை : இதற்கு மாறாக 'பொய் மொழிக்கொடுஞ்சொல்' என்று பொய்யைக் குறிப்பிடுகிறது.

## நிறுத்தற் குறியிட்டு எழுதுக

1. வள்ளல்கள் இல்லோர் ஒக்கல் தலைவன் பசிப்பிணி மருத்துவன் என்றெல்லாம் போற்றப்பட்டனர்
   விடை : வள்ளல்கள் "இல்லோர் ஒக்கல் தலைவன்", "பசிப்பிணி மருத்துவன்" என்றெல்லாம் போற்றப்பட்டனர்.
2. உதவி செய்தலை ஈழத்துப் பூதன் தேவனார் உதவியாண்மை என்று குறிப்பிடுகிறார்
   விடை : உதவி செய்தலை ஈழத்துப் பூதன் தேவனார் 'உதவியாண்மை' என்று குறிப்பிடுகிறார்.
3. இதனால் தான் செல்வம் என்பது சிந்தையின் நிறைவு என்கிறது தமிழ் இலக்கியம்
   விடை : இதனால் தான் "செல்வம் என்பது சிந்தையின் நிறைவு" என்கிறது தமிழ் இலக்கியம்.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

1. வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. வாய்மை பேசும் நாவே உண்மையான நா என்ற கருத்தை, ''பொய்யாச் செந்நா, பொய்படு பறியா வயங்கு செந்நா'' என்று இலக்கியங்கள் கூறுகின்றன. நாக்கு ஓர் அதிசயத் திறவுகோல் என்பார்கள். இன்பத்தின் கதவைத் திறப்பதும் அதுதான். துன்பத்தின் கதவைத் திறப்பதும் அதுதான். மெய் பேசும் நா மனிதனை உயர்த்துகிறது. பொய் பேசும் நா மனிதனைத் தாழ்த்துகிறது.

1. எதனைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன?
   வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.
2. வாய்மை பேசும் நாவைப் பற்றி சங்க இலக்கியங்கள் கூறுவன யாவை?
   வாய்மை பேசும் நாவை, ''பொய்யாச் செந்நா, பொய்படு பறியா வயங்கு செந்நா'' என்று இலக்கியங்கள் கூறுகின்றன.
3. இன்பம், துன்பம் ஆகியவற்றின் கதவை திறப்பது எது?
   இன்பம், துன்பம் ஆகியவற்றின் கதவை நாவானது திறக்கிறது.

2. தமிழர், போரிலும் அறநெறிகளைப் பின்பற்றினர். போர் அறம் என்பது வீரமற்றோர், புறமுதுகிட்டோர், சிறார், முதியோர் ஆகியோரை எதிர்த்துப் போர் செய்யாமையைக் குறிக்கிறது. போரின் கொடுமையிலிருந்து பசு, பார்ப்பனர், பெண்கள், நோயாளர் புதல்வரைப் பெறாதவர் ஆகியோருக்குத் தீங்கு வராமல் போர் புரிய வேண்டும் என்று ஒரு பாடல் கூறுகிறது. தம்மைவிட வலிமை குறைந்தாரோடு போர் செய்வது கூடாது என்பதை ஆவூர் மூலங்கிழார் குறிப்பிட்டிருக்கிறார். PTA

1. ஆவூர் மூலங்கிழாரின் போர் அறம் யாது?
   தம்மைவிட வலிமை குறைந்தாரோடு போர் செய்வது கூடாது என்பதை ஆவூர் மூலங்கிழார் குறிப்பிட்டிருக்கிறார்.
2. போர் அறம் என்பது எதனைக் குறிக்கிறது?
   போர் அறம் என்பது வீரமற்றோர், புறமுதுகிட்டோர், சிறார், முதியோர் ஆகியோரை எதிர்த்துப் போர் செய்யாமையைக் குறிக்கிறது.
3. யாருக்கெல்லாம் தீங்கு வராதவண்ணம் போர் புரிய வேண்டும்?
   போரின் கொடுமையிலிருந்து பசு, பார்ப்பனர், பெண்கள், நோயாளர் புதல்வரைப் பெறாதவர் ஆகியோருக்குத் தீங்கு வராமல் போர் புரிய வேண்டும்.

### படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



1. மன்னன் மக்களுக்குக் கொடை அளிப்பதைக் கடமையாகவும் பெருமையாகவும் எண்ணினான்.
2. கொடை பெறுவதற்காகப் புலவர்கள் கூட்டம் கூட்டமாக மன்னர்களைத் தேடிச் சென்றனர்.

3. மன்னர்களிடம் கொடை பெறுவதைப் புலவர்கள் பெரும்பேறாகக் கருதினர்.
4. பண்டைய வரலாற்றில் பல கொடை வள்ளல்கள் இருந்துள்ளனர்.
5. கொடுப்பதில் இன்பம் பெறுவதில் இல்லை என்பதை வள்ளல்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. குறிப்பு வரைக – அவையம். PTA

◆ அறம் கூறு அவையம் பற்றி 'அறம் அறக்கண்ட நெறிமான் அவையம்' என்கிறது புறநானூறு.
◆ அறம் கூறும் மன்றங்கள் அரசனின் அறநெறி ஆட்சிக்குத் துணைபுரிகின்றன.
◆ மதுரையில் இருந்த அவையம் துலாக்கோல் போல நடுநிலை மிக்கது என்கிறது மதுரைக்காஞ்சி.

**கூடுதல் வினாக்கள்:**

2. எப்போது மகிழ்ச்சி பெருகும்?

மனிதன் எல்லாரோடும் எல்லாவற்றோடும் எவ்வளவுக்கெவ்வளவு தன்னை இணைத்துக் கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய மகிழ்ச்சி பெருகுகிறது.

3. எக்காலத்தை அறிநெறிக்காலம் என்பர்?

சங்க காலத்திற்குப் பிந்தைய அற இலக்கியங்களின் காலத்தை அறிநெறிக்காலம் என்பர்.

4. அரசனின் கடமையாவது யாது?

◆ நீர்நிலை பெருக்குதல்
◆ நிலவளம் காணுதல்
◆ உணவு உற்பத்தி பெருக்குதல்
◆ அதனை அனைவருக்கும் கிடைக்கச் செய்தல் அரசனின் கடமையாகக் கருதப்பட்டது.

5. போர் அறம் என்பது யாது?

◆ போர் அறம் என்பது வீரமற்றோர், புறமுதுகிட்டோர், சிறார், முதியோர் ஆகியோரை எதிர்த்துப் போர் செய்யாமையைக் குறிக்கிறது.
◆ போரின் கொடுமையிலிருந்து பசு, பார்ப்பனர், பெண்கள், நோயாளர், புதல்வரைப் பெறாதவர் ஆகியோருக்குத் தீங்கு வராமல் போர் புரிய வேண்டும் என்பதே போர் அறமாகும்.

6. எது உண்மையான மகிழ்ச்சி?

ஒரு மனிதன் தன்னுடைய மகிழ்ச்சியை மறந்து மற்றவர் மகிழ்ச்சியை நாடுவதுதான் உண்மையான மகிழ்ச்சி. அதாவது தன் மகிழ்ச்சியை மறப்பது தான் மகிழ்ச்சி.

7. கொடை பற்றி புறநானூறு கூறுவது யாது?

''செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்போம் எனினே தப்புந பலவே'' என்று புறநானூறு கூறுகிறது.

8. அக இலக்கியங்களிலுள்ள ஈதல் பற்றிய செய்திகளை கூறுக.

◆ ஈயாமை இழிவு தரும்.
◆ இரப்போர்க்கு ஈயாது வாழ்தலை விட உயிரை விட்டுவிடுதல் மேலானது என்று கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது.

9. வாய்மை பற்றி இலக்கியங்கள் கூறுவதென்ன?

- வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.
- வாய்மை பேசும் நாவே உண்மையான நா என்ற கருத்தை ''பொய்யா செந்நா'', ''பொய்படுபறியா வயங்கு செந்நா'' என்று இலக்கியங்கள் கூறுகின்றன.

10. ஜென் தத்துவம் என்பது யாது?

- கி.பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காஞ்சி மாநகரத்துச் சிற்றரசர் ஒருவர் போதிதர்மர் என்னும் சமயப்பெயர் பூண்டு சீனாவுக்குச் சென்றார்.
- பௌத்த சமயத் தத்துவத்தின் ஒரு பிரிவைப் போதித்தார்.
- அதிலிருந்து உருவானதே ''ஜென்'' தத்துவமாகும்.

11. கொடை என்பதும் ஓர் அறம் என்பதனை ஔவையார் எவ்வாறு குறிப்பிடுகிறார்?

- உலகமே வறுமையுற்றாலும் கொடுப்பவன் அதியன் என்கிறார் ஔவையார்.
- அரியன என்று கருதாது, தயங்காது கொடுத்தலும் ஈதலால் வரும் இழப்புக்கு வருந்தாமையும் நாள்தோறும் கொடுத்தலும் கொடைப் பெருமைகளாகப் பேசப்படுகின்றன.
- இவ்வாறு கொடை என்பதும் ஓர் அறம் என ஔவையார் குறிப்பிடுகிறார்

## சிறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. சங்க இலக்கியங்கள் காட்டும் அறங்கள் இன்றைக்கும் தேவையானவையே என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள் தருக. PTA

முன்னுரை:

- சங்க இலக்கியங்கள் காட்டும் அறங்கள் இன்று மிக மிகத் தேவையானதாகக் கருதப்படுகிறது.
- அரசியலில், வணிகத்தில், போரில், உண்மை பேசுதலில் அறம் அவசியமானதாகும்.

அரசியலில்:

- 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்று அறநெறியில் ஆட்சி புரிதலே ஓர் அரசனின் அரசாட்சி ஆகும்.
- அரசன் செங்கோல் போன்று நேரிய ஆட்சியை மேற்கொள்ள வேண்டும் என்பது பல பாடல்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- இன்றைய அரசியலில் நாம் நல்லாட்சியை எதிர்நோக்கி வாழ வேண்டிய அவல நிலையில் வாழ்கின்றோம்.

வணிகத்தில்:

- அறம் செய்வதில் வணிக நோக்கம் இருக்கக் கூடாது என்பது சங்க கால மக்களின் கருத்தாக இருந்தது.
- ''கொள்வதும் குறைபடாது கொடுப்பதும் மிகைகொளாது'' வணிகர்கள் வாணிகம் செய்தது அக்காலம்.
- இக்காலத்தில் பொருட்களில் கலப்படம், விலை அதிகமாக விற்றல் போன்ற நேர்மையற்ற செயல்கள் நடைபெறுகின்றன.

போரில்:

- தமிழர் போரிலும் அறநெறிகளைப் பின்பற்றினர்.
- இன்று போர் என்று நடைபெறாவிட்டாலும் மக்களுக்குள் ஏற்படும் சாதி, மத, இன சண்டைகள் அறநெறி காட்டும் வழியில் அமைந்திருக்கிறதா என்பது கேள்விக்குறி!

உண்மை:

- வாய்மையைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.
- இன்று உண்மை பேசுபவன் ஏமாளியாக்கப்படும் அவலநிலை காணப்படுகிறது.

2. சுற்றுச்சூழலைப் பேணுவதே இன்றைய அறம் என்ற தலைப்பில், பெற்றோர் ஆசிரியர் கூட்டத்தில் பேசுவதற்கான உரைக்குறிப்பு ஒன்றை உருவாக்குக.

(குறிப்பு: சுற்றுச்சூழல் மாசுபடுவதைத் தடுக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டிருந்தாலும் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் ஏற்படும் மாற்றமே சுற்றுச்சூழலைப் பாதுகாக்கும்)

வீட்டைத் தூய்மையாக வைத்திருத்தல் – குப்பைக் கூளங்களை உடனுக்குடன் அப்புறப்படுத்துதல் – வீதிகளைத் தூய்மைப்படுத்துதல் – மரங்களை வளர்த்தல் – நீர் தேங்காமல் கவனமாயிருத்தல்.

காற்றைச் சுவாசிப்போம் – நகரினுள் சிமெண்ட், காகித தொழிற்சாலைகள் அமையாமல் தடுத்தல் – வாகனக் கட்டுப்பாடு – புகைவிடும் வாகனங்களை தடைசெய்தல் – ஆற்றுநீரைப் பாதுகாத்தல் – கழிவுநீர், சாக்கடை ஆற்றில் கலப்பதைத் தடுத்தல் – மாசுக் கட்டுப்பாடு விதிகளை கடைப்பிடித்தல் – நெகிழிப் பொருட்களை பயன்படுத்தாதிருத்தல் – கழிவுப் பொருட்களை வெளியில் வீசுதல் – எச்சில் துப்புதல், சிறுநீர் கழித்தல் போன்றவற்றை தடுத்தல் – ஒவ்வொருவரும் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும். நம் வீடு– நம் நாடு – நாமே நமக்கு சுகாதார வழிகளை ஏற்படுத்துவோம்.

## கூடுதல் வினாக்கள்:

3. அறம் செய்வதில் வணிக நோக்கம் இருக்கக்கூடாது – விவரி.

- அறம் செய்வதில் வணிக நோக்கம் இருக்கக்கூடாது என்பது சங்க கால மக்களின் கருத்தாக இருந்தது.
- இப்பிறப்பில் அறம் செய்தால் அதன் பயனை மறுபிறப்பில் பெறலாம் என்ற வணிக நோக்குக் கூடாது எனக் கூறப்பட்டது.
- நோக்கமின்றி அறம் செய்வதே மேன்மை தருவது என்பது இதில் உணர்த்தப்பட்டுள்ளது.

4. அரசியலில் அறம் எவ்வாறு வேண்டற்பாலதாக கருதப்படுகிறது?

- அறநெறி முதற்றே அரசின் கொற்றம் 'அறநெறி பிழையாத் திறனறி மன்னர்' மன்னர்களுடைய செங்கோலும் வெண்கொற்றக்குடையும் அறத்தின் குறியீடுகளாகப் போற்றப்பட்டன.
- அரசின் செங்கோல் போன்று நேரிய ஆட்சியை மேற்கொள்ள வேண்டும் என்பது பல பாடல்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- அரசன் அறநெறியில் ஆட்சி செய்வதற்கு அமைச்சரும் உதவினர்.

5. பிறருக்கு உதவும் அறம் குறித்து சங்க இலக்கியங்கள் கூறும் செய்தி யாது?

- பிறருக்கு உதவுதலை சிறந்த அறமாக சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.
- உதவி செய்தலை ஈழத்துப் பூதன் தேவனார் 'உதவியாண்மை' எனக் குறிப்பிடுகிறார்.
- பிறர் நோயும் தம் நோய்போல் போற்றி அறன்அறிதல்
  சான்றவர்க்கு எல்லாம் கடன் (கலி.139)
  என்று பிறர் துன்பத்தைத் தம் துன்பமாகக் கருதி உதவுதல் பற்றி நல்லந்துவனார் குறிப்பிடுகிறார்.
- உண்மையான செல்வம் என்பது பிறர் துன்பம் தீர்ப்பது தான் என்கிறார் நல்வேட்டனார்.

6. வாய்மையைப் பற்றி இலக்கியங்கள் கூறும் செய்தி யாது?

- ''பிழையா நன்மொழி'' என்று வாய்மையை நற்றிணை குறிப்பிடுகின்றது.
- நிலம் புடைபெயர்ந்தாலும் பொய் சொல்லக் கூடாது என்பது பல பாடல்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- வாய்மையைப் பற்றி, சங்க கால மக்கள் கொண்டிருந்த கருத்தழுத்தத்தை இப்பகுதிகள் புலப்படுத்துகின்றன.

## நெடுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. பள்ளித் திடலில் கிடைத்த பணப்பையை உரியவரிடம் ஒப்படைத்ததையும், அதற்குப் பாராட்டு பெற்றதையும் பற்றி வெளியூரில் இருக்கும் உறவினர் ஒருவருக்குக் கடிதம் எழுதுக. PTA

25.06.XX
தஞ்சாவூர்

அன்பு மாமாவிற்கு,

வணக்கம். மாமா! நானும் அப்பா, அம்மா, அக்கா மற்றும் பாட்டி அனைவரும் நலம். உங்கள் நலமும் அத்தை மற்றும் மலர்மன்னன், பூங்கொடி நலமும் அறிய ஆவல்.

உங்களுக்கு இக்கடிதம் எழுதுவதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். கடந்த வாரம் எங்கள் பள்ளித் திடலில் விளையாடி விட்டு திரும்பும் போது ஒரு மஞ்சள் துணிப்பை கிடந்தது. அதை எடுத்துப் பார்த்த போது நிறைய பணம் இருப்பதைப் பார்த்தேன். எனக்கு பயமும், என்ன செய்வது என்ற திகைப்பும் ஏற்பட்டது.

இறுதியில் எனது பள்ளி தலைமையாசிரியரிடம் பணப்பையை ஒப்படைத்தேன். தலைமையாசிரியர் பள்ளிப் பேரவையில் இந்த தகவலை அறிவித்தார். பணப்பையை ஒப்படைத்ததால் தலைமை ஆசிரியர், எனது வகுப்பு ஆசிரியர் மற்றும் மாணவர்கள் என்னை மிகவும் பாராட்டினார்கள். பணப்பைக்கு உரியவர் விபரத்தைக் கூறி தலைமையாசிரியரிடமிருந்து அதனை பெற்றுக் கொண்டார்.

பணப்பையின் உரிமையாளர் என்னை மிகவும் பாராட்டி எனக்கு 5000 பரிசு அளித்தார். எனது மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. நேர்மைக்கு கிடைத்த பரிசு இது. உங்களிடம் இந்த நிகழ்வைப் பகிர்வதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அடுத்த மாதம் உங்கள் இல்லம் வரும்போது சந்திப்போம். அனைவருக்கும் எனது வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றி!

இப்படிக்கு
உங்கள் அன்புள்ள
க.பாரிவளன்

உறைமேல் முகவரி
வா.எழில்வண்ணன்
73, அருள்நகர்
திருச்சி–1

2. குறிப்புகளைக் கொண்டு ஒரு பக்க அளவில் நாடகம் எழுதுக. PTA

மாணவன் – கொக்கைப் போல, கோழியைப் போல – உப்பைப் போல – இருக்க வேண்டும் – கொக்கு காத்திருந்து கிடைக்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளும் – குப்பையைக் கிளறினாலும் தனது உணவை மட்டுமே எடுத்துக்கொள்ளும் கோழி – கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் உப்பின் சுவையை உணர முடியும் – ஆசிரியர் விளக்கம் – மாணவன் மகிழ்ச்சி.

இடம்: பள்ளி வகுப்பறை
பங்கு பெறுவோர்: ஆசிரியர், மாணவர்கள்

**ஆசிரியர் :** மாணவச் செல்வங்களே! ஒரு மாணவன் தன் வாழ்வில் முன்னேற கொக்கைப் போல, கோழியைப் போல, உப்பைப் போல இருக்க வேண்டும்.

**மாணவன் :** ஆசிரியர் அவர்களே! வணக்கம். கொக்கு, கோழி, உப்பு இவைகளைப் போல் இருக்க வேண்டும் என்றால் எப்படி? கொஞ்சம் விளக்கமாகக் கூறுங்கள்!

ஆசிரியர் : மாணவன் சில நேரங்களில் கொக்கைப் போலக் காத்திருந்து கிடைக்கும் நல்ல வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.. நீயும் வாழ்நாளில் நல்ல வாய்ப்புகளுக்காகக் காத்திருந்து பயன்படுத்திட வேண்டும்.

மாணவன் : அது எப்படி ஐயா? விளக்கமாகச் சொல்லுங்க!

ஆசிரியர் : ''ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு!

ஓடும் தண்ணீரில் ஓடுகின்ற மீன்களை எல்லாம் அப்படியே கொக்கு பார்த்துக் கொண்டே இருக்கும்; உறுமீன் – சரியான பெரிய சிறந்த மீன் வந்ததும் 'லபக்' என்று நீரில் பாய்ந்து கொத்தி எடுத்துக் கொள்ளும்; அதே போல் உன் வாழ்வுக்கெனச் சிறந்ததைத் தேடிக் கொள்ளக் காலம் பார்த்துக் காத்திருந்து வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்... சரியா?

மாணவன் : சரி ஐயா....

ஆசிரியர் : குப்பையைக் கிளறும் கோழி உங்கள் வீட்டிலும் இருக்கும்; நன்றாகத் தோண்டித் தோண்டிக் கிண்டிக் கிளறும்.... ஆனால் புழு, பூச்சிப் போன்ற தன் உணவினை மட்டும் உட்கொள்ளும். அதுபோல நீயும், ''அல்லவை அகற்றி நல்லவை நாட வேண்டும்''. உன் வாழ்வுப்பாதையில் ஏராளமானவை தட்டுப்படலாம்; ஆனால் கோழி போன்று – தேவையானதை மட்டும் தேர்ந்துகொள்!

மாணவன் : மிகவும் சரி ஐயா! நானும் அப்படியே செய்கிறேன்...

ஆசிரியர் : ஆமாம்... அதே போல் நீ உப்பாகவும் இருக்க வேண்டும். "உப்பில்லாப் பண்டம் குப்பையிலே!" உணவில் உப்பு குறைந்தோ, இல்லாமலோ போனால், அது வெளியே தான் கொட்டப்பட வேண்டும்; உப்பு அதிகமானாலும் நம்மால் பயன்படுத்த முடியாது. நீயும் உப்பினைப் போல உவர்ப்புள்ளவனாக வாழ வேண்டும்; உனக்கும் பயன்பட்டு, உன்னைச் சுற்றியுள்ளவர்க்கும் பயன்பட வேண்டும். எந்தச் செயலிலும் அளவறிந்து உன்னை ஈடுபடுத்திக் கொள். சமுதாயத்திற்கு இன்றியமையாதவனாக மாறு.

மாணவன் : மிகவும் நன்றி ஐயா! நாங்கள் உங்கள் அறிவுரைகளைப் பின்பற்றி உயர்வோம்!

நாடகம் முற்றும்!

3. கொடைத் திறத்தில் சிறந்தவர்கள் தமிழர்கள் என்பதை சான்றுடன் விளக்குக.

**முன்னுரை:**

தமிழர்கள் பொருள் ஈட்டி அறம் செய்து இன்புற்றனர். மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு தன்னை பிறரோடு இணைத்துக் கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய மகிழ்ச்சி பெருகுகிறது. அதற்கு அறச்செயலில் தன்னை முழுமையாக இணைத்துக் கொள்ள வேண்டும். அத்தகைய கொடைத்திறன் தமிழர்கள் வாழ்வில் சிறந்திருந்தது என்பதை இங்கே காண்போம்.

**கொடை:**

வீரத்தைப் போலவே கொடையும் தமிழர்களால் விரும்பப்பட்டது. ஒரு மனிதன் தன்னுடைய மகிழ்ச்சியை மறந்து மற்றவர் மகிழ்ச்சியை நாடுவது தான் உண்மையான மகிழ்ச்சி. அதாவது தன் மகிழ்ச்சியை மறப்பது தான் மகிழ்ச்சி.

"செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் என்னே தப்புந பலவே" (புறம் 189 : 7- 8) என்றார் மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

#### கொடையின் சிறப்பு:

கொடையின் சிறப்பால் வள்ளல் எழுவர் போற்றப்படுவது, பழந்தமிழர் கொடை மாட்சியைப் புலப்படுத்துகிறது. எழுவரின் கொடைப் பெருமை சிறுபாணாற்றுப்படையிலும் பெருஞ்சித்திரனார் பாடலிலும் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆற்றுப்படை இலக்கியங்கள், கொடை இலக்கியங்களாகவே உள்ளன. பதிற்றுப்பத்து, சேர அரசர்களின் கொடைப் பதிவாகவே உள்ளது. புறநானூற்றின் கொடைப்பதிவும் குறிப்பிடத்தக்கது.

#### ஈதல்:

அரியன என்று கருதாது, தயங்காது கொடுத்தலும், ஈதலால் வரும் இழப்புக்கு வருந்தாமையும், நாள்தோறும் கொடுத்தலும் கொடைப் பெருமைகளாகப் பேசப்படுகின்றன. வள்ளல்கள் "இல்லோர் ஒக்கல் தலைவன்", "பசிப்பிணி மருத்துவன்" என்றெல்லாம் போற்றப்பட்டனர். வழங்குவதற்குப் பொருள் உள்ளதா என்று கூடப் பார்க்காமல் கொடுக்கும் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தனை நக்கீரர் பாராட்டுகிறார். வள்ளலின் பொருள் இரவலனின் பொருள்; வள்ளலின் வறுமை இரவலனின் வறுமை என்று பெரும்பதுமனார் குறிப்பிடுகிறார்.

#### தேடி உதவுதல்:

உலகமே வறுமையுற்றாலும் கொடுப்பவன் அதியன் என்றார் ஔவையார். இரவலர் வராவிட்டாலும் அவர்களைத் தேடி வரவழைத்தல் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் இயல்பு என்கிறார் நச்செள்ளையார். பேகன் மறுமை நோக்கி கொடுக்காதவன் என்கிறார் பரணர். தன்னை நாடி வந்த பரிசிலன் பொருள் பெறாமல் திரும்புவது, தான் நாட்டை இழந்த துன்பத்தைவிடப் பெருந்துன்பம் எனக் குமணன் வருந்தியதாகப் பெருந்தலைச் சாத்தனர் குறிப்பிடுகிறார். ஈயாமை இழிவு, இரப்போர்க்கு ஈயாது வாழ்தலை விட உயிரை விட்டுவிடுதல் மேலானது என்றெல்லாம் கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது.

#### உதவி:

பிறருக்கு உதவுதல் என்பதைச் சிறந்த அறமாகச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. உதவி செய்தலை ஈழத்துப் பூதன் தேவனார் 'உதவியாண்மை' என்று குறிப்பிடுகிறார்.

"பிறர் நோயும் தம் நோய்போல் போற்றி அறன்அறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன்" (கலி:139)

என்று பிறர் துன்பதைத் தம் துன்பமாகக் கருதி, உதவுதல் பற்றி நல்லந்துவனார் குறிப்பிடுகிறார்.

#### உண்மையான செல்வம்:

உண்மையான செல்வம் என்பது பிறர் துன்பம் தீர்ப்பதுத ான் என்கிறார் நல்வேட்டனார். உறவினர் கெட, வாழ்பவனின் பொலிவு அழியும் என்று பெருங்கடுங்கோ குறிப்பிடுகிறார். இதனால்தான் "செல்வம் என்பது சிந்தையின் நிறைவு" என்கிறது தமிழ் இலக்கியம். பிறருக்கு உதவாமல், மனிதத்திற்குக் கொடும்பாவி கட்டுவது சங்க காலத்தில் இல்லை.

#### முடிவுரை:

சங்க இலக்கியங்கள் காட்டும் அறங்கள், ஒரு மனிதன் தனியாகவும் சமூக உறுப்பினராகவும் இயங்குதற்கும், அவனது பண்பு நலனை உருவாக்குவதற்கும் உதவும் விதிமுறைகள் எனலாம். சங்க காலத்தில் அறத்தை மனித உறவின் மையமாகக் கொண்டிருந்தனர்.

## கற்பவை கற்றபின்

1. பாடப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள அறக்கருத்துகளை வலியுறுத்தும் சங்க இலக்கியப் பாடலடிகள் ஐந்தினைத் தொகுத்து அவை கூறும் அறச் செய்திகளை எழுதுக. PTA

#### அறச் செய்திகள் ஐந்து:

சங்க இலக்கியத்தில் மக்கள் அறத்தின் வழியே தங்கள் வாழ்வை வாழ்ந்தனர். அறிவுக்குப் பொருத்தமான அன்பு, உயர்ந்த புத்தி, சீரிய சிந்தனை, புதிய கருத்தை ஏற்றுக் கொள்ளும் பரந்த மனம், நினைவாற்றல் என பலவகைகளில் அறத்தை நோக்கிய செயல்களைச் செய்தனர்.

அறத்தில் வணிக நோக்கம் கொள்ளாமை:

'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்' – புறம்

அறம் செய்வதில் வணிக நோக்கம் கூடாது. இப்பிறப்பின் அறப்பயன் மறுபிறப்பில் அடையலாம் என்ற வணிக நோக்கம் கூடாது.

அரசியல் அறம்:

'அறிநெறி முதற்றே அரசின் கொற்றம்;
அறன்நெறி பிழையாத் திறனறி மன்னர்

செங்கோல், வெண்கொற்றக்குடை மன்னருக்கு அறத்தின் குறியீடாகப் பயன்பட்டது.

* நேர்மையானவர்கள் ஆட்சி செலுத்தினால், குடி மக்கள் மகிழ்ச்சியுடனிருப்பார்கள்; பொல்லார் ஆட்சி செலுத்தினால் அவர்கள் புலம்பிக் கொண்டிருப்பார்கள்.

நீதிமொழிகள் 23: 2

கொடை:

'செல்வத்தின் பயனே ஈதல்
துய்ப்போம் என்னே தப்புந பலவே (புறம் 89:7 – 8)

ஒரு மனிதன் தன்னுடைய மகிழ்ச்சியை மறந்து மற்றவர் மகிழ்ச்சியை நாடுவதுதான் மகிழ்ச்சி என வாழ்ந்தனர்.

உதவி:

'சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கண் செல்வம் செல்வம் என்பதுவே (நற், 210)

'உண்மையான செல்வம் என்பது பிறர் துன்பம் தீர்ப்பது தான்' என்கிறார் நல்வேட்டனார்.

வாய்மை:

'பொய்யாச் செந்நா, 'பொய்படுபறியா வியங்கு செந்நா' வாய்மை பேசும் நாவே உண்மையான நாக்கு.

2. கொன்றை வேந்தன் முதலான பிற்கால அறநூல்களின் பெயர்களை அறிந்து, அவற்றுள் ஏதேனும் ஒரு நூலின் அறக் கருத்துகளை எடுத்துக் கொண்டு அவை இன்றும் பொருந்தி நிற்பது குறித்துக் கலந்துரையாடுக.

கொன்றை வேந்தன், ஆத்திச்சூடி, ஏலாதி, சிறுபஞ்சமூலம், இன்னாநாற்பது, இனியவை நாற்பது, நாலடியார், நான்மணிக்கடிகை, திருக்குறள் போன்றவை அற நூல்களாகும்.

ஆசாரக்கோவை பற்றியும் அதனுடைய சில கருத்துகளையும் இங்குக் காண்போம்.

ஆசாரம் என்றால் பின்பற்றக் கூடியவை; கோவை என்றால் தொகுப்பு; பின்பற்றக்கூடிய ஒழுக்கங்களைத் தொகுத்துக் கூறுவதே ஆசாரக்கோவையாகும்.

இன்னின்ன செயல்கள் செய்யத்தக்கவை, இன்னின்ன செயல்கள் செய்யத்தகாதவை என்று கண்டிப்பாக உத்தரவு போடுவது போலவே பல பாடல்கள் காணப்படுகின்றன.

ஆசாரக்கோவையை ஒரு பொதுச் சுகாதார நூல் என்றே சொல்லிவிடலாம். எல்லா மக்களும் நோயற்ற வாழ்வு வாழ்வது எப்படி? வளரும் – நாடும் பொது இடங்களும் சுகாதாரக்கேடின்றி இருப்பது எப்படி? என்ற கருத்துகளை இந்நூலிலே காணலாம்.

புறத்திலே தூய்மையுடன் வாழ்வதற்கு வழி கூறுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை. அகத்திலே அழுக்கின்றி வாழ்வதற்கும் வழிகாட்டுகின்றது இந்நூல். இது இந்நூலுக்குள்ள பெருமை.

மக்களுடைய நல்லொழுக்கங்களுக்கு அடிப்படையான குணங்கள் நன்றி அறிதல், பொறையுடைமை, இன்சொல், தீமை செய்யாதிருத்தல், கல்வியை மறக்காமல் கற்றல், உலக நடை அறிந்து ஒழுகுதல், உண்மை அறிந்து அறிவுடையனாதல், நல்லொழுக்கமுள்ள கூட்டத்தாரோடு சேர்ந்து வாழ்தல் ஆகிய எட்டுக் குணங்களும் நல்லொழுக்கத்தை வளரச் செய்யும் விதைகளாகும்.



# 2. ஞானம்

தி.சொ.வேணுகோபாலன்

**பாடல்:**

சாளரத்தின் கதவுகள், சட்டம்;
காற்றுடைக்கும்,
தெருப்புழுதி வந்தொட்டும்
கரையான் மண் வீடு கட்டும்.
அன்று துடைத்தேன்,
சாயம் அடித்தேன்,
புதுக்கொக்கி பொருத்தினேன்.
காலக்கழுதை
கட்டெறும்பான
இன்றும்
கையிலே
வாளித்தண்ணீர், சாயக்குவளை,
கந்தைத்துணி, கட்டைத் தூரிகை;
அறப்பணி ஓய்வதில்லை
ஓய்ந்திடில் உலகமில்லை!

**சொற்பொருள்:**

| | | |
|---|---|---|
| சாளரத்தில் கதவுகள், சட்டம் காற்றுடைக்கும் | – | சன்னலில் மரப்பலகைகள், மரச்சட்டங்கள் போன்றவற்றை காற்று மோதி உடைக்கும். |
| தெருப்புழுதி வந்தொட்டும் | – | தெருவிலுள்ள புழுதிகள் சன்னலில் ஒட்டும் |
| கரையான் மண் வீடுகட்டும் | – | அவற்றின் மீது கரையான் மண்ணால் வீடு கட்டும் |
| அன்று துடைத்தேன் | – | சன்னலை நான் துடைத்தேன் |
| சாயம் அடித்தேன் | – | துடைத்த பிறகு வண்ணம் அடித்தேன் |
| புதுக்கொக்கி பொருத்தினேன் | – | புதுக்கொக்கிகளால் சன்னல் ஆடாதவாறு பொருத்தினேன் |
| காலக்கழுதை கட்டெறும்பான இன்றும் | – | காலங்கள் சென்ற பிறகும் |
| கையிலே வாளித் தண்ணீர் | – | கையில் வாளியில் தண்ணீரையும், |
| சாயக்குவளை, கந்தைத்துணி | – | வண்ணத்தால் நிரப்பப்பட்ட குவளையையும், கந்தையான துணியையும் |
| கட்டைத் தூரிகை | – | வண்ணமடிக்க தூரிகையும் கொண்டு |
| அறப்பணி ஓய்வதில்லை | – | செயலாற்றும் என் வேலை ஓயவில்லை |
| ஓய்ந்திடில் உலகமில்லை | – | என் பணி நின்று விட்டால் இந்த உலகம் இல்லை. |

### தெளிவுரை:

சன்னலில் மரப்பலகைகள், மரச்சட்டங்கள் போன்றவற்றை காற்றானது உடைக்கும். தெருவில் உள்ள புழுதி சன்னலில் ஒட்டும். அவற்றின் மீது கரையான் மண்ணால் வீடு கட்டும், சன்னலை துடைத்து, வண்ணம் அடித்தேன்; புதுக்கொக்கிகளால் சன்னலைச் சரிபடுத்தினேன்; காலமாகிய கழுதை கட்டெறும்பான இன்றும் கையில் வாளித்தண்ணீர், சாயத்தால் நிரப்பப்பட்ட குவளை; கந்தையான துணி, கட்டையில் பொருத்தப்பட்ட தூரிகையுடன் என அறப்பணி ஓயவில்லை; என் பணி ஓய்ந்து விட்டால் உலகமே இல்லை.

### விளக்கவுரை:

இயக்கமே உலகம் நிலைத்திருப்பதற்கான அடிப்படை. இயங்குதலின்றி உலகில்லை; உயர்வில்லை. ஆசிரியர் வேணுகோபாலின் இக்கவிதை காலம் ஓடினாலும் கடமை மாறாமல் நடைபெற வேண்டும் என்ற உண்மையை உணர்த்துகிறது. அறப்பணி, அன்புப் பணிக்கு என்றும் ஓய்வில்லை, ஓய்வின்றி உழைத்தால் தான் வாழ்வில் உன்னத நிலையை அடைய முடியும் என்பதை ஆசிரியர் சன்னல் வாயிலாக உணர்த்துகிறார்.

### ஆசிரியர் குறிப்பு:

- பெயர் – தி.சொ.வேணுகோபாலன்
- இவர் திருவையாற்றில் பிறந்தவர்.
- மணிப்பால் பொறியியல் கல்லூரியில் எந்திரவியல் பேராசிரியராகப் பணியாற்றியவர்.
- 'எழுத்து' காலப் புதுக்கவிஞர்களில் ஒருவர்.
- இவரின் மற்றொரு கவிதைத் தொகுப்பு மீட்சி விண்ணப்பம்.

### நூற் குறிப்பு:

தி.சொ.வேணுகோபாலனின் கோடை வயல் என்னும் தொகுப்பில் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. சாளரம் – சன்னல்
2. புழுதி – மண்தூள்
3. சாயம் – வர்ணம்
4. தூரிகை – வண்ணம் தீட்டும் கருவி
5. ஓய்வு – தளர்வு

### பகுபத உறுப்பிலக்கணம்

1. துடைத்தேன் – துடை + த் + த் + ஏன்

துடை – பகுதி
த் – சந்தி
த் – இறந்த கால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

2. அடித்தேன் – அடி + த் + த் + ஏன்

அடி – பகுதி
த் – சந்தி
த் – இறந்த கால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. 'வீட்டைத் துடைத்துச் சாயம் அடித்தல்' – இவ்வடி குறிப்பிடுவது ______.
   அ) காலம் மாறுவதை
   ஆ) வீட்டைத் துடைப்பதை
   இ) இடையறாது அறப்பணி செய்தலை
   ஈ) வண்ணம் பூசுவதை

   விடை : இ) இடையறாது அறப்பணி செய்தலை

**கூடுதல் வினாக்கள்:**

2. கவிஞர் வேணுகோபால் பிறந்த ஊர் ______.
   அ) திருவையாறு ஆ) தஞ்சாவூர்
   இ) திருச்சி ஈ) மதுரை

   விடை : அ) திருவையாறு

3. சாளரம் என்பதன் பொருள் ______.
   அ) கதவு ஆ) சன்னல்
   இ) பால்கனி ஈ) அறை

   விடை : ஆ) சன்னல்

4. புழுதி என்பதன் பொருள் ______.
   அ) பாறை ஆ) தண்ணீர்
   இ) மண்துகள் ஈ) ஆறு

   விடை : இ) மண்துகள்

5. 'ஞானம்' என்ற பாடலை எழுதியவர்
   அ) கு.ப.ராஜகோபாலன் ஆ) கா.ப.செய்குதம்பிப் பாவலர்
   இ) நாகூர்ரூமி ஈ) தி.சொ.வேணுகோபால்

   விடை : ஈ) தி.சொ.வேணுகோபால்

6. 'காலக்கழுதை' ______ ஆக மாறிவிட்டது.
   அ) குதிரை ஆ) கட்டெறும்பு
   இ) சக்கரம் ஈ) தூரிகை

   விடை : ஆ) கட்டெறும்பு.

## குறுவினா

**பாடநூல் வினா:**

1. காலக்கழுதை கட்டெறும்பானாதும் கவிஞர் செய்வது யாது? PTA
   - காலக்கழுதை கட்டெறும்பானதும் கையில் வாளித்தண்ணீர் எடுத்து சன்னலைக் கழுவினார்.
   - சாயக்குவளையில் வர்ணத்தை நிரப்பினார்.
   - கந்தையான துணியால் சன்னலைத் துடைத்தார்.
   - கட்டைத் தூரிகை கொண்டு வர்ணத்தால் பூசினார்.

**கூடுதல் வினா:**

2. சாளரத்தினை எவை எவை பாதிப்புக்கு உள்ளாக்கும்?
   - சன்னலின் கதவுகளை, சட்டங்களை காற்றானது உடைக்கும்.
   - தெருக்களிலிலிருந்து மண்துகளானது சன்னலில் ஒட்டும்.
   - சன்னலில் கரையான் மண்ணால் வீடு கட்டும்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. வாளித்தண்ணீர், சாயக்குவளை, கந்தைத்துணி, கட்டைத் தூரிகை – இச்சொற்களைத் தொடர்புபடுத்தி ஒரு பத்தி அமைக்க. PTA

- ஒவ்வொரு வீட்டிலும் அவ்வப்போது நிகழும் நிகழ்வை கவிஞர் அழகாக எடுத்துரைக்கிறார்.
- வீட்டினைப் புதுப்பித்தல் பணி தொடர்ச்சியாக அவ்வப்போது நடைபெற்றால் தான் வீடு தூய்மையாக விளங்கும்.
- வாளியிலிருந்து தண்ணீரைத் தெளித்து சன்னலைத் தூய்மைப்படுத்த வேண்டும்.
- சாயக்குவளையில் வர்ணக்கலவையை நிரப்ப வேண்டும்.
- கந்தையான துணியால் துடைத்து விட்டு கட்டைத் தூரிகையால் வர்ணம் அடித்து சன்னலை புதியதாக்க வேண்டும்.

**கூடுதல் வினா:**

2. கவிஞர்.வேணுகோபால் – ஆசிரியர் குறிப்பு தருக.

தி. சொ. வேணுகோபாலனின் கோடை வயல் என்னும் தொகுப்பில் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

- இவர் திருவையாற்றில் பிறந்தவர்.
- மணிப்பால் பொறியியல் கல்லூரியில் எந்திரவியல் பேராசிரியராகப் பணியாற்றியவர்.
- 'எழுத்து' காலப் புதுக்கவிஞர்களில் ஒருவர்.
- இவரின் மற்றொரு கவிதைத் தொகுப்பு மீட்சி விண்ணப்பம்.

## கற்பவை கற்றபின்

1. துளிப்பா ஒன்றினைத் தேர்ந்தெடுத்து அதில் வெளிப்படும் கருத்தினைப் பற்றி வகுப்பறையில் இரண்டு நிமிடம் உரை நிகழ்த்துக.

எடு ஒருகல்
இயேசு வருமுன்
வீசியெறி

இக்கவிதையானது ஒவ்வொருவர் மனதையும் உரசிப் பார்க்கும் தீக்குச்சி போன்ற கவிதை. நடத்தை கெட்ட ஒரு பெண்ணை இயேசுவின் முன் கொண்டு வந்து நிறுத்துகின்றனர். ஒவ்வொருவரும் கையில் ஒரு கல்லை வைத்துக் கொண்டு அவரை எறிந்து கொல்லத் தயாராய் உள்ளனர். இயேசு "உங்களில் பாவம் இல்லாதவன் அவள் மீது கல் எறியட்டும்" என்கிறார். ஒவ்வொருவரும் தங்கள் பாவங்களை நினைத்தவாறே வெட்கித் தலைகுனிந்து கல்லைக் கீழே போட்டுவிட்டு சென்று விடுகின்றனர். இயேசுவும் அப்பெண்ணைத் தீர்ப்பிடாமல் "இனிமேல் பாவம் செய்யாதே" என்று அனுப்பி வைக்கிறார்.

இந்த நிகழ்வை இந்த கவிதை எவ்வளவு நயமாக பயன்படுத்துகிறது என்பதை நாம் எண்ணி எண்ணி வியப்படைகிறோம். இயேசு வந்தால் அவள் மீது கல்லெறிய விட மாட்டார். அதனால் அவர் வருமுன்னே நாம் கல்லால் அவளை எறிந்து கொல்வோம் என்று இக்கவிதை கூறுகிறது.

2. திருக்குறள் அறத்துப்பாலில் உள்ள அதிகாரங்களின் தலைப்பினை எழுதி, அகர வரிசைப்படுத்தி அதன் பொருளினை எழுதுக.

அருளுடைமை – அருள் தன்மையை உடைமையாக்கிக் கொள்தல்
அன்புடைமை – அன்பை தன் வாழ்வில் உடைமையாக்குதல்

| | | |
|---|---|---|
| அடக்கமுடைமை | – | அடக்கம் என்னும் தாழ்ச்சி பண்பை உடைமையாக்குதல் |
| அவா அறுத்தல் | – | ஆசைகளை விட்டு விலகுதல் |
| அழுக்காறாமை | – | பொறாமை குணத்தை நீக்குதல் |
| இல்வாழ்க்கை | – | இல்வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகளைக் கூறுதல் |
| இன்னா செய்யாமை | – | இனியது அல்லாதவற்றை செய்யாது தவிர்த்தல் |
| இனியவை கூறல் | – | இனிய சொற்களை என்றும் பேசுதல் |
| ஈகை | – | பிறருக்குக் கொடுத்து வாழ்தலின் சிறப்பு |
| ஒழுக்கமுடைமை | – | வாழ்வில் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து வாழ்தல் |
| ஒப்புரவறிதல் | – | பிறரோடு இயைந்து வாழ்தல் |
| கள்ளாமை | – | களவு செய்யாமல் வாழ்தல் |
| கூடா ஒழுக்கம் | – | வாழ்வில் வேண்டாத தீய ஒழுக்கங்களை விட்டொழித்தல் |
| கொல்லாமை | – | எந்த உயிரையும் கொலை செய்யாது இருத்தல் |
| செய்ந்நன்றியறிதல் | – | செய்த நன்மைகளுக்கு நன்றி கூறுதல் |
| தவம் | – | நோன்பு முதலிய தவமுயற்சிகளை மேற்கொள்ளுதல் |
| தீவினையச்சம் | – | தீய செயல்களை செய்யப் பயப்படுதல் |
| துறவு | – | வாழ்வில் துறக்க வேண்டியவற்றைத் துறந்து நல்வாழ்வை மேற்கொள்ளுதல் |
| நடுவுநிலைமை | – | சமன் செய்து சீர்தூக்கும் தராசு போல் நடுநிலையோடு செயல்படுதல் |
| நிலையாமை | – | வாழ்வில் நிலையில்லாத தன்மைகளைச் செல்வத்தை உணர்ந்து வாழ்தல் |
| பயனில சொல்லாமை | – | பயனில்லாதவற்றை சொல்லாதிருத்தல் |
| பிறனில் விழையாமை | – | பிறருடைய இல்லத்தில் உள்ளவர்களை விரும்பாமலிருத்தல் |
| புறங்கூறாமை | – | பிறரைப் பற்றி புறணி பேசாதிருத்தல் |
| புகழ் | – | புகழ்ச்சிக்குரிய செயல்பாடுகளை செய்தல் |
| புலால் மறுத்தல் | – | மாமிசம் போன்ற உணவுகளை மறுத்து வாழ்தல் |
| பொறையுடைமை | – | பொறுமை என்ற பண்பை உடைமையாக்கிக் கொள்ளுதல் |
| மக்கட்பேறு | – | குழந்தைப் பேற்றின் சிறப்புகளைக் கூறுதல் |
| மெய்யுணர்தல் | – | வாழ்வில் உண்மைத் தன்மையை உணர்ந்து வாழ்தல் |
| வாய்மை | – | உண்மை பேசுதலின் உயர்வைக் கூறுதல் |
| விருந்தோம்பல் | – | விருந்து தருதலின் பண்பு, உயர்வு |
| வெகுளாமை | – | கோபப்படாமல் வாழ்தலின் சிறப்பு, கோபத்தின் தீமைகள் |





இயல் - 8

செய்யுள்

அறம், தத்துவம், சிந்தனை – பெருவழி

# 3. காலக்கணிதம்

கண்ணதாசன்

## பாடல் :

கவிஞன் யானோர் காலக் கணிதம்
கருப்படு பொருளை உருப்பட வைப்பேன்!
புவியில் நானோர் புகழுடைத் தெய்வம்
பொன்னினும் விலைமிகு பொருளென் செல்வம்!
இவைசரி யென்றால் இயம்புவதென் தொழில்
இவைதவ றாயின் எதிர்ப்பதென் வேலை!
ஆக்கல் அளித்தல் அழித்தல்இம் மூன்றும்
அவனும் யானுமே அறிந்தவை; அறிக!

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| கவிஞன் யானோர் காலக்கணிதம் | – | கவிஞனாகிய நான் காலத்தைக் கணிக்கும் மனிதனாவேன். |
| கருப்படு பொருளை | – | உள்ளத்தில் தோன்றும் உண்மையான பொருளை |
| உருப்பட வைப்பேன் | – | எல்லோருக்கும் தெரியும்படி வெளிப்படுத்துவேன் |
| புவியில் நானோர் | – | இந்த பூமியில் நான் |
| புகழுடைத் தெய்வம் | – | எல்லாராலும் போற்றப்படும் தெய்வம் போன்றவன் |
| பொன்னிலும் விலைமிகு | – | பொன்னை விட விலை மிகுந்த |
| பொருளென் செல்வம் | – | செல்வம் என்னுடையது |
| இவை சரி என்றால் | – | இவையெல்லாம் சரி என்று சொன்னால் |
| இயம்புவது என் தொழில் | – | அதை கூறுவது என் பணியாகும் |
| இவை தவறாயின் | – | இவை தவறு என்று சொன்னால் |
| எதிர்ப்பதென் வேலை | – | அவற்றை எதிர்ப்பது என் பணி |
| ஆக்கல், அளித்தல், அழித்தல் இம்மூன்றும் | – | உண்டாக்குதல், உலகிற்கு அளித்தல், அழித்தல் ஆகிய மூன்றும் |
| அவனும் யானும் அறிந்தவை! அறிக ! | – | இறைவனும் நானும் மட்டும் அறிந்தவையாகும். நீங்களும் அறிவீர்களாக. |

## பொருளுரை:

கவிஞனாகிய நான் ஒரு காலத்தைக் கணிக்கும் மனிதனாவேன். உள்ளத்தில் தோன்றும் உண்மைப் பொருளை எல்லோருக்கும் தெரியும் படி வெளிப்படுத்துவேன். இந்த பூமியில் நான் எல்லோராலும் போற்றப்படும் தெய்வமாவேன். பொன்னை விட விலை மிகுந்த செல்வம் என்னுடையது. இவையெல்லாம் சரி என்று சொன்னால் அதை கூறுவது என் பணி. இவை தவறு என்று சொன்னால் எதிர்ப்பது என் பணி. ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்று பணிகளையும் இறைவனும் நானும் மட்டும் அறிந்தவையாகும். அதனை நீங்களும் அறிவீர்களாக!

## விளக்கவுரை:

கண்ணதாசன் தமிழகத்தின் தன்னிகரில்லா கவிஞராகத் திகழ்ந்தவர். ஒரு சிறந்த கவிஞன் உள்ளத்தில் தோன்றும் உண்மைப் பொருளை யாருக்கும் பயப்படாமல் எடுத்துரைப்பவன். இறைவனைப் போல முப்பணிகளையும் சிறப்பாக செய்பவன் கவிஞன் என்று இங்கு கூறுகிறார்.

## பாடல்:

*செல்வர்தங் கையில் சிறைப்பட மாட்டேன்;*
*பதவி வாளுக்கும் பயப்பட மாட்டேன்!*
*பாசம் மிகுத்தேன்; பற்றுதல் மிகுத்தேன்!*
*ஆசை தருவன அனைத்தும் பற்றுவேன்!*
*உண்டா யின்பிறர் உண்ணத் தருவேன்;*
*இல்லா யின்எமர் இல்லம் தட்டுவேன்*
*வண்டா யெழுந்து மலர்களில் அமர்வேன்*
*வாய்ப்புறத் தேனை ஊர்ப்புறந் தருவேன்!*
*பண்டோர் கம்பன், பாரதி, தாசன்*
*சொல்லா தனசில சொல்லிட முனைவேன்!*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| செல்வர் தங்கையில் சிறைப்படமாட்டேன் | – | பணம் படைத்த செல்வர்களிடத்தில் நான் சிறையிடப்படமாட்டேன். |
| பதவிவாளுக்கும் பயப்படமாட்டேன் | – | ஆட்சி அதிகாரத்தில் உள்ளவர்களுக்கும் பயப்படமாட்டேன் |
| பாசம் மிகுத்தேன் | – | உள்ளத்தில் அன்பினை வளர்த்தேன் |
| பற்றுதல் மிகுத்தேன் | – | எல்லோரிடத்திலும் என்னையே கையளித்தேன் |
| ஆசை தருவன அனைத்தும் பற்றுவேன்! | – | ஆசையானது அனைத்தையும் கொள்வேன் |
| உண்டாயின் பிறர் உண்ணைத் தருவேன் | – | என்னிடம் இருந்தால் பிறர்க்கு உண்ணத் தருவேன் |
| இல்லாயின் எமர் இல்லம் தட்டுவேன் | – | இல்லையென்றால் நம்மவரின் இல்ல கதவுகளைத் தட்டுவேன் |
| வண்டாய் எழுந்து மலர்களில் அமர்வேன் | – | வண்டாய்ப் பறந்து மணம் வீசும் வண்ண மலர்களில் அமர்வேன் |
| வாய்ப்புறத்தேனை ஊர்ப்புறந் தருவேன் | – | என் வாயில் உறிஞ்சுகின்ற தேனை ஊரிலுள்ள மக்களுக்குத் தருவேன். |
| பண்டோர் கம்பன், பாரதி, தாசன் | – | முற்காலத்தில் வாழ்ந்த கம்பர், பாரதியார், பாரதிதாசன் ஆகியோர் |
| சொல்லாதன சில சொல்லிட முனைவேன் | – | கூறாத சில கருத்துக்களைக் கூறிட விருப்பப் படுகின்றேன் |

## பொருளுரை:

பணம் படைத்த செல்வர்களிடத்தில் நான் சிறையிடப்பட மாட்டேன். ஆட்சி அதிகாரத்தில் உள்ளவர்களுக்கும் பயப்பட மாட்டேன். உள்ளத்தில் அன்பு அதிகமாக வளர்த்தேன். எல்லோரிடத்திலும் என்னையே கையளித்தேன். விருப்பம் தருவன அனைத்தையும் பற்றிக் கொள்வேன். என்னிடம் இருந்தால் பிறர்க்கு உண்ணத் தருவேன். இல்லையென்றால் நம்மவரின் இல்லத்தின் கதவுகளைத் தட்டுவேன். வண்டாய்ப் பறந்து வண்ண மலர்களில் அமர்வேன். நான் குடிக்கின்ற தேனை ஊரிலுள்ள மக்களுக்குத் தருவேன். முற்காலத்தில் வாழ்ந்த கம்பர், பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்கள் கூறாத சில கருத்துகளைக் கூறிட முனைவேன்.

### விளக்கவுரை:

கவிஞர் கண்ணதாசன் ஓர் உண்மையான கவிஞன் எவ்வாறு இருக்க வேண்டும் என்று இப்பகுதியில் கூறுகிறார். யாருக்கும் பயப்படாமல், தம்மிடம் உள்ளதை பிறருக்குக் கொடுத்தல் போன்ற குணங்களை இங்கு விளக்குகிறார்.

**பாடல்:**

*புகழ்ந்தால் என்னுடல் புல்லரிக் காது*
*இகழ்ந்தால் என்மனம் இறந்து விடாது!*
*வளமார் கவிகள் வாக்குமூ லங்கள்*
*இறந்த பின்னாலே எழுதுக தீர்ப்பு!*
*கல்லாய் மரமாய்க் காடுமே டாக*
*மாறா திருக்கயான் வனவிலங் கல்லன்!*

### சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| புகழ்ந்தால் என்னுடல் புல்லரிக்காது | – | என்னைப் பிறர் புகழ்ந்தால் என் உடல் சிலிர்ப்படையாது |
| இகழ்ந்தால் என்மனம் இறந்துவிடாது | – | பிறர் என்னை இழிவாகப் பேசினால் என் உள்ளம் மடிந்து விடாது. |
| வளமார் கவிகள் வாக்குமூலங்கள் | – | வளமார்ந்த கவிஞர்கள் தங்களது வாக்கு மூலங்களை |
| இறந்த பின்னாலே எழுதுக தீர்ப்பு | – | நான் இறந்த பின்னர் தீர்ப்பாக எழுதுங்கள் |
| கல்லாய் மரமாய்க் காடுமேடாக | – | கல்லாக, உணர்வில்லாத மரமாக, காடுமேடாக |
| மாறாதிருக்க யான் | – | மாற்றமடையாமல் இருக்க |
| வனவிலங்கல்லேன் | – | நான் காட்டில் வாழும் விலங்கு அல்லேன் |

### பொருளுரை:

என்னைப் பிறர் புகழ்ந்தால் என் உடல் சிலிர்ப்படையாது. பிறர் என்னை இழிவாகப் பேசினால் என் உள்ளம் மடிந்து விடாது. வளமார்ந்த கவிஞர்கள் தங்களது வாக்கு மூலங்களை நான் இறந்த பின்னர் தீர்ப்பாக எழுதுங்கள். கல்லாக, உணர்வில்லாத மரமாக, காடுமேடாக மாற்றமடையாமல் இருக்க நான் காட்டில் வாழும் விலங்கு அல்லேன்.

### விளக்கவுரை:

உண்மையான கவிஞர் புகழ்ச்சிக்கும், இகழ்ச்சிக்கும் கவலைப்பட மாட்டான்..

**பாடல்:**

*மாற்றம் எனது மானிடத் தத்துவம்;*
*மாறும் உலகின் மகத்துவம் அறிவேன்!*
*எவ்வெவை தீமை எவ்வெவை நன்மை*
*என்ப தறிந்து ஏகுமென் சாலை!*
*தலைவர் மாறுவர்; தர்பார் மாறும்;*
*தத்துவம் மட்டுமே அட்சய பாத்திரம்!*
*கொள்வோர் கொள்க ; குரைப்போர் குரைக்க !*
*உள்வாய் வார்த்தை உடம்பு தொடாது;*
*நானே தொடக்கம் ; நானே முடிவு;*
*நானுரைப் பதுதான் நாட்டின் சட்டம்!*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| மாற்றம் எனது மானிடத் தத்துவம் | – மாற்றம் காண்பது எனது மனிதத் தன்மையின் தத்துவமாகும். |
| மாறும் உலகின் மகத்துவம் அறிவேன் | – மாறுகின்ற உலகத்தில் மேன்மைகளை நான் அறிவேன். |
| எவ்வவை தீமை எவ்வவை நன்மை | – எவை எவை தீமை தரும், எவை எவை நன்மை தரும் |
| என்பது அறிந்த ஏகுமென் சாலை | – என்பவற்றை அறிந்து செல்லும் எனது வழி |
| தலைவர் மாறுவர், தர்பார் மாறும் | – ஆட்சியாளர் மாறுவர். ஆட்சியரங்கம் மாறும். |
| தத்துவம் மட்டுமே அட்சய பாத்திரம் | – உண்மை என்ற தத்துவமே மாறாத தன்மை வாய்ந்தது. |
| கொள்வோர் கொள்க | – ஏற்றுக்கொள்பவர்கள் ஏற்றுக் கொள்ளட்டும். |
| குரைப்போர் குரைக்க | – என்னைப் பார்த்து ஓலமிடுபவர் ஓலமிடட்டும் |
| உள்வாய் வார்த்தை உடம்பு தொடாது | – உள்ளத்தில் இருக்கும் வார்த்தை என் உடம்பைத் தொடாது. |
| நானே தொடக்கம் நானே முடிவு | – நானே ஆரம்பம், நானே இறுதி |
| நானுரைப்பது தான் நாட்டின் சட்டம் | – நான் கூறுவது தான் நாட்டின் சட்டமாகும். |

## பொருளுரை:

மாற்றம் காண்பது எனது மனிதத்தன்மையின் மகத்துவமாகும். மாறுகின்ற உலகின் மேன்மைகளை நான் அறிவேன். எவை எவை தீமை தரும், எவை எவை நன்மை தரும் என்பவற்றை அறிந்து செல்லும் வழி எனதாகும். ஆட்சி செய்யும் தலைவர்கள் மாறுவர். ஆட்சிகள் மாறும். உண்மை என்ற தத்துவமே மாறாத தன்மை வாய்ந்தது. இதனை ஏற்றுக்கொள்பவர்கள் ஏற்றுக் கொள்ளட்டும். என்னைப் பார்த்து ஓலமிடுபவர் ஓலமிடட்டும். உள்ளத்தில் இருக்கும் வார்த்தை என் உடம்பைத் தொடாது. நானே ஆரம்பம். நானே இறுதி; நான் கூறுவது தான் நாட்டினுடைய சட்டம்.

## விளக்கவுரை:

மாற்றம் அடைந்து கொண்டிருப்பதே மானுடத்தின் தத்துவமாகும் என்பதனைக் கவிஞர்கள் அறிவார்கள். காலத்தைக் கணிப்பதால் கவிஞர்கள் காலத்தை வென்றவர்களாகி விடுகின்றனர். இதையே இங்கு கவிஞர் உரைக்கிறார்.

## ஆசிரியர் குறிப்பு:



- பெயர் : கவிஞர் கண்ணதாசன்
- இயற்பெயர் : முத்தையா
- பிறப்பு : 1927 ஜூன் 24
- பிறந்த ஊர் : சிறுகூடல்பட்டி, சிவகங்கை மாவட்டம்.
- இறப்பு : 1981 அக்டோபர் 17
- பெற்றோர் : சாத்தப்பன், விசாலாட்சி
- சிறப்பு : ✦சிறந்த திரைப்படப்பாடலாசிரியர் ✦கவியரங்க கவிஞர் ✦பேச்சாளர் ✦சேரமான் காதலி புதினத்திற்காக சாகித்திய அகாதெமி விருது பெற்றவர் ✦தமிழக அரசவைக் கவிஞராகத் திகழ்ந்தவர்.

## மதிப்பீடு

### பொருள் தருக:

1. உருப்பட – பயன்பட
2. இயம்புவது – கூறுவது
3. ஆக்கல் – உண்டாக்குதல்
4. பற்றுதல் – விருப்பம்
5. எமர் – எம்மவர்
6. பண்டோர் – பண்டைய நாளில்
7. முனைவேன் – முற்படுவேன்
8. ஏகுமென் – செல்லும்
9. உடம்பு – உடல்

### இலக்கணக் குறிப்பு தருக:

1. ஆக்கல், அழித்தல், அளித்தல் – தொழிற்பெயர்கள்
2. எவ்வெவை – அடுக்குத்தொடர்
3. கொள்வர் – வினையாலணையும் பெயர்

### பகுபத உறுப்பிலக்கணம் தருக :

1. அழித்தல் – அழி + த் + த் + அல்

அழி – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
அல் – தொழிற்பெயர் விகுதி

2. எழுந்து – எழு + த்(ந்) + த் + உ

எழு – பகுதி
த் – சந்தி; த் (ந்) ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

## பலவுள் தெரிக

### பாடநூல் வினா:

1. காலக்கணிதம் கவிதையில் இடம்பெற்ற தொடர் __________ PTA

அ) இகழ்ந்தால் என் மனம் இறந்துவிடாது
ஆ) என் மனம் இகழ்ந்தால் இறந்துவிடாது
இ) இகழ்ந்தால் இறந்துவிடாது என் மனம்
ஈ) என் மனம் இறந்துவிடாது இகழ்ந்தால்

விடை : இகழ்ந்தால் என் மனம் இறந்துவிடாது

கூடுதல் வினாக்கள்:

2. கண்ணதாசனின் இயற்பெயர் ________.

அ) மூக்கையா ஆ) முத்தரசன்
இ) முத்தையா ஈ) வளவனார்

விடை : இ) முத்தையா

3. 'மாற்றம் எனது மானிடத் தத்துவம்' என்று கூறியவர் ________.

அ) கண்ணதாசன் ஆ) கபிலர்
இ) பாரதியார் ஈ) பாரதிதாசன்

விடை : அ) கண்ணதாசன்

4. தலைவர் மாறும்; தர்பார் மாறுவர்; என்பதன் சரியான தொடர்

அ) தலைவர், தர்பார்; மாறும் மாறுவர் ஆ) தலைவர் மாறுவர். தர்பார் மாறும்
இ) தர்பார் மாறும். தலைவர் மாறுவர் ஈ) மாறுவர் மாறும். தர்பார் தலைவர்

விடை : ஆ) தலைவர் மாறுவர். தர்பார் மாறும்

## பாடலைப் படித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளி

"மாற்றம் எனது மானிடத் தத்துவம்
மாறும் உலகின் மகத்துவம் அறிவேன்!
எவ்வெவை தீமை எவ்வெவை நன்மை
என்பதறிந்து ஏகுமென் சாலை!
தலைவர் மாறுவர்; தர்பார் மாறும்!
தத்துவம் மட்டுமே அட்சயப் பாத்திரம்!"

1. இப்பாடல் வரிகளின் ஆசிரியர் யார்?

அ) வாணிதாசன் ஆ) கண்ணதாசன்
இ) வண்ணதாசன் ஈ) முடியரசன்

விடை : ஆ) கண்ணதாசன்

2. இப்பாடலின் தலைப்பு யாது?

அ) இயேசு காவியம் ஆ) சேரமான் காதலி
இ) தைப்பாவை ஈ) காலக்கணிதம்

விடை : ஈ) காலக்கணிதம்

3. மானிடத்துவம் என்று எதனை ஆசிரியர் குறிப்பிடுகிறார்?

அ) வளர்ச்சி ஆ) ஏற்றத்தாழ்வு
இ) புகழ் ஈ) மாற்றம்

விடை : ஈ) மாற்றம்

4. பாடலில் அமைந்துள்ள மோனைச் சொற்களை எழுதுக.

அ) மாற்றம், மாறும் ஆ) மானிடம், மகத்துவம்
இ) எவ்வெவை, ஏகுமென் ஈ) மாறுவர், மாறும்

விடை : அ) மாற்றம், மாறும்

## குறுவினா

பாடநூல் வினா:

1. 'கொள்வோர் கொள்க; குரைப்போர் குரைக்க!
உள்வாய் வார்த்தை உடம்பு தொடாது'

அ) அடியெதுகையை எடுத்தெழுதுக.

கொள்வோர்
உள்வாய்

ஆ) இலக்கணக் குறிப்பு எழுதுக.

கொள்க, குரைக்க – வியங்கோள் வினைமுற்று

**கூடுதல் வினாக்கள்:**

2. அவனும் யானுமே அறிந்தவை என கவிஞர் எவற்றைக் குறிப்பிடுகிறார்?

ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்றனையும் இறைவனும் நானுமே அறிந்தவை என்று ஆசிரியர் கூறுகிறார்.

3. தொழில், வேலை பற்றி கவிஞர் உரைப்பன யாவை?

- எவை சரியோ அவற்றைக் கூறுவது எனது தொழில்.
- எது தவறோ அவற்றை எதிர்ப்பது எனது வேலை என்று ஆசிரியர் கூறுகிறார்.

4. மாற்றம் எனது மானிட தத்துவம் என்று ஏன் ஆசிரியர் கூறுகிறார்?

- கல்லைப் போலவும், மரத்தைப் போலவும், காடு மேட்டைப் போலவும் மாறாது இருக்க நான் காட்டிலுள்ள விலங்கு அல்லன்.
- மாறுகின்ற உலகில் நானும் மாறிக்கொண்டே இருப்பவன் என்று ஆசிரியர் கூறுகிறார்.

## சிறுவினா

**கூடுதல் வினாக்கள் :**

1. மாறாதிருக்க யான் வன விலங்கல்லன் என ஆசிரியர் கூறக் காரணம் யாது?

- என்னை யாராவது புகழ்ந்தால் என் உடல் பரவசமடையாது.
- இகழ்ந்தால் என் உள்ளம் இறந்துவிடாது.
- வளமார்ந்த கவிதைகள் வாக்குமூலங்கள். நான் இறந்த பின்னர் எழுதுங்கள், எனக்குத் தீர்ப்பளியுங்கள்.
- கல்லாக, மரமாக, காடுமேடாக மாறாமல் இருக்க யான் காட்டிலுள்ள விலங்கு அல்லேன்.

2. கவிஞர் கண்ணதாசன் – குறிப்பு வரைக.

- இயற்பெயர் – முத்தையா
- பிறப்பு – 1927 ஜூன் 24
- இறப்பு – 1981 அக்டோபர் 17
- புனைப் பெயர்கள் – வணங்காமுடி, காரைமுத்துப் புலவர், ஆரோக்கியநாதன்
- பிறந்த ஊர் – சிறுகூடல்பட்டி, சிவகங்கை மாவட்டம்
- பெற்றோர் – சாத்தப்பன் – விசாலாட்சி
- எழுதிய நூல்கள் – ✦ ஆட்டனத்தி ஆதிமந்தி ✦ மாங்கனி ✦ இயேசு காவியம் ✦ கல்லக்குடி
- நாடகங்கள் – ✦ அனார்கலி ✦ சிவகங்கைச் சீமை
- புதினங்கள் – ✦ ஆயிரந்தீவு ✦ அங்கயற்கண்ணி ✦ சேரமான் காதலி

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. காலக்கணிதம் கவிதையில் பொதிந்துள்ள நயங்களைப் பாராட்டி எழுதுக. PTA

கவிஞன் யானோர் காலக் கணிதம்
கருப்படு பொருளை உருப்பட வைப்பேன்
புவியில் நானோர் புகழுடைத் தெய்வம்
பொன்னிலும் விலைமிகு பொருளென் செல்வம்!
இவை சரியென்றால் இயம்புவதென் தொழில்
இவை தவறாயின் எதிர்ப்ப தென் வேலை
ஆக்கல் அளித்தல் அழித்தல் இம்மூன்றும்
அவனும் யானுமே அறிந்தவை; அறிக!

– கவிஞர் கண்ணதாசன்

முன்னுரை:

- கவிஞர் கண்ணதாசன் தமிழக அரசவைக் கவிஞராக இருந்தவர். ஏராளமான திரைப்படப் பாடல்களை எழுதிப் புகழ் பெற்றவர். சாகித்ய அகாதெமி விருது பெற்றவர்
- அவரது பாடல்கள் சந்த நயமும், பொருள் நயமும் கொண்டு எளிய மக்களும் சுவைத்து இன்புறும் வகையில் இருக்கும்.

மையக் கருத்து:

கவிஞன் என்பவன் கருப்பொருளை உருவாக்கும் காலக்கணிதம் என்பது இப்பாடலின் மையக்கருத்து.

பாடலின் திரண்ட கருத்து:

கவிஞனாகிய நான் ஒரு காலத்தைக் கணிக்கும் மனிதனாவேன். உள்ளத்தில் தோன்றும் உண்மைப் பொருளை எல்லோருக்கும் தெரியும் படி வெளிப்படுத்துவேன்.

- இந்த பூமியில் நான் எல்லோராலும் போற்றப்படும் தெய்வமாவேன், பொன்னை விட விலை மிகுந்த செல்வம் என்னுடையது.
- இவையெல்லாம் சரி என்று சொன்னால் அதை கூறுவது என் பணி.
- இவை தவறு என்று சொன்னால் எதிர்ப்பது என் பணி.
- ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்று பணிகளையும் இறைவனும் நானும் மட்டும் அறிந்தவையாகும். அதனை நீங்களும் அறிவீர்களாக!

தொடை நயம்:

"தொடையற்ற பாட்டு நடையற்றுப் போகும்" என்பதைப் போல் இப்பாடலில் எதுகை, மோனை நயங்கள் திறம்பட அமைந்துள்ளன.

மோனைத் தொடை:

அடிதோறும் அல்லது சீர்தோறும் முதல் எழுத்து ஒன்றி வருவது மோனைத் தொடை.

சீர்மோனை
கவிஞன் – காலக் – கணிதம்
புவி – புகழுடை
பொன்னிலும் – பொருளென்
இவை – இயம்புவதென்
அவனும் – அறிந்தவை

அடிமோனை
கவிஞன்
கருப்படு
புவியில்
பொன்னிலும்
இவை
இவை
ஆக்கல்
அவனும்

எதுகைத் தொடை:

அடிதோறும் அல்லது சீர்தோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகைத் தொடை எனப்படும்.

சீர்எதுகை
கருப்படு, உருப்பட,
அறிந்தவை, அறிக

அடிஎதுகை
இவை
இவை

**சொல் நயம்:**

"அர்ச்சுனனுக்கு வில்லு, பாடலுக்கு சொல்லு"

கவிஞர் கண்ணதாசனின் இப்பாடலில் சொல்நயம் மிகச்சிறப்பாக அமைந்துள்ளது.

எ.கா. யானோர் காலக்கணிதம்
நானோர் புகழுடைத் தெய்வம்

– என்ற அடிகளில் சொல்நயம் மிளிர்வதைக் காணலாம்.

**சுவை நயம்:**

'புவியில் நானோர் புகழுடைத் தெய்வம்
பொன்னினும் விலைமிகு பொருளென் செல்வம்
என்னும் அடிகளில் பெருமிதச்சுவை மிகுந்துள்ளதைக் காணலாம்.

**அணி நயம்:**

கவிஞர் கண்ணதாசன் தன்னையே 'யானோர் காலக்கணிதம்' என்றும், 'நானோர் புகழுடைத் தெய்வம்' என்றும் உருவகப் படுத்திக் கூறியுள்ளமையைக் காணலாம்.

**முடிவுரை:**

காலக் கணிதம் எனும் கண்ணதாசன் பாடலில் பொருள் நயம், தொடை நயம், சுவைநயம், சொல்நயம், உருவகம் போன்ற பல்வேறு நயங்கள் அழகுபட மிக எளிமையாகப் பாடப்பட்டுள்ளது. இப்பாடலை நாமும் படித்து பிறகு மீண்டும் படிக்கத் தூண்டும் அளவுக்கு இனிமைமிகு பாடலாக இருக்கிறது.

## கற்பவை கற்றபின்

**கவிதைகளை ஒப்பிட்டுக் கருத்துரைக்க:** PTA

**கவிச்சக்கரவர்த்தியும், கவியரசும்**

நதியின் பிழையன்று
நறும்புனலின்மை அன்றே
பதியின் பிழையன்று
பயந்த நம்மைப் புரந்தான்
மதியின் பிழையன்று
மகன் பிழையன்று மைந்த
விதியின் பிழை நீ
இதற்கென்ன வெகுண்டதென்றன்

– கம்பன்

நதிவெள்ளம் காய்ந்து விட்டால்
நதிசெய்த குற்றம் இல்லை
விதிசெய்த குற்றம் இன்றி
வேறுயாரம்மா!

– கண்ணதாசன்

விடை:

- இரண்டு கவிதைகளும் ஒத்த கருத்துக்களைக் கூறுகின்றன.
- ஆற்றில் நீர் இல்லையென்றால் ஆற்றின் குற்றமில்லை. விதி செய்த பிழைக்கு என்னை வெகுண்டு பேசியது ஏன் என்று கம்பர் கேட்கிறார்.
- விதி செய்த குற்றம் இன்றி வேறு யாரம்மா? என கண்ணதாசன் கேட்கிறார்.
- நம்மையும் மீறி நடைபெறுவது விதியின் பிழையே என்று இருவரும் ஒப்புக் கொள்கின்றனர்.





இயல் - 8

விரிவானம்

அறம், தத்துவம், சிந்தனை – பெருவழி

# 4. இராமானுசர் (நாடகம்)

## நெடுவினா

### கூடுதல் வினா:

1. 'இராமானுசர்' என்னும் நாடகத்தின் கதையைச் சுருக்கி எழுதுக. (அல்லது) இராமானுசர் நாடகத்தின் மூலம் அறியலாகும் செய்திகள் யாவை? PTA

**முன்னுரை:**

12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மலர்வது குறிஞ்சி. தலைமுறைக்கு ஒரு முறை மட்டுமே மலர்வது மூங்கில். நம் தலைமுறைக்கு ஒரு முறை பிறப்பவர்களே ஞானிகள். அத்தகைய ஞானிகளுள் ஒருவர் இராமானுசர். அவரைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

**தண்டும் கொடியுமாக:**

திருமந்திரத் திருவருள் பெறத் தண்டும், கொடியுமாக இராமானுசரை வரச் சொல்லுங்கள் என்னும் செய்தி, பூரணரால் திருவரங்கத்திற்கு அனுப்பப்பட்டது. அதனால் இராமானுசர், கூரேசர், முதலியாண்டான் ஆகிய மூவரும் பூரணர் இல்லத்திற்கு வந்தனர். அவர்களைக் கண்ட பூரணர் கோபம் கொண்டு "நான் உனக்கு மட்டும் தான் அம்மந்திரத்தைச் சொல்வேன். நீ உறவுகளுடன் ஏன் வந்தாய்?" என வினவினார். அதற்கு இராமானுசர், "தாங்கள் கூறிய தண்டு கொடிக்கு இணையானவர்கள் இவர்கள். எனவே கோபம் கொள்ளாது பரிவு கொண்டு திருவருள் புரிய வேண்டும்" என்று கூறினார்.

**ஆசிரியரின் கட்டளை:**

பூரணர் மூவரையும் வீட்டிற்குள் அழைத்து "நான் கூறப்போகும் திருமந்திர மறை பொருள்கள் உங்கள் மூவருக்கு மட்டுமே தெரிய வேண்டும். வேறு யாரிடமாவது இதைக் கூறினால் அது ஆசிரியர் கட்டளையை மீறியதாகும். அப்படி நடந்தால் அதற்குத் தண்டனையாக நரகமே கிட்டும்'' என்றார். பின்னர் "திருமகளுடன் கூடிய நாரயணனின் திருப்பாதங்களைப் புகலிடமாகக் கொள்கிறேன்; திருவுடன் சேர்ந்த நாராயணனை வணங்குகிறேன்'' என்று பூரணர் கூறிய திருமந்திரத்தை மூவரும் மூன்று முறை உரக்கச் சொன்னார்கள்.

**திருமந்திரத்தை மக்களுக்கு உரைத்தல்:**

திருக்கோட்டியூர் சௌம்ய நாராயணன் திருக்கோவில் மதில் சுவரின் மேல் இராமனுசர் நின்று கொண்டு, உரத்த குரலில் பேசத் தொடங்கினார். "கிடைப்பதற்கரிய பிறவிப்பிணியைத் தீர்க்கும் அருமருந்தான திருமந்திரத்தை உங்களுக்குக் கூறுகிறேன். அனைவரும் இணைந்து மந்திரத்தைச் சொல்லுங்கள்''. அவர் சொல்லச் சொல்ல அனைவரும் உரத்தக் குரலில் மூன்று முறை கூறினார்கள்.

**குருவின் சொல்லை மீறுதல்:**

குருவின் (பூரணரின்) சொல்லை மீறியதற்காக கோபம் கொண்ட பூரணரிடம் "கிடைப்பதற்குரிய மந்திரத்தைத் தங்களின் திருவருளால் நான் பெற்றேன். அதன் பயனை அனைவருக்கும் கிட்டவேண்டும். அவர்கள் பிறவிப்பிணி நீங்கி பெரும் பேறு பெற்றிட, நான் மட்டும் நரகத்தை அடைவேன்'' என்று விளக்கமளித்தார்.

**குருவின் ஆசி:**

இராமானுசரின் பரந்த மனத்தைக் கண்ட குரு பூரணர், அவரை மன்னித்து அருளினார் மேலும் இறைவனின் ஆசி பெற அவரை வாழ்த்தினார். இராமானுசத்திற்கு தன் மகன் சௌம்ய நாராயணனை அடைக்கலமாக அளித்தார்.

முடிவுரை:

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உயரிய மந்திரத்தை வாழ்வாக்கியவர் இராமானுசர். தனக்கென வாழாது பிறருக்காக நரகமும் செல்ல முன்வந்த பெருமகனார்.

## கற்பவை கற்றபின்

1. கருத்துகளை உரைநடையாகப் படிப்பதிலும் நாடகமாகப் படிப்பதிலும் நீங்கள் உணரும் வேறுபாடுகள் குறித்துக் கலந்துரையாடுக.

**உரைநடையாகப் படிப்பதனால்:**

- கருத்துகளை உரைநடையாகப் படிப்பது ஒரே ஒருவர் பேசுவது போல் அமையும்.
- ஆற்றின் ஓட்டம் போல மொழி நடை அமைந்திருக்கும்.
- ஏற்ற இறக்கங்கள், உணர்ச்சி வெளிப்பாடுகளை அதிகம் காண இயலாது.
- படிக்கும் போது சோர்வும் களைப்பும் ஏற்பட வாய்ப்புண்டு.

**நாடகமாகப் படிப்பதனால்:**

- இருவர் அதற்கு மேற்பட்டவர்கள் உரையாடலாக அமையும்.
- ஏற்றமும், இறக்கமும் மொழிநடையில் காணப்படும்.
- உணர்ச்சி வெளிப்பாடு அமையும் வகையில் மொழிநடை அமையும்.
- படிக்கும் போது சோர்வோ களைப்போ ஏற்படாது.

உரைநடையாகப் படிப்பதைவிட நாடகமாகப் படிப்பது விரைவாக படித்து முடிக்க முடியும்.

2. இந்நாடகம் வெளிப்படுத்துவது போன்று இராமானுசர் வாழ்க்கை நிகழ்வுகள் சிலவற்றைத் தொகுத்து, அவை குறித்த உங்களின் கருத்துகளை எடுத்துரைக்க.

- இராமானுசர் திருவாய்மொழியின் செவிலித்தாய் எனப் போற்றப்படுவர்; தமிழ்நெறி போற்றும் வைணவர்.
- யமுனாச்சாரியாரின் அழைப்பை பெரிய நம்பிகள் மூலம் கேள்வியுற்று காஞ்சிபுரத்திலிருந்து ஓடோடி வந்த இராமானுசர் யமுனாச்சாரியாரின் உயிர் பிரிந்த உடலைப் பார்த்தார். ஆனால் அவ்வுடலின் மூன்று கைவிரல்கள் மட்டும் மடியாத நிலையில் இருந்தன. யாராலும் காரணம் சொல்ல இயலவில்லை, இராமானுசர் மூன்று பிரமாணங்கள் எடுத்துக் கொள்வதாகச் சொல்லி அப்பிரமாணங்களை ஒவ்வொன்றாகச் சொன்னதும் மூன்று விரல்களும் ஒவ்வொன்றாக மடிந்தன.
- யமுனாச்சாரியாரின் வைணவத் தத்துவங்களைக் கற்பதற்காகவே இரண்டாண்டுகள் தவமிருந்தார் இராமானுசர். யமுனாச்சாரியாரின் ஐந்து சீடர்களில் ஒருவரான திருக்கோட்டியூர் நம்பியிடம் எட்டெழுத்து மந்திரத்தை "எவருக்கும் கவளியிடக் கூடாது" என்ற நிபந்தனையின் பேரில் உபதேசம் பெற்றார். ஆனால் உபதேசம் பெற்றவுடன் திருக்கோட்டியூர் கோவில் கோபுரத்தின் மேலேறி மாந்தர் அனைவருக்கும் கேட்கும்படி அதை எல்லோருக்கும் உபதேசம் செய்தார். இதனால் மிகுந்த கோபமுற்ற திருக்கோட்டியூர் நம்பி இரகசிய மந்திரத்தை இப்படி யாவருக்கும் சொல்வது குருவின் சொல்லுக்கு துரோகமிழைப்பதாகும் என்றும், இதற்கு நரகம் புக நேரிடும் என்றதற்கு இராமனுசர் 'எல்லோரும் முக்தியடைய, தான் ஒருவன் நரகத்திற்குச் செல்வதும் பாக்கியமே' என்றார். இந்த பதிலைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி அரங்கனின் கருணையையும் இவரின் கருணை மிஞ்சிடக்கண்டு இவரே "எம்பெருமானார்" என்று மகிழ்ச்சியினால் ஆலிங்கனம் செய்து கொண்டார்"
- இவ்விரு நிகழ்வுகளிலும் இராமானுசர் ஓர் உன்னதமான மனிதர் என்பதை அறிகிறோம். அன்பு, பொறுமை, சாந்தம், தாழ்ச்சி, பரிவு போன்ற பண்புகள் அவருடைய வாழ்வில் மிளிர்வதைக் காண்கிறோம். பிறர் வாழ்வு பெறுவதற்காக நான் நரகம் செல்வதற்கும் தயார் என்று சொல்வது உன்னதத்தின் உச்சகட்டம். வாழ்க்கையை பிறருக்காக வாழும் போது பொருள் உள்ளதாகிறது. அத்தகைய சிறப்புமிகு வாழ்வை இராமானுசர் வாழ்ந்தார்.



இயல் - 8 இலக்கணம்

அறம், தத்துவம், சிந்தனை – பெருவழி

# 5. பா-வகை, அலகிடுதல்

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் அமைந்த பாவினம் ______.
   அ) அகவற்பா ஆ) வெண்பா
   இ) வஞ்சிப்பா ஈ) கலிப்பா
   விடை : அ) அகவற்பா

**கூடுதல் வினாக்கள்:**

2. யாப்பின் உறுப்புகள் ______ வகைப்படும்.
   அ) இரண்டு ஆ) ஆறு
   இ) ஐந்து ஈ) நான்கு
   விடை : ஆ) ஆறு

3. வெண்பாவிற்குரிய ஓசை ______ ஆகும்.
   அ) செப்பல் ஓசை ஆ) துள்ளல் ஓசை
   இ) அகவல் ஓசை ஈ) தூங்கல் ஓசை
   விடை : அ) செப்பல் ஓசை

4. தளை ______ வகைப்படும்.
   அ) ஐந்து ஆ) ஆறு
   இ) நான்கு ஈ) ஏழு
   விடை : அ) ஏழு

5. பா வகைகள் ______ ஆகும்.
   அ) நான்கு ஆ) ஐந்து
   இ) மூன்று ஈ) ஆறு
   விடை : ஆ) நான்கு

## குறுவினா

**பாடநூல் வினாக்கள்:**

1. குறள் வெண்பாவின் இலக்கணத்தை எழுதி எடுத்துக்காட்டுத் தருக. PTA
   - ஈற்றடி முச்சீராய், ஏனைய அடிகள் நாற்சீராய் வரும்.
   - இயற்சீர் வெண்சீர் மட்டுமே பயின்றுவரும்.
   - இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை மட்டும் பயின்று வரும்.
   - செப்பலோசை பெற்று வரும்.
   - இரண்டு அடிகளைப் பெற்று வரும்.
   - ஈற்றுச்சீர் நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடியும்.

   (எ.கா) உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
   கல்லார் அறிவிலா தார்.

2. வஞ்சிப்பாவிற்கு உரிய ஓசை தூங்கல் ஓசை ஆகும். துள்ளல் ஓசை கலிப்பாவிற்கு உரியது – இத்தொடர்களை ஒரே தொடராக இணைத்து எழுதுக.

   வஞ்சிப்பாவிற்கும் கலிப்பாவுக்கும் உரிய ஓசைகள் முறையே தூங்கல் ஓசை, துள்ளல் ஓசை ஆகும்.

### கூடுதல் வினாக்கள்:

3. பா எத்தனை வகைப்படும்? அவை யாவை?

பா நான்கு வகைப்படும்

- வெண்பா
- ஆசிரியப்பா
- கலிப்பா
- வஞ்சிப்பா

4. நான்கு பாக்களுக்கும் உரிய ஓசைகள் யாவை?

வெண்பா – செப்பல் ஓசை
ஆசிரியப்பா – அகவல் ஓசை
கலிப்பா – துள்ளல் ஓசை
வஞ்சிப்பா – தூங்கல் ஓசை

5. வெண்பா எத்தனை வகைப்படும்? அவை யாவை?

வெண்பா ஐந்து வகைப்படும்.

- குறள் வெண்பா
- சிந்தியல் வெண்பா
- நேரிசை வெண்பா
- இன்னிசை வெண்பா
- பஃறொடை வெண்பா

6. அலகிடுதல் என்றால் என்ன?

அலகிடுதல் என்பது சீரைப் பிரித்து அசை பார்த்து அசைக்கேற்ற வாய்பாடு காணுதல் ஆகும்.

7. அசை என்றால் என்ன? அசை எத்தனை வகைப்படும்?

செய்யுளில் சீர்களைப் பிரிப்பது அசை எனப்படும். அசை இரண்டு வகைப்படும். அவை நேரசை, நிரையசை.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. ஆசிரியப்பாவின் பொது இலக்கணத்தை எழுதுக.

- அளவடிகளைப் பெற்று வரும்.
- இயற்சீர் (மாச்சீர், விளச்சீர்) பயின்று வரும்.
- ஆசிரியத்தளைகள் பயின்று வரும்.
- மூன்றடிச் சிற்றெல்லையுடன், பாடும் புலவனின் மனக்கருத்திற்கேற்ப பல அடிகளைப் பெற்று வரும்.
- அகவலோசை பெற்று வரும்.
- ஈற்றடியின் இறுதிச்சீர் ஏகாரத்தில் முடிவது சிறப்பு.

### கூடுதல் வினாக்கள்:

2. வெண்பாவின் பொது இலக்கணத்தை எழுதுக. PTA

- ஈற்றடி முச்சீராய், ஏனைய அடிகள் நாற்சீராய் வரும்.
- இயற்சீர் வெண்சீர் மட்டுமே பயின்றுவரும்.
- இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை மட்டும் பயின்று வரும்.
- செப்பலோசை பெற்று வரும்.
- இரண்டு அடி முதல் பன்னிரண்டு அடி வரை வரும்.

3. ஈரசைச்சீர் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

ஈரசைச்சீர் நான்கு வகைப்படும்.

- நேர்நேர் – தேமா
- நிரைநேர் – புளிமா
- நிரை நிரை – கருவிளம்
- நேர் நிரை – கூவிளம்

4. கீழ்க்காணும் குறளை அலகிட்டு வாய்பாடு தருக.

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லைப் பொருள்.

| வ.எண் | சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|---|
| 1. | பொரு/ளல் | நிரை நேர் | புளிமா |
| 2. | லவ/ரைப் | நிரை நேர் | புளிமா |
| 3. | பொரு/ளா/கச் | நிரை நேர் நேர் | புளிமாங்காய் |
| 4. | செய்/யும் | நேர் நேர் | தேமா |
| 5. | பொரு/ளல்/ல | நிரை நேர் நேர் | புளிமாங்காய் |
| 6. | தில்/லைப் | நேர் நேர் | தேமா |
| 7. | பொருள் | நிரை | மலர் |

இக்குறள் மலர் என்னும் வாய்பாட்டால் முடிந்தது.

## கற்பவை கற்றபின்

1. பாடநூலில் இடம்பெற்றுள்ள கவிதைகளையும் அவற்றின் பா வகைகளையும் வகைப்படுத்திப் பட்டியல் இடுக.

அன்னை மொழியே – ஆசிரியப்பா
காற்றே வா – இணைக்குறள் ஆசிரியப்பா
முல்லைப்பாட்டு – கலிவெண்பா
மலைபடுகடாம் – ஆசிரியப்பா
திருக்குறள் – குறள்வெண்பா
பெருமாள் திருமொழி – ஆசிரியப்பா
பரிபாடல் – கலிவெண்பா
நீதி வெண்பா – வெண்பா
திருவிளையாடற்புராணம் – வெண்பா
பூத்தொடுத்தல் – இணைக்குறள் ஆசிரியப்பா
முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் – ஆசிரியப்பா
கம்பராமாயணம் – கலிப்பா
ஏர் புதிதா – ஆசிரியப்பா
மெய்க்கீர்த்தி – ஆசிரியப்பா
சிலப்பதிகாரம் – ஆசிரியப்பா
ஞானம் – ஆசிரியப்பா
காலக்கணிதம் – ஆசிரியப்பா
சித்தாளு – இணைக்குறள் ஆசிரியப்பா
தேம்பாவணி – வெண்பா

2. வெண்பாவில் அமைந்த நூல்கள், ஆசிரியப்பாவில் அமைந்த இலக்கியங்கள் பற்றி வகுப்பில் கலந்துரையாடுக.

வெண்பாவில் அமைந்த நூல்கள் திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, ஏலாதி போன்ற அறநூற்களாகும். வெண்பா மிகவும் தூய வெண்மையான பா வகை ஆகும். அறக்கருத்துகளை அதிகம் கூறுகின்ற பா வகை வெண்பா அகும். நீதிநூல்கள், அறநூல்கள், உலக உண்மைகளை உணர்த்தும் நூல்கள் அனைத்தும் வெண்பாவிலே பாடப்பட்டுள்ளன.

வெண்பாவை எளிதில் யாராலும் பாட முடியாது. யாப்பிலக்கணம் கற்ற கவிஞர்களால் மட்டும் பாடப்படுவது வெண்பா. அதனால் தான் பிற்காலத்தில் வெண்பாவால் பாடப்பட்ட நூல்கள் வெளிவரவில்லை.

ஆசிரியப்பாவால் பாடப்பட்ட நூல்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, பிள்ளைத் தமிழ் நூல்கள், பக்தி இலக்கியங்கள் போன்றவை ஆகும். தொடர்நிலைச் செய்யுள் வகைகள், காப்பியங்கள் ஆசிரியப்பாவால் பாடப்பட்டுள்ளன. வரலாற்று நூல்கள், புராண நூல்கள் ஆசிரியப்பாவால் பாடப்பட்டவையாகும்.

## மொழியை ஆள்வோம்

### மொழி பெயர்ப்பு

1. **Once upon a time there were two beggars in Rome. The first beggar used to cry in the streets of the city, "He is helped whom God helps". The Second beggar used to cry, "He is helped who the king helps". This was repeated by them everyday. The Emperor of Rome heard it so often that he decided to help the beggar who popularized him in the streets of Rome. He ordered a loaf of bread to be baked and filled with pieces of gold. When the beggar felt the heavy weight of the bread, he sold it to his friend as soon as he met him. The latter carried it home. When he cut the loaf of bread he found sparkling pieces of gold. Thanking God, he stopped begging from that day. But the other continued to beg through the city. Puzzled by the beggar's behaviour, the Emperor summoned him to his presence and asked him, "What have you done with the loaf of bread that I had sent you lately?" The man replied, "I sold it to my friend, because it was heavy and did not seem well baked" Then the Emperor said, "Truly he whom God helps is helped indeed," and turned the beggar out of his palace.**

முன்னொரு காலத்தில் உரோம் நகரத்தில் இரண்டு பிச்சைக்காரர்கள் இருந்தனர். முதல் பிச்சைக்காரன் தெருக்களில் "கடவுள் யாருக்கு உதவுகிறாரோ, அவன் தான் உதவியைப் பெறுவான்" என்று கத்திக் கொண்டே செல்வான். இரண்டாவது பிச்சைக்காரனோ "அரசன் யாருக்கு உதவுகிறாரோ, அவன் தான் உதவியைப் பெறுவான்" என்று கத்திக் கொண்டே செல்வான். இதைப் பற்றி அடிக்கடி கேள்விப்பட்ட உரோமப் பேரரசன், யார் தன்னை உரோம வீதிகளில் விளம்பரப்படுத்தி பெருமைப்படுத்துகிறானோ அவனுக்கு உதவி செய்ய தீர்மானித்தார். அவர் ஒரு ரொட்டித் துண்டினை, உள்ளே தங்கத் துண்டுகளை வைத்து தயாரிக்கச் சொன்னார். ரொட்டி அதிக எடையாக இருந்ததால், அதனைப் பெற்ற பிச்சைக்காரன், அதனை தன் நண்பனைச் சந்தித்ததும் அவனிடம் அதனை விற்றுவிட்டான். வாங்கியவன் அந்த ரொட்டியை எடுத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்றான். அங்கு ரொட்டியை வெட்டிப் பார்த்த போது ஒளிரும் தங்கக்கட்டிகளை அதில் கண்டான். கடவுளுக்கு நன்றி கூறி விட்டு பிச்சையெடுப்பதை அன்றே நிறுத்தி விட்டான். ஆனால் மற்றொரு பிச்சைக்காரன் தொடர்ந்து நகர வீதிகளில் பிச்சையெடுத்துக் கொண்டிருந்தான். பிச்சைக்காரனின் தன்மையை அறிந்து வியந்த அரசன் அவனை அழைத்து, "உனக்கு நான் அனுப்பிய ரொட்டியை என்ன செய்தாய்?" என்று கேட்டார். அந்த பிச்சைக்காரன், "நான் அந்த ரொட்டியை நண்பனிடம் விற்றுவிட்டேன், ஏனென்றால் அது எடை அதிகமாக இருந்தது. மற்றும் அது சரியாக வேகவில்லை" என்று பதில் கூறினான். உடனே பேரரசன், "உண்மையிலேயே கடவுள் யாருக்கு உதவ விரும்புகிறாரோ அவரே உதவியைப் பெறுவார்" என்று கூறி விட்டு அந்த பிச்சைக்காரனை அரண்மனையிலிருந்து வெளியேற்றினான்.

## மரபுத் தொடருக்கான பொருளறிந்து தொடரில் அமைத்து எழுதுக.

மனக்கோட்டை : வளவன் தான் பெரிய கோடீஸ்வரனாக வரவேண்டும் என்று மனக்கோட்டை கண்டான்.

கண்ணும் கருத்தும் : பூங்கொடி அரசுத் தேர்வுக்காக கண்ணும் கருத்துமாய் படித்து வந்தாள். PTA

அள்ளி இறைத்தல் : நாம் பிறரிடம் பேசும் போதும் வீணாக வார்த்தைகளை அள்ளி இறைத்தல் கூடாது.

ஆறப்போடுதல் : ஒரு சில பிரச்சினைகளை ஆறப்போட்டால் அவை தானாகவே முடிந்துவிடும்.

கயிறு திரித்தல் : நேற்று நான் ஒபாமாவைப் பார்த்தேன் என வளவன் கயிறு திரித்தான். PTA

## பின்வரும் உரையாடலில் உள்ள பேச்சு வழக்கினை எழுத்து வழக்காக மாற்றுக.

"தம்பீ? எங்க நிக்கிறே?" PTA

"நீங்க சொன்ன எடத்துலதாண்ணே! எதிர்த்தாப்புல ஒரு டீ ஸ்டால் இருக்குது."

"அங்னனக்குள்ளேயே டீ சாப்டுட்டு, பேப்பரப் படிச்சிக்கிட்டு இரு,,, நா வெரசா வந்துருவேன்"

"அண்ணே! சம்முவத்தையும் கூட்டிக்கிட்டு வாங்கண்ணே! அவனெப் பாத்தே ரொம்ப நாளாச்சு!"

"அவம்பாட்டியோட வெளியூர் போயிருக்கான். உங்கூருக்கே அவனைக் கூட்டிக்கிட்டு வர்றேன்,"

"ரொம்பச் சின்ன வயசுல பாத்ததுண்ணே! அப்பம் அவனுக்கு மூணு வயசு இருக்கும்!"

"இப்ப ஒசரமா வளந்துட்டான்! ஒனக்கு அடையாளமே தெரியாது! ஊருக்கு எங்கூட வருவாம் பாரேன்! சரி, போனை வையி. நாங் கௌம்பிட்டேன்..."

"சரிங்கண்ணே"

விடை :

"தம்பி! எங்கே நிற்கிறாய்?"

"நீங்கள் கூறிய இடத்தில் தான் அண்ணா! எதிர்ப்பக்கத்தில் ஒரு தேனீர் கடை இருக்கிறது."

"அந்த இடத்திற்குள்ளேயே தேனீர் சாப்பிட்டு விட்டு, செய்தித் தாளைப் படித்துக் கொண்டு இரு. நான் விரைவாக வந்துவிடுவேன்."

"அண்ணா! சண்முகத்தையும் அழைத்துக் கொண்டு வாருங்கள் அண்ணா! அவனைப் பார்த்தே வெகு நாட்களாகி விட்டன."

"அவன் பாட்டியோடு வெளியூர் போய் இருக்கிறான். உங்க ஊருக்கே அவனை அழைத்துக்கொண்டு வருகிறேன்."

"மிகச் சிறிய வயதில் பார்த்தது அண்ணா! அப்பொழுது அவனுக்கு மூன்று வயது இருக்கும்!"

"இப்பொழுது உயரமாக வளர்ந்து விட்டான். உனக்கு அடையாளமே தெரியாது! ஊருக்கு எங்களுடன் வருவான் பார். சரி, தொலைபேசியை வை. நான் புறப்பட்டு விட்டேன்."

"சரி அண்ணா!"

## கடிதம் எழுதுக

1. உங்கள் தெருவில் மின்விளக்குகள் பழுதடைந்துள்ளன. அதனால் இரவில் சாலையில் நடந்து செல்வோர்க்கு ஏற்படும் இடையூறுகளை எழுதி ஆவன செய்யும்படி மின்வாரிய அலுவலருக்குக் கடிதம் எழுதுக. PTA

அனுப்புநர்

க. அன்பரசன்
10, நேதாஜி நகர்
காந்திபுரம்,
கோயமுத்தூர் – 641 012

பெறுநர்

மின்வாரிய அலுவலர் அவர்கள்
தமிழ்நாடு மின்சார வாரியம்
கோயமுத்தூர் – 641 012

ஐயா,

பொருள் : மின்விளக்குகள் பழுது நீக்க வேண்டி:–

வணக்கம். மக்களுக்கு மின்சார வாரியம் செய்யும் பணிகள் பாராட்டுக்குரியது. எங்கள் பகுதியில் 2000 மக்களுக்கு மேல் வசித்து வருகின்றனர். மூன்று வீதிகளில் மின்சாரக் கம்பங்கள் உள்ளன.

100 க்கும் மேற்பட்ட மின்விளக்குகள் அமைக்கப்பட்டு ஒளியுடன் திகழ்ந்தன. ஆனால் கடந்த இரண்டு வாரங்களாக 40 க்கும் மேற்பட்ட மின்விளக்குகள் பழுதாகி ஒளி தராத அவல நிலையில் உள்ளது. இதனால் இரவு நேரங்களில் மக்கள் சாலைகளில் அச்சமுடன் செல்ல வேண்டியுள்ளது. வழிப்பறி நிகழ்வுகள் தொடர்ந்து நடந்துக் கொண்டிருக்கின்றன.

எனவே விரைவாக மின்விளக்குகளை மாற்றி எங்களுக்கு ஒளி தருமாறு வேண்டுகிறோம். போர்க்கால அடிப்படையில் தாங்கள் எங்கள் விண்ணப்பத்தினை நிறைவேற்றுவீர்கள் என எதிர்பார்க்கிறோம்.

நன்றி.

பாரதி நகர்
20.6.20XX

இப்படிக்கு
தங்கள் உண்மையுள்ள
க. அன்பரசன்

உறைமேல் முகவரி:
மின்வாரிய அலுவலர் அவர்கள்
தமிழ்நாடு மின்சார வாரியம்
கோயமுத்தூர் – 641 012.

## பா நயம் பாராட்டுக

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே
ஆடையிலே எனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

– வள்ளலார்

## முன்னுரை

"இறையருள் பெற்ற குழந்தை" என்று பிறந்தவுடனே பாராட்டப்பட்ட இராமலிங்கர் என்ற வள்ளலார் தன் அன்பு, அறப்பணிகள் மூலம் சமுதாயத்திற்குச் சிறந்த தொண்டாற்றியுள்ளார். அவரின் இப்பாடல் நயங்களைக் காண்போம்.

## மையக் கருத்து

இறைவனின் இனிய தன்மையை இப்பாடல் இனிதாக எடுத்துரைக்கிறது.

## திரண்ட பொருள்

"வாழைக்குக் குருத்து அழகு

கவிதைக்குக் கருத்து அழகு" என்பது போல இப்பாடல் கருத்து நயத்துடன் விளங்குகின்றது.

வறண்ட கோடைக்காலத்தில் நான் ஓய்வெடுக்க குளிர்ச்சி வழங்கும் மரமே, அதன் வழியாக தருகின்ற நிழலே, மரம் வழங்கும் சுவை மிகுந்த கனியே, நீர் ஓடுகின்ற ஓடையில் ஊறுகின்ற சுவைதரும் தண்ணீரே, அந்த நீரினிடையில் மலர்ந்து மணம் விசும் மலரே! மேட்டுப்பகுதியில் வீசுகின்ற மென்மையான காற்றே, அந்த மென்காற்றினால் ஏற்படும் இன்பமே, இன்பத்தால் கிடைக்கும் பயனே ஆடையிலே எனை மணந்த மணவாளா அம்பலத்தில் ஆடுகின்ற அரசே என் பூமாலையை அணிந்து கொள்வாயாக.

## தொடை நயம்

### மோனைத்தொடை

'தொடையற்ற பாட்டு நடையற்று போகும்' என்பதனைக் கருத்தில் கொண்டு இப்பாடல் எதுகை, மோனைகளைத் திறம்பட அமைத்துள்ளார்.

### சீர்மோனை

| | | |
|---|---|---|
| கோடையிலே | – | கொள்ளும் வகை |
| மேடையிலே | – | மெல்லிய |
| ஆடுகின்ற | – | அரசே –அலங்கல் |

### அடிமோனை

| | | |
|---|---|---|
| கோடையிலே | – | குளிர்தருவே |
| ஓடையிலே | – | உகந்த |
| மேடையிலே | – | மென்காற்றில் |
| ஆடையிலே | – | ஆடுகின்ற |

### எதுகை நயம்

'எது கை கொடுக்காவிட்டாலும்

எதுகை கைகொடுக்கும்' என்பதற்கேற்ப இப்பாடலில் எதுகை நயம் பயின்று வந்துள்ளது.

### அடி எதுகை

| | | |
|---|---|---|
| கோடையிலே | – | ஓடையிலே |
| மேடையிலே | – | ஆடையிலே |

## இயைபு நயம்

செய்யுளின் இறுதிச்சீர் ஒன்றிவரத் தொடுப்பது இயைபு நயமாகும்.

கனியே – தண்ணீரே – மலரே – காற்றே – பயனே – அணிந்தருளே

என்று இயைபு நயம் இனிமையாக பயின்று வந்துள்ளது.

### சொல் நயம்

குளிர் தருவே, தரு நிழலே, தீஞ்சுவைத் தண்ணீரே, சுகந்த மணமலரே, மெல்லிய பூங்காற்றே போன்ற சொல்நயம் மிக்க சொற்றொடர்கள் பாடலுக்கு அழகு சேர்க்கிறது.

### அணி நயம்

'காலை மலருக்குப் பணி அழகு

கவிதை மலருக்கு அணியழகு' என்பதற்கேற்ப இப்பாடல் இயல்பாக அமைந்து இன்பம் பயப்பதால் இயல்பு நவிற்சி அணியாயிற்று.

### முடிவுரை

வள்ளலாரின் பாடலைப் படித்துணர்ந்த நாம் இப்பாடல் தரும் இனிய கருத்துகளை வாழ்வில் பின்பற்றி வாழ்வோமாக.

## மொழியை ஆள்வோம்

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, பத்து ஆகிய எண்ணுப்பெயர்கள் இடம்பெறும் திருக்குறளைக் கண்டுபிடித்து எழுதுக.

**ஒன்று**

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்று நன்று உள்ளக் கெடும். (குறள் 109)

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றா தாகி விடும். (குறள் 128)

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ் (குறள் 156)

**இரண்டு**

தானம் தவம்இரண்டும் தங்காவியன உலகம்
வானம் வழங்கா தெனின் (குறள் 19)

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு (குறள் 392)

ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண் (குறள் 581)

**மூன்று**

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை (குறள் 41)

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய் (குறள் 360)

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு (குறள் 383)

ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும் (குறள் 589)

**நான்கு**

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண் (குறள் 146)

கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர் கொளி (குறள் 390)

**ஐந்து**

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் (குறள் 6)

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு கோமான்
இந்திரனே சாலும் கரி (குறள் 25)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை (குறள் 43)

**ஆறு**

படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு (குறள் 381)

**ஏழு**

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின் (குறள் 62)

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு (குறள் 107)

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து (குறள் 398)

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அன்று (குறள் 836)

**எட்டு**

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை (குறள் 9)

**பத்து**

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல் (குறள் 450)

## சொற்களைப் பிரித்துப் பார்த்து பொருள் தருக

**1. கானடை** PTA

கான் அடை – காட்டைச் சேர்
கான் நடை – காட்டுக்கு நடத்தல்
கால் நடை – காலால் நடத்தல்
இவ்வாறு மூன்று வகையாகப் பிரித்துப் பொருள் கூறலாம்.

**2. வருந்தாமரை**

வரும் + தாமரை – வருகின்ற தாமரை
வரும் + தா + மரை – தாவுகின்ற மான் வருகிறது

**3. பிண்ணாக்கு** PTA

பிண் + நாக்கு – பிளவுபட்ட நாக்கு
பிண் + ணாக்கு – எள்ளிலிருந்து எண்ணெய் எடுத்த பின் மிஞ்சுவது

**4. பலகையொலி**

பல + கையொலி – பல கைகளால் சேர்ந்த ஒலி
பலகை + ஒலி – பலகையால் ஏற்படும் ஒலி

### அகராதியில் காண்க

ஆசுகவி – விரைவில் கவி இயற்றுவோன், பிறப்புக் கவிஞன்

மதுரகவி – இலக்கண முறைப்படி கவிதை இயற்றுபவர், அமுதமுறப் பாடும் கவி, இனிய கவி

சித்திரக்கவி – இறைக்கவி, 21 நயங்களோடு கவிதை இயற்றுபவர்

வித்தாரக்கவி – 11 நயங்களில் கவிதை இயற்றுபவர், விரித்து கவிதை இயற்றுபவர்

### கலைச்சொல் அறிவோம்

**Belief** – நம்பிக்கை

**Renaissance** – மறுமலர்ச்சி

**Philosopher** – மெய்யியலாளர்

**Revivalism** – மீட்டுருவாக்கம்

### அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.

### ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



அ) உழைக்காமல் பயனுன்டோ
ஓய்ந்தார்க்கு வெற்றியுண்டோ
இலவசங்களை ஏற்பவனே
இழிசொல்லுக்கு ஆட்படுவானே!
உழைக்காமல் உண்பவனே
பிழைப்பாளி எனப்படுவானே
உழைத்து வாழ்பவனே
உண்மையான குடிமகனாவான்

ஆ) 1. கொடுப்பவர்களைத் தடுப்பதே இவ்வுலகத்தின் தீரச் செயல்.
2. கொடுப்பவன் உயர்ந்து நிற்கிறான்; பெறுபவன் தணிந்து நிற்கிறான்.
3. உதவி செய்பவர்களுக்கு இடையூறு செய்யாமல் இருப்பதே பெரும் உதவி.
4. ஆசையோடு பெறும்பொழுது இடைப்புகுந்து ஆசையை நிராசை ஆக்காதே.
5. பலர் தடுத்தாலும் கொடை கொடுப்பதை விடேல்.

### நிற்க அதற்குத் தக

இது காறும் அறங்கள் நமக்குக் கைகொடுக்கும் நிலையில் நாம் பின்பற்ற வேண்டிய அறங்களும் அதனால் ஏற்படும் நன்மைகளும் பட்டியலிடுக. PTA

| வ.எண் | நாம் செய்ய வேண்டிய அறங்கள் | அறங்கள் தரும் நன்மைகள் |
|---|---|---|
| 1. | நல்ல சொற்களையே தேர்ந்தெடுத்துப் பேசுதல் | நல்ல நண்பர்களைப் பெறலாம்; எதிரிகளையும் நண்பராக்கலாம். |
| 2. | ஒருவரைப் பற்றி இன்னொருவரிடம் மாற்றிப் பேசாதிருத்தல் | நல்ல நட்பு கிடைக்கும், நட்பு தொடரும் |
| 3. | பழிவாங்கும் எண்ணத்தை கைவிடல் | நல்ல சான்றோர்கள் கிடைப்பார்கள். மனஅமைதி கிடைக்கும். |
| 4. | நம்மால் முடிந்த உதவி செய்தல் | மனதிருப்தி கிடைக்கும். மனம் மகிழ்ச்சி பெறும். |

Don

## அலகுத் தேர்வு இயல் - 8

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** $4 \times 1 = 4$

1. 'வீட்டைத் துடைத்துச் சாயம் அடித்தல்' – இவ்வடி குறிப்பிடுவது
அ) காலம் மாறுவதை ஆ) வீட்டைத் துடைப்பதை
இ) இடையறாது அறப்பணி செய்தலை ஈ) வண்ணம் பூசுவதை

2. மேன்மை தரும் அறம் என்பது __________.
அ) கைம்மாறு கருதாமல் அறம் செய்வது
ஆ) மறுபிறப்பில் பயன்பெறலாம் என்ற நோக்கில் அறம் செய்வது.
இ) புகழ் கருதி அறம் செய்வது
ஈ) பதிலுதவி பெறுவதற்காக அறம் செய்வது

3. கண்ணதாசனின் இயற்பெயர்
அ) மூக்கையா ஆ) முத்தையா இ) முத்தரசன் ஈ) வளவனார்

4. சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் அமைந்த பாவினம் ______.
அ) அகவற்பா ஆ) வெண்பா
இ) வஞ்சிப்பா ஈ) கலிப்பா

**II. விடைக்கேற்ற வினா அமைக்க.** $1 \times 1 = 1$

1. 'கவிதை வாழ்க்கையின் திறனாய்வு' என்று திறனாய்வாளர் ஆர்னால்டு கூறுகிறார்.

**III. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** $2 \times 2 = 4$

1. "அவையம்" – குறிப்பு வரைக.
2. காலக்கழுதை கட்டெறும்பானதும் கவிஞர் செய்வது யாது?

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி.** $2 \times 3 = 6$

1. வாளித்தண்ணீர், சாயக்குவளை, கந்தைத்துணி, கட்டைத் தூரிகை – இச்சொற்களைத் தொடர்புபடுத்தி ஒரு பத்தி அமைக்க.
2. மாறாதிருக்க யான் வன விலங்கல்லன் என ஆசிரியர் கூறக் காரணம் யாது?

**V. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக.** $1 \times 8 = 8$

1. அறம் செய்வதில் வணிக நோக்கம் இருக்கக் கூடாது – விவரி. அரசியலில் அறம் எவ்வாறு பேணப்பட வேண்டும்?

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக.** $3 \times 1 = 3$

1. **மொழிபெயர்க்க:**
Then the Emperor said, "Truly he whom God helps is helped indeed" and turned the beggar out of his palace.

2. **மரபுத் தொடருக்கான பொருளறிந்து தொடரில் அமைத்து எழுதுக.**
மனக்கோட்டை

3. **பேச்சு வழக்கினை எழுத்து வழக்காக மாற்றுக:**
அவம் பாட்டியோட வெளியூர் போயிருக்கான். உங்கூருக்கே அவனெ கூட்டிக்கிட்டு வர்றேன்.

**VII. அடிமாறாமல் எழுதுக:** $1 \times 4 = 4$

1. 'மாற்றம் எனது' எனத் தொடங்கும் மனப்பாடப் பாடலை எழுதுக.





இயல் - 9

உரைநடை

## மனிதம், ஆளுமை - அன்பின்மொழி

## 1. ஜெயகாந்தம் நினைவு இதழ்



### பலவுள் தெரிக

**பாடநூல் வினாக்கள்:**

1. சுதந்திர இந்தியாவின் மகத்தான சாதனையும் சவாலுமாக ஜெயகாந்தன் கருதுவது PTA

அ) அரசின் நலத்திட்டங்களைச் செயல்படுத்தல்

ஆ) பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காத்தல்

இ) அறிவியல் முன்னேற்றம்

ஈ) வெளிநாட்டு முதலீடுகள்

விடை : ஆ) பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காத்தல்

2. கலையின் கணவனாகவும், சமுதாயத்தின் புதல்வனாகவும் இருந்து எழுதுகிறேன் – இக்கூற்றிலிருந்து நாம் புரிந்து கொள்வது PTA

அ) நம் வாழ்க்கையில் பெற்ற விளைவுகளைக் கலையாக்கினார்

ஆ) சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே எழுதினார்

இ) அறத்தைக் கூறுவதற்காக எழுதினார்

ஈ) அழகியலுடன் இலக்கியம் படைத்தார்

விடை : ஆ) சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே எழுதினார்

### கூடுதல் வினாக்கள்:

3. கருத்தாழமும் வாசகச் சுவைப்பும் கலந்து இலக்கியங்கள் படைத்தவர் ______.
அ) பாரதியார் ஆ) பாரதிதாசன்
இ) ஜெயகாந்தன் ஈ) புதுமைப்பித்தன் விடை : இ) ஜெயகாந்தன்

4. மனிதம் தோய்ந்த எழுத்தாளுமை மிக்கவர் ______.
அ) கல்கி ஆ) சுரதா
இ) கவிமணி ஈ) ஜெயகாந்தன் விடை : ஈ) ஜெயகாந்தன்

5. இலக்கியத்திற்கான உன்னத விருதுகளை வென்றவர் ______.
அ) ஜெயகாந்தன் ஆ) பாரதியார்
இ) திரு.வி.க. ஈ) சிதம்பரனார் விடை : அ) ஜெயகாந்தன்

6. ஜெயகாந்தனின், உன்னைப்போல் ஒருவன் திரைப்படத்திற்குக் கிடைத்த விருது ______.
அ) ஞானபீட விருது ஆ) குடியரசுத் தலைவர் விருது
இ) தாமரைத்திரு விருது ஈ) சாகித்திய அகாதெமி விருது
விடை : ஆ) குடியரசுத் தலைவர் விருது

7. சோவியத் நாட்டு விருது பெற்ற ஜெயகாந்தனின் நூல் ______.
அ) தர்க்கத்திற்கு அப்பால் ஆ) ஒரு பிடி சோறு
இ) இமயத்துக்கு அப்பால் ஈ) ரிஷிமூலம் விடை : இ) இமயத்துக்கு அப்பால்

8. ஜெயகாந்தனின் "சில நேரங்களில் சில மனிதர்கள்" என்பது ______.
அ) கதை ஆ) பாடல்
இ) கட்டுரை ஈ) புதினம் விடை : ஈ) புதினம்

9. ஜெயகாந்தனின், சாகித்திய அகாதெமி விருது பெற்ற புதினம்______.
அ) உன்னைப் போல ஒருவன் ஆ) சுந்தர காண்டம்
இ) பாரீசுக்குப் போ ஈ) சிலநேரங்களில் சில மனிதர்கள்
விடை : ஈ) சிலநேரங்களில் சில மனிதர்கள்

10. எல்லாத் தரப்பு மொழிகளையும் ஆண்ட வல்லமை கொண்டவர் ______.
அ) வைரமுத்து ஆ) சுரதா
இ) புதுமைப்பித்தன் ஈ) ஜெயகாந்தன் விடை : ஈ) ஜெயகாந்தன்

11. பிரெஞ்சு மொழியில் வந்த காந்தி வாழ்க்கை வரலாற்றின் தமிழாக்கம் ______.
அ) சத்தியசோதனை ஆ) தென்னிந்திய காந்தி
இ) வெற்றி வேந்தன் காந்தி ஈ) வாழ்விக்க வந்த காந்தி
விடை : ஈ) வாழ்விக்க வந்த காந்தி

12. "கடைசி சல்லியையும் ஒரு ராஜாவைப் போல் செலவு செய்" என்பது ______.
அ) விடுகதை ஆ) பழமொழி
இ) பாடல்வரி ஈ) கவிதைவரி விடை : ஆ) பழமொழி

13. ஜெயகாந்தனின் ஊருக்குப் போக ரயில் கட்டணமாக ஜெயகாந்தன் எண்ணிய ரூபாய் எவ்வளவு?
அ) கால் ஆ) அரை
இ) முக்கால் ஈ) ஒன்று விடை : இ) முக்கால்

14. ஜெயகாந்தன், பிச்சைக்காரனுக்கு முதலில் போட்ட பிச்சை எவ்வளவு?
அ) இரண்டணா ஆ) ஓரணா
இ) காலணா ஈ) எட்டணா விடை : அ) இரண்டணா

15. ஜெயகாந்தன், பிச்சைக்காரனுக்கு மொத்தமாகப் போட்ட பிச்சை எவ்வளவு?
அ) ஓரணா ஆ) இரண்டணா
இ) மூன்றணா ஈ) எட்டணா விடை : இ) மூன்றணா

16. ஜெயகாந்தனின் ஊருக்குச் செல்ல இரயில் கட்டணம் எவ்வளவு என்று டிக்கெட் கொடுப்பவர் சொன்னார்?

அ) பதினொரணா ஆ) பன்னிரண்டணா
இ) பதிமூன்றணா ஈ) பதினான்கணா விடை : இ) பதிமூன்றணா

## விடைக்கேற்ற வினா அமைக்க

1. தமிழிலக்கிய உலகில் மிகப்பெரும் ஆளுமையாகத் திகழ்ந்தவர் ஜெயகாந்தன்.
   விடை : தமிழிலக்கிய உலகில் மிகப்பெரும் ஆளுமையாகத் திகழ்ந்தவர் யார்?

2. எழுத்தாளர் ஜெயகாந்தனின் சில நேரங்களில் சில மனிதர்கள் எனும் புதினத்திற்கு சாகித்திய அகாதெமி விருது கிடைத்தது.
   விடை : எழுத்தாளர் ஜெயகாந்தனின் சில நேரங்களில் சில மனிதர்கள் எனும் புதினத்திற்கு கிடைத்த விருது என்ன?
   (அல்லது)
   ‘‘சில நேரங்களில் சில மனிதர்கள்’’ புதினத்திற்காக சாகித்திய அகாதெமி விருது பெற்றவர் யார்?

3. இந்தியாவின் மகத்தான சாதனை என்பது பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காப்பதாகும்.
   விடை : இந்தியாவின் மகத்தான சாதனை எது?

4. எழுத்தாளனுக்கு அடிப்படையாக அமைய வேண்டியது மனித வாழ்வின் பிரச்சினைகளாகும்.
   விடை : எழுத்தாளனுக்கு அடிப்படையாக அமைய வேண்டியது எது?

5. சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே நான் எழுதுகிறேன்.
   விடை : நான் எதற்காக எழுதுகிறேன்?

6. தர்மார்த்தங்களை உபதேசிக்கவே வியாஸர் பாரதத்தை எழுதினார்.
   விடை : வியாஸர் பாரத நூலை ஏன் எழுதினார்?

7. வாழ்க்கையின் உரைகல் என்பர் இலக்கியத்தை.
   விடை : வாழ்க்கையில் உரைகல் எது?

8. பலதிறப்பட்ட சூழ்நிலைகளையும் வெற்றிகரமாகச் சித்தரித்து எழுதுவது ஜெயகாந்தனின் சாதனை.
   விடை :பலதிறப்பட்ட சூழ்நிலைகளையும் வெற்றிகரமாக சித்தரித்து எழுதுவது யார்?

## சந்திப்பிழை நீக்கி எழுதுக

1. சமூக பார்வையோடு கலைபணி புரியவே நான் எழுதுகிறேன். கலைபணி என்றாலே அதனுள் சமூக பார்வையும் அடக்கம்.
   விடை : சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே நான் எழுதுகிறேன். கலைப்பணி என்றாலே அதனுள் சமூகப் பார்வையும் அடக்கம்.

2. ஓர் ஆளுமையை மையமிட்ட கருத்துகளை தொகுத்து முறைப்படுத்தி சீர்மையுடன் வெளிப்படுத்த வேண்டும்.
   விடை : ஓர் ஆளுமையை மையமிட்ட கருத்துகளைத் தொகுத்து முறைப்படுத்திச் சீர்மையுடன் வெளிப்படுத்த வேண்டும்.

3. பிரித்து பேசும் போக்கு வந்துவிட்டதால் பிரித்து சொல்கிறேன்.
   விடை : பிரித்துப் பேசும் போக்கு வந்துவிட்டதால் பிரித்துச் சொல்கிறேன்.

4. தான் வாழ்ந்தக் காலத்தில், சிக்கல்கள் பலவற்றை ஆராய எடுத்து சொல்ல, தன் பார்வைக்கு உட்பட்டத் தீர்ப்பை சொல்ல ஜெயகாந்தன் மேற்கொண்ட நடவடிக்கையே படைப்பு.

விடை : தான் வாழ்ந்த காலத்தில், சிக்கல்கள் பலவற்றை ஆராய எடுத்துச் சொல்ல, தன் பார்வைக்கு உட்பட்ட தீர்ப்பைச் சொல்ல ஜெயகாந்தன் மேற்கொண்ட நடவடிக்கையே படைப்பு.

5. தலைச்சிறந்த உரத்தச் சிந்தனை பேச்சாளராக திகழ்ந்தார் ஜெயகாந்தன்.

விடை : தலைசிறந்த உரத்த சிந்தனைப் பேச்சாளராகத் திகழ்ந்தார் ஜெயகாந்தன்.

## நிறுத்தற் குறியிடுக

1. சிறுகதை புதினம் திரைப்படம் முன்னுரை பேட்டி என எதைத் தொட்டாலும் தனி முத்திரை பதித்தவர் இலக்கியத்திற்கான பெரும் விருதுகளை வென்றவர்

விடை : சிறுகதை, புதினம், திரைப்படம், முன்னுரை, பேட்டி, என எதைத் தொட்டாலும் தனி முத்திரை பதித்தவர்; இலக்கியத்திற்கான பெரும் விருதுகளை வென்றவர்.

2. எதற்காக எழுதுகிறேன் என்று நான் சொன்ன காரணங்களுக்குப் புறம்பாக நடந்தால் நான் கண்டிக்கப்படவும் திருத்தப்படவும் உட்பட்டிருக்கிறேன்

விடை : 'எதற்காக எழுதுகிறேன்?' என்று நான் சொன்ன காரணங்களுக்குப் புறம்பாக நடந்தால், நான் கண்டிக்கப்படவும், திருத்தப்படவும் உட்பட்டிருக்கிறேன்.

3. இன்னும் ஓரணா கொடுங்கள் ஸார் பன்னிரண்டனா தானே அது நேற்றோடு சரி இன்னிலேருந்து அதிகம்

விடை : "இன்னும் ஓரணா கொடுங்கள் ஸார்! பன்னிரண்டனா தானே?" "அது நேற்றோடு சரி. இன்னிலேருந்து அதிகம்".

4. ஐயா தருமதுரை கண்ணில்லாத கபோதி ஐயா என்ற குரல் ஸ்டேஷனுக்குள் நுழையும் இடத்தில்

விடை : "ஐயா தருமதுரை... கண்ணில்லாத கபோதி ஐயா...!" என்ற குரல். ஸ்டேஷனுக்குள் நுழையும் இடத்தில்.

5. சாமி நீங்கபோற வழிக்கெல்லாம் புண்ணியமுண்டு என்று வாழ்த்தினான்

விடை : "சாமி, நீங்கபோற வழிக்கெல்லாம் புண்ணியமுண்டு" என்று வாழ்த்தினான்.

## கீழ்க்காணும் உரைப் பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடையளிக்க

ஜெயகாந்தன் எத்தகைய பாத்திரங்களைப் படைத்தாலும் அந்தப் பாத்திரங்களின் சிறந்த அம்சங்களைக் குறிப்பிடத் தவறுவதில்லை. துவேஷத்தைப் பரப்புவது அவருடைய இயல்புக்கு சற்றும் ஒவ்வாதது. அவர் அரசியலில் தொடர்ந்து பங்கு பெறாமல் போனதற்கு இதுகூட காரணமாக இருந்திருக்கலாம். 'நேர்கொண்ட ஆனால் வித்தியாசமான பார்வை. நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகள். திமிர்ந்த ஞானச் செருக்கு. கம்பீரமான குரல் புதுமையான வாழ்க்கைச் சித்தரிப்புகள்" – இவைகள் தாம் படிக்காத மேதை என்று குறிப்பிடப்படும் ஜெயகாந்தன் என்ற செம்மாந்த தமிழனின் சிறப்பான அடையாளங்கள்.

1. ஜெயகாந்தனின் சிறப்பான அடையாளங்கள் யாவை?

நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறி, நேர்கொண்ட வித்தியாசமான பார்வை, திமிர்ந்த ஞானச்செருக்கு, கம்பீரமான குரல் ஆகியவை ஜெயகாந்தனின் சிறப்பான அடையாளங்கள்.

2. படிக்காத மேதை என்று அழைக்கப்படும் எழுத்தாளர் யார்?

படிக்காத மேதை எழுத்தாளர் ஜெயகாந்தன் ஆவார்.

3. ஜெயகாந்தனின் கதைகள், புதினங்களின் சிறப்பு என்ன?

ஜெயகாந்தனின் கதைகளிலும் புதினங்களிலும் தான் எத்தகைய பாத்திரங்களைப் படைத்தாலும் அந்தப் பாத்திரங்களின் சிறந்த அம்சங்களைக் குறிப்பிடத் தவறமாட்டார்.

படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.



1. இயற்கையை நேசித்தால் இயற்கை நம்மை நேசிக்கும்.
2. இயற்கையின் ஒவ்வொரு பொருட்களும் நமக்கு அதிசயமாகவே தோன்றும்.
3. அஃறிணை அன்னத்தை உயர்திணை அன்னம் அதிசயமாகப் பார்க்கிறாள்.
4. இயற்கை சூழ்ந்த இடத்திற்குச் சென்றால் மனத்திற்கு இனிமை கிட்டும்.
5. இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தால் இன்பமான வாழ்வாக அமையும்.

## குறுவினா

### பாடநூல் வினா:

1. நான் எழுதுவதற்கு ஒரு தூண்டுதலும் அதற்குரிய காரணமும் உண்டு – இத்தொடரை இரு தொடர்களாக்குக.

நான் எழுதுவதற்கு ஒரு தூண்டுதல் உண்டு. நான் எழுதுவதற்கு தூண்டலுக்குரிய காரணம் உண்டு.

### கூடுதல் வினாக்கள்:

2. ஜெயகாந்தன் படைப்பின் தன்மை யாது?

- ஜெயகாந்தன், கருத்தாழமும் வாசகச் சுவைப்பும் கலந்து இலக்கியங்கள் படைத்தவர். சமகாலக் கருத்துகளையும் நிகழ்வுகளையும் சமகால மொழியில் சமகால உணர்வில் தந்தவர்.
- சிறுகதை, புதினம், திரைப்படம், முன்னுரை, பேட்டி என எதைத் தொட்டாலும் தனி முத்திரை பதித்தவர்.
- இலக்கியத்திற்கான பெரும் விருதுகளை வென்றவர். மனிதம் தோய்ந்த எழுத்தாளுமை மிக்கவர்.

3. ஜெயகாந்தன் பெற்ற விருதுகள் யாவை?

- குடியரசுத் தலைவர் விருது – (உன்னைப் போல் ஒருவன்) – திரைப்படம்
- சாகித்திய அகாதெமி விருது – சிலநேரங்களில் சில மனிதர்கள் – புதினம்
- சோவியத் நாட்டு விருது – (இமயத்துக்கு அப்பால்)
- ஞானபீட விருது, தாமரைத்திரு விருது ஆகியன.

4. ஜெயகாந்தனின் சிறுகதைத் தொகுப்புகள் யாவை?

குருபீடம், யுகசந்தி, ஒருபிடி சோறு, உண்மை சுடும், இனிப்பும் கரிப்பும், தேவன் வருவாரா, புதிய வார்ப்புகள் ஆகியன.

5. ஜெயகாந்தனின் குறும்புதினங்கள் யாவை?

பிரளயம், கைவிலங்கு, ரிஷிமூலம், பிரம்ம உபதேசம், யாருக்காக அழுதான்?, கருணையினால் அல்ல, சினிமாவுக்குப் போன சித்தாளு ஆகியன.

6. ஜெயகாந்தனின் புதினங்கள் யாவை?

பாரீசுக்குப் போ!, சுந்தர காண்டம், உன்னைப் போல் ஒருவன், கங்கை எங்கே போகிறாள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், இன்னும் ஒரு பெண்ணின் கதை, ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம் ஆகியன.

7. ஜெயகாந்தனின் மொழிபெயர்ப்புகள் யாவை?

- வாழ்விக்க வந்த காந்தி (பிரெஞ்சு மொழியில் வந்த காந்தி வாழ்க்கை வரலாற்றின் தமிழாக்கம்)
- ஒரு கதாசிரியனின் கதை (முன்சி பிரேம்சந்தின் வாழ்க்கை வரலாறு) ஆகியன.

8. ஜெயகாந்தனின் திரைப்படமான படைப்புகள் யாவை?

சில நேரங்களில் சில மனிதர்கள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், ஊருக்கு நூறுபேர், உன்னைப் போல் ஒருவன், யாருக்காக அழுதான் ஆகியன.

9. ஜெயகாந்தனின் சிறப்பான அடையாளங்கள் யாவை?

- நேர்கொண்ட ஆனால் வித்தியாசமான பார்வை.
- நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகள், திமிர்ந்த ஞானச்செருக்கு, கம்பீரமான குரல், வளமான, புதுமையான வாழ்க்கைச் சித்தரிப்புகள்.
- படிக்காத மேதை – இவைகள் தாம் ஜெயகாந்தன் என்ற செம்மாந்த தமிழனின் சிறப்பான அடையாளங்கள்.

10. ஜெயகாந்தனின் படைப்புகள் குறித்து கூறியன யாவை?

- சமூக அமைப்பின் முரண்பாடுகளை எழுத்திலே அப்பட்டமாகக் காட்டியவர். நேர்முக எதிர்முக விளைவுகளைப் பெற்றவர்.
- உள்ளடக்க விரிவால் மனிதாபிமானத்தை வாசக நெஞ்சங்களில் விதைத்தவர்.
- தன்னையறிதல் என்பதிலும் தன்னை உணர்த்துதல் என்பதிலும் முனைப்பாக இருந்தவர். அவர் தான் ஜெயகாந்தன்.

11. ஜெயகாந்தன் குறித்து அசோகமித்திரன் கூறுவது யாது?

- "ஜெயகாந்தன், எத்தகைய பாத்திரங்களைப் படைத்தாலும் அந்தப் பாத்திரங்களின் சிறந்த அம்சங்களைக் குறிப்பிடத் தவறுவதில்லை.
- துவேஷத்தைப் பரப்புவது, அவருடைய இயல்புக்கு சற்றும் ஒவ்வாதது.
- அவர் அரசியலில் தொடர்ந்து பங்கு பெறாமல் போனதற்கு இதுகூட காரணமாக இருந்திருக்கலாம்". என்று அசோகமித்திரன் கூறுகிறார்.

12. ஜெயகாந்தன் குறித்து, தீபம் இதழில் வெளியிட்ட வாசகர்களின் கருத்து யாது?

- கச்சிதமான உருவம், கனமான உள்ளடக்கம், வலுவான நடை, புதுக்கருத்துகள், புதுவிளக்கங்கள், ஆழம், கனம் இந்த அம்சங்களை இவருடைய சிறுகதைகளில் பூரணமாகக் காணலாம்.
- அதுமட்டுமின்றிப் பலதிறப்பட்ட சூழ்நிலைகளையும் வெற்றிகரமாகச் சித்தரிப்பது இவருடைய அரிய சாதனை என்று வாசகர்களின் கருத்தாகத் தீபம் இதழ் வெளி யிட்டது.

13. ஜெயகாந்தன் குறித்து, கா.செல்லப்பன் கூறுவது யாது?

- "நேர்கொண்ட ஆனால் வித்தியாசமான பார்வை. நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகள், திமிர்ந்த ஞானச்செருக்கு, கம்பீரமான குரல், வளமான, புதுமையான வாழ்க்கைச் சித்தரிப்புகள் – இவைகள் தாம் ஜெயகாந்தன் என்ற செம்மாந்த தமிழனின் சிறப்பான அடையாளங்கள்.
- 'படிக்காத மேதை' என்று குறிப்பிடப்படும் அவர், முறையாகக் கல்லூரிகளில் படிக்கவில்லையே தவிர, தமிழ், இந்திய இலக்கியங்களை மட்டுமன்றி, சோவியத் பிரெஞ்சு இலக்கியங்களைத் தானே படித்து உணர்ந்தது மட்டுமன்றி, வாழ்க்கையையும் ஆழமாகப் படித்தவர் பிறகு அவற்றை வார்த்தைகளில் அழகுறப் படைத்தவர்.' என்று கா. செல்லப்பன் கூறுகிறார்.

14. இலக்கியங்களில் முன்னுரை எவ்வாறு அமைகிறது? (அ) முன்னுரையில் முகம் காட்டும் ஜெயகாந்தன் குறித்து எழுதுக. PTA

- எழுத்தாளர், ஒருவருடைய படைப்பு நோக்கத்தையும் படைப்பு பாங்கையும் வாழ்க்கைச் சிக்கல்கள் குறித்த கண்ணோட்டத்தையும் உணர்த்துவது தான் முன்னுரை.
- தன்னுடைய படைப்புகளுக்குத் தானே முன்னுரைகள் எழுதிக் கொள்ளும் ஜெயகாந்தன், பின்னர் வரவிருக்கும் கேள்விகளுக்குத் தரும் பதில்களாக அவற்றை ஆக்கிவிடுவார்.

15. பாரீசுக்குப் போ.... என்ற புதினத்தின் முன்னுரை எவ்வாறு அமைந்துள்ளது?

- "ஒரு தேசத்தின் ஒரு நாகரிகத்தின் ஒரு காலத்தின் ஒரு வளர்ச்சியின் ஒரு வாழ்க்கையின் உரைகல் இலக்கியம்... ஓர் எழுத்தாளன் ஆத்ம சுத்தியோடு எழுதுகிறானே, அது கேவலம் பிழைப்போ அல்லது ஒரு தொழிலோ அல்ல. அது ஒரு தவம்.
- நீங்கள் கதை என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அது காலத்தின், ஒரு வாழ்க்கையின் சாசனம்".

16. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் குறித்து, ஜெயகாந்தன் எழுதிய கவிதை யாது?

"எண்ணமும் எழுத்தும் உயர்ந்திருக்கும் – ஏழை
கண்ணீரும் பாடலிலே கலந்திருக்கும்
பண்ணொடு சந்தமும் பாய்ந்து வரும் – பழைய
மண்ணின் வாடையும் சேர்ந்து வரும்"
என்று கவிதை எழுதியுள்ளார் ஜெயகாந்தன்.

17. சிறுகதைத் துறையில் தான் கடைபிடிக்கும் நுணுக்கமாக ஜெயகாந்தன் கூறுவது யாது? PTA

- சிறுகதைத் துறையில் நுணுக்கமாக, அப்படித் தனியாக நான் எதையும் கையாளுவதாக எண்ணிச் செய்வதில்லை.
- என் மனத்தால், புத்தியால், உணர்வால், நான் அறிந்து அனுபவப்படாத எதைப் பற்றியும் நான் எழுதினதில்லை.
- என்னைப் பெரிதும் பாதிப்பவை மனித வாழ்வின் பிரச்சனைகளே! என்று கூறுகிறார்.

18. படைப்புகளுக்கு அடிப்படையாக அமைய வேண்டியது எவையென ஜெயகாந்தன் கூறுகிறார்?

எழுத்தாளனுக்கு அவனுடைய படைப்புகளுக்கு அடிப்படையாக அமைய வேண்டியது மனித வாழ்வின் பிரச்சனைகளே! என்று கூறுகிறார்.

19. ஜெயகாந்தன் பார்வையில் சுதந்திர இந்தியாவின் மகத்தான சாதனை எது? மிகப் பெரிய சவால் எது? PTA

ஜெயகாந்தன் பார்வையில். மகத்தான சாதனை – பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காத்தது. மிகப் பெரிய சவாலும் அதுவே.

20. மாற்றங்கள் குறித்து ஜெயகாந்தன் கூறுவது யாது? PTA

மாற்றங்கள் குறித்து ஜெயகாந்தன் கூறுவது, காலந்தோறும் மாற்றங்களை நாம் பார்க்கிறோம். நாமும் மாறிக்கொண்டே இருக்கிறோம்.

21. மனிதம் என்பது குறித்து ஜெயகாந்தன் கூறுவன யாவை? PTA

- "மனிதம் என்பது பரந்து விரிந்த வானம் போன்று எல்லைகளற்றது.
- இதை நம்மால் மேற்கொள்ள முடியாதென்று ஒதுங்கிவிடக் கூடாது.
- ஆறுதலளிக்கும் ஒரு புன்னகை, ஒரு தோள்தட்டல், இரண்டொரு அன்புச் சொற்கள், தன்னால் இயன்ற சிறு உதவி இவையெல்லாம் மனிதம்தான்.
- மனிதத்தின் துளியளவு வெளிப்பாடு ஏதோ ஒரு வகையில் நமக்கு உதவக் கூடும்". என்று கூறுகிறார்.

22. வெற்றி, தோல்வி குறித்து ஜெயகாந்தன் கருத்து யாது?

- வெற்றி என்ற வார்த்தைக்குப் பொருளில்லை.
- நினைத்தது நடந்தால் வெற்றி என்று நினைத்துக் கொள்கிறோம்.
- தோல்வி நிச்சயம் என்று எண்ணித் தோற்றால், அந்தத் தோல்வியே வெற்றி தான்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. ஜெயகாந்தன் தம் கதைமாந்தர்களின் சிறந்த கூறுகளைக் குறிப்பிடத் தவறுவதில்லை என்று அசோகமித்திரன் கூறுகிறார். இக்கூற்றை மெய்ப்பிக்கும் செயல் ஒன்றை 'தர்க்கத்திற்கு அப்பால்' கதை மாந்தர் வாயிலாக விளக்குக. PTA

- ஜெயகாந்தன் தன் பையில் இருந்த ஒரு வெள்ளி ரூபாய் நாணயத்தில் பன்னிரண்டணாவை இரயில் கட்டணத்திற்காக ஒதுக்கி விட்டு, இரண்டனாவை வைத்து காபி குடிக்கின்றார். மீதமுள்ள இரண்டரையாவை என்ன செய்யலாம் என்று யோசிக்கையில், ஸ்டேஷனுக்குள் நுழையும் இடத்தில் ஒரு ஓரமாய் உட்கார்ந்திருந்த அந்தக் குருட்டுப் பிச்சைக்காரனைப் பார்க்கிறார்.
- அவன் எதிரே இருந்த அலுமினியப் பாத்திரத்தில் வெறும் செப்புக்காசுகளே கிடந்தன. அவனுக்கு அவர் இரண்டணா பிச்சை போடுகிறார்.
- பின்னர் இரயில் கட்டணம் பதின்மூன்று அணா என்றறிந்து ஒரு அணாவிற்காக என்ன செய்வது என்று யோசிக்கிறார்.
- பிச்சைக்காரனுக்குப் போட்ட இரண்டணாவிலிருந்து ஓரணாவை எடுத்துக் கொள்ளலாமா என்று யோசிக்கிறார்.
- அதற்காக மிகவும் தயங்கி, பின்னர் மெதுவாக தைரியம் கொண்டு ஓரணாவைப் போட்டு விட்டு இரண்டணாவை எடுத்துக் கொள்வது என்று முடிவு செய்கிறார்.
- அப்படி எடுத்துக் கொள்ளும் போது, பிச்சைக்காரன் அவரை "சாமி, இதுதானுங்களா தர்மம்? யாரோ ஒரு புண்ணியவான் இரண்டணா போட்டாரு, அதை எடுத்துக்கிட்டு, ஓரணா போடறியே? குருடனை ஏமாத்தாதே, நரகத்துக்குதான் போவே!" என்று சொல்லவும் நெருப்புக்கட்டியைக் கையிலெடுத்தது போல் அந்த இரண்டணாவை அலுமினியத் தட்டில் மீண்டும் உதறுகிறார். இப்பொழுது அவர் கணக்கில் மூன்றணா தர்மம்.
- இவ்வாறு ஜெயகாந்தன் கதை மாந்தரின் மனப் போராட்டத்தை துல்லியமாக சித்தரிப்பதின் மூலம் கதை மாந்தர்களின் சிறந்த கூறுகளைக் குறிப்பிடத் தவறியதில்லை.

### கூடுதல் வினா:

2. ஜெயகாந்தன் குறிப்பு வரைக.

| | | |
|---|---|---|
| ◆ பெயர் | : | ஜெயகாந்தன் |
| ◆ ஊர் | : | கடலூர் மாவட்டம், மஞ்சக்குப்பம் |
| ◆ பெற்றோர் | : | தண்டபாணிப் பிள்ளை, மகாலெட்சுமி அம்மாள் |
| ◆ பிறப்பு | : | 24-04-1934 |
| ◆ பணிகள் | : | அச்சகத்தில் பணியாளர், இதழ்கள் விற்பனையாளர், காலணி விற்பனையாளர், படைப்புப் பணி, திரைத்துறைப் பணி, உதவி ஆசிரியர். |
| ◆ படைப்புகள் | : | சிறுகதைகள், குறும்புதினங்கள், புதினங்கள், மொழிபெயர்ப்புகள், திரைப்படப் படைப்புகள், கட்டுரைகள், கவிதைகள். |
| ◆ வெளியான இதழ்கள் | : | சரஸ்வதி. தாமரை, கிராம ஊழியன், ஆனந்த விகடன் |
| ◆ விருதுகள் | : | குடியரசுத் தலைவர் விருது, ஞானப்பீட விருது, சாகித்திய அகாதெமி விருது, தாமரைத் திரு விருது. சோவியத் நாட்டு விருது. |
| ◆ புகழ் | : | படிக்காத மேதை, சிறுகதை மன்னன், சிறுகதை வேந்தன், சிறுகதை ஜாம்பவான் |
| ◆ இறப்பு | : | 08-04-2015 |

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. ஜெயகாந்தன் நினைவுச் சிறப்பிதழை வார இதழ் ஒன்று வெளியிட இருக்கிறது. அதற்கான ஒரு சுவரொட்டியை வடிவமைத்து அளிக்க.

**இதோ ! ஓர் அரிய வாய்ப்பு !**

அன்னை வார இதழ் வெளியிடும்

சிறுகதை மன்னன்

**ஜெயகாந்தனின்**

**நினைவுச் சிறப்பிதழ்!**

வெளியீடு நாள்: 5-5-2019 ஞாயிற்றுக் கிழமை

வாய்ப்பைத் தவறவிடாதீர்கள்! உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

**அனைத்து கடைகளிலும் கிடைக்கும்**

முன்பதிவு செய்ய தொலைபேசி எண் : 044 - 45512114

**கூடுதல் வினாக்கள்:**

2. எதற்காக எழுதுகிறேன்? என்னும் தலைப்பில் ஜெயகாந்தன் எழுதியதை எழுதுக.

நான் எழுதுவதற்கு ஒரு தூண்டுதலும் அதற்குரிய காரணமும் உண்டு. என் எழுத்துக்கு ஒரு இலட்சியமும் உண்டு. நான் எழுதுவது, முழுக்க, முழுக்க வாழ்க்கையிலிருந்து நான் பெறும் கல்வியின் விளைவும், எனது தனி முயற்சியின் பயனுமாகும்.

இந்த நாட்டில், வியாசன் முதல் பாரதி வரை எதற்காக எழுதினார்கள்? இவர்களில் யாராவது கலையைத் தாங்கிப் பிடிக்க என்று சொல்லிக் கொண்டதுண்டோ? இவர்களை விட கலையைத் தாங்கியவர்களும், காலம் காலமாய் வாழும், வாழப்போகும் கலா சிருஷ்டிகளைத் தந்தவர்கள் தான் உண்டோ? தர்மார்த்தங்களை உபதேசிக்கவே வியாசர் பாரதத்தை எழுதினார்.

தமிழ் இலக்கணமே நூலினியல்பாவது என்னவென்று சொல்லும் போது,

'நூலினியல்பே நுவலின் ஓரிரு
பாயிரந்தோற்றி மும்மை யினொன்றாய்
நாற்பொருட் பயத்தலொடு எழுமதந் தழுவி'

என்று நூலின் பயன் அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு பயனுக்காக இருத்தல் வேண்டும் என்று சொல்லி அதன் பின்னர் தான் விளக்கங்களைக் கூறிச் செல்கிறது.

கலைத்தன்மைக்கு எந்தவிதக் குறைவும் வராமல், கலாதேவியின் காதற் கணவனாகவும் சமுதாயத் தாயின் அன்புப் புதல்வனாகவும் இருந்து தான் நான் எழுதுகிறேன்.

அர்த்தமே வடிவத்தை வளமாக்குகிறது அல்லவா? வெறும் வடிவம் மரப்பாச்சி தான். ஆகையினால் இவற்றைப் பிரித்துக் கொண்டு அவஸ்தைக்கு உள்ளாகின்றார். நமது அறியாமையால் அவஸ்தைகளுக்குள்ளாகி, பிறரையும் நமது அறியாமையால் அவஸ்தைக்கு உட்படுத்தாமல், சமூகப் பார்வையோடு கலைப்பணி புரியவே நான் எழுதுகிறேன். கலைப்பணி என்றாலே அதனுள் சமூகப் பார்வை அடக்கம். பிரித்துப் பேசும் போக்கு வந்துவிட்டதால் பிரித்துச் சொல்கிறேன். அது சேர்ந்து தான் இருக்கிறது. 'எதற்காக எழுதுகிறேன்?' என்று நான் சொன்ன காரணங்களுக்குப் புறம்பாக நடந்தால் நான் கண்டிக்கப்படவும், திருத்தப்படவும் உட்பட்டிருக்கிறேன்.

3. ஜெயகாந்தன் பற்றி பிறர் கூற்றுகளை எழுதுக.

"ஜெயகாந்தன். எத்தகைய பாத்திரங்களைப் படைத்தாலும் அந்தப் பாத்திரங்களின் சிறந்த அம்சங்களைக் குறிப்பிடத் தவறுவதில்லை. துவேஷத்தைப் பரப்புவது, அவருடைய இயல்புக்கு சற்றும் ஒவ்வாதது. அவர் அரசியலில் தொடர்ந்து பங்கு பெறாமல் போனதற்கு இது கூட காரணமாக இருந்திருக்கலாம்". – அசோகமித்திரன்

கச்சிதமான உருவம், கனமான உள்ளடக்கம், வலுவான நடை, புதுக்கருத்துகள், புதுவிளக்கங்கள், ஆழம், கனம் இந்த அம்சங்களை இவருடைய சிறுகதைகளில் பூரணமாகக் காணலாம். அதுமட்டுமின்றிப் பலதிறப்பட்ட சூழ்நிலைகளையும் வெற்றிகரமாகச் சித்தரிப்பது இவருடைய அரிய சாதனை.

– வாசகர்களின் கருத்து– தீபம் இதழ் 1967.

"நேர்கொண்ட ஆனால் வித்தியாசமான பார்வை. நிலத்தில் யாருக்கும் அஞ்சாத நெறிகள், திமிர்ந்த ஞானச்செருக்கு, கம்பீரமான குரல், வளமான, புதுமையான வாழ்க்கைச் சித்தரிப்புகள் – இவைகள் தாம் ஜெயகாந்தன் என்ற செம்மாந்த தமிழனின் சிறப்பான அடையாளங்கள். 'படிக்காத மேதை' என்று குறிப்பிடப்படும் அவர், முறையாகக் கல்லூரிகளில் படிக்கவில்லையே தவிர, தமிழ், இந்திய இலக்கியங்களை மட்டுமன்றி, சோவியத் பிரெஞ்சு இலக்கியங்களைத் தானே படித்து உணர்ந்தது மட்டுமன்றி, வாழ்க்கையையும் ஆழமாகப் படித்தவர் பிறகு அவற்றை வார்த்தைகளில் அழகுறப் படைத்தவர்.' – கா. செல்லப்பன்

4. ஜெயகாந்தன் 'சிறுகதையின் மன்னன்' என்ற கூற்றை தன் 'தர்க்கத்திற்கு அப்பால்' கதையின் மூலம் நிறுவுக.

**முன்னுரை:**

கடலூரார் மாவட்டம் மஞ்சக்குப்பத்தில், தண்டபாணிக்கும் மகாலெட்சுமிக்கும் மகனாக 24.01.1934 ஆம் ஆண்டு பிறந்தவர் ஜெயகாந்தன் ஆவார். அச்சகப்பணி, படைப்புப்பணி, திரைத்துறைப் பணி, இதழ் பணி எனப் பன்முக ப்பணிகளைச் செய்தவர் ஜெயகாந்தன். பல்வேறு விருதுகளைப் பெற்ற அவர் 'சிறுகதையின் மன்னன்' என்று கூற்றிற்கு எவ்வாறு தகுதி பெற்றார் என்பதை இங்கே காண்போம்.

**ஜெயகாந்தனின் படைப்பு:**

சமூக அமைப்பின் முரண்பாடுகளை எழுத்திலே அப்பட்டமாகக் காட்டியவர் ஜெயகாந்தன். நேர்முக எதிர்முக விளைவுகளைப் பெற்றவர். உள்ளடக்க விரிவால் மனிதாபிமானத்தை வாசக நெஞ்சங்களில் விதைத்தவர். தன்னையறிதல் என்பதிலும், தன்னை உணர்த்துதல் என்பதிலும் முனைப்பாக இருந்தவர் ஜெயகாந்தன். "எழுத்தாளனுடைய படைப்புகளுக்கு அடிப்படையாக அமைய வேண்டியது மனித வாழ்வில் அன்றாடம் ஏற்படும் பிரச்சனைகளே" என்கிறார் ஜெயகாந்தன்.

**தர்க்கத்திற்கு அப்பால்:**

ஜெயகாந்தன் எழுதிய 'தர்க்கத்திற்கு அப்பால்' என்ற கதையின் வரும் கதாப்பாத்திரம் ஒரு வெள்ளிக் காசு வைத்திருந்தார். அவர் ஊருக்குச் செல்ல முக்கால் ரூபாய் போதும், மீதம் இருக்கும் கால் ரூபாயில் என்ன செய்யலாம் என்று யோசித்த அவர் சங்கரய்யர் கடையில் ஒரு கப் காபி அருந்தினார். தற்பொழுது ஊருக்குச் செல்லப் பன்னிரண்டனா போதும், மீதி கையில் இருக்கும் இரண்டனாவை என்ன செய்யலாம் என்று யோசித்தார்.

**தர்ம குணம்:**

புகைவண்டி நிலையத்தின் நுழைவாயிலில் இருந்த குருட்டுப் பிச்சைக்காரனுக்கு இரண்டு அணாவைத் தானம் செய்தார். அதைத் தன் கையால் தடவிப் பார்த்த குருடன் அவரை வாழ்த்தி வணங்கினான்.

#### கட்டண உயர்வு:

ரயில் பயணத்திற்கான முன்பதிவு மையத்திற்குச் சென்று தன் ஊருக்குச் செல்ல வேண்டிய பயணச்சீட்டைப் பெறப் பனிரெண்டனா அவர் கொடுத்த போது, இன்னும் ஓரணா வேண்டும் எனக் கூறப்பட்டதால் என்ன செய்வதென்று அறியாமல் தவித்தார். தன்னிடம் இருந்த இரண்டணாவை குருடனுக்குத் தானம் செய்ததால், தற்பொழுது புதுக்கட்டணத்திலுள்ள பயணச்சீட்டைப் பெற முடியவில்லை. மீண்டும் சென்று பிச்சைக்காரனுக்குப் போட்ட காசை எடுக்க அவர் நினைத்தார். பிச்சைக்காரன் தட்டில் மீண்டும் ஓரணா போட்டு விட்டு இரண்டனா எடுக்க முற்பட்ட போது பிடிபட்டார். குருடனின் அலறல் சத்தம் கேட்டது. "யாரோ ஒரு புண்ணியவான் இரண்டணா போட்டாரு, அதை எடுத்துக்கிட்டு ஓரணா போடறியே? குருடனை ஏமாத்தாதே, நரகத்துக்குத்தான் போவே", என்று கத்தினான் குருடன். அவர் கையிலுள்ள அந்தக் காசையும் தூக்கி எறிந்தார். இப்பொழுது அவர் கணக்கில் மூன்று அணா தர்மமாகிவிட்டது.

#### தர்மம் தலைகாத்தது:

வெகு நேரம் நின்று இருந்தார் அவர். அவர் செல்ல வேண்டிய தொடர் வண்டியும் வந்து சென்றது. வேறு வழியின்றி அடுத்த புகைவண்டி நிலையம் வரைக்கும் நடந்தே சென்றார். ஆனால் அன்று அவர் செல்ல வேண்டிய தொடர் வண்டி விபத்திற்கு உள்ளாகிவிட்டது. அவர் தொடர்வண்டியைத் தவற விட்டதால் உயிர் தப்பினார். அவர் செய்த தர்மம் தலைகாத்ததா? இல்லையா? என்பது தர்க்கத்திற்கு அப்பால் என்று தன் கதையை முடிக்கிறார் ஜெயகாந்தன்.

#### முடிவுரை:

ஜெயகாந்தன் பேசி, 'எதற்காக எழுதுகிறேன்?' என்ற தலைப்பில் கட்டுரையாகத் தொகுக்கப்பட்ட பகுதியும், 'யுகசந்தி' என்ற தொகுப்பில் இடம்பெற்றுள்ள 'தர்க்கத்திற்கு அப்பால்' என்னும் சிறுகதையில் தான் வாழ்ந்த காலத்தில் சிக்கல்கள் பலவற்றை ஆராய, எடுத்துசொல்ல, தன் பார்வைக்கு உட்பட்ட தீர்ப்பைச் சொல்ல அவர் மேற்கொண்ட நடவடிக்கையே படைப்பு. அவருடைய படைப்புகள் உணர்ச்சி சார்ந்த எதிர் வினைகளாக இருக்கின்றன. இதுவே அவருக்குச் 'சிறுகதை மன்னன்' என்று பட்டத்தைத் தேடித் தந்தது.



மனிதம், ஆளுமை - அன்பின்மொழி



# 2. சித்தாளு

நாகூர்ரூமி

## பாடல் :

பொற்காலமாக இருந்தாலும்
இவள்தலையில் எழுதியதோ
கற்காலம்தான் எப்போதும்
தொலைந்ததே வாழ்வு என
தலையில் கைவைத்து
புலம்புவார் பூமியிலே
தன்வாழ்வு தொலைக்காமல்
தற்காத்து வைப்பதற்காய்
தலையில் கைவைக்கிறாள் இவள்.
வாழ்வில் தலைக்கனம்
பிடித்தவர் உண்டு.
தலைக்கனமே வாழ்வாக
ஆகிப்போனது இவளுக்கு.
அடுக்குமாடி அலுவலகம்
எதுவாயினும்
அடுத்தவர் கனவுக்காக
அலுக்காமல் இவள் சுமக்கும்
கற்களெல்லாம்
அடுத்தவேளை உணவுக்காக.
செத்தாலும் சிறிதளவே
சலனங்கள் ஏற்படுத்தும்
சித்தாளின் மனச்சுமைகள்
செங்கற்கள் அறியாது.

## பொருளுரை:

இன்றைய காலம் பொற்காலமாக உலகில் எல்லோருக்கும் அமைந்தாலும், சித்தாளாக வேலை செய்பவளின் தலையில் எழுதி இருப்பதோ கற்களைச் சுமக்கும் காலம் மட்டுமே. வாழ்வில் பல பேர் எப்போதும் தங்கள் வாழ்வு தொலைந்ததே என்று தலையில் கை வைத்து பூமியில் புலம்புவார்கள். ஆனால், சித்தாளோ, தன் வாழ்வைத் தொலைக்காமல் பாரத்தைச் சுமந்து தன்னைக் காப்பதற்காய் தலையில் கை வைக்கிறாள். வாழ்வில் பணம், பதவி, பட்டம் என்று தலைக்கனம் பிடித்தவர்கள் உண்டு. ஆனால் சித்தாளுக்கோ தலையில் உள்ள கனமே வாழ்வாக ஆகிப் போனது. அடுக்கு மாடி, அலுவலகம் போன்ற உயர்ந்த கட்டடம் எதுவாயினும் அடுத்தவர்களுடைய கனவுகளுக்காக அலுக்காமல் சித்தாளு சுமக்கும் கற்களெல்லாம் அடுத்த வேளை உணவுக்குத் தான். சித்தாளுகள் செத்தாலும் மக்களின் மனதில் சிறிதளவே சலனங்கள் ஏற்படும். சித்தாளின் மனதில் ஏற்படுகின்ற சுமைகளை உணர்வற்ற, உயிரற்ற செங்கற்கள் அறியாது.

**விளக்கவுரை:**

பெரிய பெரிய கட்டிடங்கள் கட்டப்படும் போது உழைக்கும் சித்தாளுகளின் வாழ்வு எவ்வளவு தாழ்வாக இருக்கிறது என நம் உணர்வைத் தட்டியெழுப்புகிறது இப்பாடல்.

## ஆசிரியர் குறிப்பு:

- முகம்மதுரஃபி என்னும் இயற்பெயரைக் கொண்ட நாகூர்ரூமி தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர்;
- இவர் எண்பதுகளில் கணையாழி இதழில் எழுதத் தொடங்கியவர்.
- கவிதை, குறுநாவல், சிறுகதை, மொழிபெயர்ப்பு எனப் பல தளங்களில் இவர் தொடர்ந்து இயங்கி வருபவர்.
- மீட்சி, சுபமங்களா, புதிய பார்வை, குங்குமம், கொல்லிப்பாவை, இலக்கிய வெளிவட்டம், குமுதம் ஆகிய இதழ்களில் இவரது படைப்புகள் வெளியாகியுள்ளன.
- இதுவரை நதியின் கால்கள், ஏழாவது சுவை, சொல்லாத சொல் ஆகிய மூன்று கவிதைத் தொகுதிகள் வெளியாகியுள்ளன.
- மொழிபெயர்ப்புக் கவிதைகள், சிறுகதைத் தொகுதிகள் ஆகியவற்றுடன் கப்பலுக்குப் போன மச்சான் என்னும் நாவலையும் படைத்துள்ளார்.

## நூற் குறிப்பு:

- முகம்மதுரஃபி என்னும் இயற்பெயரைக் கொண்ட நாகூர்ரூமியின் கவிதை படைப்புகளில் ஒன்றான சித்தாளு, நமக்குப் பாடப் பகுதியாகத் தரப்பட்டுள்ளது;
- கட்டடம் கட்டுவதற்குக் கட்டுமானப் பொருட்களைச் சுமந்து செல்பவர்களே சித்தாளுகள்.
- அவர்களின் பணிச்சுமையையும் மனச்சுமையையும் அழகாகவும் ஆதங்கமாகவும் எடுத்துக்காட்டுவதாக இக்கவிதை படைக்கப்பட்டிருக்கின்றது.

## மதிப்பீடு

**பொருள் தருக.**

1. பொற்காலம் – பொன்னால் ஆகிய காலம்
2. கற்காலம் – கல்லால் ஆகிய காலம்
3. தொலைந்ததே வாழ்வு – தொலைந்து போன வாழ்வு
4. புலம்புவார் – வேதனையை வார்த்தையில் வெளிப்படுத்துவார்
5. தொலைக்காமல் – தொலைத்து விடாமல்
6. வாழ்வில் தலைக்கனம் – வாழ்க்கையில் திமிர் கொண்டவர்
7. அலுக்காமல் – சலித்துக் கொள்ளாமல்
8. சலனங்கள் – முனுமுனுப்பு
9. சித்தாள் – கட்டுமான பொருட்களைச் சுமக்கும் தொழிலாளி
10. தலைக்கனமே வாழ்வாக – தலைச்சுமையே வாழ்வாக

**இலக்கணக்குறிப்பு வரைக:**

1. தற்காத்து – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை
2. செங்கல் – பண்புத்தொகை
3. மனச்சுமை – ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை

**பகுபத உறுப்பிலக்கணம்:**

1. புலம்புவார் – புலம்பு + வ் + ஆர்

புலம்பு – பகுதி

வ் – எதிர்கால இடைநிலை

ஆர் – பலர்பால் வினைமுற்று விகுதி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. "இவள் தலையில் எழுதியதோ
கற்காலம்தான் எப்போதும்" – இவ்வடிகளில் கற்காலம் என்பது

அ) தலைவிதி ஆ) பழைய காலம்

இ) ஏழ்மை ஈ) தலையில் கல் சுமப்பது

விடை : ஈ) தலையில் கல் சுமப்பது

**கூடுதல் வினாக்கள்:**

2. தன் வாழ்வு தொலைக்காமல் தற்காத்து வைப்பதற்காய் ________ கை வைக்கிறாள் இவள்.

அ) முதுகில் ஆ) நெற்றியில்

இ) தலையில் ஈ) இடுப்பில் விடை : இ) தலையில்

3. தொழிலாளர்களின் மனச்சுமையை அறியாத ____ போலவே இருக்கும் கல்மனங்களுக்குள் மனிதத்தைப் புகுத்தி விடுகிறார்கள்.

அ) செங்கற்களைப் ஆ) கருங்கற்களைப்

இ) பளிங்குகற்களைப் ஈ) கல்லைப் விடை : அ) செங்கற்களைப்

4. வாழ்வில் ________ பிடித்தவர் உண்டு.

ஆ) தலைவலி ஆ) நோய்

இ) தலைக்கனம் ஈ) கொழுப்பு விடை : இ) தலைக்கனம்

5. அடுத்தவர் கனவுக்காக அலுக்காமல் இவள் சுமக்கும் கற்களெல்லாம் ________ உணவுக்காக.

அ) அறுசுவை ஆ) அடுத்தவேளை

இ) இரவு வேளை ஈ) விருந்து விடை : ஆ) அடுத்தவேளை

6. 'கப்பலுக்குப் போன மச்சான்' என்பது ________.

அ) கதை ஆ) சிறுகதை

இ) நாவல் ஈ) திரைப்படம் விடை : இ) நாவல்

## பின்வரும் பாடலைப் படித்து வினாக்களுக்கு விடையளி

பொற்காலமாக இருந்தாலும்
இவன் தலையில் எழுதியதோ
கற்காலம் தான் எப்போதும்
தொலைந்ததே வாழ்வு என
தலையில் கைவைத்து
புலம்புவார் பூமியிலே

1. இப்பாடல் இடம் பெற்ற கவிதை ________

அ) காலக்கணிதம் ஆ) சுதந்திரப் பொங்கல்

இ) விடியலைத் தேடும் பறவை ஈ) சித்தாளு விடை : ஈ) சித்தாளு

2. இப்பாடலின் ஆசிரியர் ________

அ) நாகூர் ரூமி  ஆ) தமிழன்பன்

இ) புதுமைப்பித்தன்  ஈ) கல்யாண்ஜி  விடை : அ) நாகூர் ரூமி

3. இப்பாடலில் இடம்பெறும் அடிஎதுகைகள் ________

அ) புலம்புவார், பூமியிலே  ஆ) எழுதியதோ எப்போதும்

இ) பொற்காலம், கற்காலம்  ஈ) இருந்தாலும் இவள்

விடை : இ) பொற்காலம், கற்காலம்

4. "கைவைத்து"– இலக்கணக் குறிப்பு

அ) இரண்டாம் வேற்றுமைத் தொகை ஆ) உவமைத் தொகை

இ) உம்மைத்தொகை  ஈ) பண்புத் தொகை

விடை : அ) இரண்டாம் வேற்றுமைத் தொகை

## குறுவினா

### பாடநூல் வினா:

1. 'வாழ்வில் தலைக்கனம்', 'தலைக்கனமே வாழ்வு' என்று நாகூர்ரூமி யாருடைய வாழ்வைக் குறித்துக் கூறுகிறார்?



- 'வாழ்வில் தலைக்கனம்' என்பது, சில மனிதர்கள் பணம், பதவி, பட்டம் என்ற போர்வையில் தலைக்கனம் பிடித்து அலைவதைக் கூறுகிறார்.
- 'தலைக்கனமே வாழ்வு' என்பது, சித்தாளுகள் தலையில் பாரத்தைச் சுமப்பதையும் குறித்து நாகூர்ரூமி கூறுகிறார்.

### கூடுதல் வினாக்கள்:

2. நாகூர்ரூமியின் படைப்புத்தளங்கள் யாவை?

மொழிபெயர்ப்புக் கவிதைகள், சிறுகதைத் தொகுதிகள், கவிதை, குறுநாவல், நாவல், மொழிபெயர்ப்பு எனப் பலதளங்களில் நாகூர்ரூமி தொடர்ந்து இயங்கி வருகிறார்.

3. நாகூர்ரூமி கற்காலத்தை எதனுடன் ஒப்பிடுகிறார்?

- கற்காலம் என்பது முன்னேறாத காலத்தைக் குறிக்கும்.
- சித்தாளு தலையில் கல் சுமப்பதை அவளது தலையில் கற்காலம் என்று எழுதப் பட்டிருக்கிறதா என்று கேட்பதன் மூலம் அவர்களது வாழ்க்கை முன்னேறாமல் இருப்பதை வேதனையுடன் சுட்டுகிறார்.

4. நாகூர்ரூமியின் படைப்புகள் வெளியான இதழ்கள் யாவை?

கணையாழி, மீட்சி, சுபமங்களா, புதிய பார்வை, குங்குமம், கொல்லிப்பாவை இலக்கிய வெளிவட்டம், குமுதம் ஆகிய இதழ்களில் இவரது படைப்புகள் வெளியாகியுள்ளன.

5. நாகூர்ரூமியின் கவிதைத் தொகுப்புகள் யாவை?

நதியின் கால்கள், ஏழாவது சுவை, சொல்லாத சொல் ஆகிய மூன்று கவிதைத் தொகுதிகள் வெளியாகியுள்ளன.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. "சித்தாளின் மனச்சுமைகள்
செங்கற்கள் அறியாது" – இடஞ்சுட்டிப் பொருள் தருக.

இடம் : நாகூர்ரூமியின் கவிதைப் படைப்புகளுள் ஒன்றான சித்தாளு கவிதையில் அமைந்துள்ள வரிகள்.

பொருள் : கட்டடம் கட்டுவதற்குத் தேவையான கட்டுமான பொருட்களைச் சித்தாளுகள் சுமக்கிறார்கள். அது கட்டடத்தின் மேல்தளமானாலும் சரி; கீழ்த்தளமானாலும் சரி; பலமாடித் தளமானாலும் சரி; அப்படிச் சுமக்கும் போது, வியர்வை சிந்தி, இரத்தம் சிந்தி, உடல் சோர்வுற்று, வேதனைப் பட்டு பல இன்னல்கள் மத்தியில் சுமக்கிறார்கள். அப்படி உழைக்கும் சித்தாளுகளின் மனச்சுமையை, உணர்வற்ற உயிரற்ற செங்கற்கள் அறியப் போவது இல்லை என்று அழகாக விளக்கியுள்ளார்.

### கூடுதல் வினா:

2. நாகூர்ரூமி குறித்து எழுதுக.

- முகம்மதுரஃபி என்னும் இயற்பெயரைக் கொண்ட நாகூர்ரூமி தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர்.
- இவர் எண்பதுகளில் கணையாழி இதழில் எழுதத் தொடங்கியவர்.
- எம்.ஏ. ஆங்கிலம் படித்தவர். பி.எச்.டி. (கம்பனியிலும் மில்ட்டனிலும் ஒப்பாய்வு செய்து) பட்டம் பெற்றவர்.
- கடந்த 25 ஆண்டுகளாக ஆங்கிலத்துறைப் பேராசிரியராகப் பணிபுரிகிறார். தாய்மொழி தமிழ். 1980 ஆம் ஆண்டு முதல் எழுத்துப்பணி புரிந்து வருகிறார். மணிச்சுடர், கணையாழி, மீட்சி போன்ற சிறுபத்திரிக்கைகளிலும், குமுதம், ஆனந்தவிகடன், கல்கி போன்ற வார இதழ்களில் எழுதி வருபவர்.
- திண்ணை தமிழோவியம், திசைகள் போன்ற இணைய இதழ்களிலும் கட்டுரை, கதை, கவிதை, தமிழாக்கம் என பல வடிவங்களிலும் எழுதி வருகிறார்.

2000 திலிருந்து 2010 வரையில் இவர்
1, நதியின் கால்கள் (கவிதை)
2. குட்டியாப்பா (சிறுகதைத் தொகுப்பு)
3. கனவுகளின் விளக்கம் (மொழிபெயர்ப்பு நூல்)
4. ஏழாவது சுவை (கவிதைத் தொகுப்பு)
5. பாரசீக கவிஞானி ஜலாலுத்தீன் ரூமியின் கதைகள்.
6. கவிதைகள் (ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்) போன்ற படைப்புகளைப் படைத்துள்ளார்.

இதுபோன்று 28 படைப்புகளை வெளியிட்டுள்ளார். பல மொழிபெயர்ப்புகளையும் செய்துள்ளார். எழுத்துப்பணி மட்டுமின்றி பல ஊர்களிலும் Personality Development (ஆளுமைத் திறன்) தொடர்பாக வகுப்புகள் நடத்துகிறார். ஆல்ஃபா தியானப் பயிற்சியும் மாதம் ஒருமுறை சென்னையில் கொடுத்து வருகிறார்.

3. 'சித்தாளின் மனச்சுமைகள் செங்கற்கள் அறியாது' – நாகூர்ரூமி வெளிப்படுத்தும் மனிதத்தை அவரது கவிரை வழியாக குறிப்பிடுக. PTA

கட்டடம் கட்டுவதற்குத் தேவையான கட்டுமான பொருட்களைச் சித்தாளுகள் சுமக்கிறார்கள். அது கட்டடத்தின் மேல்தளமானாலும் சரி; கீழ்த்தளமானாலும் சரி; பலமாடித் தளமானாலும் சரி; அப்படிச் சுமக்கும் போது, வியர்வை சிந்தி, இரத்தம் சிந்தி, உடல் சோர்வுற்று, வேதனைப் பட்டு பல இன்னல்கள் மத்தியில் சுமக்கிறார்கள். அப்படி உழைக்கும் சித்தாளுகளின் மனச்சுமையை, உணர்வற்ற உயிரற்ற செங்கற்கள் அறியப் போவது இல்லை என்று அழகாக விளக்கியுள்ளார்.

## கற்பவை கற்றபின்

மனித நேயத்தை வெளிப்படுத்தும் புதுக்கவிதைகளைத் தொகுத்து வகுப்பறையில் படித்துக் காட்டுக.

(1)

அன்னை தெரசாவின்
அவதாரங்கள்
அனாதைக் குழந்தைகளை
அரவணைக்கத் தவறிவிட்டால்
குப்பைத் தொட்டில்கள்
குவியத் தொடங்கும்......

(2)

பச்சிளங்கள்
பகடைகளாய்
பாக்டரிகளில்....
ஆளப்பிறந்தவர்கள்
அழுக்குகளாய்
ஆலைகளில்.....
தொடர்பேதுமின்றி
இயந்திரங்களாய்
தொழிற்சாலைகளில்.....

(3)

பால் மறுத்த தாய்
தோள் மறுத்த தந்தை
பண்பு மறுத்த ஆசான்
துணை மறுத்த சுற்றம்.....
இழப்புகளில் இடிந்தவனுக்கு
தெய்வம் தந்த வீடு
வீதியிருக்கு வீதிச்சிறார்களுக்கு

(4)

வீட்டு வேலைகள்
குல மரியாதை
குடும்ப கௌரவம்
அடக்கம்
அனுசரிப்பு
அத்தனை
பண்புகளும்
கட்டாயமாக
இவர்களுக்கு
மட்டுமே இருக்க
வேண்டுமாம்....
பெண்குழந்தைகளுக்கு !

(5)

பன்னாட்டுக்
கம்பெனிகளுக்கு
இந்திய தொழிலில்
மோகம்
மனித உழைப்பு
இங்கே மலிந்து
கிடைப்பதாலே.....
நம் நாட்டுக்
கம்பெனிகளுக்கோ....
குழந்தை உழைப்பை
மலிவாகச் சுரண்டுவதிலே
தாகம்......





இயல் – 9

செய்யுள்

மனிதம், ஆளுமை – அன்பின்மொழி

# 3. தேம்பாவணி

வீரமாமுனிவர்

## பாடல் :

*பூக்கையைக் குவித்துப் பூவே*
*புரிவொடு காக்கென்று அம்பூஞ்*
*சேக்கையைப் பரப்பி இங்கண்*
*திருந்திய அறத்தை யாவும்*
*யாக்கையைப் பிணித்தென்று ஆக*
*இனிதிலுள் அடக்கி வாய்ந்த*
*ஆக்கையை அடக்கிப் பூவோடு*
*அழுங்கணீர் பொழிந்தான் மீதே*

## சொற்பொருள்:

| | |
|---|---|
| பூக்கையைக் குவித்து | – மலர் போன்ற கையைக் குவித்து |
| பூவே புரிவொடு காக்கென்று | – மண்ணே, இவ்வுடலை நீ பரிவோடு காப்பாயாக |
| அம்பூஞ்சேக்கையைப் பரப்பி | – அழகிய பூப்படுக்கையைப் பரப்பி |
| இங்கண் திருந்திய அறத்தை யாவும் | – இவ்வுலகில் செம்மையான அறங்களையெல்லாம் |
| யாக்கையைப் பிணித்தென்று ஆக | – உடலோடு கட்டிவைத்த தன்மையாக |
| இனிதிலுள் அடக்கி வாய்ந்த | – இனிதே தன்னுள் அடக்கி வாய்ப்பான வாழ்க்கை நடத்திய |
| ஆக்கையை அடக்கிப் | – (எலிசபெத்தின்) உடலை மண் இட்டு மூடி அடக்கி |
| பூவோடு அழுங்கணீர் பொழிந்தான் மீதே | – மலரோடு தான் அழுத கண்ணீரையும் சேரப்பொழிந்தான் கருணையன் |

## பொருளுரை:

கருணையன், தன் மலர் போன்ற கையைக் குவித்து, "பூமித்தாயே! என் அன்னையின் உடலை நீ அன்போடு காப்பாயாக" என்று கூறி, குழியினுள் அழகிய மலர்ப்படுக்கையைப் பரப்பினான். இவ்வுலகில் செம்மையான அறங்களையெல்லாம் தன்னுள் பொதிந்து வைத்து, பயனுள்ள வாழக்கை நடத்திய தன் அன்னையின் உடலை, மண் இட்டு மூடி அடக்கம் செய்து, அதன்மேல் மலர்களையும் தன் கண்ணீரையும் ஒரு சேரப் பொழிந்தான்.

## விளக்கவுரை:

கருணையன், தன் தாயின் அரவணைப்பில் வாழ்ந்து வந்தார். அவரது தாயின் பிரிவால் அவர் மிகுந்த துன்பப்படுகிறார். தன் தாயை மலர்ப் படுக்கையால் அடக்கம் பண்ணுகிறார். அதன் பின் கண்ணீர் விட்டு அழுகின்றார். நாம் வாழும் போது நம் கண் முன்னால் காணும் தெய்வம் தாய் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

**பாடல் :**

*வாய்மணி யாகக் கூறும்*
*வாய்மையே மழைநீ ராகித்*
*தாய்மணி யாக மார்பில்*
*தயங்கியுள் குளிர வாழ்ந்தேன்*
*தூய்மணி யாகத் தூவும்*
*துளியிலது இளங்கூழ் வாடிக்*
*காய்மணி யாகு முன்னர்க்*
*காய்ந்தெனக் காய்ந்தேன் அந்தோ.*

**சொற்பொருள்:**

வாய்மணி யாகக் கூறும் வாய்மையே – வாயாலே மணி போலக் கூறும் மெய்யுணர்வுகளையே
மழைநீ ராகித் – மழைநீராகக் கொண்டு பருகி
தாய்மணி யாக மார்பில் – தாயின் மார்பில் மணியாக
தயங்கியுள் குளிர வாழ்ந்தேன் – அசைந்து மனம் குளிர வாழ்ந்தேன்
தூய்மணி யாகத் தூவும் – தூய மணி போலத் தூவும்
துளியிலது இளங்கூழ் வாழ்க – மழைத்துளி இல்லாது இளம்பயிர் வாடி
காய்மணி யாகு முன்னர்க் – முதிர்ந்து காய்ந்த கதிர்மணி ஆகு முன்னர்
சொல் நிறையும் கவி தொடுத்தேன் – சொற்சுவை நிறைந்த கவிதையினைப் பாடினேன்
காய்ந்தெனக் காய்ந்தேன் அந்தோ – ஐயோ! காய்ந்த தன்மையாய் நானும் காய்ந்தேன்

**பொருளுரை :**

"என் தாய், தன் வாயாலே மணி போலக் கூறும் உண்மையான சொற்களையே மழைநீராக உட்கொண்டு, அத்தாயின் மார்பில் ஒரு மணிமாலையென அசைந்து, அழகுற வாழ்ந்தேன். ஐயோ! இளம்பயிர் வளர்ந்து முதிர்ந்து நெல்மணிகளைக் காணும் முன்னே தூய மணிபோன்ற தூவும் மழைத்துளி இல்லாமல் வாடிக் காய்ந்துவிட்டதைப் போல, நானும் இப்போது என் தாயை இழந்து வாடுகின்றேனே"

**விளக்கவுரை:**

நெற்பயிர் கதிர் விடும் முன்னே மழைத்துளிகள் இல்லாமல் வாடிவிடுவது போல, கருணையன் தன் தாய் இல்லாமல் வாடுவதாக, இப்பாடலில் ஆசிரியர் உவமைப்பட அழகாகக் கூறியிருக்கின்றார். தாயின் பிரிவு மனிதனை எவ்வளவு துன்பத்திற்கு உள்ளாக்குகின்றது என்பதை இப்பாடல் அழகாகக் கூறுகிறது.

**பாடல் :**

*விரிந்தன கொம்பில் கொய்த*
*வீயென உள்ளம் வாட*
*எரிந்தன நுதிநச்சு அம்புண்டு*
*இரும்புழைப் புண்போல் நோகப்*
*பிரிந்தன புள்ளின் கானில்*
*பெரிதழுது இரங்கித் தேம்பச்*
*சரிந்தன அசும்பில் செல்லும்*
*தடவிலா தனித்தேன் அந்தோ!*

## சொற்பொருள்

| | | |
|---|---|---|
| விரிந்தன கொம்பில் | – | விரிந்து நின்ற கிளையில் |
| கொய்த வீயென உள்ளம் வாட | – | கொய்யப்பட்ட (பறிக்கப்பட்ட) மலர்போல் மனம் வாட |
| எரிந்தன நுதிநச்சு அம்புண்டு | – | எரியும் தன்மை வாய்ந்த தன் நுனியில் நஞ்சைக் கொண்ட அம்பினால் அடிப்பட்டு |
| இரும்புழைப் புண்போல் நோகப் | – | பெரிய துளைப்பட்ட புண்ணைப் போல் தான் துன்பப்பட்டு |
| பிரிந்தன புள்ளின் கானில் | – | துணையைப் பிரிந்த பறவை போல் இக்காட்டினில் |
| பெரிதழுது இரங்கித் தேம்பச் | – | பெரிதும் அழுது இரங்கித் தேம்பவும் (வாடவும்) |
| சரிந்தன அசும்பில் செல்லும் | – | சரிவான வழுக்கு நிலத்தில் செல்லும் |
| தடவிலா தனிந்தேன் அந்தோ! | – | தடமும் தெரியாத தன்மையாய் நான் தனிமைப்படலானேன் ஐயோ! |

## பொருளுரை:

"என் மனம் பரந்து நின்ற மரக்கிளையிலிருந்து பறிக்கப்பட்ட மலரைப் போல வாடுகிறது. தீயையும் நஞ்சையும் முனையில் கொண்ட அம்பினால் துளைக்கப்பட்டதால் உண்டான, புண்ணின் வலியால் வருந்துவது போன்றது என் துயரம். துணையைப் பிரிந்த ஒரு பறவையைப் போல நான் இக்காட்டில் அழுது இரங்கி வாடுகிறேன்; சரிந்த வழுக்கு நிலத்திலே, தனியே விடப்பட்டுச் செல்லும் வழி தெரியாமல் தவிப்பவன் போல் ஆனேன்,"

## விளக்கவுரை:

கருணையன், தன் தாயின் பிரிவால் தனிமையை உணர்கிறார். அத்தனிமை அவரைத் துன்பத்திற்கு உள்ளாக்குகின்றது. அவரது ஏக்கத்தை இப்பாடல் விளக்குகிறது.

### பாடல் :

*உய்முறை அறியேன்; ஓர்ந்த*
*உணர்வினொத்து உறுப்பும் இல்லா*
*மெய்முறை அறியேன்; மெய்தான்*
*விரும்பிய உணவு தேடச்*
*செய்முறை அறியேன்; கானில்*
*செல்வழி அறியேன்; தாய்தன்*
*கைமுறை அறிந்தேன் தாயும்*
*கடிந்தெனைத் தனித்துப் போனாள்.*

## சொற்பொருள்:

| | | |
|---|---|---|
| உய்முறை அறியேன் | – | பிழைக்கும் வழியை அறியேன் |
| ஓர்ந்த உணர்வினொத்து உறுப்பும் இல்லா | – | ஆராய்ந்து கண்ட உணர்வினுக்கு ஒத்த வண்ணம் உறுப்புகள் இயங்குதல் இல்லாத |
| மெய்முறை அறியேன் | – | உடலின் போக்கையும் அறியேன் |
| மெய்தான் விரும்பிய உணவு தேடச் | – | உடம்பு தான் விரும்பிய உணவைத் தேட |
| செய்முறை அறியேன் | – | செய்ய வேண்டிய வழியும் அறியேன் |
| கானில் செல்வழி அறியேன் | – | காட்டில் செல்வதற்கான வழியும் அறியேன் |
| தாய்தன் கைமுறை அறிந்தேன் | – | தாய் தன் கையால் காட்டிய முறைப்படி செய்ய வேண்டியன அறிந்தேன் |
| தாயும் கடிந்தெனைத் தனித்துப் போனாள் | – | தாயும் என்னை விலக்கி வைத்துத் தான் மட்டும் தனித்துப் போய்ச் சேர்ந்து விட்டாள் |

**பொருளுரை:**

"நான் உயிர் பிழைக்கும் வழி அறியேன்; நினைந்து கண்ட அறிவினுக்குப் பொருந்தியவாறு உறுப்புகள் இயங்குதல் இல்லாத இந்த உடலின் தன்மையை அறியேன்; உடலுக்கு வேண்டிய உணவைத் தேடிக் கொணரும் வழி வகைகளை அறியேன்; காட்டில் செல்வதற்கான வழிகளையும் அறியேன்; என் தாய் தன் கையால் காட்டிய முறைகளை மட்டுமே அறிவேன். என்னைத் தவிக்க விட்டு விட்டு என் தாய் தான் மட்டும் தனியாகப் போய்விட்டாளே!"

**விளக்கவுரை:**

கருணையன், தாய் காட்டிய முறைகளைத் தவிர உலகில் எதையும் அறியாத சிறுபிள்ளையாக, ஒரு குழந்தையைப் போல புலம்புவதை இப்பாடலில் காண முடிகிறது.

## இயற்கை கொண்ட பரிவு:

**பாடல் :**

*நவமணி வடக்க யில்போல்*
*நல்லறப் படலைப் பூட்டும்*
*தவமணி மார்பன் சொன்ன*
*தன்னிசைக்கு இசைகள் பாடத்*
*துவமணி மரங்கள் தோறும்*
*துணர்அணிச் சுனைகள் தோறும்*
*உவமணி கானம்கொல் என்று*
*ஒலித்து அழுவ போன்றே.*

**சொற்பொருள்:**

| | | |
|---|---|---|
| நவமணி வடக்க யில்போல் | – | ஒன்பது வகை மணிகளால் செய்த வடங்களின் பூட்டுவாய் போல |
| நல்லறப் படலைப் பூட்டும் | – | நல்ல அறங்களாகிய மாலையை இணைத்துப் பூட்டும் |
| தவமணி மார்பன் சொன்ன | – | தவத்தை அணிந்த மார்பை உடையவனாகிய |
| தன்னிசைக்கு | – | கருணையனின் சோக இசைக்கு ஏற்ப |
| இசைகள் பாடத் | – | இசை பாட |
| துவமணி மரங்கள் தோறும் | – | தேன்மலர் அணிந்த மரங்கள் தோறும் |
| துணர்அணிச் சுனைகள் தோறும் | – | மலர்கள் அணிந்த தடாகங்கள் தோறும் |
| உவமணி கானம்கொல் என்று | – | உள்ள பறவைகளும், வண்டுகளும் கொல்லென்று |
| ஒலித்து அழுவ போன்றே | – | ஒலித்து அழுவன போன்று (தோன்றியன) |

**பொருளுரை:**

நவமணிகள் பதித்த மணிமாலைகளைப் பிணித்தது போன்று நல்ல அறங்களை எல்லாம் ஒரு கோவையாக இணைத்த தவத்தையே அணிந்த மார்பனாகிய கருணையன், இவ்வாறு புலம்பிக் கூறினான். அது கேட்டுப் பல்வேறு இசைகளை இயக்கியது போன்று. தேன்மலர்கள் பூத்த மரங்கள் தோறும் உள்ள மணம் வீசும் மலர்களும் மலர்ந்த சுனை தோறும் உள்ள பறவைகளும் வண்டுகளும் அக்காட்டினிலே அழுவன போல் கூச்சலிட்டன.

**விளக்கவுரை:**

கருணையனின் சோகத்தில் பங்கு கொள்வதைப் போல் இயற்கையும் அழுவதாக இப்பாடல் கூறுகிறது.

## ஆசிரியர் குறிப்பு:



- இக்காப்பியத்தை இயற்றியவர் வீரமாமுனிவர்.
- இவரது இயற்பெயர் கான்சுடான்சு சோசப் பெசுகி.
- தமிழின் முதல் அகராதியான சதுரகராதி, தொன்னூல் விளக்கம் (இலக்கண நூல்), சிற்றிலக்கியங்கள், உரைநடை நூல்கள், பரமார்த்தக் குருகதைகள், மொழிபெயர்ப்பு நூல்கள் ஆகியவற்றை இவர் படைத்துள்ளார்.

## நூற் குறிப்பு:

- தேம்பாவணி = தேம்பா + அணி எனப் பிரித்து வாடாத மாலை என்றும், தேம்பாவணி = தேன் + பா + அணி எனப் பிரித்து தேன் போன்ற இனிய பாடல்களின் தொகுப்பு என்றும் இந்நூலுக்குப் பொருள் கொள்ளப்படுகின்றது.
- கிறித்துவின் வளர்ப்புத் தந்தையாகிய சூசையப்பர் என்னும் யோசேப்பினை (வளனை) பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு. பாடப்பட்ட நூல் இது.
- இப்பெருங்காப்பியம் 3 காண்டங்களையும் 36 படலங்களையும் உள்ளடக்கி, 3615 பாடல்களைக் கொண்டுள்ளது.
- 17–ஆம் நூற்றாண்டில் படைக்கப்பட்டது.
- நம் பாடப்பகுதி மூன்றாம் காண்டத்தில் 26–வது படலத்தில் உள்ள 2388, 2400, 2401, 2403, 2410 பாடல்களைக் கொண்டு உள்ளது. அப்படலம் கருணையன் மாட்சிப் படலம் ஆகும்.

## மதிப்பீடு

### பொருள் தருக

1. சேக்கை – படுக்கை
2. யாக்கை – உடல்
3. பிணித்து – கட்டி
4. வாய்ந்த – பயனுள்ள
5. இளங்கூழ் – இளம்பயிர்
6. தயங்கி – அசைந்து
7. காய்ந்தேன் – வருந்தினேன்
8. கொம்பு – கிளை
9. புழை – துளை
10. கான் – காடு
11. தேம்ப – வாட
12. அசும்பு – நிலம்
13. உய்முறை – வாழும் வழி
14. ஓர்ந்து – நினைத்து
15. கடிந்து – விலக்கி
16. உவமணி – மணமலர்
17. படலை – மாலை
18. துணர் – மலர்கள்
19. பூவே – மண்ணே
20. வாய்மை – மெய்யுணர்வு

21. துளியிலது - மழைத்துளி இல்லாது
22. காய்மணி - காய்ந்த நெல்மணி; முற்றிய கதிர்
23. வீ - மலர்
24. நுதிநச்சு அம்பு - நுனியில் நஞ்சைக் கொண்ட அம்பு
25. இரும்புழை - பெரிய துளைபட்ட
26. நோக - துன்பப்பட்ட
27. புள் - பறவை
28. சரிந்தன அகும்பில் - சரிவான வழுக்கு நிலத்தில்
29. தடவிலா - தடம் தெரியாத
30. தனிந்தேன் - தனிமைப்பட்டேன்
31. மெய்முறை - உடலின் போக்கு
32. மெய்தான் - உடம்பு தான்
33. செய்முறை - செய்ய வேண்டிய வழியும்
34. நவமணி - ஒன்பது வகையான மணி
35. வடக்க - வடம்
36. தவமணி - தவத்தை அணிந்த
37. சுனை - ஊற்று

**இலக்கணக் குறிப்பு:**

1. காக்கென்று - காக்கவென்று என்பதன் தொகுத்தல் விகாரம்
2. கணீர் - கண்ணீர் என்பதன் இடைக்குறை
3. காப்முறை, உய்முறை, செய்முறை - வினைத்தொகைகள்
4. மெய்முறை - வேற்றுமைத் தொகை
5. கைமுறை - மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை
6. பூக்கை - உவமைத்தொகை
7. பூஞ்சேக்கை - உவமைத்தொகை
8. வாய்மையே மழைநீராகி - உருவகம்
9. இளங்கூழ் - பண்புத்தொகை
10. தடவிலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
11. நுதிநச்சு - உம்மைத் தொகை
12. இரங்கி - வினையெச்சம்
13. கொய்த வீ - பெயரெச்சம்
14. இல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்
15. விரும்பிய உணவு - பெயரெச்சம்
16. செல்வழி - வினைத்தொகை
17. கடிந்ததெனை - என்னை என்பதன் இடைக்குறை
18. நல்லறப்படலை - பண்புத்தொகை
19. தவமணி மார்பன் - உருவகம்
20. உவம் - உவ்வம் என்பதன் இடைக்குறை

### பகுபத உறுப்பிலக்கணம்:

1. அறியேன் – அறி + ய் + ஆ + ஏன்

அறி – பகுதி
ய் – சந்தி
ஆ – எதிர்மறை இடைநிலை புணர்ந்து கெட்டது
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று

2. ஒலித்து = ஒலி + த் + த் + உ

ஒலி – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

3. குவித்து = குவி + த் + த் + உ

குவி – பகுதி
த் – சந்தி
த் – இறந்தகால இடைநிலை
உ – வினையெச்ச விகுதி

4. பொழிந்தான் = பொழி + த்(ந்) + த் + ஆன்

பொழி – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஆன் – ஆண்பால் வினைமுற்று விகுதி

5. காய்ந்தேன் = காய் + த்(ந்) + த் + ஏன்

காய் – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

6. வாழ்ந்தேன் = வாழ் + த்(ந்) + த் + ஏன்

வாழ் – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

7. விரிந்தன = விரி + த்(ந்) + த் + அன் + அ

விரி – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அன் – சாரியை
அ – பெயரெச்ச விகுதி

8. எரிந்தன = எரி + த்(ந்) + த் + அன் + அ

எரி – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
அன் – சாரியை
அ – பெயரெச்ச விகுதி

9. அறிந்தேன் = அறி + த்(ந்) + த் + ஏன்

அறி – பகுதி
த் – சந்தி; த், ந் ஆனது விகாரம்
த் – இறந்தகால இடைநிலை
ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினாக்கள்:**

1. பூக்கையைக் குவித்துப் பூவே புரிவொடு காக்க என்று ________, ________ வேண்டினார். PTA

அ) கருணையன் எலிசபெத்துக்காக
ஆ) எலிசபெத் தமக்காக
இ) கருணையன் பூக்களுக்காக
ஈ) எலிசபெத் பூமிக்காக

விடை : அ) கருணையன் எலிசபெத்துக்காக

**கூடுதல் வினாக்கள்:**

2. __________ னுள் அழகிய மலர்ப் படுக்கையைக் கருணையன் பரப்பினான்.

அ) கட்டில் ஆ) வீட்டில்
இ) குழியில் ஈ) மரத்தில் விடை : இ) குழியில்

3. மழைநீரில்லாமல் நெல்மணி வாடியது போல் கருணையன் _______ இல்லாமல் வாடினான்.

அ) தந்தை ஆ) மனைவி இ) தங்கை ஈ) தாய் விடை : ஈ) தாய்

4. தீயையும் நஞ்சையும் முனையில் கொண்டது __________ .

அ) அருவாள் ஆ) கத்தி இ) ஈட்டி ஈ) அம்பு விடை : ஈ) அம்பு

5. துணையைப் பிரிந்த ஒரு ______________ போல நான் இக்காட்டில் அழுது இரங்கி வாடுகிறேன்.

அ) விலங்கைப் ஆ) பறவையைப்
இ) வண்டினைப் ஈ) பாம்பினைப் விடை : ஆ) பறவையைப்

6. __________, __________ அக்காட்டினிலே அழுவன போன்று கூச்சலிட்டன.

அ) பறவைகளும் விலங்குகளும் ஆ) விலங்குகளும் வண்டுகளும்
இ) பறவைகளும் வண்டுகளும் ஈ) பாம்புகளும் வண்டுகளும்

விடை : இ) பறவைகளும் வண்டுகளும்

7. வீரமாமுனிவர், இரண்டே மாதங்களில் கற்றுக்கொண்ட மொழி __________.

அ) தெலுங்கு ஆ) உருது இ) பாரசீகம் ஈ) கன்னடம் விடை : ஆ) உருது

8. இஸ்மத் சன்னியாசி என்னும் பட்டத்தை வீரமாமுனிவருக்கு வழங்கியவர் __________.

அ) உமறுப் புலவர் ஆ) அபுல் காசிம்
இ) சந்தாசாகிப் ஈ) இராஜராஜன் விடை : இ) சந்தாசாகிப்

9. இஸ்மத் சன்னியாசி என்ற பாரசீகச் சொல்லுக்குத் __________ என்று பொருள்.

அ) அன்புத் துறவி ஆ) மாய துறவி
இ) எளிய துறவி ஈ) தூய துறவி விடை : ஈ) தூய துறவி

10. கிறித்துவின் வளர்ப்புத் தந்தை __________.

அ) முடியப்பர் ஆ) அருளப்பர்
இ) சூசையப்பர் ஈ) இராயப்பர் விடை : இ) சூசையப்பர்

11. தேம்பாவணி ________ ஆம் நூற்றாண்டில் படைக்கப்பட்டது.

அ) 15 ஆ) 16 இ) 17 ஈ) 18 விடை : இ) 17

12. வீரமாமுனிவரின் இயற்பெயர் ________.

அ) ஸ்டீபன் பெசுகி ஆ) மார்ட்டின் பெசுகி
இ) கான்சுடான்சு சோசப் பெசுகி ஈ) டேவிட் பெசுகி

விடை : இ) கான்சுடான்சு சோசப் பெசுகி

13. தமிழின் முதல் அகராதி ________.

அ) சதுரகராதி ஆ) தொன்னூல் விளக்கம்
இ) தண்டியலங்காரம் ஈ) தொல்காப்பியம் விடை : அ) சதுரகராதி

14. தொன்னூல் விளக்கம் என்பது ________ நூல்.

அ) இலக்கிய ஆ) விளக்க இ) இலக்கண ஈ) நாடக விடை : இ) இலக்கண

15. கருணையன் என்பவர் PTA

அ) வீரமாமுனிவர் ஆ) யோசேப்பு
இ) அருளப்பன் ஈ) சாந்தாசாகிப் விடை : இ) அருளப்பன்

## பின்வரும் பாடலைப் படித்து வினாக்களுக்கு விடையளி

விரிந்தன கொம்பில் கொப்பத
வீயென உள்ளம் வாட
எரிந்தன நுதிநச்சு அம்புண்டு
இரும்புழைப் புண்போல் நோகப்
பிரிந்தன புள்ளின் கானில்
பெரிதழுது இரங்கித் தேம்பச்
சரிந்தன அசும்பில் செல்லும்
தடவிலா தனித்தேன் அந்தோ!

1. இப்பாடல் இடம்பெற்ற நூல் ________

அ) இரட்சணிய யாத்திரிகம் ஆ) பெத்லகேம் குறவஞ்சி
இ) தேம்பாவணி ஈ) சீறாப்புராணம்

விடை : இ) தேம்பாவணி

2. இப்பாடலில் இடம்பெறும் அடியெதுகைகள் ________

அ) விரிந்தன, எரிந்தன, பிரிந்தன, சரிந்தன
ஆ) விரிந்தன, வீயென
இ) பிரிந்தன, பெரிதழுது
ஈ) பிரிந்தன புள்ளின்

விடை : அ) விரிந்தன, எரிந்தன, பிரிந்தன, சரிந்தன

3. "அசும்பு" என்பதன் பொருள் ________

அ) நிலம் ஆ) வானம்
இ) கடல் ஈ) மேகம்

விடை : அ) நிலம்

4. "கொம்பு" என்பதன் பொருள் ________

அ) கிளை ஆ) கொடி
இ) தண்டு ஈ) வேர்

விடை : அ) கிளை

## குறுவினா

### பாடநூல் வினா:

1. "காய்மணி யாகு முன்னர்க் காய்ந்தெனக் காய்ந்தேன்" – உவமை உணர்த்தும் கருத்து யாது? PTA

- நெற்பயிர் வளர்ந்து கதிரை ஈன்று நெல்மணிகளைக் காணும் முன்னரே மழைத்துளி இல்லாமல் காய்ந்து விட்டது போல என்பது உவமை.
- திருமுழுக்கு யோவான், கானகத்தில் தன் தாயார் எலிசபெத் அம்மாளுடன் வாழ்ந்த சூழலில் அவருடைய தாயார் இறந்து விட்டார்.
- எனவே நெற்பயிர் கதிரை ஈன்று நெல்மணிகள் முற்றுவதற்கு முன்னால் மழையின்றிப் பட்டுப் போனதைப் போல, திருமுழுக்கு யோவான் வளர்ந்து பெரிய மனிதராகி இச்சமுதாயத்திற்கு நற்பலன்களை வழங்குவதற்கு முன்னரே அவருடைய தாய் எலிசபெத் இறந்து போனது, நெற்பயிர் காய்ந்தது என்ற உவமைக்குக் கருத்தாக அமைகிறது.

### கூடுதல் வினாக்கள்:

2. எவையெல்லாம் ஒரு தாய்க்கு ஈடில்லை என்று ஒரு கவிஞர் கூறுகிறார்?

பசுந்தங்கம். புதுவெள்ளி. மாணிக்கம். மணிவைரம் யாவும் ஒரு தாய்க்கு ஈடில்லை என்கிறார் ஒரு கவிஞர்.

3. எத்துயரம் பெரிது?

தாயை இழந்து தனித்துறும் துயரம் பெரிது.

4. எதை பகிர்ந்தால் பெருகும்? எதை பகிர்ந்தால் குறையும்?

மகிழ்ச்சியைப் பகிர்ந்தால் பெருகும்; துயரைப் பகிர்ந்தால் குறையும்.

5. மனிதத்தின் முகவரிகள் யார்?

துயரத்தைத் தாங்கிக் கொள்ளும் மனங்கள் மனிதத்தின் முகவரிகள்.

6. எது இருந்தால் ஆறுதல் கிடைக்கும்?

சாதாரண உயிரினங்களுக்கும் துயரத்தைப் பகிர்ந்து கொள்ளும் மனிதம் இருந்தால் ஆறுதல் கிடைக்கும்.

7. கருணையன் குறித்து கூறப்பட்டுள்ள செய்தி யாது?

- கிறித்துவிற்கு முன் தோன்றியவர் திருமுழுக்கு யோவான்.
- இவரை அருளப்பர் என்றும் குறிப்பிடுவர்.
- இவரே கிறித்துவின் வருகையை அறிவித்த முன்னோடி.
- வீரமாமுனிவர் தன் காப்பியத்தில் இவருக்குக் கருணையன் என்று பெயரிட்டுள்ளார்.
- கருணையன் தன் தாயார் எலிசபெத் அம்மையாருடன் கானகத்தில் வாழ்ந்து வந்தார்.
- அச்சூழலில் அவருடைய தாய் இறந்துவிட்ட போது கருணையன் அடையும் துன்பத்தில் இயற்கையும் பங்கு கொண்டு கலங்கி ஆறுதல் அளிக்கிறது.

8. கருணையன், தன் தாய்க்காகப் பூமித்தாயை எவ்வாறு வேண்டினான்?

கருணையன், தன் மலர் போன்ற கையைக் குவித்து, "பூமித்தாயே! என் அன்னையின் உடலை நீ அன்போடு காப்பாயாக" என்று கூறி வேண்டினான்.

9. கருணையன், தன் தாயை எவ்வாறு அடக்கம் செய்தான்?

- குழியினுள் அழகிய மலர்ப்படுக்கையைப் பரப்பினான்.
- இவ்வுலகில் செம்மையான அறங்களையெல்லாம் தன்னுள் பொதிந்து வைத்தான்.
- பயனுள்ள வாழ்க்கை நடத்திய தன் அன்னையின் உடலை, மண் இட்டு மூடி அடக்கம் செய்து, அதன் மேல் மலர்களையும் தன் கண்ணீரையும் ஒரு சேரப் பொழிந்தான்.

10. தான், தன் தாயாருடன் எவ்வாறு வாழ்ந்ததாகக் கருணையன் கூறுகிறான்?

"என் தாய், தன் வாயாலே மணிபோலக் கூறும் உண்மையான சொற்களையே மழைநீராக உட்கொண்டு, அத்தாயின் மார்பில் ஒரு மணிமாலையென அசைந்து, அழகுற வாழ்ந்தேன்", என்று கூறுகிறான்.

11. கருணையன் துயரம் எதனைப் போன்றிருந்தது?

தீயையும் நஞ்சையும் முனையில் கொண்ட அம்பினால் துளைக்கப்பட்டதால் உண்டான, புண்ணின் வலியால் வருந்துவது போன்றது அவர் துயரம்.

12. கருணையன் புலம்பலுக்கு செவிமடுத்த இயற்கையைக் குறித்தும் எழுதுக.

கருணையனின் புலம்பலைக் கேட்டு, பல்வேறு இசைகளை இயக்கியது போன்று, தேன் மலர்கள் பூத்த மரங்கள் தோறும் உள்ள மணம் வீசும் மலர்களும் மலர்ந்த சுனை தோறும் உள்ள பறவைகளும் வண்டுகளும் அக்காட்டினிலே அழுவன போன்று கூச்சலிட்டன.

13. இஸ்மத் சன்னியாசி என்றால் என்ன பொருள்? இப்பட்டத்தை வீரமாமுனிவருக்கு வழங்கியவர் யார்?

- இஸ்மத் சன்னியாசி என்ற பாரசீகச் சொல்லுக்குத் தூய துறவி என்று பொருள்.
- வீரமாமுனிவர் திருச்சியை ஆண்ட சந்தாசாகிப் என்னும் மன்னரைச் சந்தித்து உரையாடுவதற்காக இரண்டே மாதங்களில் உருதுமொழியைக் கற்றுக் கொண்டார்.
- இவருடைய எளிமையையும், துறவையும் கண்டு வியந்த சந்தாசாகிப் இஸ்மத் சன்னியாசி என்னும் பட்டத்தை வீரமாமுனிவருக்கு அளித்தார்.

14. தேம்பாவணி – பொருள் தருக.

தேம்பாவணி = தேம்பா + அணி எனப் பிரித்து வாடாதமாலை என்றும், தேன் + பா + அணி எனப் பிரித்து தேன் போன்ற இனிய பாடல்களின் தொகுப்பு என்றும் பொருள் கொள்ளப்படுகின்றது.

15. தேம்பாவணி நூலின் அமைப்பு யாது?

தேம்பாவணி என்னும் பெருங்காப்பியம் 3 காண்டங்களையும் 36 படலங்களையும் உள்ளடக்கி 3615 பாடல்களைக் கொண்டு விளங்குகிறது.

16. வீரமாமுனிவரின் படைப்புகள் யாவை?

தமிழின் முதல் அகராதியான சதுரகராதி, தொன்னூல் விளக்கம் (இலக்கண நூல்) சிற்றிலக்கியங்கள், உரைநடை நூல்கள், பரமார்த்தக் குருகதைகள், மொழிபெயர்ப்பு நூல்கள் ஆகியவற்றை வீரமாமுனிவர் படைத்துள்ளார்.

## சிறுவினா

**பாடநூல் வினா:**

1. எவையெல்லாம் அறியேன் என்று கருணையன் கூறுகிறார்?

- "நான் உயிர்பிழைக்கும் வழி அறியேன்";
- "நினைந்து கண்ட அறிவினுக்குப் பொருந்தியவாறு உறுப்புகள் இயங்குதல் இல்லாத இந்த உடலின் தன்மையை அறியேன்";
- "உடலுக்கு வேண்டிய உணவைத் தேடிக் கொணரும் வழிகளை அறியேன்";
- "காட்டில் செல்வதற்கான வழிகளையும் அறியேன்"

என்று கருணையன் கூறுகிறார்.

**கூடுதல் வினாக்கள்:**

2. கருணையன் தன் தாயை எவ்வாறு அடக்கம் பண்ணினார்?

◆ கருணையன், தன் மலர் போன்ற கையைக் குவித்து, "பூமித்தாயே! என் அன்னையின் உடலை நீ அன்போடு காப்பாயாக" என்று கூறி, குழியினுள் அழகிய மலர்ப்படுக்கையைப் பரப்பினான்.

◆ இவ்வுலகில் செம்மையான அறங்களையெல்லாம் தன்னுள் பொதிந்து வைத்து, பயனுள்ள வாழ்க்கை நடத்திய தன் அன்னையின் உடலை, மண் இட்டு மூடி அடக்கம் செய்து, அதன் மேல் மலர்களையும் தன் கண்ணீரையும் ஒரு சேரப் பொழிந்தான்.

3. கருணையன் எவ்வாறு வாழ்ந்ததாகவும், எப்படித் தாயை இழந்து தவிப்பதாகவும் வீரமாமுனிவர் கூறுகிறார்?

◆ "என் தாய், தன் வாயாலே மணிபோலக் கூறும் உண்மையான சொற்களையே மழைநீராக உட்கொண்டு, அத்தாயின் மார்பில் ஒரு மணிமாலையென அசைந்து, அழகுற வாழ்ந்தேன்.

◆ ஐயோ! இளம்பயிர் வளர்ந்து முதிர்ந்து நெல்மணிகளைக் காணும் முன்னே தூய மணி போன்ற தூவும் மழைத்துளி இல்லாமல் வாடிக் காய்ந்துவிட்டதைப் போல, நானும் இப்போது என் தாயை இழந்து வாடுகின்றேனே!" என்று கூறுகிறார்.

4. கருணையன், தன் துயரத்தை எவ்வாறு பிறவற்றோடு ஒப்பிட்டுக் கூறுகிறார்?

◆ "ஐயோ! இளம்பயிர் வளர்ந்து முதிர்ந்து நெல்மணிகளைக் காணும் முன்னே தூய மணி போன்ற தூவும் மழைத்துளி இல்லாமல் வாடிக் காய்ந்துவிட்டதைப் போல, நானும் இப்போது என் தாயை இழந்து வாடுகின்றேனே!

◆ என் மனம் பரந்து நின்ற மரக்கிளையிலிருந்து பறிக்கப்பட்ட மலரைப் போல வாடுகிறது.

◆ தீயையும் நஞ்சையும் முனையில் கொண்ட அம்பினால் துளைக்கப்பட்டதால் உண்டான, புண்ணின் வலியால் வருந்துவது போன்றது என் துயரம்.

◆ துணையைப் பிரிந்த ஒரு பறவையைப் போல நான் இக்காட்டில் அழுது இரங்கி வாடுகிறேன்.

◆ சரிந்த வழுக்கு நிலத்திலே, தனியே விடப்பட்டுச் செல்லும் வழி தெரியாமல் தவிப்பவன் போல் ஆனேன் என்று ஒப்பிட்டுக் கூறுகிறார்.

## நெடுவினா

**பாடநூல் வினா:**

1. கருணையனின் தாய் மறைவுக்கு, வீரமாமுனிவர் தம் பூக்கள் போன்ற உவமைகளாலும் உருவக மலர்களாலும் நிகழ்த்திய கவிதாஞ்சலியை விவரிக்க. PTA

**எலிசபெத்து அம்மையார் அடக்கம், கருணையன் கண்ணீர்;**

கருணையன், தன் மலர் போன்ற கையைக் குவித்து "பூமித்தாயே! என் அன்னையின் உடலை நீ அன்போடு காப்பாயாக" என்று கூறி குழியினுள் அழகிய மலர்படுக்கையைப் பரப்பினார். இவ்வுலகில் செம்மையான அறங்களையெல்லாம் தன்னுள் பொதிந்து வைத்து பயனுள்ள வாழ்க்கை நடத்திய தன் அன்னையின் உடலை, மண் இட்டு மூடி அடக்கம் செய்து, அதன் மேல் மலர்களையும் தன் கண்ணீரையும் ஒரு சேரப் பொழிந்தான் .

"என் தாய், தன் வாயாலே மணி போன்று கூறும் உண்மையான சொற்களையே மழைநீராக உட்கொண்டு, அத்தாயின் மார்பில் ஒரு மணிமாலையென அசைந்து, அழகுற வாழ்ந்தேன், ஐயோ! இளம்பயிர் வளர்ந்து முதிர்ந்து நெல்மணிகளைக் காணும் முன்னே தூய மணி போன்ற தூவும் மழைத்துளி இல்லாமல் வாடிக் காய்ந்துவிட்டதைப் போல, நானும் இப்போது என் தாயை இழந்து வாடுகின்றேனே!"

"என் மனம் பரந்து நின்ற மரக்கிளையிலிருந்து பறிக்கப்பட்ட மலரைப் போல வாடுகிறது. தீயையும் நஞ்சையும் முனையில் கொண்ட அம்பினால் துளைக்கப்பட்டதால் உண்டான, புண்ணின் வலியால் வருந்துவது போன்றது என் துயரம். துணையைப் பிரிந்த ஒரு பறவையைப் போல நான் இக்காட்டில் அழுது இரங்கி வாடுகிறேன். சரிந்த வழுக்கு நிலத்திலே தனியே விடப்பட்டுச் செல்லும் வழி தெரியாமல் தவிப்பவன் போல் ஆனேன்."

"நான் உயிர் பிழைக்கும் வழி அறியேன்; நினைந்து கண்ட அறிவினுக்குப் பொருந்தியவாறு உறுப்புகள் இயங்குதல் இல்லாத இந்த உடலின் தன்மையை அறியேன்; உடலுக்கு வேண்டிய உணவைத் தேடிக் கொணரும் வழிவகைகளை அறியேன்; காட்டில் செல்வதற்கான வழிகளையும் அறியேன்; என் தாய் தன் கையால் காட்டிய முறைகளை மட்டுமே அறிவேன். என்னைத் தவிக்க விட்டு விட்டு என் தாய் தான் மட்டும் தனியாகப் போய் விட்டாளே!"

**இயற்கை கொண்ட பரிவு:**

நவமணிகள் பதித்த மணிமாலைகளைப் பிணித்தது போன்று நல்ல அறங்களை எல்லாம் ஒரு கோவையாக இணைத்த தவத்தையே அணிந்த மார்பனாகிய கருணையன், இவ்வாறு புலம்பிக் கூறினான். அது கேட்டுப் பல்வேறு இசைகளை இயக்கியது போன்று, தேன்மலர்கள் பூத்த மலர்கள் தோறும் உள்ள மணம் வீசும் மலர்களும் மலர்ந்த சுனை தோறும் உள்ள பறவைகளும் வண்டுகளும் அக்காட்டினிலே அழுவன போல் கூச்சலிட்டன.

## கூடுதல் வினா:

**2. வீரமாமுனிவர் குறித்து எழுதுக.**

- பெயர் : வீரமாமுனிவர்
- இயற்பெயர் : கான்சுடான்சு சோசப் பெசுகி
- ஊர் : இத்தாலி நாட்டிலுள்ள கேசுதிகிலியோன்
- பெற்றோர் : கொண்டல் போபெசுகி – எலிசபெத் அம்மாள்
- பிறப்பு : 08–11–1680
- பணி : மறைப்போதகப் பணி, எழுத்துப்பணி
- சிறப்பு பெயர்கள் : வீரமாமுனிவர், தைரியநாதன், இஸ்மத் சன்னியாசி, தமிழ் அகராதியின் தந்தை, உரைநடை இலக்கிய முன்னோடி
- அறிந்த மொழிகள் : இத்தாலியம், இலத்தீன், கிரேக்கம், ஆங்கிலம், எபிரேயம், தமிழ், தெலுங்கு, சமற்கிருதம், உருது
- இயற்றிய நூல்கள் : சதுரகராதி, தொன்னூல் விளக்கம், பரமார்த்த குரு கதைகள், தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரியம்மாள் அம்மானை, ஞானோபதேசம், வேத விளக்கம், அடைக்கல நாயகி வெண் கலிப்பா, கருணாம்பரப பதிகம், தமிழ்ச் செய்யுள் தொகை, அன்னை அழுங்கல் அந்தாதி,கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம் மொழிபெயர்ப்புகள்.
- சீர்திருத்தம் : தமிழ் எழுத்துகளைச் சீர்திருத்தம் செய்துள்ளார்.
- இறப்பு : 04–02–1747

## நூல்வெளி:

- தேம்பா + அணி எனப் பிரித்து வாடாத மாலை.
- தேன் + பா + அணி எனப் பிரித்து தேன் போன்ற இனிய பாடல்களின் தொகுப்பு.
- கிறித்துவின் வளர்ப்புத் தந்தையாகிய சூசையப்பர் என்னும் யோசேப்பினைப் (வளனை) பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட நூல் இது.
- இப்பெருங்காப்பியம் 3 காண்டங்களையும் 36 படலங்களையும் உள்ளடக்கி, 3615 பாடல்களைக் கொண்டுள்ளது.

- 17–ஆம் நூற்றாண்டில் படைக்கப்பட்டது தேம்பாவணி. இக்காப்பியத்தை இயற்றியவர் வீரமாமுனிவர்.
- இவரது இயற்பெயர் கான்சுடான்சு சோசப் பெசுகி.
- தமிழின் முதல் அகராதியான சதுரகராதி, தொன்னூல் விளக்கம் (இலக்கண நூல்), சிற்றிலக்கியங்கள், உரைநடை நூல்கள், பரமார்த்தக் குரு கதைகள், மொழிபெயர்ப்பு நூல்கள் ஆகியவற்றை இவர் படைத்துள்ளார்.

**இஸ்மத் சன்னியாசி – தூய துறவி:**

- வீரமாமுனிவர் திருச்சியை ஆண்ட சந்தாசாகிப் என்னும் மன்னரைச் சந்தித்து உரையாடுவதற்காக இரண்டே மாதங்களில் உருதுமொழியைக் கற்றுக் கொண்டார்.
- இவருடைய எளிமையையும், துறவையும் கண்டு வியந்த சந்தாசாகிப் இஸ்மத் சன்னியாசி என்னும் பட்டத்தை வீரமாமுனிவருக்கு அளித்தார்.
- இந்தப் பாரசீகச் சொல்லுக்குத் தூய துறவி என்று பொருள்.

## கற்பவை கற்றபின்

1. வீரமாமுனிவர் தமிழகத்தில் தங்கிப் பணிசெய்த இடங்களைப் பற்றியும் அங்கு அவர் ஆற்றிய தமிழ்ப்பணிகளைப் பற்றியும் நூலகத்திற்குச் சென்று செய்திகளைத் திரட்டுக.

**முன்னுரை:**

இத்தாலி நாட்டில் வெனிஸ் மாநிலத்தில் மாந்துவா என்னும் மாவட்டத்திலுள்ள காஸ்திகிளியோனே என்ற சிற்றூரில் 08–11–1680 ஆம் நாள் பிறந்தார். தந்தையார் கொண்டோல் போ பெசுகி, தமிழகத்திற்குக் கிறிஸ்தவ மதத்தைப் பரப்பிட 1711 ஆம் ஆண்டு வருகை புரிந்தார். தமிழ் பயின்றதுடன், தெலுங்கு, கன்னடம், வடமொழி, உருது முதலிய மொழிகளையும் கற்றுத் தேர்ந்தார். இத்தாலி நாட்டில் தமது இளமைப் பருவத்திலேயே இத்தாலி, இலத்தீன், பிரஞ்சு, கிரேக்கம் முதலிய மொழிகளில் தேர்ச்சி பெற்று விளங்கினார், தத்துவமும் இறையியலும் பயின்றார்.

**வீரமாமுனிவர் பணி புரிந்த ஊர்கள்:**

கோவை, தூத்துக்குடி, மணப்பாடு, ஆவூர் (1711), மதுரை (1711), ஐயம்பட்டி (1712–13) குருக்கள்பட்டி – காமநாயக்கன்பட்டி (1713–15), மறவநாடு (1716), வடுகர்பட்டி (1717–1720), தஞ்சை (1715) ஏலாக்குறிச்சி (1731–39), அம்பலக்காடு (1746–47) மேலும், பாண்டிச்சேரி, திருமானூர், கயத்தாறு, திருச்சி போன்ற ஊர்களிலும் பணியாற்றியுள்ளார்.

**தமிழ்த் தொண்டுகள்:**

1. அன்னை அழுங்கல் அந்தாதி (1715)
2. ஞான உணர்த்துதல் (1720)
3. தேம்பாவணி (1726)
4. வேதியர் ஒழுக்கம் (1727)
5. லுத்தேரினத்தியல்பு (1727)
6. வேத விளக்கம் (1728)
7. பேதக மறுத்தல் (1728)
8. கொடுந்தமிழ் இலக்கணம் (1728)
9. தேம்பாவணி உரை (1729)
10. செந்தமிழ் இலக்கணம் (1730)
11. திருக்குறள் இலத்தீன் மொழிபெயர்ப்பு (1725)
12. கித்தேரி அம்மானை (1731)
13. திருக்காவலூர்க் கலம்பகம் (1731)
14. வெண்கலிப்பா (1731)

15. அடைக்கல மாலை (1731)
16. தொன்னூல் விளக்கம் (1731)
17. வண்ணம் (1731)
18. சதுரகராதி (1732)
19. பஞ்சாங்க நூல் (1733)
20. தமிழ்–பிரஞ்சு, பிரஞ்சு–தமிழ் அகராதி (1733)
21. போர்த்துக்கீசியம் – இலத்தீன் – தமிழ்அகராதி (1744)
22. பரமார்த்த குரு கதை (1744)
23. வாமன் கதை (1744)
24. கருணா பரப்பதிகம்
25. தனிப்பாடல்கள்
26. திருக்குறள் எளிய தமிழில்
27. இந்தியப் பஞ்சாங்கம் (1733)

போன்ற பல நூல்களை எழுதியுள்ளார்.

முடிவுரை:

வீரமாமுனிவர் 30 ஆண்டுகள் இடையறாது பணியாற்றியதால் ஓய்வுக்காக மணப்பாட்டிலிருந்து அம்பலக்காட்டிற்கு அனுப்பப்பட்டார். அங்கே உள்ள குருத்துவக் கல்லூரியில் குருமாணவர்களுக்கு இறையியல் கற்பித்தார். தமது 67வது வயதில் 1747 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 4 ஆம் நாள் இறைவனில் இளைப்பாறினார். இவருடைய கல்லறை அம்பலக்காட்டில் உள்ள சம்பாவூரில் உள்ளது என்று அதிகாரப்பூர்வமான அறிக்கை வாயிலாக அறியப்படுகிறது.

2. கண்ணதாசனின் இயேசு காவியத்தில் மலைப் பொழிவுப் பகுதியைப் படித்து அதில் வரும் அறக்கருத்துகளை எழுதுக.

1. இளகிய எளிய மனம் உடையவர்கள் பேறு பெற்றவர்கள்.
2. துயரம் அடைந்தவர்கள் ஆறுதல் அடைவார்கள்.
3. அமைதி என்னும் சாந்தம் உடையவர்கள் விண்ணக வாழ்வை அடைவார்கள்.
4. நீதிக்காகத் துன்பம் அடைந்தவர்கள் பேறு பெற்றவர்கள்.
5. இரக்கம் காட்டி இரக்கத்தைப் பெறுபவர் பேறு பெற்றவர்கள். ஆண்டவருடைய பிள்ளைகள் அவர்களே.
6. கொடிய செயல் அனைத்துக்கும் மரணம் உண்டு. நெஞ்சத்தைச் சுடுவார்க்கு நரகமே கிட்டும்.
7. உறவினரைத் தூற்றுபவரும், நண்பர் மேல் பழி சொல்பவரும் நரகம் சென்று சேர்வர்.
8. இறைவனுக்குக் காணிக்கை செலுத்துவது மட்டும் முக்கியமன்று; பகைவனையும் உறவாகக் கொண்டு செயல்பட்டால் தான் புண்ணிய வாழ்வு கிட்டும்.
9. ஊருக்குத் தீமைகள் செய்து நீ உள்ளம் மகிழ்ந்திருத்தல் பாவம்.
10. பொய் சத்தியத்தை நீக்கி தீமைகள் செய்வதை விட்டு விலக வேண்டும்.
11. ஒரு கன்னத்தில் அறைந்தவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு.
12. அன்றைய பொழுதை அன்றே நினைத்து நிம்மதியோடு வாழுங்கள்.
13. எவரைப் பற்றியும் எந்த நேரத்திலும் குற்றம் பேசி குறை சொல்ல வேண்டாம்.
14. மன்னித்து விட்டால் மன்னிக்கப் படுவீர்கள்.
15. கொடுங்கள்; அதுபோல் உங்களுக்குக் கொடுக்கப்படும்.
16. நீ பிறருக்கு எந்த அளவையால் அளக்கின்றாயோ அதே அளவையால் உங்களுக்கும் அளக்கப்படும்.





இயல் - 9 விரிவானம்

## மனிதம், ஆளுமை - அன்பின்மொழி

# 4. ஒருவன் இருக்கிறான்

## நெடுவினா

### பாடநூல் வினா:

1. அழகிரிசாமியின் "ஒருவன் இருக்கிறான்" சிறுகதையில் மனிதத்தை வெளிப்படுத்தும் கதை மாந்தர் குறித்து எழுதுக. PTA

**மனிதத்தை வெளிப்படும் கதை மாந்தர்**

**வீரப்பன் :**

வீரப்பன் காஞ்சிபுரத்தில் ஒரு விறகுக் கடையில் வேலை செய்து வந்த ஒரு ஏழை, வீரப்பனுடைய ஆத்ம நண்பன் குப்புசாமி. குப்புசாமிக்கு தாய் தகப்பன் கிடையாது. சென்னையில் அவனது சித்தியும், காஞ்சிபுரத்தில் தாய்மாமனும் மட்டுமே, காஞ்சிபுரத்தில் வீரப்பன் வேலை செய்த விறகுக் கடையின் எதிரிலிருந்த ஒரு சைக்கிள் ரிப்பேர் கடையில் தினக்கூலியாக வேலை செய்து வந்த அவன் நோய் காரணமாக வேலையை இழந்து தாய்மாமன் வீட்டில் துன்பப்பட்டுக் கொண்டிருந்தான். பின்னர் மருத்துவத்திற்காக சித்தி வீட்டிற்கு வந்திருந்தான். அங்கு வீரப்பனை ஒருவரும் மனமுவந்து ஏற்றுக் கொள்ளவில்லை. அப்போது குப்புசாமிக்கு வீரப்பனிடமிருந்து மூன்று ரூபாயும், ஒரு கடிதமும் கொடுத்து விட்டிருந்தான்.

அந்தக் கடிதத்தில், "என் உயிர் நண்பன் குப்புசாமிக்கு எழுதிக் கொண்டது. நீ இங்கிருந்து போனதிலிருந்து என் உயிர் இங்கே இல்லை. சதா உன் ஞாபகமாகத் தான் இருக்கிறேன். கடவுள் அருளால், நீ உடம்பு சௌக்கியமாகி வரவேண்டும் என்று தினமும் ஒரு தடவை கோவிலுக்குப் போய்க் கும்பிடுகிறேன். எனக்கு இப்போது வேலை இல்லை. கொஞ்ச நாட்களாக வருமானம் இல்லாமல் இருக்கிறேன். நேற்று கட்டைத் தொட்டி ஆறுமுகம் பட்டணம் போவதாகச் சொன்னான். உடனே, ஓடி ஒருவரிடம் மூன்று ரூபாய் கடன் வாங்கி அவனிடம் கொடுத்தனுப்பியிருக்கிறேன். நானே வரலாம் என்று பார்த்தேன். வந்தால் இந்த மூன்று ரூபாயும் பஸ்ஸுக்குச் செலவாகிவிடும். உனக்குச் சமயத்தில் உதவியாக இருக்கும் என நினைத்து, நான் ரூபாயைச் செலவழித்துக்கொண்டு வராமல், ஆறுமுகத்திடம் கொடுத்தனுப்பி இருக்கிறேன். இன்னோர் இடத்திலும் பணம் கேட்டிருக்கிறேன். கிடைத்தால் நான் சீக்கிரம் உன்னைப் பார்க்க வருவேன். உன்னைப் பார்த்தால் தான் நான் தின்னும் சோறு, சோறாக இருக்கும்" என்று எழுதியிருந்தது.

இக்கடிதத்தின் மூலம் மனிதத்தை வெளிப்படுத்தும் கதாபாத்திரத்தில், வீரப்பன் கச்சிதமாகப் பொருந்தி வந்துள்ளான்.

### கூடுதல் வினாக்கள்:

2. குப்புசாமி கதாபாத்திரம் குறித்து எழுதுக.

குப்புசாமிக்கு, வயது இருபத்தைந்து. தாய் தகப்பன் கிடையாது. அவனுக்கு இருந்த உறவு தங்கவேலுவின் மனைவியான அவனுடைய சித்தியும், காஞ்சிபுரத்திலேயே உள்ள தாய்மாமன் ஒருவனும் தான். காஞ்சிபுரத்தில் தாய்மாமன் வீட்டிலேயே சாப்பிட்டுக் கொண்டு, ஒரு சைக்கிள் ரிப்பேர்க்கடையில் தினக்கூலியாக ஒன்றரையும் இரண்டும் வாங்கிக் கொண்டு வேலை செய்து வந்தான். வயிற்று வலி வந்து ஆறேழு மாதங்களாக வேலை இல்லை. சம்பாத்தியமும் இல்லை. நோயும் வேறு. இந்த நிலையில் தாய்மாமன் வீட்டிலிருந்து அவனை ஒரு வழியாக விரட்டிவிட்டார்கள். வைத்தியம் செய்து கொள்ள தங்கவேலு விட்டுக்கு வந்திருக்கின்றான்.

எலும்பும் தோலுமான உடம்பு. எண்ணெய் காணாத தலை காடாக வளர்ந்திருந்தது. சட்டையும் வேஷ்டியும் ஒரே அழுக்கு. சட்டையில் ஒரு பொத்தான் கூட இல்லை. அங்கு திண்ணையில் கால்களைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். இடது கையால் அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு பரிதாபமாக இருந்தான்.

தன் சித்தப்பா தங்கவேலுவின் பக்கத்து வீட்டுக்காரர் அழகிரிசாமியை ஒரு தரம் ஏறிட்டுப் பார்க்கின்றான். காய்ந்து போன விழிகள், அவற்றில் ஒரு பயம். தன் நிலையை எண்ணிக் கூசும் ஓர் அவமானம். அழகிரிசாமியின் வீட்டு வாசல் திண்ணையில் உட்காந்திருக்கின்றான்.

குப்புசாமி, ஒரு பழைய தலையணையையும் கிழிந்த போர்வையையும் எடுத்துக் கொண்டு வந்து. அழகிரிசாமியின் வீட்டு ஜன்னலின் அருகில் படுத்துக் கொள்கிறான்,

அடுத்த நாள் குப்புசாமியை அரசு மருத்துவமனையில் சேர்ப்பதற்காக அழைத்துச் செல்லும் போது, குப்புசாமி. அழகிரிசாமியின் பூரண ஆசிர்வாதத்தை வேண்டி, கை எடுத்துக் கும்பிட்டு, "நான் போய்ட்டு வர்றேன்" என்கிறான். பிறகு தங்கவேலும் குப்புசாமியும் டாக்ஸியில் ஏறிக்கொண்டு மருத்துவமனைக்குச் செல்கிறார்கள். அங்கு ஆப்ரேஷன் செய்யப்பட்டது.

காஞ்சிபுரத்தில் குப்புசாமியின் உயிர்த் தோழன் வீரப்பன் குப்புசாமிக்காக மூன்று ரூபாய் கடன் வாங்கி ஒரு கடிதத்துடன் அனுப்பி வைக்கிறான்.

3. மனமாற்றம் அடையும் முன் இருந்த அழகிரிசாமியும், மனமாற்றம் அடைந்தபின் இருந்த அழகிரிசாமியும், பாத்திரம் குறித்து எழுதுக.

**மனமாற்றத்திற்கு முன் அழகிரிசாமி:**

குப்புசாமி, அழகிரிசாமியின் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்ததைப் பார்க்கிறார் அழகிரிசாமி. குப்புசாமி, அழகிரிசாமியின் ஜன்னலுக்கு நேராகப் படுத்திருப்பதைக் கண்டு, தன் தலை மேல் வந்து உட்கார்ந்து கொண்டதாகவே நினைக்கிறார். தங்கவேலுவிடம், குப்புசாமியைக் குறித்து விசாரிக்கிறார். தங்கவேலு வேண்டாத வெறுப்போடு, குப்புசாமியைப் பற்றி சொல்கிறார். அவ்வாறு தங்கவேலு வாயிலிருந்து வரும் ஒவ்வொரு சொல்லும் குப்புசாமியைக் குற்றம் சாட்டுவது போலவும். அவன் எதற்காக இங்கே வந்தான் என்று கேட்பது போலவும், அவன் வீட்டை விட்டு உடனே தொலைந்தால் நல்லது என்று கருதுவது போலவும் ஒலித்தது. அது அழகிரிசாமிக்குப் பிடித்திருந்தது. தங்கவேலுவின் மனைவிக்கும், குப்புசாமி வந்தது பிடிக்கவில்லை என்பதை தன் மனைவி வழியாகக் கேள்விப்பட்ட அழகிரிசாமிக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. தொலைகிற பீடை சீக்கிரமா தொலையட்டும் என்று சொல்லிக் கொள்கிறார் அழகிரிசாமி. தங்கவேலு, குப்புசாமியை அரசு மருத்துவமனையில் சேர்க்க விழையும் போது, “அது தான் நல்ல யோசனை, அங்கே நல்லா கவனிப்பாங்க” என்று ஒப்புக்குச் சொல்கிறார். குப்புசாமி, மருத்துவமனைக்கு செல்கையில்; அழகிரிசாமியிடம், போய்ட்டு வருகிறேன் என்றும் கூறும் போது, “போய்விட்டு வாப்பா. கடவுள் கிருபையால் சீக்கிரம் குணமாகட்டும், போய்ட்டு வா” என்று பொய்யாக வாழ்த்துகிறார். குப்புசாமி டாக்ஸியில் ஏறி மருத்துவமனைக்குச் சென்றதைப் பார்த்து, ஒரு பெரிய பாரம் நீங்கியதாக எண்ணுகிறார்.

**மனமாற்றத்திற்குப் பின் அழகிரிசாமி: :**

குப்புசாமியைப் பற்றி ஆறுமுகம் வழியாக கேள்விப்படுகிறார் அழகிரிசாமி, குப்புசாமிக்கு உயிர்த்தோழனாக வீரப்பன் இருப்பதாகக் கேள்விப்பட்டு வியக்கிறார் அழகிரிசாமி. வீரப்பன் குப்புசாமிக்கு எழுதிய கடிதத்தைப் படித்து மனமாற்றம் அடைகிறார் அழகிரிசாமி. அந்தக் கடிதத்தைப் படித்து விட்டு நிம்மதியோடு அவரால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அவர் மனைவி முன் கண்ணீர் விடவும் வெட்கமாக இருந்தது. அவளிடம் கடிதத்தைக் கொடுத்து, "படித்துப் பார்" என்று அவசர அவசரமாகச் சொல்லிவிட்டு, குளிக்கும் அறைக்குள் போய் உண்மையிலேயே கண்ணீர் சிந்தி அழுகிறார். பிறகு வெளியே வந்து, தன் மனைவியிடம் குப்புசாமியைப் பார்க்க நாமும், தங்கவேலுவுடன் ஆஸ்பத்திரிக்குப் போலாமா என்று கேட்கிறார். தனியாக உட்கார்ந்து தன்னை நினைத்து வருந்தி வெட்கப்படுகிறார் அழகிரிசாமி. காஞ்சிபுரத்தில் இருக்கும் வீரப்பனை, உலகமே வெறுத்து ஒதுக்கிய குப்புசாமியிடம் உயிரையே வைத்திருக்கும் அந்த புண்ணிய மூர்த்தியைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது அழகிரிசாமிக்கு. குப்புசாமிக்கும் ஒருவன் இருக்கிறான். குப்புசாமிக்கு மட்டுமா? எனக்குமே ஒருவனாக வீரப்பன் இருக்கிறான் என்று சொல்லிக் கொள்கிறார். குப்புசாமிக்காகப் பழங்கள் வாங்க கடைத்தெருவுக்கு போகிறார். இவ்வாறு தன் மனமாற்றத்தை வெளிப்படுத்துகிறார் அழகிரிசாமி.

## கற்பவை கற்றபின்

1. சமூகத் தொண்டு செய்து உயர்ந்த விருதுகளைப் பெற்ற ஆளுமைகளைப் பட்டியலிட்டு அவர்கள் செய்த சமூகப் பணி குறித்து கலந்துரையாடுக.

சமூகத் தொண்டு செய்து உயர்ந்தோர்:

1. அன்னை தெரசா
2. பாலம் கல்யாண சுந்தரம்
3. ராச்மோகினி தேவி
4. பெஜவாடா வில்சன்
5. பாபா ஆம்தே
6. சுதா மூர்த்தி
7. சிவானந்தா இராஜாராம்

இவர்களில் சிலரைப் பற்றி இங்கு காண்போம்.

### 1. அன்னை தெரசா

பிறப்பு – 1910 ஆகஸ்ட் 26. அல்பேனியா நாட்டைப் பூர்வீகமாகக் கொண்டவரும், இந்தியக் குடியுரிமை பெற்ற, உரோமன் கத்தோலிக்க அருட்சகோதரியும் ஆவார். இவரின் இயற்பெயர் ஆக்னஸ் கோன்ஜா போஜாஜியு ஆகும். 1950ஆம் ஆண்டு, இந்தியாவின் கொல்கத்தாவில் பிறர் அன்பின் பணியாளர் என்ற கத்தோலிக்க துறவற சபையினை நிறுவினார்.

பெற்ற விருதுகள்:

- 1979 – இல் அமைதிக்கான நோபல் பரிசு
- 1980 – பாரத ரத்னா
- பத்மஸ்ரீ விருது
- ஜவஹர்லால் நேரு விருது
- விடுதலைக்கான அதிபர் பதக்கம் (அமெரிக்கா)
- பிலிப்பைன்ஸின் ரமன் மக்சேசே விருது
- பேசெம் இன் டெர்ரிஸ் விருது
- ஆர்டர் ஆஃ ஆஸ்திரேலியா
- ஆர்டர் அப் மெரிட் (இங்கிலாந்து)
- பல்கலைக்கழகங்களின் கௌரவப் பட்டங்கள் போன்றவைகள்.

சேவை:

உண்ண உணவற்றவர்கள், உடுத்த உடையற்றவர்கள், வீடற்றவர்கள், முடமானவர்கள், குருடர்கள், தொழுநோயாளர்கள், விதவைகள் போன்றோர்களுக்குச் சேவை செய்தார். அனாதை இல்லங்களையும், எய்ட்ஸ் நல்வாழ்வு மையங்களையும், தொண்டு மையங்களையும் நிறுவி சேவை செய்தார். அகதிகள், ஊனமுற்றோர், முதியோர், மது அடிமைகள், பஞ்சத்தில் பாதிக்கப்பட்டோர் போன்றவர்களை ஆதரிக்கும் இடமாக இவரின் நிறுவனங்கள் விளங்குகிறது.

### 2. பாலம் கல்யாண சுந்தரம்:

கல்யாண சுந்தரம் திருநெல்வேலி, மேலகருவேலங்குளம் என்ற ஊரில் 1940இல் ஆகஸ்டில் பிறந்தார். திருமணமாகாதவர், செயின்ட் சேவியர் கல்லூரியில் தமிழில் படித்து பி.ஏ. இளங்கலைப் பட்டம் பெற்றவர். 1963 ஆம் ஆண்டு சென்னை பல்கலைக்கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது, இந்திய சீனப் போரின் போது, தேசியப் பாதுகாப்பு நிதிக்காக எட்டரைப் பவுன் மைனர் தங்கச் சங்கிலியை காமராசரிடம் கொடுத்துள்ளார். இவர் தூத்துக்குடி மாவட்டம் திருவைகுண்டத்தில் உள்ள ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் கலைக்கல்லூரியில் நூலகராகப் பணியாற்றி 1998 இல் ஓய்வு பெற்றார்.

**பெற்ற விருதுகள்:**

- இந்தியாவின் சிறந்த நூலகர் விருது. "ஆயிரம் ஆண்டுகளில் சிறந்த மனிதர்" (அமெரிக்கா விருது)
- 'A most Notable intellectual' in the world' (கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம்) என்ற பட்டத்தை வழங்கியது.

**சேவை:**

நூலகரும் சமூக சேவகரும் ஆவார். 'பாலம்' என்ற அமைப்பை நடத்தி வருகிறார். தனது 35 ஆண்டு கால நூலகப் பணியில் தான் சம்பாதித்த அனைத்தையும் அறக்கட்டளைகளுக்கே கொடுத்துள்ளார். ஏழைகளுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காகவே திருமணம் செய்து கொள்ளமாமல் வாழ்ந்தவர். கல்வியறி வில்லாத ஏழை மக்களுக்கு ரூ.30 கோடி கொடுத்துள்ளார். தன் குடும்ப சொத்தில் தனக்குக் கிடைத்த ரூ.50 லட்சம் சொத்தை ஏழை மக்களுக்கே கொடுத்து விட்டார்.

2. "அகநக நட்பதே நட்பு" – என்ற தலைப்பில் நண்பர்களுக்கு உதவிய சூழல்களைச் சுவைபட எழுதுக.

(1)

என் நண்பன் மிகவும் கஷ்டப்பட்ட குடும்பத்தில் பிறந்தவன். தந்தை கிடையாது. தாயின் அரவணைப்பில் வாழ்ந்து வருபவன். தாயார் வீட்டு வேலை செய்து தான் இவனைப் படிக்க வைக்கின்றார். படிப்பில் இவன் பெரிய கெட்டிக்காரன் தான், ஒருநாள் தேர்வு அறையில் தேர்வு எழுதிக் கொண்டிருக்கும் போது, என் நண்பனின் பேனா உடைந்துவிட்டது. அது மிகவும் பழைய பேனா. பல இடங்களில் ஒட்டுப் போட்டு தான் வைத்திருந்தான். அதையும் மீறி அது உடைந்து விட்டது. அவனுக்கு என்ன செய்வதேன்றே தெரியவில்லை. அருகில் இருந்தவனிடம் கேட்டுப் பார்த்தான். அவனோ ஒரு பேனா தான் வைத்திருந்தான். மற்றொருவனிடம் கேட்ட போதும், அதே பதில்தான் வந்தது. இதை கவனித்த நான், அவனுக்கு நான் வைத்திருந்த புதுப் பேனாவை எடுத்துக் கொடுத்தேன். அவனும் முகமலர்ச்சியுடன் வாங்கி எழுதினான். தேர்வு எழுதி முடிந்ததும், அவன் என்னிடம் வந்து, நன்றி கூறி, பேனாவை என்னிடம் திருப்பி கொடுத்தான். ஆனால் அவனிடம் இருந்து வாங்குவதற்கு எனக்கு மனமில்லை. "நீயே வைத்துக் கொள்" என்று கூறி விட்டேன். அப்போது அவனுக்குள் ஏற்பட்ட சந்தோஷத்திற்கு அளவே இல்லை. உடனே அவன், என்னைக் கட்டிப்பிடித்து ரொம்ப நன்றிடா என்று கூறினான். அவன் முகத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியைப் பார்த்து என் உள்ளத்திலும் மகிழ்ச்சி வெள்ளம் பொங்கியது.

(2)

அன்று என் வகுப்பாசிரியர் பள்ளிக்கு வரவில்லை. அன்று, என் வகுப்பில் ஒரு மாணவனின் பணம் களவு போய்விட்டது. களவு கொடுத்த மாணவன் பக்கத்து ஊரிலிருந்து பேருந்தில் பள்ளிக்கு வருபவன். பேருந்து கட்டணத்திற்காக வைத்திருந்த பணத்தைத் தான் களவு கொடுத்துவிட்டான். அது ஒரு வாரத்திற்கான கட்டணச் செலவு. என்ன செய்வது என்று தெரியாமல் ஓவென்று அழத்தொடங்கி விட்டான். எல்லோரும் சமாதானப்படுத்தியும் அவன் ஓயவில்லை. நான், உடனே என் அண்ணன் வகுப்பறைக்குச் சென்று நடந்ததை என் அண்ணனிடம் கூறினேன். உடனே அவன், அவன் சேர்த்து வைத்திருந்த காசை என்னிடம் கொடுத்தான். உடனே அதை வாங்கிக் கொண்டு என் வகுப்பறைக்கு வந்து, நான் வைத்திருந்த காசையும் சேர்த்து அவனிடம் கொடுத்தேன். அவன் முதலில் வேண்டாம் என்று மறுத்தான். நான் அவன் சட்டைப் பையில் வைத்தேன். அவனுக்கு மகிழ்வு பிறந்தது. இதைப் பார்த்த சகமாணவர்களும் என்னைப் பாராட்டினர். எனக்கு ஒரு சிறந்த காரியத்தைச் செய்த மகிழ்வு உண்டானது.





## மனிதம், ஆளுமை - அன்பின்மொழி

# 5. அணி

## பலவுள் தெரிக

**பாடநூல் வினா:**

1. வாய்மையே மழைநீராகி - இத்தொடரில் வெளிப்படும் அணி PTA
அ) உவமை ஆ) தற்குறிப்பேற்றம்
இ) உருவகம் ஈ) தீவகம் விடை : இ) உருவகம்

**கூடுதல் வினாக்கள்:**

2. "கானற் கயலாம் வயலிற் கயலாம்" - இத்தொடரில் வெளிப்படும் அணி.
அ) உவமை ஆ) தற்குறிப்பேற்றம்
இ) உருவகம் ஈ) தீவகம் விடை : ஈ) தீவகம்

3. இயல்பாய் நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது ________ அணி எனப்படும்.
அ) தீவக ஆ) தற்குறிப்பேற்ற
இ) உருவக ஈ) உவமை விடை : ஆ) தற்குறிப்பேற்ற

4. கோவலனும், கண்ணகியும் ________ மாநகருக்குள் சென்றனர்.
அ) மதுரை ஆ) திருச்சி
இ) சேர ஈ) புகார் விடை : அ) மதுரை

5. 'தீவகம்' என்ற சொல்லுக்கு ________ என்று பொருள்.
அ) தீயவை ஆ) நல்லவை
இ) விளக்கு ஈ) தேவதை விடை : இ) விளக்கு

6. செய்யுளின் ஓரிடத்தில் நின்ற ஒரு சொல் அச்செய்யுளின் பல இடங்களிலும் உள்ள சொற்களோடு சென்று பொருந்திப் பொருளை விளக்குவது ________ அணி ஆகும்.
அ) நிரல்நிறை ஆ) உருவகம்
இ) உவமை ஈ) தீவக விடை : ஈ) தீவக

7. 'சொல்லையும் பொருளையும் வரிசையாக நிறுத்தி அவ்வரிசைப்படியே இணைத்துப் பொருள் கொள்வது ________ அணி எனப்படும்.
அ) தன்மையணி ஆ) ஏகதேச உருவக
இ) பிறிதுமொழிதல் ஈ) நிரல்நிறை விடை : ஈ) நிரல்நிறை

8. ________ அன்பும் அறமும் உடையதாக விளங்குமானால், அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் அதுவே ஆகும்.
அ) வீரவாழ்க்கை ஆ) போர் வாழ்க்கை
இ) இல்வாழ்க்கை ஈ) நட்பு வாழ்க்கை விடை : இ) இல்வாழ்க்கை

9. எவ்வகைப்பட்ட பொருளாக இருந்தாலும் இயற்கையில் அமைந்த அதன் உண்மையான இயல்புத் தன்மையினைக் கேட்பவர்களின் மனம் மகிழுமாறு உரிய சொற்களை அமைத்துப் பாடுவது ________ அணியாகும்.
அ) தன்மையணி ஆ) உவமையணி
இ) தற்குறிப்பேற்றணி ஈ) சிலேடையணி விடை : அ) தன்மையணி

10. "எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்குஞ்
சொன்முறை தொடுப்பது தன்மை யாகும் - என்று கூறும் நூல்
அ) நன்னூல் ஆ) சிலப்பதிகாரம்
இ) தொல்காப்பியம் ஈ) தண்டியலங்காரம் விடை : ஈ) தண்டியலங்காரம்

11. அந்தி மழை பொழிகிறது; ஒவ்வொரு துளியிலும்
உன்முகம் தெரிகிறது.
– பாடலில் பயின்று வரும் அணி

அ) பிறிதுமொழிதல் அணி ஆ) உவமையணி
இ) தற்குறிப்பேற்ற அணி ஈ) தன்மை அணி

விடை : இ) தற்குறிப்பேற்ற அணி

12. வா கடலே!
உன்பாவம் தீரப்
பாவலன் வள்ளுவனின்
பாதம் கழுவென்று தானே
– பாடலில் பயின்று வரும் அணி

அ) பிறிதுமொழிதல் அணி ஆ) உவமையணி
இ) தற்குறிப்பேற்ற அணி ஈ) தன்மை அணி

விடை : இ) தற்குறிப்பேற்ற அணி

## குறுவினா

### பாடநூல் வினாக்கள்:

1. தீவக அணியின் வகைகள் யாவை? PTA

தீவக அணி, முதல் நிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடைநிலைத் தீவகம் என்னும் மூன்று வகையாக வரும்.

2. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது – இக்குறளில் பயின்று வந்துள்ள அணியின் இலக்கணம் யாது? PTA

இக்குறள் நிரல்நிறை அணியாகும். சொல்லையும் பொருளையும் வரிசையாக நிறுத்தி அவ்வரிசைப்படியே இணைத்துப் பொருள் கொள்வது நிரல்நிறை அணி எனப்படும்.

### கூடுதல் வினாக்கள்:

3. அணி என்றால் என்ன?

மக்களுக்கு அழகு சேர்ப்பன அணிகலன்கள். அது போன்று செய்யுளுக்கு அழகு செய்து சுவையை உண்டாக்குவன அணிகள்.

4. தற்குறிப்பேற்ற அணி என்றால் என்ன?

இயல்பாய் நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் சிறப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

5. தீவக அணி என்றால் என்ன?. PTA

தீவகம் என்னும் சொல்லுக்கு 'விளக்கு' என்று பொருள். ஓர் அறையில் ஓர் இடத்தில் வைக்கப்பட்ட விளக்கானது அவ்வறையில் பல இடங்களிலும் உள்ள பொருள்களுக்கு வெளிச்சம் தந்து விளக்குதல் போல, செய்யுளின் ஓரிடத்தில் நின்ற ஒரு சொல் அச்செய்யுளின் பல இடங்களிலும் உள்ள சொற்களோடு சென்று பொருந்திப் பொருளை விளக்குவதால் இவ்வணி தீவக அணி எனப்பட்டது.

6. தன்மையணி என்றால் என்ன? PTA

எவ்வகைப்பட்ட பொருளாக இருந்தாலும் இயற்கையில் அமைந்த அதன் உண்மையான இயல்புத் தன்மையினைக் கேட்பவர்களின் மனம் மகிழுமாறு உரிய சொற்களை அமைத்துப் பாடுவது தன்மையணியாகும். இதனைத் தன்மை நவிற்சி அணி என்றும் கூறுவர்.

7. தன்மையணி எத்தனை வகைப்படும்? அவை யாவை? PTA

தன்மையணி நான்கு வகைப்படும். அவை பொருள் தன்மையணி, குணத் தன்மையணி, சாதித் தன்மையணி தொழிற் தன்மையணி என்பதாகும்.

## சிறுவினா

### பாடநூல் வினா:

1. கவிஞர் தாம் கூறவிரும்பும் கருத்திற்கு ஏற்றவாறு தற்குறிப்பேற்ற அணி அமைவதை எடுத்துக்காட்டுக. PTA

**அணி விளக்கம்:**

இயல்பாய் நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

**எ.கா.:**

'போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
'வாரல்' என்பன போல் மறித்துக்கை காட்ட'

**பாடலின் பொருள்:**

கோட்டை மதில் மேல் இருந்த கொடியானது வரவேண்டாம் எனத் தடுப்பது போல, கை காட்டியது என்பது பொருள்.

**அணிப் பொருத்தம்:**

- கோவலனும், கண்ணகியும் மதுரை மாநகருக்குள் சென்ற போது மதிலின் மேலிருந்த கொடிகள் காற்றில் இயற்கையாக அசைந்தன.
- ஆனால், இளங்கோவடிகள் கோவலன் மதுரையில் கொலை செய்யப்படுவான் எனக் கருதி அக்கொடிகள் கையை அசைத்து, இம்மதுரைக்குள் வரவேண்டா' என்று தெரிவிப்பது போலக் காற்றில் அசைவதாகத் தம் குறிப்பைக் கொடியின் மீது ஏற்றிக் கூறுகிறார்.
- இவ்வாறு இயல்பாக நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் குறிப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

### கூடுதல் வினாக்கள்:

2. தீவக அணியை எடுத்துக்காட்டுடன் விளக்குக. PTA

**அணி விளக்கம்:**

தீவகம் என்னும் சொல்லுக்கு 'விளக்கு' என்று பொருள். ஓர் அறையில் ஓர் இடத்தில் வைக்கப்பட்ட விளக்கானது அவ்வறையில் பல இடங்களிலும் உள்ள பொருள்களுக்கு வெளிச்சம் தந்து விளக்குதல் போல, செய்யுளின் ஓரிடத்தில் நின்ற ஒரு சொல் அச்செய்யுளின் பல இடங்களிலும் உள்ள சொற்களோடு சென்று பொருந்திப் பொருளை விளக்குவதால் இவ்வணி தீவக அணி எனப்பட்டது.

**எ.கா.:**

'சேந்தன வேந்தன் திருநெடுங்கண், தெவ்வேந்தர்
ஏந்து தடந்தோள், இழிகுருதி – பாய்ந்து
திசைஅனைத்தும், வீரச் சிலைபொழிந்த அம்பும்,
மிசைஅனைத்தும் புள்குலமும் வீழ்ந்து

**பாடலின் பொருள்:**

- அரசனுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன; அவை சிவந்த அளவில் பகை மன்னர்களுடைய பெரிய தோள்கள் சிவந்தன;
- குருதி பாய்ந்து திசைகள் அனைத்தும் சிவந்தன; வலிய வில்லால் எய்யப்பட்ட அம்புகளும் சிவந்தன;
- குருதி மேலே வீழ்தலால் பறவைக் கூட்டங்கள் யாவும் சிவந்தன.

அணிப் பொருத்தம்:

வேந்தன் கண் சேந்தன
தெவ்வேந்தர் தோள் சேந்தன
குருதி – பாய்ந்து திசைஅனைத்தும் சேந்தன
அம்பும் சேந்தன
புள்குலமும் வீழ்ந்து
மிசைஅனைத்தும் சேந்தன

இவ்வாறாக முதலில் நிற்கும் 'சேந்தன' (சிவந்தன) என்ற சொல் பாடலில் வருகின்ற கண்கள், தோள்கள், திசைகள், அம்புகள், பறவைகள் ஆகிய அனைத்தோடும் பொருந்திப் பொருள் தருகிறது. அதனால் இது தீவக அணி ஆயிற்று.

3. நிரல் நிறை அணியை எடுத்துக்காட்டுடன் விளக்குக. PTA

அணி விளக்கம்:

சொல்லையும் பொருளையும் வரிசையாக நிறுத்தி அவ்வரிசைப்படியே இணைத்துப் பொருள் கொள்வது நிரல்நிறை அணி எனப்படும்.

எ.கா.:

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது

பாடலின் பொருள்:

இல்வாழ்க்கை அன்பும் அறமும் உடையதாக விளங்குமானால், அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் அதுவே ஆகும்.

அணிப் பொருத்தம்:

இக்குறளில் அன்பும் அறனும் என்ற சொற்களை வரிசையாக நிறுத்தி. பண்பும் பயனும் என்ற சொற்களை முறைபடக் கூறியுள்ளமையால் இது நிரல் நிறை அணி ஆகும்.

4. தன்மையணியை எடுத்துக்காட்டுடன் விளக்குக.

அணி விளக்கம்:

- எவ்வகைப்பட்ட பொருளாக இருந்தாலும் இயற்கையில் அமைந்த அதன் உண்மையான இயல்புத் தன்மையினைக் கேட்பவர்களின் மனம் மகிழுமாறு, உரிய சொற்களை அமைத்துப் பாடுவது தன்மையணியாகும்.
- இதனைத் தன்மை நவிற்சி அணி என்றும் கூறுவர். இவ்வணி நான்கு வகைப்படும்.
- பொருள் தன்மையணி, குணத் தன்மையணி, சாதித் தன்மையணி, தொழிற் தன்மையணி என்பதாகும்.

எ.கா.:

மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும் – வையைக்கோன்
கண்டளவே தோற்றான், அக்காரிகைதன் சொற்செவியில்
உண்டனவே தோற்றான் உயிர்.

பாடலின் பொருள்:

உடம்பு முழுக்கத் தூசியும் விரித்த கருமையான தலைமுடியும் கையில் ஒற்றைச் சிலம்போடு வந்த தோற்றமும் அவனது கண்ணீரும் கண்ட அளவிலேயே வையை நதி பாயும் கூடல் நகரத்து அரசனான பாண்டியன் தோற்றான். அவனது சொல், தன் செவியில் கேட்டவுடன் உயிரை நீத்தான்.

அணிப் பொருத்தம்:

கண்ணகியின் துயர் நிறைந்த தோற்றத்தினை இயல்பாக உரிய சொற்களின் மூலம் கூறியமையால் இது தன்மை நவிற்சியணி எனப்படும்.

## கற்பவை கற்றபின்....

1. முன் வகுப்புகளில் கற்ற அணிகளை எடுத்துக்காட்டுகளுடன் தொகுத்து ஒப்படைவு ஒன்றை உருவாக்குக.

### உவமையணி:

**அணி விளக்கம்:**

ஒரு பொருளை அத்தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது உவமை அணி எனப்படும். உவமை, உவமிக்கப்படும் பொருள், உவம உருபு மூன்றும் வெளிப்படையாய் அமைந்திருக்கும்.

**எ.கா.:**

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

**பாடலின் பொருள்:**

ஊர் நடுவே உள்ள குளம் நிரம்பினாற் போன்றதே உலக உயிர்களையெல்லாம் விரும்பி உதவி செய்யும் பேரறிவு உடையானிடம் சேர்ந்த செல்வம்.

**அணிப் பொருத்தம்:**

ஊருணி நீர் நிறைதல் என்பது உவமை. உலகவாம் பேரறிவாளன் திரு என்பது உவமேயம். அற்று என்பது உவம உருபு. இவ்வாறு உவமை, உவமேயம் இவ்விரண்டையும் இணைக்கும் உவம உருபு வெளிப்படுமாறு வரப்பாடுவது உவமையணி ஆகும்.

### எடுத்துக்காட்டு உவமையணி:

**அணி விளக்கம்:**

உவமையையும் பொருளையும் தனித்தனியாக நிறுத்தி உவம உருபு கெடாமல் அமைப்பது எடுத்துக்காட்டு உவமையணி எனப்படும்.

**எ.கா.:**

புறந்தூய்மை நீரா லமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

**பாடலின் பொருள்:**

ஒருவனது உடல் தூய்மையான நீரில் குளிப்பதனால் புலப்படும். உண்மையைப் பேசுவதனால், உள்ளத்தின் தூய்மை புலப்படும்.

**அணிப் பொருத்தம்:**

உடம்பின் தூய்மை நீரால் அமையும் என்பது உவமை. உள்ளத்தின் தூய்மை உண்மை பேசுவதனால் உண்டாகும் என்பது உவமேயம். இவ்விரண்டையும் இணைக்கும் உவம உருபு இல்லை. இப்பாடலில் உவமை, உவமேயம் இரண்டும் தனித்தனியாகக் கொடுக்கப்பட்டு இடையில் உவம உருபு மறையுமாறு அமைக்கப்பட்டுள்ளது. எனவே, எடுத்துக்காட்டு உவமை அணி ஆயிற்று.

### உருவக அணி

**அணி விளக்கம்:**

உவமைக்கும் பொருளுக்கும் வேறுபாடின்றி உவமையையே பொருளாகக் கூறுவது உருவக அணி எனப்படும்.

**எ.கா.:**

இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்.

**அணிப் பொருத்தம்:**

இன்சொல் – விளைநிலம்; ஈதல் – விதை; வன்சொல் – களை; வாய்மை – உரம் (எரு); அன்பு – நீர்; அறம் – கதிர் என உருவகிக்கப் பெற்றுள்ளதனால், இப்பாடல் உருவக அணியாகும். இவ்வாறு உவமானம் வேறு, உவமேயம் வேறு எனத் தோன்றாத வகையில், உவமானத்தின் இயல்புகளை உவமேயத்தின் மேல் ஏற்றிக் கூறுவது உருவக அணி ஆகும்.

## இயல்பு நவிற்சியணி:

**அணி விளக்கம்:**

ஒரு பொருளின் இயல்பை உள்ளது உள்ளவாறு கூறுவது இயல்பு நவிற்சியணி எனப்படும்.

**எ.கா.:**

தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயும் நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆய மங்கையர் அங்கை வருந்துவார்

**அணிப் பொருத்தம்:**

இப்பாடலில் தயிர் கடையும் ஆய மங்கையரின் தன்மை உள்ளவாறே அழகுபடச் சொல்லப்படுவதனைக் காணலாம். ஆகவே, இது இயல்பு நவிற்சியணி ஆயிற்று.

## உயர்வு நவிற்சியணி:

**அணி விளக்கம்:**

ஒரு பொருளின் தன்மையை மிகைப்படுத்திக் கூறுவது உயர்வு நவிற்சியணி எனப்படும்.

**எ.கா.:**

விண்ணைத் தொடும் மலை.

**அணிப் பொருத்தம்:**

உயரமான மலையை மிகைப்படுத்தி விண்ணைத் தொடும் மலை என வருணித்து உள்ளதால் இது உயர்வு நவிற்சியணி ஆகும்.

## சொல் பின்வருநிலையணி:

**அணி விளக்கம்:**

செய்யுளில் முன் வந்த சொல்லே பின்னும் பலவிடத்தும் வந்து வேறு பொருள் உணர்த்துவது சொல் பின்வருநிலை அணியாம்.

**எ.கா.:**

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

**அணிப் பொருத்தம்:**

துப்பார்க்கு – உண்பவருக்கு; துப்பு – நல்ல, நன்மை; துப்பு – உணவு.

இக்குறளில் 'துப்பு' என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்து வேறு வேறு பொருள்களைத் தருகிறது. இவ்வாறு 'துப்பு' என்ற சொல்லே பின்னும் பலவிடத்தும் வந்து வேறு பொருள்களை உணர்த்துவதால் சொல் பின்வருநிலை அணி ஆயிற்று.

## பொருள் பின்வருநிலையணி:

**அணி விளக்கம்:**

செய்யுளில் முன் வந்த பொருளே பின்னர் பல இடங்களிலும் வருவது பொருள் பின்வருநிலையணி ஆகும்.

எ.கா.:

அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காியா
நெகிழ்ந்தன நேர்முகை முல்லை – மகிழ்ந்திகழ்
விண்டன கொன்றை விரிந்தன கருவிளை
கொண்டன காந்தள் குலை.

அணிப் பொருத்தம்:

இச்செய்யுளில் அவிழ்ந்தன, அலர்ந்தன, நெகிழ்ந்தன, விண்டன, விரிந்தன, கொண்டன ஆகிய சொற்கள் மலர்ந்தன என்ற ஒரு பொருளையே தந்தன. இவ்வாறு முன் வந்த பொருளே, பின்னர் பல இடங்களிலும் வருவதால் பொருள் பின்வரு நிலையணி ஆயிற்று.

## சொற் பொருள் பின்வருநிலையணி:

அணி விளக்கம்:

முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர் பல இடங்களிலும் வருவது சொற் பொருள் பின்வருநிலையணி ஆகும்.

எ.கா.:

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

அணிப் பொருத்தம்:

இக்குறட்பாவில் 'விளக்கு' என்னும் சொல் ஒரே பொருளில் பலமுறை வந்துள்ளதால் இது சொற்பொருள் பின்வருநிலையணி ஆகும்.

## வஞ்சப் புகழ்ச்சியணி

அணி விளக்கம்:

வஞ்சப்புகழ்ச்சியணி என்பது ஒன்றைப் புகழ்வது போலப் பழிப்பதும், பழிப்பது போலப் புகழ்வதுமாகும்.

எ.கா.:

தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

அணிப் பொருத்தம்:

கயவர்கள் தேவர்களுக்கு ஒப்பானவர்கள் என்று புகழப்படுவது போலத் தோன்றினாலும், கயவர்கள் இழிந்த செயல்களையே செய்வர் என்னும் பொருளைக் குறிப்பால் உணர்த்துகிறது. இது புகழ்வது போலப் பழிப்பது ஆகும்.

## ஏகதேச உருவகஅணி:

அணி விளக்கம்:

செய்யுளில், தொடர்புடைய இரண்டு பொருட்களில் ஒன்றை மட்டும் உருவகப்படுத்திவிட்டு மற்றொன்றை உருவகப்படுத்தாமல் அப்படியே விட்டு விடுவது ஏகதேச உருவகஅணி எனப்படும்.

எ.கா.:

பெருமைக்கும ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

அணிப் பொருத்தம்:

இக்குறட்பாவில் மக்களது பெருமையும் சிறுமையும் பொன்னாகவோ பிற பொருளாகவோ உருவகம் செய்யப்படவில்லை. கருமமே – கட்டளைக்கல் என மட்டுமே உருவகம் செய்யப்பட்டுள்ளது. ஆகவே இது ஏகதேச உருவக அணி ஆயிற்று.

## தற்குறிப்பேற்ற அணி:

**அணி விளக்கம்:**

இயல்பாய் நிகழும் நிகழ்ச்சியின் மீது கவிஞன் தன் சிறப்பை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி எனப்படும்.

**எ.கா.:**

அள்ளல் பழனத்து அரக்காம்பல் வாயவிழ
வெள்ளம்தீப் பட்ட(து) எனவெரீஇப்பு ள்ளினம்தம்
கைச்சிறகால் பார்ப்பொடுக்கும் கவ்வை உடைத்தரோ
நச்சிலைவேல் கோக்கோதை நாடு.

**பாடலின் பொருள்:**

சேறுபட்ட நீர்மிக்க வயல்களில் அரக்கு நிறத்தில் செவ்வாம்பல்கள் மெல்ல விரிந்தன, அதைக் கண்ட நீர்ப்பறவைகள் தண்ணீரில் தீப்பிடித்துவிட்டது என்று அஞ்சி விரைந்து தம் குஞ்சுகளைச் சிறகுகளுக்குள் ஒடுக்கி வைத்துக் கொண்டன, அடடா! பகைவர் அஞ்சும் வேலைக் கொண்ட சேரனின் நாட்டில் இந்த அச்சம் இருக்கின்றதே.

**அணிப் பொருத்தம்:**

மலர்கள் விரிவதும் பறவைகள் தன் குஞ்சை அரவணைப்பதும் இயற்கையாக நிகழ்கின்ற ஒரு நிகழ்வு. ஆனால் கவிஞர் தன் கருத்தை ஏற்றிக் கூறியுள்ளதால் இது தற்குறிப்பேற்ற அணி ஆயிற்று.

2. பாடப்பகுதியில் உள்ள திருக்குறளில் பயின்று வரும் அணிகளைக் கண்டறிந்து வகுப்பறையில் விளக்குக.

1. தீவக அணி:

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (133)

மடியுளாள் மாமுகடி என்ப மடியிலாள்
தாளுளாள் தாமரையி னாள் (617)

2. உவமையணி:

வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. (552)

நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சுப் மரம்பழுத் தற்று. (1008)

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. (758)

மக்களே போல்வர் கயவர்; அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில். (1071)

சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ். (1078)

3. சொற்பொருள் பின்வரு நிலையணி:

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். (751)

இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. (1041)

4. எடுத்துக்காட்டு உவமையணி:

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல்; கண்ணென்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். (573)

5. வஞ்சப் புகழ்ச்சி அணி:

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக யான். (1073)

# மொழியை ஆள்வோம்

## மொழிபெயர்ப்பு

1. Education is what remains after one has forgotton what one has learned in school - Albert Einstein PTA

பள்ளியில் கற்றபின் எது நமது நினைவில் நிற்கின்றதோ அதுவே கல்வி

– ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்.

2. Tomorrow is often the busiest day of the week - Spanish proverb

நாளையே இந்த வாரத்தின் மிகப் பரபரப்பான நாள் – ஸ்பானிஷ் பழமொழி

3. It is during our darkest moments that we must focus to see light - Aristotle.

நம் வாழ்வின் மிகவும் இருண்ட காலங்களில் தான் நாம் அகவொளியைக் காண முற்படவேண்டும். – அரிஸ்டாடில்

4. Success is not Final, failure is not Fatal. It is the courage to continue that counts. - Winston Churchil.

வெற்றி என்பது முடிவல்ல. தோல்வி என்பது மரணமல்ல. தொடர்ந்து முனைகின்ற துணிவே கணக்கில் உள்ளது. – வின்ஸ்டன் சர்ச்சில்

### உவமையைப் பயன்படுத்திச் சொற்றொடர் உருவாக்குக

1. தாமரை இலை நீர்போல:

வள்ளலார் பெருமான் தாமரை இலை நீர் போல இவ்வுலக வாழ்வில் பற்றற்று இருந்தார்.

2. மழைமுகம் காணாப் பயிர் போல: PTA

பல நாள்களாகத் தாயைப்பிரிந்த சேயின் முகம் மழை முகம் காணாப் பயிர் போல வாடியது.

3. கண்ணினைக் காக்கும் இமை போல:

கடவுள் எல்லா உயிர்களையும் கண்ணினைக் காக்கும் இமை போலக் காக்கிறார்.

4. சிலை மேல் எழுத்து போல:

தமிழாசிரியர் நடத்திய இலக்கணப் பாடம் சிலை மேல் எழுத்து போல எங்கள் உள்ளத்தில் பதிந்தது.

### பொருத்தமான நிறுத்தற் குறியிடுக.

1. சேரர்களின் பட்டப்பெயர்களில் கொல்லி வெற்பன் மலைய மலையமான் போன்றவை குறிப்பிடத்தக்கவை கொல்லி மலையை வென்றவன் கொல்லி வெற்பன் எனவும் பிற மலைப்பகுதிகளை வென்றவர்கள் மலையமான் எனவும் பெயர் சூட்டிக்கொண்டனர் இதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன. PTA

சேரர்களின் பட்டப் பெயர்களில், "கொல்லி வெற்பன்", "மலையமான்" போன்றவை குறிப்பிடத்தக்கவை. கொல்லி மலையை வென்றவன் கொல்லி வெற்பன் எனவும், பிற மலைப்பகுதிகளை வென்றவர்கள் மலையமான் எனவும் பெயர் சூட்டிக் கொண்டனர். இதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன.

## வாழ்த்துரை எழுதுக

1. உங்கள் பள்ளியில் நடைபெறும் நாட்டுநலப்பணித்திட்ட முகாமின் தொடக்க விழாவில் மாணவர்களுக்கு வாழ்த்துரை வழங்க உரை ஒன்றை உருவாக்கித் தருக,

"என் கடன் பணி செய்து கிடப்பதே" என்பார் திருநாவுக்கரசர். ஒவ்வொருவருக்கும் உரிய கடமைகள் உண்டு. இந்தச் சமுதாயத்திற்காக மாணவர் ஆற்ற வேண்டிய கடமைகள் உள்ளன. இன்றைய மாணவர்கள் நாளைய தலைவர்கள். அவர்கள் சமுதாய உணர்வுடையவர்களாய் வளர்ந்தால் தான் வீடும் நாடும் நலம் பெறும்.

ஓர் உயிர்படும் துன்பத்தைக் கண்டு அதனைத் தாங்கிக் கொள்ள இயலாமல் உடனே ஓடிச் சென்று உதவுவது தான் தொண்டு. அவ்வகையில் மிகவும் பின்தங்கிய நிலையிலுள்ள நம் நாட்டு மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைக்கு அளவே இல்லை. சமுதாயத்தின்

உறுப்பாய் விளங்கும் மாணவர்கள் சமுதாய மேம்பாட்டுக்காகத் தொண்டாற்றுவது கடமையாகும். மாணவர்கள் தம் பள்ளிப் பருவத்தில் தொண்டு செய்வதற்கு வாய்ப்பாகப் பள்ளியில் நாட்டு நலப்பணித் திட்டம் உள்ளது. மாணவர்கள் இவ்வமைப்பில் சேர்ந்து தொண்டாற்ற வேண்டும்.

மாணவர்கள் வகுப்பறையையும் சுற்றுப்புறத்தையும் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். ஏழை மாணவர்களுக்கும், படிப்பில் பின்தங்கிய மாணவர்களுக்கும் உதவ வேண்டும். ஒழுக்கம் தவறும் மாணவரை நல்வழிப்படுத்த வேண்டும். "ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது" என்பது பழமொழி. இளமையிலேயே நற்பழக்கங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். நாம் இப்போது வளைந்து கொடுத்தால் தான் நாடும், வீடும் வளம்பெறும். வளைந்து கொடுப்பதனால் வாழ்விழந்து போய்விட மாட்டோம்.

"கடமையைச் செய் பலனை எதிர்பாராதே" என்பதே நம் வேதமாக எடுத்துச் செயல்பட வேண்டும். எந்த ஒரு பணியையும் கடமைக்காகச் செய்யாமல் கடமையோடு செய்ய வேண்டும். 'காலம் பொன் போன்றது கடமை கண் போன்றது' என்பதை உணர்ந்து செயல்படும் போது நமக்கும் மற்றவர்க்கும், மகிழ்ச்சியையும் மனநிறைவையும் தரும். இந்த மரம் என்னால் நடப்பட்டது; இந்த இடம் என்னால் தூய்மை செய்யப்பட்டது; என்று நாமே நம் மனதிற்குள் சொல்லிக் கொள்ளும் போது மனதில் மகிழ்ச்சி ஏற்பட்டால், உண்மையிலேயே நமது கடமையைச் சிறப்பாகச் செய்திருக்கிறோம் என்பது அர்த்தம். கூட்டுணர்வே நாட்டுணர்வாகச் செயல்படும்போது நாம் மேற்கொண்ட பணி நிறைவு பெறுகிறது. 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என நினைத்துத் தொண்டாற்ற வேண்டும், தொண்டாற்றுவோம் என்று வாழ்த்தி விடைபெறுகிறேன்.

## குறுக்கெழுத்துப் போட்டி

| 1 | | | 2 | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | 3 | |
| | | | | 4 | | | | | |
| | | | | | 5 | | | | |
| | | | | | 7 | | | | 6 |
| | 8 | | | | | 9 | | | |
| 10 | | | | | 11 | | | | 12 |
| | | | | | | | | | |
| 14 | | | | | | 15 | | | |
| | | | | 16 | | | 17 | 18 | |

**இடமிருந்து வலம்**

1. சிறுபொழுதின் வகைகளுள் ஒன்று (2) — காலை-
2. நேர் நேர் – வாய்பாடு (2) — தேமா-
11. எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று (5) — கலித்தொகை-
14. மக்களே போல்வர் ..........(4) — கயவர்-

**மேலிருந்து கீழ்**

1. முல்லைத் திணைக்குரிய பெரும்பொழுது (5) — கார்காலம்-
2. மொழி ஞாயிறு (9) — தேவநேயப்பாவாணர்-
3. நல்ல என்னம் அடைமொழி கொண்ட தொகை நூல் ....... (5) — குறுந்தொகை-
4. கழை என்பதன் பொருள் (4) — மூங்கில்-
7. மதியின் மறுபெயர். இது நிலவையும் குறிக்கும் (4) — திங்கள்-
10, குறிஞ்சித் திணைக்குரிய விலங்கு ..........(4) — சிங்கம்-
12. ..........என்பது புறத்திணைகளுள் ஒன்று (4) — கைக்கிளை-

**வலமிருந்து இடம்**

15. மருந்தே ஆயினும் விருந்தோடு உண் – ஆசிரியர் (4) — ஔவையார்-
16. மதிமுகம் உவமை எனில் முகமதி ....... (5) — உருவகம்-

கீழிலிருந்து மேல்

5. விடையின் வகைகள் (3) எட்டு-
6. வீரமாமுனிவர் இயற்றிய நூல் (4) தேம்பாவணி-
8. பிள்ளைத்தமிழின் இரண்டாம் பருவம் (4) செங்கீரை-
9. முப்பால் பகுப்பு கொண்ட நூல்களுள் ஒன்று (6) திருக்குறள்-
13. மன்னனது உண்மையான புகழை எடுத்துக் கூறுவது (7) மெய்க்கீர்த்தி-
17. 96 வகை சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று (7) பிள்ளைத்தமிழ்-
18. செய்தவம் – இலக்கணக்குறிப்பு (5) வினைத்தொகை-

2. பாடலில் இடம்பெற்றுள்ள தமிழ்ப் புலவர்களின் பெயர்களைக் கண்டறிந்து எழுதுக.

"கம்பனும் கண்டேத்தும் உமறுப் புலவரை எந்தக்
கொம்பனும் பணியும் அறம்பாடுஞ் ஜவாது ஆசுகவியை
காசிம்புலவரை, குணங்குடியாரை சேகனாப் புலவரை
செய்குதம்பிப் பாவலரைச் சீர்த்தமிழ் மறக்காதன்றோ PTA

தமிழ்ப் புலவர்களின் பெயர்கள்:

- கம்பன்
- உமறுப்புலவர்
- ஆசுகவி
- காசிம் புலவர்
- குணங்குடி மஸ்தான்
- சேகனாப்புலவர்
- செய்குத்தம்பி பாவலர்

## விண்ணப்பப் படிவத்தை நிரப்புக

### மேல்நிலை வகுப்பு – சேர்க்கை விண்ணப்பம் PTA

சேர்க்கை எண்: 347 தேதி: 10.6.2019 வகுப்பும் பிரிவும் : 11 அ

1. மாணவ / மாணவியின் பெயர் : எம். மாலதி
2. பிறந்த தேதி : 06-11-2003
3. தேசிய இனம் : இந்தியன்
4. பெற்றோர் / பாதுகாவலர் பெயர் : மலையப்பன்
5. வீட்டு முகவரி : 6/587, காந்தி தெரு, புதுக்கோட்டை.
6. இறுதியாக படித்து முடித்த வகுப்பு : பத்தாம் வகுப்பு
7. பயின்ற மொழி : தமிழ்
8. பெற்ற மதிப்பெண்கள் : 498
9. இறுதியாகப் படித்த பள்ளியின் முகவரி : அரசு உயர்நிலைப்பள்ளி, புதுக்கோட்டை.

| தேர்வின் பெயர் | பதிவு எண் – ஆண்டு | பாடம் | மதிப்பெண் (100) |
|---|---|---|---|
| பொதுத்தேர்வு | 0365967- 2019 | தமிழ் | 99 |
| | | ஆங்கிலம் | 99 |
| | | கணிதம் | 100 |
| | | அறிவியல் | 100 |
| | | சமூக அறிவியல் | 100 |
| | | மொத்தம் | 498 |

10. மாற்றுச்சான்றிதழ் இணைக்கப்பட்டுள்ளதா : ஆம்
11. தாய்மொழி : தமிழ்
12. சேரவிரும்பும் பாடப்பிரிவும் பயிற்று மொழியும் : கணிதம், தமிழ்

எம். மாலதி

மாணவ / மாணவியின் கையெழுத்து

## நன்றியுரை எழுதுக

பள்ளி வளாகத்தில் நடைபெற்ற மரம் நடுவிழாவுக்கு வந்திருந்த சிறப்பு விருந்தினருக்கும் பெற்றோருக்கும் பள்ளியின் பசுமைப் பாதுகாப்புப் படை சார்பாக நன்றியுரை எழுதுக.

நிகழ்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைக்க முத்தாரமாய் உங்கள் முன் நிற்கிறேன்.

பள்ளிகளிலும் அரசு அலுவலகங்களிலும் ஆண்டு தோறும் மரம் நடுவிழா கொண்டாடுகிறார்கள். மரங்களையும் நடுகிறார்கள். "வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்; நாட்டு வளம் காப்போம்", "மரம் வளர்ப்பீர்! மழை பெறுவீர்!" என்பன போன்ற விளம்பர அறிவிப்புகளைச் சாலைகளில் காண்கிறோம். இவற்றின் நோக்கம் என்ன? மரங்களை மிகுதியாய் வளர்க்க வேண்டும் என்பது தான்.

இத்தகைய சிறப்பு மிக்க செயலான மரம் நடு விழாவிற்கு இங்கு வருகை தந்துள்ள அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் எனது வணக்கமும், நன்றியும் உரித்தாகுக.

மா, பலா, வாழை முதலிய மரங்கள் உண்பதற்குக் காய்கனிகளைத் தந்து உதவுகின்றன. தென்னை, முருங்கை முதலிய மரங்கள் உண்பதற்கு காய்களைத் தருகின்றன. வேம்பு, வாதமடக்கி முதலிய மரங்கள் மருந்தாய்ப் பயன்படுகின்றன. அகில், சந்தனம் முதலிய மரங்கள் மணப்பொருள்களைத் தருகின்றன. எல்லா மரங்களுமே தங்குவதற்கு நிழலைத் தருகின்றன. மரங்கள் அழிந்த பிறகும் விறகாகவும் கரியாகவும் பயன்படுகின்றன.மரங்கள் கரிவளியை உள்ளே இழுத்துக் கொண்டு மனிதர்களுக்கு வேண்டிய உயிர்வளியை வெளி யிடுகின்றன. இது மரங்கள் மக்களுக்காக செய்யும் மகத்தான தொண்டல்லவா? வானத்தில் கூடும் மேகங்களை மழை நீராய் மண்ணிற்கு அனுப்பும் தொண்டினை மரங்கள் செய்கின்றன. மரங்களின் வேர்களோ மண்ணரிப்பைத் தடுத்து நிறுத்துகின்றன. மரங்கள் அழிவதை தடுத்து நிறுத்துவதுடன் புதிய மரங்களை வளர்க்க வேண்டும் என்ற கருத்து 1930 இல் அரசுக்கு உருவாயிற்று. நாட்டு விடுதலைக்குப் பின்னர் இக்கருத்து வலுப்பெற்றது. எனவே தான் நாடெங்கும் மரம் நடு விழாக்கள் நடத்தப்படுகின்றன.

மரம் நடுவிழா கண்துடைப்பாய் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பயன்தரும் மரங்களைப் பள்ளிகளிலும். வீடுகளிலும். பொது இடங்களிலும் நட்டு வளர்ப்போம். அத்தகைய மேன்மை பொருந்திய மரங்களை நடும் விழாவிற்கு வருகை தந்திருக்கின்ற, தன் மகனை ஆன்றோனாகவும் சான்றோனாகவும் ஆக்கி, அகிலத்தை ஆள்வதைப் பார்த்து இரசிக்க, பள்ளிக்கு அனுப்பி வைத்து இன்று பாராட்டவும், பங்கெடுப்பதற்காகவும் வந்துள்ள அருமைப் பெற்றோர்களே உங்களுக்கும், "வீட்டிற்குள் ஏற்றப்படும் சிம்னி விளக்கல்ல! வேண்டும் போது போட்டுக் கொள்ளும் மின்சார விளக்குமல்ல! காலமெல்லாம் காத்து நிற்கும்! பிறருக்குக் காட்டியும் நிற்கும் கலங்கரை விளக்கென காட்டிட வந்துள்ள எம் சிறப்பு விருந்தினருக்கும், இந்நிகழ்வில் பங்கெடுத்த அனைத்து உள்ளங்களுக்கும் பசுமைப் பாதுகாப்பு படை சார்பாக என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நன்றி! நன்றி! நன்றி!

## மொழியோடு விளையாடு

### விளம்பரத்தை நாளிதழுக்கான செய்தியாக மாற்றியமைக்க.

சாலைப் பாதுகாப்பு விழிப்புணர்வு

"சாலைப் பாதுகாப்பு" தொடர் அன்று – அது தொடரும் வாழ்க்கை முறை

50

"சாலைப் பாதுகாப்பு" தொடர் அன்று – அது தொடரும் வாழ்க்கைமுறை

சாலைப் பாதுகாப்பு விழிப்புணர்வு

போக்குவரத்துக் காவல் துறை,

_________ மாவட்டம்

சாலைகளில் மிதிவண்டிகளும் மகிழ்வுந்துகளும் சரக்குந்துகளும் சாரை சாரையாகச் சென்று கொண்டிருக்கின்றன. அதே சாலைகளில் மக்களும் நடந்து செல்கின்றனர். அப்படிச் செல்லும் போது சில நேரங்களில் விபத்துகள் நடந்துவிடுகின்றன. அவ்வாறு நேராமல் தடுக்க அரசாங்கம் சாலை விதிகளை ஏற்படுத்தியுள்ளது. சாலை விதிகளைப் பின்பற்றி நடப்பது நம் கடமையாகும்.

சாலையில் நடந்து செல்வோர் வெள்ளைக் கோடு போட்ட இடத்தில் கடக்க வேண்டும். சாலையைக் கடக்கும் போது முதலில் வலப்பக்கம் பார்த்து நடக்க வேண்டும். சாலையின் நடுவே சென்றதும் இடப்புறம் பார்த்து சாலையைக் கடக்க வேண்டும்.

சாலைகள் சந்திக்கும் இடமாய் இருந்தால் விளக்குகள் இருக்கும். சிவப்பு விளக்கு எரியும் பொழுது வண்டிகள் ஓடாது. பச்சை விளக்கு எரியத் தொடங்கியதும் வண்டிகள் ஓட வேண்டும். வாகனங்களை நிறுத்தவும் புறப்பட ஆயத்தமாகவும் முன் அறிவிப்பாய் மஞ்சள் விளக்கு எரியும்.

சாலையில் வாகனம் ஓட்டுபவர் பின்பற்றும் விதத்தில் சில அறிவிப்பு எச்சரிக்கை குறியீடுகளை நட்டு இருப்பார்கள். பள்ளிக்கூடம், பாலம், சாலை வளைவு, இரயில்கேட், இடதுபுறம் வளைந்து செல்லும் சாலை, வேக வரம்பு 50, T சாலைச் சந்திப்பு, Y சாலை சந்திப்பு, சிதறிய சாலைச் சந்திப்புகள் போன்றவற்றை அவற்றின் சின்னத்தைக் கண்டு தெரிந்து கொள்வோம். அவ்வடையாளங்களைப் பார்த்து ஓட்டுநர்கள் நடந்து கொண்டால் சாலை விபத்து நடவாமல் தடுக்கலாம்.

சில சாலைகளில் வேகக் கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருக்கும். அகலமான சாலைகள் விரைவான போக்குவரத்திற்காய் சில பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டிருக்கும். வேகப் பிரிவில் மெதுவாகனங்கள் செல்லக் கூடாது. மெதுவாகனப் பிரிவில் வேக வாகனங்கள் செல்லக் கூடாது. வாகனங்கள் ஒன்றை ஒன்று முந்தும் போது சாலையின் நடுவில் உள்ள கோட்டைக் கடந்து செல்லக் கூடாது.

சாலை விதிகள் மிகவும் தேவை, விலைமதிப்பற்ற நம் உயிரைக் காக்க சாலை விதிகளை மதித்து நடப்பது ஒவ்வொருவரின் அன்றாட கடமையும், அவசியமான கடமையுமாகும். இதை பொதுநலன் கருதி வெளியிடுவோர் மாவட்ட போக்குவரத்துக் காவல் துறை. நன்றி.

### கீழ்க்காணும் நாள்காட்டியில் புதன் கிழமையை ஒன்றாம் தேதியாகக் கொண்டு தமிழெண்களால் நிரப்புக. PTA

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| | | | ௧ | ௨ | ௩ | ௪ |
| ௫ | ௬ | ௭ | ௮ | ௯ | ௧௦ | ௧௧ |
| ௧௨ | ௧௩ | ௧௪ | ௧௫ | ௧௬ | ௧௭ | ௧௮ |
| ௧௯ | ௨௦ | ௨௧ | ௨௨ | ௨௩ | ௨௪ | ௨௫ |
| ௨௬ | ௨௭ | ௨௮ | ௨௯ | ௩௦ | ௩௧ | |

### அகராதியில் காண்க:

குணதரன், செவ்வை, நகல், பூட்கை

குணதரன் – நற்குணமுள்ளவன், முனிவன்
செவ்வை – நேர்மை, துல்லியம், பிழையின்மை, சரியான நிலை
நகல் – சிரித்தல். மகிழ்ச்சி, ஏளனம், நட்பு, படி
பூட்கை – கொள்கை, மனவுறுதி, வலிமை, யானை, யானையாளி

## செயல்திட்டம்

விளையாட்டு உலகில் உங்களுக்கு பிடித்த ஆளுமைத்திறன் மிக்க விளையாட்டு வீரர் பற்றிய செய்திகளைப் படத்துடன் தொகுப்பேடாக உருவாக்குக.



**பிறப்பு:**

பி.டி. உஷா என்று அனைவராலும் பிரபலமாக அறியப்படும் "பிலாவுள்ளகண்டி தெக்கெப்பரம்பில் உஷா" அவர்கள், 1964 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 27–ஆம் தேதி இந்தியாவின் கேரளா மாநிலத்தில் கோழிக்கோடு மாவட்டத்திலுள்ள "பய்யோலி" என்ற இடத்தில் பைத்தல் என்பவருக்கும், இலட்சுக்கும் மகளாகப் பிறந்தார்.

**ஆரம்ப வாழ்க்கை மற்றும் கல்வி:**

சிறுவயதிலேயே விளையாட்டில் ஆர்வம் மிக்கராக விளங்கிய அவர், தன்னுடைய பள்ளியில் நடக்கும் அனைத்து போட்டிகளிலும் கலந்து கொள்வார். அதே போல் 1976 ஆம் ஆண்டு கேரள மாநில அரசு, கண்ணூரில் பெண்களுக்கான விளையாட்டுப் பள்ளியைத் தொடங்கியது. அதில் கோழிக்கோடு மாவட்டத்தின் சார்பில் இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**தேசிய அளவில் அவரின் சாதனைகள்:**

தடகள விளையாட்டில் புயல் வேகத் திறமையினை வளர்த்துக்கொண்டு வந்த அவர். முதன் முதலாக 1977 ஆம் ஆண்டு தன்னுடைய 13 வயதில் தேசிய அளவிலான தடகள விளையாட்டில் 100 மீட்டர் ஓட்டத்தில் கலந்து கொண்டு, தன்னுடைய முதல் தேசியச் சாதனையைப் படைத்தார். பிறகு. தொடர்ந்து பல தேசிய போட்டிகளில் பங்கேற்று பல பதக்கங்களை வென்று அனைவரின் கவனத்தையும் தன் பக்கம் ஈர்த்தார்.

**சர்வதேச அளவில் அவரின் சாதனைகள்:**

1980–ஆம் ஆண்டு மாஸ்கோவில் நடந்த ஒலிம்பிக் போட்டியில் முதன்முதலாக சர்வதேச அளவில் கலந்து கொண்டார். இந்தப் போட்டியில் பங்கேற்று, பதக்க வாய்ப்பை இழக்க நேரிட்டாலும், அதன் பிறகு 1982 ஆம் ஆண்டு தில்லியில் நடைபெற்ற ஆசிய விளையாட்டுப் போட்டியில் கலந்து கொண்டு 100 மீட்டர் மற்றும் 200 மீட்டர் ஓட்டங்களில் வெள்ளிப் பதக்கம் வென்று சாதனை படைத்தார். இதுவே அவருடைய முதல் சர்வதேச பதக்கமாகும். பின்னர் குவைத்தில் நடைபெற்ற சாம்பியன் தடகளப் போட்டியில், 400 மீட்டர் ஓட்டத்தில் 'தங்கம்' வென்று புதிய சாதனை படைத்தார். அதன் பிறகு, 1984 ஆம் ஆண்டு லாஸ் ஏஞ்சல்ஸில் நடைபெற்ற 23வது ஒலிம்பிக் போட்டியில், 400 மீட்டர் தடை ஓட்டத்தில், அரையிறுதியில் முதலாவதாக வந்தாலும், இறுதி ஓட்டத்தில் 100ல் ஒரு நொடி வித்தியாசத்தில் பதக்கம் வெல்லும் வாய்ப்பை இழந்தார். இருந்தாலும் ஒலிம்பிக் போட்டியில், இறுதிப் போட்டிக்குள் நுழைந்த முதல் இந்திய வீராங்கனை என்ற சிறப்பைப் பெற்றதோடு மட்டுமல்லாமல், ஓட்டப்பந்தயத்தில் அவரே இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரமாக திகழ்ந்தார். 1986ல் சியோவில் நடைபெற்ற ஆசிய விளையாட்டுப் போட்டியில் 200 மீட்டர் ஓட்டம், 400 மீட்டர் ஓட்டம், 40 0மீட்டர் தடை ஓட்டம், 400 மீட்டர் தொடர் ஓட்டம் என அனைத்திலும் முழு ஆதிக்கம் செலுத்தி, தங்கம் வென்றதோடு மட்டுமல்லாமல், ஒரு வெண்கலப் பதக்கமும் வென்று வெற்றி வாகை சூடினார். இச்சாதனையைப் பாராட்டி, மத்திய அரசு அவரை ஊக்குவிக்கும் வகையில் ரூ. 5 இலட்சம் பரிசுத் தொகை வழங்கியது. அதன் பிறகு, சுமார் ஐந்து ஆண்டுகளுக்கும் மேல் ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கொடிக்கட்டிப் பறந்த அவர்களுக்கு "ஆசிய தடகள ராணி" எனப் பட்டம் சூட்டப்பட்டது. 1983 முதல் 1989 வரையிலான ஆண்டுகளில் பல்வேறு தடகளப் போட்டிகளில் பங்கேற்ற அவர், சுமார் 13 தங்கப் பதக்கங்களை வென்றார்.

**இல்லற வாழ்க்கை:**

1991 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ஆம் நாள் மலப்புரம் மாவட்டத்தில் வசித்து வந்த சீனிவாசன் என்பவரைத் திருமணம் செய்து கொண்டார். சீனிவாசன் மத்திய தொழில் பாதுகாப்பு படையில் இன்ஸ்பெக்டராகப் (காவல் ஆய்வாளர்) பணியாற்றி வந்தார்.திருமணத்திற்குப் பிறகு, சுமார் 3 ஆண்டுகள் விளையாட்டில் பங்கேற்காமல் இருந்த அவர், தன்னுடைய கணவர் அளித்த ஊக்கத்தின் காரணமாக மீண்டும் போட்டிகளில் பங்கேற்று. பல பதக்கங்களை வென்று சாதனை படைத்தார். 1998ஆம்

ஆண்டு ஜப்பானில் நடைபெற்ற தடகளப் போட்டியில் பங்கேற்று 200 மீட்டர் மற்றும் 400 மீட்டர் ஓட்டத்தில் வெண்கலப் பதக்கம் வென்றார். ஆசியப் போட்டிகளில் மட்டும் 30 பதக்கங்களை வென்ற பி.டி. உஷா அவர்கள், அதுவரை அவர் பங்கேற்ற சர்வதேச போட்டிகள் மூலம் சுமார் 100க்கும் மேற்பட்ட பதக்கங்களை வென்று சாதனை படைத்தார்.

சர்வதேசப் போட்டிகளிலிருந்து ஓய்வு:

காலில் தொடர்ந்து அவருக்கு வலி ஏற்பட்டதன் காரணமாக, ஓய்வு எடுத்துக் கொள்ள முடிவு செய்த அவர், ஜூலை 25, 2000–ல் தனது 36–வது வயதில் சர்வதேச போட்டிகளில் இருந்து ஓய்வு பெறுதாக அறிவித்தார்.

**அ) காட்சியைக் கண்டு கவினுற எழுதுக.**

**ஆ) படம் உணர்த்தும் கருத்தை நயமுற ஐந்து தொடர்களில் எழுதுக.**



அ) ஏழைக்கு இரங்குவது
இறைவனுக்கு இரங்குவதாகும்
ஏழைக்கு இரங்குவதையே
ஏளனமாக படம் எடுக்கும் போது
எதார்த்தம் கூட ஏளனமாகி விடுகிறது
அலைபேசியின் மோகத்தால்
மற்றவர்களின் தாகத்தைத்
தணிக்காமல் போனால் கூட
சாபத்தை வாங்காமலிருப்போம்.

ஆ) 1. பொதுநலத்தில் கூட சுயநலத்தைத் தேடும் உலகம் இது.
2. தன்படத்தைத் தானே எடுத்துத் திரையில் போடும் தரம் கெட்ட கூட்டம் இது.
3. பசித்தவனுக்கு உணவளிப்பதைப் படம் எடுத்துப் புசிக்கும் கூட்டம் பெருகி விட்டது.
4. இந்தக் கூட்டம் பிச்சைக்காரனைக்கூட விட்டு வைக்கவில்லை.
5. உதவும் மனத்தை விட அதை விளம்பரப் படுத்தும் குணமே மேலோங்கி நிற்கிறது.

## நிற்க அதற்குத் தக

1. ஒவ்வொரு சூழலிலும் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்தபடி இருக்கிறார்கள். உதவி பெற்றபடியும் இருக்கிறார்கள். சில உதவிகள் அவர்கள் மீதுள்ள அன்பினால் செய்கிறோம்; சில உதவிகள் இரக்கத்தால் செய்கிறோம். தொடர்வண்டியில் பாட்டுப் பாடிவரும் ஒருவருக்கு நம்மையறியாமல் பிச்சை போடுகிறோம். தொல்லை வேண்டாம் என்று கருதி, வேண்டாவெறுப்போடு சில இடங்களில் உதவி செய்கிறோம்!

நீங்கள் செய்த, பார்த்த உதவிகளால் எய்திய மனநிலை.....

| உதவி | மனநிலை |
|---|---|
| வகுப்பறையில் எழுதுகோல் கொடுத்து உதவிய போது | இக்கட்டான சூழலில் செய்த உதவியால் எனக்கு மனநிறைவு, அவருக்கு மனமகிழ்ச்சி! |
| உறவினருக்கு என் அம்மா பணம் அளித்து உதவியபோது | கல்லூரிப் படிப்பைத் தொடர முடிந்ததால் உறவினருக்கு ஏற்பட்ட நன்றியுணர்வு! |
| பசியால் வாடியவர்க்கு உணவளித்தபோது | அவருக்கு பசி தீர்ந்த உணர்வு, எனக்கு உதவி செய்த மனநிறைவு! |

**கலைச்சொல் அறிவோம்**

Humanism – மனிதநேயம்
Cabinet – அமைச்சரவை
Cultural Boundaries – பண்பாட்டு எல்லை
Cultural values – பண்பாட்டு விழுமியங்கள்

# அலகுத் தேர்வு இயல் - 9

நேரம்: 1.00 மணி] [மதிப்பெண்கள்: 30

**I. பலவுள் தெரிக:** $4 \times 1 = 4$

1. கருத்தாழமும் வாசகச் சுவைப்பும் கலந்து இலக்கியங்கள் படைத்தவர் ______.
   அ) பாரதியார் ஆ) பாரதிதாசன்
   இ) ஜெயகாந்தன் ஈ) புதுமைப்பித்தன்
2. நாகூர்ரூமி எண்பதுகளில் ________ இதழில் எழுதத் தொடங்கியவர்.
   அ) ஆனந்த விகடன் ஆ) குங்குமம்
   இ) குமுதம் ஈ) கணையாழி
3. வாய்மையே மழைநீராகி – இத்தொடரில் வெளிப்படும் அணி
   அ) உவமை ஆ) தற்குறிப்பேற்றம்
   இ) உருவகம் ஈ) தீவகம்
4. பூக்கையைக் குவித்துப் பூவே புரிவொடு காக்க என்று ________, ________ வேண்டினார்.
   அ) கருணையன் எலிசபெத்துக்காக ஆ) எலிசபெத் தமக்காக
   இ) கருணையன் பூக்களுக்காக ஈ) எலிசபெத் பூமிக்காக

**III. விடைக்கேற்ற வினா அமைக்க:** $1 \times 1 = 1$

1. தர்மார்த்தங்களை உபதேசிக்கவே வியாஸர் பாரதத்தை எழுதினார்.

**IV. கீழ்க்காணும் வினாவிற்கு மூன்று வரிகளில் விடையளி:** $2 \times 2 = 4$

1. 'வாழ்வில் தலைக்கனம்,' 'தலைக்கனமே வாழ்வு' என்று நாகூர்ரூமி யாருடைய வாழ்வைக் குறித்துக் கூறுகிறார்?
2. கருணையனின் புலம்பலைக் கேட்டு அழுவன போன்று கூச்சலிட்டன யாவை?

**V. கீழ்க்காணும் வினாவிற்கு ஆறு வரிகளில் விடையளி:** $2 \times 3 = 6$

1. சித்தாளின் மனச்சுமைகள்
   செங்கற்கள் அறியாது" – இடஞ்சுட்டிப் பொருள் தருக.
2. ஜெயகாந்தன் தம் கதைமாந்தர்களின் சிறந்த கூறுகளைக் குறிப்பிடத் தவறுவதில்லை. என்று அசோகமித்திரன் கூறுகிறார். இக்கூற்றை மெய்ப்பிக்கும் செயல் ஒன்றைத் 'தாக்கத்திற்கு அப்பால்' கதை மாந்தர் வாயிலாக விளக்குக.

**VI. கீழ்க்காணும் வினாவிற்கு விரிவான அளவில் விடை தருக:** $1 \times 8 = 8$

1. எதற்காக எழுதுகிறேன்? என்னும் தலைப்பில் ஜெயகாந்தன் எழுதியதை எழுதுக.

**VII. கீழ்க்காணும் வினாக்களுக்கு விடை தருக:** $3 \times 1 = 3$

1. Tomorrow is often the busiest day of the week - Spanish proverb
   நாளையே இந்த வாரத்தின் மிகப் பரபரப்பான நாள் – ஸ்பானீஷ் பழமொழி
2. உவமையைப் பயன்படுத்திச் சொற்றொடர் உருவாக்குக.
   தாமரை இலை நீர்போல:
3. இலக்கணக்குறிப்பு தருக:
   கணீர்

**VIII. அடிமாறாமல் எழுதுக:** $1 \times 4 = 4$

1. "நவமணி" எனத் தொடங்கும் தேம்பாவணி பாடலை எழுதுக.





## வாழ்வியல் - திருக்குறள் பயன்பாடு

### அதிகாரம் 14. ஒழுக்கமுடைமை

பால் : அறத்துப் பால் இயல் : இல்லறம்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 131 | ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்<br>உயிரினும் ஓம்பப் படும் | ஒழுக்கம் அனைவருக்கும் மேன்மையைத் தருவதாக இருப்பதனால், அந்த ஒழுக்கம் உயிரை விட மேலானதாக கருதி போற்றப்படுகிறது. |
| 132 | பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்<br>தேரினும் அஃதே துணை | மிகவும் கடினப்பட்டாவது ஒழுக்கத்தைக் காக்க வேண்டும். அவ்வாறு காப்பதே அனைத்து அறங்களையும் ஆராய்ந்து தெளிந்தவற்றுள் சிறப்பான துணையாகும். |
| 133 | ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்<br>இழிந்த பிறப்பாய் விடும் | ஒழுக்கம் உடையவராக இருப்பதே உயர்ந்த குடியின் தன்மையாகும். ஒழுக்கம் இன்றி இருத்தல் இழிந்த குடியின் தன்மையாகி விடும். |
| 134 | மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்<br>பிறப்பொழுக்கங் குன்றக் கெடும் | கற்றவற்றை மறந்தாலும் மீண்டும் ஓதி கற்றுக் கொள்ளலாம். ஆனால் மறை ஓதுபவனது பிறப்பு ஒழுக்கம் தவறினால் திருத்த முடியாத அளவு இழிந்து போய் கெடும். |
| 135 | அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று<br>இல்லை ஒழுக்க மிலான்கண் உயர்வு | பொறாமை குணம் உடையவனிடம் செல்வம் தங்காதிருப்பது போல, ஒழுக்கம் இல்லாதவன து வாழ்க்கையில் உயர்வு என்பது இல்லாமல் ஆகிவிடும். |
| 136 | ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்<br>ஏதம் படுபாக் கறிந்து | ஒழுக்கம் இன்றி இருப்பதால் நேரும் பழியையும் துன்பத்தையும் அறிந்து சான்றோர் ஒழுக்கக் கேடான செயல்களில் ஒருபோதும் ஈடுபட மாட்டார்கள். |
| 137 | ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்<br>எய்துவர் எய்தாப் பழி | ஒழுக்கத்துடன் இருப்பதால் அனைவரும் உயர்வை அடைவர். ஒழுக்கம் இன்றி இருப்பதால் எவரும் அடையக் கூடாத பழியை அடைவர். |
| 138 | நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்<br>தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் | நல்ல வாழ்க்கைக்கு விதை போல் அமையும் நல்ல ஒழுக்கம். தீய ஒழுக்கமானது என்றை க்கும் துன்பத்தையே கொடுக்கும். |
| 139 | ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய<br>வழுக்கியும் வாயாற் சொலல் | ஒழுக்கமுடைய நல்லவர்களுக்கு மறந்தும் வாயினால் தீய சொற்களைச் சொல்லுதல் பொருந்தாத பண்பாகும். |
| 140 | உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்<br>கல்லார் அறிவிலா தார் | உலக மக்களோடு பொருந்தி பழகும் முறையை அறியாதவர் என்ன தான் கற்றிருந்தாலும் அறிவில்லாதவராகவே கருதப்படுவர். |

## அதிகாரம் 36. மெய்யுணர்தல்

பால் : அறத்துப் பால் இயல் : துறவறம்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 351 | பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும் மருளானாம் மாணாப் பிறப்பு | உண்மையில் பொருள் அல்லாதவற்றை பொருள் என்று கருதும் மயக்கத்தினாலேயே, இழிந்த பிறப்புகள் உண்டாகின்றன. |
| 352 | இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி மாசறு காட்சி யவர்க்கு | மயக்கம் நீங்கி குற்றம் இல்லாத மெய்யுணர்வை உடையவர்களுக்கு, இருள் விலகி எல்லா வித இன்பங்களும் கிடைக்கும். |
| 353 | ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து | சந்தேகத்திலிருந்து விலகி தெளிவான அறிவை அடைந்தவர்களுக்கு இந்த உலகத்தினை விட வானுலகம் அண்மையானதாக அமையும். |
| 354 | ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணர்வு இல்லா தவர்க்கு | உண்மையான மெய்யுணர்வு இல்லாதவர்களுக்கு, ஐந்து உணர்வுகளும் முழுவதுமாக கிடைத்த போதிலும் ஒரு பயனும் இல்லை. |
| 355 | எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு | எந்தப் பொருளும், எந்தத் தன்மையுடையதாக இருந்தாலும், அந்தப் பொருளின் உண்மையான பொருளைக் காண்பது தான் சிறந்த அறிவு ஆகும். |
| 356 | கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாரா நெறி | கற்க வேண்டியவற்றைக் கற்று, உண்மையான பொருளையும் உணர்ந்தவர், மீண்டும் இப்பிறப்பிற்கு வராத சிறப்பான தன்மையை அடைவர். |
| 357 | ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு | என்றும் உளதான உண்மையான பொருளை ஒருவனது உள்ளம் ஆராய்ந்து உணர்ந்தால், அவனுக்கு மீண்டும் பிறவி வாய்க்காது. |
| 358 | பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு | பிறவி என்னும் அறியாமை அழிவதன் பொருட்டு, முக்திக்குக் காரணமான சிறந்த பொருளைக் காண்பதே அறிவு ஆகும். |
| 359 | சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய் | எல்லாப் பொருள்களுக்கும் உள்ள தொடர்பினை உணர்ந்து கொண்டு, அந்தப் பற்றினை ஒழித்து வாழ்ந்தால், மற்றவற்றை அழித்துத் தொடர்பு படுத்தும் துன்பங்கள் வந்து சேராது. |
| 360 | காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன் நாமம் கெடக்கெடும் நோய் | ஆசை, கோபம், மயக்கம் இவை மூன்றின் பெயர்களைக் கூட உள்ளத்திலிருந்து நீக்கி விட்டால் துன்பங்கள் நம்மை விட்டு விலகி விடும். |

அதிகாரம் **45. பெரியாரைத் துணைக்கோடல்**

பால் : பொருட் பால் இயல் : அரசியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 441 | அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை<br>திறனறிந்து தேர்ந்து கொளல் | அறத்தின் தன்மைகளை உணர்ந்தவராய், தன்னை விட முதிர்ந்த அறிவுடையோரது நட்பினை அடையும் வகையறிந்து அதனைப் பெற்றுக் கொள்ள வேண்டும். |
| 442 | உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்<br>பெற்றியார்ப் பேணிக் கொளல் | வந்த துன்பத்தை நீக்கி, இனி துன்பம் வராமல் முன்னதாகவே காத்துக் கொள்ளும் தன்மையுடைய பெரியவர்களைப் போற்றித் துணையாகக் கொள்ள வேண்டும். |
| 443 | அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்<br>பேணித் தமராக் கொளல் | பெரியவர்களைப் போற்றி தமக்குரிய சுற்றத்தினராகக் கொள்ளுதல், அரிதான செயல்கள் எல்லாவற்றிலும் அரிதானது ஆகும். |
| 444 | தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்<br>வன்மையு ளெல்லாந் தலை | தம்மை விட உயர்ந்தவர்களைத் தமக்குச் சுற்றத்தினராகக் கொண்டு வாழ்தல், வல்லமை எல்லாவற்றிலும் சிறந்த வல்லமை ஆகும். |
| 445 | சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்<br>சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் | நல்ல வழிகளை ஆராய்ந்து கூறுவோரையே உலகம் கண்ணாகக் கொண்டு நடத்தலால், அரசன் அத்தகையோரையே ஆராய்ந்து துணையாகக் கொள்ள வேண்டும். |
| 446 | தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்<br>செற்றார் செயக்கிடந்த தில் | தகுதியுள்ள பெரியோர்களின் கூட்டத்தில் தான் ஒருவனாய் நடந்து கொள்ள வல்லவனை, பகைவர்கள் செய்யக் கூடிய தீங்கு எதுவும் இல்லை. |
| 447 | இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே<br>கெடுக்குந் தகைமை யவர் | கடிந்து அறிவுரை கூறித் திருத்தவல்ல பெரியோரின் துணைகொண்டு ஆளும் தலைவனைக் கெடுக்கவல்ல ஆற்ற லுடையவர் யார்? |
| 448 | இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்<br>கெடுப்பா ரிலானுங் கெடும் | கடிந்து அறிவுரை கூறும் பெரியோர்கள் இல்லாத பாதுகாப்பற்ற அரசன், அவனைக் கெடுப்பதற்கு யாரும் இல்லாவிட்டாலும் தானே கெட்டு ஒழிவான். |
| 449 | முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாஞ்<br>சார்பிலார்க்கு இல்லை நிலை | முதல் இல்லாத வியாபாரிக்கு வருமானம் இல்லை, அது போல தன்னைத் தாங்கும் துணையில்லாதவருக்கு நிலையான பாக்கியம் கிடையாது. |
| 450 | பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே<br>நல்லார் தொடர்கை விடல் | நல்லவரான பெரியவர்களின் நட்பை விட்டு விலகி இருத்தல், பலருடைய பகைமையைக் கொள்வதை விடப் பத்து மடங்கு தீமை விளைவிப்பது. |

## அதிகாரம் 56. கொடுங்கோன்மை

*பால் :* பொருட் பால் *இயல் :* அரசியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 551 | கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு அல்லவை செய்தொழுகும் வேந்து | குடிமக்களை வருத்தி முறையற்ற செயல்களைச் செய்து ஆட்சி புரியும் அரசன், கொலையையே தொழிலாகக் கொண்டவரை விடக் கொடியவன் ஆவான். |
| 552 | வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும் கோலொடு நின்றான் இரவு | ஆட்சிக்குரிய கோலை ஏந்தி நின்ற அரசன் குடிமக்களிடம் முறையற்ற வரிகளைக் கேட்பது, காட்டு வழியில் வேலோடு நின்று கள்வன் 'இருப்பதைக் கொடு' என்பது போன்றது. |
| 553 | நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன் நாடொறும் நாடு கெடும் | நாள் தோறும் தனது ஆட்சியின் தன்மையை ஆராய்ந்து தகுந்தபடி முறை செய்து ஆளாத அரசன் நாளுக்கு நாள் தனது நாட்டை இழந்து கெடுவான். |
| 554 | கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச் சூழாது செய்யும் அரசு | செங்கோன்மையுடன் சிறப்பாக ஆட்சி செய்யாமல் நடக்கும் அரசு, தனது பொருள் வளத்தையும், குடி மக்களின் அன்பையும் சேர்ந்து இழந்து விடுவான். |
| 555 | அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை | கொடுங்கோலாட்சியால் அல்லல் பட்ட மக்கள் அதனைப் பொறுக்க மாட்டாமல் விட்ட கண்ணீரே, ஓர் அரசனின் செல்வத்தை அழிக்கும் படையாகும். |
| 556 | மன்னவர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல் மன்னாவாம் மன்னர்க் கொளி | அரசருக்கு நிலைத்த புகழ் வரக் காரணம் சிறப்பான ஆட்சி முறை ஆகும். அது இல்லையென்றால் அரசரது புகழ் நிலைபெறாமல் போய்விடும். |
| 557 | துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு | மழைத்துளி இல்லாத நிலைமை உலகத்திற்கு எந்த மாதிரியோ அது போலவே அரசனின் அருளற்ற தன்மை அவன் நாட்டில் வாழும் உயிர்களுக்கு ஆகும். |
| 558 | இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா மன்னவன் கோற்கீழ்ப் படின் | முறை செய்யாத நீதி தவறிய அரசனின் கோலின் கீழ் ஆட்சி அமைந்தால், நாட்டில் செல்வநிலை கூட வறுமையை விட அதிக துன்பத்தைத் தரும். |
| 559 | முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி ஒல்லாது வானம் பெயல் | முறை தவறி அரசன் நாட்டை ஆட்சி செய்தால், பருவ மழை தவறி மேகமும் மழை பொழியாது ஒதுங்கிப் போகும். |
| 550 | ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர் காவலன் காவான் எனின் | அரசன் சரியாக ஆட்சி செய்து நாட்டைக் காக்க மாட்டான் என்றால், அந்நாட்டின் பசுக்கள் பால் தரும் பயன் குறையும், வேதம் ஓதும் அந்தணர்கள் அறநூல்களை மறப்பார்கள். |

அதிகாரம் **58. கண்ணோட்டம்**

பால் : பொருட் பால் | இயல் : அரசியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 571 | கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை<br>உண்மையான் உண்டிவ் வுலகு | 'கண்ணோட்டம்' என்று சொல்லப்படும் மிகப் பெரிய அழகு இருப்பதனால் தான், உண்மையில் இந்த உலகம் அழியாமல் நிலை பெற்றுள்ளது. |
| 572 | கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்<br>உண்மை நிலக்குப் பொறை | அன்பும் பரிவும் மிக்க பார்வையில் உள்ளது இந்த உலக நடைமுறை. அந்தக் கண்ணோட்டம் இல்லாதவர் உண்மையில் இந்த நிலத்திற்குச் சுமை ஆவர். |
| 573 | பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்<br>கண்ணோட்டம் இல்லாத கண் | பாடலோடு பொருந்தா விட்டால் இசைக்கு என்ன பயன்? அன்பான கண்ணோட்டம் இல்லாத கண் என்றால் அந்தக் கண்ணினால் என்ன பயன்? |
| 574 | உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்<br>கண்ணோட்டம் இல்லாத கண் | தேவையான அளவிற்கு அன்பான கண்ணோட்டம் இல்லாத கண், முகத்தில் இருப்பது போலத் தோன்றுவதைத் தவிர அது வேறு என்ன பயன் தரும்? |
| 575 | கண்ணிற்கு அணிகலன் கண்ணோட்டம் அஃதின்றேல்<br>புண்ணென்று உணரப் படும் | கண்ணுக்குச் சிறந்த அழகு அன்பான கண்ணோட்டம் ஆகும். அது இல்லையென்றால் அந்தக் கண்கள் 'புண்கள்' என்று கருதப்படும். |
| 576 | மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ<br>டியைந்துகண் ணோடா தவர் | கண்ணோடு பொருந்திய அன்பான கண்ணோட்டம் இல்லாதவர், மண்ணோடு அமைந்துள்ள மரத்திற்கு ஒப்பானவர் ஆவர். |
| 577 | கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்<br>கண்ணோட்டம் இன்மையும் இல் | அன்பான கண்ணோட்டம் இல்லாதவர் கண் இல்லாதவர் ஆவர். கண்களை உடையவர் என்றால் கண்ணோட்டம் இல்லாமலிருப்பது இல்லை. |
| 578 | கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு<br>உரிமை உடைத்திவ் வுலகு | தனது கடமையான தொழில் கெடாமல் பிறரிடம் அன்பான கண்ணோட்டத்துடன் நடந்து கொள்ள வல்லவர்களுக்கு இந்த உலகம் உரிமையுடையது. |
| 579 | ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்<br>பொறுத்தாற்றும் பண்பே தலை | தண்டித்து அடக்க வேண்டிய குணமுள்ளவர்களிடமும் அன்பான கண்ணோட்டம் காட்டி அவரது குற்றத்தையும் பொறுத்து நடக்கும் பண்பே சிறந்தது ஆகும். |
| 580 | பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க<br>நாகரிகம் வேண்டு பவர் | யாவராலும் விரும்பத்தக்க அன்பான நாகரிகம் வேண்டுபவர், தன்னோடு பழகியவர் தனது நஞ்சை அளித்தாலும் அதனை உண்டு விடுவார்கள். |

## அதிகாரம் 62. ஆள்வினைஉடைமை

பால் : பொருட் பால் இயல் : அரசியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 611 | அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும் | இந்தச் செயலைச் செய்வது மிகவும் கடினம் என்று சோர்வுறாமல் இருக்க வேண்டும். அந்தச் செயலைச் செய்ய முயலும் முயற்சியே பெருமையைத் தரும். |
| 612 | வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு | செயலில் முயற்சியற்றிருப்பதை விட்டொழிக்க வேண்டும். ஒரு செயலைச் செய்து முடிக்காமல் பாதியிலே விட்டவரை உலகமும் கைவிடும். |
| 613 | தாளாண்மை என்னுந் தகைமைக்கண் தங்கிற்றே வேளாண்மை என்னுஞ் செருக்கு | பிறருக்கு உதவி செய்யும் பெருமிதமான பண்பு, விடாமல் முயற்சி செய்யும் உயர்ந்த பண்பிலே நிலைத்துள்ளது. |
| 614 | தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை வாளாண்மை போலக் கெடும் | விடாமுயற்சி இல்லாதவனது பிறருக்கு உதவி செய்யும் குணமும் போருக்கு அஞ்சுகின்ற பேடியின் கையிலுள்ள வாளின் வீரம் போல பயனற்றதாய் கெடும். |
| 615 | இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர் துன்பம் துடைத்தூன்றும் தூண் | சுகங்களை விரும்பாமல், மேற்கொண்ட செயலில் முழு முயற்சியுடன் ஈடுபடுபவன், தன் சுற்றத்தாரின் துன்பத்தைப் போக்கித் தாங்குகின்ற தூண் போல் விளங்குவான். |
| 616 | முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை இன்மை புகுத்தி விடும் | இடைவிடாத முயற்சி ஒருவனுக்குச் செல்வத்தைத் தரும். முயற்சி இல்லாமையோ அவனுக்கு வறுமையைக் கொடுத்து விடும். |
| 617 | மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான் தாளுளாள் தாமரையி னாள் | ஒருவனது சோம்பலிலே கரிய மூதேவி வாழ்கிறாள். சோம்பல் தன்மை இல்லாதவனின் காலடியில் தாமரை மேலிருக்கும் திருமகள் வாழ்கிறாள். |
| 618 | பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி | நன்மை கொடுக்கும் விதி இல்லாதிருப்பது யாருக்கும் பழி ஆகாது. அறிய வேண்டியதை அறிந்து முயற்சி செய்யாமலிருப்பதே ஒருவனுக்குப் பழி ஆகும். |
| 619 | தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும் | விதியின் வசத்தால் ஒரு செயல் கை கூடாது போனாலும், ஒருவனது முயற்சி அவனது உடல் வருந்திய வருத்தத்தின் அளவு பயனைக் கொடுக்கும். |
| 620 | ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது உஞற்று பவர் | சோர்வின்றி இடைவிடாது முயற்சி செய்பவர்கள், செயலுக்கு இடையூறாக வரும் விதியினையும் தோல்வியுறச் செய்வர். |

## அதிகாரம் 64. அமைச்சு

பால் : பொருட் பால் இயல் : அமைச்சியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 631 | கருவியும் காலமும் செய்கையும் செய்யும்<br>அருவினையும் மாண்டது அமைச்சு | ஒரு செயலைச் செய்வதற்கு வேண்டிய கருவியையும், சரியான காலத்தையும், செய்து முடிக்கும் வகையையும், செயலின் அருமையையும் சிறப்பாகச் செய்பவரே சிறந்த அமைச்சன். |
| 632 | வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு<br>ஐந்துடன் மாண்டது அமைச்சு | மனவலிமையும், சிறந்த குடிப்பிறப்பும், காக்கும் திறமையும், கற்றறிந்த அறிவும், விடா முயற்சியும் ஆகிய ஐந்தும் சிறப்பாகப் பெற்றவனே சிறந்த அமைச்சன். |
| 633 | பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்<br>பொருத்தலும் வல்லது அமைச்சு | பகைவரின் துணையைப் பிரித்தலும், நண்பரைப் பிரிந்து செல்லாமல் காத்தலும், பிரிந்து சென்றவரை மீண்டும் சேர்த்துக் கொள்வதிலும் வல்லவனே சிறந்த அமைச்சன். |
| 634 | தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்<br>சொல்லலும் வல்லது அமைச்சு | ஒரு செயலை நன்கு ஆராய்தலும், பின் அதற்குரிய வழிகளைத் தேர்ந்தெடுத்து செய்தலும், சிறந்ததை அஞ்சாமல் துணிச்சலாகச் சொல்லுதலும் ஆகியவற்றில் வல்லவனே சிறந்த அமைச்சன். |
| 635 | அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்<br>திறனறிந்தான் தேர்ச்சித் துணை | அறத்தை அறிந்தவனாக, அறிவு நிறைந்த சொற்களைப் பேசுபவனாய், எக்காலத்திலும் திறமையுடன் செயலாற்றுபவனாய் உள்ளவன் சிறந்த துணையாக இருப்பான். |
| 636 | மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்<br>யாஉள முன்நிற் பவை | புத்திக் கூர்மையுடன் நூலறிவும் உடையவர்களுக்கு முன்பு அவர்களுக்கு எதிராக எந்த நுட்பமான சூழ்ச்சிகள் நிற்கும்? |
| 637 | செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து<br>இயற்கை அறிந்து செயல் | ஒரு செயலைச் செய்யும் வகைகளை நூலறிவால் அறிந்திருந்த போதிலும், உலகத்தின் நடைமுறை இயல்பினை அறிந்து அதற்கேற்றாற்போல் செயல்பட வேண்டும். |
| 638 | அறிகொன்று அறியான் எனினும் உறுதி<br>உழையிருந்தான் கூறல் கடன் | அறிவுரை சொல்பவரின் அறிவை அலட்சியம் செய்து, தானும் அறியாதவனாய் தலைவன் இருந்தாலும், அவனுக்கும் உறுதியானவற்றை எடுத்துக் கூறுதல் அமைச்சரின் கடமையாகும். |
| 639 | பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்<br>எழுபது கோடி உறும் | அருகில் இருந்தவாறே தன் அரசனுக்குத் தவறான வழியைக் கூறுகின்ற அமைச்சரை விட எழுபது கோடி பகைவர்கள் தேர்ந்தெடுக்கப் படக்கூடியவர்கள். |
| 640 | முறைபடச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்<br>திறப்பாடு இலாஅ தவர் | முறையாக ஆராய்ந்து அறிந்து உணர்ந்த போதிலும், செயல் திறமை இல்லாத அமைச்சர்கள் குறையானவைகளையே செய்வார்கள். |

## அதிகாரம் 76. பொருள் செயல்வகை

பால் : பொருட் பால் இயல் : கூழியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 751 | பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லது இல்லை பொருள் | ஒரு பொருளாக மதிக்கப்படும் தகுதியில்லாதவரையும் ஒரு பொருளாக மதிக்கப்படச் செய்யும் பொருளை விட சிறந்த பொருள் வேறு இல்லை. |
| 752 | இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு | பொருள் இல்லாதவரை அனைவரும் இகழ்ச்சி செய்வர். ஆனால் பொருள் படைத்த செல்வந்தரை அனைவரும் வணங்கி சிறப்பு செய்வர். |
| 753 | பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று | 'பொருள்' என்று கூறப்படும் அணையாத விளக்கு தன்னை உடையவர் எண்ணிய இடங்களுக்கெல்லாம் சென்று வறுமை எனும் இருளைப் போக்கும் சக்தி வாய்ந்தது. |
| 754 | அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து தீதின்றி வந்த பொருள் | தீங்கு ஏதும் இல்லாமல், பொருள் தேடும் திறமை அறிந்து வந்த பொருள் அறவாழ்க்கையையும் கொடுக்கும். இன்பத்தையும் கொடுக்கும். |
| 755 | அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல் | அருளோடும், அன்போடும் பொருந்தி பெறப்படாத பொருள் என்னும் செல்வத்தால் வந்த முன்னேற்றத்தைத் தீமையானது என்று விலக்கி விட வேண்டும். |
| 756 | உறுபொருளும் உலகு பொருளும்தன் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள் | உரிமையால் வந்த பொருளும், சுங்க வரியால் வந்த பொருளும், தம் பொருந்தாத பகைவரை வென்று திறையாக வரும் பொருளும் வேந்தனின் உரிமைப் பொருள்களாகும். |
| 757 | அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும் செல்வச் செவிலியால் உண்டு | அன்பு என்னும் தாயின் குழந்தையான அருள் என்பது பொருள் என்று கூறப்படும் செவிலித் தாயால் மேலும் வளரும். |
| 758 | குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று உண்டாகச் செய்வான் வினை | தன் கையில் பொருளை வைத்துக் கொண்டு செயல்படுபவனது செயல், குன்றின் மீதேறி நின்று யானைப் போரைப் பார்ப்பது போன்று எளிதானது. |
| 759 | செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும் எஃகதனிற் கூரியது இல் | பொருளைச் சேர்க்க வேண்டும். பகைவர்களுடைய கர்வத்தை அழிக்க வல்ல வாள் அதனை விடக் கூர்மையானது வேறு இல்லை. |
| 760 | ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு | மிக உயர்ந்த பொருளை அதிகமாகச் சேர்த்தவர்களுக்கு மற்ற அறமும், இன்பமுமாகிய இரண்டும் ஒருங்கே எளிதாக வந்து சேரும். |

## அதிகாரம் 83. கூடாநட்பு

பால் : பொருட் பால் | இயல் : நட்பியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 821 | சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை<br>நேரா நிரந்தவர் நட்பு | உள்ளத்தில் வெறுப்பும் வெளியே நட்பும் கொண்டவர் தொடர்பானது சரியான இடம் வாய்க்கும் போது எறிவதற்காக மறைந்துள்ள உலைகளத்திற்கு நிகரானது. |
| 822 | இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்<br>மனம்போல வேறு படும் | தம் இனத்தார் போல் உறவு காட்டி உள்ளத்தில் தம் இனமல்லாத கயவர்களின் நட்பு, விலைமகளிரின் மனம் போல உள்ளொன்று வைத்து புறமொன்றாக வேறுபடும். |
| 823 | பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்<br>ஆகுதல் மாணார்க்கு அரிது | பல நல்ல நூல்களைக் கற்றுத் தேர்ந்திருந்தாலும் அதன் பயனாக நல்ல உள்ளத்தினராக ஆவது பெருமை இல்லாதவர்க்கு அரியது. |
| 824 | முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா<br>வஞ்சரை அஞ்சப் படும் | முகத்தில் இனிமை தோன்ற சிரித்துப் பேசினாலும் உள்ளத்தில் தீமையைக் கொண்டுள்ள வஞ்சகருடன் நட்பு கொள்வதற்கு பயப்பட வேண்டும். |
| 825 | மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்<br>சொல்லினால் தேறற்பாற்று அன்று | உள்ளத்தால் கருத்து ஒத்துப் போகாதவரை எந்தக் காரணத்தினாலும் அவர் சொல்லுகிற சொற்களைக் கொண்டு நண்பராக தெளிவு கொள்வது நன்று அன்று. |
| 826 | நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்<br>ஒல்லை உணரப் படும் | அன்புடையவர் போல் நல்ல சொற்களைப் பேசினாலும் உள்ளத்தில் பகைமை உடையவரின் உண்மை நிலை விரைவில் உணரப்படும். |
| 827 | சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்<br>தீங்கு குறித்தமை யான் | வில்லானது வளைவது தீமையை புரிவதற்கு தான். அது போல் பகைவரிடமிருந்து வரும் பணிவான சொற்களையும் நாம் எடுத்துக் கொள்ளக் கூடாது. |
| 828 | தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்<br>அழுதகண் ணீரும் அனைத்து | பகைவர் நம்மை வணங்கித் தொழும் போது கூட அவரது கையினுள் கொலைக் கருவி மறைந்திருக்கும். பகைவர் அழுது சொரியும் கண்ணீரும் அத்தகையதே. |
| 829 | மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து<br>நட்பினுள் சாப்புல்லற் பாற்று | வெளியே சிரித்து தம் உள்ளத்தில் இகழ்கின்றவரின் நட்பை நாமும் அவர் மகிழும் வகையில் சிரித்து உள்ளத்தினுள் அந்த நட்பை நீங்குமாறு விட்டு விட வேண்டும். |
| 830 | பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு<br>அகநட்பு ஒரீஇ விடல் | பகைவரும் நண்பராகும் காலம் வருமேயானால் முகத்தளவில் அவரிடம் நட்பு கொண்டு உள்ளத்தே அந்த நட்பை போற்றாது விலக்கி விட வேண்டும். |

## அதிகாரம் 87. பகை மாட்சி

பால் : பொருட் பால் இயல் : நட்பியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 861 | வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா மெலியார்மேல் மேக பகை | தம்மை விட வலியவரிடம் பகைமை பாராட்டாமல் இருப்பதை கடைப்பிடிக்க வேண்டும். தன்னைப் போற்றாத மெலியவரிடம் பகைமை கொள்வதை விரும்ப வேண்டும். |
| 862 | அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான் என்பரியும் ஏதிலான் துப்பு | பிறரிடம் அன்பில்லாதவன், வலிமையான துணையில்லாதவன், தானும் வலிமையில்லாதவன் ஆகிய ஒருவனுடைய பகைவனுடைய வலிமையை எதனால் அழிக்க முடியும்? |
| 863 | அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான் தஞ்சம் எளியன் பகைக்கு | எல்லாவற்றிற்கும் பயப்படுபவன், எதையும் அறியாதவன், பிறருடன் பொருந்தி அமையாதவன், யாருக்கும் கொடுத்து உதவாதவன் ஆகிய ஒருவன் பகைவரால் அழிக்க எளியவனாவான். |
| 864 | நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது | கோபம் குறையாதவன், தன் உள்ளத்தை கட்டுப்படுத்த முடியாதவன் ஆகிய ஒருவன் எக்காலத்திலும் எவ்விதத்திலும் எல்லோருக்கும் எளியவனாவான். |
| 865 | வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான் பண்பிலன் பற்றார்க்கு இனிது | நல்ல வழியை நாடாதவன், பொருத்தமான வற்றை செய்யாதவன், பழிபாவத்தைக் கருதாதவன், நற்பண்பு இல்லாதவன் ஆகிய ஒருவன் பகைவரால் வெல்வதற்கு விரும்பப்படுபவன். |
| 866 | காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான் பேணாமை பேணப் படும் | கண் தெரியாத அளவிற்கு கோபப்படுபவன், அளவிற்கு மிஞ்சிய காமம் உடையவன் ஆகிய ஒருவனுடைய பகைமை பிறரால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படும். |
| 867 | கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து மாணாத செய்வான் பகை | உடனிருந்து தனக்கு பொருந்தாத கேடு விளைவிக்கும் செயல்களைப் புரிபவனின் பகையை பொருள் கொடுத்தாவது பெற்றுக் கொள்ள வேண்டும். |
| 868 | குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு இனனிலனாம் ஏமாப்பு உடைத்து | நல்ல குணம் இல்லாதவனாய், குற்றங்கள் பல உள்ளவனாய் இருந்தால் அவன் துணை ஏதும் இல்லாதவன் ஆவான். அந்த நிலை அவனுடைய பகைவனுக்கு நன்மையாக அமையும். |
| 869 | செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா அஞ்சும் பகைவர்ப் பெறின் | அறிவில்லாமல், பயப்படும் இயல்புடைய பகைவரைப் பெற்றால் அவரை எதிர்த்து நிற்பவருக்கு உயர்ந்த இன்பங்கள் தொலைவில் இல்லாமல் நெருங்கி வரும். |
| 870 | கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும் ஒல்லானை ஒல்லாது ஒளி | நல்ல நூல்களைக் கற்காதவன், சிறிய செயலைச் செய்யவும் பயப்படும் ஒருவனிடம் எக்காலத்திலும் புகழ் வந்து சேராது. |

## அதிகாரம் 101. நன்றியில் செல்வம்

பால் : பொருட் பால் | இயல் : குடியியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 1001 | வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்<br>செத்தான் செயக்கிடந்தது இல் | வீடு நிறைய பொருளைச் சேர்த்து வைத்துக் கொண்டு அதனை தானும் உண்ணாமல் மற்றவர்க்கும் கொடுக்காமல் இருப்பவன் செத்தவனுக்குச் சமமாவான். |
| 1002 | பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்<br>மருளானாம் மாணாப் பிறப்பு | பொருளினாலே எல்லாம் ஆகும் என்று நினைத்து அதை பிறருக்கு கொடுக்காமல் இறுகப் பற்றிக் கொள்ளும் மயக்கத்தை உடையவனுக்கு பெருமையில்லாத பிற வியே கிட்டும். |
| 1003 | ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்<br>தோற்றம் நிலக்குப் பொறை | பொருள் திரட்டுவதையே பெரும் விருப்பமாகக் கொண்டு புகழை விரும்பாத மக்கள் பிறப்பது இந்தப் பூமிக்குச் சுமையேயின்றி வேறில்லை. |
| 1004 | எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்<br>நச்சப் படாஅ தவன் | ஒரு பொருளையும் கொடுத்து உதவாமல் யாராலும் விரும்பப் படாமல் இருப்பவன், தான் இறந்த பிறகு எஞ்சி நிற்பது என்று எதனை எண்ணுவானோ? |
| 1005 | கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய<br>கோடிஉண் டாயினும் இல் | பிறர்க்கு கொடுத்து உதவுவதும் தான் அனுபவிப்பதுவும் ஆகிய இரு பயன்பாடுகளும் இல்லாத செல்வம் கோடிக்கணக்கில் இருந்தாலும் அதனால் ஒரு பயனும் இல்லை. |
| 1006 | ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான்<br>தக்கார்க்கொன்று ஈதல் இயல்பிலா தான் | பெருஞ்செல்வத்தை தேவையான வர்களுக்கு கொடுத்து உதவாமலும், தானும் அனுபவிக்காமலும் இருப்பவன் அச்செல்வத்திற்கு நோய் போன்றவன். |
| 1007 | அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்<br>பெற்றாள் தமியள்மூத் தற்று | பொருள் இல்லாத வறியவர்க்கு கொடுத்து உதவாதவனுடைய செல்வம் அனைத்து நலன்களும் பெற்ற பெண் மணம் புரியாமல் முதுமையடைவது போன்றது. |
| 1008 | நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்<br>நச்சு மரம்பழுத் தற்று | பிறருக்கு உதவாத கஞ்சனாக வாழ்பவனது செல்வம், ஊர் நடுவே நச்சு மரம் நிறையப் பழுத்து விளங்குவதைப் போன்றது. |
| 1009 | அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய<br>ஒண்பொருள் கொள்வார் பிறர் | உற்றார் உறவினரிடம் அன்பு பாராட்டாமலும், தன்னைப் பேணிக் கொள்ளாமலும், அறத்தைப் போற்றாமலும் ஒருவன் பெற்ற பெருஞ்செல்வத்தை அயலாரே கவர்ந்து கொள்வர். |
| 1010 | சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி<br>வறங்கூர்ந் தனையது உடைத்து | புகழ் பொருந்திய செல்வர்களுக்கு வரும் தற்காலிய வறுமை, வான்மழை சிறிது காலம் பெய்யாது பொய்த்துப் போவதற்கு ஒப்பாகும். |

## அதிகாரம் 103. குடிசெயல் வகை

பால் : பொருட் பால் | இயல் : குடியியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 1021 | கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும் பெருமையின் பீடுடையது இல் | ஒருவன் தான் பிறந்த குடிப்பெருமைக்கு உரிய கடமையை செய்ய ஒரு போதும் கை ஓய மாட்டேன் என கூறும் பெருமையைக் காட்டிலும் மேம்பாடுடையது வேறு இல்லை. |
| 1022 | ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின் நீள்வினையால் நீளும் குடி | விடாமுயற்சியும், நிறைந்த அறிவும் ஆகிய இரண்டும் இணைந்த இடைவிடாத செயலால் ஒருவனது குடிப்பெருமை தானே உயர்ந்து விளங்கும். |
| 1023 | குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான்முந் துறும் | 'தன் குடிப்பிறப்பை உயரச் செய்வேன்' என்று கூறும் ஒருவருக்கு தெய்வம் தானே ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு உதவ முன் வரும். |
| 1024 | சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத் தாழாது உஞற்று பவர்க்கு | தன் குடிப்பிறப்பை உயரச் செய்ய விரைந்து செய்யும் முயற்சி உடையவர்க்கு அவர் அது குறித்த வழிமுறைகளை ஆராய்வதற்கு முன்னரே அச்செயல் நிறைவேறி விடும். |
| 1025 | குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச் சுற்றமாச் சுற்றும் உலகு | குற்றம் ஏதும் புரியாமல் தன் குடிப்பிறப்பை உயர்த்தும் செயல்கள் செய்து வாழ்கிறவனை உலகத்தார் எல்லாரும் தம் சுற்றமாக விரும்பிச் சூழ்ந்து கொள்வர். |
| 1026 | நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த இல்லாண்மை ஆக்கிக் கொளல் | ஒருவருக்கு சிறந்த ஆண்மை எனப்படுவது, அவர் தான் பிறந்த குடியினை மேம்பாடு உடையதாக ஆக்கிக் கொள்வதாகும். |
| 1027 | அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும் ஆற்றுவார் மேற்றே பொறை | போர்க்களத்தில் தலைமை தாங்கி வழி நடத்தும் தன்மை வலிமை வாய்ந்த வீரரிடம் இருப்பதைப் போல, தம் குடியைத் தாங்க வல்லவரே குடியைப் பேணிக் காக்க வல்லவர். |
| 1028 | குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து மானம் கருதக் கெடும் | தம் குடிப்பெருமையை உயரச் செய்வதற்கென காலம் ஒன்று இல்லை. சோம்பல் கொண்டு தன் மானம் பார்த்தால் அவரது குடிப்பெருமை கெட்டொழியும். |
| 1029 | இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு | தன் குடிப்பெருமைக்கு குற்றம் வராமல் விடாமுயற்சியுடன் செயலாற்றும் ஒருவனது உடல் துன்பத்திற்கே இருப்பிடமாக அமையுமோ? இல்லை. |
| 1030 | இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும் நல்லாள் இலாத குடி | துன்பம் வரும்போது உடனிருந்து அதனைத் தாங்கிக் கொள்ளக் கூடிய நல்லவர் இல்லாத குடியான ஆலமரம் வறுமை என்னும் பெருங்காற்று வீசும் போது வேரோடு வீழ்ந்து விடும். |

## அதிகாரம் 105. நல்குரவு

பால் : பொருட் பால் இயல் : குடியியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 1041 | இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின் இன்மையே இன்னா தது | ஒருவனுக்கு வறுமையை விட துன்பம் தருவது எதுவென்றால், வறுமை போன்ற கொடுமையான வறுமையே ஆகும். |
| 1042 | இன்மை எனஒரு பாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும் | வறுமை என சொல்லப்படும் ஒரு பாவி ஒருவனை அடைந்தால் அது அவனுக்கு இம்மை இன்பமும் மறுமை இன்பமும் இல்லாத நிலையை உண்டாக்கும். |
| 1043 | தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக நல்குரவு என்னும் நசை | வறுமை எனப்படும் ஏக்கம் ஒருவனைப் பற்றினால், அது அவனது பழமையான குடிச்சிறப்பையும், புகழையும் ஒரு சேரக் கெடுத்து விடும். |
| 1044 | இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு தரும் | இழிவான சொல் பிறக்காத உயர்ந்த குடும்பத்தாரையும், வறுமைக் கொடுமை இழிவான சொல் பிறப்பதற்கு ஏதுவான சோர்வு என்னும் நிலையைத் தரும். |
| 1045 | நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத் துன்பங்கள் சென்று படும் | வறுமை என சொல்லப்படும் துன்பம் புகுந்தால் அதன் வாயிலாக பல்வேறு துன்பங்களும் சென்று துன்புறுத்தும். |
| 1046 | நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும் | நல்ல நூற்பொருளைத் தெளிவாக உணர்ந்து அதை எடுத்துரைத்தாலும், வறுமை வாய்ப்பட்டவர் சொல்லும் சொல் தன் சொற்பொருளை இழந்து விடும். |
| 1047 | அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும் பிறன்போல நோக்கப் படும் | அறநெறியில் பொருந்தாத வறுமை ஒருவனை வந்தடைந்தால் அவன் தன்னை ஈன்றெடுத்த அன்னையாலும் அயலான் போல் கருதி புறக்கணிக்கப்படுவான். |
| 1048 | இன்றும் வருவது கொல்லோ நெருநலும் கொன்றது போலும் நிரப்பு | நேற்று வந்து குத்திக் கொல்வது போல் வாட்டிய வறுமை இன்றும் என்னை வந்து சேருமோ? |
| 1049 | நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது | ஒருவன் மந்திரம், மருந்து போன்றவற்றின் துணையால் நெருப்பினுள்ளும் படுத்து உறங்க முடியும். ஆனால் வறுமை வந்தால் சிறுது நேரம் கூட கண்ணை மூடி தூங்க இயலாது. |
| 1050 | துப்பரவு இல்லார் துவரத் துறவாமை உப்பிற்கும் காடிக்கும் கூற்று | வாழுவதற்குரிய நுகரும் பொருள் இல்லாத வறியவர் உலகப்பற்றை விட வேண்டும். அவ்வாறு துறவாமலிருப்பது பிறர் இல்லத்து உப்புக்கும் கஞ்சிக்கும் கேடாகும். |

## அதிகாரம் 106. இரவு

பால் : பொருட் பால் இயல் : குடியியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 1051 | இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்<br>அவர்பழி தம்பழி யன்று | இல்லாதவர் ஒன்றை கேட்டுப் பெறத்தக்கவரை கண்டால் வேண்டியதைக் கேட்டுப் பெறலாம். அவர் ஏதும் இல்லையென கை விரித்தால் அது அவருக்கு பழி. கேட்டவருக்கு பழியில்லை. |
| 1052 | இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை<br>துன்பம் உறாஅ வரின் | இரந்து பெற்ற பொருள்கள் துன்பமின்றி ஒருவருக்கு கிடைத்தால் அவ்வாறு கேட்டுப் பெறுவதும் ஒருவருக்கு உலகில் இன்பம் கிடைக்க காரணமாகிறது. |
| 1053 | கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று<br>இரப்புமோ ரேஎர் உடைத்து | ஒளிவு மறைவு இன்றி இருப்பதை பிற ருக்கு வழங்கும் கடமை உணர்ச்சி கொண்டவர் முன் நின்று ஒரு பொருளை கேட்டுப் பெறுவதும் அழகான செயலாகும். |
| 1054 | இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்<br>கனவிலும் தேற்றாதார் மாட்டு | தம்மிடம் உள்ளதை மறைக்க கனவிலும் நினைக்காதவரிடம், யாசித்து கேட்டல் தர்மம் செய்து மகிழும் செயல் போன்று பெருமிதம் மிக்கதாகும். |
| 1055 | கரப்பிலார் வையகத்து உண்மையான் கண்ணின்று<br>இரப்பவர் மேற்கொள் வது | தம்மிடம் உள்ளதை மறைக்காமல் வழங்கும் வள்ளல்கள் இருப்பதால் தான் அவர்கள் முன்சென்று யாசிப்பவர்கள் உலகில் உள்ளனர். |
| 1056 | கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை<br>எல்லாம் ஒருங்கு கெடும் | தம்மிடம் உள்ளதை மறைக்கும் துன்பநிலை இல்லாதவரைக் கண்டால் வறியவரின் வறுமைத் துன்பங்கள் எல்லாம் ஒருசேர அவரை விட்டு ஒழியும். |
| 1057 | இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின்<br>மகிழ்ந்துள்ளம் உள்ளுள் உவப்பது உடைத்து | இகழ்ந்து கேலி பேசாமல் பொருள் கொடுப்பவரைக் கண்டால் யாசிப்பவரின் உள்ளம் மகிழ்ந்து உள்ளுக்குள்ளேயே உவகை அடையும் தன்மை உடையதாகும். |
| 1058 | இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்<br>மரப்பாவை சென்றுவந் தற்று | வறுமையால் யாசிப்பவர் இல்லாது போனால், குளிர்ந்த பெரிய உலகத்தின் இயக்கம் மரப்பாவை இயக்கும் கயிற்றால் ஆட்டப்படுவது போல் தோன்றும். |
| 1059 | ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்<br>மேவார் இலாஅக் கடை | ஒருவரிடம் சென்று பொருள் வேண்டும் என்று யாசிப்பவர் இல்லாவிட்டால், பொருள் வழங்கும் வள்ளல்களுக்கு இவ்வுலகில் பெருமை என்ன உண்டாகும்? |
| 1060 | இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை<br>தானேயும் சாலும் கரி | பொருள் கேட்டுப் பெறுபவர்கள் சினம் கொள்ளாதிருத்தல் வேண்டும். பொருள் வேண்டும் போது கிடைக்காது என்பதற்கு அவன் அடைந்துள்ள வறுமைத் துன்பமே சான்றாகும். |

அதிகாரம் **108. கயமை**

பால் : பொருட் பால் இயல் : குடியியல்

| | குறள் | தெளிவுரை |
|---|---|---|
| 1071 | மக்களே போல்வர் கயவர் அவரன்ன<br>ஒப்பாரி யாங்கண்டது இல் | கயவரும் வடிவமைப்பில் நல்ல மக்களைப் போலவே இருப்பர். அவரைப் போல ஒப்புமையான ஒனறை வேறு எந்த இருவகைப் பொருள்களிடத்திலும் யாம் கண்டது இல்லை. |
| 1072 | நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்<br>நெஞ்சத்து அவலம் இலர் | தமக்கு தேவையானவை எவை என்பதை நல்ல மக்களை விட கயவர் நன்கு அறிவர். ஏனெனில் அவர் நெஞ்சில் நல்லவை பற்றிய கவலை ஏதும் இல்லை. |
| 1073 | தேவர் அனையர் கயவர் அவருந்தாம்<br>மேவன செய்தொழுக லான் | தேவரைப் போல் கயவரும் தாம் விரும்பும் அனைத்தையும் செய்து மனம் போன போக்கில் நடத்தலால் இருவரும் ஒரே தன்மையுடையவர் ஆவர். |
| 1074 | அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்<br>மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ் | இழிந்த செயல் புரியும் கீழ் மக்கள் தம்மிலும் கீழானவரைக் கண்டால் அந்தக் கீழ்மையில் தாம் அவரை விட மேம்பட்டிருப்பதைக் காட்டி தமக்குள் இறுமாப்பு கொள்வர். |
| 1075 | அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்<br>அவாஉண்டேல் உண்டாம் சிறிது | தண்டனை குறித்த அச்சமே கீழ் மக்களை ஒழுக்கத்தை மேற்கொள்ள வைக்கும். அது இன்றி விரும்பும் பொருள் வந்தால் அதனாலும் ஓரளவு ஒழுக்கத்தை நாடுவர். |
| 1076 | அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட<br>மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான் | கீழ்மக்கள் தாம் கேட்ட செய்தியை வலியப் போய் பிறரிடம் சொல்வதால் அவர்கள் செய்தி அறிவிக்க அறையப்படும் பறை போன்றவர்கள் ஆவர். |
| 1077 | ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்<br>கூன்கைய ரல்லா தவர்க்கு | கீழ்மக்கள் எச்சில் கையைக் கூட உதறாத கஞ்சத் தனம் உடையவர்கள். அவர்கள் தம் கன்னத்தை அடித்து பெயர்க்கும் வளைந்த கையை உடைய வலியவர்க்கே அஞ்சுவர். |
| 1078 | சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்<br>கொல்லப் பயன்படும் கீழ் | குறையைச் சொன்னதும் உதவி பயன்படுவர் சான்றோர். கீழ்மக்களோ கரும்பு போல வலியவர் வருத்தி பிழிந்தால் தான் அவருக்கு பயன்படுவர். |
| 1079 | உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்<br>வடுக்காண வற்றாகும் கீழ் | பிறர் நன்றாக உடுப்பதையும் நன்கு உண்பதையும் காணும் கயவர் அவர் மேல் பொறாமை கொண்டு வேண்டும் என்றே குற்றம் கூறி வடு உண்டாக்க முயல்வர். |
| 1080 | எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்<br>விற்றற்கு உரியர் விரைந்து | தமக்கு துன்பம் நேரும் போது கயவர் தம்மையே விற்று விடுவர். அது அன்றி அவர் வேறு எந்த தொழிலுக்கு உகந்தவர்? |

★ ★ ★ ★ ★

# அலகிட்டு வாய்பாடு கூறுதல்

## அலகிட்டு வாய்ப்பாடும் தளையும் கூறுதல்:

ஒரு சீரைப் பிரித்து அசை பார்ப்பதே அலகிடுதல் என்று அழைக்கப்படுகிறது.

## அலகிடப் பின்பற்ற வேண்டிய எளிய வழிகள்:

- மெய்யெழுத்தின் பக்கத்தில் / இக்குறியிடுக.
- நெடில் பக்கத்தில் / இக்குறியிடுக.
- இரு குறில் அடுத்து / இக்குறியிடுக.
- ஒற்று அல்லது ஆய்த எழுத்தை நீக்கி, ஓர் எழுத்து இருப்பின் நேர் எனக் கொள்க.
- இரண்டு எழுத்தாய் இருப்பின் நிரை எனக் கொள்க.

## அலகிடும் முறை:

க – குறில் தனித்து
கல் – குறில் ஒற்று
கா – நெடில் தனித்து
கால் – நெடில் ஒற்று
} நேரசை

பட – இரு குறில் இணைந்து
படம் – இரு குறில் இணைந்து ஒற்று
படா – குறில் நெடில் இணைந்து
படாம் – குறில் நெடில் இணைந்து ஒற்று
} நிரையசை

## கடைசி சீர்: (ஈற்றுச்சீர்)

| | | | |
|---|---|---|---|
| நோய் | – நெடில் ஒற்று | – நேர் | – நாள் |
| விடல் | – இருகுறில் ஒற்று | – நிரை | – மலர் |
| தற்று | – நேர் நேர் | – தேமா (நேர்பு) | – காசு |
| செருக்கு | – நிரை நேர் | – புளிமா (நிரைபு) | – பிறப்பு |

அலகிடும் போது (பிரித்த பின்பு) மெய்யெழுத்தை நீக்கியபின் ஓர் எழுத்து வந்தால் நேரசை என்றும் இரண்டு எழுத்து வந்தால் நிரையசை என்றும் எழுத வேண்டும்.

ஒழுக் / கம்
நிரை / நேர்

## நினைவில் கொள்க

| ஓரசைச் சீர் | ஈரசைச் சீர் | மூவசைச் சீர் | |
|---|---|---|---|
| நேர் – நாள்<br>நிரை – மலர் | நேர் நேர் – தேமா<br>நிரை நேர் – புளிமா | நே நேர் நேர் – தேமாங்காய்<br>நிரை நேர் நேர் – புளிமாங்காய் | நேர் நேர் நிரை – தேமாங்கனி<br>நிரை நேர் நிரை – புளிமாங்கனி |
| நேர்பு – காசு<br>நிரைபு – பிறப்பு | நிரை நிரை – கருவிளம்<br>நேர் நிரை – கூவிளம் | நிரை நிரை நேர் – கருவிளங்காய்<br>நேர் நிரை நேர் – கூவிளங்காய் | நிரை நிரை நிரை – கருவிளங்கனி<br>நேர் நிரை நிரை – கூவிளங்கனி |

1. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
   உயிரினும் ஓம்பப் படும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| ஒழுக்\|கம் | நிரை\|நேர் | புளிமா |
| விழுப்\|பம் | நிரை\|நேர் | புளிமா |
| தர\|லான் | நிரை\|நேர் | புளிமா |
| ஒழு\|க்கம் | நிரை\|நேர் | புளிமா |
| உயி\|ரினும் | நிரை\|நிரை | கருவிளம் |
| ஓம்\|பப் | நேர்\|நேர் | தேமா |
| படும் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

2. ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| ஒழுக்\|கத்\|தின் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| எய்\|துவர் | நேர்\|நிரை | கூவிளம் |
| மேன்\|மை | நேர்\|நேர் | தேமா |
| இழுக்\|கத்\|தின் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| எய்\|துவர் | நேர்\|நிரை | கூவிளம் |
| எய்\|தாப் | நேர்\|நேர் | தேமா |
| பழி | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

3. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்.

PTA

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| உல\|கத்\|தோ | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| டொட்\|ட | நேர்\|நேர் | தேமா |
| ஒழு\|கல் | நிரை\|நேர் | புளிமா |
| பல\|கற்\|றும் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| கல்\|லார் | நேர்\|நேர் | தேமா |
| அறி\|விலா | நிரை\|நிரை | கருவிளம் |
| தார் | நேர் | நாள் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் நாள் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

4. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| எப்\|பொருள் | நேர்\|நிரை | கூவிளம் |
| எத்\|தன்\|மைத் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| தா\|யினும் | நேர்\|நிரை | கூவிளம் |
| அப்\|பொருள் | நேர்\|நிரை | கூவிளம் |
| மெய்ப்\|பொருள் | நேர்\|நிரை | கூவிளம் |
| காண்\|ப | நேர்\|நேர் | தேமா |
| தறி\|வு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

5. காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| கா\|மம் | நேர்\|நேர் | தேமா |
| வெகு\|ளி | நிரை\|நேர் | புளிமா |
| மயக்\|கம் | நிரை\|நேர் | புளிமா |
| இவை\|மூன்\|றன் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| நா\|மம் | நேர்\|நேர் | தேமா |
| கெடக்\|கெடும் | நிரை\|நிரை | கருவிளம் |
| நோய் | நேர் | நாள் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் நாள் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

6. அரியவற்றுள் எல்லா அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| அரி\|யவற்\|றுள் | நிரை\|நிரை\|நேர் | கருவிளங்காய் |
| எல்\|லா | நேர்\|நேர் | தேமா |
| அரி\|தே | நிரை\|நேர் | புளிமா |
| பெரி\|யா\|ரைப் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| பே\|ணித் | நேர்\|நேர் | தேமா |
| தம\|ராக் | நிரை\|நேர் | புளிமா |
| கொளல் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

7. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| இடிப்\|பா\|ரை | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| இல்\|லா\|த | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| ஏ\|மரா | நேர்\|நிரை | கூவிளம் |
| மன்\|னன் | நேர்\|நேர் | தேமா |
| கெடுப்\|பார் | நிரை\|நேர் | புளிமா |
| இலா\|னும் | நிரை\|நேர் | புளிமா |
| கெடும் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

8. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| பல்\|லார் | நேர்\|நேர் | தேமா |
| பகை\|கொள\|லின் | நிரை\|நிரை\|நேர் | கருவிளங்காய் |
| பத்\|தடுத்\|த | நேர்\|நிரை\|நேர் | கூவிளங்காய் |
| தீ\|மைத்\|தே | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| நல்\|லார் | நேர்\|நேர் | தேமா |
| தொடர்\|கை | நிரை\|நேர் | புளிமா |
| விடல் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

9. வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| வே\|லொடு | நேர்\|நிரை | கூவிளம் |
| நின்\|றான் | நேர்\|நேர் | தேமா |
| இடு\|வென் | நிரை\|நேர் | புளிமா |
| றது\|போ\|லும் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| கோ\|லொடு | நேர்\|நிரை | கூவிளம் |
| நின்\|றான் | நேர்\|நேர் | தேமா |
| இர\|வு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

10. நாள்தொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாள்தொறும் நாடு கெடும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| நாள்\|தொறும் | நேர்\|நிரை | கூவிளம் |
| நா\|டி | நேர்\|நேர் | தேமா |
| முறை\|செய்\|யா | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| மன்\|னவன் | நேர்\|நிரை | கூவிளம் |
| நாள்\|தொறும் | நேர்\|நிரை | கூவிளம் |
| நா\|டு | நேர்\|நேர் | தேமா |
| கெடும் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

11. பண்என்னாம் பாடற் கியைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். PTA

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| பண்\|என்\|னாம் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| பா\|டற் | நேர்\|நேர் | தேமா |
| கியை\|பின்\|றேல் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| கண்\|என்\|னாம் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| கண்\|ணோட்\|டம் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| இல்\|லா\|த | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| கண் | நேர் | நாள் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் நாள் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

12. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்
குரிமை உடைத்திவ் வுலகு.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| கரு\|மம் | நிரை\|நேர் | புளிமா |
| சிதை\|யா\|மல் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| கண்\|ணோ\|ட | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| வல்\|லார்க் | நேர்\|நேர் | தேமா |
| குரி\|மை | நிரை\|நேர் | புளிமா |
| உடைத்\|திவ் | நிரை\|நேர் | புளிமா |
| வுல\|கு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

13. பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| பெயக்\|கண்\|டும் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| நஞ்\|சுண் | நேர்\|நேர் | தேமா |
| டமை\|வர் | நிரை\|நேர் | புளிமா |
| நயத்\|தக்\|க | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| நா\|கரி\|கம் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| வேண்\|டு | நேர்\|நேர் | தேமா |
| பவர் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

14. அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| அரு\|மை | நிரை\|நேர் | புளிமா |
| உடைத்\|தென் | நிரை\|நேர் | புளிமா |
| றசா\|வா\|மை | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| வேண்\|டும் | நேர்\|நேர் | தேமா |
| பெரு\|மை | நிரை\|நேர் | புளிமா |
| முயற்\|சி | நிரை\|நேர் | புளிமா |
| தரும் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

15. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| தா\|ளாண்\|மை | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| என்\|னும் | நேர்\|நேர் | தேமா |
| தகை\|மைக்\|கண் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| தங்\|கிற்\|றே | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| வே\|ளாண்\|மை | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| என்\|னும் | நேர்\|நேர் | தேமா |
| செருக்\|கு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

16. முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| முயற்\|சி | நிரை\|நேர் | புளிமா |
| திரு\|வினை | நிரை\|நிரை | கருவிளம் |
| ஆக்\|கும் | நேர்\|நேர் | தேமா |
| முயற்\|றின்\|மை | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| இன்\|மை | நேர்\|நேர் | தேமா |
| புகுத்\|தி | நிரை\|நேர் | புளிமா |
| விடும் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

17. பொறிஇன்மை யார்க்கும் பழிஅன் றறிவறிந்
தாள்வினை இன்மை பழி.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| பொறி\|இன்\|மை | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| யார்க்\|கும் | நேர்\|நேர் | தேமா |
| பழி\|அன் | நிரை\|நேர் | புளிமா |
| றறி\|வறிந் | நிரை\|நிரை | கருவிளம் |
| தாள்\|வினை | நேர்\|நிரை | கூவிளம் |
| இன்\|மை | நேர்\|நேர் | தேமா |
| பழி | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

18. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| ஊ\|ழை\|யும் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| உப்\|பக்\|கம் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| காண்\|பர் | நேர்\|நேர் | தேமா |
| உலை\|வின்\|றித் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| தா\|ழா | நேர்\|நேர் | தேமா |
| துஞற்\|று | நிரை\|நேர் | புளிமா |
| பவர் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

19. கெடுப்பதூஉம் துப்பதூஉம் இல்லார்க் கடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| கெடுப்\|பதூ\|உம் | நிரை\|நிரை\|நேர் | கருவிளங்காய் |
| துய்ப்\|பதூ\|உம் | நேர்\|நிரை\|நேர் | கூவிளங்காய் |
| இல்\|லார்க் | நேர்\|நேர் | தேமா |
| கடுக்\|கிய | நிரை\|நிரை | கருவிளம் |
| கோ\|டிஉண் | நேர்\|நிரை | கூவிளம் |
| டா\|யினும் | நேர்\|நிரை | கூவிளம் |
| இல் | நேர் | நாள் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் நாள் என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

20. நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
நச்சு மரம்பழுத் தற்று.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| நச்\|சப் | நேர்\|நேர் | தேமா |
| படா\|தவன் | நிரை\|நிரை | கருவிளம் |
| செல்\|வம் | நேர்\|நேர் | தேமா |
| நடு\|ஊ\|ருள் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| நச்\|சு | நேர்\|நேர் | தேமா |
| மரம்\|பழுத் | நிரை\|நிரை | கருவிளம் |
| தற்\|று | நேர்பு | காசு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் காசு என்னும் வாய்பாட்டில் முடிந்துள்ளது.

21. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| கரு\|வியும் | நிரை\|நிரை | கருவிளம் |
| கா\|லமும் | நேர்\|நிரை | கூவிளம் |
| செய்\|கை\|யும் | நேர்\|நேர்\|நேர் | தேமாங்காய் |
| செய்\|யும் | நேர்\|நேர் | தேமா |
| அரு\|வினை\|யும் | நிரை\|நிரை\|நேர் | கருவிளங்காய் |
| மாண்\|ட | நேர்\|நேர் | தேமா |
| தமைச்\|சு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்ப்பாட்டில் முடிந்துள்ளது.

22. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

PTA

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| வன்\|கண் | நேர்\|நேர் | தேமா |
| குடி\|காத்\|தல் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| கற்\|றறி\|தல் | நேர்\|நிரை\|நேர் | கூவிளங்காய் |
| ஆள்\|வினை\|யோ | நேர்\|நிரை\|நேர் | கூவிளங்காய் |
| டைந்\|துடன் | நேர்\|நிரை\| | கூவிளம் |
| மாண்\|ட | நேர்\|நேர் | தேமா |
| தமைச்\|சு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச் சீர் பிறப்பு என்னும் வாய்ப்பாட்டில் முடிந்துள்ளது.

23. மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| மதி\|நுட்\|பம் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| நூ\|லோ | நேர்\|நேர் | தேமா |
| டுடை\|யார்க் | நிரை\|நேர் | புளிமா |
| கதி\|நுட்\|பம் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| யா\|வுள | நேர்\|நிரை\| | கூவிளம் |
| முன்\|நிற் | நேர்\|நேர் | தேமா |
| பவை | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்ப்பாட்டில் முடிந்துள்ளது.

30. தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து.

PTA

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| தொழு\|தகை | நிரை\|நிரை | கருவிளம் |
| யுள்\|ளும் | நேர்\|நேர் | தேமா |
| படை\|யொடுங்\|கும் | நிரை\|நிரை\|நேர் | கருவிளங்காய் |
| ஒன்\|னார் | நேர்\|நேர் | தேமா |
| அழு\|தகண் | நிரை\|நிரை | கருவிளம் |
| ணீ\|ரும் | நேர்\|நேர் | தேமா |
| அனைத்\|து | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்ப்பாட்டில் முடிந்துள்ளது.

25. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

PTA

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| பொரு\|ளல் | நிரை\|நேர் | புளிமா |
| லவ\|ரைப் | நிரை\|நேர் | புளிமா |
| பொரு\|ளா\|கச் | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| செய்\|யும் | நேர்\|நேர் | தேமா |
| பொரு\|ளல்\|ல | நிரை\|நேர்\|நேர் | புளிமாங்காய் |
| தில்\|லை | நேர்\|நேர் | தேமா |
| பொருள் | நிரை | மலர் |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் மலர் என்னும் வாய்ப்பாட்டில் முடிந்துள்ளது.

★ ★ ★ ★ ★

## கடிதங்கள்

*1. விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்ற உன் தோழியைப் பாராட்டிக் கடிதம் வரைக.

கோயமுத்தூர் - 627 001.
3.04.20XX

அன்புள்ள தோழிக்கு,

நலம், நலமறிய ஆவல். இன்றைய நாளிதழில் சிங்கப்பூரில் நடைபெற்ற தடகள விளையாட்டுப் போட்டியில் நம் நாட்டிற்கு நீ தங்கப் பதக்கத்தை வாங்கித் தரும் அளவு மிகச் சிறப்பாக விளையாடினாய் என்பதைப் படித்தவுடன் மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். என் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். நீ பல்லாண்டு வாழவும், பல பரிசுகளை நம் நாட்டிற்குத் தேடித் தரவும் வாழ்த்துகிறேன். உன் பல நாள் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி இது. தொடர்ந்து முயன்று சாதனை பல புரிய வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு,
உன் அன்புத் தோழி,
அ அ அ.

உறைமேல் முகவரி:
சொ. இராதா,
த.பெ. ப. சொக்கலிங்கம்,
பாரதியார் தெரு,
கன்னியாகுமரி - 623 153.

2. காணாமற் போன உன் இரு சக்கர வண்டியைக் கண்டுபிடித்துத் தருமாறு காவல் அதிகாரிக்குப் புகார் கடிதம் வரைக.

21.6.20XX

அனுப்புநர்:
அ அ அ,
ஆ ஆ ஆ,
இ இ இ.

பெறுநர்:
உயர்திரு. காவல்துறை ஆய்வாளர் அவர்கள்,
பாலம் காவல் நிலையம்,
அம்பாசமுத்திரம்.

பொருள்:
காணாமற்போன இரு சக்கரவண்டியைக் கண்டுபிடித்துத் தருமாறு வேண்டுதல்.

மதிப்பிற்குரிய ஐயா அவர்களுக்கு,

வணக்கம். இன்று மாலை ஆறு மணிக்குச் சந்தைக்குச் சென்றேன். என் இரு சக்கர வண்டியைச் சந்தைக்கு முன்னர் நிறுத்திப் பூட்டிய பின்னர், காய்கறிகள் வாங்கச் சென்றேன். அரைமணி நேரம் கழித்துத் திரும்பிய பின் வந்து பார்த்தால் நான் வைத்த இடத்தில் என் வண்டியைக் காணவில்லை. திருட்டுப் போன வண்டியைக் கண்டுபிடித்துத் தருமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நன்றி!

வண்டியைப் பற்றிய குறிப்பு:
டி.வி.எஸ். எக்ஸ்.எல், பச்சை வண்ணம்,
பதிவு எண் டி.எம்.பி. 1010

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள,
அ அ அ.

15-10-20XX
அம்பாசமுத்திரம்.

உறைமேல் முகவரி:
காவல்துறை ஆய்வாளர் அவர்கள்,
பாலம் காவல் நிலையம்,
அம்பாசமுத்திரம்,
திருநெல்வேலி மாவட்டம்.

**3. உங்கள் பள்ளியில் நடைபெற்ற இலக்கிய மன்ற விழாவைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து பத்திரிக்கை அலுவலகத்திற்கு அனுப்புக.**

அனுப்புநர்

அ அ அ,
ஆ ஆ ஆ,
இ இ இ,

பெறுநர்

செய்தி ஆசிரியர் அவர்கள்,
தினமலர் அலுவலகம்,
நங்கநல்லூர், சென்னை - 600 061.

பெருந்தகையீர்,

வணக்கம். கீழ்க்கண்ட செய்தியை அருள் கூர்ந்து தங்கள் நாளிதழில் வெளியிடுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள மாணவன்,
அ அ அ.

சென்னை,
15.4.20XX

**செய்தி - இலக்கிய மன்ற விழா**

எங்கள் மீனம்மாள் மேனிலைப்பள்ளியில் 3.7.20XX அன்று மாவட்ட ஆட்சித் தலைவர் உயர்திரு. சகாயம் தலைமையில் இலக்கிய மன்ற விழா நடைபெற்றது. அவ்விழாவில் ஆட்சித் தலைவர் அவர்கள் வருங்காலச் சிற்பிகளான மாணவர்களின் கடமைகளைப் பற்றி பேசிய பேச்சு அனைவர் உள்ளத்திலும் பசுமரத்தாணி போல் பதிந்தது.

விழாவையொட்டி மாணவர்களை உருவாக்குவது ஆசிரியர் கடமையா? பெற்றோர் கடமையா? என்ற வழக்காடு மன்றமும் சிறப்பாக நடைபெற்றது. பள்ளியின் தமிழாசிரியர் நன்றி நவில, நாட்டுப் பண்ணோடு விழா இனிதே நிறைவு பெற்றது.

உறைமேல் முகவரி:
ஆசிரியர் அவர்கள்,
தினமலர் அலுவலகம்,
நங்கநல்லூர்,
சென்னை - 600 061.

**4. நும் ஊரில் நூலகம் அமைத்திட வேண்டி நூலக ஆணையருக்கு விண்ணப்பம் வரைக.**

அனுப்புநர்

அ அ அ,
ஆ ஆ ஆ,
திருப்பூர்.

பெறுநர்

நூலக ஆணையர் அவர்கள்,
நூலக ஆணையர் அலுவலகம்,
திருப்பூர் - 641 601.

மதிப்பிற்குரிய ஐயா

பொருள்: நூலகம் அமைத்துத் தர வேண்டி:-

வணக்கம்.

எங்கள் பகுதியில் ஐந்து தொடக்கப்பள்ளிகளும், நான்கு உயர்நிலைப் பள்ளிகளும், இரண்டு மேல்நிலைப் பள்ளிகளும் இருக்கின்றன. கல்லூரிகளுக்குச் சென்று கல்வி பயில்பவர்களும் இருக்கிறார்கள். இவர்களுக்குத் தங்கள் பாடநூல்களைப் படிப்பதோடு, பல துறைகளைப் பற்றிய நூல்களைக் கற்பதற்கு விரும்புகிறார்கள். பொது அறிவையும் அன்றாடம் நடைபெறும் நிகழ்வுகளையும் அறிய ஆர்வமாக இருக்கிறார்கள்.

எங்கள் ஊர் மக்கள் விழிப்புணர்வு பெறத் தூண்டும் வகையில் மக்கள் கற்கும் ஆர்வத்துடன் உள்ளனர். அறியாமையை அகற்றி அறிவை வளர்த்திட நூலகம் தேவை. எனவே நீங்கள் அருள் கூர்ந்து எங்கள் ஊரில் ஒரு நூலகம் அமைத்துத் தர வேண்டுகிறேன். அதற்கு எங்கள் ஊர் மக்கள் நன்றியுடையவர்களாய் இருப்பார்கள்.

நன்றி.

அன்புடன்,
அ அ அ

திருப்பூர்
25.6.20xx

**உறைமேல் முகவரி:**
உயர்திரு. ஆணையர் அவர்கள்,
பொது நூலக ஆணையர் அலுவலகம்,
திருப்பூர் - 641 601.

**5. நும் ஊரில் சுகாதார வசதிக்கான கழிப்பறை கட்டித் தருமாறு மாவட்ட ஆட்சியர்க்கு விண்ணப்பம் வரைக.**

விடுநர்
அ அ அ,
ஆ ஆ ஆ,
இ இ இ.

பெறுநர்
மாவட்ட ஆட்சியர் அவர்கள்
மாவட்ட ஆட்சியர் அலுவலகம், பெரம்பூர் மாவட்டம்.

பொருள்: சுகாதார வசதிக்கான கழிப்பறை கட்டித்தருமாறு கோரல் – தொடர்பாக.

பெரம்பூர் மாவட்டம் ஆலம்பாடி கிராமத்தில் நாங்கள் பல வருடங்களாய் வசித்து வருகிறோம். ஏறக் குறைய 100 குடும்பங்கள் வாழ்கின்றன. இருப்பினும் இவ்வூரில் சரியான கழிப்பறை வசதி இல்லாத காரணத்தால் குழந்தைகளும், பெண்களும், வயதானவர்களும் பெரிதும் அவதியுறுகிற ார்கள்.

வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையான இவ்வசதியினைச் செய்து தருமாறு தங்களை அன்போடு கேட்டுக் கொள்கிறோம். ஆகையால் தாங்கள் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு விரைவில் எங்களுக்குத் தேவையான கழிப்பறைகளைக் கட்டித்தருமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
அ அ அ,
ஆ ஆ ஆ,
இ இ இ.

இடம்: ஆலம்பாடி
தேதி : 16.08.20XX

**6. தலைமையாசிரியருக்கு பள்ளியைத் தூய்மையாக வைத்திருத்தல் குறித்த கடிதம்.** PTA

செயல்திட்ட வரைவு

வகுப்பறை சுத்தம் – வகுப்பறைக்கு முன் பக்கமுள்ள வராண்டா சுத்தம் – தரைப்பகுதி சுத்தம் – மரங்களை வளர்த்து பாதுகாத்தல் – பள்ளி வளாகத் தூய்மை – மாணவர்களின் பொறுப்பும் கடமையும்.

உயர்திரு தலைமை ஆசிரியர் அவர்களுக்கு,

வணக்கம். பள்ளித் தூய்மையே சுகாதாரத்தின் முதல் படி. நம் பள்ளி தூய்மையாக இருந்தால் தான் நாம் நலமாக வாழ முடியும். பள்ளியிலுள்ள வகுப்பறைகளையும். முன்புற பகுதியையும், வளாக பகுதியையும் தூய்மையாக வைத்திருக்க பல திட்டங்களை வகுத்துள்ளோம். பள்ளியிலுள்ள பல்வேறு இயக்கங்களின் மூலமாக ஒவ்வொரு பணியையும் சிறப்பாக செய்யத் திட்டமிட்டுள்ளோம். எங்களது பணிகளைச் சிறப்பாக செய்யவும், இதன் வாயிலாக நம் பள்ளியைத் தூய்மையாக வைத்திருக்க தாங்கள் அனுமதி தருமாறு பணிவுடன் வேண்டுகிறோம்.

நன்றி!

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள மாணவர்கள்.

7. நீங்கள் விரும்பி படித்த நூல் ஒன்றின் சிறப்புகளைக் கூறி உங்கள் நண்பரையும் அந்நூலினைப் படிக்குமாறுப் பரிந்துரைத்து நண்பருக்கு கடிதம் எழுதுக. PTA

27, பாரதி நகர்,
பாளையங்கோட்டை
05.09.20xx

அன்புள்ள நண்பனுக்கு,

வணக்கம் நலம், நலமறிய வெகு ஆவலாய் உள்ளேன். சென்ற வாரம் நான் ஓர் இனிய நூலைப் படித்தேன். அதன் பெயர் திருக்குறள் வினாடி – வினா. நாம் எத்தனையோ குறள்களையும் அதன் பொருளையும் படித்திருக்கின்றோம். ஆனால் மறந்து விடுகிறோம். அவற்றை நினைவுபடுத்திக் கொள்ள இந்நூல் பெரிதும் பயன்படும்.

வினாவும் விடையும் ஓரிரு வரிகளில் கொடுத்துள்ளார்கள். எடுத்துக்காட்டாக வினா: **உலகு ஆதி பகவனை முதலாக உடையது எது போல?** விடை: **எழுத்து எல்லாம் அகரத்தை முதலாக உடையது போல. எது செய்யாமல் செய்த உதவிக்கு நிகராகா?** என்ற வினாவுக்கு **வையகமும் வானகமும் நிகராகா** என்பது விடை.

இவ்வாறு திருக்குறள் கருத்தை புதிய கோணத்தில் படிப்பது மகிழ்ச்சியாகவும், பொழுது போக்காகவும் இருக்கிறது. அத்துடன் அறிவு வளர்ச்சியும் ஏற்படுகிறது. இதனைப் புலவர் தென்குமரனார் என்பவர் எழுதியுள்ளார். இந்நூலில் சுமார் 2000 வினாடி வினா விடைகள் உள்ளன. இந்த நூலின் விலை ரூ 20 மட்டுமே. உங்கள் ஊர் கடையிலும் கிடைக்கும், வாங்கிப் படி; இல்லையேல் எனக்கு எழுது, நான் வாங்கி அனுப்புகிறேன். மீண்டும் அடுத்த மடலில் சந்திப்போம்

நன்றி

இப்படிக்கு,
உன் உயிர்த்தோழன்
கு.மோனிசு

உரைமேல் முகவரி,
ச.நரேஷ்குமார்.
8, கிழக்கு மாடவீதி,
தல்லாகுளம், மதுரை.

8. ஓட்டுநர் உரிமம் பெற்றுள்ள உறவினருக்கு, முக்கிய சாலை விதிகளை விளக்கி அவற்றைக் கடைபிடிக்குமாறு கடிதம் எழுதுக. PTA

31/5, ஏழு கிணறு முதல் தெரு,
பட்டு ரோடு,
சென்னை–16

அன்புள்ள தம்பிக்கு,

நலம், நலமறிய வெகு ஆவலாய் உள்ளேன். தம்பி! கடந்த வாரம் நீ ஓட்டுநர் உரிமம் புதிதாகப் பெற்றதாக பெரியம்மா எனக்குத் தொலைபேசியின் மூலம் தெரிவித்தார்கள். எனவே, உனக்கு முக்கிய சாலை விதிகள் சிலவற்றைத் தெரிவிக்கலாம் என்று இக்கடிதத்தை எழுதுகிறேன்.

வாகனம் ஓட்டும் போது முறையான சாலை விதியைக் கடைபிடிக்க வேண்டும். எப்போதும் தலைக் கவசத்துடனும் செல்ல வேண்டும். வாகனத்தை எப்போதும் சாலையின் இடதுபுறமாகவே ஓட்டிச் செல்லவேண்டும், ஏனெனில் எதிரே வருபவர்கள் வலது புறமாக வருவர். எப்போதும் நாம் சாலை விதிகளை அனுசரித்து எந்த எந்தப் பகுதிகளில் எந்த வேகத்தில் போக வேண்டுமோ அந்த வேகத்திலேயே போக வேண்டும்.

சாலையில் உள்ள விளக்குகளை நாம் சரியான முறையில் பின்பற்ற வேண்டும். சிவப்பு விளக்கு எரியும் போது வாகனத்தை நிறுத்த வேண்டும். மஞ்சள் விளக்கு எரியும் போது வாகனம் தயார் நிலையிலும், பச்சை விளக்கு எரியும் போது வாகனத்தை ஓட்டவும் வேண்டும் என்பது விதி. அதைப் பின்பற்றுவது நமது கடமை.

மேலும் பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள் போன்ற இடங்களில் தேவையற்ற ஒலி எழுப்பாமல் இருப்பது நன்று. சாலைகளில் செல்லும்போது மிதமான வேகத்துடன் செல்ல வேண்டும். போக்குவரத்துக்கும், நடந்து செல்வோருக்கும் நம்மால் துன்பங்களோ இடையூறுகளோ வரக்கூடாது என்று எண்ணி வாகனத்தை கவனமாக ஓட்டினாலே விபத்துக்களை தவிர்க்கலாம்.

"சாலை விதியே – நம் எதிர் காலத்தின் தலைவிதி
இதனை நடைமுறைப்படுத்துவதே சிறந்த வழி"

இப்படிக்கு,
உன் அன்பு அண்ணன்,
ச.தர்மா

உறைமேல் முகவரி
ரா. நவீன்குமார்,
8, சேந்தரக்கோட்டை,
இராமநாதபுரம், மாவட்டம்.

9. புதிதாகத் திறன்பேசி வாங்கியிருக்கும் தங்கைக்கு திறன்பேசி பயன்பாடு குறித்து அறிவுரைகளைக் கூறி கடிதம் ஒன்றை எழுதுக. PTA

156, கம்பன் தெரு,
பரங்கிமலை,
சென்னை – 16.
11.02.20xx

அன்புள்ள தங்கைக்கு,

நலம், நலமறிய ஆவலாக உள்ளேன்.

புதிதாக திறன்பேசி ஒன்றை வாங்கியுள்ளதாக அறிந்தேன். மிக்க மகிழ்ச்சி. எனினும் அதனைப் பயன்படுத்தும் போது சில சங்கடங்களைத் தவிர்க்க சில அறிவுரைகளைக் கூறலாம் என்று நினைத்து இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

தற்காலத்தில் இளைஞர்களுக்கு எவ்வளவுக்கெவ்வளவு பயனாக உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு சவாலாகவும் உள்ளது இந்தத் திறன்பேசி. வலை தளங்களைப் பயன்படுத்தித் தேடல், உரையாடல், பதிவேற்றம், பதிவிறக்கம் இவற்றை நாம் எளிதில் செய்யமுடிகிறது. அதில் பல நன்மைகளும், சிலத் தீமைகளும் உள்ளன. அறியாத ஒருவருடன் முகநூல் தொடர்பு நட்பையும் வளர்க்கும், ஆபத்தையும் விளைவிக்கும். புகைப்படங்களை இணையத்தில் பதிவேற்றம் செய்வது பெண்களுக்குப் பல தொல்லைகளைத் தரும். புலனத்திலும் முகநூலிலும் பகிர்வு செய்யும் செய்திகள் உண்மைக்குப் புறம்பானதாக இருந்தால் சட்டரீதியான பிரச்சனைகள் வரும்.

திறன்பேசிகளில் சேமிக்கப்படும் விவரங்கள் இணையத் திருடர்களால் களவாடப்பட வாய்ப்புள்ளது. எனவே கவனம் தேவை. படிக்கும் மாணவர்களை எந்த நேரத்திலும் இணையத்தில் மூழ்கச் செய்கின்றன சில விளையாட்டுகள். இவைகள் கண் பார்வை பாதிப்பு, நரம்பு பாதிப்பு, தூக்கமின்மை, மறதி ஆகியவற்றை உண்டாக்கும். அறிவார்ந்த தேடலுக்கே நாம் திறன்பேசியைப் பயன்படுத்த வேண்டும். எனது வாழ்த்துக்கள்.

இப்படிக்கு,
உன் அன்பு அண்ணன்,
வி.கதிரோன்

உறைமேல் முகவரி:
ரா. செந்தமிழ் செல்வி,
22, தெற்கு கடைவீதி,
திருநெல்வேலி – 02.

★ ★ ★ ★ ★

## பொதுக்கட்டுரைகள்

**பொதுக்கட்டுரை எழுதும் போது நினைவில் நிறுத்த வேண்டியவை:**

* கட்டுரை உள்தலைப்புகள் இட்டு எழுதப்பட வேண்டும். முன்னுரை, முடிவுரை இவற்றோடு குறைந்தது நான்கு அல்லது ஐந்து உள் தலைப்புகளாவது இடம் பெற வேண்டும்.
* உள் தலைப்புகள் அந்தப் பகுதியின் மையக் கருத்தை வெளியிடுவதாக அமைய வேண்டும்.

# 1. பாரதிதாசனின் தமிழ்ப்பற்று

குறிப்புச் சட்டம்:-

முன்னுரை – பாவலர் பாரதிதாசன் – மொழிப்பற்று – தமிழர் சமுதாயம் – முடிவுரை

**முன்னுரை:**

உடலைப் பொலிவுள்ளதாக்க உடலை இயற்கையைப் பாடுவோர். அன்னையைப் பாடுவோர்; பண்பைப் பாடுவோர் எனப் பல கவிஞர்களாய் வாழ்ந்துள்ளனர். எனினும் உயிரை, உணர்வைப் பாடுவது போல்

"தமிழைத் தன் உயிராக்கி
உணர்வைத் தன் மதியாக்கி"

புரட்சிக்கவி பாடியவன் புதுவைக்குயில் பாரதிதாசன். அவரது தமிழ் உணர்வை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பாவலர் பாரதிதாசன்:**

"தமிழுக்கு அமுதென்றுபேர் – அந்தத்
தமிழ் எங்கள் உயிருக்கு நேர்"

என்று வாயினிக்க, கேட்போர் செவியினிக்கப் பாட்டிசைத்தப் பாவலர் இவர்.

**மொழிப்பற்று:**

அன்னைத் தமிழ் மீது அளவில்லாப் பற்றுடையவர் பாரதிதாசனார். "தமிழே அவர்; அவரே தமிழ்".

"நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும்
நான் நான் நான்" எனக் கூறினார்.

"மங்கை ஒருத்தி தரும் சுகமும் – எங்கள்
மாத் தமிழ்க்கீடில்லை என்றுரைப்போம்" – என்று உரைத்தார்.

"ஆடற்றமிழே நீ என்றன் ஆவி" என்று தமிழைத் தன் உயிராகக் கூறும் பாவலன்.

தமிழை வானாகவும் தன்னை வெண்ணிலாவாகவும்
தமிழை வாளாகவும் தன்னை வீரனாகவும்
தமிழை இசையாகவும் தன்னை மகரயாழாகவும்
தமிழை ஒளியாகவும் தன்னைக் கண்ணாகவும் – குறிப்பிடுகிறார்.

"கனிச்சுருள், கரும்புச்சாறு, வெல்லப்பாகு, இளநீர், பசும்பால் ஆகியவற்றின் சுவையைவிடச் சுவைமிக்கது தமிழ்" என்று தமிழின் பெருமையை உலகறியச் செய்கிறார்.

**தமிழர் சமுதாயம்:**

தமிழ் மொழியின் சிறப்பினை உணர்ந்த பாரதிதாசன். தமிழர் மனங்களும் பண்பட வேண்டும் என்ற உயர்ந்த நெறியில் தன் உணர்வுகளைப் புலப்படுத்துகிறார்.

"சாதி இருக்கின்றதென்பானும் இருக்கின்றானே" என்று சாதி வெறியரைச் சாடுகிறார்.

"மலைவாழை அல்லவோ கல்வி – நீ
வாயார உண்ணுவாய் போய் என் புதல்வி" என்ற பெண் கல்வியின் முதன்மையினைக் கூறுகிறார்.

"காக்கையிடத்திலுள்ள ஒற்றுமை கண்டு – நீ
வாழ்க்கை நடத்தினால் நன்மை உண்டு" என்று ஒற்றுமையை வலியுறுத்துகிறார்.

"புதியதோர் உலகம் செய்வோம் – கெட்ட
போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்" என்று கூறித் தீய உலகை அழித்து, புதுத் தமிழ் உலகம் படைக்கத் துடிக்கும் இளமை உணர்வை வெளிப்படுத்துகிறார்.

**முடிவுரை:**

"சொல் புதிது, பொருள் புதிது" என்ற பாரதியாரின் அடிகள் பாரதிதாசனின் பாட்டுக்கும் பொருந்தும். மொழி உணர்வோடு சமூக கொடுமைகளைச் சாடிய அவரது கவிகள் ஏவுகணைகளாகும். அருந்தமிழை அள்ளி அள்ளிக் கொடுத்த அத்தமிழ்க் குயில் தமிழ்த்தாயின் திருவடியில் சென்று தங்கிவிட்டது. அவரது இன்பத்தமிழ், தமிழின உணர்வு கொண்டு நாமும் வாழ்வோம்.

# 2. பாரதியின் விடுதலை உணர்வு

குறிப்புச் சட்டம்:-

முன்னுரை – பாரதநாடும் பாரதியாரும் – பெருமையிழந்த பாரதமும் பாரதியின் எண்ணமும் – பாரதியின் விடுதலை உணர்வு – பாரதியாரின் விடுதலைக் கனவு – பல்வேறு விடுதலை உணர்வு – முடிவுரை

**முன்னுரை:**

செந்தமிழ்ப் பாவலன் பாரதி. இருளடைந்த இந்தியத் திருநாட்டிற்கு ஒளியாக 20–ஆம் நூற்றாண்டில் உதித்தார். தாம் வாழும் சூழ்நிலையில் நாட்டின் அவல நிலை கண்டு கொதித்தெழுந்தார். ஆகவே வீரசுதந்திரம் வேண்டி எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமை, இனிமை, புதுமை நிறைந்த பாக்களை இயற்றினார். அத்தகு விடுதலை உணர்வை இக்கட்டுரையில் காண்போம்.

**பாரதநாடும் பாரதியாரும்:**

'பாரதம்' என்பதற்கு இலக்கணம் வகுக்கும் பாரதியார் "பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரதநாடு" என்று பண்ணிசைத்தார்.

பழம் பாரதத்தை "ஞானத்திலே, பரமோனத்திலே, உயர்மானத்திலே, அன்னதானத்திலே உயர்ந்த நாடு" என மொழிந்து பெருமிதம் அடைந்தார்.

ஆனால் அவர் காலத்தில் அடிமைப்பட்டிருந்த பாரதத்தை எண்ணி "நெஞ்சு பொறுக்கு தில்லையே இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்து விட்டால்" எனக் கூறிக் கண்ணீர் வடிக்கிறார்.

**பெருமையிழந்த பாரதமும், பாரதியின் எண்ணமும்:**

எட்டையபுரத்தான் வாழ்ந்த காலத்தில் பாரதம் தன் பெருமையினை இழந்து தாழ்வுற்றிருந்தது.

தாழ்வுற்ற பாரதம் தலைநிமிர்ந்திட

"இதந்தரு மனையின் நீங்கி இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப் பழிமிகுந் திழிவுற் றாலும்
விதந்தரு கோடி இன்னல் விளைந்தெனை அழித்திட் டாலும்
சுதந்திர தேவி நின்னைத் தொழுதிடல் மறக்கி லேனே"

என்று விடுதலை வேட்கையை மக்களிடையே உருவாக்கினார்.

**பாரதியின் விடுதலை உணர்வு:**

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு – நம்மில்
ஒற்றுமை நீங்கின் அனைவர்க்கும் தாழ்வே"

என்று பாடி, மக்களிடையே ஒற்றுமைத் தாகத்தை ஏற்படுத்தினார்.

"தண்ணீர் விட்டா வளர்த்தோம் – சருவேசா
கண்ணீரால் காத்தோம், கருகத் திருவுளமோ"?

என்று, சுதந்திரப் பயிரைக் கண்ணீராலும் செந்நீராலும் காக்க வேண்டும் என்கிறார்.

**பாரதியாரின் விடுதலைக் கனவு:**

"எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்
எல்லோரும் இந்திய மக்கள்.
எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் ஓர் விலை
எல்லோரும் இந்நாட்டு மன்னர்"

எனப்பாடி, உயர்வு தாழ்வற்ற சமதர்ம விடுதலை நாட்டை எண்ணிக் கனவு கண்டார்.

**பல்வேறு விடுதலை உணர்வு:**

பாரதி அரசியல் விடுதலையை மட்டுமல்லாமல் மொழி விடுதலை. ஆன்மீக விடுதலை, சமுதாய விடுதலை, பொருளாதார விடுதலை, பெண் விடுதலை ஆகிய அனைத்து விடுதலைகளுக்கும் குரல் கொடுத்த மூத்த பாவலன் ஆவார். நாட்டுப் பற்றோடு, இறைப்பற்றையும், மொழிப்பற்றையும் ஊட்டவே, "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்று அறைகூவல் விடுத்த உணர்வாளர்.

**முடிவுரை:**

பாட்டுக்கொரு புலவர் பாரதி 20 ஆம் நூற்றாண்டிற்கு ஏற்ற எழில்மிகு பாரதத்தை உருவாக்க எண்ணி, விடுதலை உணர்வை ஊட்டி விடுதலையை ஈட்டித்தந்த மாபெரும் விடுதலைக் கவிஞராவார். அவர் காட்டிய வழியே சென்று நாட்டின் நலிவை நீக்கி, பொலிவைப் பெறுவோமாக! வேற்றுமையை விடுத்து ஒற்றுமையைக் காண்போமாக! நம்மை வளர்க்கும் நற்றமிழைப் பேணி நல்வாழ்வை அடைவோமாக!

# 3. சாலைப் பாதுகாப்பு - உயிர் பாதுகாப்பு

**குறிப்புச் சட்டம்:-**
முன்னுரை – சாலைப்பாதுகாப்பு, உயிர் பாதுகாப்பு – சாலை விதிகள் – ஊர்தி ஓட்டுநருக்கான நெறிகள் – விபத்துகளைத் தவிர்ப்போம், விழிப்புணர்வு தருவோம் – முடிவுரை

### முன்னுரை:

சாலை பாதுகாப்பு நாட்டின் முக்கியமான ஒரு பிரச்சினையாக உள்ளது. அரசு தெரிவிக்கும் ஒரு புள்ளி விவரத்தின்படி ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1.10 இலட்சம் மக்கள் விபத்தினால் உயிர் இழக்கின்றனர் என்பது அதிர்ச்சி தரும் செய்தியாகும்.

### சாலை பாதுகாப்பு, உயிர் பாதுகாப்பு:

ஆண்டுதோறும் சனவரி முதல் வாரம் சாலைப் பாதுகாப்பு வாரமாகக் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. இது வாகன ஓட்டுநர்கள், பாதசாரிகள் ஆகியவர்களுக்கிடையே சாலை பாதுகாப்பு குறித்து விழிப்புணர்வு ஏற்படுத்த உதவுகிறது. சாலை பாதுகாப்பு என்பது உயிர் பாதுகாப்பு.

### சாலை விதிகள்:

- போக்குவரத்து விளக்குகளில் சிவப்பு விளக்கு எரிந்தால் நிற்கவும், மஞ்சள் விளக்கு எரிந்தால் சாலையைச் கடக்கத் தயாராக இருக்கவும். பச்சை விளக்கு எரிந்தால் செல்லவும் வேண்டும்.
- நெடுஞ்சாலைகளில் வண்டிகளுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள பாதையில் தான் வண்டியைச் செலுத்தவேண்டும். வழித்தடம் மாறும் முன் முறையான சைகையைக் காட்டி வாகனத்தைச் செலுத்த வேண்டும். எக்காரணம் கொண்டும் மஞ்சள் கோட்டினைத் தாண்டிச் செல்லக்கூடாது.
- வாகன ஓட்டுநர் குறுக்குச் சாலை அல்லது பாதசாரிகள் கடக்கும் இடங்களில் வண்டியின் வேகத்தைக் குறைத்துச் செல்ல வேண்டும்.
- தீயணைப்பு வாகனம், அவசர ஊர்தி, மற்றும் நோயாளர் வண்டி போன்றவைகளுக்கு வாகன ஓட்டுநர்கள் தடையின்றி வழிவிடுதல் அவசியமாகும்.
- வாகன ஓட்டுநர் தேவையில்லாமல் தொடர்ந்து வாகனத்திலுள்ள ஒலிப்பானை பயன்படுத்தல் கூடாது. அமைதி இடம் என்று அறிவிக்கப்பட்டுள்ள இடங்களில் ஒலிப்பானை ஒலிக்கக்கூடாது.

### ஊர்தி ஓட்டுநருக்கான நெறிகள்:

- ஊர்தி ஓட்டுநர் சாலையின் இடது புறத்திலேயே வாகனங்களைச் செலுத்துதல் வேண்டும்.
- 'U' திருப்பம் இல்லாத இடங்களில் தங்களது வாகனங்களை திருப்பக் கூடாது. அனுமதிக்கப் பட்ட இடங்களில் தான் வாகனங்களைத் திருப்ப வேண்டும்.
- தங்கள் வாகனத்தை வலது புறமாகவோ, அல்லது இடது புறமாகவோ வாகனத்தை திருப்பும் முன் சைகை காட்ட வேண்டும். வாகன ஓட்டுநர்கள் திரும்பும் போது வாகனத்தில் உள்ள அதற்குரிய விளக்கினை எரியச் செய்ய வேண்டும்.
- அதே போல் தனது வாகனத்தை நிறுத்தும் முன் அதற்குரிய சைகையை காட்ட வேண்டும்.
- ஒரு வழிப்பாதை என்று அறிவிக்கப்பட்ட இடத்தில் எதிர்ப்புறம் செல்லக் கூடாது.
- வாகன ஓட்டுநர் தேவையில்லாமல் தொடர்ந்து வாகனத்திலுள்ள ஒலிப்பானை பயன்படுத்தல் கூடாது. அமைதி இடம் என்று அறிவிக்கப்பட்டுள்ள இடங்களில் ஒலிப்பானை ஒலிக்கக்கூடாது.
- வாகன ஓட்டுநர் தனக்கு முன் செல்லும் வாகனத்திற்கும் தனது வாகனத்திற்கும் குறிப்பிட்ட அளவு இடைவெளி இருக்குமாறு செல்ல வேண்டும்.

### விபத்துகளைத் தவிர்ப்போம், விழிப்புணர்வு தருவோம்:

வாகனம் ஓட்டும்போது கைபேசியைப் பயன்படுத்துதல் கூடாது. நான்கு சக்கர வாகனத்தில் பயணம் செய்யும் போது, ஓட்டுநர் மற்றும் பயணிகள் வார்பட்டை அணிய வேண்டும். மது அருந்திவிட்டு வானகத்தை இயக்கக் கூடாது. நான் சாலை விதிகளைக் கடைபிடிப்பேன் என்ற உறுதிமொழியை ஒவ்வொருவரும் ஏற்று விபத்தினைத் தவிர்ப்போம்.

### முடிவுரை:

மக்கள் சாலைப் பாதுகாப்பின் முக்கியத்துவத்தை உணர்ந்து, சாலை விதிகளைப் பின்பற்ற வேண்டும்.இதன் மூலம் விலை மதிப்பு மிக்க ஆயிரக்கணக்கான உயிர்களைப் பாதுகாக்க முடியும்.

## 4. இயற்கையைக் காப்போம் / மழைநீர் - உயிர்நீர்

**குறிப்புச் சட்டம்:-**
**முன்னுரை - விசும்பின் துளியும் பசும்புல் தலையும் – மழைநீர் சேமிப்பு – காற்று மாசு – பசுமையைக் காப்போம் – முடிவுரை.**

**முன்னுரை: :**

'கார்மேக இதழ்கள்
கனைகடலைத் தழுவ
கல்விமேவலில் வான்தனை மறந்து
மின்னல் இசைத்திட'

மழை பயிர்க்குலம் தழைக்கவும், மனித குலம் தழைக்கவும் உதவும் உன்னத அமிழ்தம் ஆகும். விசும்பு என்னும் வானத்திலிருந்து மழை பெய்யவில்லை என்றால் இவ்வுலகில் சிறிய புல்லின் நுனியைக் கூட காண இயலாது போய்விடும்.

**விசும்பின் துளியும் பசும்புல் தலையும்:**

உலக உயிர்கள் உண்ணவும், பயிர்கள் வளரவும் பெரும் துணையாக மழை இருப்பதினாலேயே மழையை 'மாரி' என்று அழைக்கின்றனர். மழையை இறைவனின் திருவருள் வடிவாகப் பார்த்தனர் நமது முன்னோர். முத்து முத்தாகப் பெய்த மழையை 'முத்து மாரியம்மன்' என்றும் கருமேகம் திரண்டு மழை பெய்வதனை 'கருமாரியம்மன்' என்றும் குறிப்பிட்டனர். நிலமகள் பசுமைக் கோலம் பூண்டு விளங்க வேண்டுமானால் வான் நின்று மழை பொழிய வேண்டும். 'நீரின்றிமையாது உலகு' என்ற வள்ளுவரின் கூற்று மழையின் முக்கியத்தைக் கூறுகிறது.

**மழைநீர் சேமிப்பு:**

தண்ணீருக்குக் காரணமாக இருக்கிற வான் மழையைப் பெறுவதற்கு முதல் துணையாக இருக்கிற நீர் நிலைகளைப் பேணி, நீரைத் தேக்கி வைக்க வேண்டும். 'மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்' என்ற இளங்கோவடிகளார் கூறுவதைப் போல மழையைப் போற்றி பெய்யும் மழை நீரைச் சேமிக்க வேண்டும். ஒவ்வொரு கட்டிடங்களிலும் மழைநீர் சேமிப்பு அமைப்பை ஏற்படுத்த வேண்டும். மழைநீர் வீணாக கடலுக்குச் செல்லாமல் தடுத்து தடுப்பணைகள் கட்டலாம். மழைநீர் கழிவுநீருடன் கலந்திடாத வகையில் சிறு சிறு குளங்களை வெட்டலாம். நீர்நிலைகளில் தேங்கியுள்ள அமலைச் செடிகளை அப்புறப்படுத்தலாம்.

**காற்று மாசு:**

காற்று மாசு பெருமளவிற்கு உள்ளதால் ஓசோன் படலத்தில் ஏற்பட்ட துவாரத்தால் சூரியனின் புற ஊதாக்கதிர்கள் பூமியை நேராக வந்தடைகிறது. இதனால் பூமியின் மேற்பரப்பு வெப்பம் அதிகமாகிறது. இதனால் பருவநிலைகள் மாறுபாடு அடைகிறது. பருவக்காற்றுக் காலங்கள் மாறுகின்றன. கோடைக்காலமும் பனிக்காலமும் நீண்டு, மழைக்காலம் குறைந்து வருகிறது.

**பசுமையை காப்போம்:**

மரம் வளர்த்து சமூகக் காடுகளை உருவாக்கலாம். மண்ணுக்கு அழகு மரங்களே. தொழிற்சாலைகளில் வெளியிடப்படும் புகையின் அளவை மட்டுப்படுத்தலாம். காடுகளின் அழிவைத் தடுக்கலாம். பசுமை மாறாக் காடுகளைப் பேணலாம். வீட்டிற்கோர் மரம் நடலாம். 'நீர்நிலை பெருகத் தட்டோர் அம்ம இவண் தட்டோரே தள்ளாதோர் இவண் தள்ளாதோரே' என்ற அடிகள் நீர்நிலைகள் கட்டி நீரைத் தேக்கி வைப்பவர்கள் மட்டுமே செல்வம், புகழ், ஆட்சி முதலியவற்றைத் தக்க வைப்பார்கள் என்கிறது.

**முடிவுரை:**

'சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு'

என்ற வள்ளுவனின் வாக்கிற்கிணங்க தெய்வத்திற்கு செய்யப்படும் வழிபாடுகள் கூட சிறப்பாக நடைபெற தேவை மழை. தெய்வமாக நாம் வழிபடுவதும் மழை. மழையின் ஆற்றலால் கிடைத்த விளைபொருளைக் கொண்டு படையலிடுவதே பொங்கல். எனவே எல்லா நிலைகளிலும் மழையே இன்றியமையாதது என்பதனை உணர்வோம்.

**மரம் வளர்ப்போம்! மழை பெறுவோம்! மழை நீர்! – உயர் நீர்!**



## தொகைச் சொற்கள்:

1. இருதிணை – உயர்திணை, அஃறிணை
2. இருவினை – நல்வினை, தீவினை
3. இருமை – இம்மை, மறுமை
4. ஈரெச்சம் – பெயரெச்சம், வினையெச்சம்
5. முக்கனி – மா, பலா, வாழை
6. முத்தமிழ் – இயல், இசை, நாடகம்
7. முச்சங்கம் – முதல், இடை, கடைச் சங்கங்கள்
8. முச்சங்கு – வெண்சங்கு, சஞ்சலம், பாஞ்சசன்யம்
9. மூவேந்தர் – சேரர், சோழர், பாண்டியர்.
10. முக்காலம் – நிகழ்காலம், எதிர்காலம், இறந்தகாலம்
11. மூவுலகம் – விண்ணுலகம், மண்ணுலகம், பாதாள உலகம்
12. முக்கொடி – புலிக்கொடி, விற்கொடி, மீன்கொடி
13. மும்முரசு – படைமுரசு, கொடைமுரசு, மணமுரசு
14. முப்படை – தரைப்படை, கப்பற்படை, விமானப்படை
15. மூவிடம் – தன்மை, முன்னிலை, படர்க்கை
16. முந்நீர் – ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர்
17. மூவாசை – மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை
18. முச்சுடர் – ஞாயிறு, திங்கள், நெருப்பு
19. முப்பிணி – வாதம், பித்தம், சிலேத்துமம் (கபம்)
20. முக்குணம் – சத்துவம், இராசதம், தாமசம்
21. முப்பொறி – மனம், வாக்கு, காயம்
22. மூவர்ணம் – இளஞ்சிவப்பு, வெள்ளை, பச்சை
23. நாற்றிசை – கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு
24. நானிலம் – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்
25. நாற்படை – யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாள்படை
26. நான்மறை – ரிக், யசூர், சாமம், அதர்வணம்
27. நாற்குலம் – அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு
28. நாற்கவி – ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி
29. நாற்சங்கு – இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம், பாஞ்ச சன்யம்
30. நாற்பா – வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா
31. நாற்பொருள் – அறம், பொருள், இன்பம், வீடு
32. ஐம்புலன் – காணல், கேட்டல், உண்ணல், உயிர்த்தல், உற்றறிதல்
33. ஐம்பொன் – பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்
34. ஐம்பொறி – மெய், வாய், கண், மூக்கு, செவி
35. ஐம்பூதங்கள் – நிலம், நீர், காற்று, வானம், நெருப்பு
36. ஐந்திலக்கணம் – எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி
37. ஐந்நிலம் – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை
38. ஐங்குரவர் – அரசன், ஆசிரியன், தேசிகன், தந்தை, மூத்தோன்
39. ஐஞ்சிறுகாப்பியம் – சூளாமணி, நீலகேசி, உதயண குமார காவியம், யசோதர காவியம், நாககுமார காவியம்
40. ஐம்பெருங்காப்பியம் – சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி
41. ஐயடி – குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி
42. அறுசுவை – இனிப்பு, கசப்பு, புளிப்பு, கரிப்பு, துவர்ப்பு, கார்ப்பு
43. அறுபொழுது – வைகறை, காலை, நண்பகல், மாலை, எற்பாடு, யாமம்
44. ஆறறிவு – ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை, உள்ளம்
45. ஆறுகாலம் – கார்காலம், குளிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம்
46. ஏழிசை – குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்
47. எண்டிசை – கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, வடமேற்கு, வடகிழக்கு, தென்மெற்கு, தென்கிழக்கு
48. எண்வகை மெய்ப்பாடு– நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை
49. எண் வனப்பு – அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன் இழைபு
50. நவமணி – கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், வைரம், முத்து, வைடூரியம்.



# படிவங்கள் நிரப்புதல்

## 1. தட்டச்சர் பணி வாய்ப்புக்கான தன் விவரப்பட்டியல் PTA

| | |
|---|---|
| பெயர் | : ச. முகிலன் |
| பிறந்த நாள் மற்றும் வயது | : 10.11.2002, 18 |
| பாலினம் | : ஆண் |
| தந்தையின் பெயர் | : அகிலன் |
| முகவரி | : 73, அருள் நகர், நாகலாபுரம், தூத்துக்குடி - 628904. |
| பத்தாம் வகுப்பில் பெற்ற மதிப்பெண்கள் | : 480 |
| தாய்மொழி | : தமிழ் |
| பயின்ற மொழிகள் | : தமிழ், ஆங்கிலம் |
| தட்டச்சு | : தமிழ், ஆங்கிலம் (இளநிலை தட்டச்சர்) |
| கணிணி | : வேர்டு, பவர்பாயிண்ட், வேர்டு எக்ஸெல், |

மேற்கண்ட விபரங்கள் அனைத்தும் உண்மையென உறுதி கூறுகிறேன். தங்கள் நிறுவனத்தில் தட்டச்சர் பணி தந்தால் என் பணியைச் சிறப்பாகச் செய்வேன் என உறுதி கூறுகிறேன்.

நன்றி

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள
ச. முகிலன்

## 2. அரசு விடுதியில் சேருவதற்கான விண்ணப்பம்

| | |
|---|---|
| விண்ணப்பதாரரின் பெயர் | : |
| இந்த கல்வியாண்டில் சேர்ந்துள்ள கல்வி நிறுவனத்தின் பெயரும் அஞ்சல் முகவரியும் | : |
| சேர்த்தல் பதிவேட்டின் படி விண்ணப்பதாரரின் பிறந்த தேதியும், வயதும் | : |
| மாணவர் கல்வி நிலையத்தில் சேர்க்கப்பட்ட தேதி | : |
| படிப்பின் விவரம் | : |
| படிப்பின் கால அளவு | : |

விண்ணப்பதாரரின் கையொப்பம்



## 3. இருப்பிடச் சான்றுக்கான விண்ணப்ப படிவம்

விண்ணப்பதாரரின் பெயர் :

தகப்பனார் பெயர் :

ஆண் / பெண் :

இருப்பிட முகவரி :

குடும்ப அட்டை எண் (நகல் வேண்டும்) :

பள்ளி இறுதி வகுப்புக் சான்றிதழ் எண் (நகல் வேண்டும்) :

ஆதார் எண் (நகல் வேண்டும்) :

பெற்றோருக்கு தமிழ்நாட்டில் உள்ள அசையா சொத்து விவரம் சான்றுகளுடன் :

விண்ணப்ப நாள்

விண்ணப்பதாரரின் கையொப்பம்

## 4. தமிழ்நாடு விளையாட்டு மேம்பாட்டு ஆணையத்தின் உறுப்பினர் சேர்க்கை விண்ணப்பப் படிவம்

PTA

1. மாணவரின் பெயர் :
2. பாலினம் :
3. பிறந்த நாள் :
4. தேசிய இனம் :
5. இரத்தவகை :
6. உயரம் மற்றும் எடை :
7. பெற்றோர் / பாதுகாவலர் பெயர் :
8. வீட்டு முகவரி :
9. தொலைபேசி / அலைபேசி எண் :
10. இறுதியாகப் படித்து முடித்த வகுப்பு :
11. பள்ளியின் முகவரி :
12. சேர விரும்பும் விளையாட்டு :

சேர்க்கை எண் :

மாணவரின் கையெழுத்து:

இடம் :

நாள் :

பெற்றோர் / பாதுகாவலரின் கையெழுத்து

